உ

பரமபதி துணை.

# அரிச்சந்திரபுராணம்



நெல்லூர் வீரகவிராஜரென்னும்

ஆசுகவிராஜரவர்களியற்றிய

மூலமும்

தமிழ்ப்பண்டிதர்

சுந்தரநாதம்பிள்ளையவர்களெழுதிய

விருத்தியுரையும்.

---

பி. நா சிதம்பரமுதலியார்

பிரதர்ஸ் அவர்களது

சென்னை

வித்தியாரத்நாகர் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



---

இதன் விலை] 1925. [ரூபா-3.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அரிச்சந்திர புராண

## மூலமும் விருத்தி யுரையும்.

### பாயிரம்.

[இதில் நூலாசிரியர் முறையே தெய்வவணக்கங்கள் கூறுகின்றார். இப்பாயிரத்தே நூலாசிரியர் பெயர் முதலியவற்றின் வரலாறும் நூலின்வழியும், அரங்கேற்றிய காலமும் இடம் முதலியவைகளையும் கூறியுள்ளார்.]

---

### கணேசர் வணக்கம்.

[எடுத்துக்கொண்ட இப்புராணம் இடையூறின்றி இனிது முடிதற் பொருட்டு ஆன்றோர் கொள்கைப்படியே புலவர், கடவுள் வணக்கஞ்செய்தல் இதனால் சொல்லப்படுகின்றது.]

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியச்சந்தவிருத்தம்.

பெரும்புகழ் பெறும்படி யருந்துயர் கெடும்படி
　பிரியம்பல வரும்ப டியுளம்
விரும்பிய தனம்பெற மிகும்பெறு பதம்பெற
　விளங்கிய தவஞ்செ யநெடுங்
கரும்பவல் பெரும்பய றருங்கனி ரசங்கொடு
　கவர்ந்ததெ னுவந்த ருள்புரிந்
திருங்கரி முகன்சிறு சதங்கையொடு கிண்கிணி
　யிலங்கிய பதம்பெ றுவனே.

இ-ள். பெரும் - பெரிய, புகழ் - புகழை, பெறும்படி - பெறவேண்டியும், அரும் - (நீங்குதற்கு) அரிய, துயர் - துக்கங்கள், கெடும்படி - அழியவேண்டியும், பிரியம்பல - (எனக்கு) விருப்பமானவைகள் பலவும், வரும்படி- சித்திக்கும்படிக்கும், உளம்விரும்பிய - (எனது) மனம் விரும்பிய, தனம்பெற- திரவியலாபம் பெறவேண்டியும், மிகும் - மேலான, பெறும் - (அடியார்கள்) பெறுதற்குரிய, பதம்பெற - பதவியை அடையவேண்டியும், விளங்கிய-(மேன்மையுடையனவாகி) விளங்கும், தவஞ்செய - தவங்களைச்செய்யவேண்டியும் நெடும் - நீண்ட, கரும்பு - கரும்பு, அவல் - அவல், பெரும் பயறு - பெரும்

பயறு, அரும்கனி - அரிய கனிகள், (ஆகிய இவைகளின்) ரசங்கொடு-ரசங் களைக்கொண்டு (புசித்து), கவர்ந்ததென்னும் - தான் சுவைத்த ரசங்களின் சுவைபோல (எனக்கு) இனிமை தரும்படி, வந்து - அடியேனாகிய என்னி டம்) வந்து, அருள்புரிந்து - திருவருள் செய்து (ஆண்டருளும்படிக்கு), இருங்கரிமுகன் - (வந்தருளும்) பெரிய யானைமுகத்தை யுடைய விநாயகக் கடவுளினுடைய, சிறு சதங்கையொடு - சிறிய சதங்கைகளோடு, கிண்கிணி- கிண்கிணிமணிகளும், இலங்கிய - விளங்குகின்ற, பதம்பெறுவனே - பாதங் களை (நான்) வணங்கப்பெறுவேன். என்றவாறு. ஏ - தேற்றம். ஏ; ஈற்ற சையுமாம்.

இது, வழிபடு கடவுள் வணக்கமாகும். கற்றல், கடவுளை வழிபடுதற்கே. இதனானே தான் திருவள்ளுவ நாயனாரும், "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன், நற்றாடொழாஅ ரெனின்" எனத் திருவாய் மலர்ந்தருளினர். இத்துதி—யானைமுகக்கடவுளைப் பொதுமுகத்தாற் றுதித்ததாம். பின்வருஞ் செய்யுளுங் குஞ்சரமுகத்தனையே துதித்தலாலும் பின்னதில், புராணத்திற் குத்துணை கோரலாலும் முதலது விநாயகக்கடவுளை வணங்கிய பொதுவண க்கமென்றும். இனி, இதனை "பிரியம்பல வரும்படி" என்றிருப்பதால், புலவர் பிரியம் பலவற்றுள் இப்புராணம் பாடவேண்டுமென்னும் பிரியமு மொன்றும், ஆதலால் இச்செய்யுளும் பின்வருஞ்செய்யுளும் ஒரே கருத்துடை யன. இவ்விரண்டில் முன்னையதைப் பொதுவென்றும் பின்னையதைச் சிறப் பென்றும் கூறல் பொருந்தாதென வாதிப்பாருமுளர். இதனுண்மையை நடு நிலை கோடாத வல்லார்வாய்க் கேட்டுணரக்கடவர்.

'புகழ்' என்றது, கல்வி அறிவு ஒழுக்கங்களாற் சிறந்த பெரியாராற் பாரா ட்டிக் கூறப்பெறும் மொழியை. புகழ்பெறுதலாவது கல்வி அறிவு ஒழுக்கங் களாற் சிறந்த பெரியாராற் பாராட்டிக் கூறப்பெறும் தன்மையை யடைதலாம். மக்கட்பிறப்பெய்தியவர்கள் எவரும், புகழ்வருதற்கேதுவாகிய காரியங்களைச் செய்து புகழ்பெறவேண்டுமென்பது பெரியார் கொள்கை. இதுபற்றியே நாயனாரும் "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார், தோன்றலிற் றோன் றாமை நன்று" என்றருளிச்செய்தனர். 'பெரும்புகழ்,' பெரிய புகழ். பெரிய புகழாவது, எவரானும் செய்தற்கரிய காரியங்களைச்செய்து பெறும் புகழாம். பகீரதன் கங்கையைப் புவியிற் கொணர்ந்தும், ததீசிமுனிவர் தன் முதுகென் பை இந்திரனின் பகையை வெல்ல இந்திரற்குத்தந்தும், சிபிச்சக்கிரவர்த்தி புறாவின்பொருட்டுத் தன்னுடலை யரிந்துதந்தும் பெரும்புகழ் பெற்றனர். இவர் கள் செய்தவை பெரும்புகழ்தருஞ் செயலாம்; இதுபோலப்பல அரும்பெருஞ் செயல்கள்செய்து புகழ்பெற்றோர் சரிதங்கள் பல, அவைகளை ரகுவம்சம், பெரிய புராணம், பக்தவிஜயம் முதலிய நூல்களிற் காணலாம்.

பெருமை, என்னும் பண்புப்பெயரின் ஈறுகெட்டது. 'பிரியம் பல வரும்படி' என்றதிலேயே விரும்பிய தனமும் அடங்கியிருக்கப் பின்னுங் கூறியது "கூறியது கூறல்" என்னுங் குற்றமாகாதோ வெனின், அங்ஙன

மாதலிலது; பின்னெங்ஙனமெனிற் கூறுதும்: இவ்வுலகவாழ்விற்குப் பொருட்செல்வம் இன்றி யமையாதது. அறஞ்செய்தற்கும் இன்பெய்துதற்கும் பொருளே முக்கியமானது. இது கண்டன்றோ தெய்வப்புலமை ஔவைப் பிராட்டியாரும் "திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்றாள். நாயனாரும் "அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ் செல்வச் செவிலியா லுண்டு." என்று மொழிந்து வைத்தார். இதனாலோ "விரும்பிய தனம்பெற" என்றது சிறப்புப்பற்றி தனித்தோதப்பட்டதென்று கூறுவதே சால்புடைத்தாகும்.

'மிகும்பெறுபதம்' என்றது முத்திப் பதத்தையாம். சதங்கை, கிண்கிணி என்பன காலணிகள். 'கிண்கிணி' ஒலிபற்றி வந்தபெயர். கரிமுகன்= யானைமுகன் (விநாயகர்.) கரி=யானை, காத்தையுடையது என்பதுபொருள். இவ்விருத்தம் தந்தச் சந்தத்தால் வந்த எழுசீர்கொண்ட அடிகளையுடையது. கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா புளிமா. எனுஞ் சீர்களாலாக்கப்பட்ட அடிகளை யுடையது.

விநாயகர் வணக்கம்.

கலிவிருத்தம்.

பரிதி தன்மர பில்வரு பார்த்திவன்
விரித ரும்புகழ் மேவரிச் சந்திரன்
சரித மன்னுந் தமிழ்க்குத் துணைசெயக்
கரிமு கன்பதங் கைதொழு தேத்துவாம்.

இ-ள். பரிதிதன் - சூரியனுடைய, மரபில் - குலத்தில், வரு பார்த்திவன் - பிறந்த அரசனான, விரிதரும் - பரந்த, புகழ்மேவு - கீர்த்தியைக்கொண்ட, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜனுடைய, சரிதமன்னும் - சரித்திரம் பொருந்தியுள்ள, தமிழ்க்கு - தமிழ்ப்பாடலாலாகிய இந்நூலுக்கு, துணைசெய - (இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு உதவிசெய்யும்படிக்கு, கரிமுகன் பதம் - யானைமுகக் கடவுளின் பாதங்களை, கைதொழுதேத்துவாம்- இரண்டு கைகளையும் குவித்துக் கும்பிட்டுத் துதிசெயக்கடவோம். எ-று.

'தமிழ்' ஆகுபெயராய் நூலைக்குறித்தது. எந்தக்காரியஞ்செய்யத் தொடங்கினும் எல்லாம்வல்ல கடவுளை வணங்கி அவன் அருள்பெற்றுச்செய்யின் தொடங்கிய அக்காரியம் இனிது முடியுமென்பது ஆன்றோர்முடிபு. சைவர்கள், தாந்தொடங்கிய காரியம் விக்கினமின்றி இனிது முடிதற்பொருட்டு யானைமுகக்கடவுளை வணங்குவது மரபு. இது பற்றியே யானைமுகக்கடவுளுக்கு 'விக்கினேசுரன்' 'விக்கின விநாயகன்' என்னும் பெயர்கள் எழுந்தன; விக்கினங்களை அகற்றுங் கடவுள் என்பது இதன் திரண்டபொருள். 'விநாயகன்' என்ற பெயர்க்குத் தனக்குமேற்றலைவனை இல்லாதவன் என்பதுபொருளாம். 'விரிதரும்புகழ்' நீண்ட புகழ், மிகுந்த புகழ் என்றுமாம். (உ)

சிவபெருமான் வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்ட செழுங்கமலத் திசைமுகனு
    நெடுமாலுஞ் சிவனு மென்னப்
பேர்கொண்ட மூவுருவ மீருருவு
    மோருருவாய்ப் பிறங்குந் தொல்லை
நீர்கொண்ட வண்டத்துந் தாவரத்துஞ்
    சங்கமத்து நிறைந்து நின்றோன்
றார்கொண்ட தாளிணைக டழைகொண்ட
    வன்பினொடு தலைமேற் கொள்வாம்.

இ-ள். சீர்கொண்ட - சிறப்புப் பொருந்திய, செழும் - செழுமையாகிய, கமலத்திசைமுகனும் - (உந்தியந்) தாமரையிலுள்ள பிரமதேவனும், நெடுமாலும் - நீண்ட விஷ்ணுவும், சிவனும் - சிவபெருமானும், என்ன - என்றுசொல்லப்படும், பேர்கொண்ட - பெயர்களைக்கொண்ட, மூவுருவும் - மூன்று திருவுருவங்களும், ஈர் உருவும் - சத்தி சிவம் என்கின்ற இரண்டு திரு உருவும், ஓர் உருவாய்ப் பிறங்கும் - ஒரேரூபமாய் விளங்குகின்றவனும், தொல்லை - பழமையான, நீர்கொண்ட - நீரைக்கொண்ட (கடலாற்சூழப்பட்ட) அண்டத்தும்-அண்டங்களிலும், தாவரத்தும் - தாவரவஸ்துக்களிடத்தும், சங்கமத்தும் - சங்கமப் பொருள்களினிடத்தும், நிறைந்து நின்றோன் - பூரணமாகி நிற்கின்ற கடவுளாகிய பரசிவத்தின், தார்கொண்ட - (அடியார்களிடும்) மலர் மாலையையணிந்த, தாள் இணைகள் - இரண்டு பாதங்களையும், தழைகொண்ட - மிகுகின்ற, அன்பினொடு - பத்தியுடனே, தலைமேற்கொள்வாம் - எமது சிரத்தின்மேற் சூடிக் கொள்வோம். எ-று.

'சீர்கொண்ட' என்றதும் 'செழும்' என்றதும் கமலத்திற் கடைமொழிகள்; விண்டுவின் உந்தியிலிருந்து ஒரு கமலம் தோன்றிற்றென்பதும் அதில் பிரமன் தோன்றினனென்பதும் புராணகதையாம். 'திசைமுகன்' திசைக்கோர் முகமாக நாலு திசைக்கும் நான்கு முக முடைமையால் பிரமனுக்குத் திசைமுகன், சதுர்முகன் நான்முகன் எனப் பலபெயர் தோற்றின. 'நெடுமால்' நீண்டமால். இது மாவலிச் சக்கிரவர்த்தியிடத்தில் மூன்றடிமண் யாசிக்கச்சென்ற வாமனர் பின் நீண்ட உருவாக வளர்ந்தனர். அதனால் உலகளத்தற் பொருட்டு நீண்ட திருமால் என்பர். சத்தியுருவும் சிவ உருவும் ஒன்றும் என்பதையே ஈர் உருவும் ஓர் உருவாய் என்றார். இதுபற்றியே பரஞ்சோதி முனிவரும் "சத்தியாய்ச் சிவமாய்" என்றார். "தொல்லைநீர்" என்றது கடலை, முதுநீர் எனவும்படும். 'தார்கொண்ட' என்பதற்கு மலர்போன்ற என்று பொருள் கொள்வாரு முண்டு. "தழை கொண்ட அன்பு" மேன்மேலும் பெருகிவளரும் அன்பு. தழைத்தல்=பெருகுதல், வளர்தல். "தாவரத்துஞ்

சங்கமத்தும்'' அசையும் பொருளினிடத்தும் அசையாப்பொருளினிடத்தும் என்பதாம்.

ஊனுகியூனு ளுயிரா யுயிர்தோறுமாகி
வானுதியான பொருளாய் மதியாகிவெய்யோன்
ருனுகியாண் பெணுருவாகிச் சராசரங்க
ளானுன்சிவன்மற் றவனீள்கழற் கன்புசெய்வாம்.

என்ற கந்தபுராணமுடையார் திருவாக்கும்,

பூவிஞயகன் பூமகனுயகன்
காவிஞயக ஞதிக்கடவுளர்க்
காவிநாயக னங்கயற்கண்ணிமா
தேவிநாயகன் சேவடியேத்துவாம்.

என்ற திருவிளையாடற்புராணமுடையார் திருவாக்கும்,

நீர்பூத்த பேரொளியா யுயிர்க்குயிரா யகண்டிதமாய்
நிறைவாய் நீங்காப்
பேர்பூத்த குணக்குறிக ளிகந்தபழ
மறைக்கொழுந்தாய்ப் பெருமைசான்ற
பார்பூத்த பரையினெடு கலந்துகுரு
வாதிமும்மைப் படிவமாகிச்
சீர்பூத்த காழிநக ரமர்ந்தபிர
மேசனையாஞ் சிந்தைசெய்வாம்.

என்ற சீகாழித்தலபுராணமுடையார் திருவாக்கும் ஈங்கு ஒப்பிடத் தக்கன. இது, காய்ச்சீர் காய்ச்சீர் காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர் என்னும் ஆறுசீர்கொண்ட அறுசீர்க்கழில்நெடிலடிவிருத்தம். (ரு)

புகலரிய சதுமறையாய் மறைப்பொருளா
யுபநிடத்தாய்ப் பூத மைந்தா
யகிலமுமாய் மன்னுயிரா யணுவிலணு
வாயவற்றி னகமாய் மேலாய்ப்
பகலிரவென் றறியாத பராபரமா
யறுசமயப் பகுதி யாகிச்
சகலமுமாய் நிஷ்களமாய் நின்றோன்றன்
செழுங்கமல சரண்புக் கேமால்.

இ-ள். புகல் அரிய - சொல்லுதற்கரிய, சதுமறையாய் - நான்கு வேதங்களாகி, மறைப்பொருளாகி - வேதங்களிற் கூறப்பட்டுள்ள பொருளாகி, உபநிடத்தாய் - (முப்பத்திரண்டு) உபநிடதங்களாகி, பூதமைந்தாய் - ஐந்து பூதங்களுமாகி, அகிலமுமாய் - உலகமுமாகி, மன்னுயிராய் உலகத்திலே நிலைகொண்டுள்ள எல்லாப்பிராணிகளுமாய், அணுவிலணுவாய் - அணுவிற்குள் அணுவாகி, அவற்றின் அகமாய் - அவைகளுக்கு உள்ளுமாகி' மேலாய் - (அவை

களுக்கு) புறமுமாய், பகலிரவென்றறியாத பராபரமாய் - பகலென்றும் இரவென்றும் அறியக்கூடாத பராபர வஸ்துவாகி, அறுசமயப்பகுதியாகி - ஆறுவகைச் சமயப்பிரிவுகளுமாய், சகலமுமாய் - சகல வஸ்துவுமாய், நிஷ்களமாய் நிஷ்களவஸ்துவாய், நின்ருேன்றன் - நின்றவனுகிய கடவுளுடைய, செழுங்கமல சரண்புக்கேமால் - செழுமையாகிய (அழகிய) தாமரைபோன்ற பாதங்களைக் கதியாக அடைந்தோம். எ-று. ஆல் - அசை.

'சதுர்மறை' நான்குவேதம். "மறை" என்று பேர் வந்ததற்கு இரகசியார்த்தத்தையுடையதென்றும் அசுரனுல் கடலில் மறைத்து வைக்கப்பட்டதென்றும், வேதியரைத் தவிர்த்து மற்றையர் பார்க்கக்கூடாதென்று மறுக்கப்பட்டதென்றுங் காரணங்கள் கூறுவர். பூதம் ஐந்தென்றது பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பவைகளே. 'பகலிரவென்றறியாத பராபரம்' என்றது "காலந்தேசங் கற்பனையே, கருதல் கடந்தொளிர் தற்பரனே."

அறுசமயங்களாவன:—சைவம், வைஷ்ணவம், சாத்தம், சௌரம், காணபத்தியம், கௌமாரம் என்பனவாம். இவைகள் வைதிகமதங்கள் எனவும் படும். இனி, கபிலமதம்,கணுதமதம்,பதஞ்சலிமதம்,அக்ஷபாதமதம்,வியாசமதம், ஜைமினிமதம்என ஆறு வேதாந்தமதங்களுமுண்டு. நிற்க. பௌத்தம்,ஜைனம், பைரவம், காளாமுகம், உலோகாயதம், சூனியவாதம் என்னும் ஆறுபதங்களுண்டு இவற்றைப் புறச்சமயமென்பர் வைதிகர். "நிஷ்களம்" களங்கமற்றது, களங்கமற்றிருத்தலாவது மாயையைக் கடந்துநிற்கும் தன்மை. இதனுனே எம்பெருமானைத் தூய்மையன், அமலன், என்னும் பெயரானும் விளிப்பர். இதுபற்றியே, பதிபசுபாச விளக்க நூலுடையாரும்,

"நிராமயமாய் நிட்களமாய் நித்தியமாய் நின்மலமாய்
புராதனமா யசஞ்சலமாய் பூரணமாய்ப் புனிதமாய்ச்
சராசரமாய்ச் சாட்சியாய்ச் சத்தியமாய்ச் சித்துருவாய்ப்
பராபரமாய் வெறுவெளியா யிருக்குமந்தப் பரமசிவம்." என்ருர்.

ஆதியா யண்டபகி ரண்டத்து
மப்புறத்து மடங்கா துற்ற
நீதியாய் மணியொளியும் பாற்சுவையு
மெனவனைத்து நிறைந்து நின்றும்
பாதியா யொன்ருகி யருவாகி
யுருவாகிப் பரந்து மல்குஞ்
சோதியான் முடிசூட்டத் தனதுதிரு
வடிசூட்டத் துணிந்த தூயோன்.

இ-ள். ஆதியாய் - (சராசரங்களுக்கெல்லாம்) முதலாகி, அண்டபகிரண்டத்தும் - இந்த அண்டத்திலும் வெளியண்டத்திலும், அப்புறத்தும் - இந்த

இரண்டு அண்டங்களுக்கும் அப்புறத்திலும், அடங்காதற்றாதியாய் - அடங்காமல் இருக்கின்ற நிறைவாய், மணியொளியும் - மணியையும் அதன் ஒளியையும்போலவும், பாற்சுவையும் - பாலையும் அதன் சுவையையும் போலவும், என - (என்று எவருஞ்) சொல்லும்படி, அனைத்து நிறைந்து நின்றும் - எல்லாவற்றினும் வியாபித்திருந்தும், பாதியாய் - (பார்வதி தேவியோடுகூடிய) பாதிவடிவமாய், ஒன்றாகி - தானே ஒரு முதலுமாகி, அருவாகி - அருவமுமாகி, யுருவாகி - உருவமுமாகி, பரந்து மல்கும் - பரவிப்பெருகும், சோதியான் - பரஞ்சோதி ஸ்வரூபனானவன், முடிசூட்ட - நான் என் தலைமேலே சூட்டிக்கொள்ள, தனது திருவடி - தன்னுடைய திருவடிகளை, சூட்ட - சூட்டுதற்கு, துணிந்த தூயோன் - துணிவுகொண்ட பரிசுத்தனானவான். எ-று.

சோதி—யான் முடிசூட்ட என்றும் பிரித்துப் பொருள்கொள்ளலாம், அப்போழ்து கேவலனாகிய யானும் முடிசூட்டிக்கொள்ள எனப் பொருள் தரும். என்மாட்டுத்துணிவு இறைவற்கு எழுந்தது கருணையாலேயே என்க. 'மல்கும்' என்பதற்கு, விளங்கும் என்று பொருள் கொள்வாரு முண்டு. ஈதி - தன்மையுமாம். "பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப் போதவின்ப, மாவண்ண மெய்கொண் டவன்றன் வலியாணை தாங்கி" என்ற பரஞ்சோதியார் வாக்கு கருதத்தக்கது. (ரு)

### உமாதேவியார் துதி.

கனத்தாள்வெங் கயமுகனுங் கந்தனுஞ்சம்
  பந்தனும்பா லுண்டகும்ப
தனத்தாளே யறம்வளர்த்த கரத்தாளே
  திரிபுரங்க டழலாய்வேவச்
சினத்தாளே சிறியோர்கள் செய்தபிழை
  பொறுத்திரக்கஞ் செய்யுஞ் செய்ய
மனத்தாளே நின்கமல மலர்த்தாளே
  யென்றலைமேல் வைத்தாள் வாயே.

இ-ள். கனம் - கனமான, தாள் - கால்களையுடைய, வெம் - வெவ்விய, கயமுகனும் - யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளும், கந்தனும் - முருகக்கடவுளும், சம்பந்தனும் - சம்பந்தமூர்த்தியும், பாலுண்ட-பால் குடிக்கப்பெற்ற, கும்பதனத்தாளே - குடங்கள்போன்ற கொங்கைகளை யுடையவளே, அறம்- (முப்பத்திரண்டு) தருமங்களை, வளர்த்த - வளரச்செய்தருளின, கரத்தாளே- கைகளையுடையவளே, திரிபுரங்கள் - முப்புரங்களும், தழலாய்வேவ - நெருப்பாய் வேகும்படி, சினத்தாளே - கோபித்தவளே, சிறியோர்கள் - அறிவிற் குறைந்தவர்கள், செய்தபிழை - செய்த குற்றங்களை, பொறுத்து - பொறுத்துக்கொண்டு, இரக்கஞ்செய்யும் - (இரங்கி யருளுதலாகிய) கருணையைச்செய்யும், செய்ய மனத்தாளே - செம்மையான (கருணை நிறைந்த) மனதுடையவளே, நின் - உன்னுடைய, கமல மலர்த்தாளே - தாமரை மலர்போலும்

பாதங்களையே, என்றலைமேல் - அடியேனுடைய சிரசின்மேல்; வைத்தாள்வாயே - வைத்து அடிமை கொள்ளக்கடவாய். எ-று. ஏ - ஈற்றசை.

விநாயகர் பூதவுருவும் தேவவுருவும் மிருகவுருவும் கொண்டு விளங்குபவர் என்பர். மார்புவரை பூதவுருவம், மார்பிலிருந்து கழுத்துவரை தேவவுருவம். சிரம் மிருகவுருவம். அதனால்தான் கால்கள் குட்டையும் வலுவுமுடையனவாக விருக்கின்றன. வயறு பருத்து மிருக்கின்றது. இதனானே கனத்தாள் வலுவுள்ளதாள் எனப் பொருள்செய்வர். இனி, 'கனத்தாள்' அடியார்பவத்தை நீக்கி யருள்செய்யுந் தன்மையாற் பெருமைபொருந்திய தாள் என்று பொருள் கொள்ளிற் சிறப்பாகும். "வெங்கயமுகம்" கோபம்பொருந்திய என்றும் கொடிய என்றும் பொருள்கொள்ளுதலினும் (வெவ்விய) கண்டாரஞ்சும்படியான என்று பொருள் கோடல் ஏற்றதாகும். சுப்பிரமணியக்கடவுள் ஆறுவுருவங்களாக இருந்து உமாதேவியாரால் தழுவி எடுக்கப்பெற்றபொழுது ஒருருவாய்ச் சேர்ந்தமையால் கந்தன் என்னும் பெயர் பெற்றார். 'கந்தன்' என்றால் இணைக்கப்பட்டவன் ஒன்றாகச் சேர்க்கப்பட்டவன் என்பது பொருள் இது வடமொழி. 'சம்பந்தன்' என்றது திருஞான சம்பந்தரை. இவர் குழந்தைப் பருவத்தில் நீராடச்சென்ற தன் தந்தையொடு சென்றபோழ்து, தந்தை இவரைக்கரையில் இருத்தி நீரில் மூழ்கினர். தந்தை தண்ணீரில் மூழ்கினமையால் தந்தையைக் காணாது ஞானசம்பந்தர் 'அம்மை அப்பா' என்று அழத்தொடங்கினர் உடனே அந்தப்பரமபதியும் எல்லாச் சீவராசிகளுக்கும் அம்மை அப்பனாகவும் விளங்கும் சிவபெருமான் உமாதேவியாரோடும் இடபாரூடராய் எழுந்தருளினர். சிவபெருமான் கருணையாற் கட்டளையிட்டருள எமது உலகமாதாவாகிய அன்னை உமாதேவியாரும், பொற்கிண்ணத்தில் தமது திருமுலைப்பாலைக் கரந்துதர எமது திருஞானசம்பந்த சுவாமிகள் உண்டு அந்த மூன்று வயதிலேயே எமது இறைவரைத் துதித்துப் பாடும் வன்மையுற்றார். எனப் பெரியபுராணங் கூறலால் விநாயகரையும் சுப்பிரமண்யரையும் கூறியதோடு திருஞானசம்பந்த சுவாமிகளையும் உடன் கூறினர். இன்னும் சிவசுப்பிரமண்யக்கடவுளே திருஞான சம்பந்தராகத் திருவவதரித்துளார் ஆகையால் இவ்வண்ணங் கூறியுள்ளாரென்பர் ஒருசாரார். உமாதேவியார் கச்சிப்பதியில் முப்பத்திரண்டறம் வளர்த்ததாகக் காஞ்சிப்புராணங் கூறலால் 'அறம் வளர்த்த காத்தாளே' என்றார். இதனை,

> செக்கர் வார்சடைச் சிவபிரான் றிருவருள்செய்யத்
> தக்க வாய்மையி னுயிர்க்கெலாந் தன்னிடத்திருந்து
> மைக்க ணெம்பெரு மாட்டியெண் ணான்கறம்வளர்க்குந்
> தொக்க மாப்புகழ் படைத்தது தொண்டைநன் னாடு.

என்ற காஞ்சிப்புராணத்து நாட்டுப்படலச் செய்யுளாலும்,

> விலக்கிலா வறநூல்சொன்ன முனிவரும் விதிவிலக்கா
> மிலக்கிய மிதன்பாற்கண்டே யிலக்கணம் விதித்தார்போலு
> மலக்கணீத் தறமெண்ணான்கு மம்பையே வளர்க்குநீரால்
> கலக்கமி லறங்கட்கெல்லா மாகரங் காஞ்சியன்றே.

என்ற காஞ்சிப்புராணத்து நகரப்படலச் செய்யுளாலும்,

மகதநாடெலா மங்கலம்பொலிய வெண்ணான்கு
நிகரிலாவற நிருமலிவளர்த்தனள் வருங்காற்
புகரிலாதவிப் பொலிவினை மகதநாடாளும்
தகவின்மன்னவன் யாவருஞ் சாற்றிடக்கேட்டான்.

என்னும் காஞ்சிப்புராணச் செய்யுளாலும் அறிக.

"திரிபுரங்க டழலாய்வேவச் சினத்தாளே" என்றது சிவத்தையும் சத்தியையும் ஏகோவைக்கிய பாவத்தால். 'செய்யமனம்' செம்மையான மனம், மனதிற்குச் செம்மையாவது கருணை நிறைந்திருத்தல். (சு)

## விநாயகக்கடவுள் வணக்கம்.

வையாம்பன் முகத்தானை மறலியையோ
டத்துரந்து வாழ்வ தொன்றும்
மெய்யாம்பன் முகத்தாலும் வேதத்து
மாகமத்தும் விரித்த தென்றே
மொய்யாம்பன் முகத்தானைப் பொடியாகப்
பொருதுவினை முடித்து நீண்ட
கையாம்பன் முகத்தானைக் காலையினு
மாலையினுங் கருது வோர்க்கே.

இ-ள். மொய் - (வண்டுகள்) மொய்க்கப்பெற்ற (மதம்பொருந்திய), ஆம் பன் முகத்தானை - யானைமுகத்தோடு கூடிய கஜமுகாசுரனை, பொடியாக- தூளாகும்படிக்கு, பொருது - சண்டைசெய்து, வினைமுடித்து - அவனது கொடுந்தொழில்களை முடிவுசெய்து, நீண்ட -(புகழால்) நீண்டுள்ள, கை-துதிக்கையையுடைய, ஆம்பன் முகத்தானை - யானை முகத்தையுடைய விநாயகக்கடவுளை, காலையினும் மாலையினும் - பகலிலும் இரவிலும், கருதுவோர்க்கே- துதிக்கின்றவர்களுக்கே, வை ஆம் - கூர்மையான, பல் முகத்தானை - பற்களைக்கொண்ட முகத்தை யுடையவனாகிய, மறலியை - யமனை, ஒடத்துரந்து- ஓடும்படி ஜயித்து, வாழ்வது - வாழ்ந்திருப்பது, என்றும் - எக்காலத்தும், மெய்யாம் - சத்தியமேயாகும், பன்முகத்தாலும் - (இது) பல இடங்களிலும், வேதத்தும் - வேதங்களிலும், ஆகமத்தும்-ஆகமங்களிலும், விரித்ததொன்றே- விவரித்துச் சொல்லப்பட்ட வொன்ரும். எ-று. ஏகாரங்கள் இரண்டும் தேற்றப்பொருளன.

'மறலி' உயிர்கள் அஞ்சும் வலிமையையுடையவன் என்னும் காரணம் பற்றிவந்த பெயர். "பொடியாக" வெந்து சாம்பாக என்பது பொருளாம். கம்பநாட்டாழ்வாரும் "நீடிய வரக்கர் சேனை நீறுபட்டொழிய என்ருர்." 'வினைமுடித்து' கயமுகாசுரன் உலகங்களுக்குச் செய்துவந்த கேடுகளை எல்லாம் ஒழித்து என்பதாம். 'காலை' சூரியன் ஒளிசெய்தலையுடையது என்பது பொருள்; 'கால்' பகுதி, 'மாலை' கதிரவன் ஒளியின்மையால் உயிர்கள்

பொருள்களைக் கண்ணாற் காணாதபடி மயங்கச்செய்வது என்பது பொருளாம். மால்,' பகுதி. "மெய்யாம்பன் முகத்தாலும் வேதத்து மாகமத்தும் விரித்த தொன்றே" என்றும் பாடமோதி வினைவருவித்தும், என்று, ஏ–அசைகள் என ஒதுக்கியும் பொருள்கொள்வாருமுண்டு. இவ்விநாயகர் வணக்கம் தந்தை, தாய், பிள்ளைகள் முதலியோரை வணங்கிய வணக்கமுறையில் ஈண்டுக்கூறிய தாம். (எ)

பெருமையிலுங் கதிமையிலு முதுமையிலு
முகிலெனவே பிறங்கு மேனிக்
கருமையிலுங் கடுந்தறுகட் செம்மையிலும்
வெம்மையிலுங் கலங்கேன் காலா
எருமையிலும் வெள்ளாட்டுப் பால்போது
மெனப்பிறரை யெண்ணே னன்பால்
வருமையிலும் பொருமையிலும் வரதன்மகன்
குகனுமென்றன் மனத்தி லுண்டே.

இ-ள். காலா – யமனே! பெருமையிலும் – (நீ கால தூதர்களோடு கூடி யிருக்கிற பெருமையினாலும், கதிமையிலும் – (உனது) வேகத்தினாலும், முது மையிலும் – (பண்டைக்காலத்திருந்து உயிர்களைக்கவர்ந்து வரும்) உனது மூப் பினாலும், முகிலெனவே – மேகம்போலவே, பிறங்கும் – விளங்கும்படியான, மேனிக்கருமையிலும் – நிறக்கருப்பினாலும், கடுந்தறுகட்செம்மையிலும் – கடு மையையும் அஞ்சாமையையும் கொண்டுள்ள கண்களின் செவப்பினாலும், வெம்மையிலும் – (உனது) உக்கிரத்தினாலும், கலங்கேன் – உன்னைக்கண்டு அஞ்சேன். எருமையிலும் – எருமைப்பாலினைப்பார்க்கிலும், வெள்ளாட்டுப் பால் போதும் என – வெள்ளாட்டுப்பால் (கொஞ்சமாக விருந்தாலும்) போது மென நினைத்து, பிறரை எண்ணேன் – முருகனல்லாதோரை மதியேன் அன்பால் – அன்பினாலே, வருமையிலும் – முருகக்கடவுள் ஏறி வருகிற மயி லும், பொருமையிலும் – முருகக்கடவுள் போர்செய்தற்குரியவேலும், வரதன் மகன் குகனும் – எல்லாவரங்களையுந்தரும் பரமசிவனுடைய புத்திரரான முரு கக்கடவுளும், என்றன் மனத்திலுண்டே – எனது மனத்திலே எப்போதும் உண்டு. எ–று. ஏ – ஈற்றசை.

'தறுகண்மை' அஞ்சாமை; 'கண் செம்மை'—கண்ணின் செம்மை, தழல்விழியாதலின் "கட்செம்மை" என்றார். 'காலன்' என்றது எமனை; ஜீவப்பிராணிகளின் வாழ்நாட்காலத்தைக் கொள்ளுதலால் காலன் எனப்பெய ராயிற்று. எருமைப்பால் மிகுதியாயிருப்பினும் உண்டார்க்கு நோய்செய்யும்; வெள்ளாட்டுப் பால் கொஞ்சமாக இருப்பினும் மூலநோயைத்தீர்த்தற்கு நல்ல மருந்தாகும். வெள்ளாடு பல மூலிகைகளை அருந்துதலால் அதன்பால் மக் கட்கு நோய்நீக்குதற்கு நல்ல மருந்தாகி நின்றதென்பது ஆயுள்வேத பண்டிதர் களின் அபிப்பிராயம். ஏனைத்தேவர்கள் எருமைப்பால்போல மிகுந்திருப்பி

னும் பிறப்பு நோயை நீக்க வல்லுநால்லர் என்பதும் முருகப்பிரான் ஒருவரே பிறவிநோயாகிய மூலநோயை நீக்கி அருள்செய்யவல்லர் என்பதும் இதன் பொருளாம். அடியார்களின் மனக்குகைக்கண் எழுந்தருளியிருக்கும் தன்மையால் 'குகன்' என்னுந் திருநாமம் எமது முருகக்கடவுளுக் கேய்ந்தது. பெயருக்குப்பொருந்த குகப்பிரானும் மயில் அயிலொடு என்மனத்திலும் இருக்கின்றானெனப் பொருள்பட 'என்மனத்திலுண்டே' என்றார். (அ).

காளியம்மன் துதி.

எண்சீர்க்கழில் நெடிலடி யாசிரிய விருத்தம்.

அந்தரியா மளையமலை யாலகாலி
யம்பிகைமா தரிகௌரி யாளியூர்தி
வந்தரிநான் முகன்வணங்கு மலர்த்தாட்சூரி
வைரவிதா ருகவைரி மதங்கிநீலை
கந்தரியோ கினிசூலி நீலி நாக
கங்கணிசங் கரிவிமலை காளி வால
சுந்தரி சாமுண்டிதிரி சூலி கோலத்
துணையடி யென் முடிமீது சூடினேனே.

இ-ள். அந்தரி - அந்தரி!, யாமளை - யாமளை!, அமலை - அமலை!, ஆலகாலி - ஆலகாலி!, அம்பிகை - அம்பிகை!, மாதரி - மாதரி!, கௌரி-கௌரி!, யாளியூர்தி - யாளியூர்தி!, வந்து - வந்து, அரி - விஷ்ணுவும், நான்முகன் - நான்கு முகங்களையுடைய பிரமனும், வணங்கும் - வணங்குகின்ற, மலர்த்தாட்சூரி - தாமரை மலர்போலும் பாதங்களையுடைய சூரி!, வைரவி - வைரவி!, தாருகவைரி - தாருகவைரி!, மதங்கி - மதங்கி!, நீலகந்தரி - நீலகந்தரி!, யோகினி - யோகினி!, சூலி - சூலி!, நீலி - நீலி!, நாககங்கணி - நாககங்கணி!, சங்கரி - சங்கரி!, விமலை - விமலை!, காளி - காளி!, வாலசுந்தரி - வாலசுந்தரி!, சாமுண்டி - சாமுண்டி!, திரிசூலி-திரிசூலி!, கோலத்துணையடி—(என்னுந் திருநாமங்களைக்கொண்ட தேவியுன்) அயகியஇரு பாதங்களையும், என்முடிமீது - அடியேனுடைய சிரசின்மேல், சூடினேனே-சூடிக்கொண்டேன். எ-று. ஏ - ஈற்றசை.

இச்செய்யுளில் காளியின் திருநாமங்கள் பலவந்தன. இவைகள் எல்லாங் காரணம்பற்றி வந்தவையே. இச்செய்யுள் காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர் காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர் என எட்டுச்சீர்கொண்ட அடிகளானுய விருத்தம். (கூ)

கலைமகள் துதி.

மருப்பவள வாக்குவிந்து திரண்டு முத்து
வடமணிந்து குடமெனவே வயங்கிச் செம்பொற்

பொருப்பவள வாவளர்ந்து ததும்பி விம்மிப்
புடைபரந்து களபநறும் புளகக் கொங்கைத்
திருப்பவள வாயாளைத் தேனை மானைச்
செழும்படிக நிறத்தாளைத் திகழ்வெண் கஞ்சத்
திருப்பவளை யுலகேழு மீன்ற தாயை
யெனதிதய கமலத்தே யிருத்தி னேனே.

இ-ள். மருப்பவளவா - யானைக்கொம்பின் அவ்வளவாக, குவிந்து-குவித லாகி, திரண்டு - திரட்சியாகி, முத்துவடமணிந்து - முத்துமாலையைத்தரித்து, குடம் எனவே வயங்கி - குடம்போலவே பிரகாசித்து, செம்பொற் பொருப் பவளவாவலர்ந்து - செம்பொன் மலையினவ்வளவாக வளர்ந்து, ததும்பி-அசை ந்து, விம்மி - பருமனுகி (விம்முதலாய்), புடைபரந்து - மார்பினிடமெல்லாம் பரவியுள்ள, களபநறும்புளகக்கொங்கை - களப (கத்தூரி முதலியவற்றின்) சேற்றையணிந்து பரிமளிக்கின்ற மதர்த்த தனங்களையுடையவளை, திருப்ப வள வாயாளை - அழகிய பவளம்போன்ற வாயையுடையவளை, தேனை - தேன் போன்றவளை, மானை - மான்போன்றவளை, செழும்படிகநிறத்தாளை - தள மான பளிங்குபோலும் நிறத்தையுடையவளை, திகழ் - விளங்குகின்ற, வெண் கஞ்சத்திருப்பவளை - வெள்ளைத்தாமரையில் வீற்றிருப்பவளை, உலகேழும் ஈன்ற தாயை - எழு உலகங்களையும் பெற்ற தாயான சரஸ்வதியை, என் இதய கமலத்தே - என்மனமாகிய தாமரையில், இருத்தினேனே - இருக்கச்செய் தேன். எ-று. ஏ - ஈற்றசை.

மருப்பு=அவ்வளவு, பொருப்பு=அவ்வளவு என்பன முறையே மருப் பவ்வளவு, பொருப்பவ்வளவு எனப்புணரும், ஈண்டு செய்யுள்விகாரத்தால் வகரவொற்று தொக்கு மருப்பவள, பொருப்பவள வெனமுறையே நின்றது. இஃது எதுகை நோக்கி என்க. 'பவளவாய்' என்றது உருவுவமம். சரஸ்வதி யைத் தேன் என்றது காது, கண், கருத்தென்பனவற்றால் கேட்டாலும், கண்டாலும், சிந்தித்தாலும் தித்திக்குந் தன்மையுடைமையினுல் என்க. "கலை யிருல் - உள்ளிருந்தே யுள்ளத்தொழுகி யினிக்குந்தேனே, புள்ளினங்கா ணுவி னிய பூங்கனியே—வெள்ளைநிறக், கண்டே சருக்கரையே கண்ணுலுங் காதா லும் உண்டால் இனித்து வளர்க்கும் பாலே" என்ற தமிழ்விடு தூதுடை யார் வாக்கு ஈங்கு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது. 'மான்' என்றது பார்வையி ணுல் வந்த உவம் ஆகுபெயர். உலகேழும் ஈன்ற தாய் என்றது பிரமனுக் குச் சத்தியாயினமையினுல் உலகுதந்தவன் பிரமன். இதுபற்றியே தமிழ் விடு தூதுடையாரும்,

"நீர்பூத்த மண்ணிலமு நீள்பெரிய விண்ணிலமு
மேர்பூத்த வெங்கிலமு மெய்பொருளுஞ்—சீர்பூத்த
வெஞ்செங் கதிரும் விளங்குவெள்ளைத் தண்கதிரு
மெஞ்சுங் கதிர்க ளெனையனவுந்—துஞ்சலிலாக்

காற்று மெரியுங் கருவிப் பெருமுகிலும்
தோற்றநாற் பாலாத் தொடர்கருப்பை—தோற்றுமுட்டை
வேர்நீர்வித் தென்றிவற்றின் மேவுபெரு விண்ணோர்
சீர்சேருமக்க டிறல்விலங்கோ—டேர்சேரும்
புட்கள் புலத்தூர்வ புன்மரங்க ணீர்வாழ்வ
விக்குழுவிற்பல்ல வினத்துயிருந்—தொக்கவெலாந்
தாமரைகட் கார்மேனித் தண்ணீர்மாற் பேருந்தித்
தாமரையின் மேயசெழுந் தாமரையான்—தாமரையாம்
நாமேலிருந்து படைத்துநா ளுங்காக்கப்
பூமே லிருக்கும் புனிதையே!'' எனக் கலைமகளை விளித்தனர். ()

அவையடக்கம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

நீர்கொள்வார் பாலோடு நேருற்றால்
 பதர்கொள்வார் நெல்லோ டுற்றால்
நார்கொள்வார் பூவுற்றால் வேர்கொள்வா
 ரதிற்சிறிது நறையுண் டாயின்
சீர்கொள்வார் புன்சொல்லுஞ் செஞ்சொல்லுஞ்
 சேர்ந்தொன்றிற் சேரப் புன்சொல்
யார்கொள்வா ரென்பதுசற் றறியாமற்
 சிறியேனு வசைக்கின் றேனே.

[இதனால் கவி அவையடக்கங் கூறுகின்றார்.]

இ-ள். பாலோடு - பாலோடு, நேருற்றால்-கூடியிருந்தால், நீர்-(பாலோடு கூடிய அந்த) நீரையும், கொள்வார் - விலைகொடுத்து வாங்குவார்கள், நெல்லோடு - நெல்லோடு, உற்றால் - கூடியிருக்குமானால், (பதர் - (நெல்லோடு கூடிய அந்தப்) பதரையும், கொள்வார் - விலைகொடுத்து வாங்குவர், பூவுற்றால் - பூவோடு சேர்ந்திருந்தால், நார் - (பூவோடுசேர்ந்த அந்த) நாரையும், கொள்வார் - விலைகொடுத்து வாங்குவர், வேர் - வேரை, அதிற் சிறிது நறையுண்டாயின் - அந்த வேரிற் சிறிது வாசனை உண்டாயிருக்குமானால், கொள்வார் - விலைகொடுத்து வாங்குவர் (அதுபோல), புன்சொல்லும் - அற்பசொல்லும், செஞ்சொல்லும் - செம்மையாகிய சொல்லும், சேர்ந்தொன்றில் - கலந்து ஒன்றுபட்டிருக்குமானால், சீர்கொள்வர் - சிறந்த சொல்லின் காரணம் பற்றியாயினும் புன்சொல்லையுங் கொள்வர், சேர - (சிறந்த சொல்லேயின்றி) ஒருமிக்க, புன்சொல் - புல்சொல்லாகவே யிருக்குமானால், யார் கொள்வார் என்பது - எவர் அங்கீகரிப்பர் என்பதை (ஒருவரும் எற்றுக்கொள்ளார் என்பதை), சற்றறியாமல் - சிறிதும் அறியாமல், சிறியேன் - சிறியேனாகிய நான், நாவசைக்கின்றேன் - நாவை அசைத்துப் பாடுகின்றேன். எ-று. ஏ-ஈற்றசை.

என்றாலும் இதனைப் பெரியோர் ஏற்றுக்கொள்ளவேண்டு மென்பது கருத்து. இது, காய்ச்சீர் காய்ச்சீர் காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர் என்ற அறுசீர்கொண்ட அடிகளாலாய விருத்தம். (கக)

[இதுவும் அவையடக்கங் கூறியதேயாம்.]

புருடனார்க் கேந்திழையார் பொருளுரைப்ப
தெனப்பிறர்தம் பொருளே வௌவுந்
திருடனார் மேலவருக் கறமுரைப்ப
தெனச்சிறிய தெள்கு துள்ளிக்
கருடனார்க் குப்பறவை கற்பிப்ப
தெனவனந்தங் கண்ணுள் ளார்க்குக்
குருடனார் வழிகாட்ட லெனப்பெரியோர்
முன்சிறியேன் கூற லுற்றேன்.

இ-ள். புருடனார்க்கு - தன் நாயகனுக்கு, ஏந்திழையார் - பெண்கள் (மனைவி), பொருளுரைப்பதென - (ஞானப்) பொருளைச் சொல்வதுபோலவும், பிறர்தம் - அயலார்களுடைய, பொருளே வௌவும் - திரவியங்களையே (எப்பொழுதும்) திருடுகின்ற, திருடன் - கள்வன், ஆர் மேலவர்க்கு - (ஞானம்) பொருந்திய மேலோர்களுக்கு, அறம் உரைப்பதென - தருமநீதிசொல்லுந் தன்மைபோலவும், சிறியதெள்கு - சிறிய கொசுவானது, துள்ளி - கிளம்பி, கருடனார்க்கு - கருடப் பட்சிக்கு, பறவை - பறக்குந்தன்மையை, கற்பிப்பதென - கற்றுக்கொடுக்குந் தன்மைபோலவும், அனந்தம் - அநேக, கண்ணுள்ளார்க்கு - கண்களையுடையவர்களுக்கு, குருடன் - குருடனானவன், ஆர் வழி காட்டல் என - பொருந்திய வழியைக் காட்டுதலைப்போலவும், பெரியோர் முன் - எல்லாமுணர்ந்த பெரியோர்களுக்கு முன்னிலையில், சிறியேன் - (அறிவிற்) சிறியவனாகிய நான், கூறலுற்றேன் - பாடத் தொடங்கினேன். எ-று.

திருடன்=ஆர் மேலோர்க்கு, குருடன்=ஆர் மேலோர்க்கு என்பவற்றை திருடனார்=மேலோர்க்கு, குருடனார் - மேலோர்க்கு என்று பிரித்துப் பொருள் செய்தலுமுண்டு; அப்பொழுது 'ஆர்' என்பது இகழ்ச்சி பற்றி வந்த உயர்வுப் பன்மை. 'அறம்' 'அறு' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. 'அறம்' ஆன்றோரால் செய்கவென உலகிற்கு அறுத்துச் சொல்லப் பட்டதென்பது. 'கருடனார்' ஈண்டு ஆர் உயர்வுப்பன்மை. கருடன், தேவாகத் தொழப்பெறலி னென்க. 'அனந்தங்கண்' பலகண். இது இல்பொருள்; கற்றோர்க்கு அகந்தங் கண்ணுண்டென்பது நூல்வழக்கு. (கஉ)

எண்சீர்க்கழில் நெடிலடி யாசிரிய விருத்தம்.

[ஆக்கியோன் பெயர் முதலியன கூறுகின்றது.]

தண்கவிகைக் குரிசிலரிச் சந்திரன்றன்
சரிதமதைத் தாரணியோர் விருப்பமெய்த

வண்கவிஞர் வகைவகையே வகுத்துரைத்த
வடமொழியுந் தென்மொழியின் வழுவிலாத
வெண்கவியுங் கண்டாரங்கின் மாதராடல்
விதங்கேட்டு மழையெனவே வெருண்டு சோலைக்
கண்கவிகள் குதிபாயு நெல்லூர் வீர
கவிராஜ னேவிருத்தக் கவிசெய் தானே.

இ-ள். தண் கவிகை - குளிர்ந்துள்ள வெள்ளைக்குடையையுடைய, குரிசிலரிச்சந்திரன்றன் - அரிச்சந்திரமகாராஜனுடைய, சரிதமதை - சரித்திரத்தை, தாரணியோர் - உலகத்தார், விருப்பம் எய்த - கேட்பதற்கு) ஆசைகொள்ள, வண் கவிஞர் - (பாஷையின்) அழகமைந்த கவிபாடும் புலவர்கள், வகைவகையே வகுத்துரைத்த - சொல்லும் ஒழுங்கின்படியே ஒழுங்காகக்கூறிய, வடமொழியும் - வடமொழியிலுள்ள பாடல்களையும், தென் மொழியின்- (தெற்கே வழங்கிய மொழியாகிய) தமிழ்மொழியிலே, வழுவிலாத-(யாதொரு) குற்றமுமில்லாத, வெண்கவியும் - வெண் பாவாலான பாடல்களையும், கண்டு- (பரிசோதித்து) அறிந்து, மாதர் - பெண்களின், ஆடல்விதங்கேட்டு - நிர்த்தனஞ்செய்யு மிடத்திலுண்டாகும் மத்தளவோசை சிலம்பொசை முதலியவற்றைக்கேட்டு, மழையெனவே - மழைமேகத்தின் ஓசையென்று, வெருண்டு- பயந்து, சோலைக்கண் - சோலைகளிலே, கவிகள் குதிபாயும் - குரங்குகள் குதித்து ஓடும்படியான, நெல்லூர் - நெல்லூர் என்னும் தலத்திலுள்ள, வீரகவிராஜனே - வீரகவிராஜனென்னும் புலவனே, விருத்தக்கவிசெய்தானே-இந்தவிதமான விருத்தப்பாக்களாற் பாடினன். எ-று. ஏ - ஈற்றசை, தேற்றமுமாம்.

"ஆக்கியோன் பெயரே வழியேயெல்லை" என்னுஞ் சூத்திரவியலையுரைத்தமையின் இது சிறப்புப்பாயிரமாயிற்று. தண்கவிகை என்றதால் வெள்ளைக்குடை என்றும். பூச்சக்கரக்குடை, சந்திரவட்டக்குடை என்றும் கூறுவர். 'குரிசில்' ஆண்மகன் பெயர். 'சோலைக்கண்' இதில் கண் இடப்பொருளுருபு. இச்செய்யுள் வீரகவிராயர் வாக்கன்று அவர் காலத்திருந்த ஓர் புலவர் வாக்குப்போலும். (கஈ)

விதியினர சிழந்தவரிச் சந்தி ரன்றன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்த மாக்கி
அதிவிதமாங் கலியுகத்தில் வருச காப்த
மாயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமான் முன்னே
சக்கரதீர்த் தக்கரைமேன் மண்ட பத்துள்
கதிதருசீர் நெல்லூர்வாழ் வீர ராசு
கவிராசன் கவியரங்க மேற்றி னானே.

[அரிச்சந்திர புராணம் அரங்கேற்றிய காலம் களம் முதலியன கூறுகின்றது.]

இ-ள். விதியின் - ஊழினாலே, அரசிழந்த - தனது அரசாட்சியை இழந்த, அரிச்சந்திரன்றன்—அரிச்சந்திரமகாராஜனுடைய, வியன்கதையாம்—பெரிய கதையாகிய, வெண்கவியை - வெண்பாவாலான பாடல்களை, விருத்தமாக்கி-விருத்தப்பாக்களால்பாடி, அதிவிதமாங் கலியுகத்தில் - பலவிதங்களும் தோன்றும் இந்தக் கலியுகத்தில், வரு சகாப்தம் - வருவதாகிய சாலியவாகன சகாப்தம், ஆயிரத்து நானூற்று நாற்பத்தாறில் - ஆயிரத்து நானூற்று நாற்பத்தாறாம் வருஷத்திலே, சதுமறைதேர் - நான்கு வேதங்களும் ஆராய்கின்ற, புல்லாணித் திருமான் முன்னே - திருப்புல்லாணித் திருமாலின் சந்நிதியிலே, சக்கர தீர்த்தக்கரை மேன்மண்டபத்துள் - சக்கர தீர்த்தக்கரைமேலிருக்கிற மண்டபத்திலிருந்து, கதிதருசீர் - நல்ல கவிகளை விரைவாய்ப் பாடும் சிறப்புப்பெற்றவனும், நெல்லூர் வாழ் - நெல்லூர் என்னுந் தலத்தில் வாழ்பவனுமாகிய, வீரன் - வீரன் என்னும் பெயரையுடைய, ஆசுகவிராசன் - ஆசுகவி பாடுவோர்க்கெல்லாம் அரசனாக விளங்குகின்றவனே, கவியரங்கம் ஏற்றினனே - அரிச்சந்திரபுராணக் கவியை அரங்கேற்றுதல் செய்தான். எ-று. ஏ - தேற்றம்.

இதனால் காலமும் இடனும் விளக்குவதோடு வழிநூல் என்பதும் விளக்கினார். வியன் கதை மேலான கதையுமாம். வியப்பைத்தரும் கதை என்பாருமுண்டு. "அதிவிதமாங் கலியுகம்" என்றதற்கு முன்னையுகங்களி லில்லாதனவாகிய மற்றமார்க்கம் பலவுந்தோன்றும் கலியுகம் என்பது பொருளாம். புலமையோர் கவி, கமகன், வாதி, வாக்கியென நால்வகையராவர். அவருள், கவி:—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளைப் பாடுவோன். ஆசு என்பது:—பொருள், அடி, பா, அணி முதலியனகொடுத்து மற்றொருவன் பாடுகவென உடனே பாடுவது. நமது நெல்லூர் வீரகவிராயர் ஆசுகவி பாடுதலில் அதி சமத்தராதலின் "நெல்லூர்வாழ்வீரன் ஆசுகவிராசன்" என்றார். புலவர்களுக்குள் ஆசு பாடுவோன் சிறந்தோன்: இதனாலன்றோ காளமேகப்புலவரை "ஆசுகவியால் அகில உலகெங்கும், வீசுபுகழ்க் காளமேகமே!" என்றனர் இரட்டையர்கள். (கச)

பாயிரம் முற்றிற்று.

ஆ பாடல் - கச.

---

உ

சிவமயம்.

# நாட்டுச்சிறப்பு.

கலிநிலைத்துறை.

முன்னா றறியாப் பிறவிக் குருடான மூடன்
தன்னாற் றொடுசா கரத்தினிடஞ் சாற்று மாபோல்
என்னா லறிதக்க தன்றென்னினு மன்னர் மன்ன
னன்னாட் டணியான் சிலவல்ல நடத்த லுற்றேன்.

[நாட்டணி சொல்லுதலின் அருமைகூறுகிறது.]

இ-ள். முன் - முதலிலே, ஆறு அறியா - வழிதெரியாத, பிறவிக்குருடான மூடன் - பிறப்பிலே குருடனாகிய ஒரு அறிவில்லாதவன், தன் ஆற்றொடு-தன் வழியோடு, சாகரத்தினிடம் - சமுத்திரத்தின் நிலையை, சாற்றுமாபோல்-சொல்லுவதைப்போல், என்னால் - என்னாலே, அறிதக்கது - அறியக்கூடியது, அன்று என்னினும் - அல்லவென்றாலும், மன்னர் மன்னன்-ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரனுடைய, நன் நாட்டு அணி-நல்ல நாட்டினுடைய அலங்காரத்தை, யான்-நான், சில-சிலவற்றை, வல்ல நடத்தல் உற்றேன் - கூடியமட்டில் சொல்லத் தொடங்கினேன். எ-று.

'முன் ஆறு அறியா' என்பதற்கு முன்னால் ஆற்றையே (நதியையே) அறியாத என்று பொருள்கொள்ளலும் ஆம். நதியையே தெரியாதவனாகிய ஒரு பிறவிக்குருடனான மூடன் நதிகள் பலபோய்க்கலக்கும் சமுத்திரத்தின்வழியை எவ்வாறுகூறுவன் என்பதுபொருள். 'தன்னாற்றொடு' தன்சக்தியைக்கொண்டு என்றும், அதனிற் கலக்கின்ற நதிகளோடு என்றும் பொருள் கொள்வர். அதனிற்கலக்கின்ற நதிகளோடு என்றுபொருள் கொள்ளின் ஆற்றொடு என்றது ஒருமைப் பன்மை மயக்கம். "மூடன் தன்னால் தொடுசாகரம்" எனப் பிரித்து (பிறவியிலேயே குருடானவனும் பிறர்பால் கேட்டறியும் தன்மையுமில்லாத) மூடன் சகர புத்திரர்களால் தோண்டப்பட்ட கடலின் இடத்தை தன் அறிவால் சொல்லுவதுபோல் எனவும் பொருள் கூறுவர். அப்பொழுது தன்னால் என்பதற்கு தன் சுயமூட அறிவைக்கொண்டே என்பதாம். "சிலவல்ல நடத்தலுற்றேன்" என் அறிவின்வல்லமையால் கூறக்கூடியவைகள் சிலவற்றைச் சொல்லத் தொடங்கினேன் என்றும் பொருள்செய்யலாம். கம்பரும் நாட்டுச்சிறப்பு கூறுமுன்னர்,

"வாங்கரும் பாதநான்கும் வகுத்தவான் மீகியென்பான்
தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச்செய்தான்
ஆங்கவன் புகழ்ந்தநாட்டை யன்பெனு நறவமாந்தி
மூங்கையான் பேசலுற்றா னென்னயான் மொழியலுற்றேன்."

என்றபாடலின் கருத்து இதனோடு ஒப்பிடத்தக்க தொன்றும். இதுவும் பின்வருவனவும் கலிநிலைத்துறைகள். (க)

தட்பாற் கடலா ரமுதங் கெழுமித் தழைத்து
நட்பாற் புகுந்தா லெனவந்துவர் வேலை நண்ணி
உட்பாற் புனலுண் டெழுந்தோங்கிய காள கூடம்
விட்பாற் பரந்தா லெனமேக மெழுந்த தன்றே.

[மழையின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

இ-ள். தண் பால் கடல்-குளிர்ந்த பாற்கடலில், ஆர் அமுதம்-பொருந்தியிருந்த அமிர்தம், கெழுமித் தழைத்து - சிறந்து விளங்கிப்பெருகி, நட்பால்-தனக்கு (பிறப்புமுறையால்) உறவாகையினாலே, புகுந்தாலென - வந்து சேர்ந்ததைப்போல, வந்து உவர் வேலை நண்ணி - (வெள்ளியமேகம்) வந்து உப்புக்கடலைக்கிட்டி, உள்பால் புனல் உண்டு - உள்ளிடத்திலிருப்பதாகிய நீரைக்குடித்து, எழுந்து ஓங்கிய காளகூடம் - (திருப்பாற் கடல்கடைந்த முன்னாளிலே) கிளம்பி மிகுந்ததான ஆலகாலவிஷம், விட்பாற்பரந்தாலென - ஆகாயத்தினிடமெல்லாம் பரவினதுபோல, மேகம் எழுந்தது - மேகம் மேலே எழும்பியது. எ-று. அன்று, ஏ - அசைகள்.

"உள்பால்புனல்" என்றதில் 'பால்' இடப்பொருளுருபு. பாற்கடற்கும் உவர்க்கடற்கும் கடல் என்ற அளவில் இயைபுண்டாதலின் பாற்கடலில் பிறந்த அமுதம் உவர்க்கடலில் நட்பால் நண்ணிற்று என்றார். (உ)

அடியும் முடியுந் தெரியாதிருண் டண்ட மெங்குங்
கொடியுங் குடையு மெனமாமுகிற் கூட்ட மீண்டிப்
படியும் விசும்பும் பகைத்தாலெனப் பார விற்கோத்
திடியுந் துளியுங் கணையாய்ப்பெரி தெய்த தன்றே

[இதுவும் மழையின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

இ-ள். அடியும்முடியும் - கீழும்மேலும், தெரியாதிருண்டு - தெரியாதபடிக்கு இருண்டு, அண்டமெங்கும் - ஆகாயமெல்லாம், கொடியுங் குடையுமென - நீலக்கொடிகள் பறந்தாற்போலவும் நீலக்குடைகள் விரிந்தாற்போலவும், மாமுகிற்கூட்டம் - பெரிய நீலமேகக் கூட்டங்கள், ஈண்டி-கூடி, படியும் விசும்பும் - பூமியும் ஆகாயமும், பகைத்தாலென - விரோதித்துக்கொண்டு சண்டைசெய்தாற்போல, பாரவிற்கோத்து - (பெரிய) கனமான இந்திரவில்லைக்கூட்டி, இடியும் துளியும் - இடிகளையும் துளிகளையும், கணையாய் - அம்புகளாக, பெரிதெய்தது - மிகவும் எய்தது (எய்ததுபோல் மழைபெய்தது.) எ-று. அன்று, ஏ-அசைகள். (ங)

மீனந் திகழ்வேலையிற் றோன்றிய தென்ன விண்ணோர்
தானந் திகழ்தாத் திரியைப் பெருந் தாழியாக்கி

வானந் தனைநெய் யரிவட் டகையாக்கி விட்ட
பானந் தனையொத்து விழுந்தது மாரி பம்பல்.

[இதனால் மழைத்துளிகள் பூமியில்விழுஞ் சிறப்புக்கூறுகின்றார்.]

இ-ள். மீனம்திகழ்வேலையில் - மீன்கள் சஞ்சரிக்கின்ற கடலிலே, தோன்றியதென்ன - (இம்மது) உண்டாகியதென்று, விண்ணோர் - (மதுவடிப்போராகிய) தேவர்கள், தானந்திகழ் - இடமாக விளங்குகின்ற, தாத்திரியை - பூமியை, பெருந்தாழியாக்கி - பெரிய பானையாக்கி, வானந்தனை - ஆகாயத்தை, நெய்யரி வட்டகையாக்கி - வடிகட்டும் வட்டிலாக்கி, விட்ட - (வடிகட்டுதற்கு) ஒழுகவிட்ட, பானந்தனை - மதுவை, ஒத்து - உவமைகூறும்படி, மாரிபம்பல்- மழைதுளிவிழுகை, விழுந்தது - விழுந்தது. எ-று.

'தானந்திகழ்' என்றது சராசரங்கள் தங்கியிருத்தற்கிடமாக விளங்குகின்ற என்றும், வானோர் வடிகட்டும் மதுதங்குதற்கு இடமாக விளங்குகின்ற என்றும், மழை பெய்தற்கு இடமாக விளங்குகின்ற என்றும் பொருள் கொள்ளலாம். மீனந்திகழ் வேலையிற் றோன்றிய மதுவாதலின் மீனிருத்தல் கூடுமென்று வடிகட்டுதல் வேண்டிற்று. 'பெருந்தாழி' மிடா: நெய்யரிவட்டகை=வடிகட்டுங் கருவி, பன்னாடையாற்செய்த கருவி என்பாருமுண்டு. 'பானம்' மது என்றும்; நீரும் ஆம். மாரிப் பம்பல்=மழைத் துளிகள். வடிகட்டுங் கருவியிற் பல சிறு துளைகள் இருக்கும் அதன்வழி வழியும் மதுபோல மழைத்துளிகள் விழுந்தன என்பதாம். (௪)

விண்ணிற் பொழியுங் கணைமாரி விழுந்து தைத்த
புண்ணிற் பொழியுங் குருதித் திரள்போல வெங்கு
மண்ணிற் பொலியிந் திரகோப மலிந்து தோன்றக்
கண்ணிற் கமையாப் புனல்வந்து கலித்ததன்றே.

[ஜலம் பிரவாகமாகியதைக் கூறுகின்றது.]

இ-ள். விண்ணில் - ஆகாயத்திலிருந்து, பொழியும் - பெய்கிற, கணைமாரி - பாணவருஷங்கள், விழுந்து தைத்த புண்ணில் - விழுந்து புகுந்ததனாலுண்டானபுண்ணில், பொழியும் - வழிகின்ற, குருதித்திரள்போல - ரத்தத்துளிகளின் கூட்டங்கள்போல, எங்கும மண்ணில் - பூமியில் எங்கும், பொலி- (மழைபெய்யுங்காலத்தில்) விளங்கித் தோன்றுவதாகிய, இந்திரகோபம் - இந்திரகோபப்பூச்சிகள், மலிந்துதோன்ற - மிகுந்துவிளங்க, கண்ணிற் கமையா- கண்ணினாற்கண்டு முடியாதபடி (அவ்வளவுமிகுதியாக), புனல் வந்து கலித்தது- ஜலப்பிரவாகமாக வந்து ஆரவாரித்தது. எ-று. அன்று, ஏ - அசைகள்.

பாணம்தைத்த புண்ணில் உண்டாம் இரத்தத் துளிகளுக்கு மழைத்துளி பூமியில் விழுந்தவுடன் தோன்றுவனவாகிய இந்திர கோபப்பூச்சிகளை உவமை கூறினார். 'கலிப்பு' ஓசை. (௫)

கள்ளங் கொலைகட் புலைகாம மென்றைந்து மற்றார்க்
குள்ளந் தெளிந்தோர் தருமுத் தமதான மென்னப்
பள்ளந் திடர்மால் வரைகானகப் பக்க மெங்கும்
வெள்ளம் பெருகிப் பரந்தோடி விரைந்த தன்றே.

[இது ஜலப்பிரவாகத்தின் பெருக்கம் பாவியதைக் கூறியது.]

இ-ள். கள்ளம் - களவும், கொலை - கொலைத்தொழிலும், கள் - கட்குடித்தலும், புலை - பொய்சொல்லுதலும், காமம் - மாதரை விரும்புதலும், என்ற ஐந்தும் - என்று சொல்லப்படுகின்ற பஞ்சமா பாதகங்களையும், அற்றார்க்கு- ஒழித்த பெரியோர்களுக்கு, உள்ளந்தெளிந்தோர் - மனத்தெளிவடைந்தவர்கள், தரும் - கொடுக்கும், உத்தமதானமென்ன - உத்தமதானத்தைப்போல, பள்ளம்- பள்ளங்களிலும், திடர் - மேடுகளிலும், மால்வரை - உயர்ந்த மலைகளிலும், கானகப்பக்கமெங்கும் - காடுகளாகிய பக்கங்களிலும், வெள்ளம் பெருகி - அந்தப்பிரவாகமானது பெருகி, பரந்து ஓடி - பெருகிப்பாவி ஓடி, விரைந்ததன்றே- வேகங்கொண்டது. எ-று. அன்று, ஏ - அசைகள்.

'புலை'=கீழ்மை, எல்லாப்பாவத்தினும் மிகக்கீழானது பொய்யாதலின் புலை என்றதற்கு 'பொய்' எனப் பொருள் கொண்டாம். (சு)

கருவிக் கணமாமழை பெய்து கலித்த வெள்ளம்
பரவிப் பலகோடி பருப்பதக் கோடோடித் தாங்
கருவித் திரள்புக் கடங்கா திரைத்தோடி யார்த்துச்
சரயுத் தனிலே தலைவைத்துச் சரித்த தன்றே.

[இதில், சரயுநதியிலேவந்து வெள்ளங் கலந்தமை
கூறப்படுகின்றது.]

இ-ள். கருவி - பூலோகத்திற்குத் துணைக்காரணமாகிய, கணமாமழை-கூட்டமாகிய பெரிய நீலமேகங்கள், பெய்து - பொழிந்து, கலித்த வெள்ளம் - ஆரவாரித்து எழுந்த ஜலப்பிரவாகம், பரவி - எங்கும்பரந்து, பலகோடி - அநேகங்கோடி, பருப்பதக்கோடோடி - பெரியமலைகளின் சிகரங்களின்வழியாக ஓடி, தாங்கு அருவி - அந்தச் சிகரங்கள் தாங்கியுள்ள சிற்றாறுகளின், திரள் புக்கு- கூட்டங்களோடும் புகுந்துகூடி, அடங்காது - அவ்வரையகத்தே அடங்கியிராது- இரைத்தோடி - ஆரவாரித்து ஓடி, ஆர்த்து-பின்னும் முழங்கி, சரயுத்தனிலே- சரயுநதியிலே, தலைவைத்துச் சரித்தது - கூடி ஓடிற்று. எ-று. அன்று, ஏ- அசைகள்.

'மழை' உலகிற்குத் துணைக்கருவியாக இருப்பது. இதுபற்றியே 'கருவிமாமழை' என்றார் நைடத நூலாசிரியரும். 'கணம்' கூட்டம்; "பருப்பதக் கோடோடித் தாங்கருவித் திரள்புக்கு" என்பதற்குமலைச் சிகரங்களை முறித்து அச்சிகரங்களினின்றும் வருகின்ற அருவிக்கூட்டங்கள் புகப்பெற்று,

என்றும் பொருள் கொள்வர். 'தலைவைத்தல்' கலத்தல், கூடல் என்பது பொருள். (எ)

ஆரங் குளவஞ்சி யசோகு பலாசந் தேவ
தாரம் வகுளங் கடுச்சண் பகஞ் சாதி கன்னி
காரஞ் சுரபுன்னை கடம்புகச் சூரம் வேய்கர்ப்
பூரம் பணையோடு புரண்டிடப் போய தன்றே.

[இச் செய்யுளினால் சரயுநதியின் செலவு சொல்கின்றார்.]

இ-ள். ஆரம் - சந்தனமரம், குளவஞ்சி - முசிவஞ்சிமரம், அசோகு- அசோகமரம், பலாசம் - பலாசமரம், தேவதாரம் - தேவதாருமரம், வகுளம்-மகிழமரம், கடு - கடுமரம், சண்பகம் - சண்பகமரம், சாதி - சாதிலிங்கமரம், கன்னிகாரம் - கோங்குமரம், சுரபுன்னை - சுரபுன்னைமரம், கடம்பு - கடம்பமரம், கச்சூரம் - கச்சூரமரம், வேய் - மூங்கில், கர்ப்பூரம்-கர்ப்பூரமரம், பணையொடு-அரசமரத்தோடுங்கூட (ஆகிய இவைகள்), புரண்டிட - அலைகளோடுபுரளும்படி, போயது - அச்சரயுநதி சென்றது. எ-று. அன்று, ஏ - அசை. (அ)

ஏலந் தகர மிலவங்க மரித்திரந் தக்
கோலம் வசவாசி செங்குங்கு மங்கோட்டம் வாரித்
தாலம் பதினாலு நடுங்கிடச் சார்ந்த வூழிக்
காலந் தனில்மோது கருங்கட லொத்த தம்மா.

[இச்செய்யுளிலும் அச்சரயுநதியின் செலவே கூறுகின்றார்.]

இ-ள். ஏலம் - ஏலமும், தகரம் - தகரமும், இலவங்கம் - இலவங்கமும், அரித்திரம் - அரித்திரமும், தக்கோலம் - தக்கோலமும், வசவாசி - வசம்பும், செங்குங்குமம் - செவந்த குங்குமமும், கோட்டம் - கோட்டமும், வாரி - வாரிக்கொண்டு, தாலம் பதினாலும் - பதினான்குஉலகமும், நடுங்கிட - நடுங்கும்படி, சார்ந்த ஊழிக்காலம் தனில்-(உலகத்தை அழித்தற்கு) வந்த ஊழிக்காலத்திலே, மோது - (வந்து) மோதுகிற, கருங்கடல் - கரியகடலை, ஒத்தது - போன்றது. எ-று. அம்மா, அசை; வியப்பெனினும் பொருந்தும்.

முந்திய பாட்டாலும் இந்தப் பாட்டாலும் சரயுநதி குறிஞ்சியில் ஓடினதும் குறிஞ்சி நிலக் கருப்பொருளை வாரி வந்தமையுங் கூறினர். 'தகரம்' தகரமரம், இது மஞ்சவிரையினென்று, அரித்திரம்; மஞ்சள், சந்தமும் ஆம். 'தக்கோலம்' ஓர்செடி இது மஞ்சவாசத்து ஒன்று, வால்மிளகும் ஆம். (கூ)

நீலம் வைரம் வைடூரிய நித்தி லஞ்செங்
கோலந் திகழ்துகிர் கோமளப் பத்ம ராகந்
தாலந் தனில்வந்தவெ ரிந்திர சாப மென்ன
ஓலந் திகழாற்றி னெழுக்கெறிந் தோடிற் றன்றே.

[இச் செய்யுளாலும் சரயுநதியின் செலவே
கூறப்படுகின்றது.]

இ-ள். நீலம் - நீலமணிகளும், வைரம் - வைரங்களும், வைடூரியம் - வைடூரியங்களும், நித்திலம் - முத்துக்களும், செங்கோலந்திகழ் - சிவந்த நிறமாக விளங்குகின்ற, துகிர் - பவளங்களும், கோமளப் பத்மராகம் - அழகாகிய பதும ராக மணிகளும், (ஆகிய இவைகள் தன்னிடத்தில் விளங்குதலினாலே) தாலந் தனில் - பூமியிலே, வந்ததோ ரிந்திரசாபம் என்ன - வந்தவொரு இந்திர சாபத்தைப்போல, ஓலந்திகழ் - ஒளிமிகுந்து விளங்குகின்ற, ஆற்றின் ஒழுக்கு - அந்தச் சரயுநதியின் செல்லுகை, எறிந்தோடிற்று - கரைகளையெல்லாம்உடைத்துக்கொண்டு ஓடிற்று. எ-று, அன்று, ஏ-அசைகள்.

"இந்திரசாபம்" என்றது வானவில்லை. (௧௦)

கலி விருத்தம்.

ஆடு நாகமு மத்திக ளும்வரை
யாடு நாகமு மத்திகை யேபுன
லோடு நாகமு முற்றிட லானதி
யோடு நாகமு மேந்தியை யொத்ததே.

[இச்செய்யுளால் சரயுநதிக்கும் சிவனுக்கும் சிலேடை
கூறுகின்றார்.]

சிவபிரானுக்குச் சிலேடை.

இ-ள். ஆடு - (படமெடுத்து) ஆடுகின்ற, நாகமும் - நாகப் பாம்புகளும், அத்திகளும் - (பிரம்ம விஷ்ணுக்களின்) எலும்புகளாலாகிய மாலையும், வரையாள் - மலைமகள், துன் - பொருந்தியுள்ள, ஆகமும் - மேனியும், அத்தி - அப்பாதிவடிவினது, கை - கையிலே, ஏய் - பிறந்த, புனலொடு - கங்கையொடு, நாகமும் - புன்னைமலரும், உற்றிடலால் - பொருந்தியிருத்தலால்,..............

ஆற்றுக்குச்சிலேடை. ஆடு நாகமும் - ஆடுகின்ற வானரங்களும், அத்திகளும் - அத்திமரங்களும், வரையாடும் - வருடைகளும், நாகமும் - யானைகளும், அத்திகையே - அவைகொண்டுபோகப்பட்ட திசையிலே, புனல் - நீரின்கண், ஓடு - ஓடுகின்ற, நாகமும் - பாம்புகளும், உற்றிடலால் - பொருந்தி யிருத்தலினால், நதி - அந்தச்சரயுநதியானது, ஓடும் - பிரமகபாலத்தையும், நாகமும் - மகமேருவையும், ஏந்தியை - ஏந்திய சிவபெருமானை, ஒத்தது - ஒத்திருக்கின்றது. எ-று. ஏ - ஈற்றசை. (௧௧)

'அத்திசை' என்றது அத்திகை என மருவியது. இச்செய்யுள் அடிமடக்கும் சிலேடையும் அடங்கிய ஒருமாச்சீரும் மூன்று விளச் சீராலுமாகிய கலிவிருத்தம்.

அம்ம டங்கலு மாழி கிளர்ந்தெழு
மம்ம டங்கலு மொப்பதை யன்றதின்

மும்ம டங்கலு ம் வெல்லு முதிர்கய
முமம டங்கலும் கொண்டு முடுகிற்றே.

[இச்செய்யுளில் சரயுநதியின் வேகம்கூறுகின்றார்.]

இ-ள். அம் அடங்கலும் - நீர்முழுதும், ஆழி கிளர்ந்தெழும் - கடலின் கண் செழித்து மிகுந்து எழுகின்ற, அம்மடங்கலும் - அழகிய ஊழித்தீயையும், ஒப்பதை அன்றி - நிகராவதை அன்றி, அதின் - அதினும், மும்மடங்கலும் - மூன்றுபங்கும், வெல்லும் - வெல்லாநின்ற, முதிர்கயமும் - பருத்தயானையையும், மடங்கலும் - (அதனைவெல்லும்) சிங்கத்தையும், கொண்டு - தன்கண்ணே சேர்த்துக்கொண்டு, முடுகிற்று - விரைந்துசென்றது. எ-று. ஏ-ஈற்றசை.

அச்சரயுநதி வலிய யானைகளையும் சிம்மங்களையும் இழுத்துக்கொண்டு விரைந்தோடிற்றென்பது கருத்து. (கஉ)

முறியு மாறுந் தருவு முதல்கெட
முறியு மாறுந்தி முற்றினன் மான்மத
வெறியு மாறடி யுங்கொடு வேகமும்
வெறியு மாறிலா வெங்களி றொத்ததே.

[சரயுநதி மதயானையை ஒத்தது என்று கூறுகின்றது.]

இ-ள். முறியும் - தளிர்களும், மாறும் - வளார்களும், தருவும் - மரங்களும், முதல்கெட - அடியோடு கெடும்படி, முறியுமாறு - சிதையும்படி, உந்தி - (வீழும்படித்) தாக்கி, முற்றி - சூழ்ந்து, நல - நல்ல, மால்மத வெறியும் - பெரிய மதசல நாற்றத்தையும், மாறடியும் - மாறிவைக்கப்பட்ட அடிகளையும், கொடு - கொண்டுவருதலினால், வேகமும் - விரைவையும், வெறியும் - மதவெறியையும், மாறிலா - நீங்காத, வெங்களிறு - கொடிய மதயானையை, ஒத்தது - ஒத்திருந்தது. எ-று. ஏ - அசை. மால் பெரிய னகரம் புணர்ச்சியாலாயிற்று.

மதங்கொண்ட யானை தளிர்களையும், வளார்களையும், மரங்களையும் அடியோடு முறித்துக்கொண்டு மதநாற்றத்தோடு செல்லுதல்போல இந்நதி சென்றதென்பதாம். 'மாறடி' யானைக்குக்கூறும்போது மாறுபட்ட பாதம் என்றாம்.

வார ணத்தடங் கோடும் வளைகளும்
வார ணத்தடங் கோடும் வான்றிமே
ஆர ணத்துறை யந்தரி யுண்மகிழ்ந்
தார ணத்துறை யொத்ததவ் வாறரோ.

[இது, சரயுநதி பத்திரகாளியின் போர்க்களம்
போன்றது என்பது.]

இ-ள். அவ்வாறு - அந்தச் சரயுநதி, வாரணத்து - யானைகளினுடைய, அடு - கொலைசெய்கின்ற, அம் - அழகிய, கோடும் - தந்தங்களையும், வளைகளும் -

சங்குகளையும், வார் - நீண்ட, அண் - பொருந்திய, அத்தடங்கோடும் - அப்பெரிய ஊதுகொம்புகளையும், வாரணம் - தடையாகிய, தடங்கோடும் - தடாகக் கரைகளையும், வான்றி - வாரிக்கொண்டு, ஆரணத்து - வேதத்தில், உறை - தங்கிய, அந்தரி - பத்திரகாளி, உண்மகிழ்ந்து - திருவுளங் களிகூர்ந்து, ஆர் - பொருந்திய, ரணத்துறை - போர்க்களத்தை, ஒத்தது - ஒப்பாயிற்று. எ-று. அரோ, அசை. (கச)

துடிம ருங்கிற் கொடிச்சியர் தோயவே
துடிம ருங்கிற் பரப்பிச் சுழித்துராய்க்
கொடிபு னைந்த குகன்கழ றாழ்ந்துபூங்
கொடிபு னைந்த குறிஞ்சி கடந்ததே.

[இதில், சாயுநதி குறிஞ்சிநிலத்தைவிட்டுக் கடந்தமை சொல்லப்பட்டிருக்கிறது.]

இ-ள். துடிமருங்கு - உடுக்கைபோன்ற இடையையுடைய, இல்கொடிச்சியர் - இல்லிற் செறிக்கப்பட்ட குறமகளிர், தோய - மூழ்க, துடி - ஏலச்செடிகளை, மருங்கிற் பரப்பி - அருகிற் பரப்பிக்கொண்டு, சுழித்து - சுழித்துக் கொண்டு, உராய் - உராய்ந்து, கொடி புனைந்த - வெற்றிக்கொடிதரித்த,குகன்- முருகக்கடவுளினுடைய, கழல்தாழ்ந்து-பாதங்களை வணங்கி, பூங்கொடி - மலர்க் கொடிகளும், புல் - புற்களும், னைந்த - தன்னுலேசினைந்த, குறிஞ்சி - குறிஞ்சி மலைச்சார்பை, கடந்தது - கடந்துசென்றது. எ-று. ஏ - அசை.

'துடி மருங்கில்' என்பதில் 'இல்' என்பதை வேற்றுமையுருபு மயக்கமாகக்கொண்டு உடுக்கைபோன்ற மருங்கை உடைய கொடிச்சியர் என்றும் பொருள் கொள்ளலாம். 'இல் கொடிச்சியர்' என்றெடுத்துப் பொருள் கொள்ளின் இல்லிற் செறிக்கப்பட்ட பெண்கள் ஆடும்படி இல்லிற் கருகில் ஓடி, என்று பொருளாம். "கொடிபுனைந்த" கோழிக்கொடியைக் கொண்டிருக்கின்ற என்றும் பொருளாம், எனெனின் குமரக்கடவுளுக்குரிய கொடியாதலின். 'பூங்கொடிபுனைந்த குறிஞ்சி' என்றெடுத்துக்கொண்டு பூக்கொடிகளால் அலங்கரிக்கப்பட்ட குறிஞ்சி நிலத்தைக்கடந்து என்று பொருளாம். 'புல்'=புலி என்றும் பொருள் கொள்ளலாம். "குறிஞ்சி" இது மலையும் மலைசார்ந்த இடமுமாம்; "கல்லாங் குறிஞ்சி" என்றதாற் போதரும். (கடு)

வீயும் வேங்கையு மந்தியு மேதகு
வீயும் வேங்கையும் மந்தியு வீழ்பலாக்
காயும் பாலையில் கைக்கய முங்கொடு
காயும் பாலையில் வந்து கலந்ததே.

[சாயுநதி பாலைக்குள் வந்தமை கூறுகின்றது.]

இ-ள். வீயும் - பறவைகளையும், வேங்கையும் - புலிகளையும், மந்தியும்- குரங்குகளையும், மேதகுவீயும் - மேலானமலர்களையும், வேங்கையும் - வேங்கை

மரங்களையும், மந்தியும் - வண்டுகளையும், வீழ்பலாக்காயும்-விரும்பத்தகுந்தபலாக் காய்களையும், பால் - தன்பக்கங்களில், அயில் - (நீரை) உண்கின்ற, கை-துதிக் கையையுடைய, கயமும் - யானைகளையும், கொடு - வாரிக்கொண்டு, காயும்-சுடு கின்ற, பாலை - பாலைநிலத்தில், வந்துகலந்தது - சாயுநதி வந்துகூடிற்று. எ-று. ஏ-ஈற்றசை. வீழ்—விருப்பம். (கசு)

தேரு மாறுணா ராச்சின வேடர்பேய்த்
தேரு மாறமுட் டேறரும் பாலையில்
ஊரு மாதரி யாரையு முந்திமான்
ஊரு மாதரி தாடொழு துற்றதே.

[பாலையில் சாயு ஓடிய பண்பு கூறுகின்றது.]

இ-ள். தேரும் - தெளியும், ஆறு - வழியை, உணரா - அறியாத, சின வேடர் - கோபத்தையுடையமறவர், பேய்த்தேரும் - கானலையும், ஆறும்-வெள் ளத்தையும், உள் - உள்ளே, தேறரும் - பகுத்தறிதல் கூடாத, பாலையில்-பாலை நிலத்தில், ஊரும் - அங்குள்ள ஊர்களையும், மாதர்யாரையும் - மகளிர் யாவரை யும், உந்தி - தள்ளிக்கொண்டு, மான் - கலைமானை, ஊரும் - நடத்துகின்ற, மாதரி - பத்திரகாளியினது, தாள் தொழுது - தாளைவணங்கி, உற்றது - பொ ருந்திற்று. எ-று. ஏ - ஈற்றசை.

பாலைநிலத்திற்கு உரியதெய்வம் காளியாதலின் அவள் தாளைவணங்கிற்று.

இறவங் கோங்க மிருப்பையின் பூந்துணர்
இறவங் கோங்க வெரிமின் மினியெனப்
புறவ மேய்ந்த சுரம்விட்டுப் போய்ச்செழும்
புறவ மேய்ந்தது பூம்புன லாறரோ.

[பாலையைவிட்டுச் சாயுநதி முல்லைக்குச் சென்றது என்பது இதிற் கூறப்பட்டிருக்கிறது.]

இ-ள். அம் - அழகிய, கோங்கம் - கோங்கமரத்தினுடையவும், இருப்பை யின் - இருப்பையினுடையவும், பூந்துணர் - பூங்கொத்துகள், இற - ஒடியவும், இறவு - இறால்மீன்கள், அங்கு ஓங்க - மேலெழவும், எரி - நெருப்பு,மின்மினி யென - மின்மினிபோற்றோன்றவும், புறவமேய்ந்த - புறாக்கள்மேய்ந்த, சுரம் விட்டு - பாலைநிலத்தைவிட்டுப்போய், செழும் - செழித்த, புறவம் - முல்லை நிலத்தில், பூம்புனலாறு - அழகிய நீரையுடைய அந்தச்சாயுநதியானது, ஏய்ந் தது - பொருந்தியது. எ-று. 'அரோ,' அசை.

"முல்லை" காடும் காடுசார்ந்த இடமும் "காடாகுமுல்லை" என்றதால் உணரப்படும். (கஅ)

ஆடு மாசுரை யாவிடை யாழநீர்
ஆடு மாசுரை யாவிடை யோடவே

கோடு குத்திக் குலேத்தது கொன்றையின்
கோடு குத்திக் குலேத்துணர் வாரியே.

[இச்செய்யுளால், சாயுநதி முல்லேயிற் சென்ற
பான்மை கூறுகின்ருர்.]

இ-ள். ஆடும் - முழுகுதற்குரியதும், மாசு உரையா - குற்றஞ்சொல்லப் படாததும், இடையாழம் - நடுவாழத்தையுடையதுமாகிய, நீர் - சாயுநதியின் வெள்ளமானது, ஆடு - ஆடுகளும், மா - பெரிய, சுரையா - கறவைப் பசுக்களும், விடை - எருதுகளும், ஓட - அஞ்சி ஓடும்படியாக, கொன்றையின் - கொன்றை மரங்களினுடைய, கோடு - கிளேகளே, உகுத்து - முறித்து, இக்குலே- இக்காய்க் கொத்துகளேயும், துணர் - துளிர்களேயும், வாரி - சேர்த்துக்கொண்டு, கோடு - கரைகளே, குத்தி - மோதி, குலேத்தது - அழித்தது எ-று. ஏ-ஈற்றசை.

இதில் முல்லேநிலக் கருப்பொருள்கள் கூறப்பட்டன. (கக)

அண்டர் தோயலே வாரி மராவழீஇ
அண்டர் தோயலே வாரியிற் சார்ந்தணி
கொண்டலேத்தரிக் குங்குருந் திற்கலே
கொண்டலேத்தரிக் கொத்த குடிஞையே.

[சாயுநதி முல்லேநிலத்தில் கிருஷ்ணனே ஒத்திருந்தது,
என்பது சொல்லப்படுகிறது.]

இ-ள். அண்டர் - ஆயரது, தோயலே - தயிரை, வாரி - கொள்ளேயிட்டு, மரா - மராமரத்தை, அழீஇ - அழித்து, அண்டர் - தேவர்கள், தோய் - மூழ்காநின்ற, அலே - அலேகளேயுடைய, வாரியில் - கடலின்கண்ணே, சார்ந்து- கூடி, அணி - அலங்கரிக்கப்பட்ட, கொண்டலே - மேகத்தை, தரிக்கும் - தரிக்கின்ற, குருந்தில் - குருந்தமரத்தில், கலே - ஆய்ச்சியர் அணியும் ஆடைகளே, கொண்டு - பொருந்துமாறு செய்துகொண்டு, அலேத்து - அலேத்துக்கொண்டு, அரிக்கு - திருமாலுக்கு, குடிஞை - அந்தச்சாயுநதியானது, ஒத்த - ஒத்திருந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

கிருஷ்ணனின் பாலலீலேகளேப்போல இச்சாயுவும் தயிரைவாரல், மராமரத்தை அழித்தல், கடலேச்சார்தல், ஆய்ச்சியர் கலேகளேக் கவர்தல் முதலியன செய்தலின் அரியை ஒத்ததென்ருர். 'அழீஇ' சொல்லிசை அளபெடை. ()

உறவ ணங்கு மராவு முழங்கிவான்
உறவ ணங்கு மராவு மொசித்தது
மறைவ ணங்கு மரியை வணங்கல்போல்
மறைவ ணங்கு மரியை வணங்கியே.

[பாலையில் பத்திரகாளியை வணங்கியதுபோல் முல்லையில் திருமாலை வணங்கிற்று என்பதாம்.]

இ-ள். உற - மிகவும், அணங்கும் - வருந்துகின்ற, அராவும் - பாம்புகளையும், உழக்கி - வருத்தி, வானுற - மேகம்வந்து படிவதினாலே, வணங்கும்- வளைந்திருக்கின்ற, மராவும் - மராமரங்களையும், ஒசித்தது - ஒடித்தது, மறைவு- மறைந்திருத்தலை, அண் - பொருந்திய, நம் - நமது, குமரியை - பத்திர காளியை, வணங்கல்போல் - முன் பாலையில் வணங்கினதுபோல, மறை - வேதத்தினாலே, வணங்கும் - வணங்கப்பட்ட, அரியை - திருமாலை, வணங்கி- முல்லையிலும் வணங்கிக்கொண்டு. எ-று. ஏ-ஈற்றசை.

இச்செய்யுள் குளகம் அடுத்த பாட்டில் உள்ள 'புகுந்ததே' என்ற வினை கொண்டு முடிகின்றது. "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்பது சூத்திரம். முல்லை நிலத்துக்குக் கடவுள் விஷ்ணுவாதலில் விஷ்ணுவை வணங்கிற்று. (உக)

ஆவி யன்ன பெடைகளு மன்றிலும்
தூவி யன்னமுந் துன்னிய நாரையும்
மேவி யின்பம் விடாத நெடும்புனல்
வாவி சூழு மருதம் புகுந்ததே.

[சரயுநதி மருதநிலஞ் சார்ந்ததென்பது கூறப்படுகின்றது]

இ-ள். ஆவி அன்ன - உயிருக்குச்சமானமான, பெடைகளும் - பெட்டை அன்றில்களும், அன்றிலும் - ஆண் அன்றில்களும், தூவி - இறகையுடைய, அன்னமும் - அன்னங்களும், துன்னிய - நெருங்கியிருக்கிற, நாரையும் - நாரைகளும், மேவி - (கூடிப்) பொருந்தி, இன்பம்விடாத - சந்தோஷம் நீங்காத, நெடும்புனல்வாவி - மிகுந்த நீரையுடைய குளங்களாற் சூழப்பட்ட, மருதம்- மருத நிலத்திலே, புகுந்தது - சரயுநதியானது சென்றது. எ-று. ஏ-ஈற்றசை.

'சரயு' என்னும் எழுவாய் வருவிக்கப்பெற்றது. 'மேவியின்பம் விடாத வாவிசூழும் மருதம் நெடும்புனல் புகுந்ததே' எனக்கொண்டு கூட்டாகக்கொண்டு, சந்தோஷம் நீங்காத குளங்கள் சூழ்ந்துள்ள மருத நிலத்திற்குள்ளே (நெடும்புனல் - நீண்டுவருவதாகிய) சரயுவானது புகுந்தது, என்றும் பொருள் கூறலாம். 'இன்பம்விடாத' என்பதற்கு காண்போர்க்கு எப்பொழுதும் சந்தோஷம் பயத்தலினின்றும் நீங்காத என்றும் அன்றில்களும் அன்னங்களும் நாரைகளும் தத்தம் பேடைகளோடும் கூடிக்கொண்டிருக்கும் சந்தோஷம் நீங்காதிருக்கப்பெற்ற என்றும் பொருள்தரும். நாடும், நாடுசார்ந்த இடமும் மருதமாகும் இதனை "நாடாமருதம்" என்பதனாலறியலாம். (உஉ)

வாழை பூக மகிழ்மரு தாசினி
தாழை கேசரஞ் சம்பகஞ் சன்மலி

ஞாழன் மாதுளை நாகம லிந்ததன்
சூழல் சேரத் தொலைத்தது தோயமே.

[இச்செய்யுள் சரயுநதி மருதநிலத்திற்குட் சென்ற
சிறப்பு கூறுகின்றது ]

இ-ள். வாழை - வாழைமரங்களும், பூகம் - பாக்கு மரங்களும், மகிழ்- மகிழமரங்களும், மருது - மருதமரங்களும், ஆசினி - பலாமரங்களும், தாழை- தென்னை மரங்களும், கேசரம் - பூந்தாதுகளையுடைய, சம்பகம் - சண்பகமரங் களும், சன்மலி - இலவமரங்களும், ஞாழல் - குங்குமமரங்களும், மாதுளை- மாதுள மரங்களும், நாகம் - புன்னைமரங்களும், மலி - மிகுந்த, தன் சூழல்- மருத நிலத்தின் இடமெல்லாம், சேர - ஒருமிக்க, தோயம் - அச்சரயுநதி, தொலைத்தது - அழித்தது. எ-று. ஏ-ஈற்றசை.

'மலி தண்சூழல் சேர' என்று பாடங்கொண்டு வாழை முதலிய மரங்கள் மிகுந்துள்ள மருதநிலத்தேயுள்ள குளிர்ந்த நிலங்கள் எல்லாவற்றையும் ஒரு மிக்க, என்று பொருள்கொள்ளல்வேண்டும். 'தோயம்' சரயுநதியைக் குறித் தது. ஆகுபெயர். (உ௩)

பால்கடோறும் பரந்து செறிந்தவக்
கால்கடோறுங் கலந்த கடும்புனல்
வால்கடோய்மகி டம்புக வான்படச்
சேல்கள் பாயுஞ் செழுந்தடம் புக்கதே.

[இதுவும் சரயுநதி மருதநிலத்திற் கால்கள் வழியாய்க்
குளங்களிற் சென்றமை கூறுகின்றது ]

இ-ள். பால்கள் தோறும் - அந்த மருதநிலத்தின் இடங்களிலெல்லாம், பரந்து செறிந்த - (எங்கும்) பரவி அங்கங்கே பொருந்தியுள்ள, கால்கள்தோறும்- வாய்க்கால்களிலெல்லாம், கலந்த - கூடின, கடும்புனல் - (சரயுநதியின்) வேக முள்ள ஜலமானது, வால்கள்தோய் - வால்கள் தொங்குகின்ற, மகிடம் - எரு மைகள், புக - புகுதலினாலே, சேல்கள் - சேல் மச்சங்கள், வான்பட - மேகங் களிலே படும்படி, பாயும் - துள்ளிவிழும்படியான, செழுந்தடம் - செழிப்புள்ள குளங்களிலெல்லாம், புக்கது - புகுந்தது. எ-று. ஏ-ஈற்றசை.

வால்கள்தோய்—வால்கள் பொருந்திய என்றும், கருத்தநிறமாகிய ஒளி பொருந்திய என்றும் பொருள் கூறுவர். 'வான்பட' ஆகாயத்தளவும் என்றும் பொருளாம். (உ௪)

வாவி சேர நிரப்பி மதகினில்
தாவி நீள்கரை சாடி யுடைத்தலை
நீவி வண்டல் கொழித்து நெடும்புனல்
பாவி நீள வயலிற் பரந்ததே.

[சாயுநதி வயல்களிற்சென்றமை கூறுகின்றது.]

இ-ள். வாவி - (இந்தவிதமாக) குளங்களெல்லாம், சோரிரப்பி - ஒரு மிக்க ஜலத்தால் நிரம்பச்செய்து, மதகினில் - மதகுகளில், தாவி - மோதிச் சென்று, நீள்கரைசாடி - நீண்டகரைகளை அடித்து, உடைத்து - உடைத்து, அலைவீசி - அலைகளைவீசி, வண்டல்கொழித்து - சேறுகளை ஒதுக்கி, நெடும் புனல் பரவி - (அச்சரயுவானது) மிகுந்த நீரை எங்கும் பரவச்செய்து, நீள-நெடிதுசென்று, வயலில் பரந்தது - வயல்களில் பாய்ந்தது. எ-று. ஏ-ஈற்றசை.

'நீளவயல்' என்பதற்கு நீளமாகிய வயல்களிலெல்லாம் பாய்ந்தது என்று பொருள்கொள்ளுதலுமொன்று. நீள=நீண்டு சென்று என்றுமாம். வயலில் நீளப்பரந்தது என வினை முடிபுகொள்க. "நீலவயல்" என்று பாடமோதி நீல நிறமாகிய வயலில் என்றும் கூறுவர். (உரு)

வரம்பு டைத்துக் கரைத்து மடுக்களின்
குரம்பு டைத்துங் குமுதமுங் கஞ்சமும்
கரும்பு மிஞ்சியு மஞ்சளுங் கட்டழித்
தரம்பை யோங்கு படப்பை யழித்ததே.

[மருதநில வயலினின்றும் கடந்து செல்லும்போது சரயுசெய்தமை கூறுகின்றது.]

இ-ள். வரம்பு - வயல்களிலுள்ள வரம்புகளை, உடைத்து - உடைத்து, கரைத்து - கரையப்பண்ணி, மடுக்களின் - மடுக்களினுடைய, குரம்பு - கரைகளை, உடைத்து - உடைத்து, குமுதமும் - குமுதமலர்களையும், கஞ்சமும்-தாமரைகளையும், கரும்பும் - கரும்புகளையும், இஞ்சியும் - இஞ்சிகளையும், மஞ்சளும் - மஞ்சள்களையும், கட்டழித்து - கட்டுக்குலையப்பண்ணி, அரம்பையோங்கு - வாழைமரங்கள் உயர்ந்துள்ள, படப்பை - மருதநிலத்து ஊர்களையும், அழித்தது - அச்சரயுநதி அழித்தது. எ-று. ஏ-ஈற்றசை.

குமுதம், கஞ்சம், கரும்பு, இஞ்சி முதலியன மருதநிலக்கருப்பொருளாத லுணர்க. (உசு)

ஏரி சேர வுடைத்தழித் தின்கனி
வாரி யோடி வளம்பயின் மள்ளர்தஞ்
சேரி சேர வழித்துச் செழும்புனல்
பேரி யாறு பரந்து பெருகிற்றே.

[சாயுநதி மருதநிலத்தூர்களைப் பின்னும் அழித்தமை கூறுகின்றது.]

இ-ள். ஏரி - பெரிய குளங்களை எல்லாம், சேர உடைத்து அழித்து-முழுதும் உடைத்துக்கெடுத்து, இன் கனிவாரி - இனிதான பழவர்க்கங்களை

யும் வாரிக்கொண்டு, ஓடி - சென்று, வளம்படியில் - விளைவைச்செய்கின்ற, மள்ளர்தம் - உழவர்களுடைய, சேரிசோ - ஊர்கள்முழுதும், அழித்து - கெடுத்து, செழும்புனல் - அந்தச் செழும்புனலாகிய, பேரியாறு - அந்தப் பெரிய சரயு நதியானது, பரந்துபெருகிற்று - பரவிப் பெருகியது. எ-று. ஏ-ஈற்றசை.

'செழும்புனல்'=அந்தச் சரயுநதியானது, பேரியாறு பரந்துபெருகிற்று= பெரிய ஆறாகப் பரந்து ஓடிப்பரவிற்று என்றும் பொருள் கொள்ளுவர். 'கனி' கனிவையுடைய காரணம்பற்றி வந்த பெயர்; கனிவு=இளக்கம். (உஎ)

நாடு தோறு மலிந்த நறும்புனல்
ஓடு மோதையு மோங்கு தடங்கரை
சாடு மோதையுந் தண்டலை வண்டுகள்
பாடு மோதையு மெங்கும் பரந்தவே.

[நதிபாய்தலினால் உண்டாகும் ஓசைமிகுதி கூறுகின்றது.]

இ-ள். நாடுதோறும் - அந்தக் கோசலநாடு முழுதும், மலிந்த நறும்புனல்- பாய்ந்து பெருகிய அந்த நல்லஜலமானது, ஓடும் ஓதையும் - ஓடுகின்ற சப்தமும், ஓங்கு - உயர்ந்த, தடங்கரை - பெரியதான கரைகளை, சாடும் ஓதையும்- மோதுகின்ற சப்தமும், தண்டலை - சோலைகளிலே, வண்டுகள் - தேன்வண்டுகள், பாடும் ஓதையும் - பாடுகிற சப்தமும், எங்கும்பரந்த - எவ்விடத்திலும் பாவிற்று. எ-று. ஏ-ஈற்றசை.

'தோறும்' பன்மைப் பொருடரும் இடைச்சொல். 'நாடுதோறும்' கோசலநாட்டின் இடங்களிலெல்லாம் என்பதாம். 'இடம்' என்னும் சொல் வருவிக்கப் பெற்றது. (உஅ)

கள்ள லம்பிய வாயுங் களிமகிழ்
உள்ள லம்பிய வுள்ளமுந் தோன்றவே
புள்ள லம்பிய பொய்கைக் கரையெலா
மள்ளர் வந்து நெருங்கி மலிந்தனர்.

[மள்ளர் மதுவுண்டு வந்தமை கூறுகின்றது.]

இ-ள். கள் - மதுவானது, அலம்பிய - வழிகின்ற, வாயும் - வாயும், களிமகிழ் - கள்ளுண்டதனாலுண்டாகிய சந்தோஷமும், உள்ளலம்பிய - உள்ளத்துக்குள்ளே அடங்காது வெளிக்கிளம்புகின்ற, உள்ளமும் - மனமும், தோன்றவே - வெளியாக, புள் அலம்பிய - பட்சிகள் சப்திக்கின்ற, பொய்கைக் கரையெலாம் - குளக்கரைகளிலெல்லாம், மள்ளர் - உழவர்கள், வந்து நெருங்கி மலிந்தனர் - வந்து மிகுந்து கூடினர். எ-று.

'கள்ளலம்பல்' என்றது மிகுதியாகக் கள் குடித்தமையால் கள் ஒழுகப் பெற்றமை என்பதாம். 'களிமகிழ்' கள்ளுண்டமையினால் உண்டாகும்மகிழ்ச்சி.

'புள்ளலம்பல்' திருப்தியாய் இரைகொண்ட பட்சிகள் மகிழ்ச்சியால் பாடும் ஒலி. "ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந், தூக்கமேமிகுந் திட்டெளிவின்றியே, தேக்கெறிந்து வருதலிற்றீம்புனல், வாக்குதேனுகர் மாக்களைமானுமே" என்ற கம்பர் கவி, கள்ளுண்டார் இயல்பை நன்கு விளக்கும். ஈங்கு இச்செய்யுள் கவனிக்கத்தக்கது. (உக)

கொட்டு வாங்கிக் குதித்து நிவப்புமண்
வெட்டு வார்சுமப் பார்மிதித் துக்கரை
கட்டு வார்வன் கடிப்பெடுத் துக்கிணை
தட்டு வார்துர கங்கொடு தாங்குவார்.

[மள்ளர்கள் வெள்ளமுடைக்காமல் கரைகாத்தமை
சொல்லப்படுகின்றது.]

இ-ள். கொட்டு - மண் வெட்டிகளை, வாங்கி - கையில் எடுத்துக்கொண்டு, குதித்து - சந்தோஷத்தினால் குதித்துக்கொண்டு, நிவப்பு மண் வெட்டுவார் - மேட்டிலுள்ளமண்ணை சிலர் வெட்டுவார்கள்; சுமப்பார் - சிலர் வெட்டிய அந்த மண்ணைச் சுமப்பார்கள்; மிதித்து - சிலர் அந்தமண்ணை மிதித்து, கரைகட்டுவார் - கரைகட்டுவார்கள்; வன்கடிப்பெடுத்து - சிலர்வலிவதாகியதோற்கடிப்பை எடுத்துக்கொண்டு; கிணைதட்டுவார் - மருதநிலப் பறையைக் கொட்டுவார்கள்; துரகம் கொடு - குதிரைமரங்களைக்கொண்டு (நிறுத்தி), தாங்குவார் - கரையைக் காப்பார்கள். எ-று.

'கடிப்பு'=தோற்கருவி, வாத்திய வகையிலொன்று. 'துரகம்'=நீரையடைக்குங் கருவி. குதிரை மரமென்றும் கூறுவர். (௩௦)

முழவெ ழும்படி மொய்சிறை யிற்கறங்
கெழவெ ருண்டய லன்ன மிரிந்திடப்
பழவ ரம்பு புதுக்கிப் பகடுசேர்த்
துழவ ரெங்கு முழுமொலி யோங்குமே.

[உழவர்கள் மருதநிலத்தில் உழும் ஓசையின் மிகுதி
சொல்லுகின்றார்.]

இ-ள். முழவெழும்படி - மருதநிலப்பறை ஒலிக்குந்தன்மையால், மொய்சிறையில் - நெருங்கிய இரண்டு சிறகுகளிலும், கறங்கெழ - சுழல் காற்றுத் தோன்றுமாறு, வெருண்டு - அஞ்சி, அயல் அன்னம் - சமீபத்துள்ள அன்னப் பட்சிகளானது, இரிந்திட - பறந்தோட, பழவரம்பு - பழைய வரம்புகளை, புதுக்கி - புதுவரம்புகளாகச்செய்து, பகடு சேர்த்து - எருமைகளை ஏரிலேபூட்டி, உழவர் - உழவர்கள், எங்கும் உழும் ஒலி - எங்கும் உழுகின்ற சப்தமானது, ஓங்கும் - பெருகும். எ-று. ஏ-ஈற்றசை.

'முழவெழும்படி' என்பதற்கு மருதநிலப் பறையடிக்கும் வயல் இடங்களி லெல்லாம், என்றும் பொருள் கொள்ளுவர். படி=பூமி, நிலம். 'கறங் செழ' என்பதற்கு, ஓசை உண்டாகும்படி' என்றும் பொருள் கொள்ளலாம். (௩௧)

வலம்பு ரித்திரள் வால்வளை வெண்சலஞ்
சலம்பி ளப்பத் தாளம் பிளப்பவுற்
பலம்பி ளப்பப் பதுமம் பிளப்பமீன்
குலம்பி ளப்பக் கொழுச்செ லுஞ் சாலெலாம்.

[உழவர்களின் கொழு செல்லும் இயல்பு கூறுகின்றார்.]

இ-ள். வலம்புரித்திரள் - வலம்புரிச்சங்கின் கூட்டங்களும், வால்வளை- வெள்ளைச் சங்கினங்களும், வெண் சலஞ்சலம் - வெண்மையான சலஞ்சலங் களும் பிளப்ப - உடைபடவும்; தாளம் - அவைகளிலுள்ளமுத்துக்கள், பிளப்ப- உடைபடவும்; உற்பலம்பிளப்ப - நீலோற்பலங்கள் சிதையவும்; பதுமம்பிளப்ப- தாமரை மலர்கள் சிதையவும்; மீன்குலம்பிளப்ப - மீன் கூட்டங்கள் நசுங்கவும்; சாலெலாம் - அவர்கள் உழுகிற நிலங்களின் இடமெல்லாம், கொழு செலும்- கொழுவானது செல்லும். எ-று.

'வலம்புரி' சங்கின் ஓர் இனம், வலதுபுறமாகச்செல்லும் வரையையுடை யது, இடதுபுறஞ்செல்லும் வரையையுடையதை 'இடம்புரி' என்பர். 'வலம் புரி' சங்கினங்களில் சிறப்புற்றது. "சலஞ்சலம்" இஃதும் சங்கினத்தைச் சேர் ந்ததே. வலம்புரி ஆயிரஞ் சூழ்ந்திருக்கப்பெறுவது. வலம்புரியினும் நனிமிக ஏற்றமுடையது. 'உற்பலம்' என்பதற்கு உற்பவிப்பது என்பது பொருள். 'மீன்' மின் என்னும் பகுதியடியாகப் பிறந்தது. (௩௨)

இரும்பொ டித்தன வேரடிக் கின்றகோல்
அரும்பொ டிபொடி யாக வுரப்பிநீள்
கரும்பொ டித்துக் கடாவடித் தெங்கணும்
பரம்ப டிப்பவர் பற்பல கோடியே.

[பரம்படிப்பவரின் மிகுதி கூறுகின்றார்.]

இ-ள். இரும்பொடித்தன - இரும்பாலாகிய ஒருமாத்திலே ஒடித்தாற் போலுள்ள, ஏர் - எரை, அடிக்கின்ற கோல் - (ஏர் செல்லுமாறு அவ்வேரிற் பூட்டியமாட்டை) அடிக்கின்ற கோலானது, அரும் பொடி பொடி ஆக உரப்பி- காணற் கரிதாகும்படி தூள்தூளாக ஆகும்படி அடித்து அதட்டி ஓட்டி, நீள் கரும்பு - (பிறகு மாட்டை செலுத்துதற்கு கோலில்லாமையால்) நீண்ட கரும்பை ஒடித்து, கடாவடித்து - எருமைகளை அடித்து, எங்கணும் - எவ்விடத்தும், பரம்படிப்பவர் - பரம்படிப்பவர்கள், பற்பலகோடி - பற்பல கோடிப்பேர்கள். எ-று. ஏ-ஈற்றசை.

'கோடி' மிகுதிகுறிக்கும் எண்ணுப்பெயர். 'அன்ன' என்றது 'அன்' எனவாயது தொகுத்தல் விகாரம். (௩௩)

கரும்புங் காவியுங் கஞ்சமு மாம்பலும்
அரும்புஞ் சேம்பு மலவனு மாமையும்
சுரும்பு நந்துஞ் சுரிமுக முஞ்செழும்
பரம்பு தோறும் படிந்து நெரிந்தவே.

[பரம்படிக்கும்பொழுது அழிந்து நசுங்கிய பொருள்களைக் கூறுகின்றார்.]

இ-ள். கரும்பும் - கரும்புகளும், காவியும் - நீலோற்பல மலர்களும், கஞ்சமும் - தாமரை மலர்களும், ஆம்பலும் - செவ்வாம்பன் மலர்களும், அரும்பும்- அவ்விடத்தே முளைத்திருக்கின்ற, சேம்பும் - நீர்ச் சேம்புகளும், அலவனும்- நண்டுகளும், ஆமையும் - ஆமைகளும், சுரும்பும் - வண்டுகளும், நந்தும் - நத்தைகளும், சுரிமுகமும் - சங்குகளும், செழும் பரம்புதோறும் - செழுமையாகிய பரம்பு மரங்களின் கீழெல்லாம், படிந்து நெரிந்தவே - அமிழ்ந்து நசுங்கின. எ-று. ஏ - ஈற்றசை. (௩௪)

சாலெ லாந்தர ளத்திரள் மள்ளர்தங்
காலெ லாங்கம லக்கடி கார்க்கடா
மேலெ லாம்பொழி வேழத்தின் சாறதன்
வாலெ லாம்பல மாமலர் மன்றலே.

[மருதநில வயல்களின் வளம் கூறுகின்றார்.]

இ-ள். சாலெலாம் - உழுகின்ற படைச்சாலெல்லாம், தாளத்திரள் - முத்துக்கூட்டங்கள் பொருந்தியிருக்கும், மள்ளர்தம் - உழுகின்ற உழவர்களுடைய, காலெலாம் - கால்களிலெல்லாம், கமலக்கடி - தாமரை மலர்களின் மணம்வீசும், கார்க்கடா - கறுத்த எருமைக்கடாக்களின், மேலெலாம் - மேலெல்லாம், பொழி வேழத்தின் - அவற்றின்மேல் அடிக்கின்ற கரும்பினுடைய, சாறு - சாறுவிளங்கும், அதன் வாலெலாம் - அந்த எருமைகளின் வாலிலெல்லாம், பல மாமலர் மன்றல் - பல சிறந்த மலர்களின் வாசனை மணக்கும். எ-று. ஏ-ஈற்றசை. ()

போர டித்த விதியவன் போன்றுமூன்
றூர டித்தவ னூர்தியென் றெண்ணியே
ஏர டிப்ப விருசிறை யுங்கொடு
மார டித்திரி யும்மட வன்னமே.

[உழவர் மாட்டை அடித்துச் செலுத்தும்போது அன்னப்பட்சிகள் பறந்தமை கூறுகின்றது.]

இ-ள். போர் அடித்த - (நானே பிரமமென்று) போர்செய்த, விதியவன்- பிரம்மாவை, போன்று - சிவபெருமானைக் கண்டு பயந்ததைப்போல, மூன்று ஊர் அடித்தவன் - திரிபுரங்களை அழித்த சிவபிரானின், ஊர்தி என் றெண்

ணியே - வாகனமென்று நினைத்தஞ்சியே, ஏர் அடிப்ப - உழவர்கள் ஏரிலே பூட்டிய எருதுகளை அடித்து ஒட்டும்போது, மட அன்னம் - இள அன்னங்கள், இருசிறையுங்கொடு - இரண்டு சிறகுகளையுங்கொண்டு, மாரடித்து - தமது மார்பிலே அடித்துக்கொண்டு, இரியும் - பறந்து ஓடும். எ-று. ஏ - ஈற்றசை.

நானே பிரமம் என்று போர்செய்த பிரமன் சிவபெருமானால் தலையிழந்து வீறழிந்து அஞ்சினன் என்பது புராணகதை; அதேபோல அப்பிரமனுடைய வாகனமாகிய அன்னப்பறவைகளும் உழவுமாட்டைச் சிவபெருமானின் வாகனங்களென்று நினைத்து, தமது கடவுளாகிய பிரமனைப்போல அஞ்சிற்றென்பதாம். அன்னங்கள் தமது தலைவனைவென்ற சிவபெருமானின் ஊர்தி தம்மையும் வெல்லும் என்று நினைத்தோடியதாகக் கூறியது தற்குறிப்பேற்ற அணியாம். இனி தமது கடவுளைவென்ற சிவபெருமானின் வாகனத்திற்கே இந்நிலைமை என்றால் சிவபெருமானால் தண்டிக்கப்பட்ட கடவுளாகிய பிரமனின் வாகனமாகிய நமக்கு என்னவாய்க்குமோ என்று அஞ்சி அன்னங்கள் ஓடின எனவும் கூறுவர். 'மாரடித்து' இதில் 'மார்பு' என்றசொல் 'மார்' என மருவியது. மார்பிலடித்துக்கொண்டு ஓடுதல் அஞ்சுற்றார் செயலாம். இறக்கையை அடித்துக்கொண்டு பறத்தலை யாரடித்தென்றார். 'விதி,' ஜீவப்பிராணிகளுக்கு நன்மை தீமைகளை ஊழின்படி விதிக்கிறவன் என்னும் காரணம் பற்றி வந்த பெயர். "விதி என்தலையிற் றீட்டான்" என்றார் பிறரும். (௩௬)

நன்னு ரைத்தட நாண்மலர்த் தாதுறீஇப்
பன்னு ரைத்த பகட்டின் பதக்குளம்
பென்னு ரைப்ப திடமற வெங்கணும்
பொன்னு ரைத்த நிறத்தகற் போன்றவே.

[எருத்துமாட்டின் குளம்பில் மகரந்தம் படிந்திருத்தலைப்பற்றிக் கூறுகின்றது.]

இ-ள். நல்நுரைத்தடம் - நல்ல நுரையையுடைய தடாகங்களிலே, நாண்மலர் - ஒவ்வொருநாளும் பூத்த தாமரை மலர்களிலுள்ள, தாது - மகரந்தப் பொடிகள், உறீஇ - பொருந்தியிருக்கின்ற, பல் நுரைத்த - பற்களிலே நுரையையுடைய, பகட்டின் - எருதுகளின், பதக்குளம்பு - கால்களிலுள்ள குளம்புக்கு, என் உரைப்பது - எதை உவமை கூறுவது!, இடமற - இடமில்லாமல், எங்கணும் - எல்லாவிடங்களிலும், பொன்னுரைத்த - பொன்னையுரைத்த, நிறத்த - நிறத்தோடு கூடியிருக்கின்ற, கல்போன்ற - உரைகல்லை ஒத்திருக்கின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

'நாண்மலர்' அன்றலர்ந்தபூ, புதுப்பூ. 'தாது' மகரந்தம், பராகப்பொடி.

தொக்க வேதியர்க்குந் துறவோர்கட்குந்
தக்க தானந் தருபவர் போலவே

பக்க நோக்கிப் பலிப்பறிந் தெங்கணு
மிக்க செந்நெலும் வெண்ணெலும் வித்தினர்.

[உழவர்கள் நெல்விதைத்தமை கூறுகின்றது.]

இ-ள். தொக்க - ஒன்ருகச் சேர்ந்து கூடியிருக்கின்ற, வேதியர்க்கும் - பிராமணர்களுக்கும், துறவோர்கட்கும் - சன்னியாசிகளுக்கும், தக்கதானம் - தகுதியான தானத்தை, தருபவர்போலவே - (வாரிவாரிக்) கொடுக்கிறவர்களைப் போலவே, பக்க நோக்கி - நாலு பக்கங்களிலும் பார்த்து, பலிப்பறிந்து - அவ்வவ்விடங்களில் விளைகிற காலபக்குவந் தெரிந்து, எங்கணும் - எல்லா இடங்களிலும், மிக்க - மிகுதியான, செந்நெலும் - செந்நெற்களும், வெண் ணெலும் - வெண்மையான நெற்களும், வித்தினர் - விதையை விதைத்தார்கள். எ-று.

'தக்கார்க் கொன்றீவதே' ஈகை ஆதலால் "தொக்க வேதியர்க்குந் துறவோர்கட்கும்" என்ருர். (௩அ)

இறவு பாய விருங்கத லிக்கனி
மறவி பாய்வருக் கைக்கனி மாங்கனி
பிறவும் வாய்விண்டு பீறிப் பொழிந்திடு
நறவு பாய்ந்திட நாறு வளர்ந்தவே.

[தேன் பாய்தலினுல் நாற்றுகள் வளர்ந்தன என்பது சொல்லுகின்றது.]

இ-ள். இறவு - தேன்கூடுகளிலுள்ள தேன்வழிந்து, பாய - பாய்தலினுலும், இரும் - பெரிய, கதலிக்கனி - வாழைப்பழங்கள், மறவி - தேன், பாய் - ஒழுகுகின்ற, வருக்கைக்கனி - பலாக்கனி, மாங்கனி - மாம்பழம், பிறவும் - மற்றவும், வாய் விண்டு - வாய் வெடித்து, பீறிப் பொழிந்திடும் - உடைந்து வழிகின்ற, நறவு பாய்ந்திட - தேன்கள் பாய்தலினுல், நாறுவளர்ந்தவே - அந்த நாற்றுகள் வளர்ந்தன. எ-று. ஏ - ஈற்றசை.

"விழுந்த வஞ்சிறை வண்டின மிதிப்ப மெல்லரும்பு
கிழிந்து வார்தரு தேறலுங் கிளர்சினைப் பலவின்
பழங் கனிந்துவீழ் தேறலும் பழனங்க டோறும்
வழிந்து பாய்தலின் வானுற வளர்வன செந்நெல்."

என்ற நைடதச் செய்யுள் இங்கு கவனிக்கத்தக்கது. நாற்றுக்கும் தேனுக்கும் சம்பந்தமில்லாதிருக்க சம்பந்தங் கற்பித்தது தொடர்புயர்வு நவிற்சியணி. (௩௯)

சேம்பு தோன்றுஞ் செழுந்தடத் தின்கரைத்
தூம்பு தோன்றிப சோர்புனற் றேன்றுவ
காம்பு தோன்றுவ வைப்புழைங் கட்பெரும்
பாம்பு தோன்றுவ போன்றன பாலெலாம்.

[ஏரி மதகின் துவாரத்திருந்து பாயும் நீர் வீழ்ச்சிக்கு
உவமைகூறுகின்றார்.]

இ-ள். சேம்பு - நீர்ச்சேம்புகள், தோன்றும் - முளைத்துத் தோன்றுகின்ற, செழுந் தடத்தின் கரை - செழுமையாகிய அகன்ற இனிய கரையிலுள்ள, தூம்புதோன்றிய சோர் புனல் - ஏரி மதகின் துவாரங்களின் வழியே வழிந்து தோன்றுகின்ற ஜலமானது, காம்பு - மூங்கில்கள், தோன்றும் - முளைத்துத் தோன்றுகின்ற, வரை புழைக்கண் - மலையின் குகையிலிருந்து, பெரும் பாம்பு- பெரிய பாம்பு, தோன்றுவ போன்றன பாலெலாம் - தோன்றுவதைப்போல மதகின்பக்கமெல்லாந் தோன்றின. எ-று.

இதில் சேம்பு தோன்றுங்கரையை மூங்கில் தோன்றும் மலைக்கும் மதகின்துளைக்கு மலைக்குகையையும் நீர் ஒழுக்குக்கு பெரும்பாம்பையும் உவமித்தமையால் உவமையணியாம். தூம்பு=ஏரிமதகு. (௪0)

இரவை வென்ற விருண்ட செழுங்குழல்
அரவை வென்ற வகலணி யல்குல்வெங்
கரவை வென்ற கயற்கட் கடைசியர்
குரவை வென்ற குரைகட லார்ப்பையே.

[கடைசியர் குரவைச்சப்தம் கடல் ஒலியை
வென்றது என்கின்றார்.]

இ-ள். இரவை வென்ற - இருட்டைச் செயித்த, இருண்ட செழுங் குழல் - கரிய செழுமையான கூந்தலையும், அரவை வென்ற - சர்ப்பத்தின் படத்தை வென்ற, அகல் அணி அல்குல் - அகன்ற அரைநாண் மாலையைக் கொண்ட நிதம்பத்தையும், வெங்கரவைவென்ற - வெவ்விய களவைச் செயிப்பதான, கயல்கண் கடைசியர் - கயல் மச்சம்போலும் கண்களையுமுடைய உழத்தியர்கள், குரவை - குரவைக் கூத்தினால் உண்டாகிற சத்தமானது, குரை- சப்திக்கின்ற, கடலார்ப்பை - கடற் சப்தத்தை, வென்ற - ஜெயித்தது. எ-று. ஏ - ஈற்றசை.

'குரவை' என்பது ஒருவகைக் கூத்து, கைகோத்துக் கொண்டாடுவது; "குரவைக் கூத்தே கைகோத் தாடல்" என்பதனாலறிக. இருண்ட செழுங் குழல் இரவையும், அகல் அணி அல்குல் அரவையும், கயற்கண் கரவையும், குரவை கடலார்ப்பையும் முறையே வென்றன என்பதாம். (௪௧)

செவ்வ ணந்திகழ் சீறடி மென்முகந்
நைவ்வ ணஞ்செழுந் தாமரை காவியி
னவ்வ ணம்விழி வாயரக் காம்பன்மற்
றெவ்வ ணங்களை கொய்குவ ரேழைமார்.

[உழத்தியர் தம்முகம் கண், வாய், கை, கால்போல விளங்கும் தாமரை நீலோற்பலம், ஆம்பல் முதலியவைகளைக் களையாது மயங்கிநின்றனர் என்பதாம்.]

இ-ள். செவ்வணந்திகழ் - சிவந்தநிறமாக விளங்குகின்ற, சீறடி - சிற்றடியையும், மென் முகம் - மிருதுவான முகத்தையும், கை - கையையும், வணஞ்செழுந் தாமரை - அழகால் செவந்த தாமரை ஒத்திருக்கின்றது, காவியின் அவ்வணம் - நீலோற்பல மலரின் அந்தநிறமானது, விழி - கண்களை ஒத்திருக்கின்றது, வாய் - வாயையோ, அரக்காம்பல் - செவ்வாம்பல்கள் ஒத்திருக்கின்றன, (இந்தவிதம் இருப்பதினாலே) ஏழைமார் - அந்த உழத்தியர்கள், எவ்வணங்களை கொய்குவர் - எந்தவிதமாகக் களைபறிப்பார்கள். எ-று.

சிலசொற்கள் வருவித்துப் பொருள்செய்யப்பட்டது, என்னை ?

"பண்கள்வாய் மிழற்றுமின்சொற் கடைசியர் பரந்துநீண்ட
கண்கைகான் முகம்வாயொக்கும் களையலாற் களையிலாமை
உண்கள்வார் கடைவாய்மள்ளர் களைகலா துலாவிநிற்பார்
பெண்கள்பால் வைத்தநேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்."

என்ற கம்பர்செய்யுளின் முதல்மூன்றடி இங்கு ஒப்பிடத்தக்கது. (சஉ)

வயலின் மென்களை மாய்க்குங் கடைசியர்
சயநெ டுங்கண் சலிலத்திற் றோன்றலால்
மயல்வி ளைந்து மயங்கிடு மள்ளர்தாம்
கயல்க ளென்றய லிற்பறி கட்டினார்.

[களைபறிக்கும் உழத்தியர் கண்களின் நிழலைக் கயலென்று உழவர் கருதிப் பறிகட்டினர் என்பதாம்.]

இ-ள். வயலின் மென்களை - அந்த வயல்களிலேயுள்ள மெல்லிய களைகளை, மாய்க்குங் கடைசியர் - பிடுங்குகிற உழத்தியர்களின், சய நெடுங் கண் - வெற்றிபொருந்திய நீண்ட கண்கள், சலிலத்தில் தோன்றலால் - நீரிலே தோன்றுவதினால், மயல்விளைந்து மயங்கிடும் மள்ளர்தாம் - ஆசையுண்டாகி மயங்கின உழவர்கள், கயல்களென்று - (அந்தக் கண்களின் நிழலை) மீன்களென்று நினைத்து, அயலிற் பறி கட்டினார் - சமீபத்திலே பறி கட்டினார்கள். எ-று.

காளையர் மனதை வெல்லும் திறனுடைமைபற்றி "சயநெடுங்கண்" என்றார். பறி - மீன்பிடிக்குங் கருவி. கண்ணின் நிழலை கயல் என்று மயங்கியது மயக்கவணியாம். மள்ளர், மயல்விளைந்து மயங்கினமையால் கடைசியர் கண்ணிழலைக் கயலென்று கருதினர் எனக் காரணம் தோற்றவைத்தமைகாண்க.

சேலி ரும்புனற் கேள்வனைச் சேர்ந்துபின்
சூலி ருந்து துவண்டலைந் தின்றுமெய்ப்

பாலி ருந்து பசந்து பழுத்தசெஞ்
சாலி கற்பினர் போற்றலே சாய்ந்தவே.

[சாலிகள் கருவுற்றுக் கதிர்முற்றித் தலைசாய்ந்து
நின்றமை கூறுகின்றார்.]

இ-ள். சேல் இரும் புனல் - மீன்களையுடைய பெரிதாகிய ஜலமாகிய, கேள்வனைச் சேர்ந்து - நாயகனைக்கூடி, பின் - பின்பு, சூலிருந்து - கர்ப்பங் கொண்டு, துவண்டலைந்து - துவளுதலாகி அசைந்து, ஈன்று - நெல்லாகிய கருவைப்பெற்று, மெய்ப்பாலிருந்து - தன்னுடம்பிற் பாலுங் கொண்டிருந்து, பசந்து - பசிய நிறத்தையுடையதாகி, பழுத்த செஞ்சாலி - பழுத்து விளைந்த செந்நெற்கள், கற்பினர்போல் - பதிவிரதைகள்போல், தலைசாய்ந்த - தலைவணங்கின. எ-று. ஏ - ஈற்றசை.

புனலாகிய நாயகனைச்சேர்ந்து செஞ்சாலி சூற்கொண்டது என்கின்றார்; புனலை நாயகனுக்கியதற்கு ஒப்ப செஞ்சாலியை நாயகியாக்கினர்; மகளிரின் கருப்பக்குறிகள் அனைத்தும் செஞ்சாலி என்னும் நாயகியிடத்தும் உண்டாயதாகக் கூறினர். இது முற்றுமுவமம். ஈண்டு,

"சொல்லருஞ்சூற் பசும்பாம்பின் றோற்றம்போன்
மெல்லவே கருவிருந் தீன்றுமேலலார்
செல்வமே போற்றலை நிறுவித்தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.''

என்ற சீவக சிந்தாமணிச் செய்யுள் கருதற்பால தோன்றும். கற்புடை மகளிர்க்கும் சாலிக்கும் இயைபு கூறியதாம். (சுச)

தோட்டு வார்நறை சூழ்வயல் சோர்வொறீ இப்
பூட்டு வார்கதிர்ப் புள்ளங்கள் சூற்சங்கில்
தீட்டு வார்மலர்ச் செந்திரு காணமுன்
நீட்டு வாரென நெல்லரி வார்களே.

[நெல்லரிதலைக் கூறுகின்றது.]

இ-ள். தோட்டுவார் - பூவிதழ்களிலிருந்தொழுகுகின்ற, நறைசூழ் - தேன் பாய்வதான, வயல் - வயல்களிலே, சோர்வொறீஇ - மள்ளர்கள் இளைப்பில்லாதபடி, பூட்டு - கைப்பிடியிலே கோத்த, வார் - நீண்ட, கதிர் - பிரகாசமுடைய, புள்ளங்கள் - அரிவாள்களை, சூற்சங்கில் - கர்ப்பங்கொண்டிருக்கிற சங்குகளிலே, தீட்டுவார் - தீட்டிக் கொண்டவர்களாய், மலர்ச் செந்திரு காண - தாமரை மலரிலுள்ள லட்சுமி தேவி பார்க்க, முன் - அவளுக்குமுன்னே, நீட்டுவாரென - (வளையலாக அணிந்துகொள்ளச் சங்குகளை அறுத்துக்) கைகளை நீட்டிக் கொடுக்கிறவர்களைப்போல, நெல்லரிவார்களே - விளைந்த நெல்லை அறுப்பார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

'புள்ளம்'—அரிவாள்; சங்கில் அரிவாளைத் தீட்டுவது சங்கை வளையலாக அறுப்பதாகவும், தாமரை நிறம்பிய வயலிலுள்ள கதிர்முற்றிய நெற்பயிரை அறுப்பதை செந்தாமரையில் விளங்கும் லெட்சுமி தேவியின்முன் நீட்டிக் காட்டுவதாகவும் கூறினர் (சரு)

சேற்று வார்கதிர் சேரக் கொணர்ந்துவைத்
தாற்று வார்களத் தாற்றி னடைந்துபோர்
ஏற்று வார்பக டேற்றி மிதித்தநெல்
தூற்று வார்குவிப் பார்சுமப் பார்களே.

[நெல்லை வயலிலிருந்து அறுத்துவந்து களத்திற்சேர்த்து நெல்லடித்தல் கூறுகின்றது.]

இ-ள். சேற்று வார்கதிர் - சேற்றிலே கிடக்கின்ற நீண்ட நெற்கதிர்களை, சேரக் கொணர்ந்து - அறுத்து ஒருமிக்கக் கொண்டுவந்து, வைத்து - வைத்து, ஆற்றுவார் களத்தாற்றின் - வழிகளில் தலையிலே சுமந்துகொண்டுவருவார் வழியாக, அடைந்து - அந் நெற்கதிர்களை களத்துக்குக் கொண்டுவந்து அடைந்து, போர் ஏற்று - போராக உயர்த்தி, வார்பகடேற்றி - (பிறகு வைக்கோலினின்றும் நெல்லைப் பிரிப்பதற்காக) பெரிய மாடுகளை மிதிக்கும்படி ஏற்றி, மிதித்த நெல் - அவ்வாறு மாடுகள் மிதித்தலினால் கதிர்களிலிருந்து உதிர்ந்த நெல்லை, தூற்றுவார் - பதர் நீங்கும்படித் தூற்றுவார்கள், குவிப்பார் - தூற்றியநெற்களைக் குவிப்பார், சுமப்பார்கள் - குவித்த நெல்லைச் சுமந்துகொண்டு போவார்கள். எ-று. ஏ - ஈற்றசை. (சசு)

பகடு மட்டறப் பூட்டிப் படுத்தநெல்
சகடு முட்டவிட் டூர்ந்துதத் தங்குல
மகடு மக்களும் வைகுறும் வாழ்மனை
முகடு முட்ட நிறைப்பர்கண் முற்றுமே.

[நெல்லை வண்டியிலேற்றி வீடுசேர்த்தமை சொல்கின்றார்.]

இ-ள். பகடு - எருதுகளை, மட்டற - அளவில்லாமல், பூட்டி - இணைத்து, படுத்தநெல் - மிதிப்பித்த நெல்லை, சகடுமுட்ட விட்டு - வண்டிகளில் நிரம்ப ஏற்றி, ஊர்ந்து - (அவற்றை) ஓட்டிக்கொண்டுபோய், தத்தம் - தம்தம், குல மகடு மக்களும் - குலத்து மனைவியும் பிள்ளைகளும், வைகுறும் - வசிக்கும்படியான, வாழ்மனை முகடுமுட்ட - வாழ்வையுடைய வீடுகளின் முகடுகளில் முட்டும்படிக்கு, நிறைப்பர்கள் முற்றும் - அந்நெற்கள் முழுமையும் தம் வீட்டிற்குள்ளே நிறைப்பார்கள். எ-று. ஏ - ஈற்றசை. (சஎ)

நாடு தோறுமிவ் வாறு நடப்பன
காடு தோறுங் களிமயி லாடுவ

வீடு தோறுந் திருவிளை யாடுவ
கூடு தோறுங் கருங்குயில் கூவவே.

[கோசலநாட்டுச் சிறப்பு சொல்லப்படுகிறது.]

இ-ள். கூடுதோறும் - கூடுகளிலெல்லாம், கருங்குயில் கூவ - கருமையான குயில்கள் இருந்துகொண்டு கூவுதல்செய்ய, காடுதோறும் - காடுகளிலெல்லாம், களி மயில் ஆடுவ - களிப்புடைய மயில்கள் ஆடிக்கொண்டிருக்கும், வீடுதோறும் - வீடுகளிலெல்லாம், திருவிளையாடுவ - லட்சுமிதேவி சந்தோஷமாய் விளையாடிக்கொண்டிருப்பாள், நாடுதோறும் - இந்தக் கோசலநாடு முழுதும், இவ்வாறு நடப்பன - இந்தவிதமாகவே நடக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

இச்செய்யுளை வேறுவிதமாகவும் அன்வயித்துப் பொருள்கூறுவர். முதலடியை மாத்திரம் ஈற்றிற்கூறி மற்றைய அடிகளை அப்படியே அமைத்தும் பொருள் கூறலாம். (சஅ)

பெடைகி டப்பவும் பிள்ளை கிடப்பவும்
இடைகி டப்ப விளவனச் சேவல்கள்
மடைகி டக்கும் வளைமுத்தை யண்டமென்
றடைகி டப்பன வன்னப் பெடைகளே.

[அன்னங்கள் முத்துக்களை முட்டை என்று அடை காக்கும் என்பதாம்.]

இ-ள். பெடை கிடப்பவும் - பெட்டை அன்னங்கள் ஒருபுறத்திற் கிடக்கவும், பிள்ளை கிடப்பவும் - குஞ்சுகள் ஒருபுறத்திலே இருக்கவும், இள அனச் சேவல்கள் - இளமையான ஆண் அன்னங்கள், இடைகிடப்ப - நடுவே கிடக்கும்; மடை கிடக்கும் - நீர்பாய்கிற மடையிலே கிடக்கும், வளை முத்தை - சங்கின் முத்துக்களை, அண்டம் என்று - தங்கள் முட்டை என்று, அன்னப்பெடைகள் - சில பெட்டை அன்னங்கள், அடைகிடப்பன - அடைகிடக்கின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

'பிள்ளை' என்னும்பெயர் பறவைகளுக்கும் உரியதாகும். இதனை, "அவற்றுட், பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்றிளமை." என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தாலு முணர்க. (சகூ)

சாயெ லாம்பரு வச்செழுஞ் சாலியின்
காயெ லாந்தின்று கன்னற் படப்பையுள்
மேய லாலிள மேதிக ளின்கடை
வாயெ லாமுத்து மாலைக ளுலுமே.

[எருமையின்வாயில் நெல்லின்முத்தும் கரும்பின்முத்தும் தொங்கின என்பதாம்.]

இ-ள். சாய எல் ஆம் பருவச் செழுஞ்சாலி - கோரைகள்போல் (சாய்ந்து கிடக்கும்) ஒளியைக்கொண்டுள்ள முற்றிய பருவத்தையுடைய செழுமையாகிய நெல்லின், காயெலாந் தின்று - கதிர்களையெல்லாந் தின்று, கன்னற்படப்பையுள் - கரும்புத்தோட்டங்களிலே, மேயலால் - புகுந்து மேய்வதனாலே, இள மேதி - இளமையான எருமைமாடுகளின், கடை வாயெலாம் - கடைவாய் எல்லாம், முத்து மாலைகள் - முத்துக் கோவைகள், நாலும் - தொங்கும். எ-று. ஏ - ஈற்றசை.

'காய்' என்பதற்குப் பழம் என்றும் பொருள் கூறலாம். "சாய்" ஓர் வகைக் கோரைப்புல், எல்=ஒளி, பிரகாசம்; மேதிகள் நெல்லையும் கரும்பையுந் தின்றதினால் நெல்லிலும் கரும்பிலும் உள்ள முத்துக்கள் கடைவாயில் ஒன்றன்பின் ஒன்று ஒட்டிக்கொண்டு தொங்கின என்பதாம். நெல்லிலும் கரும்பிலும் முத்துப்பிறக்கும் என்பது கவிமரபு, இதுமட்டுமன்று முத்துக்கள் இருபது இடங்களிற் பிறக்கும் என்பர் புலவர். இதனை,

"தந்திவராக மருப்பிப்பூகந் தனிக்கதலி
நந்துசலஞ்சல மீன்றலைகொக்கு நளினமின்னார்
கந்தரஞ்சாலி கழைகன்னலாவின் பல்கட்செவிகார்
இந்துஉடும்பு காமுத்தமீனு மிருபதுமே."

என்னுஞ் செய்யுளாலறிக. இது மருதநிலச் சிறப்பாகும். (௩௦)

மட்டி லாமட வார்குடை வாவிவிட்
டெட்டி யன்ன மிரிந்து பறக்கவாய்
விட்டி ரங்கிடு பார்ப்பினை மென்மலர்த்
தொட்டி லாட்டித் திரைக டுயிற்றுமால்.

[அன்னப்பட்சியின் குஞ்சுகளைத் தாமரைமலரையே தொட்டியாகக்கொண்டு ஆட்டி அலைகள் தூங்கவைக்கும் என்பதாம்.]

இ-ள். மட்டிலா - அளவில்லா (கணக்கற்ற), மடவார் - பெண்கள், குடை வாவி - நீராடுகின்ற குளங்களை, விட்டு எட்டி அன்னம் இரிந்து பறக்க - விட்டுத் தூரமாய் ஓடி அன்னப்பட்சிகள் பறந்துபோக, வாய்விட்டிரங்கிடும் பார்ப்பினை - வாயைத்திறந்து கத்துகிற அவற்றின் குஞ்சுகளை, மென்மலர்த்தொட்டிலாட்டி - மிருதுவான தாமரைமலர்களையே தொட்டிலாகக் கொண்டு ஆட்டி, திரைகள் - அலைகள், துயிற்றும் - தூங்கவைக்கும். எ-று. ஆல், ஓ அசைகள்.

"அன்னம்" மருதநிலத்துப் புள்ளாதலறிக. பார்ப்பு=குஞ்சுகள். பறவையின் இளமைப்பெயர். "அவற்றுட், பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்றிளமை" என்னும் தொல்காப்பியத்தானறிக. (௩௧)

பள்ள மேற்பன சக்கனி யூறலவ்
வெள்ள மேற்கம லத்தவர் மேல்விழ
உள்ள மேற்கமு னுண்ட வவாவினல்
வள்ள மேற்பன போல்வன வாவியே.

[பலவின்தேறல் குளங்களில் தாமரை மலர்மேல் பாய்வதை வர்ணிக்கின்ருர்.]

இ-ள். பள்ளமேல் - மரத்தடியாகிய பள்ளங்களிலே, பனசக்கனி - (கிடக்கின்ற) பலாப்பழங்களினது, ஊறல் - தேனூறலானது, அவ்வெள்ளமேல்- அங்குள்ள குளத்து நீர்மேல், கமலத்தலர்மேல் - மலர்ந்திருக்கிற தாமரை மலர் மேலே, விழ - விழுவதானது, உள்ளமேற்க - மனந் திருப்தியாக, முன்முன்னே, உண்ட அவாவினல் - (பலவின்தேனைக்) குடித்த ஆசையினலே, வாவி - அக்குளங்கள், வள்ளமேற்பன போல்வன - கிண்ணங்களை ஏந்துவன போன்றிருந்தன. எ-று. ஏ - ஈற்றசை.

'விழ' என்ற வினை எச்சம் 'விழுதல்' எனப் பொருள் தந்துநின்றது. 'ஊறல்' தேன்; தேனை விரும்பிக் கிண்ணங்களை ஏந்துவனபோலிருந்தது. குளத்தில் தாமரை மலர்ந்து தோன்றும் காட்சி எனக் குறிப்பித்தார். இது தற்குறிப்பேற்ற அணி. 'வள்ளம்' எனற்கு தொன்னை என்பாருமுளர். பலா, மருதக் கருப்பொருளாதலறிக கமலம்=மருதநிலத்துப் பூவாம். (ருஉ)

பூகத் தின்செழும் பாளையைப் புன்கவி
நாகத் தின்பட மென்று நடுங்கியே
பாகத் திற்றின் று விட்ட பலாக்கனி
மேகத் திற்புரை வெங்கதி ரொக்குமே.

[பலாப்பழத்தைக் குரங்கு பாதி தின்று, தின்னுதுவிட்ட மற்ரெருபாதி சூரியனை ஒத்திருக்கிற தென்கின்ருர்.]

இ-ள். பூகத்தின் - கமுகமரத்தினது, செழும் பாளையை - செழுமையான பாளையை, புன்கவி - புத்தியீனமுள்ள குரங்கு (கண்டு), நாகத்தின்படமென்று- நல்ல பாம்பின் படமென்று நினைந்து, நடுங்கியே - பயந்து, பாகத்தில் - (பலாப் பழத்தின்) ஒருபகுதியில்மட்டும், தின்று - சாப்பிட்டு, விட்டபலாக்கனி - தின்னுதுவிட்ட பலாக்கனியின் மற்ரெருபாகமானது, மேகத்திற்புரை - மேகத்திலே பொருந்தியுள்ள, வெங்கதிர் ஒக்கும் - சூரியனை ஒத்திருக்கிறது. எ-று. ஏ - ஈற்றசை.

வேர்ப்பலா மண்ணில் வெடித்துத் தோன்றுமாதலின் மண்ணில்மறைந்து தோன்றுவதை மேகத்தில் மறைகின்ற கதிருக்கு உவமித்தார். வேறு பலாக் கனியாயின் இலைகளில் மறைந்து தோன்றும் காட்சியை என்க. 'பாகத்திற் றின்று' என்பதற்கு ரசத்துடனே தின்று என்றும் பொருள் கொள்வர். பூகத்

தின் பாளையை நாகபடமென்று குரங்கு மயங்கியது மயக்கவணியாம். மண்ணில் மறைந்து தோன்றும் பலாப்பழத்தின் ஒருபகுதி மேகத்தில் மறைந்து தோன்றும் கதிரவனுக்கு உவமித்தது உவமையணியாம். இரண்டும் கலந்து வந்தமையின் கலவையணியாம். "வெங்கதிர்" என்றதில் 'வெம்மை' என்னும் பண்பின் ஈறுகெட்டது, இது இனம்விலக்கவந்த அடைமொழி. (ருரு)

சேறு பாய்மலர்த் தேனொடு தீங்கனி
ஊறு பாய்வவு மொண்கரும் பட்டதீஞ்
சாறு பாய்வவுந் தத்தமிற் கூடியே
ஆறு பாய்வன வங்கங் கனந்தமே.

[பூந்தேன், கனித்தேன், கருப்பஞ்சாறு ஆகிய இவைகள் சேர்ந்து ஓடும் ஆறுகள் பல அந்நாட்டிலுண்டென்பது கூறுகின்றது.]

இ-ள். சேறுபாய் - நிலத்திலே சேறுண்டாகும்படிப் பாய்கின்ற, மலர்த்தேனொடு - பூவிலிருந்துவழியுந் தேனொடு, தீங்கனி - இனிப்பான பழங்களிலூறுகிற, ஊறு பாய்வவும் - தேன் பாய்வனவும், ஒண்கரும்பு - அழகிய கரும்பிலிருந்து, அட்டதீஞ்சாறு - ஆட்டி எடுக்கப்பட்ட இனியசாறு, பாய்வவும் - பாய்வனவும், தம்மிற்கூடியே - தமக்குள் ஒன்றாகக்கூடியே, ஆறுபாய்வன - ஆறாகப்பாயும் தன்மை, அங்கங்கனந்தமே - அந்தந்த இடங்களிலெல்லாம் அநேகமுண்டு. எ-று. ஏ - ஈற்றசை.

'சேறுபாய் மலர்த்தேன்' என்றதில் 'சேறாகும்படி' என்று பொருளாம்; இதனால் மலரின் தேன் மிகுதியும் பாயும் வேகமும் குறிக்கின்றது. 'அட்ட' ஆலையிலிட்டுச் சிதைத்த; என்பதாம். (ருசு)

மன்ற றங்கு மலர்களின் மேய்ந்திளந்
தென்றல் வந்தவண் சிந்திய தாதுகள்
குன்றின் வீழ்பொன் மழைக்குழு வென்னவே
முன்றி லும்மணி மாடமு மொய்க்குமே.

[தென்றற் காற்றால் வீசப்படும் பராகப்பொடியைப் பொன்மழைக் குவமிக்கின்றார்.]

இ-ள். இளம் தென்றல் - இளந் தென்றற் காற்றானது, மன்றல் தங்கும் - பரிமளந்தங்கிய, மலர்களில் மேய்ந்து - மலர்களிலே பாவி, வந்து - வந்து, அவண் சிந்திய தாதுகள் - அங்கே உதிர்த்த பராகப்பொடிகள், குன்றின்வீழ் - மலைகளின்மேலே பெய்கிற, பொன்மழைக்குழு என்னவே - பொன்மழைக் கூட்டங்கள் போலவே, முன்றிலும் - வாசல்களிலும், மணிமாடமும் - அழகிய வீடுகளின்மேலும், மொய்க்கும் - நிரம்பப்படியும். எ-று. ஏ - ஈற்றசை.

தென்றற் காற்றினால் கொண்டுவந்து மணிமாடங்களில் தூற்றப்படுகின்ற பராகப்பொடியை, மலைகளில் பெய்கிற பொன்மழைக் குவமிக்கின்றார். பொன்

மழை பெய்தல், இல்பொருளாம்; ஆதலினல் இது இல்பொருளுவமை அணி.

உகல ரும்புனத் திற்கிளி யோச்சுவார்
அகல்க வண்கொண் டெறியு மராமணி
பகல்வி ழுங்கண மொப்பன பாரெலாம்
குகனி ருந்த செழுந்தண் குறிஞ்சியே.

[குறிஞ்சி நிலத்துக்கிளி கடிதல் சொல்லப்படுகின்றது.]

இ-ள். குகன் இருந்த - முருகக்கடவுள் இருக்கின்ற, செழும்தண் குறிஞ்சி - செழுமையான குளிர்ந்த குறிஞ்சி நிலமெங்கும், உகலரும் - கெடுதலில்லாத, புனத்தில் - தினைப்புனத்தில், கிளி ஓச்சுவார் - கிளிகளை ஓட்டுகிறவர்களாகிய குறவர்கள், அகல் கவண் கொண்டு - அகன்ற கவணைக்கொண்டு, எறியும் - வீசுகிற, அராமணி - நாகரத்தினங்கள், பாரெலாம் - பூமியெல்லாம், பகல் விழுங்கணம் ஒப்பன - சூரியர்களின் கூட்டம் விழுவதை ஒத்திருக்கும். எ-று.

நாகரத்தினங்கொண்டு கிளிகடிவர் என்றது வீறுகோளணியாம். ரத்தினங்கள் வீழ்வதை சூரியர்கள் வீழ்வதற்கு உவமித்தது உவமை அணியாம். இவ்விரண்டும் கலந்துவந்தமையின் கலவையணியாம். பகல் = சூரியன், கணம்=கூட்டம். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் இந் நிலங்கட்குப் பெயர் வந்தகாரணம் அவ்வவ் நிலக் கருப்பொருள்களால் "கருங்கோற் குறிஞ்சிப்பூக்கொண்டு" எனவும், "கோட்டுறுபல்காய் வாலிணர்ப்பாலை" எனவும், "முல்லையங் தண்பொழில்" எனவும், "மருதமர்நீழல்" எனவும், "பாசடைநிவர்த கணைக்காநெய்தல்" எனவும் கூறப்படுதலால் அவ்வவ் நிலப் பொருள்களில் அவை சிறந்தனவாதலின் குறிஞ்சிநிலப்புள் 'கிளி' யாதலின் கிளிகடிவார் என்றார். (ருசு)

நெடிய நெய்தலி னித்தில வண்டலில்
கொடிய காதலிற் கூட லிழைத்திடுங்
கடிய நீலக் கருங்க ணுளைச்சியர்
மடியி லேறி வளைகண்முத் தீனுமே.

[நெய்தநிலச் சிறப்பு சொல்லுகின்றது.]

இ-ள். நெடிய நெய்தலின் - விசாலமாயிருக்கிற நெய்தல் நிலத்திலே, நித்திலவண்டலில் - முத்துக்கள் ஒதுங்கிக்கிடக்கிற சேற்று நிலத்திலிருந்து, கொடிய காதலில் - கொடுமையான காமத்தினலே, கூடல் இழைத்திடும் - சுழியிட்டுக்கொண்டிருக்கும், கடிய - கூர்மையான, நீலக் கருங்கண் - நீலோற்பல மலர்போலும் கறுத்த கண்ணையுடைய, நுளைச்சியர் - வலைச்சியர்கள், மடியிலேறி - மடிமேலேறி, வளைகள் - சங்குகள், முத்தீனும் - முத்தைப்பெறும். எ-று. ஏ - ஈற்றசை.

கொடிய காதல் = உயிரினை உடலினின்றும் நீக்குந் தன்மையதாகிய காதல், என்றும் தாங்குதற்கரிய என்று பொருளாம். 'கடிய நீலம்' எனக்கொண்டு வாசனையுடையதாகிய நீலோற்பலம் எனப்பொருள் கோடலுமாம். 'நீலம்' என்பது நிறத்தின்பெயர் மலர்க்கு ஆனதால் ஆகுபெயர். "கூடல்இழைத்தல்" என்பது தலைவனைப்பிரிந்த தலைவி தலைவன் சீக்கிரம் வருவனோ என்றறியச் செய்யும் ஒருவட்டம். தலைவன் வருவானானால் இரண்டுதலைப்பும் வட்டத்திற் பொருந்தும் இன்றேல் பொருந்தா. இதனை,

"பாடலாக்கிடும் பண்ணொடு பெண்ணிவள்
கூடலாக்கிடுங் குன்றின் மணற்கோடு
கோடல்பூத்தலர் கோழம்பத் துண்மகிழ்ந்
தாடுங்கூத்தனுக் கன்புபட் டாளன்றே." என்ற திருநாவுக்கரசரின் தேவாரத்தாலும்,

"வெய்யிலணைத்துருகிப் பையவகன்றவர்தா
மீள்வரெனக்கருதிக் கூடல்வளைத்தறவே
கையிலணைத்தமணற் கண்களிசோருமெனக்
கரையவிழுந்தழுவீர் கடைதிறமின்திறமின்."

"பிழைநினைந்துருகி யணைவுறுமகிழ்நர்
பிரிதலஞ்சிவிடு கண்கணீர்
மழைததும்பவிர றரையிலேயெழுது
மடநலீர்கடைக டிறமினோ."

என்ற கலிங்கத்துப் பரணியானுமறிக. நெய்தல் என்றதற் கமைய பிரிவினு லிரங்கிக் கூடலிழைத்தமை கூறப்பட்டது. (௫௭)

கலைய ளக்குங் கருங்க ணுளைச்சியர்
புலைய ளக்கு நறைக்கும் பொருந்தியே
விலைய ளப்பன வெண்முத்த மேயற
நிலைய ளக்கும் பரதவர் நெய்தலே.

[நுளைச்சியர் கள்ளுக்கு விலையாக முத்தை அளந்து
தருவர் என்பதாம்.]

இ-ள். அறநிலை அளக்கும் - தரும நிலையை அளவுசெய்து காண்கின்ற, பரதவர் நெய்தல் - வலையர்கள் நெய்த நிலத்தில், கலைஅளக்கும் கருங்கண் - காம நூலை அளவுசெய்து பார்க்கின்ற கரிய கண்ணையுடைய, நுளைச்சியர் - வலைச்சியர்கள், புலையளக்கும் - இழிகுணத்துடனே அளவுசெய்துவிற்கிற, நறைக்கும் - கள்ளுக்கும், பொருந்திய விலையளப்பன - சம்மதித்துத் தகுதியானதென்று விலையாக அளந்து கொடுப்பவை, வெண்முத்தம் - வெள்ளிய முத்துக்களே. எ-று. ஏ - ஈற்றசை.

'கலையளக்கும் கருங்கண்' என்பதற்கு, மானை உவமையாக அளவிட்டுக் கூறக்கூடிய கருத்த கண் என்றும் பொருள் கூறலாம். "புலையளக்கும் நறை" என்பதற்கு உண்டவனின் இழிகுணத்தை மிகுதியாக வெளிப்படுத்தும் கள். என்றும் பொருளாம். 'பொருந்தியவிலை' தகுதியான விலை என்பதாம். (௫அ)

நிலம்வி ளக்கிடு நித்தில நீலவுற்
பலம்வி ளக்கிடு பைம்புனல் பண்பினன்
னலம்வி ளக்கிடு நல்லவர் வாய்மொழி
குலம்வி ளக்கிடும் கோசல நாடரோ.

[கோசலநாட்டின் சிறப்பு சொல்கின்றது.]

இ-ள். குலம் விளக்கிடும் - கூட்டமான எல்லாநாடுகளிலும் சிறந்ததாகத் தன்னை விளங்கச்செய்யும், கோசலநாடு - கோசல நாட்டில், நித்திலம் - முத்துக்கள், நிலம் விளக்கிடும் - நிலங்களெல்லாம் பிரகாசித்துக்கொண்டிருக்கும், நீல உற்பலம் - நீலோற்பல மலர்கள், பைம்புனல் - பசுமையான ஜலங்களிலே, விளக்கிடும் - விளங்கிக்கொண்டிருக்கும், நல்லவர் - நல்லோர்களுடைய, வாய்மொழி - வாயிலிருந்துவரும் சொற்களிலே, பண்பினன் நலம் விளக்கிடும்- பயனுள்ள அழகிய நல்லவழிகள் விளங்கிக்கொண்டிருக்கும். எ-று. அரோ, அசை.

'குலம்,' கூட்டம்; 'நீல உற்பலம்' நீலமாகத் தோன்றுவது என்பது பொருள். 'பைம்புனல்' பசுமையான நீர்; இதில் 'பசுமை' என்ற பண்புப் பெயர் பைம் என்றாயது. "ஈறுபோதல் இடையுகரம் இய்யாதல் ஆதிநீடல் அடியகரம் ஐயாதல், தன்னொற்றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல், இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே" என்ற விதிப்படி ஈற்றுமை விகுதிபோய் நடுநின்ற உயிர் மெய்யுங்கெட்டு முதலிலிருந்த அகாம் ஐகாரமாகிவருமெழுத்திற்கு இனவெழுத்து மிக்கது. (௫௯)

நாட்டுச்சிறப்பு முற்றிற்று.

ஆ பாடல் - ௭௩.

---

உ

சிவமயம்.

# நகரச்சிறப்பு.

கலிவிருத்தம்.

மகர தோரண வாயிலு நாஞ்சிலுஞ்
சிகர மாமதி லுஞ்செறி போகழ்
சகரர் வான்புகழ் சாற்று மயோத்திமா
நகர மேன்மை சிறிது நடத்துவாம்.

[அயோத்திநகரத்தின் மேன்மை சிறிது சொல்கின்றேன் என்பதாம்.]

இ-ள். மகர தோரண வாயிலும் - மகர தோரணங்கள் கட்டியிருக்கிற கோட்டைவாசலையும், நாஞ்சிலும் - மதிலுறுப்புகளையும், சிகரமா மதிலும் - அவ் உறுப்புகளையுடைய பெரிய மதிலையும், செறி - நெருங்கிச் சூழ்ந்துள்ள, போகழ் - பெரிய அகழியானது, சகரர் வான்புகழ் சாற்றும் - சகரர்களுக்கு மிக்க புகழைத்தருவதாகிய அவர்கள் தோண்டிய கடலை ஒத்துத்தோன்றும், (அப்படிப்பட்ட அகழியாற் சூழப்பட்ட) அயோத்திமா நகரமேன்மை - அயோத்திமா நகரத்தின் மேம்பாட்டை, சிறிது நடத்துவாம் - (இனி எம்மாற் கூடியமட்டும்) கொஞ்சம் சொல்லத் தொடங்குகின்றோம். எ-று.

'சகரர் வான்புகழ்' என்றதில் 'புகழ்' ஆகுபெயராய்க் கடலைக் குறித்தது. சகரபுத்திரரால் கடல் தோண்டப்பட்டமை,

"சகரர் தொட்டலாற் சாகரமெனப்பெயர் தழைப்ப
மகரவாரிதி சிறந்தது மகிதலமுழுதும்
நிகரின் மைந்தனே புரந்தன னிவனெடுமரபில்
பகிரதன்னெனும் பார்த்திபன் வந்தனன்பரிவால்."

என்ற கம்பராமாயணச் செய்யுளாலும், அறியக்கிடக்கும். இது பெரும்பாலும், மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் என நான்குசீர் ஓரடிக்குவந்த கலிவிருத்தம்.

மாட மாளிகை யும்மடைப் பள்ளியுங்
கூட கோபுர மும்பெருங் கோயிலு
மாட ரங்கு மணியறச் சாலையும்
பாட லங்கரி வைகிய பந்தியும்.

[அயோத்தி நகரில் மாடமாளிகை கூடகோபுரங்கள் முதலியன
மிக உண்டு என்பதாம்.]

இ-ள். மாடம் - வீடுகளும், மாளிகையும் - உப்பரிகைகளும், மடைப்பள்ளியும் - சமையல்வீடுகளும், கூடகோபுரமும் - கூடங்களுங் கோபுரங்களும், பெருங் கோயிலும் - பெரிய அரண்மனைகளும், ஆடு அரங்கும் - நடனம் பண்ணுகிற நாடக சாலைகளும், அணி - அழகிய, அறச்சாலையும் - தரும சத்திரங்களும், பாடலம் கரி வைகிய பந்தியும் - குதிரைகளும் யானைகளும் தங்கிநிற்கிற இடங்களும் மிகவுள. எ-று.

'அந்நகரில்' என்ற சொல்லும் 'மிகவுள' என்ற சொல்லும் வருவித்துப் பொருள் கூறப்பட்டது. (௨)

மார னன்னவர் மாமயி லன்னவர்
தார டார்ந்த புயமுந் தனங்களு
நேர டார்ந்து நெருக்கலின் வீழ்ந்தபொன்
னார மின்னுவ வாவண வீதியே.

[கடைவீதிகளில் ஆடவர்களும் மாதர்களும் செல்லும் மிகுதி
சொல்கின்றார்.]

இ-ள். மாரன் அன்னவர் - மன்மதனை ஒத்த புருஷர்களும், மா மயில் அன்னவர் - அழகிய மயிலையொத்த சாயலையுடைய பெண்களும், (ஆகிய இவர்களின்) தார் அடார்ந்த - மாலைகள் நெருங்கிய, புயமும் - தோள்களும், தனங்களும் - கொங்கைகளும், நேரடார்ந்து - நேரே ஒன்றோடொன்று பொருந்தி, நெருங்கலின் - நெருங்குதலினாலே, வீழ்ந்த பொன்னாரம் - உதிர்ந்தபொன்னும் முத்தும்; ஆவணவீதி - கடைவீதிகளிலெல்லாம், மின்னுவ - விளங்கிக்கொண்டிருக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

மயில் என்றது தோகைமயிலை; தோகைமயில் பெண்களின் சாயலுக்குவமம். (௩)

அன்பு தங்கு மனத்தரிச் சந்திரன்
றன்பு கழ்க்கொழுந் தோங்கித் தழைத்தல்போற்
பொன்பு ணர்முலை யார்புலர்த் தும்மகி
லின்பு கைசென் றெழுமுக டெங்குமே.

[அந்நகரப்பெண்கள் கூந்தற்கு மூட்டும் அகிற்புகை ஆகாயமுகடெல்
லாம் பரவுமென்பதாம்.]

இ-ள். அன்புதங்கும் - அன்புதங்கிய, மனத்தரிச்சந்திரன்தன் - மனத்தையுடைய அரிச்சந்திரமகாராஜனின், புகழ்க்கொழுந்து - புகழின் கொழுந்தானது, ஓங்கி தழைத்தல்போல் - வளர்ந்து தழைப்பதுபோல, பொன்புணர்

முலையார் - பொன்னிறமான தேமலைக்கொண்ட தனங்களையுடைய பெண்கள், புலர்த்தும் அகிலின் புகை - கூந்தலைக் காயச்செய்கிறதற்கு மூட்டுகின்ற அகிற் கட்டைகளின் புகையானது, சென்றெழும் முகடெங்குமே - ஆகாயமுகடெல் லாம் போய்ப் படரும். எ-று. ஏ - ஈற்றசை.

'அன்பு' தெய்வபக்தி, எனினும் பொருந்தும். 'பொன்' தேமல், பொன் போலிருத்தலின் பொன்னெனப்பட்டது, பொன்னிற முடைமையின் என்ற லும் ஆம். இஃது, எடுத்துக்காட்டுவமை. (ச)

சோனை யார்ப்பென வூழி தொடர்ந்தெனச்
சேனை யார்ப்பன தேரொலி யார்ப்பன
வானை யார்த்துறும் வாம்பரி யார்ப்பன
வானை யார்ப்பன வாவண வீதியே.

[கடைவீதியின் ஓசையின்மிகுதி கூறுகின்றது]

இ-ள். ஆவணவீதி - கடைவீதிகளிலெல்லாம், சோனை ஆர்ப்பு என- மேகங்களின் முழக்கம்போலவும், ஊழி தொடர்ந்தென - ஊழிக்காலம் வந்தாற் போலவும், சேனை ஆர்ப்பன - சேனைகள் சப்திக்கும், தேரொலி யார்ப்பன- தேரினுடைய ஒலிமுழங்குகின்றன, வானையார்த்துறும் - ஆகாயத்தை அளா விச்செல்வதாய்த் தாவுகின்ற, வாம்பரி ஆர்ப்பன - குதிரைகள் கனைக்கின்றன, ஆனை ஆர்ப்பன - யானைகள் வீறிடுகின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

'ஆனை' யானை என்பதன்மரூஉ. 'சோனை' என்றது மழைமேகத்தை. ''ஊழி'' என்றது பிரளயகாலத்துப் பெருவெள்ளத்தை. (ரு)

வேத வோதை வியன்கலை யோதையின்
கீத வோதை கிளையோதை யாடுவார்
பாத வோதை பரிபுரத் தோதையாழ்
நாத வோதை நடப்பன நாளுமே.

[அயோத்திநகரில் உண்டாகும் வேதஒலி முதலிய ஒலிகளின் மிகுதி சொல்கின்றார்.]

இ-ள். நாளும் - (அயோத்திமாநகரில்) தினமும், வேத ஓதை - வேத கோஷ்டங்களும், வியன் கலை ஓதை - பெரிதான கலைஞான ஒலியும், இன்கீத ஓதை - இனிய இசைகளின் ஒலியும், கிளையோதை - மூங்கிற்குழல்களினொலி யும், ஆடுவார் பாத ஓதை - ஆடுகிற பெண்களின் கால்களிலுள்ள சதங்கையின் ஒலியும், பரிபுரத்தோதை - சிலம்புகளினொலியும், யாழ் நாத வோதை - வீணை யில் உண்டாகின்ற கானவொலியும், நடப்பன - உண்டாகிக் கொண்டேயிருக் கும். எ-று. ஏ - ஈற்றசை.

'வியன்கலை ஓதை' என்றது மேலான ஞான சாஸ்திரங்களின் ஆராய்ச்சி செய்கின்றவர்களின் ஓசையை என்க. 'ஓதை' என்னும் சொல் பன்முறை ஒரேபொருளில் வந்தமையால் சொற்பொருட் பிரதிநிலையணி. (சு)

கிள்ளை பாடுவ கீதங்கள் சாரிகைப்
பிள்ளை பாடுவ வேதம் பிராமணர்
கொள்ளை பாடுவ ரின்னிசைக் கோதையர்
வள்ளை பாடுவர் மன்னவன் வண்மையே.

[அயோத்தியில் கிள்ளைகள், நாகணவாய்ப்புட்கள், பிராமணர்கள் பெண்கள் ஆகிய இவர்கள் இன்னின்ன பாடுவர்
என்று கூறுகின்றது.]

இ-ள். கீதங்கள் - பாட்டுகளை, கிள்ளைபாடுவ - கிளிகள் பாடிக்கொண்டிருக்கும், சாரிகை - நாகணவாய்ப்பறவைகள், பிள்ளை பாடுவ - மழலைச்சொற்களால் பாடிக்கொண்டிருக்கும்; வேதம் - வேதங்களை, பிராமணர் கொள்ளை- பிராமணக் கூட்டங்கள், பாடுவர் - பாடிக்கொண்டிருப்பர்; இன்னிசைக் கோதையர் - இனிய இசையினையுடைய பெண்கள், வள்ளை - வள்ளை என்னும் பிரபந்தத்தில், மன்னவன் வண்மையே பாடுவர் - அரிச்சந்திர மகாராசனுடைய ஈகைச் சிறப்பையே பாடிக்கொண்டிருப்பர். எ-று. ஏ - ஈற்றசை. தேற்றமும் ஆம்.

'வள்ளை' என்பது உலக்கைப்பாட்டு. (பெண்கள் உலக்கை குத்தும் போது பாடும் பாட்டு.) "மனையழகு, வள்ளைக்குறங்கும் வளநாடவள்ளுவனார், வெள்ளைக்குறட்பா விரி" என்ற கபிலர் வாக்கு ஒப்பிடற்பாலது. (எ)

கூட லோங்குவ கோதையர் யாவர்க்கு
மூட லோங்குவ தவ்வை யொருத்திக்கு
மாட லோங்குவ கண்ணுளர்க் கன்றன்றும்
பாட லோங்குவ நித்தலும் பாணர்க்கே.

[இது அயோத்திமா நகரிலுள்ள மாதர்களின்
தொழில்களைக் கூறுகிறது.]

இ-ள். கோதையர் யாவர்க்கும் - (அயோத்திமாநகரத்திலுள்ள) பெண்கள் எல்லோர்க்கும், கூடல் ஒங்குவ - எப்போதும் தம்தம் நாயகரோடு கூடுதல் அதிகமாயிருக்கும், தவ்வை ஒருத்திக்கும் - மூதேவி ஒருத்திக்கு மாத்திரம், ஊடல் ஒங்குவ - (அந்த நகரிற் சேர்தற்கில்லாமையால் உண்டாகிய) பிணக்கமே அதிகரித்திருக்கும், கண்ணுளர்க்கு - நாடகிகளுக்கு, அன்றன்றும் - நாள்தோறும், ஆடல் ஒங்குவ - ஆடுகிற தொழிலே அதிகமாயிருக்கும், பாணர்க்கு - பாணர்களுக்கு, நித்தலும் - நாள்தோறும், பாடல் ஒங்குவ - பாடுகிற தொழிலே அதிகமாயிருக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

'கண்ணுளர்'—நாடகர், 'பாணர்' சங்கீதம்பாடிப் புகழும் ஒருவகைச் சாதியார். இதற்குப் பெண்பால், விறலி. (அ)

பொற்ப ராககர்ப் பூர பராகச்செம்
பற்ப ராக பயோதர வேசையர்
விற்ப ராக மிராவிடி யன்முதற்
கற்ப ராகம நாடக கானமே.

[அயோத்தியில் வேசையர் இரவும்பகலுஞ் செய்யும்
தொழில்களைச் சொல்லுகின்றது.]

இ-ள். பொற்பராக - பொன்னிறமான கந்தப்பொடிகளும், கர்ப்பூர பராகம் - பச்சைக் கர்ப்பூரத் தூள்களும், செம் பற்பராக - சிவந்த பதுமராக மணி மாலைகளும், (கொண்டுள்ள) பயோதர வேசையர் - கொங்கைகளைக் கொண்டுள்ள பொது மகளிர்கள், ஆகம் - தங்கள் தேகத்தை, இரா - இராக் காலமுழுதும், விற்பர் - (இச்சித்த புருடர்களுக்கு) விற்பார்கள், (அந்த விலை மாதர்கள்) விடியன் முதல் - விடியற்காலத்திலிருந்து, ஆகமம் - மதனுகமங்களையும், நாடகம் - நாடகங்களையும், கானம் - இராகங்களையும், கற்பர் - கற்றுக் கொள்ளுவார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

வேசையர் கற்கும் ஆகமம் பெரிதும் மதனுகமமே ஆதலின், ஆகமம் என்றதற்குச் சிவாகமங்கள் முதலியவற்றை யொழித்து மதனுகமம் என்றேம். மதனுகமமாவது, கொக்கோகமுதலிய மதனநூற்களை. (கூ)

எம்மி னண்ணி யிருந்தன யாவையும்
வம்மி னென்ன வழைப்பது மானவே
விம்மி நின்ற வியன்கொடி யெங்கணுந்
தம்மி னின்று நுடங்கித் தயங்குமே.

[கொடி அசைந்தாடுவது, நகாவளங்காண எல்லோரையும்
அழைப்பதுபோலிருக்கிறது என்பதாம்.]

இ-ள். எங்கணும் - (அயோத்திமா நகரத்தில்) எவ்விடத்தும், விம்மி நின்ற - மிகுந்துநின்ற, வியன் கொடி - சிறந்த கொடிகளானவை, தம்மின் நின்று - தமக்குத்தாமே ஓங்கிநின்று, எம்மின் நண்ணி - எம் நகரிலே சேர்ந்து, இருந்தன யாவையும் - இருக்கின்ற எல்லாப் பொருள்களையும், வம்மினென்ன - (காண) வாருங்களென்று, அழைப்பதுமானவே - கூப்பிடுவது போலவே, நுடங்கித் தயங்கும் - துவண்டு (அசைந்து ஆடி)விளங்கும். எ-று. ஏ-ஈற்றசை.

"ஆடுங் கொடியும் பறையழைத்து—நீடு
நகர்ப் பொலிவைக் காட்டுதல்போன் ஞான்று நிமிர" என்ற, தமிழ் விடு தூதுடையார் வாக்கு ஈண்டு ஒப்பிடத் தகுந்தது. (௧௦)

முன்னை மாதவத் தான்முழு துக்குநல்
லன்னை யாமரிச் சந்திரன் றன்னைமா
லென்ன மேல்வளைந் தீண்டிய பாற்கட
றன்னை யொத்த தவளக் கொடிகளே.

[அயோத்திமாநகரில் துலங்கிய கொடிகள் பாற்கடல்போன் றிருந்தன என்பதாம்.]

இ-ள். தவளக்கொடிகள் - வெள்ளைக்கொடிகள், முன்னை மாதவத்தால்- பூர்வத்திலேசெய்த பெரிய தவத்தாலே, முழுதுக்கும் - எல்லாவற்றிற்கும், நல் அன்னையாம் - நல்ல தாயாக விளங்கும், அரிச்சந்திரன்றன்னை - அரிச்சந்திர மகாராஜனை, மாலென்ன - மகாவிஷ்ணுவென்று நினைத்து, மேல்வளைந்து- மேலேசூழ்ந்து, ஈண்டிய - நெருங்கிய, பாற்கடல் தன்னையொத்த - திருப்பாற் கடல் தன்னை ஒத்திருக்கின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

"முழுதுக்கு நல் அன்னை" என்றதனால் அரிச்சந்திரன் கருணை விளக்கியதாம். (கக)

திருக நோக்கியற் சித்திரப் பாவையை
யருக நோக்கிய வன்பரை வல்லிய
ருருக நோக்கிய வூடலி னோக்குயிர்
பருக நோக்குஞ் சமனைப் பழிக்குமே.

[அயோத்திநகர் சித்திரங்களைக்கண்டு ஆடவர் காதல்கூர்ந்ததும் மாதர் அதற்குப் பிணங்கியதும் கூறுகின்றது.]

இ-ள். திருக நோக்கு இடல் சித்திரப்பாவையை - (அயோத்திமா நகரில் உள்ள வீடுகளில்) பிணக்குநோக்குடையதாக எழுதியிருக்கிற சித்திரப்பிரதிமை களை, அருகநோக்கிய அன்பரை - (தங்களை அணைக்க நோக்குவதுபோல்) அணைக்கப்பார்க்கின்ற நாயகர்களை, வல்லியர் - வஞ்சிக் கொடிபோலுஞ் சாயலை யுடைய பெண்கள், உருகநோக்கிய ஊடலின் நோக்கு - மனமுருகப்பார்க்கின்ற ஊடற்பார்வையானது, உயிர் பருக நோக்கும் - உயிரைக் கொள்ளை கொள்ளப் பார்க்கும், சமனைப்பழிக்குமே - யமனைப்பழிக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

பிணங்கிய நோக்கு ஆடவர் மனதை நனி வருத்தியதால் உயிரைப் பருக நோக்குஞ் சமனை உவமித்தார். எல்லா உயிர்களையும் சமமாகநோக்கி அவை யவைகள்செய்த புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி பயனளிப்போன் ஆதலின் யமனுக்கு 'சமன்' என்னும் பெயர் ஏற்பட்டது. இதுபற்றியே "நடுவன்" என்றும்பெயர் நமனுக் கேற்பட்டுள்ளது. (கஉ)

முரணை டுங்குலி சத்தவன் மூண்டபோர்க்
கரண மக்கரிச் சந்திர னுமெனுச்

சரண டைந்த தடவரை யீட்டம்போற்
றிரணெ டும்பரித் தேரணி நிற்குமே.

[அயோத்திநகரின்கணுள்ள தேரின் திரட்சியையும் நீட்சியையும் வியந்து கூறுகிறார்.]

இ-ள். மூரண் நெடுங் குலிசத்தவன் - மாறுபாட்டையுடைய நீண்ட வச்சிராயுதத்தையுடைய இந்திரனானவன், மூண்ட போர்க்கு - மூண்டெழும் யுத்தத்திற்கு, அரண் நமக்கு அரிச்சந்திரனும் என - நம்மைத் துன்பம்வாராமற் காப்பவன் அரிச்சந்திரனாகும் என்று, சரண் அடைந்த தடவரை யீட்டம்போல்- அடைக்கலமென்று வந்தடைந்த பெரிய மலைக்கூட்டம்போல், திரள் நெடும் பரித்தேர் - திரட்சியானதும் நீண்டதுமான குதிரைகட்டுந் தேர்களின், அணி நிற்கும் - வரிசைகள் நிற்கும். எ-று. ஏ - ஈற்றசை.

மலைக்குப் பகைமையுடையவனாதலின் "மூரணெடுங் குலிசன்" என்றார். முன்னாள் மலைகளின் சிறகை இந்திரன் குலிசத்தாலறுத்தான் என்பது புராண கதை. தேர்களின் திரட்சிக்கும் நீட்சிக்கும் மலையை உவமித்தார். தேர் அணிக்கு மலைக்கூட்டங்களைக் கூறினார். மலைகள் இந்திரனுக்குப் பயந்து அரிச்சந்திரனிடம் வந்ததாகவும் காரணங்கற்பித்தார். (கங)

ஏம சாலையு மின்னிசைச் சாலையு
மோம சாலை யுடனறச் சாலையுந்
தூம சாலையுந் தோகையர் மாதவக்
காம சாலையு மேகணக் கில்லவே.

இ-ள். ஏம சாலையும் - திரவியங்களிருக்கிற சாலையும், இன் இசைச்சாலையும் - இனிய இசைநூல் கற்கிற சாலைகளும், ஓமசாலையுடன் - ஓமம் பண்ணுகிற சாலைகளுடனே, அறச்சாலையும் - தருமசத்திரச் சாலையும், தூமசாலையும்- புகைகள் கிளம்பிக்கொண்டிருக்கும் சமையற் சாலைகளும், தோகையர் - பெண்களினுடைய, மா தவ - மிகப்பெரிய, காம சாலையுமே - காமானுபவம் பண்ணுகிற சாலைகளுமே, கணக்கில - அந்நகரிற்கணக்கற்றிருந்தன. எ-று. ஏ-ஈற்றசை.

'ஏமம்'=பொன் இங்கு திரவியத்தைக் குறித்தது. 'தோகையர்' உவம ஆகுபெயராய் தோகைபோலுஞ் சாயலையுடையபெண்களைக் குறித்தது. 'கணக்கில்ல' என்றமையால் கணக்கற்றபடி மிகுந்திருக்கிறது என்பதாம். கணக்கிட முடியாதபடி என்றுமாம். "மாதவ" என்றதில் 'தவ' உரிச்சொல். (கச)

அறமி ருக்கு மனத்தி லனைவர்க்குந்
திறமி ருக்கும் புயத்திற் செழுஞ்சுடர்
நிறமி ருக்கும் படையின்க ணீக்கமின்
மறமி ருக்கு மடந்தையர் கண்ணினே.

[அயோத்திமாநகரின் மாந்தர்களின் இயல்பு கூறுகின்றார்.]

இ-ள். மனத்தில் அறம் இருக்கும் - (அந்த அயோத்திமா நகரத்தில் வசிக்கும் மாந்தர்களின், மனத்தில் தருமந் தங்கியிருக்கும்; அனைவர்க்கும் - எல்லோர்க்கும், புயத்தில் - தோள்களில், திறம்இருக்கும் - சாமர்த்தியம்(நிலைகொண்டு) நிற்கும்; படையின்கண் - ஆயுதங்களினிடத்திலே, செழுஞ்சுடர் நிறம் - சூரிய காந்தியினுடைய ஒளி, இருக்கும் - நிலைபெற்றிருக்கும், மடந்தையர்கண்ணின்- பெண்களின் கண்களிடத்திலே, நீக்கமின் மறமிருக்கும் - மாறாத பிணங்குங் கொடுமை இருக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

'நீக்கமின் மறமிருக்கும்' என்றற்கு காளையர் மனத்தை வாட்டுங்கொடுமை நீங்காது மடந்தையர் கண்களில் இருக்கும் என்றும் பொருள்கொள்வர். (கரு)

தொட்டு மன்னன் சுடர்முடி சூடிய
மட்டு மேக்கமவ் வாணகர்க் கில்லையூ
ணட்டுண் பாரன்றி யாதுல ரின்மையா
லிட்டு ணுக்குறை யென்பதொ ரேக்கமே

[அயோத்திமாநகர் மாந்தர்களுக்கு எற்பதர்கு ஆள் இல்லையே
என்னும் ஏக்கமன்றி ஏங்குதற்குக்
காரணமேயில்லையாம்.]

இ-ள். மன்னன் தொட்டு - அரிச்சந்திரமகாராஜன் அரசாளுகையைத் தொடங்கி, சுடர்முடி - பிரகாசங் கொண்ட திருமுடியைச், சூடிய மட்டும்- சூடிக்கொண்டிருக்குமளவும், அவ்வாணகர்க்கு - ஒளியால் மிக்க அந்த நகரத்துக்கு, ஏக்கம் - ஏக்கமென்பது, இல்லை - இல்லையாம்; ஊண் அட்டு உண்பார் அன்றி - சாப்பாட்டைச் சமைத்து உண்பவர்களே அல்லாமல், ஆதுலர் இன்மையால் - பிச்சைக்குவருகிறவர்கள் இல்லாததினால், இட்டுணுக்குறைஎன்பது- பிச்சையிட்டுண்ணுதகுறையே யுண்டென்பதான, ஓர் ஏக்கமே - இந்த ஏக்கம் ஒன்றே அந்தப்பட்டணத்தில் உண்டு. எ-று. ஏ - ஈற்றசை, தேற்றமுமாம்.

ஏற்போர் இல்லாமையால் இட்டுண்ணுதற் கில்லாது போயிற்றே என்ற ஏக்கத்தைத்தவிர வேறு ஏக்கம் இல்லை என்பதாம். இது ஒழித்துக்காட்டணி.

"உடுப்போர்க்குடுக்குந்துகில்களாலுண்போர்க்குண்ணும்பொருள்களாற்
றொடுப்போர்க்கெடுக்குமலர்களாலணிவோர்க்கணியுஞ்சுடரிழையா
லடுப்போர்க்கடுக்குமனைகளாற்குறைபாடுடையதன்றதுதான்
கொடுப்போர்க்கிரப்பாரில்லாதகுறையொன்றுளதுகூறுங்கால். என்ற பிரபுலிங்க லீலைச் செய்யுள் ஈண்டு ஒப்பிடற்பாலது. (கசு)

நற்றி டுங்கொலைக் கண்கண்டு காமுகர்
முற்றி டும்பையு மோட்டிளங் கொங்கையா

விற்றி டும்மருங் கென்னு மிடும்பையு
மற்றி டும்பையும் மண்டலத் தில்லையால்.

இ-ள். கற்றிடுங் கொலைக்கண் கண்டு - எப்பொழுதும் கொலைத்தொழிலைக் கற்றுள்ள பெண்களின்கண்களைக்கண்டு, காமுகர் - காமுகரானபுருஷர்கள், முற்றிடும்பையும் - நிரம்பக் கொள்ளுகிற துன்பமும், மோட்டிளங் கொங்கையால் - உயர்ந்த இளம்பருவத்தையுடைய கொங்கைகளின்கனத்தாலே, மருங்கு- இடையானது, இற்றிடும் - ஒடிந்துபோகும், என்னும் - என்னும்படியான, இடும்பையும் - துன்பமும், (அல்லாமல்) மற்று - வேறு, இடும்பை - துன்பம், அம்மண்டலத்தில்லை - அந்தநகரத்தில்லை. எ-று. ஆல், ஈற்றசை.

உம்மைகள் இரண்டும் எண்ணும்மைகள். 'மோட்டிளங் கொங்கை' என்றது பருத்து நெருங்கி இருமாந்திருக்கும் கொங்கைகளை, தளராத பருத்த கொங்கை என்றும் ஆம். வேறு துன்பமில்லை என்றமையால் இச் செய்யுளிலும் ஒழித்துக்காட்டணி வந்தது. "முலைப்பொறையைத் தாங்காதே முறிந்திடுமிவ் விடையென்ன மொழிந்துதாளில், நிலைப்பிலிருந் தாற்றுவபோ லொலிச்சிலம்பி னொலியுடனே நிறைந்தவாச" என்னும் ஆன்றோர் செய்யுளும் ஒப்பிடத்தக்கதாம். (கஎ)

இபம ருப்பெனக் கொங்கை சுமந்திடை
தபமு ரிந்திடுந் தக்கதன் றீதென
வுபய பாதத்திற் கொண்பொற் சிலம்பிடு
மபய மன்றி யபயமற் றில்லையே.

[அயோத்திமாநகரில் அபயம் இடுவோர் இல்லை என்பதாம்.]

இ-ள். இபமருப்பென - யானைக்கொம்பு போல்வனவான, கொங்கை- தனங்களை, சுமந்து - தாங்கி, இடை - இடுப்பானது, தப - மிகுதியாக, முரிந்திடும் - ஒடிந்துபோகும், தக்கது அன்று ஈதென - இது தகுதியானது அல்ல என்று, உபய பாதத்திற்கு - இரண்டு கால்களுக்கும், ஒண்பொற் சிலம்பிடும்- ஒளிபொருந்திய பொன்னாற்செய்த சிலம்புகள் இட்டு ஒலிப்பதான, அபயம் அன்றி - அபயக்குரல் அல்லாமல், அபயம் மற்று இல்லை - அங்கு வேறு அபயக்குரல் இல்லை. எ-று. ஏ - ஈற்றசை.

'இபமருப்பென' என்றதில் 'என' என்பது 'என்னும்' என்னும் பொருளது. தப=உரிச்சொல். 'இது' என்னும் சுட்டு 'ஈது' என நீண்டது. சிலம்பு ஒலிக்கும் ஒலியை அபய ஒலியாகக் கற்பித்தது 'தற்குறிப்பேற்றம்.' சிலம்பையன்றி அபயமிடுவோர் இல்லை என்றதனால் ஒழித்துக்காட்டணியாம்.

நிறையுந் தாமரை நீட்டத்தி னற்புனற்
சிறையு மன்றிச் சிறைபிறி தில்லையால்

பிறையு மென்முலைப் பேதையர் சிற்றிடைக்
குறையு மன்றிக் குறைபிறி தில்லையே.

[நீர்ச்சிறையன்றி வேறு சிறையில்லை, இடைக்குறையன்றி
வேறுகுறையில்லை என்பதாம்.]

இ-ள். நிறையும் தாமரை நீட்டத்தின் நற்புனல் - நிறைந்துள்ள தாமரை மலர்களின் நீட்சியினையுடைய நல்ல நீர்க்குளங்கள் முதலானவைகளுக்கு செய்யப்படும், சிறையும் அன்றி - சிறையே அல்லாமல், சிறை பிறிது இல்லை - வேறு சிறை செய்வதில்லை; பிறையும் - வட்டமாயுள்ள, மென் முலைப் பேதையர் - மெல்லிய தனங்களையுடைய பெண்களின், சிற்றிடை - சிறிய இடுப்பினது, குறையும் அன்றி - குறைவும் அல்லாமல், குறை பிறிதில்லை - வேறு குறைவு (இந்நகரில்) இல்லை. எ-று. ஏ - ஈற்றசை.

'நீட்டம்' பரப்பும் ஆம், 'புனல்' என்றது ஆகுபெயராய்க் குளங்களைக் குறித்தது. "பிறை" வளைவு, இங்கு வட்டம் என்னும் பொருளின் நின்றது. இதனை பிறைபோன்ற நெற்றியும் மென்முலைகளுமுடைய பேதையர் என்றும் பொருள்செய்வர். "குறையுமன்றி" என்பதற்கு தேய்வுமல்லாமல் என்றும் பொருள்கூறுவர், அவ்வாறு கூறின் பின்வரும் குறைக்குத் தேய்வென்று பொருள் பண்ணுதற் கிடந்தந்திலது. ஆதலின் பொருந்தாதென விடுக்க. "குறை" கனக்குறை பருமனின் குறை என்க. உம்மைகள் எண்ணும்மைகள். இச்செய்யுளிலும் ஒழித்துக்காட்டணி வந்தது காண்க. (௧௯)

பொருந்தி மானும் புலியும் புன லுட
னருந்தி வாழு மொருதுறை யன்பினாற்
பருந்தும் பைங்கிளி யும்மொரு பஞ்சரத்
திருந்து வாழு மிரவும் பகலுமே.

[அயோத்தியில் புலியும் மானும் ஒருதுறையில் நீரருந்தும், பருந்தும்
கிளியும் ஒருகூட்டில் வாழும் என்பதாம்]

இ-ள். ஒரு துறை - ஒரு துறையிலேயே, மானும் புலியும் - மானும் புலியும், புனல் உடன் அருந்தி - நீரை ஒன்றாக இருந்து குடித்து, பொருந்தி வாழும் - (அன்பினால்) கூடிவாழ்ந்திருக்கும்; பருந்தும் பைங்கிளியும் - பருந்தும் பச்சைக்கிளியும், இரவும் பகலும் - இராக்காலத்திலும் பகற்காலத்திலும், அன்பினால் - பிரியத்தினால், ஒருபஞ்சரத்திருந்து வாழும் - ஒரு கூட்டிலேயே கூடியிருந்து வாழும். எ-று. ஏ - ஈற்றசை.

அன்பினால் என்பதை மத்திப தீபமாகக்கொண்டு 'பொருந்தி வாழும்' என்ற இடத்தும், இருந்துவாழும் என்றவிடத்தும் கொண்டாம். 'இரவும் பகலும்' என்ற இடத்து உம்மை எண்ணும்மை, 'மானும் புலியும்,' 'பருந்தும் பைங்கிளியும்' என்றவைகளிலுள்ள உம்மைகளும் எண்ணும்மைகளே, இதனால் அரிச்சந்திரன் நாட்டில் தருமநீதி செல்கின்றதென்பதாம். (௨௦)

பொருளும் வேத புராணமும் புந்தியிற்
றெருளுந் தான தியாகமும் யாகமு
மருளின் மாதவ மும்வள மும்முயிர்க்
கருளுந் தோன்றுறு மந்நக ரத்தினே.

[அயோத்திமா நகரிற் றோன்றுறும் ஞானவளம்
முதலியன கூறுகின்றது.]

இ-ள். அந்நகரத்து - அந்த அயோத்திமா நகரத்தினிடத்தே வாழ்கின்ற வர்களுக்கு, பொருளும் - மெய்ஞ் ஞானப்பொருளும், வேதபுராணமும் - வேதங்களும் புராணமும், புந்தியில் தெருளும் - புத்தியில் ஞானத்தெளிவும், தான தியாகமும் - தானங்கொடுத்தலும் தியாகஞ்செய்தலும், யாகமும் - யாகங்கள் செய்தலும், மருள் இல் - மயக்கமில்லாத, மா தவமும் - பெரிய தவங்கள் செய்தலும், வளமும் - செல்வம்பெற்றிருத்தலும், உயிர்க்கு அருளும் - உயிர்களிடத்திலெல்லாம் அருளும், தோன்றுறும் - அந்நகரத்திலே உண்டாகி விளங்கும். எ-று. இன் - ஏ, அசைகள்.

உம்மைகளனைத்தும் எண்ணும்மைகள். 'வேதபுராணம்' என்றது உம்மைத்தொகை. 'பொருள்' என்பதற்கு அர்த்தமும் என்றும் 'புந்தியிற்றெருளும்' புத்தித்தெளிவும் என்று பொருள் கொள்வாரு முண்டு. 'தானதியாகம்' உம்மைத் தொகை, 'தானதியாகம்' என்பதற்கு 'தானமாகிய தியாகம்' என்றும் ''உயர்ந்த இடத்ததாகிய தியாகமும்.'' என்றும் பொருள் கொள்ளலாம். 'வளம்' என்பதற்கு பொருள்வளம் கல்விவளம் முதலிய வளங்கள் எல்லாம் அடங்கும். ''பொருளும் வேத புராணமும்'' என்றதில் உள்ளபொருள் என்பதற்குச் செல்வப்பொருளும் என்று பொருள்கூறி பின்வரும் ''வளமும் உயிர்க்கருளும்'' என்ற இடத்துள்ள வளம் என்பதற்கு ஏனைய எல்லா வளப்பங்களும் என்று கொள்ளினும் இழுக்காது. (உக)

வேறு.

அத்திரு நகர்க்குணிரை யாயிர மணித்தூண்
பத்திகளு மத்தொகைய பைம்பொனுறு கோயிற்
சித்திர மணித்தவிசின் முத்தணி செழும்பொற்
சத்திர நிழற்றவரிச் சந்திர னிருந்தான்.

[அரிச்சந்திரன் சிம்மாசனத்தில் பூச்சக்கரக்குடை நிழலில்
இருந்தான் என்பதாம்.]

இ-ள். அத்திரு நகர்க்குள் - அப்படிப்பட்ட அழகிய அயோத்தி நகரத்துக்குள், நிரை ஆயிர மணித்தூண் - வரிசையாக ஆயிரம் ரத்நத் தூண்களமைந்துள்ள, பத்திகளும் - மண்டப வரிசைகளும், அத்தொகைய - அந்த ஆயிரமென்னுந் தொகையையுடையது; (இப்படி ஆயிரம் ரத்நத் தூண்களையும்

ஆயிரம் மண்டப வரிசைகளையுமுள்ள) பைம்பொனுறு கோயில் - பசுமையான பொன்னுற்செய்த அரண்மனையிலுள்ள, சித்ரமணித் தவிசில் - அழகிய ரத்நங்கள் பதித்துச் செய்துள்ள சிம்மாசனத்தின்மேல், முத்தணி செழும்பொற் சத்திரநிழற்ற - முத்துக்களாலே அலங்கரிக்கப்பட்ட செழும் பொன்னுற்செய்த பூச்சக்கரக்குடை நிழல் செய்ய, அரிச்சந்திரனிருந்தான் - அரிச்சந்திரனிருந்தான். எ-று.

'பத்திகளும்' என்றதில் உள்ள உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை. 'சித்திரம்' விநோதமும் ஆம். இது விளச்சீர் காய்ச்சீர் விளச்சீர் மாச்சீர் என்னும் நாற்சீரடங்கிய அடிகளாலாய கலிவிருத்தம். (உஉ)

என்னதிஃதென்னதிஃதென்றிருகை கூப்பி
மன்னவரிடுந்திறைகள் வந்தினி தளப்பத்
துன்னுமறையோர்கள்பலர் சோதிட முரைப்ப
மன்னுகவி வாணர்பலர் மங்கல மியம்ப.

[அரிச்சந்திரன் கொலுவீற்றிருந்த சிறப்புக் கூறுகின்றார்.]

இ-ள். என்னது இஃது - (ஒருபுறத்திலே) என்னது இது, என்னது இஃது என்று - இது என்னது என்று, இருகை கூப்பி - இரண்டு கைகளையும் குவித்துக்கொண்டு, மன்னவர்கள் - அரசர்கள், இடும் திறைகள் - கொடுக்க வேண்டிய திறைப் பொருள்களை, வந்து இனிது அளப்ப - கொண்டுவந்து சந்தோஷத்தோடு அளந்து கொடுத்துக் கொண்டிருக்கவும், துன்னும் - (ஒருபக்கத்திலே) நெருங்கிய மறையோர்கள் - வேதப் பிராமணர்கள், பலர் - பலபேர், சோதிட முரைப்ப - (பொருத்த நிமித்தம் பஞ்சாங்கம் முதலிய) சோதிடங்கள் உரைத்துக்கொண்டிருக்க, மன்னு கவிவாணர் - (ஒருபுறத்திலே) நிலைபெற்ற கவிப்புலவர்கள், பலர் - பலபேர், மங்கலம் இயம்ப - (கூடிக்கொண்டு) சுபமான கவிகள் பாடிக்கொண்டிருக்க. எ-று.

'அளப்ப' என்றதினால் திறைப்பொருள்களின்மிகுதி குறித்தாம். 'மன்று' என்றதற்கு புகழால் நிலைபேறுடைய என்றுமாம் "ஊனுடம் பழியினும் புகமுடம் பழியாமையாகிய" நிலைபேறு.. இச்செய்யுள் குளகம். 31-வது செய்யுளில் "இருந்தான்" என்ற வினைமுற்றைக்கொண்டு முடிகிறது. இதுமுதல் பின்வரும் எட்டுப் பாடல்களும் ஒருதொடர். (உங)

முந்தையிர விக்குல முதற்றலைமை யோடும்
வந்தகுல மந்திரிகண் மண்டலிகர் சூழச்
சந்திர முகத்தமனி யக்கன தனத்துச்
சுந்தர மடந்தையர் சுழற்றிபணி மாற.

[இதிலும் அரிச்சந்திரன் கொலுவீற்றிருந்த சிறப்பும், மந்திரிகள் மண்டலிகர்கள் சூழப் பெண்கள் சாமரையிரட்ட வீற்றிருந்தான் என்பதாம்.]

இ-ள். முந்தை இரவிக்குலம் - பழமையான சூரியகுலம், முதல் - தோன்றிய நாள்முதல், தலைமையொடும் - பிரதானமான சிறப்புடனே, வந்தகுல மந்திரிகள் - கூடிவந்திருந்து (ராஜகாரியம்பார்க்கும்) மேலான குலமந்திரிகளும், மண்டலிகர் - மண்டலீகர்களும், சூழ - ஒருபுறத்திலே சூழ்ந்திருக்கவும்; சந்திரமுக - (இருபுறத்திலும்) சந்திரன்போன்ற முகமும், தமனியக் கனதனத்து- பொன்மலைபோலும் கனமான கொங்கைகளையுமுடைய, சுந்தர மடந்தையர்- சௌந்தரியமுள்ள பெண்கள், சுழற்றி பணிமாற - (வெண்சாமரையைச்) சுழற்றிக்கொண்டு (ஏவிய) குற்றேவல்களைச் செய்துகொண்டும் இருக்க. எ-று.

சுழற்றி என்றவினையால் 'சாமரை' என்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது. 'தமனியக்கனதனம்' என்றற்கு பொன்போன்ற தேமல் பூத்துள்ள பருத்த கொங்கைகள் என்றும் பொருள் உரைப்பர். 'பணிமாற' என்றது அடைப்பந் தாங்குதல், குடைபிடித்தல், காளாஞ்சி ஏந்தல் ஆலவட்டந் தாங்கல், 'சிவிறி' ஏந்தல் முதலிய பணிகளை: இச்செய்யுளும் குளகம் முன்செய்யுளைத் தொடர்ந்து நின்றது. ஈற்றுச்செய்யுளிற் பொருள் முற்றுப்பெறும். (உச)

ஆடக மணிக்கடக கைத்தல மழுந்த
மாடக முறுக்குபு மடந்தையர்கள் பாடப்
பாடக பதப்பரி புரத்தொலி யெழும்ப
நாடக மடந்தைய ரசைந்துநட மாட.

[இதுவும் அரிச்சந்திரன் கொலுச்சிறப்பும், மங்கையர்கள் ஒருபுறம்பாடவும் ஆடவும் அரிச்சந்திரன் வீற்றிருந்தான் என்பதுமாம்.]

இ-ள். ஆடக மணிக்கடக கைத்தலம் - பொன்னாற்செய்து ரத்திநங்கள் பதித்த கங்கணங்கள் அணிந்த கையானது, அழுந்த - பதிய, மாடக முறுக்குபு- முறுக்காணிகளை முறுக்கி, மடந்தையர்கள் பாட (ஒருபுறத்திலே) மடந்தைப் பருவப் பெண்கள் பாடிக்கொண்டிருக்க; பாடக பதம் - பாடகம் அணிந்த கால்களிலே, பரிபுரத்தொலி எழும்ப - சிலம்பொலிகள் உண்டாக, நாடக மடந்தையர் - நடனஞ்செய்கின்ற மடந்தைப் பருவப் பெண்கள், அசைந்துநடமாட- ஒருபுறத்தே அசைந்தசைந்து நடனஞ்செய்துகொண்டிருக்க. எ-று.

''முறுக்குபு'' என்றது 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினை எச்சம் 'கைத்தலம்' கையாகிய இடம் என்று விரியும். இதனை ஒருசொல்லாகக்கொண்டு 'தலம்' பகுதிப்பொருள் விகுதி என்றலுமாம். இச்செய்யுளும் குளகம்.

ஆகமிசை தங்குமணி யாரமு மவற்றின்
பாகமிசை சோதிவிரி பன்மணியு மின்னக்

கோகனக மங்கையொடு கொற்றவையு மம்பொன்
வாகுவல யங்களு மணிப்புய மிலங்க.

[கொலுவீற்றிருக்கும் அரிச்சந்திர மகாராஜாவின் ஆபரணச் சிறப்புகள் கூறுகின்றார்.]

இ-ள். ஆகமிசை - மார்பின்மேலே, தங்கு - தங்கியிருக்கிற, மணியாரமும் - ரத்நமாலைகளும் முத்துமாலைகளும், அவற்றின் பாகமிசை - அவைகளின் நடுவே, சோதிவிரி பன்மணியு மின்ன - மிக்க காந்தியைச் செய்கின்ற பலவகை (பருத்த) ரத்நங்களும் (பளபளவென்று) மின்னவும்; கோகனக மங்கையொடு - செந்தாமரை மலரிலிருக்கின்ற லட்சுமியோடு, கொற்றவையும் - வீரலட்சுமியும், அம்பொன் - அழகிதான பொன்னாலாகிய, வாகுவலயங்களும் - தோளணிகளும், (கேயூரம்) மணிப்புயமிலங்க - அழகிய தோள்களிலே விளங்கவும். எ-று.

லட்சுமியும், வீரலட்சுமியும் தோளில் விளங்கிக்கொண்டிருந்தனர் என்பதுதோன்ற "கோகனக மங்கையொடு கொற்றவையு மம்பொன் வாகுவலயங்களு மணிப்புய மிலங்க" என்றார். "மணியாரமும்" என்பதற்கு, முத்துமாலைகளும் என்றும், அழகிய முத்துமாலைகள் என்றும், பொருள்விரிப்பர். (மணி= அழகு.) இதுவும் குளகச் செய்யுள். (உசு)

சோமனை முடித்தருளு மாபதி சுடாத
காமனிவ னென்னவொளிர் கட்டழ கிலங்க
மாமகர குண்டல மணித்திருவில் வீசச்
சேமவுடை வாளது திருக்கையி லிலங்க.

[சிவபெருமான் எரிக்காத ஒருமன்மதன்போல் அரிச்சந்திரமகாராசன் விளங்கினன் என்பதாம்.]

இ-ள். சோமனை - சந்திரனை, முடித்தருள் - தன் ஜடாபாரத்திற் சூடி அச்சந்திரனுக்கு அருளைச்செய்த, உமாபதி - பார்வதி நாயகனான பரமசிவனாலே, சுடாத - எரிக்கப்படாத, காமன் இவன் என்ன - மன்மதன் இவன்தான் என்று சொல்லும்படி, ஒளிர்கட்டழகு இலங்க - பிரகாசிக்கிற பேரழகு விளங்கவும்; மா மகரகுண்டலம் - பெரிய மகாகுண்டலங்கள், மணித்திருவில் வீச - ரத்நங்களினுடைய சிறந்த காந்திகளைப்போல ஒளிசெய்யவும்; சேம உடைவாளது - உயிர்க்காவல்செய்கிற உடைவாளானது, திருக்கையில் இலங்க அழகிய கையில்விளங்கவும். எ-று.

'சோமனைமுடித்தருள்' என்றதில் சந்திரனை முடித்துக்கொண்டது தனக்கழகு பெருகவேண்டி யன்று, சந்திரனுக்கு ஏற்பட்டகலைகுறைதலாகிய சாபம் நீங்குதற்பொருட்டாதலின் 'அருள்' என்றார் அருளுதல் இங்குசந்திரனுக்காம். இனி சந்திரனைத் தன் ஜடாபாரத்தில் முடித்துக்கொண்டு சந்திரனுக்கும் உல

கிற்கும் அருள்செய்யும் என்றும் பொருள்கொள்ளலாம். சந்திரனுக் கருள்செய் தமை முற்கூறினோம் இனி உலகுக்கருளியது இதனால் எவ்வாறு என்றால் தன்னைச் சரண மடைந்தாரைக்காத்து அருள் செய்வோன் சிவபெருமான் என் பதை உலகறிந்து உய்தற்பொருட்டாம். 'உமாபதி சுடாத காமன்' என்றதற்கு உமாபதி சுடுதற்குமுன் இருந்த காமன் என்றும், உமாபதியால் சுடப்படாத காமன் என்றும் பொருள்கொள்ளலாம்; பின்னதே ஆசிரியர்கருத்து. பின்னது இல்பொருளுவமை அணி. "உடைவாள்" உடையோடு அமைந்திருக்கும் வாளாயுதம். (உஎ)

துடிப்படு கரத்தனடி யர்த்தொழுது நீற்றுப்
பொடிப்பட வடுப்படு கறுப்புநுதல் பொங்க
முடித்தலை யுறத்திசை முகத்தரச ருய்த்த
வடுப்படு கறுப்பிரு மலர்க்கழல் விளங்க.

[அரிச்சந்திரன் நெற்றியில் சிவனடியார்களை வணங்கிய வடுவும், காலில் முடியரசர்கள் வணங்கிய கிரீடம்தோய்ந்த வடுவும் காணும் என்றமை.]

இ-ள். துடிப்படு - உடுக்கைதங்கின, கரத்தன் - கையையுடைய சிவபெருமானின், அடியர்த்தொழுது - அடியார்களைவணங்கி, நீற்றுப்பொடிப்பட - விபூதிதூளிதம்தோன்ற, வடுப்படு கறுப்புநுதல் பொங்க - வடுவாகிய கறுப்பானது நெற்றியிலே விளங்கவும்; முடித்தலை - கிரீடமணிந்ததலைகள், உற - பட, திசைமுகத்து அரசர் - எட்டுத் திக்குகளிலுமுள்ள அரசர்கள் எல்லாம், உய்த்த வடுப்படு கறுப்பு - வந்து பாதங்களிலே வீழ்ந்து வணங்குதலினாலே உண்டாக்கப்பட்ட வடுவாகிய கறுப்பு, இருமலர் கழல் விளங்க - இரண்டுமலர்போலும் பாதங்களிலே விளங்கவும். எ-று.

சிவனடியாரிடத்தும் விபூதியினிடத்தும் மிகப் பற்றுடையவர் என்பதாம். சிவனடியாரைச் சிவனென வணங்குதல் சைவர்கள்மரபு. இதனை, "எவரேனுந்தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமும் கண்டாலுள்கி, யுவராதே யவரவரைக் கண்டபோது உகந்தடிமைத்திறநினைந்தங் குவந்துநோக்கி, இவர் தேவ ரவர்தேவ ரென்றுசொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமேபேணிக், கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" என்னும் திருநாவுக்கரசு சுவாமிகளின் திருவாக்காற் சிவனடியாரை வணங்குதலால் எய்தும்பயனும்,

"வேதத்திலுள்ள துநீறு வெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறு புன்மைதவிர்ப்பதுநீறு
ஓதத்தகுவதுநீறு உண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்த திருவாலவாயான்றிருநீறே."

என்னும் திருஞான சம்பந்தமூர்த்திகள் திருவாக்கால் விபூதியின் சிறப்பும் விளங்காநிற்கும். "தோற்றமொரு கைத்துடியில்" என்றமையினால் அண்

டாண்டகோடிகளும் மற்றையவும் சிவபெருமான் திருக்கரத்துத் துடியால் தோன்றும் உண்மை விளங்கும். இச்செய்யுளும் குளகம். (உஅ)

காலமது கண்டுகதி ருஞ்சசியு மொத்தெண்
பாலளவு நீள்கதிர் பரப்புவன போலக்
கோலமுக நின்றொளி குலாவவதன் மீதே
சாலமணி மேவுமுடி நின்றொளி தயங்க

[அரிச்சந்திர மகாராஜனின் முகம் சூரிய சந்திரர்கள் ஒத்துப்பிரகாசிப்பது போல் பிரகாசிக்க அவன்தலையில் ரத்நகிரீடம் பிரகாசிக்க இருந்தான் என்பதாம்.]

இ-ள். காலமதுகண்டு - சமயந்தெரிந்து, கதிரும் சசியும் - சூரியனும் சந்திரனும், ஒத்து எண்பாலளவு - ஒன்றுசேர்ந்து எட்டுத்திக்கின் அளவுகளிலெல்லாம், நீள்கதிர் பரப்புவனபோல - நீண்ட கிரணங்களை விரிக்கிறதுபோல, கோல முக நின்று - அழகிதான திருமுகத்திலே நிலைகொண்டு, ஒளி குலாவ- ஒளிவிளங்கவும்; அதன்மீதே - அந்த முகத்துக்குமேலே, சாலமணி மேவுமுடி- மிகுதியாக ரத்நங்கள் பொருந்தியிருக்கின்ற கிரீடமானது, நின்றொளிதயங்க- நிலைத்துஒளி விளங்கவும். எ-று.

"காலமதுகண்டு" என்றதனால் சூரியனும் சந்திரனும் கூடிப் பிரகாசிக்கக் கூடிய காலத்தைக்கண்டு, என்பதாம். இச்செய்யுளும்குளகம்.

கண்ணக நிறைந்திமை கடந்துகடை தாவி
மண்ணக மடங்கலு மடைந்துயிர்கள் வாழ
விண்ணளவு தாவிமிகு வெங்கலி கரப்பத்
தண்ணளி நெடுங்கட லிடங்கொடு தழைப்ப.

[அரிச்சந்திரமகாராஜன் கிருபைநிறைந்த கண்களோ டிருந்தான் என்பது.]

இ-ள். தண்ணளி-குளிர்ந்தகிருபையானது, கண்ணகநிறைந்து-(அரிச்சந்திர மகாராஜனின்) இரண்டு கண்களுக்குள்ளும் நிறைவாய், இமைகடந்து-இரண்டு இமைகளுக்கும் மேற்பட்டு, கடை தாவி - கடைக்கண்களிலுந் தாவி, மண்ணக மடங்கலும் - மண்ணுலகமுழுவதும், அடைந்து - வியாபித்து, உயிர்கள் வாழ- உயிர்கள் எல்லாம் சுகத்தை யடையவும், மிகு வெங்கலி - மிகவெவ்வியதாகிய கலிபுருஷன், விண்ணளவு தாவி - ஆகாயத்தளவும் தாவி, கரப்ப - மறைந்து கொள்ளவும், நெடுங் கடலிடம் கொடு - நெடிய கடலைப்போலகொண்டு, தழைப்ப - பெருகிச்செழிக்கவும். எ-று.

"நெடுகடலிடங்கொடுதழைப்ப." என்பதற்கு நெடிய கடல்சூழ்ந்த உலகத்தை முற்றுங்கொண்டு பெருக எனவும் பொருள்கூறலாம். இச்செய்யுளுங் குளகமே. (௩0)

வந்தெறி பயோததியின் மண்டுதிரை வானிற்
சிந்துநுரையூடுதிகழ் செங்கதிர் கடுப்பச்
சந்தமுலை மாதரிடு சாமரையி னூடு
சுந்தர மணிப்பணி துலங்கிட விருந்தான்.

இ-ள். வந்தெறி - கரைமேலேவந்து மோதுகிற, பயோததியில் - கடலிலே, மண்டு - நெருங்கியுள்ள, திரை - அலைகள், வானில் - ஆகாயத்திலே, சிந்து - வீசுகிற, நுரையூடு - நுரைக்குள்ளே, திகழ் - விளங்குகின்ற, செங்கதிர் கடுப்ப - சிவந்த இளஞ்சூரியனை ஒக்க, சந்தமுலை - அழகான தனங்களையுடைய, மாதர் - பெண்கள், இடு - வீசுகின்ற, சாமரையினூடு - சாமரங்களுக்குள்ளே, சுந்தரம் - (அதி) அழகான, மணிப்பணி துலங்கிட - ரத்தினபரணங்கள் ஒளிசெய்ய, இருந்தான் - (அரிச்சந்திர மகாராஜன்) சிம்மாசனத்திலே வீற்றிருந்தான். எ-று.

வீசும்சாமரையின் ஊடுதோன்றும் அரிச்சந்திரமகாராஜனை, கடலலைவீசும் நுரையூடுதோன்றும் சிவந்த இளஞ்சூரியனுக்கு உவமித்தது உவமை அணியாம். சிவந்த இளஞ்சூரியன் என்றதால் கீழ்க்கடலில் தோன்றும் உதைய சூரியனை. "பயம்"—நீர், "உததி" சமுத்திரம். "செங்கதிர்" சூரியன்; இதில் "செம்மை" என்றும் பண்புப்பெயர் இனம் விலக்கவந்த அடைமொழி. "என்னதிஃதென்னதிஃ தென்றிருகைகூப்பி" என்று தொடங்கிய பாடலிலிருந்து "சுந்தர மணிப்பணி துலங்கிடவிருந்தான்" என்ற ஈற்றடியை உடைய பாட்டு முடிய ஒரு தொடர்; இந்த ஒன்பதுபாடல்களும் "இருந்தான்" என்ற ஒரு வினை முற்றைக்கொண்டு முடிந்தது. (௩௧)

நகரச்சிறப்பு முற்றிற்று.

ஆ பாடல் - ௧௦௪.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

முதலாவது,

# விவாககாண்டம்.

கலிநிலைத்துறை

இருந்த காலையி லியாவர்க்கும் விடைகொடுத் தருளித்
திருந்து மாமுடி மன்னவன் சிலருட னிருப்பப்
பொருந்து நன்னெறிப் புண்ணிய தீர்த்தங்க ளாடி
யருந்த வத்தின ரனேகர்வந் தந்நக ரடைந்தார்.

[அயோத்திமாநகரத்திற்குப் புண்ணிய தீர்த்தங்களாடிய முனிவர்கள் வந்தமை.]

இ-ள். இருந்தகாலையில் - (இந்தவிதமாக அரிச்சந்திர மகாராஜனானவன்) சிம்மாசனத்தில் இருந்தபொழுது, யாவர்க்கும் - எல்லோருக்கும், விடைகொடுத்து அருளி - உத்தாவு கொடுத்து அனுப்பிவிட்டு, திருந்து - செவ்வையான, மாமுடி மன்னவன் - பெருமை பொருந்திய கிரீடமணிந்த அரிச்சந்திரமகாராஜன், சிலருடனிருப்ப - சிலபேர்களுடனே (அந்த அரிச்சந்திரமகாராஜன்) சபாமண்டபத்தில் இருக்கும்போது; பொருந்து - பொருத்தமுள்ள, நன்னெறி - நன்மார்க்கத்துக்குக் காரணமான, புண்ணிய தீர்த்தங்களாடி - புண்ணிய தீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து, அருந்தவத்தினர் - அருமையான தவத்தைச் செய்த முனிவர்கள், அநேகர் - அநேகம்பேர், வந்து - வந்து, அந்நகரடைந்தார் - அந்த அயோத்திநகரம் வந்தடைந்தார். எ-று.

"திருந்துமாமுடி" திருத்தமாகச்செய்த பெரியமுடி என்பதாம்; இனி, உலகத்தைத் திருத்தமாக வைத்தற்பொருட்டுத் தாங்கியுள்ள பெரிய முடி எனவும் பொருள் கூறுவர் ஒருசாரார். புண்ணியதீர்த்தம் படிதல், பொருந்து நன்னெறிக்குக் காரணமாம். இதுபற்றியே தாயுமானப் பெருந்தகையாரும், "மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு, வார்த்தைசொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே." என்றருளினர். பொருந்து நன்னெறியாவது, முத்திவழி. "அருந்தவத்தினர்" செய்தற்கரிய தவத்தைச் செய்தருளியமுனிவர். இதுவும் பின்வருவனவும் பெரும்பான்மையும் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என்னும் ஐந்துசீரடங்கிய அடிகளாலாகிய கலிநிலைத்துறைகளாம். (க)

சடையு முண்டமுஞ் சிகையுநுண் டாதுகற் றோய்ந்த
வுடையு மாமர வுரிகளு முடுத்தழ கிருந்த
விடையுந் தாழ்சிறு பண்டியு மெய்த்திளைத் தோய்ந்த
நடையும் வாழ்த்தலுஞ் சபித்தலு முந்துறு நாவும்.

[முனிவர்களின் உடை, தேகம், நடை முதலியவற்றின்
தன்மைகளைக் கூறுகின்றமை.]

இ-ள். சடையும் - சடைத்தலைகளும், முண்டமும் - மொட்டைத்தலைகளும், சிகையும் - குடுமித்தலைகளும், நுண்தாது கல் தோய்ந்த உடையும்-மெல்லிதான காவிக்கல்லிலே தோய்ந்திருக்கிற வஸ்திரங்களும், மா மரவுரிகளும்-பெரியமர உரிகளும், உடுத்து - உடுத்திக்கொண்டு, அழகிருந்த இடையும் - அழகு குடிகொண்டிருக்கிற இடுப்பும், தாழ்சிறு பண்டியும் - தொங்குகிற சிறுவயிறுகளும், எய்த்து இளைத்து ஓய்ந்த நடையும் - ஆயாசமாயிளைத்து நடக்கிற நடைகளும், வாழ்த்தலும் - வாழ்த்தி ஆசீர்வதிக்கிறதும், சபித்தலும் - கோபித்துச் சாபங் கொடுக்கிறதும் (ஆகிய இவைகள்), முந்துறு நாவும் - முந்திவருகிற நாக்குகளும். எ-று.

'இடை' உடம்பின் மத்தியிலுள்ளபாகம் என்னும் பொருள் பெற்றுவந்த காரணப்பெயர்; இதுபற்றியே 'நடு' எனவும் ஓர்பேரும் ஏற்பட்டுளது. 'தாது கல்' என்றது காவிக்கல்லை. வாழ்த்தலும் சபித்தலும் முந்துறுகின்ற நாவுடைய முனிவர் என்றதனால் 'சாபானுக்கிரக சக்தியையுடையமுனிவர்கள்' என்பது பெறப்படும். முனிவர்களுக்குக்கோபம் வருதலும் உண்டு. இதனை "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காத்தலரிது" என்ற திருக்குறட்பா விளக்கும். முனிவர் சொல் பழுதாகாது பலிக்குந்தன்மையது என்பதனாலன்றோ கம்பநாடரும் இலக்குப்பிழையா இராமனின் வாளியைச் "சொல்லொக்கும் வேகச் சுடுசரம்" என்று பலவிதத்தும் ராமகாதையிற் கூறினர். இச்செய்யுள் குளகம். நாலாவது பாடலிலுள்ள 'வந்தார' என்ற வினை முற்றைக்கொண்டு முடிகின்றது. (௨)

நூலு மார்பமு நூலிடைத் திகழ்ந்துற நுடங்குந்
தோலு மங்குலித் தருப்பையுந் துளங்குமொண் செவியி
னூலும் யாககுண் டலங்களு நான்மறை நெறிமுக்
கோலு மேந்திய குடைகளுங் குண்டிகைக் கரமும்.

[முனிவர்கள் நூல்மார்பும் தருப்பை மோதிரமும் யாககுண்டலமும்
குடையும் தண்டு கமண்டலமும் கொண்டணிந்தவராய்
வந்தனர் என்பதாம்.]

இ-ள். நூலும் மார்பமும் - முப்புரிநூலும் மார்பும், நூலிடை - அந்த முப்புரிநூலினிடமாக, திகழ்ந்து உற நுடங்கும் - விளங்கி மிகவும் அசைகின்ற,

தோலும் - மான்றோலும், அங்குலித் தருப்பையும் - விரல்களிலே தருப்பை மோதிரமும், துளங்கும் ஒண்செவியில் - அசைகின்ற அழகியகாதுகளில், நாலும் யாக குண்டலங்களும் - தொங்குகின்ற யாகதீட்சதர் என்பதாகிய யாக குண்டலங்களும், நான் மறை நெறி - நான்கு வேதமார்க்கங்களுக்கு ஒத்த, முக்கோலும் - திரி தண்டங்களும், ஏந்தியகுடைகளும் - தாங்கிக்கொண்டுவரு கிறகுடைகளும், குண்டிகைக் காமும் - கமண்டலங்கள் கொண்டிருக்கிற கை களும். எ-று. உம்மைகள் எண்ணும்மைகள்.

முனிவர்கள் தண்டு கமண்டலதாரியாய் இருத்தல்பற்றிக் கோலும் குண்டிகையுங் கூறினர். இதனை, "பாசக் காகம் விதியுடை முக்கோன் - முறிக்கலைச் சுருக்குக் காம்பெறு முனிவர்" என்ற கல்லாடச்செய்யுளானும் அறியலாம். (௩)

இன்ன கொண்டுள விருடிக ளியாவரு மெய்தி
யன்ன சத்திர மணைந்துபுக் கனரயர் வுயிர்த்து
முன்னம் வாரிதி யார்ப்பெடுத் தாலென முழங்கி
மன்னர் மன்னவன் மாளிகை வாயிலில் வந்தார்.

[முனிவர்கள் அன்னசத்திரத்திற்றங்கி இளைப்பாறிக்கொண்டு கடல்போல் சப்தித்துக்கொண்டு அரண்மனைவாயிலுக்கு வந்தார்கள் என்பதாம்.]

இ-ள். இன்னகொண்டுள-இப்படிப்பட்டவைகளெல்லாங்கொண்டுஇருக்கிற, இருடிகள்யாவரும் - முனிவர்கள் எல்லோரும், எய்தி - வந்து, அன்னசத்திரம்- அந்தநகரத்திலுள்ள அன்னசத்திரத்திலே, அணைந்து-சேர்ந்து, புக்கனர் - புகுந்தனர், அயர்வுயிர்த்து - ஆயாசந்தீர்ந்துகூடினவர்களாகி, முன்னம் வாரிதி-முன்னாளிலே கடலானது, ஆர்ப்பு எடுத்தாலெனமுழங்கி - முழக்கங்கொண்டு வந்தாற்போல முழங்கிக்கொண்டு, மன்னர் மன்னவன் - அந்த ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திர மகாராஜனின், வாயிலில்வந்தார் - அரண்மனைவாயிலுக்குள்ளே வந்தார்கள். எ-று.

'முன்னம்வாரிதி ஆர்ப்பெடுத்தது' ஊழிக்காலத்தெனக. (௪)

வந்த மாதவ ரோதையம் மன்னவன் கேட்டுச்
சிந்தை யிற்பெரு மகிழ்வரச் சென்றெதிர் கொண்டே
யெந்த மாதவ மின்றுவந் தெய்திய தென்னு
வந்த மாதவ ரடிமலர் முடியுறத் தொழுதான்.

இ-ள். வந்த - அப்படி வந்துசேர்ந்த, மாதவர்-மகரிஷிகளுடைய, ஓதை- சப்தத்தை, அம் மன்னவன்கேட்டு - அந்த அரிச்சந்திர மகாராஜன் கேட்டு, சிந்தையில் - மனத்திலே, பெரு மகிழ்வர - பெரியதாகிய சந்தோஷமுண்டாக, சென்றெதிர்கொண்டே - போய் எதிர்கொண்டு, எந்த மாதவம் - நான்செய்த எந்தப்பெரிதாகிய தவப்பலன், இன்றுவந்து எய்தியது என்னு - இப்போது

வந்து சித்தித்ததென்று, வந்தமாதவர் - வந்த அந்த மகரிஷிகளுடைய, அடிமலர் - பாததாமரைகளை, முடியுற - தன் சிரசிலே பொருந்தும்படி, தொழுதான் - வணங்கினான். எ-று. 'கொண்டே' என்றதில் உள்ள ஏகாரம் அசை.

'பெருமகிழ்வர்' என்றதனால் அடியார் பக்தியின் கதிப்பு விளங்குகின்றது. (ரு)

தொழுத காலையி லாசிக ளருந்தவர் சொல்லி
முழுது மாமறை முழங்கிட மண்டப முற்ற
வெழுது மாமணி யாதன மவ்வவர்க்கீந்து
பழுதி லாமொழி மன்னவ னிருந்திவை பகர்வான்.

[ஆசிகூறிய முனிவர்களுக்கு ஆதனந்தந்து உட்காரச்செய்து தானும் உட்கார்ந்துகொண்டு சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். தொழுதகாலையில் - அவ்வாறு அரசன்வணங்கினபொழுது, ஆசிகளருந்தவர்சொல்லி - அவ்வருமையான தவரிஷிகள் ஆசீர்வாதஞ்சொல்லி, முழுது மா மறைமுழங்க - வாய்முழுதும் பெரிய வேதங்கள் முழங்குவதாக, மண்டபமுற்ற - சபாமண்டபத்திலேவந்துகூட, எழுது மா மணியாதனம்-பிரகாசிக்கிற பெரிய ரத்ன சிங்காதனங்களை, அவ்வவர்க்கீந்து - அந்தந்த ரிஷிகளுக்குத்தக்கபடி கொடுத்து, பழுதிலா மொழி - குற்றமற்ற உபசாரமொழிகளையுடைய, மன்னவன் - அரிச்சந்திர மகாராஜன், இருந்து - தன் சிம்மாசனத்திலிருந்துகொண்டு, இவைபகர்வான் - இந்த வார்த்தைகள் சொல்லுகின்றான். எ-று. (சு)

எந்தத் தேயங்கள் கண்டனி ரெத்திசை புகுந்தீ
ரெந்தத் தீர்த்தங்க ளாடினீர் புதுமையென் கண்டீர்
முந்தக் கூறுமி னென்றரிச் சந்திரன் மொழிய
வந்தக் காலையி லரசனுக் கருந்தவ ருரைப்பார்.

[அரிச்சந்திரன் முனிவர்களை எங்கெங்கே போனீர்கள் எந்தெந்தத் தீர்த்தங்கள் ஆடினீர்கள் என்ன அதிசயங்கண்டீர்கள் என்று வினவல்.]

இ-ள். எந்தத் தேயங்கள் கண்டனிர் - (ஓ முனிவர்களே!) நீங்கள் எவ்வெத்தேசங்கள் கண்டீர்கள்? எத்திசை புகுந்தீர் - எவ்வெத்திசைகள் போனீர்கள்? எந்தத் தீர்த்தங்களாடினீர் - எந்தெந்தத் தீர்த்தங்களிலே முழுகினீர்கள்? புதுமை யென்கண்டீர் - அங்கங்கே என்ன ஆச்சரியங்களைக் கண்டீர்கள்? முந்தக்கூறுமின் - அவைகளை முன்னே எனக்குத் தெரியச் சொல்லுங்கள், என்று - என்று, அரிச்சந்திரன் மொழிய - அரிச்சந்திரமகாராஜன்கேட்க, அந்தக்காலையில் - அப்பொழுது, அருந்தவர் - அரிய தவத்தினையுடைய முனிவர், அரசனுக்குரைப்பார் - அரசனுக்குச் சொல்லத்தொடங்கினார்கள். எ-று. (எ)

அங்கண் மாநிலத் தரியகன் னேசிநாட் டகத்துப்
பொங்கு கண்டகி யென்பதோர் புண்ணிய தீர்த்த

மங்கி யாம்புகுந் தாடிநின் னருண்முகங் காண
விங்கு வந்தன மின்னமுங் கேட்டிபென் றிசைப்பார்.

[கன்னோசி நாட்டுக்குப்போனோம் கண்டகி தீர்த்தத்தில்|மூழ்கினோம்,
உன்னைக் காணவந்தோம் என்கின்றனர் ]

இ-ள். அங்கண் - அழகிய இடத்தையுடைய, மா நிலத்து - பெரிய உலகத்திலே, அரிய கன்னோசிநாட்டு அகத்து - அருமையான கன்னோசிநாட்டிலே, பொங்கு கண்டகி என்பதோர் புண்ணிய தீர்த்தம் - அலைகள் பொங்குவதான கண்டகி என்னும் ஓர் புண்ணிய தீர்த்தமுண்டு, அங்கு யாம் புகுந்தாடி - அந்தத் தீர்த்தத்திற்கு நாங்கள் எல்லோரும்போய் அதில்மூழ்கி, நின்னருண் முகங் காண - உன்னுடைய கிருபையுள்ள திருமுகத்தைக் காண்பதற்காக, இங்கு வந்தனம் - இங்கே வந்தோம், இன்னமுங் கேட்டி என்று இசைப்பார் - (ஓ அரசனே!) இன்னமும் ஒரு அதிசயமுண்டு அதையுங் கேளுமென்று முனிவர்கள் சொல்லுகிறார்கள் எ-று.

கண்டகி:—மகததேசத்திலுள்ள ஒரு நதி; மோகினியுருக்கொண்ட திருமாலுடன் சிவமூர்த்தி புணர்ந்தபோ துண்டாகிய நதி. இதில் பாணலிங்கங்களும் சாளக்கிராமங்களும் உண்டாம். (அ)

அந்த நாட்டினிற் கன்னமா புரிநக ராள்வோன்
சந்தி ரன்வழிச் சந்திர தயன்றவம் புரிந்து
கந்த வார்சடைக் கடவுடன் வரத்தினாற் பயந்த
தந்த மாமுலைத் தையல்சந் திரவதி யென்பாள்.

[கன்னோசிநாட்டுச் சந்திரகுலத்தரசனாகிய மதிதயன்பெற்ற சந்திரமதி
என்பவள் அழகிய ஒருபெண் என்பதாம்.]

இ-ள். அந்த நாட்டினில் - அந்தக் கன்னோசி நாட்டிலே, கன்னமாபுரி நகராள்வோன் - கன்னமாபுரியென்னும் பட்டணத்தை ஆள்கிற, சந்திரன்வழி- சந்திரனுடைய குலத்தில்பிறந்த, சந்திரதயன் தவம்புரிந்து - சந்திரதயனென்னும் அரசனானவன் அநேக தவங்களைச் செய்து, கந்தவார்சடைக் கடவுடன் வரத்தினால் - (கொன்றைப் பூவின்) மணம் பரிமளிக்கின்ற நீண்ட சடைகளையுடைய சிவபெருமான் வரத்தினாலே, பயந்த - பெற்ற, தந்தமாமுலை தையல்- தந்தங்களைப்போலும் பெரிய தனங்களையுடைய ஒரு அழகான்மிக்க பெண், சந்திரவதி என்பாள் - சந்திரவதி என்னும் பெயரையுடையவள். எ-று. (கூ)

மண்ம டந்தையர் தம்முளும் வாசவ னுறையும்
விண்ம டந்தையர் தம்முளு நிகரிலா விறல்வேற்
கண்ம டந்தைதன் கருங்குழ லருந்ததிக் கற்பிற்
கெண்ம டங்குகற் புடையளிந் திரையினு மெழிலாள்.

[சந்திரமதி பூலோகத்தும் வானலோகத்தும் தனக்கு நிகரில்லாதவள் அருந்ததியினும் எட்டுமடங்கு கற்புடையவள், மகாலட்சுமி போலும் அழகுடையவள் என்பதாம்.]

இ-ள். மண் மடந்தையர் தம்முளும் - பூலோகத்திலுள்ள பெண்களிலும், வாசவன் உறையும் - தேவேந்திரன் வாசஞ்செய்கிற, விண் மடந்தையர் தம்முளும் - தேவலோகத்திலுள்ள பெண்களிலும், நிகரிலா - ஒப்பாகிறவர்களில்லாத, விறல் வேல் கண் - வெற்றிபொருந்திய வேலாயுதம்போலுங் கண்களையுடைய, மடந்தை - பெண்ணானவள், தண் கருங்குழல் - (இன்னும்) குளிர்ந்த கருமையான கூந்தலையுடைய, அருந்ததிக் கற்பிற்கு - அருந்ததியினுடைய பதிவிரதா குணத்திற்கு, எண் மடங்கு - எட்டுப்பங்கு அதிகமான கற்பு உடையள்- பதிவிரதா தன்மையை உடையவள்; இந்திரையினும் - மகாலட்சுமியைப் பார்க்கிலும், எழிலாள் - மிகுந்த அழகு உடையவள். எ-று.

வசுக்களுக்குத் தலைவனாகையால் தேவேந்திரனுக்கு 'வாசவன்' என்று பெயராயிற்று. வசுக்கள்=தேவர்கள். அருந்ததி: - கருத்தம முனிவர் குமரி, வசிட்டரது தேவி. மகாபதிவிரதை. இவள் தன் நாயகனிடம் சந்தேகித்ததால் கருநிறமியைந்த செந்நிறமுள்ளவளாய் யாவருங்காண நக்ஷத்திர பதம் பெறச் சாபமடைந்தனள். இவள் குமரர் சத்திமுனி முதலிய நூற்றுவர். பஞ்சகன்னியரில் ஒருத்தி. உலகத்தவர் மணஞ்செய்து கொள்கையில் கற்பிற்கு இலக்ஷியமாகத் தங்கள் மனைவியர்க்கு இவளைக்காட்டுதல் மரபு துருவமண்டலத்தருகு சப்தரிஷிமண்டலம், இந்த ஏழுநக்ஷத்திரங்களுக்கு இடையில் வசிட்டர் இருப்பார், அவருக்கருகில் அருந்ததியிருப்பாள். சிவமூர்த்தி பூர்வம் பாலவேடந்தரித்து எழுந்தருளியகாலத்து நிலைகலங்காத பதிவிரதை. திகம்பரராய்த் தாருகாவன மடைந்த காலத்தும் நிலைகலங்காதவள். (௧௦)

முகிலைவென் றறலைக் கடிந்துசை வலத்தை
முனிந்துபொற் கடுக்கையைமுடுக்கி
யகினறும் புகையுந் தகரமும் புழுகு
மளை இப்பனி நீரிலே நனைந்து
பகலவற் குடைந்த வசையினுல் வெள்கிப்
பலமலர்த் தாரணிந் தவனோ
டிகல்செயக் கருதி யிருடிரண் டாலித்
தெழுந்தன செழுந்தடங் குழலாள்.

[இச்செய்யுள் சந்திரமதியின் கூந்தற்சிறப்பைக்கூறுகின்றது.]

இ-ள். முகிலை வென்று - மேகத்தை வென்று, அறலைக்கடிந்து - கருமணலை ஒதுங்கத்தள்ளி, சைவலத்தை - பாசியையும், முனிந்து - கோபித்து, பொற் கடுக்கையை முடுக்கி - அழகிய கொன்றைக் காயையும் துரத்தி, அகில்- அகிலினது, நறும் - நல் வாசனையையுடைய, புகையும் - புகையையும், தகர

மும் - பயிர்ச்சாந்தத்தையும், புழுகும் - புழுகும், அளைஇ - பொருந்தப்பெற்று, பனிநீரிலே நனைந்து - பனிநீரிலேயும் நனையப்பெற்று, பகலவற்கு - சூரியனுக்கு, உடைந்த வசையினல் - தோற்ற பழிப்பினலே, வெள்கி - நாணமுண்டாகி, பல மலர்த் தாரணிந்து - இப்போது பல மலர்களாலும் அலங்கரித்துக் கட்டப்பெற்ற மாலையை அணிந்து, அவனேடு - அந்தச் சூரியனேடு, இகல் செயக்கருதி - யுத்தம்பண்ண நினைத்து, இருள்திரண்டு - இருளானது ஒன்று கூடி, ஆலித்து எழுந்தன - ஆரவாரித்து எழுந்ததைப்போன்ற, செழுந்தடங் குழலாள் - செழுமையான நீண்ட கூந்தலையுடையவள். எ-று.

மேகத்தையும், கருமணலையும், பாசியையும், கொன்றைக் காயையும், இருளையும் கூந்தலுக்கு உவமை கூறுதலால் சந்திரமதியின் கூந்தல், மேற்கூறிய உவமைகூறும் பொருளினும் சிறப்புடையது எனக் காட்டுதற்குப் புலவர் 'மேகத்தை'க் கருமையால் வென்று என்றும், 'கருமணலை' கூந்தலுக்கு ஒப்புச் சொல்லுவதால் அதனிடத்து சந்திரமதியின் கூந்தலுக்கு ஒப்பாகுந் தன்மையில்லாமையால் ஒதுங்கத்தள்ளி அல்லது கோபித்துத்தள்ளி என்றும், 'கொன்றைக்காயை' தனக்குச் சமத்துவமாகும் சிறப்பில்லாமை கண்டு தூர்த்தி என்றுங் கூறினர். போருக்குச் செல்வோர் பூச்சூடிச் செல்லுதல் மரபாதலின் பல மலர்த் தாரணிந்து என்ருர். இருள் சூரியன்முன் நில்லாதழியு மாதலினல் வெட்கமடைந்து இப்பொழுது சூரியனேடு போர்செய எழுந்ததுபோன்று தோன்றிற்று என்ருர். இருளிலுங் கூந்தல் சிறப்புடைமை எவ்வாறெனின் சூரியன்முன் இருள் நில்லாதழியும். கூந்தலின் இருள் நிறமோ சூரியன்முன்னும் அழியாது நிற்கும் என்பதாம். இது, விளச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீரென எழுசீர் ஓரடிக்குக்கொண்ட ஆசிரியவிருத்தம். ()

பயிர்கடீங் தனவும் பட்டமா மரமும்
 பண்டைநா ளுக்கவெள் ளென்பு
முயிர்பெறற் பொருட்டுப் பளிதமும் பாலு
 மொழுகிய தேனுமா ரமுதுங்
குயிலினிற் குரலுங் கிளியினின் மொழியுங்
 குழலும்யா ழுங்குழைக் திழைத்து
மயிலியற் சாயல் வாணுத றனக்கு
 மலரயன் வகுத்ததென் மொழியாள்.

[சந்திரமதியின் மொழியின் சிறப்புக்கூறுகின்ருர்.]

இ-ள். பயிர்கள் தீந்தனவும் - தீய்ந்த பயிர்களும், பட்டமாமரமும்-பட்டுப்போய்க்கிடக்கிற பெரிய மரங்களும், பண்டைநாள் - முன்னுளிலே, உக்கவெள் என்பும் - உடம்பினின்று கழிந்துகிடக்கிற வெள்ளை எலும்பும், உயிர்பெறற் பொருட்டு - (இவள் பேசுதலினல்) உயிருண்டாகும்படி, பளிதமும் - கண்ட சருக்கரையும், பாலும் - பாலும், ஒழுகிய தேனும் - ஒழுகுகின்றதேனும், ஆர் அமுதும் - அரிய அமுதும், குயிலினிற் குரலும் - குயிலினிடத்துள்ள தொனி

யும், கிளியின் மொழியும் - கிளியினிடத்துள்ள பேச்சும், குழலும் - புள்ளாங் குழலின் இசையையும், யாழும் - வீணையின் இசையையும், குழைத்து- குழப்பி, இழைத்து - கூட்டி, மயிலியற் சாயல் - மயில்போலும் அழகியசாயலை யுடைய, வாணுதல் தனக்கு - ஒளிபொருந்திய நெற்றியையுடைய அந்தத் தம யந்திக்கு, மலர் அயன் - தாமரைமலரிலிருக்கிற பிரமதேவன், வகுத்ததென்- செய்தது என்று சொல்லும்படியான, மொழியாள் - (நல்லிசை பொருந்திய மதுரமான) வசனத்தையுடையவள். எ-று.

தீய்ந்த பயிர்கள் சொல்லின் இனிமையால் இசையின் இனிமையால் தளிர்க்கும், பட்டமரந் தழைக்கும், உக்கவெள்ளெலும்பும் உயிர்பெறும் என் றுரைப்பது கவிமரபு. இதனை,

"பட்ட மரந்தழையப் பண்டே ரசுணமாக்
கிட்டி யுடன்மறப்பக் கின்னரரு—முட்டியங்கக்
கல்லு முருகக் கனலும் புனலாகப்
பல்லிசைநூ லின்முறையிற் பாடுதலும்" என்ற தமிழ்விடு தூதுடை

யார் வாக்கையும் ஒப்பிடுக. யாழும் குழலும் இசைக்கருவிகளிற் சிறந்தவை, இதுபற்றியே திருவள்ளுவரும் தமது அருமைத் திருக்குறளில் "குழலினிது யாழினிது என்பர் தம்மக்கண், மழலைச்சொற் கேளாதவர்" என்றுமொழிந்தார். இன்னும்,

"வேம்பாகை வேம்பாக்கி வீணைதனை வீணாக்கித்
தேம்பாகை நஞ்சாக்குந் தீஞ்சொல்லாள்."

"பத்தர்மனந் தானுருகப் பட்டமாமுந் தழையச்
சித்திரமுங்கூடச் சிரமசைக்க—வெத்திசையும்
விண்டுருகக் கற்றறிந்தோர் மெய்யுருகவின்பரசங்
கண்டுருகக் கல்லுங் கரைந்துருக." என்ற விறலிவிடுதூதும் கவனிக்

கற்பாலது. 'பாளிதம்' 'பளிதம்' என்றாயது. குறுக்கல் விகாரம்.

கடலினைக் கயலைக் கணையைமென் பிணையைக்
காவியைக் கருவின மலரை
வடுவினைக் கொடிய மறலியை வலையை
வாளைவென் றறவுநீண் டகன்று
கொடுவினை குடிகொண் டிருபுறந் தாவிக்
குமிழையுங் குழையையுஞ் சீறி
விடமெனக் கறுப்புற் றரிபரந் துன்கை
வேலினுங் கூறிய விழியாள்.

[சந்திரமதியின் கண்ணின் சிறப்புக்கூறுகின்றார்.]

இ-ள். கடலினை - கடலையும், கயலை-கெண்டைமீனையும், கணையை-அம் பையும், மென்பிணையை - மிருதுவாயிருக்கிற மானையும், காவியை-நீலோத்பல

மலரையும், கருவிளமலரை - கருவிளம்பூவையும் வடுவினை - மாவடுவின்பிளப்பினையும், கொடியமறலியை - கொடுமையைக்கொண்ட யமனையும், வலையை- வலையையும், வாளை - வாளையும், வென்று - வென்று, நீண்டகன்று - நீட்சியும் விசாலமும்பெற்று, கொடுவினைகுடிகொண்டு - கொடிய செய்கையானது குடிகொண்டிருப்பதாகி, இருபுறந் தாவி - இரண்டு காதின்பக்கங்களிலும் தாவி, குமிழையுங் குழையையும் சீறி - குமிழம்பூவையொத்த மூக்கையும் குழையணிந்த காதுகளையும் தாவிச்சென்று கோபித்து, விடமெனக் கறுப்புற்று-விஷம்போற் கருப்புள்ளதாகி, அரிபரந்து - செவ்வரிகள் பாவப்பெற்று, உன்கை வேலினும் - உன்கையிலுள்ள வேலைப்பார்க்கிலும், கூரிய விழியாள் - கூர்மையைக்கொண்ட கண்களையுடையவள். எ-று.

கண்களுக்கு கடல், கயல், கணை, பிணை, காவி, கருவிளம், மாவடு, மறலி, வலை, வாள், வேல் முதலியவை ஒப்பாகக்கூறப்படும் பொருள்கள்; இச்சந்திரமதியின் கண்கள் அவற்றினும்சிறந்ததுஎன்பதாம். 'கொடுவினை' என்றது கண்டார் காமுறுந் தன்மையுடையதாய் பிறழ்தலினாலும், ஆடவர்க்குக் காதல்நோய் உண்டாக்குதலினாலும், இதுபற்றியே நஞ்சுதோய் விழி என்பர். 'குழையையும் சீறி' என்றது, காதளவு பாய்தலினால், இதனாலே யான்றோர்களும் "காதளவோடிய கலகக்கண்ணார்" என்றனர். "கடலைக்கறுவிக் கயலைச்செருவி, படர் பொற்பிணையைப் படவித்—தடமற், குவளைக்கலகக் குலமுற்றழுதைத், திவளச்சிதறிச் செறுவிக்—கவலைச், சுரும்பைப் பழிப்பித்துச் சுத்தவேலொத்துப், பெரும்பொற் குழையைப் பிடித்துத்—திருப்பிக், கொலைபழகிச் செம்பொற் குமிழ்சிகரக் காமன், கலையடைவு மங்கிலைய கற்று—நிலையிற், கருகிவெளுத்துச் சிவந்து கற்றோருளத்தைப், பருகி யமுதுங்கவும் பாய்ந்து—திருகிக், குளிர்ந்து நிழலெழுந்து கூரியதாய் நீண்டு, மிளிர்ந்து வடுவகிரை வென்று—கிளர்ந்து செயங், கொண்டு பெருங் கூற்றின் குருபீடமாயுலகிற், கண்டவரைச் சண்டையிடுங்கண்ணினாள்" என்ற காளமேகப் புலவர்வாக்கு ஈண்டுகவனிக்கற்பாலது.

இருப்பைவிட் டபனர் நெடிதுநாட் டவஞ்செய்
  திருகையும் சிந்தையும் வருந்திச்
செருப்பையின் றிறந்த மதனனைச்சுட்டத்
  திருமுடி வேண்டுமென் றியானை
மருப்பையுங் கும்பத் தலத்தையுஞ் சக்ர
  வாகத்தை யும்வட கனகப்
பொருப்பையும் படைத்துத் தெளிந்தபின் படைத்த
  புளகித பூரண முலைபாள்.

[தனத்தின் சிறப்புக் கூறுகின்றார்.]

இ-ள். அபனர் - பிரமனானவன், இருப்பைவிட்டு - தானிருக்கும் இடத்தைவிட்டுப்போய், நெடிது நாள் தவஞ்செய்து - நெடுங்காலம் தவஞ்செய்து. இருகையும் - தன்பெரிய கரங்களும், சிந்தையும் - மனமும், வருந்தி - வருத்தங்

கொண்டு, செருப்பையின்று இறந்த - சிவ பெருமானோடு யுத்தஞ்செய்து இறந்த, மதனனைச்சூட்ட - மன்மதனுக்குத் திருமுடி சூட்டுதற்காக, திருமுடி வேண்டுமென்று - திருமுடி வேண்டுமென்று நினைத்து, யானை மருப்பையும்- யானைக் கொம்பையும், கும்பத்தலத்தையும் - அந்த யானையினது கும்பத்தலத்தையும், சக்ரவாகத்தையும் - வட்டவடிவாகிய சக்கரவாளகிரியையும், வடகனகப் பொருப்பையும் - வடக்கேயுள்ள பொன்மலையையும், படைத்து-சிருஷ்டித்து, தெளிந்தபின்-கைதேர்ந்தபின், படைத்த - சிருஷ்டித்த, புளகித - புளகாங்கிதமுள்ள, பூரணமுலையாள் - நிரம்புதலானதனங்களையுடையவள். எ-று.

பயின்றென்பது 'பையின்று' எனப் போலியாயிற்று. 'இருகையும்' என்பதற்கு இரண்டுகையும் என்று பொருள்கொள்ளுவர். பிரமனுக்கு நாலு கைகள் உண்டாதலின் அது சிறப்புடையது ஆகாது. பெருத்த நான்கு காங்களும் என்று பொருள்கொள்வதே சிறப்புடையதாகும். சிவன்மேல் மலர்வாளி தொடுத்ததைச் 'செருப் பயின்று' என்றார். இறந்த மதனனுக்கு முடி எற்றிற்கு என்று ஐயுறலாம். முற்றும்இறந்தவன் ஆகான் ஏனையோர்க்குத்தேகமில்லாதவனும் இரதிதேவிக்கு தேகமுடையவனாகவும் 'அநங்கனாகவும்' இருத்தலின் முடிவேண்டியதாயிற்று. பிரமன் சிரத்தை எடுத்துச் செய்வதற்குக் காரணம் தன் தம்பியாதலினென்க. 'சக்ரவாகம்' புள் என்றும் பொருள்படும்.

—"முற்றும்
வெருட்டியொருமூவுலகும் வெற்றிகொள்ளமாரற்
கிரட்டைமுடிவைத்ததுகொண்டென்ன" என்றார் பிறரும். (கசு)

அறந்திகழ் தவமு மகிலமு மிதனு
  லழியுமென் றயன்படைத் திலனே
சிறந்தவேல் விழியை முன்படைத் தயர்ந்து
  செங்கரஞ் சேர்ந்ததோ திகைத்து
மறந்ததோ கரந்து வைத்ததோ களப
  வனமுலைப் பொறைசுமக் தருகி
யிறந்ததோ வுளதோ வில்லையோ வினிமே
  லெய்துமோ வறியொணு திடையே.

[சந்திரமதியின் இடைச்சிறப்பு கூறுகின்றார்.]

இ-ள். அறம் திகழ் - தருமம்விளங்குவதான, தவமும் - தவமும், அகிலமும் - மற்றயாவும், இதனால் அழியுமென்று - இந்த இடையினால் அழிந்து போகுமென்று நினைத்து, அயன் படைத்திலனே - பிரமதேவன் உருவமுண்டாக்காமல் விட்டானே! சிறந்தவேல் விழியை - மேலான அந்த வேல்போலுங் கண்களை, முன்படைத்து - முன்னே சிருஷ்டித்து, அயர்ந்து - இளைத்து, செங்காம் சோர்ந்ததோ - செவந்த காங்கள் சோர்ந்தனவோ, திகைத்து - அல்லது மயங்கி, மறந்ததோ - மறந்துபோயினனோ, காந்துவைத்ததோ - அல்லது

அவள் உருவிலேயே மறைத்துத்தான் வைத்திருக்கின்றதோ, களப வன முலை-களபம் பூசப்பெற்ற அழகியதனங்களினுடைய, பொறைசுமந்து - கனத்தைத் தாங்கி, உருகி இறந்ததோ - உருகுதலாகித் தேய்ந்து போயிற்றோ, உளதோ இல்லையோ - இடைதான் இவளுக்கு உண்டோ இல்லையோ, இனிமேல் எய்துமோ - அல்லது இனிமேலுண்டாகுமோ, அறியொணாது இடையே - இது முதலான சங்கைகள் இடையைப்பற்றி அறியமுடியாது. எ-று. ஏ - ஈற்றசை. ஓகாரங்கள் ஐயப்பொருளில்வந்தன. (கரு)

செருக்குமோ கனச்செந் திருமக ளுறையுஞ்
சேயிதழ்த் தாமரை மலரும்
பெருக்குமா மறைநூ லுரைத்தநான் முகத்தோன்
பிறந்தசெங் கமலமும் வெள்க
முருக்குமாம் பலுமென் காவியுங் குமிழு
முல்லையும் வள்ளையு மலர்ந்து
திருக்கிளர் கமல மிதுவெனச் செவ்வி
திகழ்வெயர் செறிதிரு முகத்தாள்.

[சந்திரமதியின் முகச்சிறப்புக்கூறுகின்றார்.]

இ-ள். செறுக்கும் மோகனச் செந்திருமகள் - களிப்பினையுடைய திருமாலையும் மயங்கச்செய்வதான வசீகரத்தையுடைய செவ்விய லட்சுமிதேவி, உறையும் - வாசம்பண்ணுகின்ற, சேயிதழ்த்தாமரைமலரும் - செவந்த இதழ்களையுடைய தாமரைப்பூவும், பெருக்கும் - விரிவாகிய, மாமறைநூல் - பெருமையை உடைய வேதசாஸ்திரங்களை, உரைத்த - சொன்ன, நான்முகத்தோன் - நான்கு முகங்களையுடைய பிரமதேவன், பிறந்த - உற்பத்தியான, செங்கமலமும் - செந்தாமரைப்பூவும், வெள்க - நாண, முருக்கும் ஆம்பலும் - முருக்கம்பூவும் செவ்வல்லிப்பூவும், மென்காவியும் - மிருதுவான நீலப்பூவும், குமிழும் முல்லையும் - குமிழம்பூவும் முல்லையரும்பும், வள்ளையு மலர்ந்து - வள்ளைக் கொடியும் (பொருந்தி) விரிந்து, திருக்கிளர் - அழகுவிளங்குகின்ற, கமலம் - தாமரை, இதுவென - இதுவென்று சொல்லும்படி, செவ்விதிகழ் - அழகு விளங்குவதான, வெயர்செறி திருமுகத்தாள் - வியர்வைபொருந்தியுள்ள அழகிய முகத்தையுடையவள். எ-று. (கசு)

கடிகமழ் மலருங் கலவையு மழகுங்
கதிர்மணிப் பணிகளுஞ் சுமந்து
கொடியென விசைந்து நிறைவறப் பூத்த
கொம்பென வசைந்தசைந் தொல்கி
யடியிணைப் படியிற் படப்பொறு தஞ்சி
யன்புறு கடகரிப் பின்போம்

பிடியெனக் கன்னி நடைபயி லன்னப்
பெடையென மடநடை பெயர்வாள்.

[சந்திரமதியின் நடைச்சிறப்பு கூறுகின்றது]

இ-ள். கடி கமழ் - வாசனைபரிமளிக்கின்ற, மலரும் - மலர்களும், கலவையும் - கூட்டுவருக்கச் சந்தனமும், அழகும் - அழகும், கதிர்மணிப் பணிகளும் - ஒளியையுடைய ரத்நாபாணங்களும், சுமந்து - தாங்கி, கொடியென இசைந்து - ஒரு கொடிப்போல்வாள் என்று சொல்லுதற்குப் பொருத்தமானவளாகி, நிறைவுறப் பூத்த - நிரம்ப மலர்ந்த, கொம்பென - பூங்கொம்புபோல, அசைந்து அசைந்து ஒல்கி - துவண்டு துவண்டு நுடங்கி, அடியிணை—இருபாதங்களும், படியில் - பூமியில், படப்பொருது - படுவதற்குச் சகியாமல், அஞ்சி-(வருந்தி) 'பயந்து, அன்புறு - ஆசைகொண்ட, கடகரி பின் - மதயானைக்குப் பின்னே, போம் - செல்லுகின்ற, பிடியென - ஒருபெட்டையானையைப்போலவும், கன்னி நடைபயில் - இளமையான நடைநடக்கிற, அன்னப் பெடையென - பெட்டை அன்னத்தைப் போலவும், மட நடை பெயர்வாள் - மிருதுவான நடை நடப்பாள். எ-று.

"அடியிணைப்படியிற் படப்பொருது அஞ்சி" என்றது காலின் மென்மை காட்டிற்று.

—"கைத்தாயர்
பஞ்சிப்போ தையூட்டிப் பார்த்தாலோ வென்றுரைக்குஞ்
செஞ்சொற் கேட் டேசிவக்கும் சிறடியாள்" என்றும் "செம்பஞ்
சுளியென்னும்" என்றும் பிறருங் கூறியுளார். (கஎ)

அன்னதன் மையளை யமிர்தினிற் பிறந்த
வணங்கபி டேகத்தை யனந்த
மன்னர்தந் தமக்கு மணஞ்செயக் கருதி
மணமொழிக் தவர்க்கெலாங் கொடாது
முன்னமெம் பெருமான் மொழிந்தவர்க் கன்றி
முடிக்கிலேன் கடிமண மென்னச்
சொன்னதோர் மொழியுங் கேட்டன மவனின்
றோள்களுங் கிசைந்தவ ளென்றார்.

[சந்திரமதியே உனக்குத்தக்கவள் என்று அரிச்சந்திரனுக்கு
முனிவர் கூறினர் என்பதாம்.]

இ-ள். அன்னதன்மையளை -, அப்படிப்பட்ட தன்மையுடைய சந்திரமதியை, அமிர்தினில் - அமிர்தத்தில், பிறந்த - தோன்றின, அணங்கு - லட்சுமிதேவிக்கு, அபிடேகத்தை - சிறப்பினால் திருமுடிபோல்வாளான சந்திரமதியை, அனந்தம் மன்னர் - அனேக அரசர்கள், தம்தமக்குமணஞ்செயக்கருதி-

தங்கள் தங்களுக்குக் கலியாணஞ் செய்துகொள்ள நினைத்து, மண மொழிந்த வர்க்கெலாம் - கலியாணத்தைக் குறித்துப் பேசினவர்களுக்கெல்லாம், கொடாது - கொடாமல், முன்னம் - முன்னே, எம்பெருமான் - எமதுகடவுள், மொழிந்தவர்க்கன்றி - சொன்னவனுக்கேயல்லாமல், கடிமணம் - கல்யாணம், முடிக்கிலேன் - செய்துதரேன், என்ன - என்று, சொன்னதோர் மொழியும் - சொல்லிய ஒருவார்த்தையும், கேட்டனம் - கேட்டிருக்கிறோம், அவள் - அந்தச் சந்திரமதி, நின் தோள்களுக்கு - உன்னுடைய புஜங்களுக்கு, இசைந்தவள் என்றார் - கூடுதற்குத் தக்கவள் என்றார். எ-று.

எம்பெருமான் என்றது சிவபெருமானை. லட்சுமிதேவி திருப்பாற்கடலில் அமிர்தத்தோடு பிறந்தமையால் 'அமிர்தினிற் பிறந்த' என்றார் பிறக்கும் போதே மாங்கில்யத்தோடு பிறந்தாள் அம்மாங்கில்யத்தைக் காண்பவனே இவளுக்கு நாயகன் என்று சிவபெருமான் கூறியது; ஆகையால் மணம் விரும்பி இதுவரைவந்த அரசர்களில் ஒருவனும் காணாமையால் மதிதயன் தன்மகளை ஒருவருக்கும் கல்யாணஞ் செய்து கொடுக்கவில்லை. (கஅ)

பாதக மென்னக் கடிந்தகா மத்தீப்
பங்கமுற் றுறைவிடம் பெறாது
மாதவ ருரைத்த மொழிவழி வந்து
மன்னவன் செவிவழி புகுந்தாங்
கூதைவந் தலைக்கும் வெளிவிளக் கதனி
னுளமலை வுறவலைத் தோங்கிக்
காதலங் கொழுந்து வளர்ந்திட வுருகிக்
கனலினி லிடுமெழு கானான்.

[முனிவர் சொல்லியதிலிருந்து அரிச்சந்திரன் சந்திரமதிமேல் காதல் கொண்டு வருந்தினன் என்பதாம்.]

இ-ள். பாதகம் என்ன - முன்னே பாவமானது என்று, கடிந்த - நீக்கியிருந்த, காமத்தீ - காமாக்கினியானது, பங்கமுற்று - பங்கப்பட்டு, உறைவிடம் பெறாது - தனக்கு இருக்க இடங்கிடைக்காமல், மாதவர் உரைத்த மொழிவழி - மகரிஷிகள்கூறிய சொல்லேவழியாக, வந்து - நடந்துவந்து, மன்னவன் - அரிச்சந்திரனுடைய, செவி வழி புகுந்து - காதாகிய நிலைவாயிலிலே நுழைந்து, ஆங்கு - ஆங்கே, ஊதைவந்து அலைக்கும் - காற்றுவந்து மோதி அசைக்கும்படியான, வெளிவிளக்கு அதனின் - வெறும் வெளியிடத்திலேவைத்த விளக்கைப் போல, உளம் - அரிச்சந்திரனின்மனம், அலைவுற அலைத்து - அலைய அலைச்சற்பட்டு, ஓங்கி - உயர்ந்து, காதலங் கொழுந்து - ஆசையாகிய (மரத்துக்குக்) கொழுந்து, வளர்ந்திட - தளிர்த்துவளர, உருகி - அரிச்சந்திரன் உருகி, கனலினில் இடும் மெழுகு ஆனான் - நெருப்பிலிட்ட மெழுகுபோலானான். எ-று.

"தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்பும்
தோமில் செல்வமுங் கெடுக்குநல் லுணர்வினைத் தொலைக்கும்
ஏம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனாற்
காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்."

"பன்னாளும் பாரிற் பருவரலின் மூழ்கு விக்கும்
பின்னா ணிரயப் பெரும்பிலத்தி னாடெய்க்கு
மெங்நாளி லாண்டகையோர்க் கின்பம் பயந்திடுமோ
மின்னார்க டம்மை விழைவுற்ற வேட்கையதே." என்ற கந்தபுராணச் செய்யுள்களால் காமம் பாதகமென்பது விளங்கும். காமத்தைத் தீயென்றது அதன் வெம்மையால்,

"ஊருளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட்குளித்து முயலாகு—நீருட்
குளிப்பினுங் காமஞ்சுடுமே குன்றேறி
யொளிப்பினுங் காமஞ் சுடும்." என்றார் நாலடியாரிலும். (கக)

சந்திர கலையா னெக்குநீர் பொழிவ
சந்திர காந்தமே யல்லா
லந்தர சாதிச் சிலையினுண் டாகா
தவளிவன் மனைவியென் றயனார்
முந்தவே விதித்த விதியினா லடங்கா
மோகமுந் தாகமு மிகுந்து
புந்திகெட் டறிவு நிறைபொறை தோற்றம்
போக்கினன் யாக்கையுந் தளர்ந்தான்.

[அரிச்சந்திரனுக்குச் சந்திரமதியின்மேற் காதல் மிகுந்தது விதியினால் என்கின்றார்.]

இ-ள். சந்திர கலையால் - சந்திர கிரணத்தினாலே, நெக்கு நீர் பொழிவ- கரைந்து நீரைச்சிந்துவது, சந்திர காந்தமேயல்லாமல் - சந்திரகாந்தக் கல்லே அல்லாமல், அந்தரசாதிச் சிலையினுண்டாகா - வேறுசாதிக்கல்லிலே நீரைச் சிந்துந் தன்மையுண்டாகாது, (அப்படிப்போல) அவள் இவன் மனைவி என்று- அந்தச் சந்திரமதியே இந்த அரிச்சந்திரனுக்கு மனைவி ஆகிறவள் என்று, அயனார் - பிரமதேவன், முந்தவே - முன்னாளிலேயே, விதித்த விதியினால்- அமைத்திருக்கின்ற அமைப்பினால், அடங்கா - அடக்கக்கூடாத, மோகமும் தாகமும் - காம மயக்கமும் அதனாலே மனவருத்தமும், மிகுந்து - அதிகரித்து, புத்திகெட்டு - புத்திமயங்கி, அறிவு - கல்வி அறிவு, நிறை - அடக்கம், பொறை- பொறுமை, தோற்றம் - பிரகாசம் (ஆகிய இவைகளை), போக்கினன் - தன்னினின்றும் போகவிட்டுவிட்டான், யாக்கையும் - உடம்பும், தளர்ந்தான் - தளர்தலுமானான். எ-று.

மாதர்களுக்கு நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்குகுணங்கள் இன்றியமையாததுபோல ஆடவர்களுக்கும் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னும் இந்நான்கு குணங்களும் இருத்தல்வேண்டுவது. அரிச்சந்திரனுக்கு சந்திரமதிமேல் எழுந்தகாதல் ஊரழற்கூடியதாம். தெய்வமே நேர்நின்று முடித்துவைக்கின் எது அரிதாம்? அரிச்சந்திரனின் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பன அகன்றேடி யாக்கைதளர் உறலும் ஓர் வியப்போ? 'யாக்கை' எலும்பு நாம்பு தசை தோல் முதலிய சப்த தாதுக்களால் கட்டப் பட்ட தென்னும் காரணம்பற்றிவந்த பெயர். "வள்ளற்ரு ரகலந்தன்னில் வனமுலை திளைக்கவெண்ணு, முள்ளத்தான் கனவிற்காணு தொழிந்தநா ளுள தோகங்குல், நள்ளிற்கூர் துயிலிற்காணு நண்பொருள் காணுங் கொல்லோ, மெள்ளத்தான் விதியாற் காட்டுஞ் செயலினை விலக்கலாமோ." என்ற நைடதச் செய்யுளாலறியலாம். "தண்ணுருத் துளிக்குங்கூர்ந்தற் றமயந்தி முலையும் போர்வே, லண்ணறன் புயமுங்கூட்டும் விதிவலியழகிற்றம்மா, மண்ணமை முழவுத்தோளான் மனவலிக் கவசமாா, ஞெண்மலர் வாளியாலு முானறப் பிளந்ததன்றே." என்ற நைடதச் செய்யுளும் ஈண்டு கவனிக்கற்பாலது. "வளை பயில் கீழ்கட லின்றிட மேல்கடல் வானுகத்தின், றுளைவழி நேர்கழி கோத் தெனத் தில்லைத் தொல்லோன் கயிலைக், கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியை கொண்டுதந்த, விளைவை யல்லால் வியவே னயவேன் றெய்வமிக் கனவே." என்ற திருக்கோவையார்ச் செய்யுளும் ஈண்டு கருதற்பாலதொன்றும். 'சந்திரகாந்தமென்பது' சந்திரன்முன் நீரைக் கக்குவது. சூரியனுக்குமுன் நீரைக்கக்குவது சூரியகாந்தமென்னப்படும். "சந்திரனொளியிற் றண்ணீர்கால் வது சந்திரகாந்தமெனப் பெயர் பெறுமே." (௨0)

கரையழி காத லாற்றை யறிவெனுங் கரைசெய் தாற்றி
வரையன புயத்து மன்னன் முனிவரை நோக்கி மாதர்க்
கரசியை யடிய னேனுக் கணிமணம் புணர்க்க நும்வா
யுரையுள தாயி னென்மாட் டுயிருள தாகு மென்றான்.

[சந்திரமதியைக் கல்யாணஞ் செய்துகொள்ள உங்கள் வாயால்
சொல்வீர்களானல் உயிர் உடலிற்
றங்கும் என்பதாம்.]

இ-ள். கரையழிகாதல் ஆற்றை - அப்படிக் கரைகடந்து செல்வதான ஆசை என்னும் ஓர் ஆற்றை, அறிவு என்னும் கரைசெய்து ஆற்றி - தனது கல்வி அறிவு என்னும் கரையையிட்டு அடக்கி, வரையன புயத்து மன்னன்- மலைபோலுந் தோள்களையுடைய அரிச்சந்திரமகாராஜன், முனிவரை நோக்கி- அந்த மகரிஷிகளைப்பார்த்து, மாதர்க்கு அரசியை - அப்பெண்களுக்கு அரசி யாகிய சந்திரமதியை, அடியனேனுக்கு - அடியேனுக்கு, அணிமணம்புணர்க்க- அழகான கலியாணஞ் செய்துகொடுக்கும்படி, நும் வாயுரை யுளதாயின் - உங்க

னுடைய வாயாலே சொல்லுவதுண்டானல், என்யாட்டு - என் உடலிலே, உயிர் உளதாகும் என்றான் - உயிர் இருக்கிறதாயிருக்கும் என்றான். எ-று.

“கரையழிகாதல்” அளவுகடந்த காதல். அறிவு, நிறைமுதலியவற்றை யழித்தெழுந்தமையின் கரையழிகாதல் என்றார். ‘காதலை’ அறிவால் அடக்கி னன் என்றதை “கரையழி காதலாற்றை யறிவெனுங் கரைசெய்தாற்றி” என்றார். ‘வரை’=மலை, ஆகுபெயர். ‘நம் வாயுரை’ என்றது. சந்திரமதி யின் தந்தையிடஞ் சென்று மணம்பேசலை. இனி ‘நம்வாயுரை’ என்றதற்கு உமது ஆசீர்வாதத்தை என்று பொருளுங்கூறுவர். “உயிர் உளதாகும்” உயி ரோடிருப்பேன் இல்லாவிட்டால் இறந்துவிடுவே னென்பதாம். இது, விளச் சீர் மாச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் என அறுசீர் அடிகளான்வந்த அறு சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (உக)

அங்கண்மா ஞாலங் காக்கு மரசனே யரச ரேறே
திங்கண்மா முகத்து வாமத் திருவைநீ வதுவை சூட்ட
வெங்களாற் செய்யு மாறே தியம்பென முனிவர் கூறச் [ப்பும்.
செங்கண்மா லனையான் செவ்வாய் செங்கையாற் புதைத்துச்செ

[அரிச்சந்திரனை முனிவர்கள்நோக்கி சந்திரமதியை நீ கல்யாணஞ் செய்வதற்கு நாங்கள் செய்யவேண்டியது என்னவென்று கேட்டார்கள் என்பதாம்.]

இ-ள். அங்கண் - அழகிய இடத்தையுடைய, மா ஞாலம் - இந்தப் பெரி தான உலகத்தை, காக்கும் அரசனே - காத்து ஆளுகின்ற அரிச்சந்திர மகா ராஜனே!, அரசர் ஏறே - ராஜாக்களுக்கெல்லாம் சிங்கம்போன்றவனே!, திங் கண்மாமுகத்து - பூரணச் சந்திரன்போலும் ஒளிபொருந்திய முகத்தையுடைய, வாமத்திருவை - அழகால் லட்சுமிக்கு ஒப்பான சந்திரமதியை, நீ - நீ, வதுவை சூட்ட - கலியாணஞ் செய்துகொள்ளுதற்கு, எங்களால் செய்யும் ஆறு ஏது- எங்களால் செய்யும் வகை என்ன?, இயம்பு என - சொல்லு என்று, முனிவர் கூற - அந்த முனிவர்கள்கேட்க, செங்கண் மால் அனையான் - சிவந்த கண்களை யுடைய திருமாலுக்கு ஒப்பான அரிச்சந்திரமகாராஜன், செவ்வாய் - தனது செவந்தவாயை, செங்கையாற் புதைத்து - செவந்த கைகளால் மூடிக்கொண்டு, செப்பும் - சொல்லுகிறான். எ-று. (உஉ)

அல்லியங் குழலா டன்னை யருமண மடியேன் சூட்டக்
கல்லியற் சுரமுங் காடுங் கடந்துகால் வருந்த நீர்போய்
வல்லியைப் பயந்தோற் கண்டு மணமொழிந் தந்த வேந்தன்
சொல்லிய நெறிகேட் டென்பால் வருகவென் றினிதுசொன்னான்

[மதிதயனிடம் நீங்கள்போய் சந்திரமதியை நான் கல்யாணஞ்செய்துகொள்ளக் கேட்டு அவன் சொல்லும் பதிலை அறிந்துவாருங்கள் என்று முனிவர்களுக்குக் கூறினன் என்பதாம்.]

இ-ள். அல்லியங் குழலாள் தன்னை - (மலர்களின்) அகவிதழ்களால் அலங்கரிக்கப்பெற்ற கூந்தலையுடைய சந்திரமதியை, அரும் மணம் அடியேன் சூட்ட - நான் அரிதான விவாகஞ் செய்துகொள்ளுதற்காக, கல்லியற் சுரமும் - கற்கள் கிடக்கிற பாலைவனமும், காடும் - காடுகளும், கடந்து - தாண்டி, கால் வருந்த நீர்போய் - கால்கள் வருந்தும்படி நீங்களேபோய், வல்லியைப் பயந் தோற்கண்டு - வல்லிகொடிபோன்ற சந்திரவதியைப்பெற்ற மதிதயனைக் கண்டு, மணமொழிந் தந்தவேந்தன் - கலியாண வார்த்தைகளைப்பேசி (அதற்கு) அந்த மதிதயனென்னும் அரசன், சொல்லியநெறிகேட்டு - சொல்லியவார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு, என்பால் வருக என்று - என்னிடத்தில் வாருங்கள் என்று, இனிதுசொன்னான் - உபசரித்துச் சொன்னான். எ-று.

'அல்லி' மலர்களின் அகவிதழ், புற இதழ்களுக்குப் புல்லி என்று பெயர்; 'வல்லி' என்றது வஞ்சிக்கொடிபோலும் சந்திரமதியை, இது உவமை ஆகு பெயர். 'நெறி'=விதமும் ஆம். (உங)

காதலான் மன்னன் கூற மாதவர் கருணை வெள்ள
மீதெலா மெழுந்து பொங்க வேந்தகேண் மீண்டி யாங்கள்
போதலுஞ் செய்வே முங்கள் புதுமணங் காண்பே மாயி
னீதலா லுறுதி வேறொன் றில்லையென் றெழுந் திருந்தார்.

[முனிவர்கள் போகின்றோமென்று சொல்லி எழுந்தார்கள் என்பதாம்.]

இ-ள். காதலால் மன்னன்கூற - விருப்பத்தோடு அரிச்சந்திர மகாராஜன் அவ்வாறுசொல்ல, மாதவர் - அந்தமகரிஷிகள், கருணைவெள்ளம் - கிருபா சமுத்திரம், மீதெலா மெழுந்து பொங்க - மேலெல்லாம் கிளர்ந்து பெருக, (சொல்லுகின்றார்கள்) வேந்த - அரசனே!, கேள் - கேளும், மீண்டு - திரும்பவும், யாங்கள் போதலுஞ் செய்வேம் - நீ சொல்லியபடி நாங்கள் போகிறோம், உங்கள் - உங்களுடைய, புதுமணங் காண்பேமாயின் - விசேஷமான கல்யாணத்தைப் பார்ப்போமானால், ஈதலால் - இதல்லாமல், உறுதி வேறொன்றில்லை - வேறொரு நன்மையும் இல்லை, என்று - என்றுகூறி, எழுந்திருந்தார் - எல்லோரும் எழுந்திருந்தார்கள். எ-று.

'மாதவர்' ஆதலின் கருணைவெள்ளம் மேலெல்லாம் பொங்கிற்று; கருணை வெள்ளம் மேன்மேற் பெருக என்றும் பொருளாம். "எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே, அல்லாமல் வேறொன்றும் அறியார் மாதவர்" ஆதலின் அரசன் குறையின்றி இருப்பின் குடிகளுக்குக் குறையிருக்காதாதலினாலும், இறைவன் இன்புற்றிருப்பின் தான் ஆளும் குடிகளை இன்புற்றிருக்கச் செய்வானாதலினாலும், அரசனுக்குச் சந்தோஷம் தருவதாகிய இந்தக் காரியத்தைச்செய்

வது எல்லா உயிர்களுக்கும் சந்தோஷத்தைத் தருவதாகிய ஒருகாரியம் செய்த தாகும். இது கருணையால் முனிவர் செய்வதாம். அரசன், தவத்தினையுடைய முனிவர்களுக்கும் இடையூறுவாராது காக்கக் கடமைப்பட்டவன். தம் தவங்களுக்கு இடையூறு வாராதபடி இதுவரை காத்து வந்ததால் நன்றி பாராட்டற்பொருட்டும் இது செய்தார்கள் என்க. 'போதலும்' என்றதில் உள்ள உம்மை எதிரது தழீஇய எச்சவும்மை; போகவும் செய்வோம், மதிதயனிடத்து சந்திரமதியை நினக்கு மணஞ்செய்து வைக்கும்படிப் பேசவுஞ் செய்வோம் என்பதாம். 'உறுதி' புண்ணியப்பேறு என்றும் ஆன்மலாபம் என்றும் பொருள் கூறலாம். அரிச்சந்திரன் சிவபெருமானிடத்து நீங்காத அன்புபூண்டவன் ஆதலின் சிவனடியார்க்கு உதவிசெய்தல் சிவனுக்கே செய்ததாகக் கருதப்படுதலினாலும் இது சிவப்பேறுதலின் இதனின் உறுதி வேறில்லை என்றனர் என்றலுமாம். (உச)

சந்திர வதிதன் பார தனங்களுன் சைல தாம
சுந்தர மார்பின் மூழ்கச் சூட்டுவே மென்ன வாழ்த்தி
மந்திர முனிவ ரெல்லா மண்டப மகன்று நீங்கி
யிந்திர புரியே யன்ன வெழினகர் கடந்து போனார்.

[சந்திரமதியை நீ கல்யாணஞ் செய்துகொள்ளுமாறு செய்வோம், என்று முனிவர்கள் சொல்லி வாழ்த்தி அயோத்திமாநகரத்தை விட்டுக் கன்னேசிநாடுநோக்கிச் சென்றார்கள் என்பதாம்.]

இ-ள். சந்திரவதிதன் - (எப்படியாயினும்) அந்தச் சந்திரமதியினுடைய, பார தனங்கள் - கனத்த கொங்கைகள், உன் - உன்னுடைய, சைல தாமம்- மலைபோல்வதான மாலையணிந்த, சுந்தாமார்பில் - அழகிய மார்பிலே, மூழ்க- புதையும்படி, சூட்டுவேம் என்ன வாழ்த்தி - மணமாலை சூட்டச்செய்வேம் என்று ஆசீர்வதித்து, மந்திர முனிவரெல்லாம் - வேத மந்திரங்களிற் தேர்ந்த முனிவர்களெல்லாரும், மண்டபம் அகன்று நீங்கி - அந்தச் சபாமண்டபத்தை விட்டுநீங்கி, இந்திரபுரியே அன்ன - தேவேந்திரனுடைய பொன்னுலகமே போன்ற, எழில் நகர் கடந்து - அந்த அழகிய அயோத்திமா நகரத்தைக்கடந்து, போனார் - (கன்னேசி நாடுநோக்கிப் புறப்பட்டுப்) போனார்கள். எ-று.

'புரியே' என்றதில் ஏ - தேற்றப்பொருளது. 'முனிவர்' என்றது உலகப் பற்றை முத்திப்பேற்றிற்கு இடையூறானது என்று வெறுத்துவிட்டவர் என்னும் காரணம்பற்றிவந்த பெயர். (உரு)

மாதவர் போன பின்னர் மண்டப நீங்கி மன்ன
னாதுலர் போலப் பள்ளி யறைபுகுந் தமளி நண்ணி
மீதெலா மனங்க வாளி குனித்திட வெளியிற் புக்குக்
காதலங் கட்லுட் டாழ்ந்தான் கரைநிலை கண்டி லாதான்.

[அரிச்சந்திரன் முனிவர்கள் போயபின் பள்ளியறையில் புகுந்து அமளியில் காமநோய்மிகப் படுத்திருந்தான் என்பதாம்.]

இ-ள். மாதவர் போனபின்னர் - அந்த மகரிஷிகள் போனபின்பு, மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், மண்டபம் நீங்கி - சபாமண்டபத்தைவிட்டு நீங்கி, ஆதுலர்போல் - யாதுமில்லாதவழியரைப்போல, பள்ளி அறை புகுந்து-சயன மாளிகைக்குள்ளே புகுந்து, அமளி நண்ணி - படுக்கும் மெத்தையில் படுத்து, மீதெலாம் - தன் உடம்பெல்லாம், அனங்கவாளி குனித்திட - மன்மத பாணங்கள்தைக்க, காதலங் கடலுள் தாழ்ந்தான் - ஆசையாகிய கடலில் முழுகினவனாகி, கரை நிலை கண்டிலாதான் - அந்த ஆசைக்கடற்குக் கரையையும் நிலையையும் காணாதவனாகி, வெளியிற் புக்கான் - தன்பள்ளியறையை விட்டு வெளியேவந்தான். எ-று

'அநங்கன் வாளி' மலர்வாளிகள். அவையாவன:— தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, குவளை என்பன. "வனசஞ்சூத மசோகமுல்லை - குவளை காமன் கொழுமைங் கணையே." பிங்கலந்தையார் நிகண்டு. (உசு)

மயங்கினன் வருந்தி னன்மெய் வாடினன் மதன னம்பாற்
றியங்கினன் வளர்ந்த காமத் தீயினற் செயலிற் றாவி
தயங்கினன் றீரா மோக தாகத்தாற் றளர்ந்து மேன்மே
லுயங்கின னுருகி மெய்சோர்ந் துளத்தொடு முரைப்பா னானன்.

[அரிச்சந்திரன் விரகதாபங் கூறுகின்றது.]

இ-ள். மயங்கினன் - மயக்கங்கொண்டான்; வருந்தினன் - அதனால் வருத்தப்பட்டான்; மெய் - அதனாலேதேகம், வாடினன் - மிகவும் இளைத்தான்; மதனன் - (பின்னும்) மன்மதனுடைய, அம்பால் - மலர்க்கணைகளால், தியங்கினன் - சோர்ந்தான், வளர்ந்த காமத் தீயினால் - அப்படியாக மூண்ட காமாக்கினியினாலே, செயலிற்று ஆவி தயங்கினன் - எந்தச் செயலும் செய்ய முடியாதவனாகி உயிர்கலங்கினன், தீரா - நீங்காத, மோக தாகத்தால் - மோக தாகத்தினாலே, தளர்ந்து - சோர்ந்து, உளத்தொடும் - தன்மனத்துடனே, உரைப்பான் ஆனான் - சொல்லத்தொடங்கினன். எ-று.

இவைகள் விரகிகளுக் குண்டாவன. (உஎ)

தந்தமால் களிற்றி யானைச் சந்திர தயன்றன் பாவை
வந்தமா முனிவ ரோடும் வந்திவண் மாய மாகி
யெந்தமா ருயிரை வௌவி யெம்முளம் புகுந்து கைக்கொண்
டந்தமா முனிவ ரோடு மகன்றதோ வறிகி லேமால்.

[அரிச்சந்திரன் காமத்தால் பிதற்றல் கூறுகின்றது.]

இ-ள். தந்தமால் களிற்று யானை - கொம்புகளையுடைய பெரிய மதக்களிப்பையுடைய யானையின்மேலே ஏறுகின்ற, சந்திரதயன்றன் பாவை - சந்

திரதயன் என்னும் அரசனுடைய மகளான சந்திரமதி, வந்த மாமுனிவரோடும் மாயமாகிவந்து - இங்கேவந்த மகரிஷிகளோடும் மாயாரூபமாகவந்து, எம் உளம் புகுந்து - என்மனத்துள்ளே நுழைந்து, எந்தம் ஆருயிரை வௌவி - எனது அருமையான உயிரையும்பற்றி, கைக்கொடு - கைவசப்படுத்திக்கொண்டு, அந்த மாமுனிவரோடு - அந்த மகரிஷிகளோடும், அகன்றதோ - போயினளோ?, அறிகிலேம் - தெரியவில்லையே. எ-று. ஆல், அசை. 'ஓ' காரம் ஐயப்பொருளில் வந்தது. இது விரக மிகுதியாற் கூறியதாம். உள்ளம் என்றது 'உளம்' என வானது தொகுத்தல் விகாரம். (உஅ)

ஒற்றையா ழியந்தேர் சூழிவ் வுலகம்யான் காவல் பூண்ட
வற்றைநாண் முதலாக் கள்ள மின்றியே யமர்ந்த தந்தோ
பிற்றைநாள் வலியி னாலோர் பெண்கொடி யெந்த மாவி
யிற்றைநாள் கரந்து கொண்ட தேழைமை யெமக்கு மன்னோ.

[இதுவும் அரிச்சந்திரன் விரகத்தால் கூறியவைகளைக் கூறுகின்றது.]

இ-ள். ஒற்றையாழி அம் தேர் சூழ் இவ்வுலகம் - சூரியனுடைய ஒற்றைச் சக்கரத்தையுடைய அழகிய தேரானது சூழ்ந்துவரப்பெற்ற இந்த உலகத்தை, யான் காவல் பூண்ட அற்றைநாள் முதலா - நான் பாதுகாக்கத்தொடங்கிய அந்த நாள்முதலாக, கள்ளமின்றியே - இதுவரையில் திருட்டென்பதே இல்லாமல், அமர்ந்தது - (இந்நாடு) பொருந்தியிருந்தது; அந்தோ - ஐயோ!, பிற்றைநாள் - பின்பு இந்த நாளிலே, வலியினால் - பலாத்காரத்தினாலே, ஓர் பெண்கொடி - ஒரு பெண்கொடியானவள், எந்தம் ஆவி - என் உயிரை, இற்றை நாள் - இன்றைய தினத்திலே, கரந்து கொண்டது - மறைந்துவந்து கொண்டுபோனது, ஏழைமை எமக்குமன்னோ - (ஆராய்ந்து பார்க்குமிடத்து) எனக்கு அறியாமையே ஆயிற்று. எ-று.

"ஒற்றையாழித்தேர்" சூரியனுடையது. இதுபற்றியே சூரியனை "ஒற்றையாழியந் தெயாவன் உயர்மதில் கடக்கப் பெற்றிலாமையில்" என்றார் பிறரும்.

தனக்குறுந் தமர்க்கு றாதான் றனைக்கரந் தரிதிற் கொள்ளும்
வனக்குறும் பருக்கு வாகைக் குறுவனே மயிலே மானே
யெனக்குறு மென்று காத்த வென்னைவிட் டுன்பால் வந்தா
லுனக்குறுமென் றுநீயென் னுள்ளத்தைக் கொண்டாயென்றான்

[மிகு காதல்கொண்ட அரிச்சந்திரன் சந்திரமதியை
முன்னிலைப்படுத்தி மொழிதல்.]

இ-ள். தனக்கு உறும் - தனக்கு அநுகூலனைப், தமர்க்கு உறாதான் - தன் உறவினர்க்கு அநுகூலனாகாத ஒருவனை, கரந்து - மறைத்து, அரிதிற் கொள்ளும் - (அருமையாய் அவன் சம்பாதித்துவைத்த பொருளைத்) தங்கள் கொடுஞ் செய்கையினாலே திருடிக்கொண்டுபோகிற, வனக் குறும்பருக்கு-

காட்டிலே சஞ்சரிக்கிற வேடர்களுக்கு, வாகைக்கு உறவனோ - (தனக்கே அநுகூலனாகிய) நான் அவர்கள் வெற்றிகொண்டு (பொருளை) எடுத்துக்கொண்டு போகச் சம்மதிப்பேனோ?; மயிலே - மயில்போன்ற சாயலையுடையவளே', மானே - மான்போல்பவளே!, எனக்குறும் என்றுகாத்த - எனக்கே தகுதியானது என்று எண்ணி நான் இதுவரை காத்துவந்த, என்னை விட்டுவிட்டு உன்பால் வந்தால் - உன்னிடத்தே வருமானால், உனக்குறும் என்று - அது உனக்குத் தகுமென்று, நீ என் உள்ளத்தை - நீ (எனது பொருளான) என் உள்ளத்தை, கொண்டாய் என்றான் - நீ உன் வசமாக்கிக் கொண்டாய் என்று கூறினான். எ-று.

வாகை=ஓர்மரம், இங்கு பூவுக்காய் அது மாலைக்காய் பின் வெற்றிக் காயிற்று. வெற்றிபெற்றோர் அணியுமாலை வாகை மாலை. இது வாகைமலரால் ஆக்கப்பட்டது. (௩0)

மைநிகழ் வாரி சூழு மாநிலத் தோர்கட் கெல்லாம்
பெய்தவம் பழிபி றங்காப் பிள்ளையைப் பெறுத லென்பார்
செய்தவ மன்றுன் றாதை சனனங்க டோறுஞ் செய்த
கைதவ மாவி கொள்ளுங் களவினிற் பயந்த தெல்லாம்.

[இதுவும் அரிச்சந்திரன் காமமிக்குக் கூறும்மொழியாம்.]

இ-ள். மைநிகழ் - கருமையாக விளங்குகின்ற, வாரிசூழும் - கடலானது சூழ்ந்துள்ள, மாநிலத்தோர்கட்கெல்லாம் - இந்தப் பெரிய உலகத்தில் உள்ளவர்களுக்கெல்லாம், பெய் - (நன்மையைக்) கொடுக்கிற, தவம் - தவமானது, பழிபிறங்கா - குற்றஞ்செய்து பழிப்பைக்கொள்ளாத, பிள்ளையைப் பெறுதலென்பர் - பிள்ளையைப்பெறுதல் (என்று) சொல்லுவார்கள், செய்தவம் அன்று - உன் தந்தைசெய்த நல்ல தவத்தினாலன்று நீ பிறந்தது, ஆவிகொள்ளும் - உயிரையே திருட்டுத்தனமாகக் கொள்ளும்படியான, களவினிற் பயந்ததெல்லாம் - திருட்டிலேவல்ல உன்னைப் பெற்றதெல்லாம், உன்றாதை சனனங்கடோறுஞ்செய்த- உன்தந்தை ஜனனங்களிலெல்லாம்செய்த, கைதவம் - கீழான ஒழுக்கமுடைய தவமென்றே உலகம் கூறும். எ-று.

திருட்டுத்தன முன்னிடத்திருப்பதால் உன்தந்தையின் நற்றவத்தால் பிறந்தவளல்லை என்பதாம். "மகனுரைக்குந் தந்தைநலத்தை" என்றும் "தத்தம் எச்சத்தாற் காணப்படும்" என்றும் ஆன்றோர் கூறியிருப்பதால் பெற்றோர்செய்த நன்மை தீமைகளை பிள்ளைகளால் அறிவது அனுபவ வழக்கு என்பதும் இங்கு உணரத்தக்கது. "கைதவம்" என்பதற்கு வஞ்சம் என்றும் பொருள் கொள்ளலாம். (உக)

மாறுகொண் டனைய வல்லி வாட்டிய வாட்டஞ் சொல்லி
யாறுதற் கென்பா னன்னி யணையுமோ வணைகி லாமல்

வேறமிப் படியே வாதை விளைக்குமோ விளைக்கும் வாதை
யேறுமோ குறையு மோவென் றிருந்தன னிறைவ னிப்பால்.

[இதுவும் அரிச்சந்திரன் மிக்ககாதலாற் கூறியவைகளே.]

இ-ள். மாறுகொண்டு - மாறுபாடாக என் உயிரைக் கவர்ந்துகொண்டு, வாட்டிய வாட்டம் - வாட்டின வாட்டத்தை எல்லாம், சொல்லி ஆறுதற்கு- நான் சொல்லி மனம் ஆறுதற்கு, அனையவல்லி - அப்படிப்பட்ட அந்த வல்லிக் கொடிபோலும் சந்திரமதி, என்பால் நண்ணி அணையுமோ - என்னிடத்தே கிட்டிவந்து சேருவாளோ?, அணைகிலாமல் - கிட்டிச்சேராதபடி, வேறு - வேறாகியிருந்து, இப்படியே வாதைவிளைக்குமோ - இந்தவிதமாகவே துன்பத்தை விளைத்துக்கொண்டிருக்குமோ?, விளைக்கும் வாதை - இப்படி உண்டாக்குகிற துன்பம், ஏறுமோ - அதிகப்படுமோ?, குறையுமோ - அல்லதுகுறைவுபடுமே?, என்று - என்று சொல்லிக்கொண்டு, இப்பால் - இவ்விடத்தில், இருந்தனன் இறைவன் - அரிச்சந்திரமகாராஜன் இருந்தான். எ-று.

ஓகாரங்கள் ஐயப்பொருளில் வந்தன. (௩௨)

மானவன் வதுவை சூட்ட மணமொழி வதற்கு நண்ணிப்
போனமா முனிவர் பூகப் பொழிலுடன் பொய்கை நீங்கிக்
கானமு மலையும் யாறுங் கடந்துகன் னேசி யென்னு
மாநக ரணுகிக் கொற்ற மதிதயன் சபையிற் புக்கார்.

[அரிச்சந்திரன் கல்யாணவிஷயம் பேசப்போனவர்கள்கன்னேசிநாடு
சேர்ந்து அரசன் சபைக்குட் போனார்கள் என்பதாம்.]

இ-ள். மானவன் - இந்த மகானுபாவனான அரிச்சந்திரமகாராஜன், வதுவைசூட்ட - கல்யாணஞ் செய்துகொள்ளுதற்கு, மணமொழிவதற்கு - விவாக வார்த்தையைப் பேசுவதற்காக, நண்ணிப்போன - இங்குவந்து பின்புபோன, மாமுனிவர் - மகரிஷிகள், பூகப் பொழிலுடன் - கமுகந் தோட்டத்துடனே, பொய்கை - (வழியிலேயுள்ள) குளங்களையும், நீங்கி - கடந்துசென்று, கானமும் மலையும் - காடுகளையும் மலைகளையும், யாறும் - ஆறுகளையும், கடந்து- தாண்டி, கன்னேசி என்னும் - கன்னேசி என்றுசொல்லும்படியான, மா நக ரணுகி - மாட்சிமையையுடைய நகரத்திற்சென்று, கொற்றமதிதயன் - வெற்றி பொருந்திய சந்திரதயவரசனின், சபையிற்புக்கார் - சபைக்குள்ளே புகுந்தார்கள் எ-று.

'மானவன்' சிறந்தவன் என்றும் பொருளாம்; 'மாநகர்' பெரிய நகர் என்றலும் உண்டு. (௩௩)

மேருவை வெளிசெய் தன்ன மேனிலை மணிமா டத்து
வாரிதி யெழுந்த தென்ன வந்தவன் றளைப் போற்றத்

தேரும் யானையு மிழிந்து திறையிடு மரசர் நிற்கக்
காருநீள் கடலும் போலக் கதிர்மணி முரச மார்ப்ப.

[சந்திரதயன் மாளிகையின்சிறப்பும் சபைச்சிறப்புங் கூறுகின்றார்.]

இ-ள். மேருவை - மகா மேருமலையை, வெளிசெய்தன்ன - பெருந் துவாரஞ் செய்து வைத்திருக்கிறதுபோலிருக்கிற, மேனிலை மணிமாடத்து - மேலுப்பரிகையையுடைய அழகிதான கொலுமண்டபத்திலே, வாரிதி எழுந்தது என்ன - கடல் பொங்கி வந்ததுபோல, வந்து - வந்து, அவன்றாளை - அந்தச் சந்திரதயனுடைய பாதங்களை, போற்றி - துதிசெய்ய, தேரும் - தேர்களையும், யானை - யானைகளையும், இழிந்து - விட்டிறங்கி, திறையிடும் அரசர் - கப்பங் கட்டும் அரசர்கள், நிற்க - ஒருபால் நிற்க, காரும் - மேகங்களையும், நீள்கடலும் - நெடிய கடலையும், போல - போல, கதிர்மணி முரசம் ஆர்ப்ப - பிரகாசமான அழகிய பேரிகைகள் முழங்கவும். எ-று.

மேனிலைமாடத்தின் உயரத்திற்கும் விஸ்தீரணத்துக்கும் அழகிற்கும் மேரு மலையைக் குடைந்து வைத்ததுபோல் என்றார். இது மிக உயர்வுநவிற்சி அணியாம். 'மேருமலை' பொன்மலை. 'வாரிதி எழுந்ததென்ன' என்றது உவமை அணி; இவ்விரண்டுங் கலந்து வந்தமையின் கலவை அணியாம். முரசதிர் தற்கு நீள்கடலையும் மேகத்தையும் உவமித்தார். (ஆர்ப்ப - சப்திக்க) 'ஆர்ப்பு' சப்தம்; இது குளகம். மூன்றாவது பாட்டில் இருந்தான் என்ற வினைமுற் றைக்கொண்டு பொருள் முடிகிறது. (௩௪)

வெயில்விரி மகுடம் பொங்க விடுசுடர்க் கழல் விளங்கக்
கையில்விரி கடக மின்னக் கதிர்மணிக் குழைக டாழப்
பயின்மணி மரக தத்தாற் பசுங்கதிர் பரப்பு மாடச்
சயிலசா ளரங்க டோறும் வலயத்தின் கிரணந் தாக்க.

[சந்திரதயன் கொலுவீற்றிருந்த சிறப்புக்கூறுகின்றது.]

இ-ள். வெயில்விரி மகுடம் பொங்க - சூரியப்பிரகாசத்தைக் காட்டுகிற கிரீடங்கள் விளங்கவும், விடுசுடர்க் கழல்விளங்க - ஒளி வீசுகின்ற வீரக்கழல்கள் விளங்கவும், கையில் விரி கடக மின்ன - கைகளில் ஒளிவிரியும்படியான கங் கணங்கள் பிரகாசிக்கவும், கதிர்மணி குழைகடாழ - பிரகாசமான ரத்ந குண்ட லங்கள் தொங்கவும், பயில்மணி மரகதத்தால் - சொல்லும்படியான அழகிதான மரகதத்தினலே, பசுங்கதிர் பரப்பும் - பசிய ஒளியை விரிக்கும்படியான, மாடச் சயில சாளரங்கடோறும் - சபா மண்டபமான பொன்மலையிலேயுள்ள சன்னல் களிலெல்லாம், வலயத்தின் கிரணந் தாக்க - சந்திரதயன் அணிந்துள்ள கேயூ ரத்தின் பிரகாசங்கள் வீசவும். எ-று.

இதுவும் குளகச் செய்யுள். 'கைய்யில்' எனற்பாலது 'கையில்' என்றது தொகுத்தல் விகாரம். (௩௫)

சிகரமா முலையார் செம்பொற் செழுமணிக் கவரி வீசப்
புகரன வமைச்சர் போற்றப் புரிதவ முனிவர் வாழ்த்தப்
பகர்தரு மறையோர் சூழப் பாவலர் கவிகள் பாட
மகாதோ ரணக்கீழ் மன்னன் மடங்கலா தனத் திருந்தான்.

[சந்திரதயன் சபையில் இருக்குஞ் சிறப்பு கூறுகின்றார்.]

இ-ள். சிகர மா முலையார் - மலைச் சிகரம்போலும் பெரிய தனங்களை யுடைய மாதர்கள், செம்பொற் செழுமணிக் கவரி வீச - செவந்தபொன்னாலுஞ் செழுமையான மணிகளாலும் செய்யப்பட்ட சாமரங்கள் வீசவும், புகர் அன- சுக்கிர பகவானை ஒத்த, அமைச்சர்போற்ற - மந்திரிகள் துதிக்கவும், புரிதவ முனிவர் வாழ்த்த - தவங்களைச் செய்யும் முனிவர்கள் வாழ்த்தவும், பகர்தரு மறையோர் சூழ - வேதத்தைப் பாராயணஞ்செய்யும் பிராமணர்கள் சூழவும், பாவலர் - வித்துவான்கள், கவிகள் பாட - பல கவிகளைப்' பாடவும், (இப்படிப் பட்ட சிறப்புடனே), மகா தோரணக்கீழ் - மகா தோரணத்தின்கீழ், மன்னன்- அச்சந்திரதய வாசன், மடங்க லாதனத் திருந்தான் - சிங்காதனத்திலே இருந் தான். எ-று.

"புகரனவமைச்சர்" உவமவிரி. புத்தியாற் சுக்கிரன் போன்றவர்கள் என்பதாம். "பகர்தருமறையோர்" சிறப்பித்துக் கூறப்படுகின்றவர்களாகிய வேதப்பிராமணர்கள் என்றும் உரை உரைக்கலாம். 'கவிகள்பாட' என்றதற்கு வாழ்த்துக்கவிகளுந் திருமுகவிலாசக் கவிகளும், பிரபந்தங்களும் பாட என் பதாம். மடங்கல், மடங்கிநோக்குந் தன்மையுடையதால் மடங்கல் என்றாயிற்று. மடங்கி நோக்கல், செல்லும்பொழுது பின்னும் முன்னும் திரும்பித் திரும்பிப் பார்த்தல். இதுபற்றியே இலக்கணநூலாரும் பின்னும் முன்னும் பொருள் தழுவிக்கொண்டு செல்லும் ஒழுக்கைச் சிங்கநோக்கெனப் பேர் தந்தார். ஈங்கு சிங்கம்போல் முன்னும் பின்னும் பொருள்நோக்கி நடைபெறல்பற்றிவந்த உவமைப்பெயர். (௩௬)

அந்தவோ லக்கந் தன்னி லருந்தவ முனிவ ரெல்லாம்
வந்தனர் வந்த போது மன்னவ னெழுந் திருந்து
சுந்தா மகுடந் தாழத் தொழுதன னவனை வாழ்த்திச்
சிந்தையின் மகிழ்ச்சி பொங்க விருந்தபின் செப்ப லுற்றான்.

[சந்திரதயன் வந்த முனிவர்கள் தாள்களில் வீழ்ந்து
வணங்கினன் என்பதாம்.]

இ-ள். அந்த வோலக்கந்தன்னில் - அப்படிக் கொலுவிருக்கிற சபையில், அருந்தவ முனிவரெல்லாம் - அயோத்தி நகரத்திலிருந்துபோன அருமையான முனிசிரேஷ்டர்கள் எல்லாம், வந்தனர் - வந்தார்கள், வந்தபோது - அந்தமுனி வர்கள் வந்தபோது, மன்னவன் எழுந்திருந்து - சந்திரதயவாசன் எழுந்திருந்து வந்து, சுந்தா மகுடந்தாழ - அழகிதான கிரீடம்படிய, தொழுதனன் - வணங்கி

ஞன்; அவனை - அப்படி வணங்கிய சந்திரதய வாசனே, வாழ்த்தி - (முனிவர் கள்) ஆசீர்வதித்து, சிந்தையில் மகிழ்ச்சிபொங்க - மனத்திலே சந்தோஷம் பெருக, இருந்தபின் - (முனிவர்கள் ஆதனத்திலே) வீற்றிருந்தபின்பு, செப்ப லுற்ருன் - சந்திரதயன் சொல்லத் தொடங்கினுன். எ-று. (௩எ)

வானநீர் பொழிந்து முத்த மணிகொழித் தருவி பாய்ந்த
கானநீர் பெருகுந் தெய்வக் கண்டகி யென்னுந் தீர்த்தத்
தானநீ ராடி யென்றன் றலைக்கடி முடிகள் சூட்டிப்
போனநீ ருடனே மீண்ட வருத்தியென் புகலு மென்ருன்.

[இங்கு நீராடி இப்பொழுதுதானே போனீர்கள் இவ்வளவுசீக்கிரம் திரும்பி வருதற்குக் காரணம் யாது என்ருன் என்பதாம்.]

இ-ள். வானம் - மேகங்கள், நீர் பொழிந்து - நீரைப் பெய்வதனுலே, முத்தம் - முத்துக்களையும், மணி - ரத்திநங்களையும், கொழித்து - கொழித்துக் கொண்டு, அருவிபாய்ந்த - அருவிகளாகப் பாயப்பெற்றதும், கானம் - காடுகளி லெல்லாம், நீர் - ஜலமானது, பெருகும் - பெருகுவதானதுமாகிய, தெய்வ- தெய்வத்தன்மையுள்ள, கண்டகி என்னும் - கண்டகி என்று சொல்லும்படி யான, தீர்த்தத்தான நீராடி - தீர்த்தமாகிய தடத்திலே நீராடி, என்றன் - என் னுடைய; தலைக்கு - சிரசிற்கு, அடிமுடிகள் சூட்டி - உங்கள் பாதமாகிய கிரீ டங்களைச் சூட்டி, போன நீர் - போயின நீங்கள், உடனே மீண்ட - உடனே திரும்பிவந்த, அருத்தி என்புகலும் என்ருன் - இச்சை என்ன சொல்லுங்கள் என்று கேட்டான். எ-று.

'பொழிந்து' என்ற வினையெச்சம் பொழிந்ததனுலே என்று பொருள் தந்து நின்றது. "முத்தமணி" உம்மைத் தொகையாகக் கொண்டு முத்தமும் மணியும் என்று கொண்டாம். இனி 'முத்தாகியமணி' என்று பண்புத்தொகை யாகக் கொள்வாருமுண்டு; 'மணி' விளக்கமுடையது என்னுங் காரணம்பற்றி வந்த காரணப்பெயர். (௩அ)

மன்னுகேள் சென்ற யோத்தி மாநகர் புகுந்து யாங்க
ளந்நகர்க் கரச னீதி யருளரிச் சந்த்ர னென்பா
னின்னகர் வளமும் நின்ற நெறியு நின்மக டனேருஞ்
சொன்னபி னின்பா லெய்து முவகையே துணிந்து நின்ருன்.

[நாங்கள் அரிச்சந்திரனிடம் உன் நாட்டையும் உன்னையும் உன்மகளையும் பற்றிப் பேசினேம் அவன் உன்னைக்காண விரும்பி யிருக்கிருன் என்பதாம்.]

இ-ள். மன்னுகேள் - அரசனே! கேட்பாயாக; யாங்கள் - நாங்கள், சென்று - உடனேபோய், அயோத்திமா நகர் புகுந்து - அயோத்திமா நகரிலே புகுந்து, அந்நகர்க்கு அரசன் - அந்த நகரத்திற்கு அரசனுகிய, நீதி - நீதியும்,

அருள் - தயவுமுள்ள, அரிச்சந்திரன் என்பான் - அரிச்சந்திரன் என்பவனிடத்தில், நின் நகர் - உனது நகரின், வளமும் - செழிப்பமும், நின்றன் - உன்னுடைய, நெறியும் - சன்மார்க்கமும், நின் மகள் தன் நேரும் - உன்னுடைய புத்திரியின் அழகும், சொன்னபின் - சொன்னபின்பு, நின்பால் - உன்னிடத்தில், எய்தும் - வந்து கண்டு பேசுவதாகிய, உவகையே - சந்தோஷவார்த்தைக்கே, துணிந்து நின்றான் - துணிந்தவனாயினான். எ-று.

'அயோத்தி' என்றது சத்துருக்களினால் அழிக்கப்படாத மதில் அரணையுடையது என்பது பொருள், "அருள் நீதி அரிச்சந்திரன்" என்பதற்கு அருள் நிறைந்த நீதியையுடைய அரிச்சந்திரன் என்றும் பொருள் கொள்வர். 'நேர்' 'ஒழுங்கு' என்றும் 'கற்பு' என்றும் பொருள்தரும். ஏ - தேற்றேகாரம். (௩௯)

அறநெறி மிக்கோர் தம்பா லருந்ததிக் கற்பி னாளைப்
புறநெறி போகா வண்ணம் வருந்தியும் பொருந்தச் செய்தன்
மறநெறி யன்று மாயா மாதவந் தன்னின் மிக்க
திறநெறி யதனா னின்பாற் சேர்ந்தனஞ் செல்வ வென்றார்.

[அறநெறி தவறாத அரிச்சந்திரனுக்குக் கற்புடைய சந்திரமதியைக்
கல்யாணஞ் செய்விப்பது தருமமான காரியமாகையால்
வந்தோம் என்றார் என்பதாம்.]

இ-ள். செல்வ - செல்வத்தின்மிக்க அரசனே!, அறநெறி - தரும மார்க்கத்திலே, மிக்கோர் தம்பால் - மிகுந்துள்ளவர்களிடத்திலே, அருந்ததிக் கற்பினாளை - அருந்ததிபோலுங் கற்பு உடையவளாகிய நினது புத்திரியை, புறநெறி போகாவண்ணம் - தருமத்திற்கு வேறான வழியிலே போகாதபடி, வருந்தியும் - வருத்தப்பட்டாவது, பொருந்தச்செய்தல் - பொருந்தப்பண்ணுவது, மற நெறி யன்று - பாவவழியன்று, மாயா - கெடாத, மாதவந்தன்னின் மிக்க - மகாதவத்தைக்காட்டிலுஞ் சிறந்தது, திற நெறி யதனால் - உறுதியான மார்க்கமே இது ஆகையினால், நின்பால் - உன்னிடத்திற்கு, சேர்ந்தனம் என்றார் - திரும்பவும் வந்தோம் என்றார்கள். எ-று.

"மறநெறியன்று" என்பதற்குத் தீச்செய்கை அன்று என்றும் பொருள் கொள்வர். "மாயாமாதவந் தன்னின்மிக்க திறநெறியதனால்" என்பதற்கு, எக்காலமும் அழியாத பெரிய தவத்தினாலே மிகுந்த உறுதியான நல்வழியே யாதலினால், என்றும் பொருள்கொள்வர். 'மாயாமாதவம்' கெடாதபடிசெய்து முடித்த பெரிய தவம், என்பதாம். (௪0)

புவனமுள் ளளவும் யாங்கள் புக்கறிந் தநேக கோடி
நவநர பதிக டம்மைக் கண்டனம் நறுந்தார் வேந்தே
சிவனல்ல நீபயந்த திருமக டனக்குக் கேள்வ
னவனல தில்லை யென்ன வருந்தவ ரெடுத்து ரைத்தார்.

[முனிவர்கள் சந்திரமதிக்கு எற்றகணவன் இந்தப் பூலோகத்தில் அரிச்சந்திரனைத்தவிர்த்து வேறில்லை என்பதாம்.]

இ-ள். நறுந்தார் வேந்தே - நல்ல வாசனையையுடைய மாலையை யணிந்துள்ள வேந்தனே !, புவனம் உள்ளளவும் - இந்த லோகம் உள்ள விஸ்தீரணமெல்லாம், யாங்கள் புக்கறிந்து அநேக கோடி - நாங்கள் அறிந்து போய்ப் புகுந்த அநேககோடி, நவநரபதிகள் தம்மை - புது அரசர்களை, கண்டனம்- கண்டுவந்தோம், சிவன் நல்க - பரமசிவன் கொடுக்க, நீ பயந்த - நீ பெற்ற, திருமக டனக்கு - அழகிய புத்திரிக்கு, கேள்வன் - நாயகன், அவனலதில்லை- அந்த அரிச்சந்திரனை அல்லது வேறு யாரும் இல்லை, என்ன - என்று, அருந்தவர் எடுத்து உரைத்தார் - ரிஷிகள் விசேஷமாக எடுத்துக்கூறினர். எ-று.

'திருமகள் தனக்கு' லட்சுமிபோலுஞ் சந்திரமதிக்கு என்றும் பொருள் கூறலாம். "புவனமுள்ளளவும் யாங்கள் அறிந்து புகுந்து அநேககோடி நவநரபதிகடம்மைக் கண்டனம்'' என்று பொருளியைக்க. (சக)

மைய லாற்றிய குணத்து மாதவ ருரைப்பக் கேட்டுப்
பொய்யிலா மொழியா லுள்ளம் பொருந்தியும் பொருந்தா னாகித்
தையலாள் பங்கன் மேனாள் சாற்றிய தகைமைக் கேது
செய்யலா நம்மா லென்னத் திகைத்திருந் துரைக்க லுற்றான்.

[முனிவர்கள்கூறியதற்கு சம்மதித்தும் சம்மதியாதவனாகி சிவபெருமான் கூறியிருப்பதற்கு நாம் என்னசெய்யலாம் என்றான் என்பதாம்.]

இ-ள். மையலாற்றிய குணத்து மாதவர் - காம மயக்கத்தைப் போக்கின நல்ல குணங்களையுடைய மகரிஷிகள், உரைப்பக் கேட்டு - அப்படிச் சொல்லக் கேட்டு, பொய்யிலா மொழியால் - அந்த முனிவர்கள் கூறிய பொய்யில்லாத வார்த்தையால், உள்ளம் - (சந்திரதயன்) தன்மனம், பொருந்தியும் பொருந்தானாகி - சம்மதித்துஞ் சம்மதியாதவனாகி, தையலாள் பங்கன் - பார்வதியை இடது பாகத்தே கொண்டிருக்கிற சிவபெருமான், மேல் நாள் - முன் நாளிலே, சாற்றிய தகைமைக்கு - சொன்ன தகுதிக்கு, ஏது செய்யலாம் நம்மாலென்ன- நம்மால் என்னசெய்யக் கூடுமென்று, திகைத்திருந்துரைக்கலுற்றான் - திகைத்திருந்தவனாகிப், பின்புசொல்லத்தொடங்கினான். எ-று.

'மையலாற்றிய குணத்து மாதவர்' ஆதலின் 'பொய்யிலா மொழியால்' என்றார் மையலுடையாராயின் விருப்பு வெறுப்புடையராய் நடுநிலைமாறிக் கூறுவர். 'முன் நாள்' என்றது சந்திரவதி பிறந்தநாளை. சாற்றியதகுதி யாவது:— சந்திரவதி தாலியோடு பிறந்தகாலையில் எல்லோரும் ஆச்சரியப் பட்டபொழுது சிவபெருமான்றோன்றி இனி இது எவருக்குந்தோன்றாது இத் தாலியை எவன் காண்கின்றானோ அவனே இவளுக்கு நாயகன் என்றதாம். ()

மூவரா யவரின் முன்னு மூர்த்தியா ரருளிச் செய்த
தேவரா சியமொன் றுண்டா மன்னது தெரிய வல்லார்
யாவரா யினும் யான்பெற்ற விளங்கொடி தனக்குக் கேள்வ
ராவரா லவனிங் கெய்தி னறியலா மழையு மென்றான்.

[சிவபெருமான் சொல்லிய இரகசியம் தெரியவல்லார் சந்திரவதிக்குக்
கணவனானவன், அந்த அரிச்சந்திரனை அழையுங்கள், அவன்
இங்குவந்தா லறியலாம் என்றான் என்பதாம்.]

இ-ள். மூவராய் - பிரம்மா விஷ்ணு சிவன் என்னும் மூவர்களாகி, அவரின் முன்னும் மூர்த்தியார் - அவர்களுக்கெல்லாம் முதல்வனாகவும் இருக்கின்ற சிவபெருமானானவர், அருளிச்செய்த - அருளிச்செய்த, தேவ ராசிய மொன்றுண்டு - தேவ ரகசியம் ஒன்றிருக்கிறது, அன்னது - அந்தரகசியத்தை, தெரிய வல்லார் - தெரிந்துகொள்ள வல்லவர்கள், யாவராயினும் - எவராக இருந்தாலும், யான் - நான், பெற்ற - பெற்ற, இளங்கொடி தனக்கு - இளமையாகிய கொடிபோல்பவளுக்கு, கேள்வராவரால்-நாயகனாவார் ஆகையால், அவன் - அந்த அரிச்சந்திரன், இங்கெய்தின் - இங்கேவந்தால், அறியலாம் - தெரிந்துகொள்ளக்கூடும், அழையும் என்றான் - இங்கே வரச்செய்யுங்கள் என்றான். எ-று.

"மூவராயவரின்மூர்த்தி" என்றது 'தேவராய்த் தேவர்க்குந் தெளியாத ஒளியுருவாய், மூவராய் மூவர்க்குள் முதல்வனாய் நின்றோனை' சிவபெருமானை, ராசியம்=ரகசியம். 'கொடி' என்றது வல்லிக்கொடியை. 'உண்டாம்' இதில் 'ஆம்' அசை, இனி உண்டாகும், உண்டாகுவதாகும் என்றும் பொருள்கொள்ளலாம். (சாடு)

அரசையிங் கழையு மென்ன வகமகிழ்ந் துவகை கூர்ந்து
விரைவுட னெழுந் திருந்து வேதமா முனிவர் போனா
ரிருநிலத் தரசர்க் கெல்லாஞ் சுயம்வர மேழு நாளென்
றுரைசெயு மென்று தூது மோலையும் போக விட்டான்.

[அரசனை அழையுங்கள் என்ற உடனே முனிவர்கள் புறப்பட்டுப்
போனார்கள், மதிதயனும் தன் மகளுக்குச் சுயம்வரம்
இன்றைக்கேழாநாள் என்று அரசர்களுக்குத்
தூதனுப்பினான் என்பதாம்.]

இ-ள். அரசையிங்கு அழையும் என்ன - அந்த அரிச்சந்திர மகாராஜனை இங்கேவரச்செய்யுங்கள் என்ற உடனே, அகமகிழ்ந்து உவகைகூர்ந்து - மனஞ் சந்தோஷித்து ஆனந்தமடைந்து, விரைவுடன் எழுந்திருந்து - சீக்கிரமாக எழுந்திருந்து, வேதமாமுனிவர் போனார் - வேதத்தையுணர்ந்த பெரிய ரிஷிகள் எல்லோரும் போனார்கள்; இருநிலத் தரசர்க்கெல்லாம் - சந்திரதய வரசன் பெரிய நிலத்திலுள்ள அரசர்களுக்கெல்லாம், சுயம்வரம் எழுநாளென்று - எனது மகளுக்குச் சுயம்வர கல்யாணம் இற்றைக்கு எழாநாளென்று, உரைசெயும் என்று-

சொல்லுங்களென்று, தூதும் ஓலையும் - தூதரையும் திருமுக ஓலையையும் போகவிட்டான் - போகும்படி அனுப்பினான். எ-று.

'சுயம்வரம்' கன்னிகை தனக்குக் கணவனைத் தானே வரித்துக்கொள்ளும் கல்யாணம். வரித்தல்—தேடுதல். 'சுயம்வரம்' ஒருநாயகனை ஒருகன்னி தெரிந்து மாலையிட்டு மணந்துகொள்வது ஆதலின் இதனை "மலர்வேய்ந்து கொள்ளும்மணம்" என்றுங் கூறுவர். இது முன்னாள் அரசர் மரபில் நடந்து வந்தது. தூதும் ஓலையும் இதில் உள்ள "உம்" எண்ணும்மை.

"மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரசம்
எங்கு மறைகென் றியம்பினான்—பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கை கொழுந்தோடு நன்னாடன்
வேந்தர்மேற் றூதோட விட்டு." என புகழேந்திப்புலவர் வாக்கு கவனிக்கற்பாலது. (சுச)

தொழுங்கழன் மன்னர் மன்னன் றூதர்சென் றுரைத்தபோதே
யழுங்கிய வாசை யோடு மளவிலா வுவகை யோடுஞ்
செழுங் குடை மன்ன ரெல்லாந் தேசமு நகருநீங்கி
யெழுங்கடல் வளைந்த தென்ன வீண்டிவந் தடைந்தா ரன்றே.

[சுயம்வரங்கேட்டு பல அரசர்கள் கடல்வளைந்ததுபோற் கன்னோசி நகர் வந்து சேர்ந்தனர் என்பதாம்.]

இ-ள். தொழும் - எல்லோரும் வணங்கத்தக்க, கழல் - வீரகண்டாமணியையணிந்த பாதங்களையுடைய, மன்னர் மன்னன் - ராஜாதி ராஜனான சந்திரதயன், தூதர் சென்றுரைத்தபோதே - அனுப்பிய தூதர்கள்போய்ச் சொன்னவுடனேயே, அழுங்கிய ஆசையோடும் - மிகவும் வருத்துகின்ற ஆசையோடும், அளவிலா உவகையோடும் - அளவில்லாத சந்தோஷத்தோடும், செழுங்குடை மன்ன ரெல்லாம் - செழுமையான வெள்ளைக்குடையையுடைய அரசர்கள் எல்லாம், தேசமும் நகரும் நீங்கி - தங்களுடைய நாட்டையும் நகரத்தையும் விட்டு நீங்கி, எழுங்கடல் வளைந்ததென்ன - ஓபொங்கி எழும் கடல் சூழ்ந்ததுபோல, ஈண்டிவந்தடைந்தார் - அக்கன்னோசி நாட்டிலேவந்து நெருங்கிக்கூடினார்கள். எ-று. அன்று, ஏ - அசைகள்.

'கழல்' ஆகுபெயராய்ப் 'பாதங்களை'க் குறித்தது. 'அழுங்கிய ஆசை' வருத்துகின்ற காமவாசை. 'எழுங்கடல் வளைந்ததென்ன' என்றது உவமை விரி. (சரு)

சோலைக டோறு நன்னீர்ச் சூளிகை தோறுந் தேவ
ராலயந் தோறு மாத ரரங்குக டோறு மாட
மூலைக டோறுஞ் சீர்சான் முன்றில்க டோறு மேம
சாலைக டோறு மன்னர் தானைவந் திறுத்த தன்றே.

[நகரின் பல இடங்களிலும் பல அரசர்களின் சேனைகள்வந்து தங்கி இருந்தன என்பதாம்.]

இ-ள். சோலைகள்தோறும் - அந்தநாட்டிலுள்ள சோலைகளிலெல்லாமும், நன்னீர்ச் சூளிகைதோறும் - நல்ல ஜலத்தையுடைய குளக்கரைகளிலெல்லாம். தேவர் அகம் - தேவர் கோயில்களிலும், நளினமலர்ப் பெண்கள் - பெண்களாடுகிற நாடக சாலைகளிலும், புறம்பே - ஒதுக்கமான மூலைகளிலும், வெளிமுற்றங்களில் - சிறப்பமைந்த வெளிமுற்றங்களிலும், விசித்திரமான சத்திரங்களிலும் சாலைகளிலும் - பொன்மயமான சத்திர சாலைகளிலும், மன்னவர் சேனை - அரசர்களுடைய சேனைகள் வந்திறங்கின. எ-று.

'தோறும்' எண்ணுப்பொருள்தர வந்ததோர் இடைச்சொல், 'மாடமூலைகள்' ஒதுக்கமான மூலைகளிலும், என்று பொருள் கூறலுமாம். 'ஏமசாலை' பொக்கிஷசாலை என்றும் பொருள் கூறுவர். (சசு)

மானைவென் றடருங் கண்ணாள் மணமகன் வருமுன்வந்த
வேனைய வேந்தர்க் கெல்லா மிமையவர்க் கறியவொண்ணா
யானையுந் தேருமாவு மாதரு மமைச்சர் தாமுஞ்
சேனையு மளவிட் டார்க்குஞ் செப்பலாந் தகைமைத் தன்றே.

[அரிச்சந்திரன் வருதற்குமுன்னே கன்னோசி நாட்டில்வந்த யானை, தேர், குதிரை, காலாள், மந்திரி முதலியவர் கூட்டங்களை எவராலும் அளவிட முடியாது என்றதாம்.]

இ-ள். மானைவென் றடருங் கண்ணாள் - மானை மருட்சியாலே வென்று நெருங்கியுள்ள கண்களையுடையவளான சந்திரவதிக்கு, மணமகன் வருமுன் - மாப்பிள்ளையாகின்ற அரிச்சந்திரன் வருதற்குமுன்னே, வந்த ஏனைய வேந்தர்க் கெல்லாம் - வந்திறங்கிய மற்ற அரசர்களுக்கெல்லாம், இமையவர்க் கறிய வொண்ணா - தேவர்களாலும் அறிந்து சொல்லமுடியாதபடிவந்த, யானையும் - யானைக் கூட்டங்களையும், தேரும் - தேரின் கூட்டங்களும், மாவும் - குதிரைக் கூட்டங்களையும், மாதரும் - பெண்களின் கூட்டங்களையும், அமைச்சர்தாமும் - மந்திரி முதலாயினோர் கூட்டங்களையும், சேனையும் - சைனியங்களின் கூட்டங்களையும், அளவிட்டு - இவ்வளவென்று கணக்கிட்டு, ஆர்க்கும் - எப்படிப் பட்டவர்களுக்கும், செப்பலாம் - சொல்லும்படியான, தகைமைத்து அன்று - அளவுடையதன்று. எ-று. அன்று - ஏ - அசைகள்.

'இமையவர்க்கு அறிய வொண்ணா' என்றதற்கு சுயம்வரத்தை விரும்பி வந்த தேவர்களுக்கும் அறிய முடியாத என்றும் பொருள் கொள்வர். 'இமையவர்' கண் இமைத்தல் செய்யாதவர் என்னும் காரணம்பற்றி வந்தபெயர். உம்மைகள் எண்ணும்மைகள். 'ஆர்க்கும்' 'யார்க்கும்,' என்றதின் மரூஉ. (சஎ)

இந்நகர் முழுது மன்ன ரீண்டிய பின்ன யோத்தி
நன்னகர் தன்னிற் புக்கா நற்றவ முனிவ ரெல்லா
மன்னவ னெழுந் திருந்து வணங்கி வாய்பு தைத்து நீங்கள்
சொன்னதுங்கேட்டவா றுஞ் சொல்லுமென்றெடுத்துரைத்தான்

[நீங்கள் சந்திரதயனிடம் சொல்லியதும் அதற்கு அவன்பதில் சொல்லியதும் கூறுங்கள் என்று அரிச்சந்திரன் முனிவர்களைக் கேட்டான் என்பதாம்.]

இ-ள். இந் நகர்முழுதும் - இந்தப் பட்டணமெல்லாம், மன்னர் - அரசர்கள், ஈண்டியபின் - வந்து கூடினபின்பு, அயோத்தி நல் நகர்தன்னில்- அயோத்தி என்கிற அந்த நல்ல நகரத்திற்குள், நற்றவ முனிவர் எல்லாம் - நல்ல தவத்தையுடைய முனிவர்கள் எல்லோரும், புக்கார் - போனார்கள், மன்னவன்- (அதுகண்டு) அரிச்சந்திரமகாராஜன், எழுந்திருந்து - எழுந்திருந்து, வணங்கி- (வந்து) நமஸ்காரஞ்செய்து, வாய் புதைத்து - தன்கரத்தால் வாயைப்பொத்திக் கொண்டு, நீங்கள் சொன்னதும் - (ஓ முனி சிரேஷ்டர்களே !) நீங்கள் (சந்திரதயனிடத்தில்) சொன்னவைகளும், கேட்டவாறும் - (நீங்கள் சொல்லியதைக் கேட்டுச் சந்திரதயன்) பதில் சொல்லியவிதமும், சொல்லுமென்று - சொல்லுங்களென்று, எடுத்துரைத்தான் - துதிசெய்து கேட்டான். எ-று. (சஅ)

அருந்தவ முனிவ ரெல்லா மரசனை நோக்கி யைய
பெருந்தவ முடையார் மண்ணி னீயலாற் பிறரு முண்டோ
திருந்திழை தனையு னக்கே திருமண முடிக்கத் தாதை
பொருந் தினன் வல்லைநீயு மெம்முடன் போது மென்றார்.

[நீயே உலகில் அதிர்ஷ்டசாலி சந்திரமதியை உனக்குக் கல்யாணஞ்செய்து வைக்க தந்தை சம்மதித்தான் உடனே எம்மோடு புறப்படுவாயாக என்றனர் என்பதாம்.]

இ-ள். அருந்தவ முனிவர் எல்லாம் - (அரிச்சந்திரன் கேட்டதற்கு உத்தரமாக) அருமையான தவத்தைச் செய்துள்ள முனிவர்கள் எல்லோரும், அரசனை நோக்கி - அந்த அரிச்சந்திர மகாராஜனை நோக்கி, ஐய - ஐயா!, மண்ணில்- உலகத்தில், பெருந் தவமுடையார் - பெரிய தவத்தை உடையவர்கள், நீயலால்- நீயல்லாமல், பிறரும் உண்டோ - வேறே சிலரும் இருக்கின்றார்களோ ?, திருந்திழைதனை - திருத்தமாகியகல்லாபரணங்களையணிந்தசந்திரமதியை, உனக்கே- உனக்கே, திருமணமுடிக்க - நீருக் கல்யாணஞ் செய்துமுடிக்க, தாதை - அச்சந்திரமதியின் தகப்பன், பொருந்தினன் - சம்மதியாயினன், வல்லை - விரைவிலே, நீயும் எம்முடன் போதும் என்றார் - நீயும் எங்களுடனே வரக்கடவாயாக என்று கூறினர். எ-று.

'ஐய' என்றது அண்மைவிளி. 'உண்டோ' என்றது எதிர் மறை வினு; இல்லை என்பது பொருள். இதனை விடைதழுவிய வினு எனவுங் கூறுவர்.

'இழை' கல்பதித்த ஆபரணம் இங்கு ஆகுபெயராய் கல்லாபரணத்தையுடைய சந்திரமதியைக் குறித்தது. (சக)

என்றினி துரைத்த லோடு மெழுந்தபே ருவகை வெள்ள
நின்றினி தோங்க வாகு வலயங்க ணிமிர்ந்து நீங்கக்
குன்றினு முயர்ந்த செம்பொற் கோயில்விட் டெழுந்து போந்து
முன்றிலின் வந்து மன்ன னினையன மொழிய லுற்றான்

[அரிச்சந்திரன் சந்தோஷத்தோடு ஆசாரவாசலில்வந்து பின்வருஞ் சில மொழிகள் கூறுகிறான் என்பதாம்.]

இ-ள். என்று இனிது உரைத்தலோடும் - என்றிப்படி முனிவர்கள் சந்தோஷத்தோடு சொன்ன உடனே, மன்னன் - அரிச்சந்திரமன்னன், எழுந்த பேருவகை வெள்ளம் - (மனத்தின்கண்ணே) கிளம்பிய பெரிய சந்தோஷ வெள்ளம், நின்று இனிது ஓங்க - நிலைகொண்டு நன்றாக மேலே பொங்க, வாகுவலயங்கள் நிமிர்ந்து - தோளணியாகிய கேயூரம் தோள்களுக்குப்போதாதபடி நிமிர்ந்து, நீங்க - கையைவிட்டு அகன்றுபோக, குன்றினும் உயர்ந்த - மலையைக்காட்டிலும் உயரமாயிருக்கின்ற, செம்பொற் கோயில் விட்டு - தனது செம்பொன்மயமான அரண்மனையைவிட்டு, எழுந்து போந்து - எழுந்திருந்துபோய், முன்றிலின்வந்து - ஆசாரவாசலிலேவந்து, இனையன - இவ்விதமான (பின்வருமாறு) சிலவார்த்தைகள்; மொழியலுற்றான் - சொல்லத் தொடங்கினான். எ-று.

"வாகுவலயங்க ணிமிர்ந்துநீங்கக் குன்றினும் உயர்ந்த" இதற்கு, வலயங்கள்=தோளணியாகிய கேயூரம், நிமிர்ந்து நீங்க=வளைவுகளெல்லாம் ஒரே நேராகி நிமிர்ந்து சழல, வாகு - தோளானது, குன்றினும் உயர்ந்த=மலையைக்காட்டிலும் பெரிதாக சந்தோஷத்தால் வீங்கிற்று; என்றும் பொருள் கொள்ளலாம். (ருo)

கன்னலங் கழனி வேலிக் கன்னோசி நோக்கி யிவ்வூர்
மன்னரு மமைச்சர் தாமுஞ் சேனையு மாதராரு
முன்னரே செல்க வென்று மொழிந்துசூ தனைக்கண் சாத்தி
வன்னமா மணித்தேர் கொண்டு வருகென வருளிச் செய்தான்.

[அரிச்சந்திரன் அரசர் மந்திரிகள் சேனைகள் முதலிய எல்லோரையும் கன்னோசி நாட்டிற்கு முன்னேபோகும்படிச் சொல்லி தன்தேரைக் கொண்டுவரச் சொன்னான் என்பதாம்.]

இ-ள். கன்னல் அம் கழனி - கரும்புகள் விளைகிற அழகிய வயல்கள், வேலிக் கன்னோசி - வேலியாகச் சூழ்ந்துள்ள கன்னோசி நாட்டிற்கு, இவ்வூர் - இந்த ஊரிலுள்ள, மன்னரும் - அரசர்களும், அமைச்சர்தாமும் - மந்திரிகளும், சேனையும் - சேனைகளும், மாதராரும் - பெண்களும், முன்னரே செல்க - முன்னதாகப்போங்கள், என்று - என்று, மொழிந்து - கட்டளையிட்டு, சூதனை -

தன் தேர்ச்சாரதியை நோக்கி, வன்னமா மணித்தேர் - என்னுடைய அழகிய பெரிய ரத்நகசிதமான தேரை, கொண்டு வருகென - கொண்டுவரக் கடவாயென்று, அருளிச்செய்தான் - உத்தரவு பண்ணினன். எ-று.

'கண்சாத்தல்'—நோக்கல்; உம்மைகள் எண்ணும்மைகள். (ருக)

கலிவிருத்தம்.

மாதங் கமடங் கல்வயப் பரிமா
பூதம் பலதே ரொடுபூண நிறீஇச்
சூதன் கொடுவந் துசுடர்க் கழலோன்
பாதங் களின்மீ துபணிந் தனனே.

[சாரதி தேரைக்கொண்டுவந்து நிறுத்தி அரிச்சந்திரனை வணங்கினன் என்பதாம்.]

இ-ள். சூதன் - சாரதியானவன், மாதங்கம் மடங்கல்வயப்பரிமாபூதம்பல-அனேகம் யானைகளையும், அநேகம் சிங்கங்களையும், அநேகம் வெற்றிபொருந்திய குதிரைகளையும், அநேகம் பூதங்களையும், தேரொடு பூண நிறீஇ - அந்தத் தேரிலே சேரக் கட்டிநிறுத்தி, கொடுவந்து - கொண்டுவந்து, சுடர்க்கழலோன்-பிரகாசம்பொருந்திய வீரக்கழலை அணிந்த அரிச்சந்திர மகாராஜனின், பாதங்களின்மீது - பாதங்களின்மேலே, பணிந்தனனே - விழுந்து நமஸ்கரித்தான். எ-று. ஏ - ஈற்றசை.

'நிறீஇ' என்றது சொல்லிசை யளபெடை இது பெரும்பாலும் மாச்சீர் நான்கு ஓரடிக்கமைந்த கலிவிருத்தம். 'பல' என்பது மாதங்கம், மடங்கல், வயப்பரிமா. பூதம் என்பனவற்றோ டெல்லாம் கூட்டப்பெற்றது. (ருஉ)

வாரே றுசெழுந் தடமா முரசும்
நீரே றியசங் கமுநின் றதிரத்
தாரே றுபுயங் கடதும் பநெடுந்
தேரே றிவிரைந் துசெலுத் தினனே.

[முரசும் அதிரவும் சங்கம் முழங்கவும் அரிச்சந்திரன் தேரேறி விரைவாகச் செலுத்தினன் என்பதாம்.]

இ-ள். வார் ஏறு - தோல் வாரால் இறுகக்கட்டிய, செழுந்தடமா முரசம்-அழகிய விசாலமான பெரிய பேரிகை வாத்தியமும், நீரேறிய - நல்ல தன்மை மிகுந்த, சங்கமும் - சங்கவாத்தியங்களும், நின்று அதிர - நிலைகொண்டுமுழங்க, தாரேறு - மாலைகள்தங்கியுள்ள, புயங்கள் - தோள்கள், ததும்ப - அசைய, நெடுந் தேரேறி - அந்த நெடிய தேரின் மேலேறி, விரைந்து - அதிகவேகமாக, செலுத்தினன் - தேரைச் செலுத்திச் சென்றான். எ-று. ஏ - ஈற்றசை.

'நீரேறிய' என்பதற்கு ஜலத்திலிருந்து ஏறிவந்த, என்றும் பொருள் கொள்ளலாம். "ததும்ப" பூரிக்க, என்றும், பொருள் செய்யலாம். "நெடுந்

தேர்'' நீண்ட அல்லது உயர்ந்த தேர், என்பதாம். அழகு நீண்ட, புகழ்நீண்ட என்பாரும் உண்டு. (ருஉ)

நற்றே ரினை மன் னன டத் திடவே
சுற்றே றநிரைந் தய றுன் னினவால்
குற்றே வல்செயும் பலகொற் றவர்தம்
பொற்றேர் சதகோ டிபொருப் பெனவே.

[அரிச்சந்திரமகாராஜன் தேரினைச்சுற்றி குற்றேவல் செய்யும் பல அரசர்களின் தேர்கள் சூழ்ந்து சென்றன என்பதாம்.]

இ-ள். நற்றேரினை - அந்த நல்லதேரை, மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், நடத்திடவே - செலுத்திக்கொண்டு போகவே, குற்றேவல்செயும்- சிறிய பணிவிடைகள் செய்யும், பல கொற்றவர்தம் - பல அரசர்களுடைய, பொற்றேர் - பொன்மயமான தேர்கள், சதகோடி - நூறுகோடி, பொருப்பென - மலைகள்போல, சுற்று - அரிச்சந்திரமகாராஜனின் தேரைச்சுற்றியும், ஏற நிறைந்து - மிகுதியாக நிறைந்து, அயல் துன்னினவால் - பக்கங்களிலே வந்து நெருங்கின. எ-று. ஆல் - ஏ அசைகள்.

'கொற்றவர்' வெற்றியரசர். 'கொல்' என்னும் பகுதி யடியாகப் பிறந்தது. (ருச)

கவிகைப் படுநீ ழல்கவிப் பமணிச்
சிவிகைத் திரளின் மிசைசென் றனரால்
புவிகைக் கொளமைச் சர்புகழ்ந் தரசைக்
குவிகைத் தலமிட் டொருகோ டியரே.

[அரிச்சந்திரனைச்சூழ்ந்து துதித்துக்கொண்டும் கைகுவித்துக்கொண்டும் மந்திரிமார்கள் பலர் பல்லக்கில் சென்றார் என்பதாம்.]

இ-ள். அரசை - அரிச்சந்திரமகாராஜனை, புகழ்ந்து - துதித்துக்கொண்டும், குவிகை தலமிட்டு - குவித்த காத்துடனும், ஒருகோடியர் - ஒருகோடி பேர்களாகிய, புவிகைக்கொளமைச்சர் - உலகங்களை எல்லாம் தங்கள் கைவசப் படுத்திக்கொண்டிருக்கிற மந்திரிமார்கள், கவிகைப்படு - குடைகளிலிருந்து உண்டாகின்ற, நீழல்கவிப்ப - நிழலானது சூழ்ந்து பொருந்த, மணிச்சிவிகைத் திரளின் மிசைசென்றனர் - ரத்நப் பல்லக்குகளின்மேல் உட்கார்ந்து சென்றார்கள். எ-று. ஆல், ஏ - அசைகள்.

கவிந்து இருத்தலால் "கவிகை" என்று பெயராயிற்று. கவித்தல்= மேலே மூடல். 'நிழல்' எனற்பாலது 'நீழல்' என்றாயது நீட்டல் விகாரம். ()

வன்னக் குவிமா மூலைவல் லியருங்
கன்னற் சிலைவே ளனகா ளைபரு

மன்னத் திரளோ டரியின் றிரள்வந்
தென்னக் கடிதெய் தினரெங் கணுமே.

[அன்னப்பட்சியும் சிங்கமும் கூட்டங்கூட்டமாக வந்ததுபோலப் பெண்களும் ஆடவரும் வந்தார்கள் என்பதாம்.]

இ-ள். வன்னம் - அழகிய, குவிமாமுலை - குவிந்த பெரிய தனங்களையுடைய, வல்லியரும் - வல்லிக்கொடிபோன்ற பெண்களும்; கன்னற்சிலை - கரும்பு வில்லையுடைய, வேளன - மன்மதனை ஒத்த, காளையரும் - யௌவன புருஷர்களும், அன்னத்திரளோடு - அன்னப்பட்சியின் கூட்டங்களோடு, அரியின்றிரள் - சிங்கக்கூட்டங்கள், வந்தென்ன - வந்ததுபோல, எங்கணும் - எல்லாவிடங்களிலும், கடிது எய்தினர் - விரைவாய்வந்து சேர்ந்தார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

வல்லியரும், காளையரும் வந்தது அன்னப்பட்சிகளும் சிங்கங்களும் வந்ததுபோல் இருக்கின்றது என்றமையால் உவமை அணியாம். (கூ)

சிறையோ திமமேல் வருதே வனெனப்
பொறையோ டொளிர்வெண் சிவிகைப் பொலிவுற்
றிறையோ னெடமைச் சரிறைஞ் சிடமா
மறையோ திவசிட் டனும்வந் தனனே.

[வசிட்டரும் கூடவே வேதங்களைச் சொல்லிக்கொண்டு வந்தார் என்பதாம்.]

இ-ள். சிறையோதிமமேல் - இறகையுடைய அன்னவாகனத்தின்மேல், வருதேவனென - வருகிற பிரமதேவனைப்போல், பொறையோடொளிர் - தூக்கிக்கொண்டு வருபவர்களுடனே பிரகாசிக்கின்ற, வெண்சிவிகைப் பொலிவுற்று - வெள்ளைமுத்துப் பல்லக்கிலே விளங்குகிறவராய், இறையோனெடு - அரசர்களோடு, அமைச்சர் - மந்திரிகளும், இறைஞ்சிட - வணங்க, மாமறை ஓதி - பெரியதாகிய வேதங்களைச் சொல்லிக்கொண்டு, வசிட்டனும் - வசிட்ட முனிவரும், வந்தனன் - கூடவே பிரயாணமாய் வந்தார். எ-று. ஏ - ஈற்றசை.

'ஒடு' மூன்றும் வேற்றுமையுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. ()

தரைசேர் கடலொத் தனதா னைகடற்
றிரைபோ லநடந் தனதிண் பரிமா
விரைசே ரருவித் திரள்வீழ் பலமால்
வரைபோ லநடந் தனவா ரணமே.

[சேனை குதிரை யானை இவைகள் கடல்போலவும் அலைபோலவும் மலைபோலவும் சென்றன என்பதாம்.]

இ-ள். தானை - சேனைகள், தரைசேர் - பூமியிலே பொருந்தி யிருக்கின்ற, கடல் ஒத்தன - கடலை ஒப்பாயின; திண் - வலிய, பரிமா - குதிரை

கள், கடல் திரைபோல - கடலிலே கிளர்ந்து வரும் அலைகள்போல, நடந்தன- சென்றன, வாரணம் - யானைகள், விரைசேர் - வாசனை பொருந்திய, அருவித்திரள்வீழ் - அருவிக்கூட்டங்கள் விழுகிற, பல மால்வரைபோல் - பல பெரிய மலைகளைப்போல, நடந்தன - சென்றன. எ-று. ஏ - ஈற்றசை.

"பரிமா" இருபெயரொட்டுப் பண்புத்தொகை 'பரி' குதிரை. பரித்தல் - சுமத்தல், தலைவனைச் சுமந்து விரைந்தோடும் காரணம் பற்றி வந்த பெயர். (ருஅ)

கல்லார் நெறிசெல் வதுகால் கள்பொறா
வெல்லா மிகுவா தனைமே வுமெனுச்
சொல்லா முனமே துறவோர் விரைவிற்
* செல்லா நெறியே றினர்சென் றனரால்.

[முனிவர்கள் எல்லாம் ஆகாய மார்க்கமாகச் சென்றூர்கள் என்பதாம்.]

இ-ள். கல் ஆர் - கற்கள் நிறைந்த, நெறி செல்வது - வழியிற் போவது, கால்கள் பொறா - நமது கால்கள் சகியா, எல்லாம் - குதிரை முதலிய வாகனங்களிற் செல்வதும், மிகும் வாதனை மேவுமெனு - மிகவும் துன்பத்தையே செய்வனவாமென்று, சொல்லாமுனமே - அரசன் சொல்லு முன்னமே, துறவோர் - சந்நியாசிகள், விரைவில் - அதிசீக்கிரத்தில், செல்லாநெறி - ஒருவராலும் போகக்கூடாத ஆகாயமார்க்கம், ஏறினர் சென்றனர் - ஏறிச்சென்றூர்கள். எ-று. ஆல் - அசை.

'செல்லாநெறி' - ஆகாயமார்க்கம். (ருகூ)

பலவெண் குடையும் பவளக் குடையுங்
குலவும் பலசெம் மணியின் குடையு
முலவுங் கதிருஞ் சதகோ டியுலா
நிலவும் மெனவெங் குநிறைந் தனவால்.

[குடைகள் எல்லாம் நூறுகோடி சூரியர்கள் போலவும் பூர்ணச்சந்திரர்கள் போலவும் விளங்கின என்பதாம்.]

இ-ள். பல வெண்குடையும் - அநேகம் வெண்முத்துக் குடைகளும், பவளக்குடையும் - அநேகம் பவளக்குடைகளும், குலவும் - விளங்குகின்ற, பல செம்மணியின் குடையும் - பல செவந்த ரத்நங்களால் செய்யப்பட்ட குடைகளும், உலவும் - ஆகாயத்திலே உலாவுகிற, சதகோடி - நூறுகோடி, கதிரும் - சூரியர்களும், உலாநிலவும் - பூரணச்சந்திரர்களும், என - என்று சொல்லும்படி, எங்கும் நிறைந்தன - எவ்விடத்தும் நிரம்பின. எ-று. ஆல்-அசை.

'பல' வென்றசொல் ஒவ்வொரு குடையோடுங் கூட்டப்பட்டது. 'உம்' மைகள் எண்ணும்மைகள். (சுo)

---

* செல்லாநெறி - ஆகாசமார்க்கம்.

ஆதித் தனருங் குலமன் னவர்தந்
நீதிப் புகழெங் குநிறைந் ததெனச்
சோதிக் கவரித் தொகையுங் கொடியும்
வீதித் தலைதோ றமிடைந் தனவால்.

[சூரியகுலத்தரசர்களின் புகழ்போல் சாமரையும் கொடியும் பரவின என்பதாம்.]

இ-ள். ஆதித்தன் - சூரியனுடைய, அரும் - அருமையான, குலமன்னவர்தம் - குலத்திலே பிறந்த அரசர்களுடைய, நீதிப்புகழ் - நீதியினால் வந்த புகழானது, எங்கும் நிறைந்ததென - எவ்விடத்தும் நிரம்பியதுபோல, சோதி - பிரகாசத்தையுடைய, கவரித்தொகையும் - சாமரைக்கூட்டங்களும், கொடியும் - கொடிகளும், வீதித்தலைதோறும் - இவர்கள் செல்லுகிற வீதிகளின் இடங்களிலெல்லாம், மிடைந்தனவால் - நெருங்கின. எ-று. ஆல்-அசை.

'நீதிப்புகழ்' என்பதற்கு நீதிமார்க்கமான புகழ் என்றுங்கூறுவர். உம்மைகள் எண்ணும்மைகள். 'புகழின்' நிறம் வெண்மை என்று கூறுவர். இது கவிமரபு ஆதலின் கொடியும் சாமரையும் புகழுக்கு உவமம் ஆயிற்று. இது உவமை அணி. (சுக)

காற்றோ டுநிகர்த் தகடும் பரிவா
னேற்றோ டுநிகர்த் தனயா னைவரைக்
கூற்றோ டுநிகர்த் தனதேர் குலவு
மாற்றோ டுநிகர்த் தவனீ கமரோ.

[யானை குதிரை தேர் சேனை இவைகள் முறையே மேகம் வாயு மலை ஆறு இவைகளை ஒத்திருந்தன என்பதாம்.]

இ-ள். கடும்பரி - வேகத்தையுடைய குதிரைகள், காற்றோடு - (வேகத்தால்) வாயுவோடு, நிகர்த்தன - ஒத்தன; யானை - யானைகள், வான் ஏற்றோடு - (தோற்றத்தாலும் தொனியாலும்) மேகத்தையும் அதன் முழக்கத்தையும், நிகர்த்தன - ஒத்தன; தேர் - தேர்கள், வரைக்கூற்றோடு - (உயரத்தினாலும் உருவாலும்) மலைகளின் வெவ்வேறு பகுதிகளை, நிகர்த்தன - ஒத்திருந்தன; அனீகம் - சேனைகள், குலவும் - விளங்குகின்ற, ஆற்றோடு-(ஒழுக்கத்தால்) ஆறுகளை, நிகர்த்த - ஒத்தன. எ-று.

அரோ - அசை. (சுஉ)

மழுவுங் கரவா ளமும்வார் சிலையு
மெழுவுங் குலிசங் களுமே திகளுந்
தொழுவும் வளையும் பலகுந் தமுநீண்
முழுவெஞ் சுடர்வேல் களுமொய்த் தனவால்.

[சேனைகள் கொண்டுசென்ற ஆயுதவகைகளைக் கூறுகின்றார்.]

இ-ள். மழுவும் - (அப்படிச் செல்லுகின்ற சேனைக்கூட்டங்களிலே) மழு வாயுதங்களும், கரவாள்களும் - கைவாள்களும், வார்சிலையும் - நீண்ட விற்களும், எழுவும் - எழுத்தண்டங்களும், குலிசங்களும் - வச்சிராயுதங்களும், மேதிகளும் - பொலிவு மரங்களும், கொழுவும் - கொழுக்களும், வளையும் - சக்கரங்களும், பல குந்தமும் - அநேகம் கைவேல்களும், நீண் - நீண்ட, முழு வெஞ்சுடர் வேல்களும் - முழுதும் வெப்பத்தைக்கொண்ட ஒளிபொருந்திய நீண்ட சூலங்களும், மொய்த்தன - நெருங்கின. எ-று. ஆல் - அசை.

மேதிகள் - தோமரங்களுமாம். (சுங)

மீயுற் றுடனொற் றியவெம் படையின்
வாயுற் றெழுவெம் பொறிமண் டுவநீள்
வேயுற் றபெருங் கிரிமீ தெரியுந்
தீயுற் றனவொத் தனசே ணளவும்.

[ஆயுதங்களின் உராசுதலால் நெருப்பு பொறிபறந்து பற்றி நெருங்குவது மலைகளில் மூங்கில்கள் உராசந்தீப்பற்றி எறிவதுபோல் இருக்கிறது என்பதாம்.]

இ-ள். மீயுற்று - ஆகாயத்தளவும் மேலே நீண்டு, உடன் ஒற்றிய - ஒன்றுடன் ஒன்று மோதுதலாகிய, வெம்படையின் - அந்த வெவ்விதான ஆயுதங்களின், வாயுற்றெழு - வாய்களிலே உண்டாகி எழுகின்ற, வெம்பொறி- வெவ்விய நெருப்புப்பொறிகள், மண்டுவ - நெருங்குவது, நீள்வேயுற்ற-நீண்ட மூங்கில்கள் பொருந்திய, பெருங்கிரிமீது - பெரிய மலைகளின்மேலே, எரியும் - எரிகிற, தீ - நெருப்பு, சேணளவும் - ஆகாயத்தளவும், உற்றன ஒத்தன - பற்றினதை ஒத்து விளங்கின. எ-று.

'மீ' என்பது மேல் இங்கு ஆகாயத்தைக் குறித்தது. "வெம்படை" வெம்மை படை என்றதில் பண்பில் மைகெட்டது. வேய் - மூங்கில், 'சேண்' விசும்பு. (சுச)

நலிவுற் றுநுடங் கிடைநன் னுதலார்
பொலிவுற் றணிதேர் மிசைபோ யினரார்
கலியுற் றெழுநீள் கனகக் கிரிமேல்
மலிவுற் றெழுவஞ் சிகண்மா னுமென.

[தேர்மேல் சென்ற பெண்கள் பொன்மலைமேலிருக்கும் வஞ்சிக்கொடி போன்றிருந்தனர் என்பதாம்.]

இ-ள். ஆர்கலியுற்று எழு - கடலிலே தோன்றி யுயர்ந்திருக்கிற, நீள் கனகக்கிரிமேல் - நீண்ட பொன் மலைகளின்மேலே, மலிவுற்றெழு - மிகுதியாக எழுகின்ற, வஞ்சிகள் மானும் என - வஞ்சிக்கொடிகளை ஒத்திருக்கிறதெனும்படி; நலிவுற்று - வருந்தி; நுடங்கு - துவளுகிற, இடை - இடுப்பைப

யுடைய, நல்நுதலார் - நல்ல நெற்றியையுடைய பெண்கள், பொலிவுற்று - நிறைந்து விளங்குகின்ற, அணி - அழகிய, தேர்மிசை போயினர் - தேரிலே போனார்கள். எ-று.

தேரிலே இருக்கும் பெண்கள் பொன்மலைமேலிருக்கிற வஞ்சிக்கொடிகள் போல விளங்கினர் என்பது இது உவமையணி. 'இடை' தேகத்தின் மத்தியிலிருப்பது குறித்து வந்த காரணப்பெயர். (௬௫)

கருமா முகிலன் னகவின் குழலார்
பெருமால் கரியின் பிடர்மேல் வருமா
றிருமா முகிலுக் கிடையே யெழுமின்
வருமா றுநிகர்த் தனவை யமெலாம்.

[கரிய பெரிய கூந்தலை உடைய பெண்கள் யானையின் மேல்வரும் காட்சி இரண்டு மேகங்களுக்கு மத்தியில்வரும் மின்னல் மறையாது வருவதுபோலிருந்தது என்பதாம்.]

இ-ள். கரு-கருமையான, மாமுகில் - மாட்சிமைபெற்ற மேகம், அன்ன-ஒத்த, கவின்குழலார் - பிரகாசிக்கின்ற கூந்தலை உடைய பெண்கள், பெரும்-பெரிய, மால்கரியின் - கருத்த நிறத்தையுடைய யானையின், பிடர்மேல்-பிடரியின்மேல், வரும் ஆறு - வரும் விதமானது, இருமாமுகிலுக்கிடையே-இரண்டு பெரிய மேகங்களுக்கு மத்தியில், எழும் - தோன்றுகின்ற, மின்-மின்னலானது, வருமாறு - மறையாமல் விளங்கிக்கொண்டு வருந்தன்மையை, நிகர்த்தன வையமெலாம் - அவர்கள் செல்லுமிடங்களிலெல்லாம் ஒத்துத் தோன்றின. எ-று.

'கவின்' அழகு என்றும் பொருள் கொள்ளலாம், 'வையம்' பொருள்களிருப்பதற் கிடமாயிருப்பது என்னும் காரணம் பற்றி வந்தபெயர். (௬௬)

விலையுன் னரிதா கியவெம் பரிமேற்
சிலைநன் னுதலார் பலர்சென் றனரா
லுலையும் புனல்வா ரியினூதையினா
லலையுந் திரைமேல் வருமன் னமெனா.

[நீர் அலைமேல் வருகின்ற அன்னப்பட்சிகள்போல பெண்கள் குதிரைகள்மேல் வந்தார்கள் என்பதாம்.]

இ-ள். உலையும் - தளும்புகின்ற, புனல்வரியில் - நீரையுடைய கடலில், ஊதையினால் - காற்றினால், அலையுந்திரைமேல் - கிளருகின்ற அலையின் மேலே, வரும் அன்னம் என - வருகின்ற அன்னப்பட்சிகள்போல, சிலை - வில்லை ஒத்த, நன்னுதலார் - நல்ல நெற்றியையுடைய பெண்கள், பலர் - பலபேர், விலையுன்னரிதாகிய - விலைமதிக்கக்கூடாத, வெம்பரிமேல்-வேகத்தையுடைய குதிரைகளின்மேல், சென்றனர்-ஏறிச்சென்றார்கள். எ-று.

'வாரி' 'வார்' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. (வார் - நீட்சி.) ()

பரிதுன்ன நெடும்படை துன்னமத
கரிதுன்ன விழிந்து கடந்தனனால்
விரிகின்ற செழுஞ்சுடர் வெண்டாளஞ்
சரிகின்ற புனற்சர யுத்தனையே.

[வாகனத்தை விட்டிறங்கி நடந்து சரயுநதியைக் கடந்தான் என்பதாம்.]

இ-ள். விரிகின்ற - விரிவான, செழும் சுடர் - செழுமையுள்ள ஒளியை யுடைய, வெண்தாளம் - வெண்முத்துக்கள், சரிகின்ற - ஒதுங்குகின்ற, புனல் சரயுத்தனை - நீரையுடைய சரயுநதியை, பரிதுன்ன - குதிரைகளிறங் கிச்செல்லவும், நெடும்படைதுன்ன - நெடிய சேனைகள் இறங்கிச்செல்லவும், மதகரிதுன்ன - மதயானைகள் இறங்கிச்செல்லவும், இழிந்து - தானும் வாக னத்தைவிட்டு இறங்கி, கடந்தனன் - நடந்து போயினான். எ-று. ஆல், ஏ- அசைகள்.

"சரயுநதி" தெய்வத்தன்மை யுடையதாதலின் வாகனத்தேறிச்செல்லு தல் கூடாதென்று வாகனம் விட்டிழிந்து நடந்து சென்றான்போலும். (கூஅ)

விரையேறிய தார்புனை வேலிறைவ
னிறையேறு மனீக நெருக்குதலாற்
றரையேறிய தண்புன றள்ளநெடுங்
கரையேறிய வாளை கணக்கிலவே.

[அரிச்சந்திரன்சேனை தண்ணீரில் நெருங்கிச்செல்வதால் கரை ஏறிய வாளை மீன்களுக்குக் கணக்கில்லை என்பதாம்.]

இ-ள். விரை - பரிமளம், ஏறிய - மிகுவதான, தார்புனை - மாலை யணிந்த, வேல் இறைவன் - வேலைத்தாங்கிய அரிச்சந்திர மகாராஜனுடைய, நிறை ஏறும் அனீகம் - வரிசை வரிசையாகக் கரை ஏறுகிற சேனைகள், நெருக் குதலால் - நெருக்குகிறதினாலே, தரையேறிய தண்புனல் - நிலத்துக்குமேலே ஏறிப்பெருகுவதான குளிர்ந்த நீரானது, தள்ள - மோதிவீச, நெடுங்கரை ஏறிய வாளை - நீண்ட கரைமேலே ஏறியவாளை மச்சங்களுக்கு, கணக்கில - கணக்கில்லை. எ-று. ஏ - ஈற்றசை.

'வேல்' ஆயுதங்களுக்குப் பொதுப்பெயர். வெல்லுவது என்னுங் கார ணம் பற்றி வந்த பெயர். (கூகூ)

அரியன் னவர்பின் னனையார்கடன
நெறியும்படி துன்னி நெருக்குதலாற்
பரியும்பணி மாலைகள் பார்க்கிலர்கீழ்ச்
சரியும்மணி மேகலை தாமறியார்.

[பெண்கள் ஆடவர்கள் நெருக்குதலினுல் அற்று உதிரும் முத்துமாலையையும்
கீழே சரிந்துவிழும் மணிமேகலையையும் கவனியார்
என்பதாம்.]

இ-ள். அரியன்னவர் - சிங்கங்களை ஒத்த புருஷர்கள், மின்னனையார்கள்-மின்னலையொத்த பெண்களுடைய, தனநெரியும்படி - கொங்கைகள் பிதுங்கும் படி, துன்னி நெருக்குதலால் - கிட்டிவந்து நெருக்குதலினுலே, பரியும் பணி மாலை பார்க்கிலர் - அற்று உதிரும் முத்துமாலைகளை அப்பெண்கள் நோக்கினூர்களில்லை, கீழ் சரியும் - பின்னும் கீழே சரிந்து விழுகின்ற, மணிமேகலை தாம் அறியார் - மணிமேகலைகளையும் தாங்களறியாமற் செல்கின்றூர்கள். எ-று.

அரனுர்முனியா மதனன் னவர்தோட்
பரநாரியர் கொங்கை படப்படமு
னொருநாளுளவா நிறையொண் ணுதல்பால்
வருநாண் மனுநீதி வழங்கியதால்.

[ஆடவர் தோள் பெண்கள் கொங்கையில் நெருக்க மிகுதியால் பட்டது
இது தோஷமுடையதல்ல என்பதாம்.]

இ-ள். அரனுர் - சிவபெருமான், முனியா - கோபித்தெரிக்காத, மதன்-மன்மதனை, அன்னவர் - ஒத்த ஆடவர்கள், தோள் - தோளானது, பரநாரியர்-அன்னியர் மனைவிகளினுடைய, கொங்கை படப்பட - தனங்கள் (சந்தடி நெருக்கத்தினுலே) மோதமோதச் செல்லுகிறதினுலே, முன் ஒருநாளுளவா - முன் ஒருநாளாயினும் அழியாத, நிறை ஒண் ணுதல்பால் - கற்புள்ள அழகிய நெற்றியையுடைய பெண்களிடத்து, வருநாள் - இப்பொழுது கலியாணத்திற்கு வருகிற நாளிலே, மனுநீதி வழங்கிலதால் - பரபுருஷர்களுடைய தோள்களிலே பெண்களின் கொங்கைகள் படலாகாவென்று மனுஸ்மிருதி கூற வில்லை. எ-று.

'படப்பட' மிகுதிப்பொருளில் அடுக்கி வந்தது. கூட்டத்தில் பரபுருஷர்கள் தோள் பெண்கள் மேற்படுதல் குற்றமென்று மனுஸ்மிருதியில் குறிக்க வில்லை என்பதாம். (எக)

வெளிறுஞ் சுடர்வே லிளவேளனையான்
பிளிறுங் கரிதுள்ள விழுந்துபெயர்ந்
தொளிறுந் தனவல்லி பொருத்தியையக்
களிறென் றிருகைகொடு கட்டினனே.

[யானையினின்றும் தவறி விழுந்த ஒருபெண்ணை முலைகளைக்கண்டு
யானையென்று மயங்கிக் கைகளாற் கட்டினன் என்பதாம்.]

இ-ள். வெளிறும் - வெண்மையான, சுடர்வேல் - ஒளியை உடைய வேலைக்கொண்ட, இளவேல் அனையான் - முருகக்கடவுளை ஒத்த ஒருவன் பிளிறும் - கர்ச்சிக்கின்ற, கரிதுள்ள - யானை வெருண்டசைய, விழுந்து

பெயர்ந்து ஒளிரும் - கீழே விழுந்து புரண்டு விளங்குவதான, தனவல்லி ஒருத்தியை - கொங்கைகளையுடைய கொடி போல்பவளான ஒருத்தியை, களிறென்று - யானையென்று, இரு கைகொடு - இரண்டு கைகளையும் கொண்டு, கட்டினன் - அந்த யானையாமென்று கட்டினான். எ-று. ஏ - ஈற்றசை.

"சுடர்வேல் இளவேள்" என்றமையால் முருகக்கடவுள் என்றும். வேலைக்கொண்ட மன்மதனையொத்த ஒருவன், என்று பொருள் கூறினாரும் உண்டு. வல்லி என்றதே உவமை ஆகுபெயராய்ப் பெண்ணைக் குறிக்குமாயினும் தனங்களைக்கொண்டு யானையென மருள நேர்ந்ததென்பதைக் குறிப்பிக்கவே தனவல்லி என்றார். தனங்களை யானையென மருண்டது மயக்கவணியாம். தனவல்லி இனம் விலக்கவந்த அடைமொழி. (எஉ)

ஆடுங்கழன்மன் னனனேக ருட
னாடுந்தருவும் பலநண் ணிநெடுங்
காடுங்கிரியும் பலகண்டுநடந்
தோடுங்குளிர்கோ மதியுற்றனனால்.

[இந்தவிதமாக நாடுகளையும் சோலைகளையும் காடுகளையும் மலைகளையும் கடந்து கோமதி ஆற்றைவந்து கிட்டினான் என்பதாம்.]

இ-ள். ஆடுங்கழல் மன்னன் - அசைகின்ற வீரக்கழலையுடைய அரிச்சந்திரமகாராஜன், அநேகருடன் - இவ்வாறு அநேகம் பெயர்களுடன், நாடுந்தருவும் பல நண்ணி - அநேக நாடுகளையும் அநேக மாமடர்ந்த சோலைகளையும் தாண்டி, நெடுங்காடும் - பெரிய காடுகளையும், கிரியும் - மலைகளையும், பல கண்டு நடந்து-பலவற்றைக்கண்டு அவைகளைக் கடந்துபோய், ஓடும்-ஓடுகின்ற, குளிர்கோமதி - குளிர்ந்த புனலையுடைய கோமதியாற்றை, உற்றனன் - சேர்ந்தான். எ-று. ஆல் - அசை.

'தருவும்' என்றது ஆகுபெயராய்ச் சோலையைக் குறித்தது. உம்மைகள் எண்ணும்மைகள். (எங)

மேற்படி வேறு.

கானயாறனைத்தையுங் கடந்துகௌசிக
மானயாறுயகோ மதியைநண்ணியே
யானையுமிரதமு மிவுளியீட்டமுஞ்
சேனையுமன்னனுஞ் சென்றிருந்தவே.

[கௌசிக நதியருகில்போய் யானை, தேர், குதிரை சேனைமுதலிய எல்லாம் தங்கின என்பதாம்.]

இ-ள். கானயாறு அனைத்தையும் - காட்டாறுகள் எல்லாவற்றையும், கடந்து - தாண்டி, கௌசிகமானயாறுய - கௌசிகை என்னும் பெயர்கொண்ட சிறந்த ஆறாகிய, கோமதியை நண்ணியே - கோமதியாற்றை அடுத்து, யானையும் - யானைகளும், இரதமும் - தேர்களும், இவுளியீட்டமும் - குதிரைக்கூட்

டங்களும், சேனையும் - சைனியங்களும், மன்னனும் - அரிச்சந்திர மகாராஜனும், சென்று இறுத்தவே - போய் இறங்கலாயின. எ-று. ஏ - ஈற்றசை.

'கானயாறு' காட்டாறு. இதை கானங்களையும் ஆறுகளையும் என்றும் பொருள் கூறுவர். "மானம்"=பெருமை, 'ஆறு' யாறு என்றது போலி. இது பெரும்பாலும் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் விளச்சீர் என நாலு சீர்கொண்ட அடிகளால் வந்த கலிவிருத்தம். (எச)

தோய்கதிர்வேற்படை சூழ்ந்து துன்னிட
வாய்கதிர்முடியின னாற்றைநண்ணினன்
பாய்கதிர்ப்படலையுட் சுருக்கிப்பையவே
காய்கதிர்ச்செல்வனுங் கடலைநண்ணினன்.

[அரிச்சந்திரன் கோமதி ஆற்றினருகே போயிறங்கினன்
சூரியனும் அஸ்தமனமாயினன் என்றதாம்.]

இ-ள். தோய்கதிர் - ஒளிதோய்ந்த, வேற்படை - வேலாயுதங்களையுடைய சேனைகள், சூழ்ந்து துன்னிட - எங்கும் சுற்றி நெருங்க, வாய்கதிர் - பொருந்திய பிரகாசத்தையுடைய, முடியினன் - கிரீடமணிந்த அரிச்சந்திரமன்னனும், ஆற்றை நண்ணினன் - அந்தக் கோமதியாற்றினருகே போயிறங்கினன்; பாய்கதிர்ப்படலை - (அப்பொழுது) எங்கும் பாவுவனவாகிய கிரணக்கூட்டங்களை, உள் சுருக்கி - தன்னுள்ளேசுருக்கிக்கொண்டு, பையவே-மெதுவாக, காய்கதிர்ச் செல்வனும் - சுடுகிற ஒளியால் மிக்க சூரியனும், கடலை நண்ணினன்-மேலைக் கடலிலே போய் இறங்கினன். எ-று.

'தோய்தல்' பொருந்துதல். வேல் - வெல்லுவதுவேல். ஆயுதப்பொது. 'படை' சேனை படு என்னும் பகுதியடியாகப் பிறந்தது, 'படு' அழிப்பது. சத்துருக்களை அழிக்கின்றபடியால் ஆயுதத்திற்குப் பெயராய் பின் ஆயுதம் தாங்கிய சேனைக்காயது ஆகுபெயர். எருகதிர்ச்செல்வனும் என்றதில் உள்ள உம்மை இறந்தது தழீய எச்ச உம்மை அரசன் ஆற்றை அடைந்தால் சூரியனும் மேலைக் கடலை அடைந்தான் என்பதாம். அதாவது அஸ்தமனமாயிற்று என்பதாம். (எரு)

ஆழவேழ்கருங்கடலதனின்வெய்யவன்
வீழலுமன்னனும் வேந்தர்மக்களு
மேழையர்யாவரு மிரதமுங்கட
வேழமுஞ்சிவிகையும் விட்டிறங்கினர்.

[சூரியன் அஸ்தமித்த உடனே அரசன் முதலியவர்கள் யானை, தேர்,
பல்லக்கு முதலியவற்றை விட்டிறங்கினர்கள் என்பதாம்.]

இ-ள். ஆழ - ஆழத்தையுடைய, எழ் - அலை எழுகின்ற, கருங்கடலதனில் - கறுத்த மேலைச்சமுத்திரத்திலே, வெய்யவன் - சூரியன், வீழலும்- போய் மூழ்கினவுடனே, மன்னனும் - அரிச்சந்திரமகாராஜனும், வேந்தர் - மற்றுமுள்ள அரசர்களும், மக்களும் - ஆடவர்களும், ஏழையர் யாவரும் - பெண்

கள்ளேல்லோரும், இரதமும் - இரதங்களையும், கடவேழமும் - மதப்பெருகுகின்ற யானையையும், சிவிகையும் - பல்லக்கையும், விட்டு - விட்டு, இறங்கினர்-இறங்கினார்கள். எ-று.

'எழு' என்றது எழு என்றாயது நீட்டல் விகாரம் 'எழ்' என்பதற்கு எழுகடலுக்குள் என்று பொருள் கொள்ளுதல் பொருந்தாது. எழுகடலுக்கு அப்பாலுள்ள மேலைக் கடல் என்றும் பொருள் கொள்வர். உம்மைகள் எண்ணும்மைகள். (எசு)

மண்டலவேந்தரு மாதரீட்டமுந்
திண்டிறலமைச்சருஞ் சேனைவெள்ளமுந்
தண்டரளம்வளை தவழுமாநதி
வண்டலிலிடமற வந்திறுத்தவே.

[அரசர் முதலாயவர்கள் கோமதிக்கரையில் நெருக்கமாய் வந்து தங்கினார்கள் என்பதாம்.]

இ-ள். மண்டலவேந்தரும் - உலகத்தரசர்களும், மாதரீட்டமும் - அவர்களுடைய பெண்களின் கூட்டமும், திண்டிறலமைச்சரும் - மிகுந்த புத்தி வல்லமையையுடைய மந்திரிகளும், சேனைவெள்ளமும் - சேனையின் கூட்டமும், தண்தாளம் - தண்ணிதான முத்துக்களைத் தருகின்ற, வளை - சங்குகள், தவழும் - தவழுகின்ற, மாநதி - அந்தக்கோமதி என்கின்ற பெரிய நதியின், வண்டலில் - கரையில் மணல்களில், இடமற - வெற்றிடமில்லாதிருக்கும்படி, வந்து இறுத்த - வந்திறங்கின. எ-று. ஏ - ஈற்றசை.

'வெள்ளம்' மிகுதி என்பது. உம்மைகள் எண்ணும்மைகள். (எஎ)

பட்டினுமணியினும் படங்கமைத்துவிண்
முட்டியசெம்பொனின் முடிகள்வைத்துமேற்
கட்டியும்பதாகையுங் கட்டிநீடிரை
விட்டனர்மன்னரு மின்னனாருமே.

[அரசரும் அவர் பெண்களும் பட்டாலும் மணியினாலும் செய்த கூடாரங்கள் அமைத்தார்கள் என்பதாம்.]

இ-ள். மன்னரும் - அரசர்களும், மின்னனாரும் - அவர்களுடைய மின்னலை ஒத்த பெண்களும், பட்டினும் - பட்டினாலும், மணியினும் - மணிகளாலும், படங்கு அமைத்து - (செய்துள்ள) கூடாரங்களை நிறுத்தி, விண்முட்டிய - ஆகாயத்தை அளாவியிருக்கின்ற, செம்பொனின் முடிகள் வைத்து - செம்பொன்னாலாகிய சிகரங்கள் வைத்து, மேற்கட்டியும் - மேற்கட்டிகளும், பதாகையும் கட்டி - கொடிகளுங்கட்டி, நீள் திரைவிட்டனர் - நீண்ட திரைகளும் சூழவிட்டார்கள். எ-று. ஏ - ஈற்றசை. (எஅ)

சண்பகத்தருவினுஞ் சந்தனத்தினுந்
திண்பனையகிலினுந் தேவதாரத்துந்

தண்பரும்பலவினுந் தாறுபாய்பசும்
புண்படுகரிகளும் பரியும்பூட்டினர்.

[சந்தனமரம் அகில் மரம் முதலிய மரங்களிலே யானையையும்
குதிரைகளையும் கட்டினார்கள் என்பதாம்.]

இ-ள். சண்பகத்தருவினும் - சண்பகமரங்களிலும், சந்தனத்தினும் - சந்தன மரங்களிலும், திண்பணை - வலிய கிளைகளையுடைய, அகிலினும் - அகில் மரங்களிலும், தேவதாரத்தும் - தேவதாரமரங்களிலும், தண்பரும் பலவினும்-தண்ணிதாய்ப் பருத்துள்ள பலாமரங்களிலும், தாறுபாய் - அங்குசம் பாய்தலினாலே, பசும்புண்படு - பசிய ரணம்பொருந்திய, கரிகளும் - யானைகளையும், பரியும் - குதிரைகளையும், பூட்டினர் - கட்டினர்கள். எ-று. (எகூ)

நிலைமரம்பிளந்திட நிவந்துகுத்திய
கொலைமதயானையின் கோடுபோலவே
சிலைமதனனையவர் மார்பிற்றேனனார்
முலைமதயானையின் கோடுமூழ்கின.

[நிலத்தமரத்தைப் பிளக்கும் யானைக்கொம்புபோல் பெண்களின்
முலைகள் ஆடவர்கள் மார்பில் அழுந்தின என்பதாம்.]

இ-ள். நிலைமரம் பிளந்திட - அங்கே நிற்கிற மரங்கள் பிளக்க, நிவந்து குத்திய - உயர்ந்து குத்தின, கொலைமதயானையின் - கொலைசெய்கிற மதயானையின், கோடுபோலவே - கொம்பு போல்வனவாய், சிலைமதனனையவர்-கரும்பு வில்லையுடைய மன்மதனை ஒத்த ஆடவர்களின், மார்பில் - மார்பிலே, தேனனார் - தேன்போலும் வசனத்தையுடைய பெண்களின், முலைமதயானையின்-முலையாகிய மதயானையின், கோடு மூழ்கின - கொம்புகள் அழுந்தலாயின. எ-று. யானைக்கொம்புகளை முலைகளுக்கு உவமையாகக்கூறினர். இது உவமையணி. (அ0)

மோதுகொண்டலைப்பொரு மூரியானைதம்
மீதுகொண்டலைத்தமெய்ம் மெலிவுமாறவே
தாதுகொண்டலைகுழற் றைபலார்முலை
வேதுகொண்டொற்றினர் வீரர்மீதெலாம்.

[ஆனையைச்செலுத்தும் வீரர்கள் உடல்மெலிவுதீர பெண்கள்
தம்முலைவேதுகள் ஒற்றினர்கள் என்பதாம்.]

இ-ள். மோது - கடலிலே மோதுவதான, கொண்டலை - மேகத்தை, பொரு - ஒத்த, மூரியானைமீது அலைத்த - வலிய யானையின்மேலே இருந்துகொண்டு பகைவர்கள்மேல் செலுத்தின, மெய்மெலிவுமாற - ஆடவர்களின் தேகமெலிவுதிரும்படி, தாதுகொண்டு - மெல்லியபராகங்களைக்கொண்டு, அலை- மலர்களசைகிற, குழல்தையலார் - கூந்தலையுடைய பெண்கள், முலைவேது

கொண்டு - தங்கள் தனங்களாகிய வெம்மையைக்கொண்டு, வீரர் மீதெலாம் - அந்த வீரர்கள் உடம்பெல்லாம், ஒறினர் - ஒற்றுதல் செய்தார்கள். எ-று.

'தையல்' என்பது அழகு என்பது பொருள் இது ஆகுபெயராய் அழகை யுடைய பெண்களைக் குறிக்கின்றது. (அக)

அகிலொடுசந்தனத் துணியினாக்கிடு
துகில்பொதிமணிபுரை யெரியுந்தூமமுந்
திகிலெனப்பலபல செக்கர்வானம்வெண்
முகில்பொதிந்தனவென மூண்டெழுந்தவே.

[அகில் சந்தனம் இவைகளில் மூட்டிய நெருப்பும் புகையும் செவ்வானம் வெள்ளைமேகத்தில் மூடியதுபோல் மூண்டெழுந்தது.]

இ-ள். அகிலொடு - அகிற் கட்டைகளுடனே, சந்தனத்துணியின் - சந்தனக்கட்டைகளின் துண்டுகளாலும், ஆக்கிடு - மூட்டியுண்டாக்கிய, துகில் பொதிமணி - சீலையிலே முடிந்துள்ள செம்மணியை, புரை - ஒத்த, எரியும் தூமமும் - நெருப்பும் புகையும், திகிலென - கண்டவர்கள் நெஞ்சு திடுக்கிட, பல பல செக்கர் வானம் - அநேகமான செவ்வானமானது, வெண்முகில் பொதிந்தனவென - வெள்ளிய மேகத்தினால் மூடப்பட்டதுபோல், மூண்டெழுந்த - மேன்மேலாய்க் கிளர்ந்தன. எ-று. ஏ - ஈற்றசை. (அஉ)

ஆறிலாதணிபடங் கத்துளேற்றிய
மாறிலாத்துளங்கெழின் மணிவிளக்கொளி
தேறலாந்தகைமைய சிலம்பிநூல்பொதி
தூறெலாமின்மினித் தோற்றமென்னவே.

[கூடாரங்களில் எரிகிற விளக்குகள் சிலந்திப்பூச்சியின் கூட்டில் மின்மினிகள் விளங்குவதுபோல் இருந்தன என்பதாம்.]

இ-ள். ஆறிலாத - (புகுதற்குவிட்ட வழியல்லது வேறு) வழிகளில்லாமல், அணிப்படங்கத்துள் - எங்கும் நிரம்பி யிருக்கும் கூடாரத்துள், ஏற்றிய - ஏற்றிவைத்திருக்கிற, மாறிலா - காற்றாகிய பகையில்லாமல் விளங்குகின்ற, எழில்மணி விளக்கொளி - அழகையுடைய ரத்தினவிளக்குகளின் பிரகாசமானது, சிலம்பி நூல்பொதி தூறெலாம் - சிலம்பிப்பூச்சியினாலே கட்டப்பட்ட நூற்படலைகள் முழுதும், மின்மினி - மின்மினிப் பூச்சிகளின், தோற்றம் என்ன - தோற்றமென்று, தேறலாம் தகைமைய - துணிந்து சொல்லலாகிய தகுதியுடையது. எ-று. ஏ - ஈற்றசை. (அங)

குசைநெடுங்கடும்பரிக் கோற்றமன்னவன்
வசையிலாநங்குல மடந்தைமாமுலைக்
கிசைவனேவென் றவந் தெட்டிப்பார்த்தெனத்
திசையெலாங்கதிர்விரித் தெழுந்ததிங்களே.

[சந்திரன், நம் குலமடந்தையின் முலைகளுக்கு இவ்வரிச்சந்திரன் தக்கவனோ என்று எட்டிப்பார்ப்பதுபோல் உதயமாயினான் என்பதாம்.]

இ-ள். குசைநெடும் கடும்பரி - கடிவாளத்தையுடைய நீண்ட வேகமான குதிரை (மேலேறும்), கொற்ற மன்னவன் - ஜெயத்தைக்கொண்ட அரிச்சந்திர மகாராஜனானவன், வசையிலா நம் குலமடந்தை - யாதொரு பழிப்புமில்லாத நம்முடைய குலத்திலே பிறந்த சந்திரவதியினுடைய, மாமுலைக்கு இசைவனோவென்று - பெரிய தனங்களுக்குத் தகுந்தவனோவென்று, வந்து எட்டிப் பார்ப்பதெனெ - வந்து அரிச்சந்திரனை எட்டிப்பார்ப்பதுபோல், திசை எலாம் கதிர் விரித்து - எட்டுத் திக்குகளிலும் தனது கிரணங்களை விரித்துக்கொண்டு, எழுந்த திங்கள் - சந்திரன் உதயமாயினான். எ-று. ஏ - ஈற்றசை.

'குசை' கடிவாளம் "நெடுங்கடும்" என்றதை மீமிசைச் சொல்லாகக் கொண்டு வேகமுடைய, என்றும் பொருள்கொள்வர்.

'கொற்றம்' கொல் என்னும் பகுதியடியாகப் பிறந்தது. 'கொன்றதின் மேலாகிய புகழ்' என்று பொருளாம். 'மடந்தை' பெண்களின் பருவப்பெயர் அப்பருவத்தையுடைய பெண்களது ஆகுபெயர். சந்திரன் உதயத்தை, நளன் நம் குலமடந்தையின் முலைகளுக்குத் தக்கவனோவென்று எட்டிப்பார்ப்பதாகக் கூறியது. தற்குறிப்பேற்ற அணி. (அச)

செங்கயலனையகட் டெரிவைதன்றிரு
மங்கலமுணர்ந்துமண் மடந்தையட்டதோர்
பங்கமிலிரசிதப் பானையேல்வழி
பொங்கலிற்புதுநிலாப் பொலிந்ததெங்குமே.

[நிலவின் கதிர்கள் விளங்குதல் கல்யாணத்திற்கு பூமாதேவி சமைத்த பால்பொங்கல் வெள்ளிப்பாத்திரத்திருந்து வழிவதுபோல் இருந்தது என்பதாம்.]

இ-ள். செம்கயல் அனைய - செவந்த கெண்டைமீனை யொத்த, கண் தெரிவைதன் - கண்ணையுடைய சந்திரவதியின், திருமங்கல முணர்ந்து- திருக்கல்யாணத்தைத் தெரிந்து, மண்மடந்தை - பூமாதேவி, அட்டதோர்- சமையல் செய்ததாகிய ஒரு, பங்கமில் இரசிதப்பானை - ஒரு தோஷமுமில்லாத வெள்ளிப்பானையினுடைய, மேல்வழி பொங்கலில் - மேலே விரிந்து வழிந்து பொங்குகிற பாற்பொங்கல்போல், எங்கும் - எல்லா இடங்களிலும், புதுநிலா பொலிந்த - புதிதாகிய சந்திரிகை நிறைந்து விளங்கின. எ-று. ஏ - ஈற்றசை.

'புதுநிலா' என்றது பூரணச்சந்திரனை, சந்திரனை வெள்ளிப்பானைக்கும், நிலவின் கதிர்விரிவைப்பால்பொங்கலுக்கும் உவமித்தார். அதற்கேற்ப பூமியை சமைப்பவளாக்கினார் இது முற்றுருவக அணி. (அரு)

பெருத்தவானிலவிடைப் பேதைமாதரைக்
கருத்துறக்காதலர் கலந்துறங்கினர்

வருத்தமுங்காதலும் வளரமன்னவ
னொருத்தனேதனிக்கிடந் துறக்கநீங்கினன்.

[எல்லோரும், தங்கள் மாதரைக்கூடிப் பின் உறங்கினார்கள் அரிச்சந்திரன் ஒருவனே மனவருத்தமும் ஆசையும் வளர உறக்கமுமின்றிப் படுத்துக்கிடந்தான் என்பதாம்.]

இ-ள். பெருத்தவான் நிலவிடை - அப்படிப்பாவின சிறந்த நிலாவின் பிரகாசத்திலே, பேதை மாதரை - பேதமைக் குணத்தையுடைய பெண்களை, கருத்துற - அவர்கள் கருத்து ஒருமிக்கச்செய்து, காதலர்கலந்து உறங்கினர்- அப்பெண்களின் நாயகர்கள் கூடிப் பின் நித்திரை செய்தார்கள், மன்னவன் ஒருத்தனே - அரிச்சந்திரமகாராஜன் ஒருவனே, வருத்தமும் காதலும் வளர- மனவருத்தமும் ஆசையும் மேன்மேல் வளர, தனிகிடந்து-தனியாகப்படுத்து, உறக்க நீங்கினன் - நித்திரை யில்லாதிருந்தான். எ-று.

'ஒருத்தனே' என்றதில் 'ஏ' காரம் பிரிநிலைப் பொருளது. 'பேதமை' மாதர் குணங்கள் நான்கிலொன்று இதை மடம் என்றும் கூறுவம். ஔவையும் "பேதமை என்பது மாதர்க்கணிகலம்" என்றார். பேதமையாவது அறியாமை, இதனைக் "கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை" என்றார். உரையாசிரியரும். (அசு)

உருவெளிநோக்குவ னுவப்பனுன்னுவன்
கரவினாலேங்குவன் கலங்குவன்மதி
மாபினடன்கணென் மனதுபோம்வழி
யிரவுபோதற்கிட மில்லையோவென்பான்.

[அரிச்சந்திரன் இந்த இராத்திரி போகவில்லையே என்று துக்கித்தான் என்பதாம்.]

இ-ள். உருவெளி - (அப்படி நித்திரைகொள்ளாமல்) சந்திரவதியினுடைய உருவெளித்தோற்றத்தை, நோக்குவன் - பார்ப்பான்; உவப்பன் - சந்தோஷிப்பான், உன்னுவன் - அதையேபற்றிக் கருதுவன். கரவினால் ஏங்குவன் - அந்த உருவெளித் தோற்றம் மறையும்போழ்து அது மறைவதனால் துக்கிப்பான், மதி மாபினள் தன் கண் - சந்திர குலத்தினளாகிய சந்திரவதியினிடத்திலே, என் மனதுபோம்வழி - எனது மனது போவதாகிய வழியிலே, இரவுபோதற்கு - (எனக்குத் துன்பத்தை உண்டாக்கும் இந்த) ராத்திரியானது போதற்கு, இடம் இல்லையோ - இடம் இல்லாமற் போயிற்றோ, என்பான்- என்று புலம்புவான். எ-று.

காமிகளுக்குத் துன்பமுண்டாக்கும் பத்துப்பொருள்களில் இரவும் ஒன்றாதலின் அரிச்சந்திரன் பெரிதும் காதல் நோயால் வருந்தி இரவு நீட்டித்ததற்கு இரங்கினன் என்பதாம். இல்லையோ என்றதில் உள்ள ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. (அஎ)

கொடியமாமதனையுங் கொழுநிலாவையு
நொடியினுமொருகுறை சொல்லிநோகிலான்
படிகிலாவிழியையும் பாரில்வேர்நிறீஇ
விடிகிலாவிரவையும் வெறுக்கும்வேளையில்.

[மன்மதன்மேலும் நிலாவின்மேலும் குறைகூருது தூங்காத கண்ணையும் நீங்காத இரவையும் வெறுக்கும் சமயத்தில், என்பதாம்.]

இ-ள். கொடியமா மதனையும் - கொடுமையை உடைய பெரிய மன்மதனையும், கொழுநிலாவையும் - செழுமையான சந்திரனையும், நொடியினும்- ஒரு நொடிப்பொழுதாயினும், ஒரு குறைசொல்லி நோகிலான் - ஏதாகிலும் ஒரு குறையையாகிலும் சொல்லி நொந்து கொள்ளாதவனுகி; படிகிலா விழியையும் - தூங்காத கண்களையும், பாரில் வேர்நிறீஇ-உலகத்திலே வேரூன்றி, விடிகிலா இரவையும் - விடியாதிருக்கின்ற இராத்திரியையும், வெறுக்கும் வேளையில் - வெறுத்துக்கொண்டிருக்கிற சமையத்தில். எ-று. இச்செய்யுள் குளகம்.

அடுத்த பாட்டில் "வாரணம் விளித்தலே" என்றதோடு கூடி பொருள் முடிவு பெருகின்றது, பிரிந்தார்க்கும் காமுற்ருர்க்கும் துன்பமுண்டாக்கலின் கொடிய மாமதன் என்ருர். "கொழுநிலா" காமிகளுக்குக் கொழுவை (நெருப்பிற் பழுக்கக்காய்ச்சிய இரும்பு.) போல் இருக்கும் நிலா என்றும் பொருளாம். இரவு நீட்டித்தமையின் காதல்நோய் ஆற்ருனுகி "பாரில் வேர் நிறீஇ விடிகிலா இரா" என்ருர். "குறியதன் கீழாக்குறுகலும் அதனே டுகமேற்றலு மியல்புமாம் தூக்கின்" என்ற விதிப்படி கிலா என்னுஞ்சொல் இயல்பாகவே நின்றது. (அஅ)

மையலுங்கங்குலு மதியும்வாட்டவிவ்
வையனேவெளியனென் றணிவயிற்றினிற்
கையினலறைந்துகூய்க் காமர்வாரணம்
வெய்யவாவிரையவா வெனவிளித்தலே.

[காலையில் கோழிகள் சிறகையடித்துக்கொண்டு கூவுவது அரிச்சந்திரனுக்காக இரங்கி சூரியனைக் கூப்பிடுவதுபோலிருந்தது என்பதாம்.]

இ-ள். மையலும் - (அரிச்சந்திரமகாராசனை) காமமயக்கமும், கங்குலும்- இரவும், மதியும் - சந்திரனும், வாட்ட - வாட்டுவதாயிருக்க, காமர் வாரணம்- அழகான கோழிகள்; இவ் ஐயனே எளியன் என்று - இந்த ஐயனை அரிச்சந்திரனே எளியனுக விருக்கின்ருனென்ற, அணிவயிற்றினில் - தமது அழகிய வயிற்றில், கையினல் - இறகாகியகையினல், அறைந்துகூய் - மோதியடித்துக் கொண்டுகூவி, வெய்யவா சூரியனே! விரையவா - உதயமாகிச் சீக்கிரம்வா வென்று கூப்பிட்டன. எ-று. ஏ - ஈற்றசை.

கோழி காலையில் செட்டைகளை அடித்துக்கொண்டு கூவுவதை அரிச்சந்திரனுக்கிரங்கி சூரியனைச் சீக்கிரம் வாவென்று கூப்பிட்டதாகக் கூறுகின்றார் இது தற்குறிப்பேற்ற அணி. (அக)

ஊழிவெங்கதிரவ னுதயமுன்னறிந்
தாழியுந்திங்களு மார்ப்படங்கின
கோழியுமார்த்தன குக்கிலார்த்தன
சூழியிற்புள்ளெலாந் துள்ளியார்த்தவே.

[சூரியன் உதித்தவுடனே கடல்சப்தமும் சந்திரன் நிலவும் அடங்கின. கோழி செம்போத்து பறவை முதலிய சப்தித்தன என்பதாம்.]

இ-ள். ஊழிவெங்கதிரவன் - வெயிலையுடையவனான கொடிய கிரணங்களையுடைய சூரியனின், உதயம் - உதித்தலை, முன்னறிந்து - முன்னே தெரிந்து, ஆழியும் - சமுத்திரமும், திங்களும் - சந்திரனும், ஆர்ப்பு அடங்கின- தங்கள் ஆரவாரங்கள் அடங்கின, கோழியும் ஆர்த்தன - (அப்பொழுது) கோழிகளும்கூவின, குக்கில் ஆர்த்தன - செம்போத்துகள்கத்தின, ஆழியில் - குளங்களிலே, புள்ளெலாம் - பறவைகளெல்லாம், துள்ளி ஆர்த்த - துள்ளித் துள்ளிச் சப்தித்தன. எ-று. ஏ - ஈற்றசை.

'ஊழ்' வெயில் 'இ' உடைமைப்பொருள் விகுதி. கதிர்கள் உடைமையின் சூரியனுக்குக் காரணப் பெயராயிற்று. 'கதிரவன்' என்றசொல் சந்திரனையும் குறிக்குமாயினும் ஈண்டு சிறப்புப்பற்றிச் சூரியனையே குறித்தது. 'ஆழி' ஆழத்தை உடையது என்னும் காரணம்பற்றிவந்த பெயர். (கூ0)

நங்குலத்தரசனை நலிந்தபாதகக்
கங்குலைத்திங்களைக் கனன்றுதேர்கடா
யங்கண்மாஞாலம்விட் டகற்றுவேனெனச்
செங்கதிர்க்கடவுளுஞ் சிவந்துதோன்றினான்.

[நம் குலத்து அரசனை துன்பப்படுத்திய இரவையும் சந்திரனையும் இந்த இடத்தைவிட்டுத் தூரத்திவிடுகின்றேனென்று கண்சிவந்து தோன்றினான் என்பதாம்.]

இ-ள். நம்குலத்து அரசனை - நமது குலத்திலேபிறந்த அரசனாகிய அரிச்சந்திரனை, நலிந்த - வருத்தப்படுத்தின, பாதகக்கங்குலை திங்களை - பாவிகளான இரவையும் சந்திரனையும், கனன்று - கோபித்து, தேர்கடாய் - தனது தேரைச் செலுத்திக்கொண்டு, அங்கண்மாஞாலம்விட்டு - அழகிதான இடத்தை உடைய பெரிய இந்த உலகத்தைவிட்டு, அகற்றுவேன் என - நீக்கிவிடுகின்றேன்என்று, செங்கதிர்க்கடவுளும் - செவந்த கிரணங்களையுடைய சூரியபகவானும், சிவந்து தோன்றினான் - தன்கண்கள் செவப்பாய்த் தோன்றினான். எ-று.

இயல்பாய் செவந்து எழும் சூரியனைத் தன்குல அரிச்சந்திரனை நலிந்த இரவையும் திங்களையும் கோபித்ததாகக் கூறலின் தற்குறிப்பேற்றம். (கூக)

படர்கெடுத்தறநிலை பரித்தமன்னனுக்
கிடர்விளைத்தெய்திய விராமடந்தையிப்
புடவிவிட்டேகினும் போனதிக்கெலாந்
தொடர்மினென்றெண்ணிலாச் சுடரையேவினான்.

[துன்பத்தை எல்லாம் நீக்கித் தரும நிலையைக்காத்த அரிச்சந்திர மகாராஜனுக்குத் துன்பமுண்டாக்கிய இரவென்னும் பெண் இவ்வுலகம் விட்டோடினும் தொடர்ந்து பிடியுங்களென்று தன்கிரணங்களை அனுப்பினான் என்பதாம்.]

இ-ள். படர்கெடுத்து - உலகிலுள்ள துன்பத்தைப்போக்கி, அறநிலை பரித்த மன்னனுக்கு - தருமத்தினது நிலையைக்காத்த அரிச்சந்திர மகாராஜனுக்கு, இடர்விளைத்து - துன்பத்தை உண்டாக்கி, எய்திய இராமடந்தை-வந்த இராத்திரியாகிய பெண், இப்புடவிவிட்டு ஏகினும் - இந்த உலகத்தை விட்டுப்போனாலும், போனதிக்கெலாம் - அவள் ஓடிப்போன திசைகள் எல்லாம், தொடர்மின் என்று - தொடர்ந்து பற்றுங்கள் என்று, எண்ணிலாச் சுடரை யேவினான் - தனது கணக்கற்ற கிரணங்களை அனுப்பினான். எ-று.

அலரிவந்தெழமுரா சதிரவாழிபோற்
புலரியிலானடி பூசித்தண்ணலுஞ்
சிலர்சிலசுடர்மணித் தேரிலேறினர்
பலர்பலகரிகளும் பரியுமேறினர்.

[விடிந்தவுடனே அரிச்சந்திரமகாராஜன் சிவபெருமான் பாதங்களைப் பூஜை செய்து சிலருடன் ரத்நகசிதமான பல்லக்கில் ஏறினான், பலர் யானைகளின்பேரிலும் குதிரைகளின் பேரிலும் ஏறினார்களென்பதாம்.]

இ-ள். அலரிவந்தெழ - அப்படிச் சூரியன்வந்துஉதயமாகவே, ஆழிபோல்-கடலைப்போல், முரசதிர - முரச வாத்தியங்கள் சப்திக்க, புலரியில் - விடியற்காலையில், அரனடி - சிவபெருமானின் அடியை, பூசித்து - பூஜைபண்ணி, அண்ணலும் - அரிச்சந்திர மகாராஜனும், சிலர் - அவனைக்கூடிவருகிற சிற்சிலரும், சில சுடர்மணித்தேரிலேறினர் - சில ஒளியையுடைய ரத்ந கசிதமான தேரின்மேலேறினர்கள்; பலர் - மற்றப்பலரும், கரிகளும் பரியும் - பல யானைகளின்பேரிலும் குதிரைகளின்பேரிலும், ஏறினர் - ஏறினர்கள். எ-று.

'அலரி'=சூரியன். ஒளிவிரிக்கின்றமையாலும், பூவினிற்சிறந்த தாமரைப்பூவை மலரச் செய்தலாலும் சூரியனுக்கிப்பேர் வந்ததென்பர் புலவர். 'அண்ணல்' பெருமையை உடையவன் என்பது பொருள். (கூ)

அந்தமாலாற்றைவிட் டகன்றுமன்னவன்
முந்தமால்கரிபரி கடப்பமொய்த்துடன்
கந்தமாலைக்குழற் கடலுடன்வரச்
சந்தமால்வரைத்தடஞ் சாரனண்ணினான்.

[அரிச்சந்திரமகாராஜன் ஆற்றைவிட்டகன்று முன்னாலே யானைகளும் குதிரைகளும்செல்ல பெண்களாகிய கடல் உடனேவர மலைச்சாரலைச் சேர்ந்தானென்பதாம்.]

இ-ள். மன்னன் - உடனே அந்த அரிச்சந்திரமகாராஜன், அந்தமால் ஆற்றை - அந்தப் பெரிதான கோமதியாற்றைவிட்டு அகன்று விட்டு நீங்கி, முந்த - முன்னாலே, மால் கரி பரி நடப்ப மொய்த்து - பெரியயானைகளும்குதிரைகளும் நெருங்கிநடக்க, கந்தம் - வாசனையை உடைய, மாலை - மலர்மாலைகளையணிந்த, குழல் கடல் - கூந்தல்களையுடைய பெண்களாகிய சமுத்திரம், உடன்வர - தொடர்ந்துவர, சந்தமால்வரைத் தடம் - சந்தன மரங்களையுடைய பெரியமலைகளினுடையபெரிய, சாரல் - சாரலை, நண்ணினான் - போய்ச்சேர்ந்தான். எ-று.

'கந்தமாலைக்குழல்' இரண்டாம் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. பெண்கள் கூட்டத்தைக் கடல் என்றது உருவகவணி. ()

அரிதகிபலாசமா திலகமாசினி
விரிமலர்ச்சண்பகம் வேங்கைகோங்கமை
சொரிமலர்ச்சுரபுனை யசோகுதுன்னிய
வரிமணற்காவிடை வந்துவைகினான்.

[கடுக்காய் மரம் முதலிய மரங்கள்நெருங்கிய அழகிய காட்டில்வந்து தங்கினான் என்பதாம்.]

இ-ள். அரிதகி - கடுக்காய்மரமும், பலாசம் - பலாசமரமும், மா - மாமரமும், திலகம் - மஞ்சாடிமரமும், ஆசினி - பலாமரமும், விரிமலர்ச்சண்பகம்- விரிகிறமலர்களையுடையசண்பகமரமும், வேங்கை - வேங்கைமரமும், கோங்கு- கோங்குமரமும், அமை - மூங்கில்மரமும், சொரி - சொரிகின்ற, மலர் - மலர்களையுடைய, சுரபுனை - சுரபுன்னைமரமும், அசோகு - அசோகமரமும், துன்னிய - (ஆகிய இவ்வகை மரங்கள்) நெருங்கிய, வரிமணல் காவிடை - அழகிய மணல் காட்டினுள்ளே, வந்துவைகினான் - வந்துதங்கினான். எ-று.

புன்னை, என்றது "புனை" எனவந்தது தொகுத்தல் விகாரம். (௬௫)

அலைசுனையாடவு மருவியாடவு
மலைமிசைப்பிடியும்வன் களிறுமானவே
சிலைநுதலாருஞ்செல் வருஞ்சென்றேறினர்
முலையொடும்புயத்தொடு நிரைத்தமொய்ம்பினர்.

[சுனை ஆடவும் அருவி ஆடவும் ஆடவரும் பெண்களும் மலைமேல் ஆண்யானை போலவும் பெண்யானை போலவும் போனார்கள் என்பதாம்.]

இ-ள். அலை சுனை ஆடவும் - அலைகளையுடைய சுனைநீர் ஆடவும், அருவி ஆடவும் - அருவிநீராடவும், மலைமிசை - மலையின்மேலே, பிடியும் - பெண்யானையும், வன்களிறும் மானவே - வலிதாகிய ஆண்யானையையும்போலவே,

சிலைநுதலாரும் - வில்போன்ற வளைந்த நெற்றியையுடைய பெண்களும், செல்வரும் - புருஷர்களும், சென்றேறினர் - போய் ஏறினர்கள்; முலையொடும் - அந்த மலைகளானது பெண்களின் கொங்கைகளையும், புயத்தொடும் - ஆடவர்களின் தோள்களோடும், நிகர்த்தமொய்ம்பின - ஒத்த வலிமையை உடையன.

இதனை, பெண்களின் முலைகளையும் ஆடவர்களின் தோள்களையும் ஒத்த மலைகளின்மேல் ஆண்யானைகளும் பெண்யானைகளும்போல சுனையிலாடவும் அருவி ஆடவும், ஆடவரும் பெண்களும் போனார்கள் என்றுங் கூறுவர். (கூசு)

அருவிகளாடுவார் சுனைகளாடுவார்
வெருவிவந்தகன்கரை மீதிலேறுவார்
சருவிநின்றோடியப் புனலிற்றாவுவார்
மருமலர்கொய்குவார் மலைந்துமீள்குவார்.

[இதில் நீராடலும் புனல் விளையாட்டும் கூறுகின்றார்.]

இ-ள். அருவிகளாடுவார் - அருவிகளிலே நீராடுகிறவர்களும், சுனைகளாடுவார் - சுனைகளிலே நீராடுகிறவர்களும், வெருவிவந்து - அப்படி நீராடுவதற்கஞ்சி வந்து, அதன்கரைமீதிலேறுவார் - விசாலமான கரைகளின்மேலே ஏறுகிறவர்களும், சருவி நின்று - கிட்டி நின்று, ஓடி - ஓடிவந்து, அப்புனலிற்றாவுவார் - அந்த (மலையருவியிலும் சுனைகளிலும்) தாவுகிறவர்களும், மருமலர் - வாசனை பொருந்திய புஷ்பங்களை, கொய்குவார் - பறிக்கின்றவர்களும், மலைந்து மீள்குவார் - மாறுபட்டுத் திரும்புகிறவர்களும் ஆயினர்கள். எ-று. உம்மைகள் எண்ணும்மைகள். (கூஎ)

அருவியுஞ்சுனைகளு மாடிநுண்மணல்
மருவியவண்டலு மணந்தசோலையும்
பருவரைக்குடுமியும் பளிக்குப்பாறையும்
பொருவிலாப்புனங்களும் புகுந்துநோக்குவார்.

[நீராடியபின் வண்டலும், சோலைகளும், மலைச்சிகரங்களும், பளிங்குப் பாறையும் தினைப்புனங்களும் போய்ப்பார்ப்பார்கள் என்பதாம்.]

இ-ள். அருவியுஞ் சுனைகளும் - அப்படி அருவிகளிலும் சுனைகளிலும், ஆடி - நீராடி, நுண்மணல் மருவிய - நுண்ணிய மணல்களையுடைய, வண்டலும் - வண்டலிலும், மணந்த சோலையும் - அவ்வண்டல்கூடிய சோலைகளிலும், பருவரைக்குடுமியும் - பருத்த மலைச்சிகரங்களிலும், பளிக்குப்பாறையும் - பளிங்குப் பாறைகளிலும், பொருவிலா - ஒப்பில்லாத, புனங்களும் - தினைப்புனங்களிலும், புகுந்து - போய், நோக்குவார் - வேடிக்கை பார்ப்பார்கள். எ-று.

'மணந்த சோலையும்' என்பதற்கு வாசனை வீசுகின்ற சோலைகளையும் என்றும் பொருள் கொள்வர். (கூஅ)

அன்றிருந்தணிவரைச் சாரல்வைகியே
துன்றிருள்விடிந்தபின் சோதிவேலினன்
சென்றிருஞ்சுடர்மணித் தேரிலேறியே
வென்றிவெம்படையொடு விரைந்துபோயினன்.

[மலைச்சாரலில் அன்று இருந்து மறுநாள் அரிச்சந்திரன் தேர் ஏறி சேனைகளோடு போயினன் என்பதாம்.]

இ-ள். அன்றிருந்து மணிவரைச்சாரல் வைகியே - அழகிதான மலைச்சாரலிலே அன்றையத்தினம் தங்கியிருந்து, துன்றிருள் விடிந்தபின் - நெருங்கிய இருட்டு விடிந்த பிற்பாடு, சோதிவேலினன் - பிரகாசிக்கின்ற வேலாயுதத்தையுடைய அரிச்சந்திரன், சென்று - எழுந்துபோய், இருஞ்சுடர் - மிக்க பிரகாசத்தையுடைய, மணித்தேரில் ஏறியே-ரத்நமயமான தேரின்மேலேறிக்கொண்டு, வென்றி - ஜயத்தையுடைய, வெம்படையொடு - சத்துருக்களுக்குக் கொடுமை செய்கின்ற படைகளுடனே, விரைந்து போயினன் - அதிசீக்கிரத்திலே போயினன். எ-று

'இருஞ்சுடர் தேர்' என்பதற்கு பெரியதாயும் பிரகாச முடையதாயும் இருக்கும் பெரிய தேரில்; என்றும் பொருள் கொள்வர். (கூகூ)

வேயிருங்கானமும் வெற்பினுச்சியு
மாயிரும்பொழில்களு மடிந்துநுண்பொடி
யாயினவிசும்பினை யடைந்ததூளியுஞ்
சேயிருஞ்சுடர்மணித் தேர்கள்செல்லவே.

[தேர்கள் செல்லுவதினால் காடும், மலைச்சிகரங்களும், சோலைகளும் அழிந்து தூளாகி ஆகாயத்தை அடைந்தது என்பதாம்.]

இ-ள். சேயிருஞ் சுடர்மணித்தேர்கள் - மிக உயர்ந்த பெரிதான காந்திகளையுடைய ரத்ந கசிதமான தேர்கள், செல்ல - செல்லுதலினாலே, வேயிருங் கானமும் - மூங்கிலையுடைய பெரிய காடுகளும், வெற்பின் உச்சியும் - மலைச் சிகரங்களும், மாயிரும் பொழில்களும் - மிகப்பெரிதான சோலைகளும், மடிந்து நுண்பொடி ஆயின - அழிந்து சிறிய பொடிகளாயினவாய், விசும்பினை யடைந்து - அதினின்றும் எழுந்த தூளிகள் எல்லாம் ஆகாயத்தைப்போய் அடைந்தது. எ-று. ஏ - ஈற்றசை. (கoo)

செங்கிறப்பொலன்கதிர்த் தேறினாழியுந்
தங்கிறமவ்வழி யனைத்துமாதலாற்
பன்னிறக்கிரிகளும் பரந்தபாறையும்
பொன்னிறமேருவே போற்பொலிந்தவே.

[பொன்மயமான தேரின் சக்கரமே படிந்து மலைச்சிகரங்களும் பாறைகளும் பொன்னிற மாயிற்றென்பதாம்.]

இ-ள். செங்கிறப்பொலன் கதிர்த்தேரின் ஆழியும் - அரிச்சந்திரனுடைய சிவந்த நிறத்தையுடைய பொன்னிறமான ஒளியைக்கொண்ட தேரின் சக்கரங்

களும், தன் நிறம் அவ்வழியனைத்து மாதலால் - (படிந்து) அத்தேரின் நிறமே அவ்வழிமுழுதும் ஆகிறதினாலே, பல்நிறக்கிரிகளும் - பல நிறங்களையுடைய மலைகளும், பரந்தபாறையும் - பரவுதலான சற்பாறைகளும், பொன்னிற மேருவேபோல் - பொன்னிறமான மகா மேருவைப்போல, பொலிந்த - விளங்கினர். எ-று. எ - ஈற்றசை.

உம்மை உயர்வுச்சிறப்பு தேரின் சக்கரமே மலைகளையும் பாறைகளையும் பொன்னிற மடையச்செய்த தென்பதாம். இதனை, "தெருண்ட மேலவர் சிறியவர்ச்சேரினு மவர்தம், மருண்ட தன்மையை மாற்றுவரெனுமிது வழக்கே, உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத்தோடி, இருண்ட கல்லையுந் தன்னிறமாக்கிய விரதம்'' என்ற கம்பநாட்டாழ்வார் திருவாக்கோடு மொப்பிட்டறிக. (கOக)

வானமுற்றெழுந்தமா மலையுமால்கரித்
தானமுற்றெழுகிய தடமுஞ்சாரலு
நானமுற்றெழுந்தும் பொழிலுநண்ணிவெங்
கானமுற்றருநெறி கடந்துபோயினன்.

[பெரிய மலைகளும், மேடுகளும் சோலைகளும் கடந்து கொடிய காடடர்ந்த செல்லுதற்கரிய வழிகளையும் கடந்து போயினன் என்பதாம்]

இ-ள். வானம் - ஆகாயத்தை, உற்று எழுந்த - தொட்டுக்கொண்டுயர்ந்திருக்கிற, மாமலையும் - பெரிய மலைகளும், மால்கரி - உயர்ந்த யானைகளுடைய, தானம் உற்றெழு - மதங்கள் பட்டு உயர்ந்து கிடக்கிற, தடமும் - மேடுகளும், சாரலும் - அந்த மலைப்பக்கங்களும், நானமுற்று எழும் - கஸ்தூரி வாசங்கொண்டெழுந்துள்ள, நறும்பொழிலும் - நல்ல மலர்ச்சோலைகளும், நண்ணி - கடந்து போய், வெம்கானம்-வெப்பமான காடுகளும், உற்று - சென்று, அரும் நெறி-செல்லுதற்கரிதான பல வழிகளையும், கடந்து போயினன் - அரிச்சந்திரன் கடந்து சென்றான். எ-று. (கOஉ)

விரிந்தவெங்கமர் களும் வெயிலின்வெந்துகீழ்
சரிந்தமாமலைகளுஞ் சருகுவெந்துமேற்
பொரிந்தமாமரங்களும் புகைந்துபார்மிசை
யெரிந்தெழுகடுஞ்சுரத் தெல்லையெய்தினன்.

[அரிச்சந்திரன் பாலை நிலத்தைச் சமீபித்தான் என்பதாம்.]

இ-ள். விரிந்த வெங்கமர்களும் - இப்படி விரிந்திருக்கிற செவ்விதான விடர் நிலங்களும், வெயிலின் வெந்து - வெயிலினாலே வெந்து, கீழ்சரிந்த-கீழே சரிந்து கிடக்கிற, மாமலைகளும் - பெரிய மலைகளும், சருகு - சருகுகள், வெந்து - வெந்து, மேல் பொரிந்த - மேலே பொரிந்திருக்கிற, மாமரங்களும்-பெரிய மரங்களும், புகைந்து - புகைதலாகி, பார்மிசை எரிந்தெழு - நிலத்தின் மேலெல்லாம் எரிந்து எழுகிற, கடுஞ்சுரத்து எல்லை - கடுமையைக்கொண்ட பாலை வனத்தின் எல்லையை, எய்தினன் - போய்ச்சேர்ந்தான். எ-று.

பாலை நிலத்துக்குச் சமீபித்தான் என்று கூறுகிறார். (கOங)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

என்றுமமரார்க்குவினையின்றியரன்முப்புரமெரித்தகனலும்
வென்றிமதனைப்பொடிபடத்திருநுதற்கணைவிழித்தகனலும்
வன்றிரையெறிந்தெழுகடற்குணடுவைத்தவடவைக்கனலுமுற்
றொன்றுபடவந்துகுடிகொண்டவணுறைந்தனவுருப்பமெழவே.

[திரிபுரமெரித்த தீயும், மதனனைச்சுட்ட தீயும் வடவாமுகாக்கினியும் ஒன்றுகூடி வெப்பமெழ அங்கு தங்குவதாயின என்பதாம்.]

இ-ள். என்றும் - இனி எக்காலத்தும், அமரர்க்கு - தேவர்களுக்கு, வினையின்றி - துன்பவினை யில்லாமல், அரன் - சிவபெருமான், முப்புரம் எரித்த - திரிபுரத்தை எரித்த, கனலும் - நெருப்பும், வென்றி - வெற்றியையுடைய, மதனை - மன்மதனை, பொடிபட - சாம்பலாக, திருநுதற்கணை - அழகிய நெற்றிக்கண்ணை, விழித்த கனலும் - திறந்து எரித்த நெருப்பும், வன்திரை - வலிதான அலைகளை, எறிந்து - வீசி, எழு - எழுகின்ற, கடற்குள் - கடலுக்குள், நடுவைத்த - நடுவே வைத்திருக்கிற, வடவைக்கனலும் - வடவா முகாக்கினியும், உற்று - பொருந்தி, ஒன்று படவந்து - ஒன்றாகி வந்து, குடிகொண்டு - குடியாக இருந்துகொண்டு, உருப்பம் எழவே - எவ்விடத்தும் வெப்பம் வீச, அவண் உறைந்தன - அங்கு தங்குதலாயின. எ-று. ஏ - ஈற்றசை.

'அமரர்' மரணமில்லாதவர் என்னும் பொருளில் வந்த காரணப்பெயர். உம்மைகள் எண்ணும்மைகள். (௧0௪)

கானமுழுதுந்தெறுகனற்றிரளில்வெந்தெழுகதிர்ச்சுடரின்வெந்
தூனமுறவற்றியுரகத்தலைவெடிப்பவதனுச்சிவழிபோய்
வானளவெழுந்துபுவிமீதுவிழுகின்றமணிவந்துபகல்வான்
மீனம்விழுகின்றபடியாமெனவிளங்கினவெளிப்புறமெலாம்.

[பாம்புகளின் தலைகள் வெப்பத்தால் வெடித்து அதினின்றும் எழுகின்ற மணிகள் பகற்காலத்தில் விழுகின்ற வான நட்சத்திரங்கள் போலிருந்தன என்பதாம்.]

இ-ள். கானமுழுதும் - அந்தக் காடுமுழுதும், தெறுகனல் திரளில் - நெருங்கிய நெருப்புச் சுவாலைகளினாலும், வெந்தெழு கதிர்ச்சுடரின் - வெந்து கொண்டு எழுகின்ற சூரியனுடைய கிரணங்களினாலும், வெந்து ஊனமுற - வெந்து பழுதாக, வற்றி - வற்றுதலாகி, உரகத்தலைவெடிப்ப - பாம்புத்தலைகள் பிளப்ப, அதன் உச்சிவழிபோய் - அதனுடைய தலையினின்றும்போய், வானளவெழுந்து - ஆகாயத்தளவும் எழுந்துபோய், புவிமீது விழுகின்ற மணி - மண்மேலே விழுகின்ற நாகரத்தினங்கள், வந்து பகல்வான் மீனம் - பகற்காலத்திலே வான நட்சத்திரங்கள் வந்து, விழுகின்ற படியாமென - விழுகின்ற விதத்தைப்போல, வெளிப்புறமெலாம் விளங்கின - அந்த வெறுநில வெளியினிடமெல்லாம் விளங்கின. எ-று.

'மீன்' மின்னும் தன்மை யுடையதாதலின் எனப்பட்டது. 'வான்' உயர்வும் ஆம் 'ஊனம்' கேடும் ஆம். (கO௫)

கரும்புயலருந்துளிகரந்துடல்கரிந்தயல்கலைந்துநெடிதாய்
வரும்பருவமுந்தலைமயங்கிமழையென்பதுமறந்தவதனாற்
பெரும்புவிபிளந்ததிலனந்தன்முடியிற்சுடர்பிறங்கியெழுமா
லிரும்புவிசினந்தழலுமிழ்ந்தவதனைச்சுடவெழுந்ததெனவே.

[வெயிற்கொடுமையால் புவி பிளந்து அதின் வழியாகத்தோன்றும் ஆதிசேஷன் தலைமணிகளின் ஒளி தன்மேல் நெருப்பைக் கக்குகிற சூரியனை அப்பாலைநிலம் சுட எழுந்ததுபோலிருந்தது என்றதாம்.]

இ-ள். கரும்புயல் - கரிய மேகங்கள், அருந்துளி கரந்து - பெய்கிற அரிதான மழைத்துளிகள் மறைந்து, உடல்கரிந்து - உடலெல்லாந் தீய்ந்து, அயல் கலைந்து - அந்நிலத்துக்கு அப்புறம் தங்கள் கூட்டங் கலைந்துபோய், நெடிதாய் வரும்பருவம் - (நாலுமாதவளவாகி நீண்டு வருவதான பருவகாலமும், தலை மயங்கி - தடுமாறி, மழை என்பது மறந்தவதனால் - மழைபெய்கிறது என் பதையும் மறந்துபோன வதனாலே, பெரும்புவி பிளந்து - அப்பெரிதான நில மெல்லாம் வெடித்து, அதில் - அவ்வழியே, அனந்தன் முடியில் - ஆதிசேட னுடைய தலையிலுள்ள, சுடர் - ரத்நச்சோதிகள், இரும்புவி - அப்பெரிதான பாலைநிலம், சினந்து - கோபித்து, அழலுமிழ்ந்தவதனை - தன்மேல் நெருப் பைக் கக்குகிற சூரியனை, சுடவெழுந்ததெனவே - சுடுதற்காக மேலே கிளம்பி னதுபோல, பிறங்கி எழுமால்-விளங்கி மேலே எழும். எ-று.

'எழுமால்' என்றதிலுள்ள 'ஆல்' அசை. 'எனவே' என்றதிலுள்ள எகாரம், ஈற்றசை. ந 'அந்தன்' அநந்தன் என்றாயிற்று. இது அழிவில்லாத வன் என்னும் காரணம்பற்றி வந்த பெயர். அரி, ஹரன் என்னும் இருவர்க்கும் பயலும், ஆபரணமாக இருக்கும் காரணம்பற்றி அழிவில்லையாகும். என்பதை இரு பெருஞ்சமயத்தாரும் ஒப்புக்கொள்வ தொன்றாகும். (கO௬)

சுரப்புறுசிவைப்புனலெனக்கருதிவற்றியதுவட்சியதனா
னிரப்புறுதவிப்பினைபொழித்திடமனத்தினினைத்துழையெலா
மிரப்பவரைநித்தலுநடத்தியுமொரற்பமுமிரக்கமிலர்பாற்
பரப்பவரையொத்தனசுரப்பவரைபொத்தனபசாசரதமே.

[மான்கள் யாசிப்பவரையும், கானல் இரப்பவரை தினமும் அலையும்படிச் செய்து பின் ஒளிந்துகொள்வோரையும் ஒத்திருந்தது என்பதாம்.]

இ-ள். உழையெலாம் - மான்கள் எல்லாம், வற்றிய துவட்சியதனால்- உடம்பு இளைத்து வற்றிப்போன தளர்ச்சியினாலே, நிரப்புறு தவிப்பினையொழி த்திட - தமக்கு நிரம்ப உண்டாகிய தவிப்பைப்போக்கி விடுதற்காக, மனத்தி னில் நினைத்து - மனசில்நினைத்து, சுரப்புறு சிவைப்புனலெனக்கருதி - பேய்த் தேரகிய கானலை பெருகுகின்ற குளத்துநீரென்று நினைத்து, இரப்பவரை-

யாசிப்பவர்களை, நித்தலும் நடத்தியும் - தினமும் நடந்தலையும்படிச் செய்தும், ஓரற்பமும் இரக்க மிலர்பால் - கொஞ்சமும் இரக்கங்கொண்டு கொடாதவர்களிடத்தே, பரப்பவரை யொத்தன - அந்த மான்களெல்லாம் பரந்தலைகின்றவர்களை யொத்தன, பசாசரதம் - (ஆனால்) அந்தப் பேய்த்தோாகிய கானலோ, காப்பவரை யொத்தன, யாசிக்கின்றவர்களைத் தினமும் அலையவிட்டுப்பின் ஒளிந்து கொள்பவரை ஒத்திருந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

மான்கள் கானலை நீரென்றோடியது மயக்க அணி.

கானலை, யாசகரை அலையவைத்து கொடாமல் மறைந்து கொள்ளுகிறவர்களுக்கும், மானை, ஓரற்பமும் கொடாது வீணே தினந்தினம் அலையவிட்டு ஒளிந்து கொள்ளுபவர்பால் இரப்பவர்க்கும் உவமித்தது உவமை அணி.

பசாசரதம்=பேய்த்தேர், கானல். ()

அடுந்திறலுமவ்வலர்படுந்திறலுநாமமுமனைத்துமெழுதி
நடுங்கலுநருபுனறவிர்ந்துடல்பதைத்துயிர்நடுங்கியுழலுங்
கொடுங்கரிமருப்பும்வெருள்கற்றிடருமற்றுளகுவட்டினிடையு
நெடுங்கடறடந்திரைகிளர்ந்தெனமுழங்குறுநெடித்திரளெலாம்.

[வீரர் பொருட்டு நடப்பட்ட கல்லினிடத்தும், யானைக்கொம்புகளினிடத்தும் கல்மேடுகளிலும் குன்றுகளிலும் கடலொலிபோல் சிள் வண்டுகள் ஒலிக்கும் என்பதாம்.]

இ-ள். அடுந்திறலும் - பகைவரைக் கொல்லுகிற சாமர்த்தியமும், அவ்வவர் படுந்திறலும் - அவ்வவர்களிடம் பொருந்தி யிருக்கிற சாமர்த்தியமும், நாமமும் - பெயரும், அனைத்தும் எழுதி - எல்லாவற்றையும் எழுதி, நடுங்கலும் - நடப்பட்ட கல்லும்; நருபுனல் தவிர்ந்து - நல்ல நீர் கிடையாமல், உடல் பதை பதைத்து - உடம்பானது பதை பதைத்து, உயிர் நடுங்கியுழலும் - உயிரும் அஞ்சி யலைவதான, கொடுங்கரி மருப்பும் - கொடிய யானைகளின் கொம்புகளும்; வெருள்-பயப்படத்தக்க, கற்றிடரும் - கல்மேடுகளும், மற்றுள்ள - இன்னமும் உண்டான, குவட்டினிடையும் - குன்றுகளினிடத்தும், நெடும் கடல்-பெரிய கடலினுடைய, தடம் திரை - விசாலமான அலைகள், கிளர்ந்தென-பொங்கி ஒலிப்பதுபோல, நெடித்திரள் எலாம் - சிள் வண்டுகளின் கூட்டமெல்லாம், முழங்குறும் - முழங்குவதாயிருக்கும். எ-று. உம்மைகள் எண்ணும்மைகள்.

இறந்த வீரனின் பெயரும் புகழும் எழுதி கால் நாட்டி வைத்தல், பண்டைக்கால வழக்கு, இது கால் நாட்டல் என்னும் துறையின் அமைந்தது. 'நெடி' என்றது சிள் வண்டை, சிள்ளென ஒலிக்கும் வண்டு என்பதாம். 'சிள்' ஒலிக்குறிப்பு. இதனைச் சில்வண்டென்றுங் கூறுவர். (கO௮)

அந்தவெயிலத்தகல்விசும்பிடைவெடித்துவிழுமானையினெடுந்
தந்தமணிபைத்துளியெனக்கருதியுண்டுழல்வசாதகமெலாம்
வெந்தெரிகொளுஞ்சருகெழுந்துவிழுநந்துலில்விரிந்தநிழலில்
வந்தடருமெண்குமரையுங்கடமையங்கலையுமானினமுமே.

[யானையின் தந்தத்திலிருந்து வெடித்து ஆகாசத்தளவும் போய்விழும்
முத்துக்களை சாதகப் பட்சிஎல்லாம் மழைத்துளியென்று விழுங்கும்
இருட்டில் காடி, மான், முதலியன சருகுகள் எரிந்துவிழும்
நிழலில் வந்து தங்கும் என்பதாம்.]

இ-ள். சாதகமெலாம் - சாதகப் பட்சிகள் எல்லாம், அந்த வெயிலத்து- அந்த நிலத்திலே எரிகிற வெயிலினாலே, அகல் விசும்பிடை - அகன்ற ஆகாயத்திடத்துவரை, வெடித்துவிழும் - வெடித்துச் சென்று விழுகிற, ஆனையின் - யானையினுடைய, நெடுந்தந்த மணியை - நீண்ட கொம்பிலுள்ள முத்துக்களை, துளி எனக்கருதி - மழைத்துளி என்று நினைத்து, உண்டு உழல்வ- உண்டு அலையும்; கங்குலில் - இருட்டில், வெந்தெரிகொளும் சருகு - வெந்து எரிகிற சருகுகள், எழுந்துவிழும் எழுந்து விழுகின்ற, விரிந்த நிழலில்- விரிந்திருக்கிற நிழலில், எண்கும் - கரடிகளும், மரையும் - காட்டுமான்களும், கடமையும் - கடம்பைகளும், கலையும் - கலைமான்களும், மான் இனமும்- (மற்றுமுள்ள) மான்சாதிகளும், வந்தடரும் - வந்து நெருங்கும். எ-று. ஏ - ஈற்றசை.

'ஆனை' யானை என்பதன்போலி. முத்துப்பிறக்கும் இடங்கள் இருபத்தொன்றில் யானைத்தந்தமுமொன்று, 'சாதகம்' மழைத்துளியை உண்டு ஜீவிக்கும் ஓர் வகைப்புள். இச்சாதகம் யானை மருப்பின் முத்தை மழைத்துளி என மயங்கியது மயக்க அணி. 'மரையும்' என்பதற்குக் காட்டுக்குதிரையும் என்றும் பொருள் கொள்வர். (௪0௧)

மண்மகளுடுத்ததிரைவாரிவடவைக்கனலைமாற்றியிதிலோர்
வெண்மணலைவைக்கிலரமங்கையரிரும்பதியும்வெந்துவிடுமாற்
கண்முழுதையும்புடைபெயர்ந்தகவருங்கடையுகத்திலிதிலோர்
நுண்மணறெறித்துவிழினுப்பிரளயப்புனலைநூக்கிவிடுமால்.

[கடலிலுள்ள வடவைக்கனலை நீக்கி இப்பாலையின் மணல் ஒன்றை
யிட்டாலே கடலைக்கவறச்செய்து தேவலோகத்தையும்
வேகவைக்கும் யுகாந்தகால வெள்ளமும்
இந்த மணல் ஒன்றால் கவறிப்
போம் என்பதாம்.]

இ-ள். மண்மகள் உடுத்த - பூமிதேவி ஆடையாக உடுத்தியிருக்கிற, திரை வாரி - அலைகடலின், வடவைக்கனலை மாற்றி - வடவாமுகாக்கினியை வேறு இடத்திற்கு மாற்றி, இதில் ஓர் வெண்மணலை - (அந்த வடவையிருந்த இடத்தில்) இந்தப் பாலைவனத்திலுள்ள ஒரு வெண்மையான மணலை, வைக்கில் - கொண்டுபோய் வைக்கில், அரமங்கையர் இரும்பதியும் - (அந்தக் கடல் நீரால் இந்த மணலால் வற்றி வரண்டுபோவதன்றி) அரம்பாஸ்திரிகள் இருக்கின்ற பெரிய தெய்வலோகமும், வெந்துவிடும் - அந்த மணலின் சுவாலையால் வெந்து போய்விடும்; கண் முழுதையும் - (பூமியின்) இடங்கள் எல்லா

வற்றிலும், புடைபெயர்ந்து - தான் இருக்கும் இடத்தை விட்டு, உகவரும் கடையுகத்தில் - அழிக்க வரும்படியான யுகமுடிவிலே, இதில் ஓர் நுண்மணல் - இந்தப் பாலைநிலத்து ஒரு நுண்ணிய மணலானது, தெறித்து விழினும் - தெறித்து விழுந்தாலும், பிரளயப்புனலை நுங்கிவிடுமால் - அந்தப் பிரளய காலத்து வெள்ளத்தையும் குடித்துச் சுவறப்பண்ணும். எ-று. ஆல் - இரண்டும் அசைகள்.

"அணிகொண்ட குரங்கினங்கள் அலைகடலுக்கப்பாலே, மணலொன்று காணுமல், வரையெடுத்து மயங்கினவே" என்ற கலிங்கத்துப் பரணிச்செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. (கக0)

வெங்கதிர்தெறுங்கொடியவிண்டுவனம்வெந்தெரியும்வெந்தழலி
யங்கதமிறந்துமதகுஞ்சரமிறந்துடலழிந்திடமெலாஞ் [ன்வா
செங்குருதியங்கடலின்மண்டமுதவாரியலைசிந்துநுரைபோ
லெங்கணும்விளங்குவனவெண்குவடெனும்பரிசெலும்புமலையே.

[மூங்கிற் காடுகளில் தீப்பற்ற பாம்புகளும் யானைகளும் இறந்து விழுந்த இடங்களில் இரத்தவெள்ளம் கடல்போல் பரவிற்று கடலின் நுரைபோல் எலும்பு மலைகள் மிதந்தன என்பதாம்.]

இ-ள். வெங்கதிர் - சூரியன், தெறும் - சுடுகின்ற, கொடிய விண்டுவனம் - கொடிதாகிய மூங்கிற் காடுகள், வெந்து எரியும் - வெந்து எரிகின்ற, வெந்தழலின்வாய் - வெப்பமான நெருப்பினிடத்திலே, அங்கதம் இறந்து - பாம்புகள் இறந்து, மதகுஞ்சரம் இறந்து - மதயானைகளும் இறந்து, உடல் அழிந்திடமெலாம் - (விழுந்து) உடல் அழிந்து கிடக்கின்ற இடங்களிலெல்லாம், செங்குருதி - (அவைகளின் உடல்களிலிருந்து வழிகின்ற பாவும்) செவந்த ரத்தமானது, அம்கடலின் மண்ட - அழகிய கடல்போல் பெருக; முதுவாரி - பழமையான கடலின், அலைசிந்து நுரைபோல் - அலைகள் சிந்துகின்ற நுரைகளைப்போல, வெண்குவடு எனும் பரிசு - வெள்ளை மலைகள் என்னும் விதமாக, எலும்புமலை - எலும்புமலைகள், எங்கணும் - எவ்விடத்திலும், விளங்குவன - மிதந்து விளங்கும். எ-று. ஏ - ஈற்றசை.

'அங்கதமிறந்து மதகுஞ்சர மிறந்து, இதில் உம்மை தொக்கது. "அங்கதம்" - பாம்பு; "செங்குருதியங்கடலின் மண்டமுது வாரியலை சிந்து நுரைபோல், எங்கணும் விளங்குவன வெண்குவடெனும் பரிசெலும்புமலையே" இதற்கு பெருகின செவந்த ரத்தமானது அழகிதான கடலிலேபோய்க் கலக்க, அந்த ப்ழய கடலில் அலைகள் சிந்துகின்ற நுரைபோல் வெள்ளை மலைகளெனும்படி எலும்பு மலைகள் எவ்விடத்தும் மிதப்பனவாயின,' என்றும் பொருளுரைப்பர்.................செங்குருதி கடலைப்போலப் பெருக என்று கூறின் உவமைவிரி. என்புமலைகள் நுரைகள் போலவும், வெண்குவடு போலவும் விளங்கின என்பதாம். 'அழிந்திடமெலாம்' என்றது அழிந்து - இடமெலாம் எனப்பிரியும், 'அழிந்து செய்து' என்னும் வாய்பாட்டுவினை எச்சம். (கசக)

வெங்கரியுரித்திடைபுனைந்தவள்சலஞ்சலைவிளங்குசடிலச்
சங்கரித்ரிசூலதரிதாருகவிநாசனிசவுந்தரிசெழும்
பொங்கரிமணிப்பரிபுரத்திருபதத்தினள்பொருப்பனதனத்
தெங்கடனிநாயகியிருந்தசமயத்திபல்பெடுத்துரைசெய்வாம்.

[எங்கள் குலதெய்வமாகிய காளி அங்கு இருந்த அமைதியின்
சிறப்புகளைச் சொல்வாம் என்பதாம்.]

இ-ள். வெங்கரி உரித்து இடை புனைந்தவள் - வெவ்விய யானைகளை உரித்துத்தன் இடுப்பிலே அதன்தோலை அணிந்திருக்கிறவளாகிய, சலஞ்சலை - கங்காநதியும் சந்திரனும், விளங்கு சடிலச்சங்கரி - விளங்குகிற சடாபாரத்தை யுடைய சங்கரி, த்ரிசூலதரி - திரிசூலதரி, தாருக விநாசனி - தாருக விநாசனி, சவுந்தரி - சவுந்தரி, செழும் பொங்கரிமணி - செழுமையாக ஒலிக்கின்ற கற்களாக முத்துமுதலிய ரத்நங்களையிட்ட, பரிபுரத்திருப்பதத்தினள் - சிலம்புகளை யணிந்த இரண்டு திருவடிகளை யுடையவள், பொருப்பன தனத்து - மலைகளை ஒப்பான தனங்களைக்கொண்ட, எங்கள் தனிநாயகி - எங்களுடைய ஒப்பற்ற குலதெய்வமான காளிதேவி, இருந்த சமயத்து இயல்பு - இருந்த அமைதியின் இலக்கணத்தை, எடுத்து உரைசெய்வாம் - இனி ஒருவகையாக எடுத்துச் சொல்வாம். எ-று.

சிவமும் சத்தியும் ஒன்றுதலினாலும் சத்தியின் மூர்த்தமாகிய காளிதேவிக்கும் சிவசின்னங்கள் எல்லாம் அமைந்திருக்கு மாதலினாலும் நதி, கலை, சூலம் முதலியன காளிக்கிருப்பதாகக் கூறியதும், யானையுரித்தல், திரிபுரமெரித்தல் முதலிய தொழில்கள் சத்திக்கும் சம்பந்தப்படுத்திக் கூறும் மரபுண்டாதலின் காளிதேவியை யானையுரித்து அரையிற் புனைந்தவள் என்றும் கூறினார். 'சூலதரி' சூலத்தைத்தரித்தவள் என்பதாம். "தாருக விநாசனி" தாருகனை நாசம் செய்தவள், என்பது பொருள். (கசஉ)

எறித்தசெழுமுச் சுடருமொத்தொரு தலத்திடையெழுந்ததெனவே, தெறித்திருபுறக்கடை சிவத்திடைகறுத்தகண் மிகச்சுழலவே, சிறுத்தவிடையிற்கரதலத்தின்முடியிற்றிகழ்செறித்தவரவப், பொறிக்கணபணத்தலை மணிச்சுடிகையிற் கதிர்கள்பொங்கியழவே.

[முச்சுடரும் கூடிப் பிரகாசிப்பதுபோலக் கண்கள் விளங்கின,
சிறுத்த இடையிலும் கரங்களிலும், தலையிலும்
அணிந்துள்ள நாகங்களின் தலைமணிகள்
விளங்கினன் என்பதாம்.]

இ-ள். எறித்த செழுமுச்சுடரும் - விளங்குகின்ற செழுமையான சோம சூரியாக்கினி என்கின்ற மூன்று சுடர்களும், ஒத்து ஒருதலத்து இடை எழுந்தது என - ஒன்றுசேர்ந்து ஒரு இடத்திலே உதயமானாற்போல, செறித்து

இரு புறக்கடை சிவத்தி - செறிந்து விளங்கி இருடக்கத்திலும் கடைசியிலே செவந்து, இடை கறுத்தகண் - நடுவிலே கறுத்திருக்கிற கண்கள், மிகச்சுழலவே - மிகவுஞ் சுழல்வனவாக; சிறுத்த இடையில் - சிறிதானஇடையிலும், காதலத்தில் - கைகளிலும், முடியில் - தலையிலும், திகழ் - விளங்குகின்ற, செறித்த - அணிந்த, அரவம் - பாம்புகளின், பொறிக்கணம் - புள்ளிகளையுடைய கூட்டமான, பணத்தலைமணி - படங்களைக்கொண்ட தலைகளிலுள்ள ரத்நங்கள் பொருந்திய, சுடிகையில் - உச்சிக்கொண்டைகளில், கதிர்கள் பொங்கி விழவே-பிரகாசமானது மிகுந்து கிளாவும். எ-று. ஏ - ஈற்றசை.

இச்செய்யுள் குழகம் இதிலிருந்து இதற்குப் பின்வரும் பதின்மூன்றுஞ் செய்யுளில் தொழுதான் "என்ற வினைமுற்றைக்கொண்டு முடிகின்றது. புறக்கடை சிவத்திடை கறுத்த கண் சிவத்து'' "கறுத்து'' என்னுஞ் சொற்கள் ஒரே அடியில் வந்தமையினுல் "முரண்டொடை யாயிற்று.'' (கக௩)

மிடித்தவர்களைப்பொருண்மிகுத்தவர்வினைத்தொழில் விளைப்பதெனவே, கொடிப்படர்பொருப்பென விடைக்கிடர்விளைத்தனகும்பவழகுங், தடித்தினடிநிற்கும்ரதத்தைநிகர்பொற்கடிதடத்தினழகும், பொடித்தெழுவெயர்த்திரு முகத்தழகுநின்றொளிபொழிந்தொழுகவே.

[தனம், இடை, வியர்த்துள்ள முகம் ஆகிய இவைகளில் நிலைகொண்டு அழகின் ஒளிவழிந்து ஒழுகவும் என்பதாம்.]

இ-ள். மிடித்தவர்களை - வறுமை உற்றவர்களை, பொருள் மிகுத்தவர்- திரவியத்தினுல் மிகுந்தவர்கள், வினைத்தொழில் விளைப்பதெனவே - கண்டு சண்டைத்தொழில் செய்வதைப்போலவே, கொடிப்படர் பொருப்பு என- ஒருகொடி மேலே தங்குகின்ற (இரண்டு) மலைகளைப்போல, இடைக்கு இடர் விளைத்தன கும்பவழகும் - மருங்குலுக்குத் துன்பத்தைச்செய்கிற குடங்கள் போன்ற கொங்கைகளினழகும், தடித்தின் அடிநிற்கும் - ஒரு மின்னலின் அடியிலே நிற்கின்ற, இரதத்தைநிகர் - ஒருதேரை ஒப்பான, பொற் கடிதடத்தின் அழகும் - அழகிய கடிதடத்தின் அழகும், பொடித்தெழு - பொடிப் பொடியாக எழுகின்ற, வெயர்த்திருமுகத்தழகும் - வியர்வையையுடைய திருமுகத்தின் அழகும், நின்று ஒளிபொழிந்து ஒழுக-நிலைகொண்டு ஒளிவழிந்து ஒழுகவும். எ-று. ஏ - ஈற்றசை.

தனங்கள் இடைக்கு இடர்விளைப்பதை பொருண் மிகுத்தவர் மிடித்தவர்களை வினைத்தொழில் விளைப்பதுபோல இருக்கிறது என்று உவமிக்கின்றார். "தடித்தினடி நிற்கும் இரதத்தை நிகர் பொற்கடிதடம்'' 'தடித்து' என்பது மின்னல். கடிதடத்திற்கு இரதத்தை உவமித்தார். 'பொடித்தல்' அரும்புதல். "மிடித்தவர் பொருண் மிகுத்தவர் என்பன ஓரடியில் வந்தமையால் முரண்டொடையாம். 'தனகும்பம்' தனமாகிய கும்பம் என விரியும். இச் செய்யும் களகம். (ககச)

வேலைகளெழுந்துலகமேழினுடனேழையும்விழுங்கிவிடுமக்
காலமுடிவிற்கொடியவூழிநெடுவெங்கனல்கனன்றெரிதல்போற்
சாலவினைகொண்டுபொருதாருகனைவென்றவுணர்தங்கள்குடரை
மாலையிடுகின்றதிரிசூலமிசைவெங்கனல்வளைந்தெரியவே.

[தாருகனை ஜெயித்து அசுரர்கள் குடலை மாலையாகவிட்டு விளங்கும் திரிசூலம் ஊழித்தீப்போல் நெருப்பெரிந்து கொண்டிருந்தது என்பதாம்.]

இ-ள். வேலைகள் எழுந்து - கடல்கள் கிளர்ந்து, உலகம் ஏழின் உடன் ஏழையும் - உலகங்கள் ஏழோடு ஏழையும் (அதாவது பதினான்கு உலகங்களையும்) விழுங்கிவிடும் அக்காலமுடிவில் - கவளீகரித்துக் கொள்ளுகிற அக்கலி கால முடிவிலே, கொடியவூழி நெடுவெங்கனல் - கொடுமையை உடைய ஊழிக்காலத்து நெடிய வெம்மையான நெருப்பு, கனன்று எரிதல்போல்- கொதித்து எரிகிறதுபோல, சாலவினை கொண்டு - மிகவும் சண்டைசெய்து, பொருதாருகனை - போர்செய்கின்ற தாரகாசுரனை, வென்று - ஜெயித்து, அவுணர்தங் குடரை - அசுரர்களுடைய குடலை, மாலையிடுகின்ற - மாலையாக அணிந்து கொள்கின்ற, திரிசூலமிசை - திரிசூலத்தின்மேலே, வெங்கனல் வளைந்தெரியவே - வெவ்விய நெருப்பானது சூழ்ந்து எரியவும். எ-று. ஏ-ஈற்றசை.

கீழேழு உலகமும் மேலேழு உலகமும் இருப்பதாகக் கூறுவதால் "ஏழினுடன் ஏழையும்" என்றார். "ஊழிநெடு வெங்கனல்" என்றது ஊழித்தீயை. இதுவும் குளகச்செய்யுள். (கசரு)

பொடிப்பொடிதிசைத்திசைதெறித்திடுசுடர்த்திரிபுரத்தழலென
தடித்தெழுவலத்ததுதடக்கைவடிவாளொளிதயங்கியெழவே [த்
வடிக்கடியெதிர்த்தலையடித்தெழுமுகக்கடலதிர்ச்சியெனவே
விடிக்குரன்முழக்கெனவிடக்கையின்மணிக்கடகிரைத்தசையவே

[வலக்கையிலுள்ள வாளானது திரிபுரத்தை எரித்த அக்கினிபோல் திசைதிசை தெறிக்கவும்; யுகாந்தக்கால ஊழிபோலவும் இடிபோலவும் இடக்கைக்கடகம் சப்திக்கவும் என்பதாம்.]

இ-ள். பொடிப்பொடி திசைத்திசை தெறித்திடு - எல்லாத் திக்குகளிலும் பொடிப் பொடியாகத் தெறிக்கின்ற, சுடர் - சுடரானது, திரிபுரத்தழல் என - திரிபுரத்தை அழித்த நெருப்பைப்போல, தடித்தெழு-மின்னி எழுந்து கொண்டிருக்கும் தன்மையுடையதாய், வலத்தது தடக்கை வடிவாள் - வலதாகிய விசாலமான கையிலே கொண்ட வடித்தெடுக்கப்பட்ட வாளானது, ஒளி தயங்கி எழவே - பிரகாசமானது விளங்கி யோங்கவும்; அடிக்கடி - திரும்பத் திரும்ப, எதிர்த்து அலையடித்தெழும் - கரையோடெதிர்கொண்டு அலைமோதி எழுகின்ற, உகக்கடல் அதிர்ச்சி எனவே - யுகாந்தத்தில் வரும் கடலின் அதிர்ச்சி என்றே சொல்லும்படியும், இடிக்குரல் முழக்கு என - மேகமண்டலத்

தில் முழங்குகின்ற இடியோசை போலவும், இடக்கை - இடது கையிலிருக்கிற, இன்மணிக்கடகு - இனிய மணிக்கடகானது, இரைத்தசையவே - ஒலித்து அசையவும். எ-று 'எழவே' அசையவே என்றதிலுள்ள ஏகாரங்கள் அசை, 'எனவே' என்றதின் ஏகாரம் தேற்றம்.

'பொடிப்பொடி' 'திசைத்திசை அடிக்கடி' இவைகள் மிகுதிப்பொருளில் அடுக்கி வந்தன. இதுவும் குளகச்செய்யுள். (கக௬)

பட்டயமெடுத்தொருகைபத்திரமெடுத்தொருகைபற்றுமழுவுஞ்
சொட்டையுமெடுத்திருகைசக்கரமெடுத்தொருகைசுற்றுமயிலும்
வட்டமுமெடுதவொருகைவச்சிரமெடுத்தொருகைமற்கரதல
மெட்டினும்விதிர்ப்பனசுழற்றுவனவெந்தழலெழுந்தெரியவே.

[எட்டுக்கைகளிலும் பட்டயம், வாள், மழு. வளை, தடி, சக்கரம், அயில், கேடயம், வச்சிராயுதம் முதலியன எடுத்து வீசவும் சுழற்றவும் ஆகிய இவைகள் செய்யவும் என்பதாம்.]

இ-ள். பட்டயம் எடுத்து ஒருகை - ஒருகை பட்டயத்தை எடுத்தும், பத்திரமெடுத்தொருகை - ஒருகை கோளை எடுத்தும், பற்றுமழுவும் சொட்டையும் எடுத்து இருகை - இரண்டு கைகள் பற்றுகின்ற மழுப்படையையும் வளை தடியையும் எடுத்துக்கொண்டும், சக்கா மெடுத்தொரு கை சுற்றும் - ஒரு கை சக்கராயுதத்தை எடுத்துக்கொண்டு சுழற்றும்; அயிலும் வட்டமும் எடுத்திருகை- இரண்டு கைகள் வேலும் கேடயமும் எடுத்தும்; வச்சிர மெடுத்தொருகை- ஒரு கை வச்சிராயுதத்தை எடுத்தும், மற்காதலம் எட்டினும் - இந்தவிதமாக வலிமை பொருந்திய எட்டுக் கைகளிலும், வெந்தழல் எழுந்தெரியவே - வெம்மைகொண்ட நெருப்பு எழுந்து எரியும்படி, விதிர்ப்பன - வீசுகிறதாகவும், சுழற்றுவன - சுழற்றுவன முதலிய செய்கின்றன ஆகவும். எ-று. ஏ - ஈற்றசை.

இச்செய்யுள் குளகம். (ககஎ)

ஆடகமணிக்குழைகள்பாரியசரப்பணிகளத்தகடகஞ்
சூடகமிரட்டையுடுதார்மொடுபட்டமணிதோள்வளைசெழும்
பாடகமெழிற்பரிபுரங்கழல்சதங்கைகள்பதக்கமுடனே
நீடெழின்மதாணிகளலைந்துதிசையெங்குமொளிநின்றிடரவே.

[குண்டலங்களும், சரப்பணிகளும், கடகங்களும், கங்கணங்களும், அரைநூன்மாலைகளும், நெற்றிப்பட்டமும் தோள்வளையும், பாடகங்களும், சிலம்புகளும், சதங்கைகளும், பதக்கங்களும், மார்புப் பதக்கங்களும் மற்றுள்ள ஆபரணங்களும் அசைந்து எட்டுத்திக்கிலும் ஒளிசெய்யவும் என்பதாம்.]

இ-ள். ஆடகமணிக் குழைகள் - பொன்னாற்செய்து ரத்தினம்பதித்த குண்டலங்களும், பாரிய - கனமான, சரப்பணிகள் - சரப்பணிகளும், அத்த

கடகம் - காவளையல்களும், சூடகம் - கங்கணங்களும், இரட்டையுடு தாரமொடு - இரட்டையாகச் சூழுகின்ற அரைநால் மாலைகளுடனே, பட்டம்-நெற்றிப்பட்டமும், அணிதோள்வளை - அழகிய தோள்வளையல்களும், செழும்பாடகம் - செழுமையான பாடகங்களும், எழில் பரிபுரம் - அழகிதானசிலம்புகளும், கழல் சதங்கைகள் - காலில் அணிகின்ற சதங்கைகளும், பதக்கமுடனே - பதக்கத்துடனே, நீடு எழில் மதாணிகள் அலைந்து - நீண்டுள்ளதாகிய அழகான மார்புப் பதக்கங்கள் முதலிய ஆபரணங்களும் அசைந்து, திசை எங்கும் ஒளி நின்று அடரவே - எட்டுத்திக்கிலும் சோதி நிலைகொண்டு நெருங்கவும். எ-று. ஏ - ஈற்றசை.

இச்செய்யளும் குளகம். (கக அ)

நித்திலநிரைத்துவயிரத்தினமழுத்திமுழுநீலநிறுவிப்
பத்திபடவொப்பரியபச்சைவிரவிப்பதுமராகமளவிச்
சித்திரமியற்றியமணிக்கலையுமப்பரிசுசெய்தகிரணத்
துத்தரியமுந்தொடையுமுற்றநிலவும்வெயிலுமொக்கவிழவே.

[நவமணிகளால் அழகு செய்துள்ள இடை வஸ்திரம் மார்பு வஸ்திரம் மாலைகள் ஆகிய இவைகள் சந்திரனொளியையும் சூரியனொளியையும் ஒத்துப் பிரகாசித்தது என்பதாம்.]

இ-ள். நித்திலம் நிரைத்து - முத்துகளை வரிசைப்படுத்தி, வயிரத்து இனமழுத்தி - வயிர ரத்நங்களின் கூட்டங்களைப் பதித்து, முழு நீல நிறுவி - முழுநீல மணிகளையும் நிலையாய் பதித்து, பத்திபட - வரிசையாக, ஒப்பரிய பச்சை விரவி - இணையற்ற மாகதங்களையுங் கலந்து, பதுமராகமளவி - பதுமராகத்தையும் கூட்டி, சித்திரமியற்றிய - அழகு செய்துள்ள, மணிக்கலையும் - மணிமயமான இடை வஸ்திரமும், அப்பரிசுசெய்த - அப்படியே செய்திருக்கிற, கிரணத்து உத்தரியமும் - காந்தியையுடைய மார்பு வஸ்திரமும், தொடையும் - மாலைகளும், நிலவும் வெயிலும் - (கூடி) சந்திரிகையையும் சூரியனொளியையும், ஒக்கவிழவே - (முழுதும்) ஒத்து ஒளி சிந்தவும். எ-று ஏ - ஈற்றசை.

'சித்திரம்' விநோதம் என்றும் பொருளாம். உம்மைகள் - எண்ணும்மைகள். 'பரிசு' தன்மை, விதம்; (ககக)

காவன்முறைநிற்பவொருகோடியுளகற்பனைகள்கற்றவழுவா
தேவலிடைநிற்பவொருகோடியுளகூடியவிடாகினிகண்மே
லாவலொடுநிற்பவொருகோடியுளநன்னெறிபமைச்சரெனவே
போவனவுமீள்வனவுமாவவொருகோடியுளபூதகணமே

[கோடி கோடியாக பூதங்கள் காவல்காத்தன, பணிவிடை செய்தன, மந்திரிகள் போலப் போவன வருவனவாக இருக்கின்ற தென்பதாம்.]

இ-ள். காவல் - காவலாக, முறைநிற்ப - வரிசைகொண்டு நிற்பவைகளாயுள்ளவைகள், ஒருகோடியுள - ஒருகோடி பூதங்கள் இருக்கின்றன; கற்பனை

கள் கற்று - பலவிதமான கற்பனைகளுங்கற்று, ஏவல் இடைநிற்ப - தப்பாமல் சொன்ன பணிவிடைகளின்படியே நடப்பவைகளா யுள்ளவைகள், ஒருகோடியுள - ஒருகோடி யிருக்கின்றன, கூடிய இடாகினி கண்மேலாவலொடு நிற்ப- அவைகளோடு சேர்ந்துள்ள இடாகினிகள் மேல் பிரியத்தோடு இருப்பவைகள், ஒருகோடியுள - ஒருகோடி பூதங்களிருக்கின்றன; நல்நெறி யமைச்சர் எனவே- நல்ல மார்க்கங்களை யறிந்த மந்திரிமார்களைப் போலவே, போவனவும் - போபவைகளும்; மீள்வனவும் - திரும்பி வருபவைகளும், ஆவ - ஆகின்றவைகள், ஒருகோடியுள பூதகணமே - ஒருகோடி பூதக்கணங்களே யிருக்கின்றன. எ-று. ஏகாரம் - தேற்றம், ஈற்றசையாகவும் கொள்வர்.

இச்செய்யுளும் குளகம். இடாகினி என்பது பெண்பூதம். (கஉ0)

அச்சமதறத்தமதுயிர்க்கொடையளித்தவாறுத்ததலையை
வச்சிரமணிக்கடகநற்கரதலத்தினிடைவைப்பசிலவே
யிச்சையினரப்பலிகளிட்டதலையைக்கடிதெடுத்திறைவிமுன்
பச்சுதிரமுற்றொழுகவைப்பசதகோடிகள்பசாசகணமே.

[சில பிசாசுகள் தேவியின் சன்னிதானத்திலே தம்முயிரைக் கொடையாகத் தந்து அரிந்துகொண்ட தலையை தேவியின் கையில் கொண்டுவந்து வைக்கும். நரபலியிட்டவர்கள் தலையை பச்சைரத்தம் ஒழுக பல பிசாசுகள் கொண்டுவந்து வைக்கும் என்பதாம்.]

இ-ள். சில - சில பிசாசுகள், அச்சமதற - பயமில்லாமல், தமது உயிர்- (உலகத்திலே) தங்கள் உயிரை, கொடையளித்து அவர் அறுத்ததலையை - பிறருக்குக் கொடையாகக் கொடுத்துத் தம் தலையை அறுத்துக்கொண்ட அவர்கள் தலைகளை, வச்சிரமணிக்கடக நற்கரதலத்தின் இடை வைப்ப - வயிரரத்தினங்கள் பதித்த கடகங்களணிந்த காளியினுடைய நலமான கையின் கண் கொண்டுவந்து வைப்பனவாகும்; சதகோடி - நூறுகோடி, பசாச கணங்கள்- பசாசக்கூட்டங்கள், இச்சையின் - தங்கள் விருப்பத்தின்படியே, நரப்பலிகள் இட்ட தலையை - நரபலிகளாகக் கொடுத்த தலைகளை, கடிது எடுத்து - விரைவிலே எடுத்துக்கொண்டு வந்து, இறைவிமுன் - காளிதேவி முன்னே, பச்சுதிரம் உற்று ஒழுக வைப்ப - பசுமையான உதிரமானது முழுதும் ஒழுக ஒழுக வைக்கவும். எ-று. ஏ - ஈற்றசை.

காளிக்குத் தம்மைப் பலியிடும் வழக்கம் முன் நாளில் உண்டு, வீரர்களும் தம்மையே களப்பலியாக ஊட்டுவது முண்டு.

"சலியாத தனியாண்மைத் தறுகண்வீரர்
தருகவரம் வரத்தினுக்குத தக்கதாகப்
பலியாக உறுப்பறிந்து தருதுமெனப்
பரவுமொலி கடலொலிபோற் பரவுமாலோ"

"அடிக்கழுத்தின் நெடுந்தலையை அறிவராலோ
அரிந்ததலை அணங்கின்கைக் கொடுப்பராலோ
கொடுத்ததலை கொற்றவையைப் பரவுமாலோ
குறையுடலம் கும்பிட்டு நிற்குமாலோ."

என்ற கலிங்கத்துப் பரணிச்செய்யுள்கள் இங்கு கவனிக்கத்தக்கன.

இச்செய்யுளும் குளகம். (கஉக)

ஈடுபடுநுண்ணிடைநுடங்கமிகுசாமரமிரண்டுபுறமும்
போடுமவரும்பரிபுரத்திருமலர்த்துணைபொருத்திமுடிமேற்
சூடுமவருங்கவிதொடுக்குமவரும்பவுரிசுற்றிமுறைநின்
றூடுமவரும்மிசைகள்பாடுமவரும்பலவரம்பையர்களே.

[தேவிமுன் சாமரை யிரட்டுபவர்களும் தேவியின் பாதத்தைச் சூடுகிற வர்களும் பாடுகிறவர்களும் ஆடுகிறவர்களும் இசைபாடுகிறவர்களும் ரம்பாஸ்திரீகள் என்பதாம்.]

இ-ள். ஈடுபடும் நுண்ணிடை நுடங்க - நிமிர்வதும் துவள்வதுமான நுண்ணிய இடைப்புகள் துவள, மிகுசாமர மிரண்டுபுறமும் போடும் அவரும்- மிகுதியான வெண்சாமரங்களை இருபுறத்திலும் வீசுகிறவர்களும்; பரிபுரத் திருமலர்த்துணை பொருத்தி - தேவியுடைய சிலம்புகளணிந்த இரண்டு மலர்ப் பாதங்களையுங் கூட்டி, முடிமேல் சூடும் அவரும் - சிரசின்மேலே சூடிக்கொள் ளுகிறவர்களும்; கவிதொடுக்கும் அவரும் - பாட்டுப் பாடுகிறவர்களும்; பவுரி சுற்றி முறை நின்றூடுமவரும் - கூத்தின் விகற்பங்கள் தோன்றச் சூழ்ந்து ஒழுங்காக நின்றூடுமவரும்; இசைகள் பாடும் அவரும் - ஆட்டத்திற்குத் தக்க தாக ராகங்கள் பாடுகின்றவர்களும்; பல அரம்பையர்களே - அநேகம் அரம்பைப் பெண்களே. எ-று. "நுண்மை - இடை" என்னும் இருசொல் புணர்ந்தாயது.

'அரம்பையர்' தேவலோகப் பெண்கள். இச்செய்யுளும் குளகமே. (கஉஉ)

மஞ்சனமெடுப்பவருமாமலர்தொடுப்பவரும்வாள்விழிகளுக்
கஞ்சனமளிப்பவருமாரமுதளிப்பவருமன்னைதிருமுன்
கஞ்சனைபிடிப்பவரும்வஞ்சனையறப்பரிகலத்துடனெடுத்
தின்சொல்வழிநிற்பவருமெண்ணரியகோடிகளிடாகினிகளே.

[தேவிக்குத் திருமஞ்சன மெடுப்பவர்களும், மாலை கட்டுகிறவர்களும், கண்களுக்கு மைதீட்டுகிறவர்களும், அமுது நிவேதிப்பவர்களும், கண்ணாடி ஏந்துபவர்களும், குற்றேவல் செய்கிறவர்களும் எண்ணரிய கோடி இடாகினிகள் என்பதாம்.]

இ-ள். மஞ்சனம் எடுப்பவரும் - திருமஞ்சனம் எடுக்கின்றவர்களும், மாமலர் தொடுப்பவரும் - சிறந்த புஷ்பங்களை மாலையாகத் தொடுக்கிறவர்களும், வாள் விழிகளுக்கு அஞ்சனம் அளிப்பவரும் - தேவியினுடைய வாள்போல

விளங்குகின்ற கண்களுக்கு மையிடுவோர்களும், ஆர் அமுதளிப்பவரும் - அருமையான திருவமுதை நிவேதிப்பவர்களும், அன்னை திருமுன் - அந்தத் தாயானதேவி சந்நிதிமுன்னே, கஞ்சனை பிடிப்பவரும் - கண்ணாடி காட்டுகிறவர்களும், வஞ்சனையற - கபடமற்று, பரிகலத்துடனெடுத்து-பரிகலத்துடனே மற்றும் வேண்டியவைகளைக்கொண்டு, இன்சொல் வழிநிற்பவரும் - தேவியினுடைய இனிதான சொல்வழியே நிற்கிறவர்களும், எண்ணரிய கோடிகளிடாகினிகளே - (ஆகவுள்ள) எண்ணிக் கணக்கிடமுடியாதபடி மிகுந்திருக்கிற கோடிக் கணக்கான இடாகினிகளும். எ-று. ஈற்றசை.

'ஆர்' பொருந்திய என்றும் பொருளாம். இச்செய்யுளும் குளகம். (கஉஙு)

பண்ணவர்திரண்டுபகர்முன்றிறனில்வந்தடிபணிந்துதொழவே
மண்ணவர்விழுந்துதமதெண்ணமுடியும்படிவரங்கள்பெறவே
கண்ணருள்சுரந்துதறுகண்ணரிசுமந்தகனகத்தவிசின்மேற்
பெண்ணரசிருந்தனள்பிறங்குசடிலம்புடைபெயர்ந்தலையவே.

[தேவர்கள் தொழும் முன்றிலிலே மண்ணுலகத்தவர்கள் வந்து அடி பாவித்துதித்து வரங்கள்பெற தேவி பொன்மயமான சிம்மாசனத்தில் கருணையொடு வீற்றிருந்தாள் என்பதாம்.]

இ-ள். பண்ணவர் - தேவர்கள், திரண்டு - கூடி, பகர் முன்றிறனில் வந்து - துதிப்பதான திருமுற்றத்திலே வந்து, மண்ணவர் - மண்ணுலகத்தவர்கள், விழுந்து - கீழே விழுந்து, அடிபணிந்து தொழ - தேவி பாதங்களை வணங்கிக் கும்பிடவும், தமதெண்ண முடியும்படி வரங்கள் பெறவே - தம்முடைய எண்ணங்கள் நிறைவேறும்படி வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள்ளவும், பிறங்கு - விளங்குகின்ற, சடிலம் - சடைகள், புடைபெயர்ந் தலையவே- பக்கங்களிலெல்லாம் - அசைந்துஆட, கண்ணருள் சுரந்து - கண்களினிடத்தே கிருபையை அதிகமாகச்சுரந்து, தறுகண் - அஞ்சாமையை உடைய, அரிசுமந்த- சிங்கஞ்சுமந்த, கனகத்தவிசின்மேல் - பொன்னாசனத்தின் மேலே, பெண்ணரசிருந்தனள் - (இவ்வளவு சம்பிரமத்துடனே) பெண்களுக்கரசியான காளிதேவி வீற்றிருந்தாள். எ-று. ஏ - ஈற்றேகாரம். தொழவே - பெறவே, என்றதினில் உள்ள ஏகாரங்கள் எண்ணேகாரங்கள்.

"பகர் முன்றினில் - சிறப்பித்துக் கூறும்படியான தேவியின் திருமுற்றத்திலே, பண்ணவர் - தேவர்கள், திரண்டு - கூடி, அடிபணிந்து தொழவே, பாதங்களை வணங்கிக் கும்பிடவும்; மண்ணவர் - பூலோகத்தவர்கள், விழுந்து- அம்முன்றிலில் கும்பிட்டு விழுந்து, தமதெண்ண முடியும்படி வரங்கள் பெறவே - தங்களுடைய எண்ணங்கள் நிறைவேறும்படி வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள்ளவும்" என்றும் அன்வயித்து பொருள் கொள்வர். 'இல் முன்' என்றது முன்றில் எனவந்தது இலக்கணப்போலி. (கஉச)

அம்பொனின்மணித்தவிசினம்பிகையிருப்பவாசக்கரசனுங்
கம்பகரடக்களிறுவெம்பரிபதாதிகள்கடைத்தலைநிறீஇக்

கும்பமுனிதம்பியொடருந்தவர்குலத்தரசர்கூடிவரவே [ன்.
வம்புகுடிகொண்டமுலைமங்கைதிருமுன்றிலிடைவந்துதொழுதா

[வசிட்டரும் முனிவரும் அரசர்களும் சூழ்ந்துவா அரிச்சந்திரன் யானை
¹குதிரை காலாட் படைகளை வெளியே நிறுத்தி உள்ளே சென்று
தேவியை வணங்கினான் என்பதாம்]

இ-ள். அம்பொனின் - அழகிய பொன்னினாலும், மணி - ரத்தினங்களினாலும் (செய்த), தவிசின் - சிம்மாசனத்தில், அம்பிகைஇருப்ப - காளிகாதேவியிருக்க, அரசர்க்கு அரசனும் - ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திர மகாராஜனும், கம்பகடக்களிறு - அசைவையும் - மதச்சுவட்டையுமுடைய ஆண் யானைகளையும், வெம்பரி - வெவ்விதான குதிரைகளையும், பதாதிகள் - காலாட் படைகளையும், கடைத்தலை நிறீஇ - கடைவாசலில் நிறுத்திவிட்டு, கும்பமுனி தம்பியொடு - வசிஷ்டருடனே, அருந்தவர் - அருமையான தவமுனிவர்களும், குலத்தரசர், உயர்ந்த குலத்திலே பிறந்த அரசர்களும், கூடிவரவே - சூழ்ந்து சேர்ந்துவா, வம்பு - முலைக்கச்சிலே, குடிகொண்ட - நிலைபெற்றிருக்கின்ற, முலைமங்கை - தனங்களையுடைய காளிதேவியினுடைய, திருமுன்றிலிடை வந்து தொழுதான் - திருமுற்றத்திலே வந்து வணங்கினான். எ-று.

“அரசர்க்கரசனும்” என்றதில் உள்ள ‘உம்மை’ உயர்வுச்சிறப்பு. ‘நிறீஇ’ சொல்லிசை யளபெடை ‘வம்பு’ வாசனையும் ஆம். (சஉ௫)

மேற்படி வேறு.

நற்றேரைவிட்டிறங்கி நாயகியைத்தொழுதிறைஞ்சி நண்ணி
ராசன், முற்றேரைநோக்குதலு முடிவேந்தன் கருணைவிழி முனை
கடாக்கக், கற்றேருங்கற்பரியுங் கற்சிலையுங்கற்கணையுங் கன்னி
முன்னே, பொற்றேரும்பொற்பரியும் பொற்சிலையும் பொற்கணை
யும் பொலிந்தவன்றே.

[காளிதேவியின் திருமுன்றிலிலிருந்த கல்தேர்கள் குதிரைகள், வில்கள், கணை
எல்லாம் அரிச்சந்திரன் பார்வையில் பொன்தேர், பொற்பரி,
பொன்வில், பொன்னம்பு ஆயின என்பதாம்.]

இ-ள். அரசன் - அரிச்சந்திரமகாராசன், நல்தேரைவிட்டு இறங்கி-தனது நல்லதேரைவிட்டு ¹இறங்கி, நாயகியைத்தொழுது இறைஞ்சி - தேவியை வணங்கித் துதித்துக்கொண்டுபோய், முன்தேரை நோக்குதலும் - தன் முன்னே நின்ற ¹தேரைப் பார்க்கும் அளவில், முடிவேந்தன் - அந்தக் கிரீடாதிபதியான அரிச்சந்திர மகாராஜனின், கருணைவிழி முனைகடாக்க - கருணை நிறைந்த கண்களின் கடைகள் பட்டமாத்திரத்திலே, கல்தேரும் - கல்லாயிருந்த தேரும், கல்பரியும் - கல்லாயிருந்த குதிரையும், கல்சிலையும் - கல்லாயிருந்த வில்லும், கல்கணையும் - கல்லாயிருந்த அம்புகளும், கன்னி முன்னே - அந்தக் காளிகா தேவியின் சந்நிதானத்திலேயே, பொன்தேரும் - பொன்னாலாகிய தேரும், பொன்பரியும் பொன்னிறமான குதிரைகளும், பொன்சிலையும் - பொன்மய

மான வில்லும், பொன்கணையும் - பொன்மயமான அப்புகளுமாக, பொலிந்து - விளங்கிற்று. எ-று. அன்று ஏ - அசைகள்.

கற்றேர், கற்பரி, கற்சிலை, கற்கணை, இதில் கல் என்னும் சொல்லும் பொற்றேரும், பொற்பரியும், பொற்சிலையும், பொற்கணையும் என்பதில் பொன் என்னும் சொல்லும் திரும்பத்திரும்ப அதே பொருளின் வந்தமையினல் சொற்பொருட் பிரிதி நிலை அணிகளாம். இவை பெரும்பாலும் காய்ச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், மாச்சீர், மாச்சீர் என ஆறுசீர்கள் கொண்ட அடிகளையுடைய அறுசீர் விருத்தம். (கஉசு)

முன்னாளிற் கல்லானமுடித்தேரும்வாம்பரியுமூரிவில்லும்
பொன்னாகக்கண்டிறைவன் புந்திமகிழ்ந்ததிசயித்துப்புளகமெய்தி
யென்னாகவந்ததிதுவெனக்கருதுமவ்வளவிலிருண்டமேனி[தாள்
பொன்னாருங்களபமுலைப்புரிசடையாண்மணிவாயிற்புறத்துவந்

[முன்னாளில் கல்லாயிருந்த தேர் முதலியவைகள் இப்பொழுது
எதனால் பொன்னாயிற்று என்று அதிசயமும் மகிழ்ச்சியும்
கொண்டிருக்கும்போது காளிதேவி பிரசன்னமானாள்
என்பதாம்.]



இ-ள். முன் நாளிற் கல்லான - முன் நாளிலே கல்லாயிருந்த, முடித்தேரும் வாம்பரியும் - சிகரத்தை உடைய தேரும் தாவிச்செல்லும் குதிரைகளும், மூரிவில்லும் - பெரிய வில்லும் அம்பும், பொன் ஆகக்கண்டு - பொன்னாக மாறினதைப்பார்த்து, இறைவன் - அரிச்சந்திரமகாராஜன், புந்தி மகிழ்ந்து - மனமகிழ்ந்து, அதிசயித்து - ஆச்சரியமுற்று, புளகம் எய்தி - புளகாங்கிதம் கொண்டு, என்னாக வந்தது இது எனக் கருதும் அளவில் - இவைகள் எதற்காக இவ்வாருயிற்று என்று நினைக்கும் அந்தவேளையில், இருண்ட மேனி - இருண்டிருக்கிற நிறத்தை யுடையவளும், பொன் ஆரும் களபமுலை - அழகு பொருந்திய சந்தனச்சேறு பூசின தனங்களை உடையவளும், புரிசடையாள் - சுருண்ட சடையை உடையவளுமான காளிதேவி, மணி வாயிற் புறத்து வந்தாள் - தனது அழகிய வாயிலுக்கு வெளியே வந்தாள். எ-று. "வாம்பரி" வினைத்தொகை; 'என்னாக' எந்தக் காரணத்தால். என்றும் பொருளாம்; "பொன்னாரும் களபம்" என்பதற்கு, பொன்னிறமான சந்தனக்குழம்பு, என்றும், தேமல் படிந்ததும் சந்தனக்குளம்பு பொருந்தியதென்றும், பொன்னாபரணங்களும் சந்தனக்குழம்பு படிந்த என்றும் பொருள் கூறுவர்.

"மூரிவில்லும்" என்பதோடு அம்புக்கூட்டிப் பொருள் கூறியது "ஒருமொழியொழி தன் இனங்கொளற் குரித்தே" என்ற விதியில் 'கல்' வாம்பரி, மூரி வில்லோடும் ஒட்டிப் பொருள் தந்தது. (கஉஎ)

மாதங்கிவந்திடலு மலர்க்கரங்கண் முடிமீது வைத்துச்செம் பொற், பாதங்கண்மிசைவீழ்ந்து பணிந்தெனது தவப்பயனின்றுன் பலித்ததென்றுப், பூதங்கள்விளையாடுந் திருவாயிற்கற்றேர்போ ய்ப் பொற்றேரான, தீதென்றுநீயருள்வா யெனக்கேட்கக்குமரி யெடுத் தியம்பலுற்றாள்.

[காளிதேவி பிரசன்னமான உடனே கைகுவித்து வணங்கிப் பாதங்களில் வீழ்ந்து கல், தேர் முதலியவை பொன்னானது எதனால் என்று அரிச்சந்திரன் கேட்கக் காளி தேவி சொல்லப்புகுந்தாள் என்பதாம்.]

இ-ள். மாதங்கி - காளியானவள், வந்திடலும் - அப்படி வெளிவந்த உடனே; மலர்க்கரங்கள் முடிமீது வைத்து - தாமரை மலர்போலும் கைகளைத் தலைமேலே குவித்து, செம்பொன் பாதங்கள் மிசைவீழ்ந்து பணிந்து - அக் காளிதேவியினுடைய செம்பொன் மயமான பாதங்களிலே விழுந்து வணங்கி, எனது தவப்பயன்றான் பலித்ததென்று - எனது தவப்பயன் இன்றுதான் பலித மாயிற்றென்று, பூதங்கள் விளையாடும் - பூதங்கள் விளையாடுவதான,' திருவாயில் கற்றேர் போய்ப் பொன்தேர் ஆனது - திருவாயிலிலே நின்ற கல்லாயிருந்த தேரின் வடிவுபோய் இப்போது பொன்தேர் ஆனது, ஈது என்று- இன்ன காரணத்தினாலென்று, நீயருள்வாய் எனக்கேட்க - நீ அருளிச்செய்ய வேண்டும் என்று கேட்க, குமரி எடுத்து இயம்பல் உற்றாள் - அதற்குக் காளி யானவள் அதன் வரலாற்றை எடுத்துக் கூறுவாளாயினாள். எ-று.

"மலர்க்காம்" உவமைத்தொகை. மலர்போலும் கரமென விரியும். ()

உவராழிமண்ணாசையொழித்தகலுமடல்வருணனுலகில்யாருங் கவராதுபொற்றேரைக்கற்றேராகச்சபித்துக்கண்முன்காட்டி [கி யெவரானுமிதுநோக்கினிவ்வுருப்போய்ப்பண்டையுருவெய்துமா லவராகுமிதற்குரியோரவர்தமக்கேகொடுப்பதெனவளித்துப்போனான்.

[வருணன் யாரும் கவர்ந்து போகாதபடி கல்லாக்கி என்முன் காட்டி இது எவர் பார்க்கிறபொழுது பொன்னாகிறதோ அவர்களுக்கு இது உரியது அவர்களுக்குக் கொடு என்று தந்து போனான் என்பதாம்.]

இ-ள். உவர் ஆழி மண்ஆசை - இந்த உப்புக்கடலால் சூழப்பட்ட உலகத்து ஆசையை, ஒழித்து அகலும் அடல் வருணன் - நீக்கிச்சென்ற (ஞான) வலிமை மிகுந்த வருணதேவன், உலகில் யாரும் கவராது - உலகத்திலுள்ள எவரும் இந்தப் பொன்தேரைக் கவர்ந்து போகாதபடி, பொன்தேரை - இந் தப் பொன்னாலாகிய தேரை, கல்தேராகச் சபித்து - கல்தேராக ஆக்கி, கண் முன் காட்டி - என் கண்களுக்கு முன்னே காட்டி, எவரானும் - இனி எவராகி லும், இது நோக்கின் - இந்தத் தேரைப்பார்த்தால், இவ் உருப்போய் பண்டை

உரு எய்தும் ஆகில் - இந்தத்தேரின் கல்வடிவுபோய்ப் பழய பொன்வடிவு ஆகுமானால், அவராகும் இதற்கு உரியோர் - அவ்வாறு ஆகப் பார்த்தவர்களே இந்தத்தேருக்கு உரியவர்கள் ஆவார்கள், அவர் தமக்கே - அவர்களுக்கே, கொடுப்பது என அளித்துப் போனான் - கொடுக்கக்கடவது என்று என்னிடம் கொடுத்துச் சென்றான். எ-று.

'மண்ணாசை யொழித்தகலும்' என்றமையால் 'அடல் என்றதற்கு 'ஞான வலிமை' எனப் பொருள் கொண்டாம். 'தமக்கே' என்றதில் உள்ள ஏகாரம் தேற்றேகாரம். (கஉகூ)

மன்னாகேளென் னுடைய மணிவாயிறனில்வருணன் வைத்துப்
போன, அந்நாடொட்டிந்நெடுநா ளளவாகக்கல்லாய்நின் னருட்
கணோக்கப், பொன்னானசெழுந்தேர்நீ கொடுபோவென்றினிதளி
க்கப் புகழ்ந்தயோத்தி, நன்னாடன்றான்வாங்கி நவமணித்தேரதி
லேறி நடத்தினனே.

[வருணன் வைத்துப் போனதிலிருந்து இது காலம்வரை கல்லாயிருந்தது
உன் அருள் நோக்கால் பொன் ஆயிற்று நீயே இத்தேரை எடுத்துக்
கொள் என்று காளிதேவி சொல்ல அரிச்சந்திரன் புகழ்ந்து
துதித்து அத்தேர் ஏறிச்செலுத்தினன் என்பதாம்.]

இ-ள். மன்னா - அரிச்சந்திர மகாராஜனே, கேள் - கேட்பாயாக, என்னுடைய மணிவாயில் தனில் - என்னுடைய அழகிய வாசலிலே, வருணன் வைத்துப்போன - வருணனானவன் வைத்துச்சென்ற, அந்நாள் தொட்டு-அந்நாளிலிருந்து, இந்நெடுநாள் அளவாக - இந்த நெடுங்கால அளவும், கல்லாய்-கல்லாகவே இருந்து, நின் - உன்னுடைய, அருள்கண் நோக்க - இப்பொழுது உன்னுடைய கிருபைக்கண்ணினாலே பார்க்கவே, பொன் ஆன - (பழயபடி) பொன் ஆயிற்று, செழுந்தேர் - (அப்படிப் பொன் ஆன) செழுமையாகிய தேரை, நீ கொடுபோ - நீயே கொண்டுபோவென்று, இனிது அளிக்க - காளிதேவியானவள் சந்தோஷத்தோடு கொடுக்க, அயோத்தி நல்நாடன் - அயோத்திமாநகரத்தையும் அதைச்சூழ்ந்த நல்ல கோசல நாட்டையும் உடைய அரிச்சந்திரமகாராஜன், புகழ்ந்து ஏத்தி தான் வாங்கி - அந்தக் காளிதேவியைப் புகழ்ந்து துதித்து - அத்தேரைப்பெற்றுக்கொண்டு, நவமணித்தேர் அதில் ஏறி-அந்த நவரத்ன கசிதமான தேரின்மேலேறி, நடத்தினன் - செலுத்தினன். எ-று. ஏ - ஈற்றசை.

'மன்னா' என்றது 'விளி.' 'கேள்' முன்னிலை ஏவல். கொண்டுபோ, என்பது 'கொடுபோ' என்றாயது. இது தொகுத்தல் விகாரம். (கூ௦)

கலி விருத்தம்.

வாள்செலச்சிலைசெல மாதரார்செல
வாள்செலத்தேர்செல வாணைசெல்லநீ

டோள்செலுஞ்சுடர்மணித் தொடியினன்பல
நாள்செலக்கனேசிமா நாட்டைநண்ணினன்.

[வாள்கள், சிலைகள், பெண்கள், ஆள்கள், தேர்கள் ஆனைகள் ஆகிய
இவைகள் செல்ல அரிச்சந்திரன் பலநாள் சென்று கன்னேசி
நாட்டைச்சேர்ந்தான் என்பதாம்.]

இ-ள். வாள்செல - வாள் செல்லவும், சிலைசெல - விற்கள் செல்லவும், மாதரார்செல - பெண்கள் செல்லவும், ஆள்செல - காலாள்கள் செல்லவும், தேர்செல - தேர்கள் செல்லவும், ஆனைசெல்ல - யானைகள் செல்லவும், நீள்தோள் - நீண்ட தோள்களிலே, செலும் - செல்லும்படியான, சுடர்மணித் தொடியினன் - ஒளியை உடைய ரத்தினங்கள் பதித்த கேயூரமணிந்த அரிச்சந்திரன், பலநாள் செல - பலநாள் கழிந்தபின், கன்னேசிமாநாட்டை நண்ணினன் - கன்னேசிமா நாட்டைப் போய்ச்சேர்தான். எ-று.

'செல' செல்ல என்னும் சொல்லின் தொகுத்தல் விகாரம்; வாள்செல, சிலைசெல என்பதை முறையே வாள்படை வீரர்செல, விற்போர் வீரர் செல என்று பொருளும் கொள்ளுவர்; ஆனை, யானை என்பதன்போலி; 'தொடி' தொடுத்து நிற்பது என்னும் காரணம்பற்றி வந்த பெயர். தோளைத்தொடுத்து நிற்றலினல், 'தொடி' என்ருயிற்று. "கனேசி" கன்னேசி என்பதின் தொகுத்தல் விகாரம்; "தோள்செலும்" தோளிலே செல்லும், என்பதாம்.

'ஆனை செல்ல' என்பதை "ஆணைசெல்ல" என்று பாடமாகக் கொளின் 'தன் ஆக்கினைசக்கிரம் முன்சென்று கொண்டிருக்க, என்று பொருளாம். இவை பெரும்பாலும் விளச்சீர், விளச்சீர், மாச்சீர், விளச்சீர் என்னும் நான்கு சீர்கள் ஓரடிக்கு வந்த கலி விருத்தம். (கஙக)

தாழையின்முதிர்பழங்கமுகின்றாறுதே
மாழையின்கனிவிழைவருக்கையின்பலங்
கூழைவெண்குரங்கயல்குதிப்பக்கூன்குலை
வாழையின்கனியெலாமடியவீழுமால்.

[தென்னையின் நெற்றுக்களும் கமுகம் குலைகளும், மாங்கனிகளும்,
பலாவின் கனிகளும், மிகுந்திருப்பதனல் இவைகளுக்குப்
பக்கத்தில் குட்டையாகிய வெண்குரங்குகள் பாய
வாழையின் பழங்கள் அழிந்து சிந்தும்
என்பதாம்.]

இ-ள். தாழையின் முதிர்பழம் - (அந்நாட்டில்) தென்னை மரங்களினுடைய முற்றின நெற்றுக்களும், கமுகின் - பாக்கு மரத்தினுடைய, தாறு-குலைகளும், தேம்மாழையின் கனி - தேன்பொருந்திய மாமரத்தின் கனிகளும், விழை - விரும்பத்தக்க, வருக்கையின் பலம் - பலாவின் பழங்களும், (மிகுந்திருப்பதனல்) கூழை வெண்குரங்கு - குட்டையாகிய வெண்மையான குரங்கு, அயல் குதிப்ப-பக்கத்திலே குதிப்பதனல், (அந்த அதிர்ச்சியினலே) கூன்

குலை - விளைந்த குலைகளையுடைய, வாழையின் கனி எலாம் - வாழை மரங்களின் பழங்கள் எல்லாம், மடிய வீழும் - அழிந்து சிந்தி விழும். எ-று. ஆல்-அசை.

'எலாம்' எல்லாம் என்பதின் தொகுத்தல் விகாரம். (கஙஉ)

கூன்கடுவன்றலை குறும்பைவீழ்தலின்
றீங்கனிவருக்கையிற் புதைந்தசெம்முக
வான்கவிவால்பிடித் திழுத்துமந்திமுன்
றூன்கொடுகதலியும் படப்பைசாருமால்.

[கூனலாகிய ஆண்குரங்கின் தலையில் தென்னங் குறும்பைவிழ பலாமரத்தி லிருந்த ஒரு பெரிய குரங்கு தன் பெட்டையின் வாலைப்பிடித்து இழுத்து தனக்கு முன்னே செல்லும்படி கூட்டிக்கொண்டு வாழைச்சோலைக்குள் போம் என்பதாம்.]

இ-ள். கூன்கடுவன் தலை - கூனலான ஆண்குரங்கினது தலையின்மேல், குறும்பை வீழ்தலின் - தென்னங்குறும்பை வீழ்தலினாலே, தீம்கனி வருக்கையில் - (அந்தப் பயத்தினாலே) இனிதான பழங்களையுடைய பலாமரத்தில், புதைந்த செம்முக வான்கவி - மறைந்திருந்த சிவந்த முகத்தையுடைய ஒரு பெரிய குரங்கானது, வால்பிடித்து இழுத்து - (பெண்குரங்கின்) வாலைப்பிடித்து இழுத்து, மந்தி முன்றான் கொடு - பெண்குரங்கைத் தன் முன்னே கூட்டிக்கொண்டு, கதலியம்படப்பை சாரும் - வாழைச்சோலைக்குள் போய்ச் சேரும். எ-று. ஆல் - ஈற்றசை.

'கடுவன்' ஆண்குரங்கு, "மந்தி" பெண் குரங்கு. (கஙங)

பலவளைமணிகளும் பதுமராகமு
நிலவெழவெயிலெழ நீலம்பங்கயம்
புலரியுமாலையும் புகுதலில்லென
மலர்தலுங்குவிதலு மறந்தவாவியே.

[சங்கின் முத்தும் பதுமராகங்களும் நிலவும் வெயிலும் செய்ய குளங்களிலே நீலமலரும் தாமரையும் மலர்தலும் குவிதலும் அற்று இருந்தன என்பதாம்.]

இ-ள். பல வளை மணிகளும் - பல்விதமான சங்கு முத்துக்களும், பதுமராகமும் - பதுமராகமணிகளும், நிலவெழ வெயில்எழ - நிலவு தோன்றவும் வெயில் எறிக்கவும் விளங்குகிறதினாலே; வாவிலே பங்கயம் - குளங்களில் உள்ள நீலமலர்களும் தாமரை மலர்களும், புலரியும் - விடியற்காலமும், மாலையும் - மாலைக்காலமும், புகுதல் இல் என - தோன்றுகிறது இல்லை என்று, மலர்தலும் குவிதலும் மறந்த-மலர்தலையும் குவிகிறதையும் மறந்திருக்கின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

'நீலம்' அந்தியில் மலர்வது தாமரை, காலையில் மலர்வது, 'நீலம்' பகலிற் குவியும் 'தாமரை' இரவில் குவியும். இக்கன்னேசி நாட்டில், சந்திரன் ஒளியாகிய நிலவின் ஒளியும், கதிரவன் ஒளிபாகிய வெயிலின் ஒளியும் வளையினின்றும் பிறந்த முத்தினாலும் பதும ராகத்தினாலும் உண்டாக்கப்படுவதினால் குவிதலின்றி நீலமும் தாமரையும் மலர்ந்து விளங்கின என்பதாம். "எல்லியும் பகலுந்தோன்றா திமையவர் உலகம் எய்க்கும்" என்றார் பிறரும். (௩௩௪)

தாள்களுந்துடைகளுந் ததையலார்மணித்து
தோள்களுமுலைகளுஞ் சோலைகாட்டுவ
நீள்கனங்குழைகளு முகமுநீலக்கண்
வாள்களும்வாய்களும் வாவிகாட்டுமே.

இ-ள். அசோகின் தளிர்களாலே கால்களையும், வாழைகளாலே துடைகளையும், மூங்கில்களாலே பெண்களுடைய அழகிய தோள்களையும், கோங்கரும்புகளாலே கொங்கைகளையும் சோலைகள் தோன்றச்செய்வன, சுருள்களாலே நீண்ட கனமான குழைகளையும், தாமரை மலர்களாலே முகங்களையும், நீலமலர்களாலே கறுத்த கண்களாகிய வாள்களையும், செவ்வாம்பல்களாலே வாய்களையும் குளங்கள் தோன்றச் செய்வன. எ-று. (௩௩௫)

திருதிகென் றலைபுனன் மதகுசிந்தவும்
பருதியுட்பருதியுட் பற்றறாதென
வெருதிரைப்பேரொலி வேலையேழுமுட்
புகுதினுநிறைவுறா தளவில்பொய்கையே.

இ-ள். திருதிகென்று அலைகள் முழங்குகின்ற நீரை மதகுகள் பாய விடுகிறதினாலும், காலப் பருதிகள்தோறும் காலப் பருதிகள்தோறும் நீரைக்கொண்டிருத்தலின், குறைவுபடாதென்று சொல்லும்படி யனேகமான அலைகளில் பெரிய ஒலிகளையுடைய கடல்களேழும் உள்ளே புகுந்தாலும் அப்பொய்கை நிறைவுகொள்ளாது இதிலுள்ள நீரளவினாலே.

கன்னேசிநாட்டில் ஒரு குளத்திலுள்ள நீரளவுக்கு ஏழுகடனீரளவும் பற்றாது. வருஷங்கள்தோறும் வயல்களுக்கு மதகின்வழியே நீர் பாய்ந்துகொண்டிருந்தாலும் நீர் வற்றுகிறதில்லையென்க. (௩௩௬)

துகிரினுஞ்சிவந்தகாட் டிணைவெண்பேடையோ
டுகிரினுமலகினு மொடுக்குமீனுடன்
றிகிரியம்புள்புடை பெயரத்திண்சிறை
பகிரினீர்கடையுகப் பௌவமன்னதே.

இ-ள். பவளத்தைப் பார்க்கிலுஞ் சிவப்பான கால்களிரண்டையுடைய வெண்ணிறமான பெட்டையுடனே கால்நகத்தினாலும் வாய் மூக்கினாலும், ஒடுக்கங்கொண்ட மீனுடனே சக்கரவாகப் பட்சிகள் பக்கத்திலே செல்லுவதான

அந்தத்திண்ணிய பொய்கைக் கரையினின்றும் வயல்களுக்கு நீரை மதகின் வழியே பகுத்துவிட்டால் அந்தநீரளவு, கடைகாலத்திலே பொங்கி வருகிற கடலைப்போல்வது. எ-று.

அத்திண்ணிறை - அத்திண்ணிய பொய்கைக்கரை. (௩௩௭)

கூடியபிறனலக் கொள்கைகண்டமுன்
றூடியவோதிம மொளித்ததாமரை
வாடியவாறுகண் டாவிமாய்ந்திடத்
தேடியசேவறன் னுளந்தெளித்திடும்.

இ-ள். வேறொன்றைக் கூடின தன்னில் வேறான சுகங்கொண்டதைக் கண்டுகோபித்துப் பிணங்கின பெட்டையன்னமானது வேறொரு தாமரை மலரிலேபோய் மறைந்துகொண்டது. அப்போது அதிலிருந்த தாமரைமலர் குவிந்த தன்மையைக்கண்டு தனதுபெட்டை அம்மலரோடு மூடுதலா யிறந்து போயிற்றென்று தானு முயிரைவிட்டு மடியத்தேடிய சேவலன்னத்துக்கு (மற்றொரு பூவிலிருந்து பெட்டையன்னம்) மனந் தெளிவுபெறச்செய்யும். எ-று. (௩௩௮)

காற்றினிற் கலைந்துயர் சினையிற் நான்றதே
ளூற்றினிற்பறந்தகல் வாவியண்மியே
சேற்றினிற்பழகிய வயலிற்செங்கெலி
னூற்றினிற்பறப்பன நாலுபாலுமே.

இ-ள். வீசுகிற காற்றினாலே கலைதலாய் உயர்ந்த மாக்கொம்பினின்று மொழுகின தேனானது, ஆற்றைப்போல் பாவி அகன்ற குளத்தைக்கூடிச் சேற்றினாலே இறுகுதலையுடைய வயல்களிலே நட்ட சிவந்த நெற்களினுடைய நாற்றுகளிலே நாலுபக்கத்திலும் போய்ப் பாவுவன. எ-று. (௩௩௯)

பிணையனவிழியினர் நடைபெறக்கெழீஇத்
துணைபுனரோதிமந் தொடர்ந்துபின்வரத்
திணைபலபடர்ந்துதிண் டேரிழிந்தும்
னிணைமருப்பியானையி னெருத்தத்தேறினான்.

இ-ள். மான்போலுங் கண்களையுடைய பெண்கள் நடையைத் தானும் பெறுவதாகக்கூடிச் சேவலோடு கூடியிருந்த பெட்டையன்னமானது தொடர்ந்து வருவதான நிலங்கள் பலவுஞ்சென்று திண்ணிதான தேரைவிட்டிறங்கி அரிச்சந்திரமகாராஜன் இரண்டு கொம்புகளையுடைய யானையின் பிடரியின்மேலேறினான். எ-று. (௩௪0)

இடியெனமுழங்கிட வியம்பியங்களால்
வெடிபடுமுலகமும் விசும்புமென்னநீள்

கொடிகளுங்குடைகளுங் குழுமக்கொற்றவன்
கடிகமழ்கங்கையின் கரையைநண்ணினன்.

இ-ள். இடியைப்போல் முழங்குவதாகக் கொட்டுகிற வாத்தியங்களாலே உலகமும் ஆகாயமும் வெடித்துப்போகு மென்னும்படி நீண்ட கொடிகளுங் குடைகளுந் திரண்டுசெல்ல, அரிச்சந்திரமகாராசன் வாசனை பரிமளிக்கிற கங்கையாற்றின் கரையைப்போய்ச் சேர்ந்தான். எ-று. (கசசக)

முன்னரோர்முனிவரன் மொழிந்தசாபத்தாற்
பன்னகத்தரிதுயிற் பாற்கடற்கணே
பொன்னகர்வளனெலாம் புக்கதாமென
மன்னவன் கங்கையில் வந்திறங்கினன்.

இ-ள். முற்காலத்திலே ஒரு துருவாசமகாமுனிவர். இட்ட சாபத்தினால், பாம்பின்மேலே மகாவிஷ்ணு தூங்குவதான திருப்பாற்கடலிலே, தெய்வ லோகத்திலுள்ள செல்வமுழுதும் போனாற்போல், இந்த அரிச்சந்திரமகாராசன் தன் செல்வத்துடனே கங்காநதிக்கரையினருகே வந்திறங்கினன். எ-று. (கசசஉ)

மின்னிறநுண்ணிடை மின்னனார்முலைச்
செந்நிறச்சுண்ணமுந் திமிர்ந்தசாந்தமு
நன்னிறக்குங்குமச் சுவடுநண்ணிவான்
வின்னிறமொத்தது விமலதீர்த்தமே.

இ-ள். அப்பரிசுத்தமான கங்காசலம், மின்னலைப்போற் றுவளுவதான ஒளியைக்கொண்ட சிற்றிடைகளையுடைய பெண்கள் தம் கொங்கைகளிலணிந்த சிவந்த நிறத்தைக்கொண்ட கந்தபொடியும், நிறையப்பூசின சந்தனமும், நல்ல நிறத்தையுடைய குங்குமமும் படியக்கொண்டு ஆகாய வில்லினுடைய நிறத்தை யொப்பாயிற்று. எ-று. (கசசங)

வரைசெறிவேழமு மாவின்கூட்டமும்
விரைசெறிதார்ப்புய வேந்தர்மக்களும்
பிரசமாமலர்க்குழற் பேதைமாதரு
மரசனுங்கங்கைநீ ராடியேறினர்.

[யானைகளும், குதிரைகளும், இராஜபுத்திரர்களும், பெண்களும், அரிச்சந்திரனும், கங்கையில் முழ்கிக் கரை ஏறினர்கள் என்பதாம்.]

இ-ள். வரைசெறி வேழமும்-மலைகளைப்போல நெருங்கின யானைகளும், மாவின்கூட்டமும் - குதிரைக்கூட்டங்களும், விரைசெறி - வாசனை மிகுந்த, தார் - மாலையை அணிந்த, புயவேந்தர் மக்களும் - தோள்களையுடைய ராஜகுமாரர்களும், பிரசமாமலர்க்குழல் - தேன் ஒழுகப்பெற்ற சிறந்த புஷ்பங்களைச் சூடிய கூந்தல்களை உடைய, பேதை மாதரும் - பெண்களும், அரசனும்-அரிச்

சந்திரமகாராஜனும், கங்கை நீராடி - கங்கை நதியிலே மூழ்கி; ஏறினர் - கரை ஏறினர்கள். எ-று. உம்மைகள் - எண்ணும்மைகள்.

'மா' மிருகங்களுக்குப் பொதுப்பெயராயினும் சிறப்பினால் குதிரையைக் காட்டிற்று. (கசச)

அங்கைவேன்மன்னவ னருளினேக்கினே
மங்கைதன்கற்பினே வமைச்சர்மாண்பினே
வெங்கயற்கட்பெரு வெள்ளத்தோடும்போய்க்
கங்கையைப்பெரும்படைக் கடல்கடந்ததே.

[அரிச்சந்திரன் அருள் நோக்கினலோ சந்திரவதியின் கற்பினலோ, மந்திரிகளின் பெருமையினலோ கங்கையை அந்தப் பெரும் படைக்கடல் கடந்தது என்பதாம்.]

இ-ள். அம் - அழகிய, கை - கையிலே, வேல் - வேலைத்தாங்கிய, மன்னவன் - அரிச்சந்திரமகாராஜனின், அருளின் நோக்கினே - கிருபாதிருஷ்டியினலேயோ; மங்கைதன் - சந்திரவதியினுடைய, கற்பினே - கற்பினலேயோ, அமைச்சர் - மந்திரிகளுடைய, மாண்பினே - (நற்குண நற்செய்கைகளின்) பெருமையினலேயோ; வெம் - கடுமை ஆகிய, கயல்கள் - கெண்டை மச்சங்கள் பொருந்திய, பெரு வெள்ளத்தோடும்போய் - பெரிய நீர்ப்பெருக்கின் ஊடே சென்று, அப்பெரும்படைக்கடல் - அந்த அரிச்சந்திரமகாராஜனுடைய சேனைக்கடல், கங்கையைக் கடந்தது - கங்காநதியைக்கடந்தது. எ-று. ஏ-ஈற்றசை.

(அம்கை - அங்கை) "அகமுனைச்செவிகை வரினிடையன கெடும்" என்ற சூத்திரப்படி. 'அகம் - கை' என்றும் பொருள் கொள்ளினும் இழுக்காவாம். ஓகாரங்கள் ஐயப்பொருளில் வந்தன. "கங்கையைப் பெரும்படைக் கடல் கடந்ததே" கங்கையைக் கடல் கடந்தது என்றது சொல் நயம். ()

அன்னமாடுந்துறை யகழும்வாவியும்
வன்னமாமதில்களு மாடகூடமும்
பொன்னின்மாமேடையும் பொலிந்துதோன்றவக்
கன்னமாபுரிதனைக் கண்ணினேக்கினன்.

[அகழும், குளமும், மதில்களும், மாடகூடங்களும், மேடைகளும் விளங்கித்தோன்றும் கன்னமாபுரியைக் கண்ணினல் அரிச்சந்திரன் கண்டான் என்பதாம்.]

இ-ள். அன்னம் - அன்னப்பட்சிகள், ஆடும் - விளையாடுகிற, துறை - நீர்த்துறையை உடைய, அகழும் - அகழியும், வாவியும் - குளமும், வன்னம் - அழகிய, மா - பெரிய, மதில்களும் - மதில்களும், மாடகூடமும் - மாடகூடங்களும், பொன்னின் - பொன்மயமான, மாமேடையும் - பெரிய உப்பரிகைகளும், பொலிந்து தோன்ற - விளங்கிக்காண, அக்கன்னமாபுரிதனை - அந்தக்

கன்னமாபுரி என்னும் நகரத்தை, கண்ணின் நோக்கினன் - அரிச்சந்திரன் கண்ணால் கண்டான். எ-று.

'அகழி' தோண்டப்பட்டது என்னும் பொருள் உடையது. (கசசு)

இந்நகரெந்நக ரென்றுகூறவே
முன்னவற்குணர்த்திய முனிவர்நோக்கியே
மன்னவசொன்னவவ் வல்லிவாழ்திரு
நன்னகரீதென நயந்துகூறினர்.

[இந்தவூர் எந்தவூர் என்று அரிச்சந்திரன் கேட்க முன் சந்திரவதியைப் பற்றிக்கூறிய முனிவர்கள் நாங்கள் சொல்லிய அந்தச் சந்திரமதி வசிக்கும் ஊரே இது என்று கூறினர் என்பதாம்.]

இ-ள். இந்நகர் - இந்தவூர், எந்நகர் - எந்த ஊரென்று, கூறவே - அரிச்சந்திரன்கேட்க, முன் அவற்கு உணர்த்திய முனிவர் - முன்னே அரிச்சந்திர மகாராஜனுக்குத் தெரியப்படுத்தின முனிவர்கள், நோக்கியே - அரிச்சந்திரனைப் பார்த்து, மன்னவ - ஓ அரசனே, சொன்ன அவ்வல்லி - முன்னமே நாங்கள் சொல்லிய அச்சந்திரவதி என்னும் வல்லிக்கொடி போன்றவள், வாழ் - வாழ்ந்திருக்கின்ற, திரு நன்னகர் - அழகிய நல்ல நகரம், ஈதென - இதுதான்என்று, நயந்து - சந்தோஷத்தோடு, கூறினர் - சொல்லினர்கள். எ-று.

'இது' என்ற சுட்டு ஈது என நீண்டுவந்தது. 'நயந்து' விருப்பத்தோடும் என்றும் பொருள் கொள்வர். (கசஎ)

வல்லிதன்னகரிது மன்னவாவெனச்
சொல்லியபொழுதினிற் றுணுக்கமெய்தியே
யல்லியந்தாரின னவளையின்புறப்
புல்லியகலவியிற் புளகமெய்தினன்.

[முனிவர்கள் இது சந்திரமதி வசிக்கும் நகர் என்றவுடனே அரிச்சந்திரன் கூசுதல் கொண்டு அவளைக் கூடிய புணர்ச்சியிலுள்ள சந்தோஷம் போல் புளகாங்கிதம் கொண்டான் என்பதாம்.]

இ-ள். மன்னவா - அரசனே, வல்லிதன் நகர் இது - சந்திரவதி இருக்கும் நகரம் இதுதான், என - என்று, சொல்லிய பொழுதினில் - சொன்ன போது, அல்லியந்தாரினன் - அக இதழ்களை உடைய மலர்மாலை அணிந்த அரிச்சந்திரமகாராஜன், அவளை - அச்சந்திரவதியை, இன்புற - சந்தோஷமாக, புல்லிய கலவியில் - கூடிய புணர்ச்சியிலுள்ள சந்தோஷத்தைப்போல், புளகம் எய்தினன் - உடம்பெல்லாம் மயிர்புளகித் தலைக்கொண்டான். எ-று.

மேற்படி வேறு.

சனந்தொடர்ந்துபின்வரத்த டங்கடந்துசென்றவெஞ்
சினந்தொடர்ந்தவெம்பரித் த்ரிசங்குசந்தனைந்தன்முன்

மனந்தொடர்ந்துகொண்டவல்லி மன்னுகன்னமாபுரிக்
கனந்தொடர்ந்தமாமதிற் கபாடவாயிலெய்தினன்.

[சனந் தொடர்ந்துவர வழியெல்லாம் கடந்து கன்னமாபுரிக் கோட்டைவாயிலே வந்து அரிச்சந்திரன் சேர்ந்தான் என்பதாம்.]

இ-ள். சனம் - பரிசனங்கள், தொடர்ந்து பின்வர - தொடர்ந்து பின்னே வர, தடங்கடந்து சென்று - வழிமுழுதும் கடந்துபோய், வெம்சினம் தொடர்ந்த - வெவ்விதான கோபம் கொண்ட, வெம்பர் கடினமான வேகத்தை உடைய குதிரைப்படையை உடைய, த்ரிசங்கு - திரிசங்கு மகாராஜன், தந்த மைந்தன்- பெற்ற புத்திரனாகிய அரிச்சந்திர மகாராஜனின், முன்மனம் தொடர்ந்து கொண்டவல்லி - முற்றபட்ட நல்ல மனமானது விரும்பித் தொடரப்பெற்ற வல்லிக்கொடி போல்பவளாகிய சந்திரமதி, மன்னும் - இருக்கின்ற, கனம் தொடர்ந்த - மேகங்கள் சஞ்சரிப்பதான, மாமதில் - பெரிய மதில் சூழ்ந்த, கன்னமாபுரி - கன்னமாபுரத்தினது, கபாடவாயில் எய்தினன் - கதவை உடைய கோட்டைவாயிலுக்கு அருகே சென்றான். எ-று.

'சினந்தொடர்ந்த வெம்பரி' சத்துருக்களிடத்தே கோபத்தைச் செலுத்துகின்ற வேகத்தையுடைய குதிரைப்படை என்றும் கூறுவர். "வெம்பரி" பட்டத்து யானை எனினும் பொருந்தும். 'த்ரிசங்கு' மூன்றுமுளை அடிக்கப்பட்டவன் என்னும் காரணம்பற்றி வந்தபெயர் இவன் சூரிய குலத்துதித்த அரசன். அரிச்சந்திரனுக்குத் தந்தை, 'கபாடம்' கதவு. இது வடமொழிப் பதம். இவை பெரும்பாலும் ஓரடிக்கு காய்ச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், விளச்சீர் எனவந்த கலி விருத்தம். (கசக)

மடங்கலுற்றவாயிறோறு மகரதோரணங்களு
மிடங்கணிப்பொறிப்பரப்பு மெண்ணிறந்தமர்மதிற்
கிடங்கடங்கநீலமுங் கிளர்ந்தழுந்தகஞ்சமு
மிடங்கருஞ்சுணங்குமீ னினங்களும்பெருத்தவே.

[வாயில் முழுதும் மகர தோரணங்களும் வரிசைகளிலெல்லாம் சித்திர நிரைகளும் அளவில்லாத பெருமையை உடைய மதில்களும் இருக்கின்றன. அகழ் கிடங்குகளில் எல்லாம் நீலம், தாமரை, முதலிய மலர்களும், நீரில் முதலை நீர் நாய் முதலிய ஜலசரங்களும் மிகுதியாய் இருக்கின்றன என்பதாம்.]

இ-ள். மடங்கல் உற்ற வாயில் தோறும் - இருபுறத்திலும் சிங்கங்களை உடைய வாயில் முழுதும், மகர தோரணங்களும் - மகரதோரணங்களும், இடங்கணிப் பொறிப்பரப்பும் - சங்கிலிகோத்து நீளக்கட்டியிருக்கும் வரிசைகளிலெல்லாம் சித்திர நிரைகளும், எண்ணிறந்த மாமதில் - அளவில்லாத பெருமையை உடைய மதில்களும், கிடங்கு அடங்க - அக்கிடங்கு முழுவதும், நீல

மும் - நீலோற்பல மலர்களும், கிளர்ந்தெழுந்த கஞ்சமும் - நீண்டு மலர்ந்து விளங்குகின்ற தாமரை மலர்களும், இடங்கரும் - அதிலே முதலைகளும், சுண ங்கும் - நீர் நாய்களும் மீனினங்களும் - ஜல சரங்களும், பெருத்தவே - மிகுந் திருந்தன. எ-று. ஏ - ஈற்றசை.

"இடங்கணிப் பொறிப்பரப்பு மெண்ணிறந்த மாமதில்" என்றதற்கு, மாமதில் - பெரிய மதில்களில், இடங்கணி - சங்கிலிகளாற் கட்டப்பட்ட, பொறிப்பரப்பு - மதிள் உறுப்புகள், எண்ணிறந்த - பல, என்றும் 'இடங் கணிப் பொறிப்பரப்பும் - சங்கிலியால் இயைத்துக் கட்டப்பட்ட பொறிகளின் மிகுதியும், எண்ணிறந்த மாமதில் - அநேகம் மதில்களும், (அல்லது எண்ணு தற்கரிய சிறப்பையுடைய மதில்களும்) என்றும் பொருள் செய்வர்.

"எண்ணிறந்த மாமதிற் கிடங்கடங்க" என்று ஒரு தொடராகக்கொண்டு, எண்ணுதற்கரிய சிறப்பு வாய்ந்த பெரிய மதிலைச்சூழ்ந்த கிடங்குகளில் எல் லாம் என்றும் பொருள் கொள்வர். (கடுO)

நிகரிலாதபொற்குவட்டை யுட்டிறந்துநீணிறை
நகரியெங்கும்வைத்தவொத்த நகருமாடகூடமுஞ்
சிகரநேமிவரைதிரித்த தன்புறஞ்செறித்தநீர்
மகரவாரியொத்தசெம்பொன் மதிலுநீள்கிடங்குமே.

[நகரில் உள்ள வீடுகளும் மாடகூடங்களும் பொன்மலையை உள் குடைந்து வரிசை வரிசையாக வைத்ததுபோல விளங்கும். மதிலும் அகழியும் சக்கரவாளகிரியும் பெரும்புறக்கடலும் போல விளங்கும் என்பதாம்.]

இ-ள். நகரும் - நகரமும், மாடகூடமும் - மாடகூடங்களும், நிகரிலாத- ஒப்பில்லாத, பொற்குவட்டை - பொன்மலையை, உள்திறந்து - உள்ளே குடைந்து, நீள் நிறை நகரி எங்கும் - நீண்ட வரிசையான பட்டணமுழுதும், வைத்தவொத்த - வைத்திருக்கிறது போல என, செம்பொன் - செவந்த பொன் நிறமாகிய, மதிலும் - அந்த நகரத்து மதிலும், நீள் கிடங்கும் - நீண்ட அகழியும், சிகரநேமி வரைதிரித்த தன்புறம் செறித்தநீர் மகரவாரி ஒத்த - சிக ரத்தையுடைய சக்கரவாள கிரியையும் அச்சக்கரவாளகிரிக்கு அப்புறமாகத் திரண்டுள்ள நீரான மகர மீன்களைக்கொண்ட பெரும்புறக்கடலையும் ஒத்திருக் கின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

"உள்திறந்து" உள்ளே துவாரம் செய்து என்றும் ஆம். (கடுக)

பங்கபச்சகாயவன்ன றன்குலப்பகீரத
னங்கண்வானகத்துநின்றொ ராறழைத்தனன்முன
மங்கையைப்பயந்தமன்னன் மாநகர்க்குளெண்ணிலாக்
கங்கைதந்துளானெனக் கலித்தகேதனங்களே.

[சூரியன் குலத்துதித்த பகீரதன் ஆகாயத்திலிருந்து ஒரு கங்கையைத் தான் கொண்டுவந்தான். சந்திரவதியைப்பெற்ற சந்திரதயன் இப்பொழுது பல கங்கைகளைக் கொண்டுவந்திருக்கிறான் என்று சொல்லும்படி கொடிகள் ஒலித்தன என்பதாம்.]

இ-ள். பங்கயச்சகாய அண்ணல் தன் - தாமரைக்குத் துணையான சூரியனின், குலப்பகீரதன் - குலத்திலே தோன்றிய பகீரத அரசன், மூனம்-முன்நாளிலே, அம்கண் - அழகிதான இடத்தை உடைய, வானகத்து நின்று- ஆகாயத்தில் இருந்து, ஒரு ஆறு அழைத்தனன் - ஒரு ஆற்றை உலகத்திலே வரும்படிச்செய்தான்; (இப்பொழுது) மங்கையைப்பயந்த மன்னன் - சந்திரவதியைப்பெற்ற சந்திரதய அரசன், மாநகர்க்குள் - தன்னுடைய பெரிய நகருக்குள், எண்ணிலா - கணக்கற்ற, கங்கையைத் தந்துளான் என - கங்காநதிகளை வாவழைத்திருக்கிறான் என்று சொல்லும்படி, கேதனங்கள் - கொடிகள், கலித்த - ஒலித்தன. எ-று. ஏ - ஈற்றசை.

'பங்கயம்' - தாமரை. சேற்றிலே தோன்றுவது என்னும் காரணம் பற்றி வந்தபெயர் இது வடமொழி, 'பகீரதன்' சகானின்பேரன்; 'மங்கை' பெண்களின் பருவப்பெயர், இஃது ஏழு பருவங்களில் ஒன்று; இங்கு ஆகுபெயராய்ச் சந்திரவதியைக் குறித்தது. (கருஉ)

விண்டலத்துமாதரிந்த மேதினிக்கிறங்கவு
மண்டலத்துமாதர்வானின் வண்மைசென்றுகாணவுங்
கொண்டல்விண்டெழச்சமைத்த கூடமாடகோபுர
மண்டரண்டமூடறுத்த தற்குமப்புறத்தவே.

[தேவமாதர்கள் பூமியிலிறங்கவும், பூலோக மாதர்கள் பொன்னுலக அழகைப் பார்க்கவும், அனுகூலமாகும்படி கூடங்களும் மாடங்களும் கோபுரங்களும் அண்டங்களுக்கு அப்புறமும் பிளந்து சென்றிருக்கின்றன என்பதாம்.]

இ-ள். விண்தலத்து மாதர் - ஆகாயத்திலுள்ள பெண்கள், இந்த மேதினிக்கு இறங்கவும் - இந்தப் பூமியிலே வந்து இறங்கவும்; மண்தலத்து மாதர்- பூமியில் இருக்கிற பெண்கள், வானின் - தேவலோகத்தின், வண்மை - அழகை, சென்று காணவும் - அங்கே போய்ப்பார்க்கவும், கொண்டல் விண்டு எழ- மேகமண்டலத்தைப் பிளந்து அதற்கும் மேலே எழும்படி, சமைத்த - செய்திருக்கிற, கூடம் - கூடங்களும், மாடம் - மாடங்களும், கோபுரம் - கோபுரங்களும், (எல்லாம்) அண்டரண்டம் ஊடு அறுத்து - எல்லா அண்டங்களுக்கு மேலிட்டுச்சென்று, அதற்கும் அப்புறத்த - அங்குள்ள லோகங்களுக்கும் அப்பால் உயர்ந்திருக்கின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

'மேதினி' பூமி, மதுகை டவர்களின் மேதசினல் நனைந்தமையின் பூமிக்கு 'மேதினி' என்னும் பேர் எய்தியது. (கருங)

நெடியமாடநேத்திரத்தி னிரைவகுத்தசாளரத்
திரையின்மாதரெழின்முகங்க ளெங்கணும்விளங்குதற்
கடிகொள்வெற்பின்மீதெழுந்த கதிர்தனைத்துளைத்ததி
னடுவுதித்தகளிர்மதிக்கு நிகரெனப்பொலிந்தவே.

[பெரிய மாடங்களின் கண்கள்போல் அமைந்திருக்கின்ற சாளரத்தில்
பெண்கள் முகம் தோன்றுதல் உதயகிரியிலே தோன்றிய
சூரியனைத் துளைத்து அதின் நடுவில் தோன்றும் சந்
திரனுக்கு ஒப்பாக விளங்கிற்று என்பதாம்.]

இ-ள். நெடிய மாடம் நேத்திரத்தின் - நீண்ட மாளிகைகளில் கண்கள் போல், நிரைவகுத்த சாளரத்தினடியில் - வரிசையாகச் செய்திருக்கிற சன்னல்களின் இடங்களிலே, மாதர் - பெண்களினுடைய, எழில் முகங்கள்- அழகிய முகங்கள், எங்கணும் விளங்குதல் - எவ்விடத்தும் விளங்குதலானது, கடிகொள் - ஒளியைக்கொண்ட, வெற்பின்மீது - உதயகிரிமேலே, எழுந்த- தோன்றிய, கதிர்தனை - சூரியனை, துளைத்து - துவாரம்செய்து, அதின் நடுவு- அதன் நடுவிலே, உதித்த களிர்மதிக்கு - உதயமான குளிர்ந்த சந்திரனுக்கு, நிகரென - சரி என்று சொல்லும்படி, பொலிந்த - விளங்கின. எ-று. ஏ - ஈற்றசை. (கருச)

அலங்கல்தங்குவேலினன னீகவெள்ளமந்நகர்ப்
பொலங்கலந்தமாமதிற் புறம்பெலாநிறைந்துபி
னிலங்கவர்ந்திடச்செறிந்த நீலவேலையேழுமோர்
பிலங்கலந்ததென்னவே பெருத்தவாயில்புக்கதே.

[அரிச்சந்திரனின் சேனை மதில்களுக்கெல்லாம் புறம்பே சூழ்ந்து தங்கிப்
பின்பு கோட்டை வாயிலுக்குள் நுழைந்தது உலகத்தையே விழுங்க
வரும் ஏழு கருங்கடலும் ஒரு பிலத்துக்குள் நுழைவதுபோல்
இருக்கிறது என்பதாம்.]

இ-ள். அலங்கல் தங்கு வேலினன் - வெற்றிமாலை தங்கிய வேலாயுதத்தை உடைய அரிச்சந்திர மகாராஜனின், அனீகவெள்ளம் - சேனைக்கடல், அந்நகர் - அந்த நகரத்தின், பொலம் கலந்த - பொன்னிறமான அழகு கலந்துள்ள, மாமதிற் புறம்பு எல்லாம் - பெரிய மதில்களுக்கு அப்புறம் எல்லாம், நிறைந்து - நிரம்புதலாகி, பின் - பின்பு, நிலங்கவர்ந்திடச் செறிந்த - உலகத்தையே முற்றும் விழுங்கிவிடும்படி நெருங்கிய, நீலவேலை ஏழும் - நீல நிறக் கடல்கள் ஏழும், ஒரு பிலம் கலந்த தென்னவே - ஒரு குகைக்குள் போய்ப் புகுந்தாற்போல, பெருத்த வாயில் புக்கது - பெரிதாயுள்ள கோட்டைவாயிலுக்குள் புகுந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

'பொலம்' - பொன் நிறம், அழகு 'அலங்கல்' - மாலை. இங்கு வெற்றி மாலையைக் குறித்தது. வெற்றிபெற்றோர் அணிவது 'வாகை மாலை' இதனை

"எள்ளினரைச் சோப்பொருது செகுத்த வென்றி வாகையும்" என்பதனால் அறியலாம். (கருடு)

தோரணத்துநீழன்மன்னு சோதிரத்நவேதிகைப்
பூரணக்குடங்களும்பொ லிந்திலங்குதீபமுங்
காரணத்தமைச்சர்தந்தெ ருக்களுங்கடந்துபோய்
வாரணத்திழிந்துமன்னன் மண்டபத்திலெய்தினன்.

[அரிச்சந்திரன், மதிதயனின் நகருக்குள் வீதிகளை எல்லாம் கடந்து யானையை விட்டு இறங்கி சந்திரதயனுடைய சபா மண்டபத்துக்குள் சென்றான் என்பதாம்.]

இ-ள். மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், தோரணத்து நீழல் மன்னும்- தோரணங்களின் காந்தி வீசுவதாயிருக்கிற, சோதி - பிரகாசத்தைக்கொண்ட, ரத்நவேதிகை - மாணிக்கத் திண்ணைகளின்மேலே, பூரணக் குடங்களும்- (விளங்குகின்ற) நிறை குடங்களும், பொலிந்து இலங்கு தீபமும் - பிரகாசத்தோடு விளங்கும் விளக்குகளும், காரணத்து - நாட்டை ஆள்வதற்கு பெரும் உதவியாயிருக்கின்ற, அமைச்சர் தம் - மந்திரிகளுடைய, தெருக்களும்-தெருவுகளையும், கடந்துபோய் - கடந்து சென்று, வாரணத்திழிந்து - யானையை விட்டிறங்கி, மண்டபத்தில் எய்தினன் - சபா மண்டபத்திற்குள் புகுந்தான். எ-று.

'நிழல்' என்பது "நீழல்" என முதல் நீண்டது. பூரணக்குடங்கள், பகல் விளக்கு. தோரணம் இவைகள் மங்கலத்தைக் காட்டும் குறிகள். (கருசு)

தருவிருந்தகாணிருந்த சபைகொண்மண்டபத்திலே
மருகன்வந்துபுகுதலுந்தன் மனமகிழ்ந்துமதிதய
னருகிருந்தவரசரோடு மாதனத்திருந்துபோ
யிருகரங்களிறுகநண்பி னெதிர்நடந்துதழுவினன்.

[சந்திரதயன் தன் மருமகனாகிய அரிச்சந்திரன் வந்தது மண்டபத்தில் புகுந்ததும், சந்தோஷப்பட்டு சூழ்ந்திருந்த அரசர்களோடும் ஆதானத்தை விட்டெழுந்து போய் இரு கைகளாலும் கட்டித்தழுவினன் என்பதாம்.]

இ-ள். தரு இருந்த கான் - கற்பகத்தருவின் செயல் குடிகொண்டிருக்கப் பெற்ற கையை உடைய சந்திரதய அரசன், சபைகொள் மண்டபத்திலே-சபை கூடி யிருக்கிற கொலுமண்டபத்துக்குள்ளே, மருகன் வந்து புகுதலும் - மருமகனாகிய அரிச்சந்திரமகாராஜன் வந்து புகுந்த உடனே, மதிதயன் - அரிச்சந்திரதய அரசன், மனமகிழ்ந்து - மனது சந்தோஷித்து, அருகிருந்த அரசரோடு - தனது பக்கத்திலிருந்த அரசர்களுடனே, ஆதனத்திருந்துபோய் - சிங்காதனத்தைவிட்டு எழுந்துபோய், நண்பின் எதிர் நடந்து - அன்போடு எதிர்கொண்டு சென்று, இருகரங்களிறுக - இரு கைகளாலும் இறுக, தழுவினன்- ஆலிங்கனம் செய்தான். எ-று.

கொடுக்குந் தன்மைக்கு, கார், தரு, தேனு, முதலியவற்றை ஒப்புக்கூறு தல் மாபு, இச்செய்யுளில் தருவைக் கூறினர், தரு என்றது கற்பகத்தருவை. இரப்பவர்க்குத் தன்னிடத்து இருந்து உண்டாக்கி இல்லை என்னுது தருந் தன்மை யுடையதாதலின் 'கற்பகம்' என்று பெயராயது. கற்பகம் என்பதற்கே உண்டாக்குவது என்பது பொருளாம். இது வடமொழி. (கருஎ)

முனிவருக்குமாசருக்கு முழுதுமாதனங்கொடுத்
தினிதுகூறியவ்வவணி யாவருமிருந்தபி
னனிகவேலைமதிதயன்ற ணுதனத்திருந்துளங்
கனியவாசமுகமலர்ந்து கண்களிப்பநோக்கினன்.

[வந்த முனிவர்களுக்கு அரசர்களுக்கும் அவர் அவர்களுக்குத் தக்கபடி ஆதனம் கொடுத்து, தானும் இருந்துகொண்டு மனது சந்தோ ஷித்து முகமலர்ந்து கண்களிக்க நோக்கினன் என்பதாம்.]

இ-ள். முனிவருக்கும் - (அரிச்சந்திரனேடு கூடவந்த) முனிவர்களுக் கும், அரசருக்கும் - அரசர்களுக்கும், முழுதும் ஆதனம் கொடுத்து - முழுமை யும் இருக்குமாறு ஆதனம் தந்து, இனிது கூறி-உபசாரவார்த்தைகள் சொல்லி, அவ்வவண் - அவர் அவர்கள் இருக்கும் இடங்களிலே, யாவரும் இருந்தபின்- எல்லோரும் இருந்த பிற்பாடு, அனிகவேலை மதிதயன் - சேனுசமுத்திரத்தை உடைய சந்திரதய அரசன், தன் ஆதனத்திருந்து - தன்னுடைய சிங்காதன த்தி லிருந்துகொண்டு, உளம் கனிய - மனம் உருக, வாசமுகமலர்ந்து - அழகு குடிகொண்ட முகமானது மலர்ச்சி அடைந்து, கண்களிப்ப-கண்கள் சந்தோஷ மடைய, நோக்கினன் - பார்த்தான். எ-று.

உம்மைகள் எண்ணும்மைகள், 'வாசமுகமலர்ந்து' வாசமுடைய செந்தா மரைபோல முகமலர்ச்சி கொண்டு, என்றும் பொருள் கூறுவர். (கருஅ)

வெற்றிமன்னனும்மணம் விரும்பிவந்தமன்னருஞ்
சுற்றிநின்றமாதருந் துலங்குதாரமைச்சரும்
பற்றியுற்றெதிர்ந்தகண்கள் பசுமரத்திலாணிபோற்
சற்றிமைக்கலாதுவள்ள றன்முகத்தைநோக்கினர்.

[சந்திரதய அரசனும் சுயம்வரத்துக்கு வந்த மற்ற அரசர்களும் சூழ்ந்துள்ள பெண்களும் மந்திரிகளும் வைத்த கண்ணை மாற்றமுடியாது இமை யாமல் அரிச்சந்திரனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்பதாம்.]

இ-ள். வெற்றி மன்னனும் - ஜெயத்தை உடைய சந்திரதய அரசனும், மணம் விரும்பிவந்த மன்னரும் - கலியாணத்தை இச்சித்து வந்த அரசர்களும், சுற்றி நின்ற மாதரும் - சுற்றி நின்ற பெண்களும், துலங்கு - விளங்குகின்ற, தார் - மாலையணிந்த, அமைச்சரும் - மந்திரிகளும், பற்றியுற்றெதிர்ந்த கண் கள் - அன்புகொண்டு பார்த்த கண்கள், பசுமரத்தில் ஆணிபோல் - பச்சைமரத் தில் ஆணி அறைந்ததுபோல் சிறிதும் வைத்த கண்ணை மாற்றமுடியாதபடி,

சற்றிமைக்கலாது - சிறிதும் இமையாமலும், வள்ளல் தன் முகத்தை-ஈகையிற் சிறந்த அரிச்சந்திரமகாராஜனுடைய முகத்தையே, நோக்கினர் - பார்த்தார்கள்; எ-று. உம்மைகள் - எண்ணும்மைகள்.

'பசுமரத்தாணி' அடித்த இடத்திலிருந்தும் சிறிதும் அலசக்க முடியாதபடி இறுகி இருக்கும். (கஙஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மாந்தருமாதராரு மன்னருமமைச்சர்தாமு
மேந்தலைப்பார்த்தகண்க ளிமைத்திலர்பிறிதுநோக்கார்
மாந்தளிரனையமேனி வாணுதலிரதியென்பாள்
காந்தனுமிவனேவேறு காமனுமுளனேவென்பார்.

[ஆடவரும் பெண்களும் அரசர்களும் மந்திரிகளும் அரசனைப் பார்த்த கண்ணை இமைக்காமலும் வேறு ஒன்றையும் பார்க்காமலும் இரதிதேவிக்கு நாயகன் இவன்தான் வேறு காமன் என்பவன் இல்லை என்றார்கள் என்பதாம்.]

இ-ள். மாந்தரும் - புருஷர்களும், மாதராரும் - பெண்களும், மன்னரும் - அரசர்களும், அமைச்சர் தாமும் - மந்திரிகளும், ஏந்தலைப்பார்த்த கண்கள் - அரிச்சந்திரமகாராஜனைப் பார்த்த கண்களை, இமைத்திலர் - இமைக்கவில்லை, பிரிது நோக்கார் - வேறொன்றையும் பார்க்காதவர்களாகி, மாந்தளிர் அனையமேனி - மாந்தளிரைப்போலும் தேகத்தையுடைய, வாணுதல் - ஒளி பொருந்திய நெற்றியை உடைய, இரதி என்பாள் - இரதிதேவி என்பவளுக்கு, காந்தனும் இவனே - நாயகனும் இவன்தான், வேறு காமனும் உளனே என்பார் - இவனே அல்லாமல் வேறு மன்மதனும் உண்டோ என்பார்கள். எ-று. உளனே என்றதில் உள்ள ஓகாரம் தெரிநிலைப் பொருளது. இதனையே வினைப் பொருளென்றும் கூறுவர்; உம்மைகள் எண்ணும்மைகள்.

இவை பெரும்பாலும், விளச்சீர், மாச்சீர், மாச்சீர், விளச்சீர், மாச்சீர், மாச்சீர் என்னும் ஆறுசீர்கள் கொண்ட அடியால் வந்த அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். (கசு0)

சித்திரம்போலமன்ன னிருந்தனன்றிகைத்தும்வேறே
ருத்தரமுரையானாகி யுள்ளுளேமகிழ்ச்சிபொங்க
வத்திரவிழியாண்மேனு ளருந்தவமுடையாளாயி
னித்திறப்புயமுமார்பு மெய்துமென்றெண்ணிநைந்தான்.

[சந்திரதய அரசன், வேறு ஒன்றும் பேசாது சித்திரம்போல் இருந்து. சந்திரவதி முன்னாள் நல்ல தவத்தைச் செய்தவளானால் இந்த அரிச்சந்திரனுடைய புயத்தையும் மார்பையும் பொருந்துவாள் என்று உள்ளத்தில் மகிழ்ச்சியும் வருத்தமுங் கொண்டிருந்தான் என்பதாம்.]

இ-ள். சித்திரம்போல மன்னன் இருந்தனன் - சந்திரதய அரசன் அரிச்சந்திரனின் அழகில் மயங்கி சித்திரம்போல இருந்தான்; திகைத்தும் - மறந்

தும், வேறோர் - வேறொரு, உத்தரம் உரையானாகி - வார்த்தையும் சொல்லாதவனாகி, உள்ளுளே - உள்ளுக்குள்ளே, மகிழ்ச்சி பொங்க - சந்தோஷம் அதிகப்பட, அத்திரவிழியாள் - அம்புபோலுங் கண்ணையுடைய சந்திரவதியானவள், மேல்நாள் - முன் நாளில், அருந்தவம் உடையாளாயின் - அரிய தவத்தைச் செய்தவளாக இருப்பாளேயானால், இத்திருப்புயமும் மார்பும் - அந்த அழகிய அரிச்சந்திரனுடைய தோள்களையும் மார்பையும், எய்தும் - சேர்வாள், என்று எண்ணி - என்று, ஆலோசித்து, நைந்தான் - (எங்கே இவனை நாயகனாக அடையாமற் போகின்றாளோ என்று வருந்தினான். எ-று.

'மறந்தும்' என்றதில் உள்ள உம்மை உயர்வுச்சிறப்புப் பொருளது. அரிச்சந்திரன் அழகைக்கண்டு மகிழ்ந்தான் தன்மகள் எங்கே அரிச்சந்திரனை நாயகனாக அடையாமற் போய்விடுகிறாளோ என்று நினைந்து நைந்தான் என்பது. "மேனாள்" என்றது முற்பிறப்பைக் குறிக்கின்றது. இப்பிறப்பில் இன்ப துன்பங்கள் முற்பிறப்பின் நல்வினை தீவினையைச் சம்பந்தித்தா யிருக்கும் என்பது சித்தாந்தம். (கசுக)

சிவனமக்கருளிச்செய்த திருவுளப்படியேகாண்ப
திவன்றனக்கெய்துமாயி னேழையுமியானுஞ்செய்த
தவமுமாதவமாமல்லாற் றவமுமென்றனைப்பெறு
மவமெனவெண்ணியெண்ணி யளவிலாதழுங்கலுற்றான்.

[சிவபெருமான் அருளிய திருவுளப்படி இவன் காண நேர்ந்தால் என்மகளும்
நானும் செய்ததவம் பெரிய தவமே இல்லாமற் போனால் என்
தவமும் நான் புத்திரியைப் பெற்றதும் வீண்என்று
கிலேசிக்கல் ஆனான் என்பதாம்.]

இ-ள். சிவன் நமக்கு அருளிச்செய்த - சிவபெருமான் நமக்கு அருளிச்செய்த, திரு உளப்படியே - அவர் திரு உள்ளப்படியே, காண்பது - (நமது புதல்வியின் கழுத்திலுள்ள மாங்கல்யத்தை) கண்டு கொள்வது, இவன் தனக்கு எய்தும் ஆகின் - இந்த அரிச்சந்திரமகாராஜனுக்குக் கூடுமானால்; ஏழையும் யானும் செய்த - நம்முடைய பெண்ணும் நாமும் செய்த, தவமும் மாதவமாம்- தவமும் பெரிய தவமாகும், அல்லால் - அதை இவன் காணக்கூடாததாக ஆகுமானால், தவமும் என் தனையைப்பேறும் - நான் செய்த தவமும் நான் புத்திரியைப்பெற்றதும், அவம் என - வீணானது என்று, எண்ணி எண்ணி-நினைத்து நினைத்து, அளவிலாது அழுங்கல் உற்றான் - கணக்கிலாத் துயரங் கொண்டான். எ-று.

'அழுங்கல்' வருத்தமும் ஆம். (கசுஉ)

காளைதன்முகத்தைநோக்கிக் கடவதொன்றில்லையெம்மால்
வேலைவென்றிலங்குகண்ணாள் விதித்தவாறளித்தும்யாமே
வாளைவென்றிலங்குகண்ணான் மாமணக்காவணத்துள்
நாளைவந்தெய்துமின்று நடமினுஞ்சார்பிலென்றான்.

[சந்திரதயன் இனி எம்மால் செய்யக்கூடியது ஒன்றில்லை சிவபெருமான்
சொல்லியபடி நாங்கள் கொடுப்போம். நாளை சந்திரவதி மணப்பந்
தலில் வருவாள் இன்று நீங்கள் உங்களிடம்போய் நாளை
வாருங்கள் என்றான் என்பதாம்.]

இ-ள். காளை தன் முகத்தை நோக்கி - சந்திரதய அரசன், யௌவன புருஷனான அரிச்சந்திரமகாராஜனின் முகத்தைப்பார்த்து, எம்மால் - இனி எம்மால், கடவது ஒன்று இல்லை - செய்யத்தக்கது ஒன்றும் இல்லை, வேளை வென்று இலங்கு கண்ணன் - மன்மதனை எரித்து விளங்குகின்ற நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான், விதித்தவாறு அளித்தும் யாமே - அருளிச் செய்தபடியே நாங்கள் கொடுப்போம்; வாளை - வாளாயுதத்தை, வென்று இலங்கும் - சயித்து விளங்குகின்ற, கண்ணாள் - கண்ணையுடைய சந்திரவதியான வள், மாமணக்காவணத்துள் - பெரிய கல்யாணப் பந்தலுக்குள்ளே நாளை வந்து எய்தும் - நாளையத்தினம் வந்து சேர்வாள், இன்று - இன்றைக்கு, நும் சார்பில் - உங்கள் ஜாகைகளுக்கு, நடமின் என்றான். நடவுங்கள் என்று கூறி னான். எ-று.

'காளை' உவமை ஆகுபெயர். காளையை ஒத்தவன் எனவிரியும். இங்கு அரிச்சந்திரனைக் குறித்தது. (கசுங)

கைத்தலஞ்சற்றுநீட்டி மதிதயன்கட்டுரைக்கத்
தத்தமக்களித்தசார்பிற் சார்ந்தனரரசரெல்லா
முத்தமகுணத்தினனு மோங்குமண்டபத்திநீங்கி
மத்தகக்களிற்றிலேறி மாளிகையிடத்துச்சார்ந்தான்.

[சந்திரதயன் இந்தவிதமாகச் சொன்னவுடனே அரசர்கள் எல்லாம்
தம் தம் இடம்போய்ச் சேர்ந்தார்கள். அரிச்சந்திரனும் சபா
மண்டபத்தை விட்டு யானைமேலேறித் தான் இருப்
பதற்கேற்பட்ட மாளிகை சென்றான் என்பதாம்.]

இ-ள். மதிதயன் - சந்திரதய அரசன், கைத்தலம் சற்று நீட்டி - இந்த விதமாக சிறிது கையை நீட்டி, கட்டுரைக்க - உறுதிவார்த்தை சொல்லவே, அரசர் எல்லாம் - அரசர்கள் எல்லோரும், தத்தமக்கு அளித்த சார்பில் - தங்கள் தங்களுக்கு அமைத்து விட்டிருக்கிற இடங்களுக்கு, சார்ந்தனர் - போய்ச்சேர்ந் தார்கள், உத்தம குணத்தினனும் - உத்தமமான குணங்களையுடைய அரிச்சந் திரமகாராஜனும், ஓங்கு மண்டபத்தின் நீங்கி - உயர்ந்துள்ள சபாமண்டபத்தி னின்றும் நீங்கி, மத்தகக்களிற்றில் ஏறி - கும்பங்களையுடைய யானைமேல் ஏறிக்கொண்டு, மாளிகை இடத்துச் சார்ந்தான் - தான் இருப்பதற்குக் குறித்த மாளிகையில் போய்ச்சேர்ந்தான். எ-று. (கசுச)

வாரணத்தண்ணலேக மதிதயனவையினுற்ற
காரணமனைத்துங்கேட்டுக் காரிகைபொரித்தியோடித்

தோரணவாயினீங்கித் துடியிடையமுதச்செஞ்சொற்
பூரணக்களபக்கொங்கைப் பூவைதன்கோயில்புக்காள்.

[யானைமேல் ஏறிக்கொண்டு அரிச்சந்திரன் போகவே, சந்திரதயன் சபையில் நடந்தவற்றை எல்லாம் கேட்டு ஒருபெண் சந்திரவதியின் மாளிகைக்கு ஓடிப்போய்ச் சேர்ந்தாள், என்பதாம்.]

இ-ள். வாரணத்து - யானையின்மேல், அண்ணல் ஏக - அரிச்சந்திரன் ஏறிக்கொண்டு செல்ல, மதிதயன் அவையில் - சந்திரதய அரசனின் சபையிலே, உற்ற காரணம் அனைத்தும் - நடந்த காரணங்கள் எல்லாவற்றையும், காரிகை ஒருத்தி கேட்டு - ஒருபெண்ணானவள் கேட்டு, தோரணவாயில் நீங்கி-தோரணம் கட்டி இருக்கிற வாயிலைக்கடந்து, துடி இடை - உடுக்கைபோலும் இடையும், அமுதச்செஞ்சொல் - அமுதம்போலும் செவ்விய சொல்லும், பூரணக் களபக்கொங்கை - பூரித்து முற்றும் வளர்ந்த சந்தனச்சேறு பூசின கொங்கைகளுங் கொண்ட, பூவை தன் கோயில் - பூவையைப்போலும் சந்திரவதி இருக்கும் கோயிலுக்குள்ளே, ஓடிப்புக்காள். விரைந்து சென்று புகுந்தாள். எ-று.

'பூவை' ஆகுபெயர், 'துடியிடை' 'அமுதச் செஞ்சொல்' என்பன உவமைத்தொகை. (கசுடு)

புக்கவடன்னைநோக்கிப் பொற்கொடியதிசயித்திங்
கிக்கணத்தோடிவந்த வருத்தியென்னியம்புகென்ன
வக்கணத்தரிவைசெம்பொ னடியைத்தன்முடியிற்சூட்டிப்
பக்கமுமிடமும்பார்த்துப் பவளவாய்பதைத்துரைப்பாள்.

[வந்தவளைப்பார்த்து இங்கு இவ்வளவு அவசரமாக வருதற்குக் காரணம் என்னவென்று கேட்க வந்தவள் வணங்கி நாலு பக்கமும் பார்த்து வாய் பதைத்துச் சொல்லலுற்றாள், என்பதாம்.]

இ-ள். புக்கவள் தன்னை - அப்படி அவசரப்பட்டுப் புகுந்த அந்தப் பெண்ணை, நோக்கி - பார்த்து, பொற்கொடி அதிசயித்து - பொன்கொடி போல்பவளான சந்திரவதி ஆச்சரியப்பட்டு, இங்கு - இந்த இடத்திற்கு, இக்கணத்து - இந்தச் சமையத்திலே, ஓடிவந்த அருத்தி என் - விரைந்து ஓடி வருதற்கு என்னகாரணம், இயம்புகென்ன - சொல்லென்று கேட்க, அக்கணத்து-அப்படிச்சொன்ன அளவிலே, அரிவை - சந்திரவதியினுடைய, செம்பொன் அடியை - செம்பொன்மயமான பாதங்களை, தன் முடியிற் சூட்டி-(அப்பெண்) தனது தலையிலே சூடி வணங்கி, பக்கமும் இடமும் பார்த்து - நாலு பக்கமும் இடங்களும் பார்த்து, பவளவாய் - பவளம்போலும் வாயானது, பதைத்து-பதைபதைத்து, உரைப்பாள் - சொல்லுகின்றாள். எ-று. 'புகு' என்னும் பகுதி ஒற்று இரட்டி வினையாலணையும் பெயராயிற்று.

"பொற்கொடி" உவமை ஆகுபெயர். பொன்கொடி போல்பவள், என்பதாம். 'அருத்தி' என்றது விருப்பமும் ஆம். 'இயம்புக - என்ன' 'இயம்பு

கென்ன' என்றுயிற்று நிலைமொழியீற்று உயிர்கெட்டது. 'அரிவை' பெண்களின் பருவப்பெயர் இங்கு ஆகுபெயராய் சந்திரவதியைக் குறித்தது. 'பவளவாய்' உருவுவமத்தொகை. (கசுசு)

செந்திருவனையாயுன்னைத் திருமணமுடிக்கவேண்டி
வந்தனரனேகர்நந்த மன்னவன்சபையிற்புக்கா
ரந்தமன்னவர்கடம்மி லடலரிச்சந்திரன்றன்
சுந்தரமுகங்கண்டிங்கே வரமனந்துணிந்திலேனே.

[லட்சுமிபோன்றவளே உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பி நமது மன்னன் சபைக்கு அநேக அரசர்கள் வந்திருந்தார்கள் அவர்களில் அரிச்சந்திரன் என்னும் அரசனைக் கண்டபின் இங்குவர மனம் துணியவில்லை என்றுள் என்பதாம்.]

இ-ள். செந்திரு அனையாய் - செவ்விய லட்சுமிபோலும் அழகு உடையவளே, உன்னைத் திருமணம் முடிக்கவேண்டி - உன்னைத் திருக்கல்யாணம் செய்துகொள்ள விரும்பி, வந்தனர் அநேகர் - அநேக அரசர்கள் வந்தார்கள், நம்தம் மன்னவன் சபையில் புக்கார் - நம்முடைய அரசனின் சபாமண்டபத்திலே புகுந்து இருந்தார்கள்; அந்த மன்னவர்கள் தம்மில் - அப்படி வந்த அரசர்களுக்குள்ளே, அடல் அரிச்சந்திரன் தன் - வெற்றிகொண்ட அரிச்சந்திர மகாராஜனுடைய, சுந்தரமுகங்கண்டு - அழகிதான முகத்தை நான் பார்த்த பின்பு, இங்கேவா - இங்கே உன்னிடத்திற்கு வர, மனம் துணிந்திலேனே- இங்கே வர மனம் துணியவில்லை. எ-று. ஏ - ஈற்றசை.

ந ஏகர் - அநேகர், பலர்என்பது பொருள், ஏகர் - ஒருவர், 'ந' எதிர்மறை உபசர்க்கம். அவன் அழகைக்கண்டபின் அதைவிட்டு இங்குவர மனம் துணியவில்லை என்று வந்தவள் கூறினுள். (கசுஎ)

உடுக்குநீருலகமேழு மொன்றின்மேலொன்றைவைத்தே
வடுக்குநீள்புயமுஞ்செய்யா ளாவியுமனமுந்தாவிப்
படுக்கும்வாள்விழியுமார்பும் பரிசிலர்மகிழநாளுங்
கொடுக்கும்வார்கரமுமாதருளமெலாங்கொள்ளைகொள்ளும்.

[ஏழு உலகங்களையும் ஒன்றன்மேலொன்று அடுக்கத்தக்க நீண்ட புயமும் லட்சுமிதேவியின் உயிரும் மனமும் சென்று பொருந்தும் கண்களும் மார்பும், நீண்ட கையும் பெண்கள் மனதைக் கொள்ளையிடும் என்பதாம்.]

இ-ள். உடுக்கு நீர் உலகம் ஏழும் - கடல்நீரால் சூழப்பட்ட இந்த ஏழு உலகங்களையும், ஒன்றின்மேல் ஒன்றை வைத்தே - ஒன்றன்மேல் ஒன்றாக வைத்து, அடுக்கும் - அடுக்கத்தக்க, நீள்புயமும் - நீண்ட புஜங்களும், செய்யாள் - லட்சுமிதேவியின், ஆவியும் மனமுந்தாவி - உயிரும் மனமும் தாவுத

லாகி, படுக்கும் - தங்கத்தக்க, வாள்விழியும் மார்பும் - ஒளிகொண்ட கண்களும் மார்பும், பரிசிலர் - யாசகர், மகிழ - சந்தோஷப்படும்படி, நாளும் கொடுக்கும்- தினந்தோறும் கொடுப்பதாகிய, வார்காமும் - நீண்ட கைகளும், மாதர்-பெண் களினுடைய, உளமெலாம் - மனதை எல்லாம், கொள்ளை கொள்ளும்-கொள்ளை இடுவதாகும். எ-று.

"உடுக்கு நீருலகமேழும் ஒன்றின்மேல் ஒன்றை வைத்தே வடுக்கு நீள் புயம் - என்பதற்கு, கடலாற் சூழப்பட்ட ஏழுலகங்களையும் ஒன்றன்மேலே ஒன்றை வைத்து அடுக்கியது போலும் விளங்குகின்ற நீண்டபுயம்" என்றும் பொருள் கூறுவர். 'உளமெலாம்' 'உள்ளம்' எனற்பாலது 'உள' மெனவா யது தொகுத்தல் விகாரம். (கசு௮)

திருக்கிளர்முகமும்வேர்வுஞ் சிறந்தசெம்பவளவாயு
மருக்கிளர்மாலைமார்பு மகரகுண்டலமுங்காதுஞ்
சுருக்கியமருங்குங்கண்டாற் றுடியிடைமடவாராவி
யிருக்கினுமிருக்குமில்லா திறக்கினுமிறக்குமன்றே.

[அரிச்சந்திரனின் முகம் வாய் மாலையணிந்த மார்பு முதலியவற்றைக் கண்டால் பெண்கள் உயிர் ஓடினும் ஓடும், என்பதாம்.]

இ-ள். திருக்கிளர் முகமும் - அழகு விளங்கும் முகமும், வேர்வும்- அதிலே துளிக்கின்ற வேர்வையும், சிறந்த செம்பவளவாயும் - சிறப்பான செவந்த பவளம்போன்ற வாயும், மருக்கிளர் - வாசனை வீசுகின்ற, மாலை- மாலையை அணிந்த, மார்பும் - மார்பும், மகர குண்டலமும் - மகர குண்டலங்க ளும், காதும் - காதுகளும், சுருக்கிய மருங்கும் - சுருங்குதலை உடைய இடை யையும், கண்டால் - பார்த்தால், துடி இடை மடவார் ஆவி - உடுக்கைபோலும் இடையைக்கொண்ட பெண்களின் உயிர்கள், இருக்கினும் இருக்கும் - அந்தப் பெண்கள் உடம்பில் காதல் நோயோடு துன்பப்பட்டுக்கொண்டு இருந்தாலும் இருக்கும், இறக்கினும் இறக்கும் - இல்லாமல் காதலால் உடம்பைவிட்டு உயிர்போனாலும் போய்விடும். எ-று. அன்று, ஏ - அசைகள்.

"இருக்கினும் இருக்கும், மில்லாதிருக்கினு மிறக்கும்" என்றதில் உள்ள உம்மைகள் ஐயப்பொருளது. ஏனைய உம்மைகள் எண்ணும்மைகள். (கசுகூ)

நிரந்தரவுரோமரேகை நீலமும்வயிறுமார்பும்
புரந்தரசாபமொத்த புருவமுநுதலும்பட்ட
மரந்தழைத்திடநகைக்கு முறுவலுமாயன்றன்பாற்
கரந்தவாரமுதச்சொல்லுங் கந்தற்குமில்லைமன்னோ.

[அரிச்சந்திரனுக் கிருப்பதாகிய உரோமரேகை நீலமும், வயிறும், மார்பும், புருவம் நெற்றி, புன்சிரிப்பு, சொல் முதலியவற்றின் அழகு முருகக் கடவுளுக்கும் கிடையாதென்பதாம்.]

இ-ள். நிரந்தர உரோமரேகை நீலமும் - எப்போது முள்ளதான உரோம ரேகையினது கறுப்பும், வயிறும் மார்பும் - வயிறும் மார்பும், புரந்தர சாப

மைபத்த புருவமும் - இந்திர வில்லைப்போன்ற புருவங்களும், நுதலும் - நெற்றியும், பட்டமாம் தழைத்திட - பட்ட மாங்களும் தழைக்க, நகைக்கு முறுவலும் - சிரிக்கும் சிரிப்பும், மாயன் தன்பால் - மகா விஷ்ணுவினிடத்தே, கரந்த - அசுரர் உண்ணுதபடி வந்து தங்கிய, ஆர் அமுதச்சொல்லும் - அருமையாகிய அமிர்தம்போலும் சொல்லும், கந்தற்கும் இல்லை - முருகக்கடவுளுக்கும் இல்லை. எ-று. மன், ஓ - அசைகள்.

"புரந்தரன்" இந்திரன்; தெய்வலோகத்தைக் காப்பவன் என்னும் காரணம்பற்றி வந்தபெயர். "முறுவல்" இளநகை, புன்சிரிப்பு; "மாயன்றன் பாற் காந்தவாரமுதம்" என்பதற்கு, மகாவிஷ்ணுவின் சயனமாகிய திருப்பாற் கடலிலே மறைந்திருப்பதான அருமையாகிய அமிர்தம் என்றும் பொருள் கூறினுரும் உண்டு. (கஎ0)

இதையமூடுருக்குமின்பத் திறைவனையுற்றுநோக்கித்
ததையுமாமலர்த்தார்வேந்தர் தங்களைச்சூழநோக்கிற்
புதையிருள்கடிந்துவேலைப் புவியினைவிளக்குஞ்சோதி
யுதயனைக்கண்டகண்கட் குடுக்களைக்கண்டதாமே.

[அரிச்சந்திரமகாராஜனைக் கண்டு பின் மற்ற அரசர்களைப்பார்த்தால்
சூரியனைக் கண்ட கண்கள் நட்சத்திரங்களைக் கண்டது
போலாம் என்பதாம்.]

இ-ள். இதயம் ஊடுருக்கும் - பெண்களின் மனத்தை உள்ளுருகச்செய்வதான, இன்பத்து இறைவனை - காட்சிக்குமே இனிமை செய்பவனுகிய அரிச்சந்திரமகாராஜனை, உற்றநோக்கி - போய்க்கண்டு, ததையும் - நெருங்கின, மாமலர்த்தார் - மாட்சிமை பொருந்திய மலர்களால் ஆக்கப்பட்ட மாலையை உடைய, வேந்தர் தங்களை - மற்றுமுள்ள அரசர்களையும், சூழ நோக்கில் - கண்டால், புதையிருள் கடிந்து - உலகை எல்லாம் மூடும் இருளைப்போக்கி, வேலைப் புவியினை விளக்கும் - கடல் சூழ்ந்துள்ள உலகத்தை விளங்கச்செய்கிற, சோதியுதயனை - ஒளியை உடைய சூரியனை, கண்ட கண்கட்கு - பார்த்த கண்களுக்கு, உடுக்களை - நட்சத்திரங்களை, கண்டது - பார்த்தது, ஆம் - ஆகும். எ-று. ஏ - ஈற்றசை.

அரிச்சந்திரன் சூரியனைப்போலவும் மற்றையர் நட்சத்திரங்கள் போலவும் காண்பர் என்பதாம். (கஎக)

மின்னனேரிடையாள்கூறக் கேட்டலும்வேந்தன்பாவை
தன்னையுமறந்தாளிட்ட சங்கமுங்கலையுநீத்தா
ளென்னையைமறந்தாள்பேசும் வாசகமயர்ந்தாள்வேறு
பின்னையுமிழந்தாள்காதல் பெற்றதொன்றன்றியின்றே.

[சந்திரவதி இதைக்கேட்ட உடனே தன்னை மறந்தாள் எல்லாவற்றையும் மறந்தாள் காதல் மிகக்கொண்டாள் என்பதாம்.]

இ-ள். மின்னனோர் - மின்னலையொத்த, இடையாள் கூற - இடையை உடைய அந்தப்பெண்சொல்ல, வேந்தன்பாவை - சந்திரதய அரசனுடைய குமாரியாகிய சந்திரவதி, கேட்டலும் - கேட்டவுடனே, தன்னையும் மறந்தாள் - தன்னையும் மறந்துவிட்டாள், இட்ட - கைகளில் இட்டிருந்த, சங்கமும் - சங்கு வளையல்களையும், கலையும் - இடையில் அணிந்திருந்த வஸ்திரமும், நீத்தாள் - நெகிழ விடலானாள்; அன்னையை மறந்தாள் - தாயையும் மறக்கலானாள், பேசும் வாசகம் அயர்ந்தாள் - பேசும் பேச்சையும் மறந்தாள், வேறு பின்னையும் - வேறாகத் தனக்குள்ள மற்றவைகளையும், இழந்தாள் - இழந்தாள், காதல் - ஆசையை, பெற்ற தொன்றன்றி - கொண்டிருப்ப தொன்றல்லாமல், இன்றே - வேறு ஒன்றும் இல்லாதவளே ஆயினாள். எ-று. ஏ - ஈற்றசை. (௧௭௨)

வாசமென்கலவைச்சேறு நானமும்புழுகும்வாரிப்
பூசவுமேனியெங்கும் பொருக்கெழவியன்சாந்தாற்றி
வீசவுமேன்மேற்காம வெந்தழன் மண்டப்பின்னு
மாசையங்கடலுட்டாழ்ந்தா ளருக்கனுங்கடலுட்டாழ்ந்தான்.

[அப்போது தோழிகள் உபசாரம் செய்யச்செய்ய காமாக்கினி மிக ஆசைக்கடலுள் மூழ்கினாள், சூரியனும் மேலைக்கடலுள் மூழ்கினான் என்பதாம்.]

இ-ள். வாசமென் கலவைச்சேறும் - வாசனையை உடைய மிருதுவான கலவைச் சந்தனச்சேறும், நானமும் - கஸ்தூரியும், புழுகும் - புனுகும், வாரிப் பூசவும் - அள்ளி அள்ளிப்பூச, மேனி எங்கும் - உடம்பு எல்லாம், பொருக் கெழ - பொருக்குப் பொருக்கா யுதிரவும், வியன் - பெருமைமிக்க, சாந்தாற்றி வீசவும் - விசிறிகொண்டு வீசவும், மேல் மேல் - மேலும் மேலும், காமவெந் தழல் - காமமாகிய வெப்பங்கொண்ட நெருப்பு, மண்ட - மூளவும், பின்னும் - மறுபடியும், ஆசை - ஆசையாகிய, அம்கடலுள் தாழ்ந்தாள் - நீர் நிறைந்த கடலுக்குள்ளே மூழ்கினாள், அருக்கனும் - சூரியனும், கடலுள் தாழ்ந்தான் - அப்போது மேலைக்கடலுக்குள்ளே முழுகினான். எ-று. உம்மைகள் - எண்ணும்மைகள். (௧௭௩)

அறநெடுஞ்செங்கோல்வேந்த ராண்டபார்பிறர்க்கிரங்கா
மறநெடுங்கொடுங்கோல்வேந்தர்க் களித்தவர்வனம்புக்காற்போற்
புறநெடுங்கிரிசூழ்வேலைப் புவியெலாங்கொடியநீல
நிறநெடுங்கங்குற்காக்கி நெடும்பகனீங்கிற்றன்றே.

[செங்கோல் அரசன் தான் ஆண்ட உலகத்தை கொடுங்கோல் மன்னனுக்குக் கொடுத்துவிட்டுத் தவஞ்செய்யப் போனாற்போல் பெரிய இருட்டிற்கு உலகை ஒப்பித்துவிட்டு நெடும்பகல் நீங்கிற்று என்பதாம்.]

இ-ள். அறநெடும் செங்கோல் - தர்மமார்க்கமாக நீண்ட செங்கோலைச் செலுத்திய, வேந்தர் - அரசர்கள், ஆண்டபார் - தாம் அரசாட்சி செலுத்திவந்த

உலகத்தை, பிறர்க்கு இரங்கா - பிறர்க்கு இரக்கம் செய்யாத, மறநெடும் கொடுங்கோல் வேந்தர்க்கு - பாவத்தால் நீண்ட கொடுங்கோலை உடைய அரசர்க்கு, அளித்து - கொடுத்துவிட்டு, அவர் வனம்புக்காற்போல் - அவ் அரசர்கள் காட்டில் தவஞ்செய்யப் போனால்போல், புறநெடும் கிரிசூழ் வேலை புவி எலாம் - புறமாகச் சக்கரவாளகிரி சூழ்ந்த கடல்புடை சுலாவும் உலகம் எல்லாம், கொடிய - கொடிதாகிய, நீலநிற நெடும் கங்குற்கு - நீல நிறத்தையுடையதாய் இருக்கும் நீண்ட இருளுக்கு, ஆக்கி - கொடுத்துவிட்டு, நெடும்பகல் - நெடிய பகல்காலம், நீங்கிற்று - போயிற்று. எ-று. அன்று. ஏ - அசைகள். (௧௭௪)

மஞ்சடைவானமீறாய் மண்முதலாயபூத
மஞ்சடையப்பேரூழி யகண்டபூரணமாய்நின்ற
நஞ்சடைகண்டத்தண்ண ணாடகநடித்தஞான்று
செஞ்சடைவிரிந்ததென்னச் செறிந்ததுசெக்கர்வானம்.

[ஊழிக்காலத்தே சிவபெருமான் தாண்டவம் செய்யும்பொழுது அவர் ஜடாபாரம் விரிந்ததுபோல் செவ்வானம் எங்கும் பாவிற்று என்பதாம்.]

இ-ள். மஞ்சு - மேகங்கள், அடை - பாவுவதான, வானம் ஈறாய் - ஆகாயம் ஈறாக, மண்முதல் ஆயபூதம் - மண்முதலாகிய பூதங்கள், அஞ்சு - அஞ்சும்படி, அடைய - ஒருமிக்க வந்த, பேரூழி - பெரிதான ஊழிக்காலத்தில், பூரணமாய் நின்ற - அகண்ட பூரணமாய் நிலைகொண்டு நிற்கின்ற, நஞ்சு - விஷமானது, அடை - தங்கின, கண்டத்து - கழுத்தையுடைய, அண்ணல் - சிவபெருமான், நாடகம் நடித்த ஞான்று - ஆனந்தத்தாண்டவம் செய்கிறபொழுது, செஞ்சடை விரிந்ததென்ன - அவருடைய செவந்த சடைகள் விரிந்தால்போல், செறிந்தது செக்கர் வானம் - செவந்த வானம் எங்கும் பாவிற்று. எ-று.

"பூதமஞ்சடையப் பேரூழி" என்பதற்கு, பூதங்கள் அஞ்சும் அடங்கும் பெரிதான ஊழிகாலம் என்றும் பொருள் கூறுவர். (௧௭௫)

நாட்படத்தருமச்செங்கோ னடத்தியவேந்தர்நாட்போய்த்
தோட்படுத்தவர்தம்மக்கட் சுடர்முடிசூடுமுன்னர்
கோட்படையிழைத்திருந்த குறுநிலவேந்தருய்க்கும்
வாட்படைபுகுந்ததென்ன வந்ததுமருள்கூர்மாலை.

[செங்கோல் நடத்திய அரசர் காலம் கழிந்து அவர்கள் மக்கள் முடிசூடு முன்னே குறுநிலமன்னர் அனுப்பிய வாள்படை வந்ததுபோல மயக்கம் செய்யும் மாலைக்காலம் வந்தது, என்பதாம்.]

இ-ள். நாள்படத் தருமச்செங்கோல் - வெகுகாலமாகத் தரும நீதியை, நடத்திய வேந்தர் நாள்போய் - நடத்திவந்த அரசர்களது காலம் கழிந்து, தோள்படுத்தவர்தம் மக்கள் - பூபாரத்தைத் தமது தோளில் சுமந்த அந்த அரசர்களின் பிள்ளைகள், சுடர்முடி சூடுமுன்னர் - பிரகாசம் பொருந்திய கிரீடத்தை

அணிந்து கொள்வதற்கு முன்னாலே, கோள்படை இழைத்திருந்த - (அவ்வி ராச்சியத்தைக் கொள்ளுவதற்காக) வலிமை பொருந்திய படையைச் சேர்த் திருந்த, குறுநிலவேந்தர் - சிற்றரசர்கள், உய்க்கும் - செலுத்தின, வாள்படை புகுந்ததென்ன - வாளையுடைய சேனைகள் புகுந்ததைப்போல, மருள்கூர் மாலை - மயக்கத்தைச் செய்வதான மாலைக்காலம், வந்தது - வந்து சேர்ந்தது. எ-று. 'கோள்' - வலிமை. (கஎசு)

மறைந்ததுபரிதிமேன்மேல் வளர்ந்ததுகங்குற்கால
மறைந்ததுவாடைவானத் தரும்பினவனந்தமீன்கள்
குறைந்ததுகொடியமாலை கூரிருட்பிழம்புதுன்றி
நிறைந்ததுநீலவேலை நிலமெலாங்கவர்ந்ததென்ன.

[சூரியன் மறைந்தது. இராக்காலம் மேல் மேல் வளர்ந்தது. வாடைக்காற் றடித்தது ஆகாயத்தில் அநேக நட்சத்திரங்கள் பூத்தன, மாலைக்காலம் குறைதல் ஆயிற்று, கடல் உலகைக் கவர்ந்ததுபோல் இருள் பெருகிற்று என்பதாம்.]

இ-ள். மறைந்தது பரிதி - சூரியன் மறைந்து போயிற்று, மேல் மேல் வளர்ந்தது கங்குல் காலம் - இராக்காலம் மேலும் மேலும் வளர்கிறதாயிற்று; அறைந்தது வாடை - வாடைக்காற்று மோதிற்று; வானத்து - ஆகாயத்திலே, அனந்தம் மீன்கள் - அநேகநட்சத்திரங்கள், அரும்பின - பூத்தன; குறைந்தது கொடியமாலை - கொடிதான மாலைக்காலம் குறைதல் ஆயிற்று; நீலவேலை, கருத்த கடலானது, நிலமெலாம் கவர்ந்ததென்ன - உலகமெல்லாம் கவர்ந்து கொண்டதுபோல, கூர் இருள் பிழம்பு துன்றி நிறைந்தது - மிகுந்த இருள் படலமானது செறிந்து நிறைந்தது. எ-று.

"கூரிருட் பிழம்பு துன்றி, நிறைந்தது நீலவேலை நிலமெலாம் கவர்ந்த தென்ன" என்பதற்கு 'கறுத்த கடல் சூழ்ந்த உலகம் எல்லாம் தானே அரசாட்சி கொண்டாற்போல், இருள் செறிவு மிகுந்து நெருங்கி நிறைதலா யிற்று" என்றும் பொருள் கூறுவர். (கஎஎ)

அருகியமருங்குற்பேதை யழன்றெழுகாமத்தீயா
லுருகியவுள்ளந்தாவி யுலகெலாமேவிக்காய்ந்து
கருகியதென்னத்தேவர் கடைந்தநாளெழுந்தவாலம்
பெருகியதின்றுமென்னப் பிறங்கிருள்செறிந்ததன்றே.

[சந்திரமதிக்குண்டாகிய காமத்தீயானது உள்ளத்திலிருந்து வெளிப்பட்டு உலகமெல்லாம் மேவிக்கருக்கியதென்று சொல்லவும் ஆலகாலம் பெருகியதென்று சொல்லவும் விளங்கிருள் நெருங்கி யது என்பதாம்.]

இ-ள். அருகிய மருங்குல் பேதை - சுருங்கிய இடையை உடைய சந்திர வதி ஆனவள், அழன்றெழு காமத்தீயால் - கோதித்தெழுகின்ற காமத்தீயி

ளுலே, உருகிய உள்ளம் - உருகின மனமானது, தாவி உலகு எல்லாம் மேவி - பரவி உலகமெல்லாம் வியாபித்து, காய்ந்து கருகியதென்ன - எரித்துக் கருகியது போலவும், தேவர் - தேவர்கள், கடைந்தநாள் - திருப்பாற்கடலைக் கடைந்த நாளிலே, எழுந்த ஆலம் - தோன்றிய ஆலகால விஷம், பெருகியது இன்றும் என்ன - இப்போதும் பெருகல் ஆயிற்று என்று சொல்லவும், பிறங்கு இருள் செறிந்தது - விளங்குகின்ற இருட்டானது நெருங்கியது. எ-று அன்று, ஏ - அசைகள். (கஎஅ)

முன்னரேபொருதுவெல்லாத் தலைவரைமுனிந்துசெங்கோன்
மன்னவர்கோபங்கொண்டு வாள்விதிர்த்தெழுந்ததேபோ
லின்னமுமிவடனுவி யிறந்திலதென்றுசீறித்
துன்னிருளிரியநூறி யெழுந்ததுசுடர்வெண்டிங்கள்

[முன்னேயே அழிக்காது விட்டிருந்த குறுநில மன்னரை அழிக்க வாளை வீசிக்கொண்டு எழும் செங்கோலரசன்போல இருள் மேல் கோபித்து எழுந்து அவ்விருளை ஒட்டிற்று என்பதாம்.]

இ-ள். முன்னரே - முன்னேதானே, பொருது - சண்டைசெய்து, வெல்லா - வெல்லாமல் விட்டிருந்த, தலைவரை - கொடுங்கோலரசரை, முனிந்து - வெறுத்து, செங்கோல்மன்னவர் - செங்கோலரசர்கள், கோபம்கொண்டு- கோபம்கொண்டு, வாள்விதிர்த்து எழுந்ததேபோல் - வாளை வீசிக்கொண்டு எழுந்ததைப்போல, இன்னமும் - இன்னமும், இவள் தன் ஆவி - இந்தச் சந்திரவதியினுடைய உயிர், இறந்திலதென்று சீறி - போகாதிருக்கிறதென்று கோபித்து, துன் இருள் - நெருங்கின இருளானது, இரியநூறி - ஓடும்படி அழித்து, சுடர்வெண் திங்கள் எழுந்தது - ஒளியை உடைய வெண்மையான சந்திரன் உதயமானான். எ-று.

"துன்னிருளிரிய நூறி எழுந்தது சுடர்வெண்டிங்கள்" இதற்கு நெருங்கின இருளுடனே காமத்தீ மிகுந்து உயிர் ஓடும்படி அறிவை எல்லாம் அழித்துக்கொண்டு சுடரையுடைய வெள்ளைச்சந்திரன் எழுந்தது" எனவும் பொருள் செய்வர். இது பொருந்தாது, இரவைக் கொடுங்கோலரசாகவும் சந்திரனைச் செங்கோலரசாகவும் உவமித்தார். இரவைக் கொடுங்கோல் அரசு என்றதற்கு இயைய "இன்னமும் இவள் தன் ஆவி இறந்திலதென்று சீறித்துன்னிருள்" என்று அதன்பால் கொடுமை கற்பித்தார். தம் கருத்தை அடைகொள வைத்தார். (கஎகூ)

இருளையொத்திலங்குமேனி யிறைகடல்கடைந்தகாலம்
பொருளையுற்றிடாதவெல்லாம் புரந்தராதியர்க்குநல்கி
யுருளவேதிரட்டிவாரி யுள்வைத்தவமுதசாரத்
திரளைமேன்மிதந்ததென்னத் திங்கள்வந்தெழுந்ததன்றே.

[கடலில் எழும் அமுத சாரத்திரள்போல் இரவில் சந்திரன் தோன்றினன் என்பதாம்.]

இ-ள். இருளை ஒத்து இலங்கும்மேனி - இராத்திரியை ஒப்பாகி விளங்கும் திருமேனியை உடைய, இறை - திருமாலானவர், கடல்கடைந்த காலம்- திருப்பாற்கடலைக் கடைந்த காலத்திலே, புரந்தராதியர்க்கு நல்கி - இந்திரன் முதலியவர்களுக்கு அதில் தோன்றிய பொருள்களைக்கொடுத்து, உற்று இடாத பொருளை எல்லாம் - மனம் பொருந்திக் கொடுக்காத சிறந்த பொருள்களை எல்லாம், உருளவே திரட்டி - உருண்டையாகும்படித் திரட்டி, வாரியுள் வைத்த- அத்திருப்பாற் கடலுக்குள்ளே வைத்திருந்த, அமுதசாரத்திரள் - அமுதோடு கலந்த திரள், மேல் மிதந்ததென்ன - கடல்மேல் மிதந்த தன்மையைப்போல், திங்கள் வந்து எழுந்தது - சந்திரன் வந்து உதயமாயினன். எ-று. அன்று, ஏ - அசைகள்.

'இருளை' என்றதில் ஐசாரியை. (கஅ0)

திங்கள்வெண்குடைக்கீழ்த்தென்றற் றேர்மிசையேறிவாரி
மங்கலமுரசமார்ப்ப மகரகேதனநின்றோங்கக்
கங்குல்வெங்களிறுசூழக் கடுங்கிளிப்புரவிதூண்டி
யங்கண்மாஞாலமெல்லா மனங்கவேள்பவனிவந்தான்.

[மன்மதன், திங்கட் குடைமான் கீழே தென்றற்றேரிலே வாரியாகிய முரசமதிர மீனக்கொடி விளங்க, கங்குலாகிய களிறு சூழ கிளியாகிய குதிரையைத்தூண்டு உலகெல்லாம் பவனி வந்தான் என்பதாம்]

இ-ள். அனங்கவேள் - மன்மதனானவன், திங்கள் வெண்குடைக்கீழ்- சந்திரனை வெள்ளைக்குடையின் கீழே, தென்றல் தேர்மிசை ஏறி - தென்றல் தேர்மேலே ஏறிக்கொண்டு, வாரி - சமுத்திரமாகிய, மங்கல முரசம் ஆர்ப்ப- மங்கல முரசம் முழங்க, மகர கேதன நின்றோங்க - மீனக்கொடியானது நிலை கொண்டு வளர, கங்குல் - இருளாகிய, வெங்களிறுசூழ - வெவ்விய யானையும் சூழ, கடும் - கடுமையான வேகத்தை உடைய, கிளிப்புரவி தூண்டி - கிளியாகிய குதிரையைச்செலுத்தி, அம்கண்மா ஞாலம் எல்லாம் - அழகிய இடத்தை உடைய பெரிய உலகம் எல்லாம், பவனி வந்தான் - உலாவி வந்தான். எ-று.

மன்மதனுக்குத் தேர் தென்றல், பரிகிளி கடல் முரசம், சந்திரன் குடை பெண்கள் இதனை கீழ்வரும் செய்யுளாலறிக. (கஅக)

கருப்புவார்சிலையையூன்றிக் கல்வளைத்திசைகள்பாடுஞ்
சுருப்புநாணேற்றிக்கஞ்சந் தளவுடன்சோகஞ்சூத
மருப்புவார்கணைகடுணி யகத்திடைபெடுத்தொன்றென்று
விருப்பினல்வருந்துயானை வெவ்வினைப்பூசலிட்டான்.

[மன்மதன் கரும்புவில்லை ஊன்றி வளைத்து வண்டாகிய நாண்பூட்டி
தாமரை, முல்லை, அசோகம் சூதம் என்னும் பூக்கணைகளை
அம்புப்புட்டிலிலிருந்து எடுத்து ஒவ்வொன்றாக
அரிச்சந்திரன்மேல் ஆசைவைத்த மான்
போன்ற சந்திரவதிமேல் எய்தான்
என்பதாம்.]

இ-ள். கருப்புவார் சிலையை ஊன்றி - மன்மதனானவன் கரும்பாகிய நீண்டவில்லை நிறுத்தி, கால் வளைத்து - அதன் இரண்டு கால்களையும் கூட வளைத்து, இசைகள் பாடும் - ராகத்தைப் பாடுகின்ற, சுரும்பு நாண்ஏற்றி-வண்டாகிய நாணை அந்த வில்லிலே பூட்டி, கஞ்சம் - தாமரையும், தளவுடன் - முல்லையுடனே, சோகம் - அசோகம், சூதம் - மா, அருப்பு - இவைகளின் அரும்பாகிய, வார்கணை - நீண்ட அம்புகளை, தூணி அகத்திடை எடுத்து ஒன்றொன்று - அம்புப்புட்டிலிலிருந்து ஒவ்வொன்றாய் எடுத்து, விருப்பினால் வருந்து மானை - அரிச்சந்திரன்மேல் வைத்த காதலால் வருந்துகின்ற மான்போன்றவளாகிய சந்திரவதியை, வெவ்வினைப் பூசல் இட்டான் - கொடிய செய்கையாகிய சண்டை செய்தான். எ-று.

தாமரை, முல்லை, அசோகம், மா, நீலம் என்பன ஐந்தும் மன்மதன் கணைகள். இதனைக் கீழ்வரும் உபமான சங்கிரகநூலின் செய்யுளாலறிக. (கஅஉ)

மாரவேள்பகழிவாரி வல்லியினுடலைமுற்று
மீரவேதிங்கட்செந்தீ யெரிக்கவேயெரியதாகி
வீரவேளனையான்றந்த வேட்கைமீதூரக்கண்ணீர்
சோரவேயமளிமீது சுழன்றுவீழ்ந்தினையசொல்வாள்.

[மன்மதன் கணைகளை வாரி வாரி எய்து தேகத்தைத் துளைக்க, சந்திரன்
தன் கதிர்களாகிய நெருப்பால் எரிக்க, அரிச்சந்திரன்மேல் உண்
டாகிய காதல் நோயால் கண்ணீர் சோர தன் படுக்கை
மெத்தையிலிருந்து சுழன்று விழுந்து இவைகளைச்
சொல்வாள் என்பதாம்.]

இ-ள். மாரவேள் - இந்தவிதமாக மன்மதன் ஆனவன், பகழிவாரி - அம்புகளைக் கையினால் வாரி, வல்லியின் உடலை - சந்திரவதியினுடம்பை, முற்றும் ஈரவே - முழுதும் துளைக்கவே, திங்கள் செந்தீ எரிக்கவே - சந்திரன் தன் கிரணங்களாகிய நெருப்பால் எரிக்கவும், வீரவேளனையான் தந்த வேட்கை - வீரத்தை உடைய மன்மதனை ஒத்த அரிச்சந்திரமகாராஜன் தந்த ஆசை, எரியதாகி மீதூர - நெருப்பாய் மேன்மேலாகவும், கண்ணீர் சோரவே - கண்களில் நீரொழுகவும், அமளிமீது - படுக்கை மெத்தைமேலிருந்து, சுழன்று வீழ்ந்து-சுழன்று கீழேவிழுந்து; இனையசொல்வாள் - இவ்வாறு சொல்லலானாள். எ-று.

'மார வேள்' இருபெயரொட்டுப் பண்புத்தொகை; மாரனாகிய வேள் என்று விரியும். 'பகழி' புஷ்பபாணங்கள், வீரவேளனையான் ஈண்டு அரிச்சந்திரனைக் குறித்தது. (கஅங)

கலி விருத்தம்.

கண்ணிலாப்பாதகக் காமனெய்தவெம்
புண்ணிலாருயிர்பொடித் தகலப்போனவா
றெண்ணிலாதெனைச்சினந் தெழுந்தவெவ்வினை
வெண்ணிலாவேயிது வீரமல்லவே.

[மன்மதன் எய்த புண்ணின் வழியே உயிர்போயிற்று. அதை எண்ணாமல் என்மேல் கோபித்து எழுந்த வெள்ளைச்சந்திரனே இது உனக்கு வீரமல்ல என்றாள் என்பதாம்.]

இ-ள். கண் இலா - இரக்கமில்லாத, பாதகக்காமன் - பாவியாகிய மன்மதன், எய்த வெம்புண்ணில் - மலர் வாளியினாலெய்ததனால் உண்டாகிய வெவ்விய புண்ணின் வழியே, ஆருயிர் பொடித்து அகலப் போனவாறு - என்னுடைய அருமையான உயிர் பொடியாகி என் உடலைவிட்டு நீங்கிப் போயின வழியை, எண்ணிலாது - எண்ணாமல், எனைச்சினந்து - என்னைக் கோபித்து எழுந்த - உதித்த, வெவ்வினை வெண்ணிலாவே - கொடிய செய்கையை உடைய வெள்ளைச்சந்திரனே, இது வீரமல்லவே - இது உனக்கு வீரத்தன்மை அன்று. எ-று. ஏ - ஈற்றசை; உயிர்போன உடல்மேல் சினந்து எழுவது வீரமில்லாச் செயல், என்று சந்திரனைநோக்கிக் கூறினாள்.

இது, விளச்சீர் விளச்சீர் மாச்சீர் விளச்சீர் என்னும் நான்குசீர் ஓரடியில் வந்த கலி விருத்தம். (கஅ௪)

மேற்படி வேறு.

உன்னைக்கொன்றன் றுருவிலியாக்கினான்
றன்னைக்கொல்லுவ தாண்மைத்தனமலாற்
பின்னைக்கொல்வதென் பெண்பிறப்பாகிய
வென்னைக்கொல்லுவ தேழைமைப்பாலதே.

[உன்னைக்கொன்று உருவில்லாதவன் ஆக்கின சிவபெருமானைக் கொல்வது ஆண்மைத்தனமாகும். பெண்பிறப்பாகிய என்னைக்கொல்வது அறிவில்லாமையாகும் என்றாள் என்பதாம்.]

இ-ள். உன்னைக்கொன்று - (ஓ மன்மதனே!) உன்னை (நெற்றிக்கண்ணால் சுட்டுக்) கொன்று, அன்று உருவிலி ஆக்கினான் தன்னை - அப்பொழுதே (ரதிதேவியின் வேண்டுகோளால்) உருவமில்லாதவன் ஆக்கினவனாகிய சிவபெருமானை, கொல்லுவது ஆண்மைத்தனம் அலால் - நீ கொல்லச்செய்வது ஆண்மைத்தனமே அல்லாமல், பின்னைக் கொல்வது என் - வேறு மற்றவர்களைக் கொல்வது எதற்கு, பெண்பிறப்பாகிய - பெண்பிறப்பைக் கொண்ட, என்னைக் கொல்வது - என்னை நீ கொல்லத் தொடங்குகிற இது, ஏழைமைப் பாலது - அறிவில்லாமை ஆகும். எ-று. ஏ - ஈற்றசை.

இவை, பெரும்பாலும், மாச்சீர், விளச்சீர், விளச்சீர், விளச்சீர் என அடிக்கு நான்குசீர்கள் வந்த கலி விருத்தம். (கஅரு)

உருவக்காமன் றுணித்தவுடறனைச்
செருவிற்கொல்ல வெழுந்தவிண்டிங்களே
வொருவற்கீவதங் கோருயிரன்றியெற்
கிருவர்க்கீய விரண்டுயிரில்லையே.

[மன்மதன் துளைத்த உடம்பை சண்டைசெய்து கொல்ல எழுந்த சந்திரனே மன்மதனுக்குக் கொடுக்க என்னிடம் ஒரு உயிர் அல்லாமல் உனக்கும் கொடுக்க என்னிடத்தில் இரண்டுயிர் இல்லை என்றாள் என்பதாம்.]

இ-ள். உருவக்காமன் துணித்த உடல் தன்னை - துன்பத்தைச் செய்கின்ற அந்த மன்மதன் துவாரமாக்கின உடம்பை, செருவில் - சண்டையினாலே, கொல்ல எழுந்த - கொல்லுவதற்காக எழுந்த, வெண் திங்களே-வெள்ளைச்சந்திரனே, ஒருவற்கீவது - மன்மதனாகிய ஒருவனுக்குக் கொடுக்கக்கூடியதாகிய, அங்கு ஒருயிரன்றி - ஒரு உயிரே அல்லாமல், இருவர்க்கு ஈய - அவனும் நீயுமாகிய உங்கள் இருவர்க்கும் கொடுக்க, எற்கு - எனக்கு, இரண்டு உயிர் இல்லை - எனக்கு இரண்டு உயிர் இல்லை. எ-று. ஏ - ஈற்றசை.

'உரு' அழகும் ஆம், 'திங்களே' விளிவேற்றுமை, அங்கு - அசை. (கஅசு)

முன்னினைந்தலர் தொட்டவன்மூண்டபோர்
தன்னினைந்து தளர்ந்தவென்மேனியைத்
தின்னிநின்சலத் தின்கலைத்திங்களே
வென்னினைந்தெனை யிப்படிக்காய்கின்றாய்.

[மன்மதனால் நைந்து மெலிந்திருக்கின்ற என் உடம்பை ஒகலைச்சந்திரனே தின்கின்றாய், எதற்காக இப்படிக் காய்கின்றாய் என்றாள் என்பதாம்.]

இ-ள். முன்னின் ஐந்து அலர் தொட்டவன் - எனக்கு முன்னிலிருந்து ஐந்து பூங்கணைகளை எய்தவனாகிய மன்மதனுடைய, மூண்ட போர்தன்னில்- மூண்டிருக்கின்ற சண்டையிலே, நைந்து -மெலிந்து, தளர்ந்த - தளர்ந்திருக்கின்ற, என்மேனியை - எனது உடம்பை, கலைத்திங்களே - சோடச கலைகளைக் கொண்ட சந்திரனே, தின்னி - தின்கின்றாய், நின்சலத்தின் - உன் கோபத்தினால், என் நினைந்து - என்ன நினைத்து, என்னை - என்னை, இப்படிக் காய்கின்றாய் - இப்படி எரிக்கின்றாய். எ-று.

'தின்னி=தின்பாயாக' என்று ஏவியதாகவும் கொள்ளலாம், என்னைக் காய்ந்து வருத்தாதே என்னை வேண்டுமானால் தின்றுவிடு என்று பொருளாம்.

உன்னைக்காய்ந்த பணிக்குறவென்றுசொ
லென்னைக்காய்ந்தனை யேந்திளந்திங்களே
முன்னைக்காய்ந்திலை யென்னுயிர்முற்றிய
பின்னைக்காய்ந்து பிழைப்பிக்கவல்லையோ.

[ஓ சந்திரனே! உன்னை விழுங்கும் பாம்பிற்கு உறவு என்று நினைத்தோ
என்னை இப்படி எரிக்கிறாய், இதற்கு முன் இப்படி எரிக்கவில்
லையே நான் இறந்தால் என்னைக் குளிர்ந்த கிரணங்களை
வீசிப் பிழைப்பிக்கக்கூடுமோ என்றாள் என்பதாம்.]

இ-ள். ஏந்து இளம் திங்களே - இளமையைத் தாங்கி உள்ள சந்திரனே! உன்னைக்காய்ந்த - உன்னைக் கோபித்து (விழுங்கின), பணிக்கு உறவென்று சொல் - பாம்பிற்கு உறவானவனென்றோ, என்னைக் காய்ந்தனை - என்னை இப்படி எரிக்கிறாய், முன்னை காய்ந்திலை - நேற்று இதற்கு முந்திய நாள்களில் இப்படி எரிக்கவில்லை, என் உயிர் முற்றிய பின்னை - எனது உயிர் முடிந்த பிற்பாடு, காய்ந்து பிழைப்பிக்க வல்லையோ - இப்படியே குளிர்ந்த காந்தி கொண்டு பிரகாசித்து என்னைப் பிழைப்பிக்கச் செய்யவும் உனக்கு வல்லமை உண்டோ. எ-று. ஈற்று ஒகாரம் வினாப்பொருளில் வந்தது.

பாம்பிற்குறவாவது, பாம்பின் படம்போலும் அல்குலைப் பெற்றிருத்தல். பணத்தை உடைமையினால் 'பணி' என்று பாம்பிற்குப் பெயராயது. (பணம்-பாம்பின் படம்) சந்திரனைக்காய்ந்த பணி. 'கேது' அமுதுண்ணாது கெடுத்த சீற்றத்தால் 'கேது' என்னும் பாப்பு சந்திரனையும் 'ராகு' என்னும் பாம்பு சூரியனையும் விழுங்கி வருவதாகப் புராணங்கள் கூறும். (கஅஅ)

அருத்தியோடுதம் மென்முலையன்பர்தோள்
பொருத்தியோகைகொண் டாடுவர்பூவைமார்
வருத்தியோய்வுற வாட்டினையென்னையா
னொருத்தியோவுனக் குட்பகைகங்குலே.

[உலகத்திலுள்ள பெண்கள் எல்லாம் தங்கள் நாயகரோடு கூடி சந்தோஷித்
திருக்கிறார்கள். என்னைமட்டும் இப்படி வாட்டி வருத்துகின்றாய்
நான் ஒருத்திதானோ உனக்கு உட்பகை ஆனவள் என்றாள்
என்பதாம்.]

இ-ள். பூவைமார் - உலகத்திலுள்ள பெண்கள், அருத்தியோடு - ஆசையோடு, தம்மென்முலை - தம்முடைய மெல்லிதான கொங்கைகளை, அன்பர் தோள் பொருத்தி - தங்களுக்குப் பிரியான நாயகர்களுடைய தோளோடு பொருந்தச் செய்பவராய், ஓகைகொண்டாடுவர் - சந்தோஷத்தைக்கொண்டு சுகித்திருக்கின்றார்கள், என்னை - (எல்லாரும் அப்படியிருக்க) என்னைமட்டும், வருத்தி ஓய்வு உறவாட்டினை - வருத்தப்படுத்தி நான் ஒய்ந்து போம்படியாக வாட்டிவிட்டாய், யான்ஒருத்தியோ - நான் ஒருத்திதானோ, கங்குலே-ஓஇரவே,

உனக்கு உட்பகை-உனக்கு உட்பகைஆனவள். எ-று. 'கங்குலே' விளியுருபு ஏற்றது, 'ஒருத்தியோ' என்றதில் உள்ள ஓகாரம் வினப்பொருளில் வந்தது. ()

வெங்கையாதபன் வீழ்தலும்யானுனைச்
செங்கைகூப்பிய தீவினைநோக்கியோ
வங்கையாலெடுத் தாரழற்கொள்ளியென்
கொங்கைமீது கொளுத்தினை திங்களே.

[ஓ சந்திரனே! சூரியன் வீழ்ந்த உடனே உன்னைச் செங்கையால் கூப்பிக் கும்பிடுகிறதை தீய செயல் என்று கொண்டோ உன் அழகிய கையால் கொள்ளியை எடுத்து என் கொங்கைகளைச் சுடுகிறாய் என்றாள் என்பதாம்.]

இ-ள். திங்களே - ஓ சந்திரனே! வெங்கை - வெப்பமான கிரணத்தை உடைய, ஆதபன் - சூரியன், வீழ்தலும் - மேலைக்கடலிலே போய் விழுந்த உடனே, யான் - நான், உனை - உன்னை, செங்கை கூப்பிய - (நோக்கிச்) செவந்த கைகளைக்குவித்துக் கும்பிட்டதை, தீவினை நோக்கியோ-தீய செய்கை என்று கொண்டோ, ஆர் அழல் கொள்ளி - நிறைந்த நெருப்புக் கொள்ளியை, அம்கையாலெடுத்து - உனது அழகிய கையினாலெடுத்து, கொங்கைமீது கொளுத்தினை - எனது கொங்கைகளின் மேலே கொளுத்தினாய். எ-று.

'வெங்கை' 'அங்கை' என்றவைகளில் உள்ள கை என்றது கதிர்களை, 'வெங்கை' சூரியனின் கதிர்கள். 'அங்கை' சந்திரனின் கதிர்கள். (கதிர்= கிரணம்.) கன்னியர் பிறை தொழுதல் மரபு இதனை அறிக. 'திங்களே' விளி யுருபு ஏற்ற பெயர். (கக0)

குன்றுலாவு கொடுந்திறற்றென்றலங்
கன்றுலாவிய கண்ணகல்விண்ணெலாஞ்
சென்றுலாவு திரைக்கடலன்னமா
னின்றுலாவவென் னெஞ்சிடம்போதுமோ.

[கடலை ஒத்த ஆசையும் தென்றலும் உலாவ என் மனமாகிய இடம் போதுமோ என்றாள் என்பதாம்.]

இ-ள். கண் அகல்விண் எலாம் - இடம் அகன்ற ஆகாயம் எல்லாம், சென்று - போய், உலாவு - உலாவுவதான, திரைக்கடல் அன்ன - அலையை உடைய கடலை ஒத்த, மால் - எனது ஆசையானது, நின்று உலாவ - நிலை கொண்டு எப்பொழுதும் உலாவிக்கொண்டிருக்க; குன்று உலாவு - பொதிய மலையிலே உலாவுவதான, கொடும் - (காமிகளுக்குக்) கொடுமையைச் செய்கின்ற, திறல் - வல்லமையை உடைய, தென்றல் அம் கன்று - இளம் தென்றலானது, உலாவிய - அதுவும் சஞ்சரிக்கப் புகுந்தது, என் நெஞ்சு இடம் போதுமோ - (இப்படி இரண்டும் உலாவிக்கொண்டிருந்ததற்கு)என் மனமாகிய இடம் போதுமானது ஆகுமோ. எ-று.

ஈற்று ஒகாரம் வினப்பொருளில் வந்தது. 'மால்' - காமமயக்கம், 'தென்றல் அம்கன்று, (தென்றல் - தென்றல் காற்றின், அம் - அழகிய, கன்று - இளையகாற்று) கன்று இளமைப்பெயர். கடல்போன்ற ஆசை என் உள்ளத்தே உலாவிக்கொண்டு இருக்கிறது அதோடு தென்றலும் புகுந்து உலாவுவதென்றால் என் மன இடம் போதாதென்பதாம். (கககக)

போதநோதக வாக்கியும்போகிலாய்
பாதநோதக வேபனிக்கங்குலே
சூதனோதமுற் றோன்றியுமிற்றைநாட்
காதனோதலுங் கற்றிலைபோலுமால்.

[பனியோடு கூடிய இருளே என்னை மிகத் துன்பப்படுத்தியும் போகவில்லை. உன்காலில் நோய் உண்டோ? அருணன் உதயமாகியும் நான் இப்பொழுதும் காதல் நோயால் துன்பப்படுவது உனக்குத் தெரியவில்லையோ என்றாள் என்பதாம்.]

இ-ள். பனிக்கங்குலே - பனியோடு கூடிய இரவே! போத - மிகுதியாகவும், நோதகவு ஆக்கியும் - என்னை நோவும்படிச்செய்தும், போகிலாய்-போகாதிருக்கின்றனை, பாதநோதகவே - உன் கால்களுக்கு நோவு உண்டோ?, சூதன் - சூரியனுடைய தேர்ச்சாரதியாகிய அருணன், ஓதம் முன் தோன்றியும் - கடலிலே உனக்கு முன்னாலே தோன்றியும், இற்றைநாள் - இந்தத் தினத்தில், காதல் - ஆசையினாலே, நோதலும் - வருந்துவதும், கற்றிலை போலுமால் - நீ தெரிந்துகொள்ள வில்லையோ?. எ-று. ஆல்-அசை. 'கங்குலே' விளி எற்ற பெயர்.

"சூரியன் தேர்ச்சாரதியாகிய அருணன் தோன்றியும் என்னை ஆசை நோய் துன்புறுத்துவதா? இராவெல்லாம் வாட்டினையே இனியேனும் எனக்கு இரங்கல் கூடாதா?" என்பது குறித்த பொருளாம். இரவு செல்லாது நீட்டித்தற்குக்காரணம் கால்நோயோ என்று காரணம் குறிப்பித்து வினயதாம். இதனை "தனிப்பாடல்" ஆழிவாய்ச்சத்தம் அடங்காதோ யான்வளர்த்த, கோழி வாய் மண்தூறு கொண்டதோ - ஊழி, திரண்டதோ. என்றதனோடு ஒப்பிடுக.

நிரவுந்தென்றலு நீள்விசும்பெங்கணும்
பரவுந்திங்களும் பாய்திரையோதையின்
வரவும்போர்வின் மதனனும்போகிலா
விரவொன்றேகினெற் கியாருமொப்பில்லையே.

[தென்றலும், சந்திரனும், அலைமுழக்கமும் மன்மதனும் நீங்காதிருக்கின்ற இந்த இரவு ஒன்றுமாத்திரம் போனால் எனக்கு இணை எவரும் இல்லை என்பதாம்.]

இ-ள். நிரவும் தென்றலும் - எங்கும் நிரம்புவதான தென்றற்காற்றும், நீள் - நீண்ட, விசும்பு எங்கணும் - ஆகாய முழுவதும், பரவும் - பரவுகின்ற,

திங்களும் - சந்திரனும், பாய் - மோதுகின்ற, திரையோதையின் - அலைமுழக்கத்தின், வரவும் - வருதலும், போர் - போர் செய்கின்ற, வில் - கரும்பு வில்லைத்தாங்கிய, மதனனும் - மன்மதனும், போகிலா - போகாத, இரவு ஒன்று எகின் - இந்த ஒரு இராத்திரி மாத்திரம் போகுமானல், யாரும் எற்கு ஒப்பு இல்லையே - எனக்கு யாரும் இணை இல்லை எ-று. ஏ - ஈற்றசை. உம்மைகள்- எண்ணும்மைகள்.

"மதனனும் போகிலா, விரவொன்றேகினெற் கியாருமொப்பில்லையே" என்பதற்கு "கிரவும் தென்றலும்..............மதனனும் போகிறதில்லை; (அவர்கள் இருந்தாலும் பாதகமில்லை, இந்த இராத்திரி மாத்திரம் நீங்கிவிடுமானல் எனக்கு ஒப்பாவார் யாருமில்லை) "காலைக்குச் செய்த நன்றென்கொலெவன்சொல் யான், மாலைக்குச்செய்தபகை" என்ற குறள் கவனிக்கற்பாலது. என்னும் பொருள் கூறலாம். இரவு நீங்கின் மற்றையதானே நீங்கும் என்பதும் தான் விரும்பிய அரிச்சந்திரனை அடையலாம் என்பதும் கருதிக் கூறியதாம். (கசங)

பூழிசென்று புரண்டபொற்பாவையைத்
தோழிசென்று தெருட்டலுந்தோழியை
யாழிசென்றெ னடைந்தபினெத்தனை
யூழிசென்றவென் றெண்ணுதற்கேட்டனள்.

[தோழி தன்னை வந்து தெளிவு உண்டாக்க சூரியன் மேல்கடலில்
விழுந்தபின் எத்தனை ஊழிசென்றது என்றாள் என்பதாம்.]

இ-ள். பூழிசென்று புரண்டபொற் பாவையை - (இந்தவிதமாக அரிச்சந்திரன்மேல் வைத்த ஆசை நோயினல்) புழுதியிலே போய்க்கிடந்து புளுகின்ற பொன்பாவை போன்ற சந்திரவதியை, தோழி சென்று - அவளுடைய தோழி ஆனவள் கிட்டேபோய், தெருட்டலும் - தெளியச்செய்த உடனே, தோழியை - (அப்படித் தெளிவுபடுத்திய) தோழியை, ஒண் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியை உடைய சந்திரவதி ஆனவள், என்று - சூரியன், ஆழி- சமுத்திரத்தைச், சென்று - போய், அடைந்தான் - அடைந்த பிற்பாடு, எத்தனை ஊழிசென்ற என்று கேட்டனள் - எத்தனை ஊழிகாலம் ஆயிற்று என்று கேட்டனள். எ-று. "பொற்பாவை" பொன்னல் செய்த பாவைபோலும் சந்திரமதி, 'ஒண்ணுதல்' அன்மொழித்தொகை. காமுற்று வேதனைப் படுவோர்க்கு இரவின் ஒவ்வொரு கணமும் ஒவ்வோர் யுகமாகக்காணும். (கசச)

தோழிகைத்தலங் கூப்பியித்துன்னிருள்
நாழிகைக்கிட மேகலங்கேளென
வாழிகைப்பிடி வந்துமென்னுவெனுக்
கோழிகைத்தலத் தைக்கொட்டிக்கூவிற்றே.

[தோழி கைகுவித்து இந்த இருட்டு இன்னும் ஒரு நாழிகையில் போய்விடும் பிறகு நன்மை கேட்பாய் என்றாள். அப்போது கோழி சந்திரவதி வாழ்க அரிச்சந்திரனே கைப்பிடி என்பதுபோல் செட்டையை அடித்து கூவிற்று என்பதாம்.]

இ-ள். தோழி கைத்தலம் கூப்பி - அதற்குத் தோழியானவள் தன் கைகளைக் குவித்துக் கும்பிட்டு, இத்துன் இருள் - இந்த நெருங்கிய இருட் டானது, நாழிகைக்கிடமே - இன்னும் ஒரு நாழிகை நேரத்திற்கே இடம் கொண்டு இருக்கும், நலம் கேளென - (அதற்குமேல்) நன்மையைக் கேட்கப் போகிறாய் (என்று சொல்ல) கோழி - (அச்சமயத்தில்) சேவலானது, கைத் தலத்தைக் கொட்டி - தனது இறகுகளாகிய கையைக் கொட்டிக்கொண்டு, வாழி - சந்திரவதி வாழ்வாளாக, வந்து கைப்பிடி - அரிச்சந்திரனே விரைவிலே வந்து அச்சந்திரவதியை கைப்பிடித்துக்கொள்; என்னுவெனு - என்று சொல் வதைப்போல, கூவிற்று - கூவினது. எ-று. ஏ - ஈற்றசை. (கஙரு)

வேயடங்கின வேலையடங்கின
தீயடங்கின திங்களுங்கங்குலும்
போயடங்கின மன்மதன்போரெலாம்
வாயடங்கின வண்குமுதங்களே.

[கங்குல் சென்றவுடனே புல்லாங்குழல் ஓசை அடங்கிற்று, சமுத்திரவொலி அடங்கிற்று, சந்திரன் இருள் இவைகளின் வெம்மை அடங்கிற்று, மன்மதன் சண்டையும்போய் அடங்கிற்ற, குமுத மலரும் வாய் அடங்கிற்று என்பதாம்.]

இ-ள். வேய் அடங்கின - மூங்கிற் குழலோசை அடங்கிற்று, வேலை அடங்கின - கடலொலிகளும் அடங்கிற்று, திங்களும் கங்குலும் தீய அடங்கின- சந்திரனும் இருட்டும் தம் வெம்மை அடங்கின, மன்மதன் போரெலாம்- மன்மதனுடைய சண்டை முழுதும், போய் அடங்கின - போய் ஒழிந்தது, வண்குமுதங்கள் - அழகிய குமுதமலர்கள், வாய் அடங்கின - வாய் மூடுதலா யின. எ-று.

(திங்களும் கங்குலும் தம் தீமை யடங்கின என்றும், தம் தீயின் தன்மை அடங்கின என்றும், திங்களும் கங்குலுமாகிய 'தீயவைகள் அடங்கின என்றும் பொருள் செய்வர்.) இதனால் பொழுது விடிந்தமை கூறினார். (கஙசு)

காரிசங்கந் துயிலெழக்கன்னிமால்
பாரிசங்கம் பொறுத்ததுபார்க்கவே
வேரிசங்க மெழுந்துமுழங்கிட
வாரிசங்கண் மலர்ந்தனவெங்குமே.

[காலையில் கரிக்குருவியும் சங்கும் முழங்கின பூமாதேவி அரசர் கூட்டங்களைத் தாங்கி யிருப்பதைக் காணவே ஏரியில் உள்ள சங்கம் எழுந்து சப்திக்க எங்கும் தாமரைகள் மலர்ந்தன என்பதாம்.]

இ-ள். காரி - கரிக்குருவியும், சங்கம் - விடியற்காலத்துச் சங்கும், துயில் எழ - நித்திரைதெளிந்து முழங்க, கன்னி - பெண்ணான, மால் - மகாவிஷ்ணுவினுடைய, பாரி - மனைவியாகிய பூதேவி, சங்கம் - (அங்குவந்த) அரசர்களின் கூட்டங்களை, பொறுத்தது - தாங்கிக்கொண்டிருப்பதை, பார்க்கவே - பார்ப்பதற்கு, ஏரி - குளங்களிலுள்ள, சங்கம் எழுந்து முழங்கிட - சங்குகள் எழுந்து எல்லாவிடங்களிலும் முழங்க, வாரிசங்கள் - தாமரை மலர்கள், எங்கும் மலர்ந்தன - எல்லா இடங்களிலும் மலர்ந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

காலைச்சங்கமும் எங்கும் முழங்கின, கரிக்குருவி சப்தித்தது, கமலங்கள் மலர்ந்தன என விடியலை வர்ணிக்கின்றார். (காரி - கரிக்குருவி) (துயில் எழல்- சப்தித்தல்) சங்கமாகிய கண்டத்தில் ஒலி உண்டாகத் தாமரைகளாகிய முகங்கள் எங்கும் மலர்ந்தன எனும் நயம்படக்கூறினர். (கசஎ)

கொல்வனாயினுங் கோதையைச்சந்திரன்
வெல்வனாயினு மேலவனைச்செயல்
சொல்வனானென்று துண்ணெனச்செங்கதிர்ச்
செல்வனாழியந் தேர்மிசைத்தோன்றினான்.

[சந்திரன் சந்திரமதியைக் கொல்வதானாலும் வெல்வதானாலும் மேலே அவனுக்குச் செய்யவேண்டாமென்று சொல்லுகின்றவன் நானே என்று சூரியன் ஒற்றைச்சக்கரத் தேர்மேலே விரைந்து தோன்றினான் என்பதாம்.]

இ-ள். சந்திரன் - சந்திரனானவன், கோதையை - சந்திரவதியை, கொல்வன் ஆயினும் - கொல்லுகிறவனே யானாலும், வெல்வனாயினும் - அவளைக் கொன்று வெல்லுகிறவனே யானாலும், மேல் - இனிமேல், அவனைச் செயல் சொல்வன் நான் என்று - அந்தச்சந்திரனை (நோக்கி) அப்படிச் செய்யாதே என்று சொல்லுகின்றவன், நான் என்று - நானே என்று, செங்கதிர்ச் செல்வன் - செவந்த கிரணங்களை உடைய சூரியன், ஆழி அம் தேர்மிசைத் துண்ணென தோன்றினான் - ஒற்றைச் சக்கரத்தையுடைய அழகிய தேரின்மேலே விரைந்து தோன்றினான். எ-று.

"மேலவனைச் செயல் சொல்வனானென்று" மேலே அவன் நடந்துகொள்ளுதற்குத்தக்க வழிகளை நான் சொல்வேனென்றும், அதற்குமேல் அவனை என் செய்கைகளால் சொல்லி அறிவுறுத்துவேனென்றும் பொருள் கொள்வர். உம்மைகள் எண்ணும்மைகள். 'கோதை' என்பது பெண்ணைக் குறித்தது இங்கு சந்திரமதியை; (கோதை - பூமாலை) பூமாலை போல்பவள் என்றானும், பூமாலையை அணிந்தவள் என்றானும் பொருள் கொள்வர். (கசஅ)

சோலையெங்குந் தொழுதிகளார்த்தன
வாலயந்தொறுஞ் சங்கங்களார்த்தன
மாலைவெண்குடை மன்னவர்முன்றில்வாய்க்
காலைமாமுரசங்கள்கறங்கின.

[சோலை எல்லாம் பறவைகள் சப்தித்தன கோயில்களிலெல்லாம் சங்குகள் ஒலித்தன அரசர்கள் முன்றிலில் எல்லாம் காலை முரசம் ஒலித்தன என்பதாம்.]

இ-ள். சோலை எங்கும் - சோலைகள் எல்லாம், தொழுதிகள் ஆர்த்தன- பறவைக்கூட்டங்களின் முழக்கங்கள் ஒலித்தன, ஆலயம் தொறும் - கோயில்களெல்லாம், சங்கங்கள் ஆர்த்தன - சங்கங்கள் முழங்கலாயின, மாலை - மாலைகளையும், வெண்குடை - வெள்ளைக்குடைகளையும் உடைய, மன்னவர் முன்றில்வாய் - அரசர்களுடைய திரு முற்றங்களிலே, காலைமாமுரசம் - விடியற் காலத்தில் முழங்குகிற பெரிய முரசங்கள், கறங்கின - முழங்கலாயின. எ-று.

முன்னமன்னன் முகுர்த்தமொரேழெனச்
சொன்னநற்றினம் வந்துதொடங்கலு
மன்னனும்மறையோர்களுமாதருங்
கன்னலந்திருக் காவணத்தெய்தினர்.

[முன்னே குறித்த எழாவதுநாள் வந்த உடனே அரசனும் வேதியரும் பெண்களும் கல்யாணப்பந்தலுக்குள் வந்தார்கள் என்பதாம்.]

இ-ள். முன்னம் - முன்னே, மன்னன் - சந்திரதய அரசன், முகுர்த்தம் ஓர் ஏழெனச்சொன்ன நல்தினம் - முகூர்த்தம் ஓர் ஏழுநாள் அளவென்று சொல்லிய நல்லநாள், வந்து தொடங்கலும் - வந்து கூடின அளவிலே, மன்னனும் - அந்தச் சந்திரதய அரசனும், மறையோர்களும் - வேதப்பிராமணர்களும், மாதரும் - பெண்களும், கன்னல் அம் - கரும்பு முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட அழகிய, காவணத்து எய்தினர் - கல்யாணப்பந்தலில் வந்து சேர்ந்தார்கள். எ-று. (உ௦௦)

வேந்தரீண்டினர் வேதியரீண்டினர்
மாந்தரீண்டினர் மங்கையரீண்டின
ராய்ந்தநீதி யமைச்சருமவ்வவர்ச்
சேர்ந்தசேனையுஞ் சேரவந்தீண்டின.

[அரசர்கள் வந்து கூடினர், வேதியர்கள் கூடினார்கள், ஆண்கள் வந்து கூடினார்கள், பெண்கள் வந்து கூடினார்கள், நீதியுணர்ந்த மந்திரிகள் வந்து கூடினார்கள், அவரைச்சேர்ந்த சேனைகளும் கூடின என்பதாம்.]

இ-ள். வேந்தர் ஈண்டினர் - அரசர்கள் எல்லோரும் வந்த கூடினார்கள், வேதியர் ஈண்டினர் - வேதப்பிராமணர்களும் வந்து கூடினார்கள், மாந்தர்

ஈண்டினர் - ஆடவர் வந்து கூடினார்கள், மங்கையர் ஈண்டினர் - பெண்கள் எல்லாம் வந்து கூடினார்கள், ஆய்ந்த நீதி அமைச்சரும் - ஆராய்ந்துணர்ந்த நீதியை உடைய மந்திரிமார்களும், அவ்வவர்ச்சேர்ந்த சேனையும் - அவரவரைச் சேர்ந்த சேனைகளும், சேரவந்தீண்டின - ஒருமிக்க வந்து கூடின. எ-று.

ஈண்டினர் என்றசொல்லே பன்முறை இப்பாவில் வந்தது சொற்பொருள் பிரிதி நிலையணி. (உ0க)

வாகையுற்ற மதனொருபால்வர
வோகையுற் றுவண் டோலமிட்டேவரப்
பாகையுற்ற பனிமொழிப்பைந்தொடித்
தோகையைக்கொடு தோழியர்தோன் றினர்.

[ஜெயம்கொண்ட மன்மதன் ஒருபக்கம்வர வண்டுகள் பாடிக்கொண்டுவர சந்திரவதியைக் கூட்டிக்கொண்டு தோழியர்கள் வந்து தோன்றினார் கள் என்பதாம்.]

இ-ள். வாகை உற்ற - ஜயத்தை உட்கொண்ட, மதன் ஒருபால்வர-மன்மதன் ஒருபுறத்திலே வரவும், ஓகை உற்று - களிப்பைக்கொண்டு, வண்டோலம் இட்டேவர - வண்டுகள் பாடிக்கொண்டே கூடவே வரவும், பாகையுற்ற- தேன்பாகுபோன்ற, பனிமொழிப் பைந்தொடி - குளிர்ந்த சொல்லை உடைய பசிய வளையல்களை அணிந்த, தோகையைக்கொடு - மயில்போலும் சாயலையுடைய சந்திரவதியைக் கூட்டிக்கொண்டு, தோழியர் தோன்றினர் - தோழிமார்கள் வந்து தோன்றினார்கள். எ-று.

'தோகை' ஈங்கு சந்திரவதியைக் குறித்தது. (உ0உ)

அங்கையிற்பொலி சங்கினமார்த்தெழ
செங்கயற்கண் டிருக்குழையைப்பொரக்
கொங்கையென்றிரு குன் றுசுமந்தெழின்
மங்கைமாளிகை வாயிலின்மேயினள்.

[சந்திரவதி தனது திருமாளிகை வாயிலுக்கு வந்தாள் என்பதாம்.]

இ-ள். அம்கையில் பொலி - அழகிய கைகளிலே விளங்குகின்ற, சங்கினம் ஆர்த்து எழ - சங்கு வளையல்கள் கலகலவென்று சத்திக்கவும், செங்கயல் கண் - செவந்த கயல் மச்சம்போலும் கண்கள், திருக்குழையைப்பொர - அழகிய காதில் அணிந்த குழைகளோடு பொருதவும், கொங்கை என்று இரு குன்று சுமந்து - கொங்கை என்று சொல்லும்படியான இரண்டு மலைகளைச் சுமந்துகொண்டு, எழில் மங்கை - அழகிய சந்திரவதியானவள், மாளிகை வாயிலின் மேயினள் - தனது திருமாளிகை வாயிலுக்கு முன்னே வந்தாள். எ-று. 'குழை' - காதணி. 'மங்கை' பெண்களின் பருவப்பெயர் அதையுடைய பெண்ணுக்கு ஆயிற்று. (உ0௩)

வல்லெனப்புடைக் குந்தனவன்பொறைக்
கில்லெனக்கரு தும்மருங்கிற்றிடு
மெல்லெனப்பதம் வைத்துமிதித்துமுன்
செல்லெனப்பொற் சிலம்புபுலம்புமால்.

[சூதாடு கருவிபோன்ற முலைப்பாரத்தை இல்லை என்று சொல்லும்படி அவ்வளவு சிறிதாயுள்ள இடை தாங்காது ஆகையால் மெள்ளக் காலைத்தூக்கி வைத்து பூமிமேல் மிதித்து செல்லுக என்று சொல்லுவதுபோல் சிலம்புகள் சப்திக்கும் என்பதாம்.]

இ-ள். வல் என - சூதாடு கருவிபோல, புடைக்கும் - விம்முதலைக்கொண்ட, தனவன் பொறைக்கு - கொங்கைகளாகிய வலிய கனத்தைத் தாங்குதற்கு, இல்லெனக் கருதும் - உருவம் இல்லை என்று நினைக்கத்தக்க, மருங்குல் இற்றிடும் - இடையானது ஒடிந்து போகும், (ஆகையால்) மெல் என - மெதுவாக, பதம் வைத்து - கால்களைத் தூக்கி வைத்து, மிதித்து - பூமிமேல் மிதித்துக்கொண்டு, முன் செல் என - முன்னே போகக்கடவாய் என்று, பொற்சிலம்பு புலம்புமால் - பொன்னம் சிலம்புகள் ஒலிக்கும். எ-று. ஆல்-அசை. ()

நீடிவார்ந்து நெறித்தகுழற்சிகை
யோடியுட்சுழி யும்புனலொத்ததா
லாடிநோக்கி யணிந்தவணிச்சுடர்
கோடிசூரியர் கூடியதொத்ததே.

[நீண்ட சிக்கவிழ்ந்த வார்ந்த கூந்தல் ஓடிச்சுழிக்கும் ஆற்றுநீரை ஒத்திருந்தது கண்ணாடியில் நோக்கி அணிந்திருந்த ஆபரணத்தின் பிரகாசங்கள் கோடி சூரியர் ஓர் இடத்தில் கூடியதுபோல் இருந்தது என்பதாம்.]

இ-ள். நீடி - நீண்டு, வார்ந்து - சிக்கவிழ்ந்து, நெறித்த - நடுவே வகிர்ந்தெடுத்துள்ள, குழல்சிகை - கூந்தலாகிய கொண்டையானது, ஓடி உள்சுழியும் - நீண்டு உள்ளே சுழித்தலை உடைய, புனல் ஒத்தது - ஒரு ஆற்று நீரை ஒத்து இருந்தது, ஆடி நோக்கி - அதிலே கண்ணாடியைப் பார்த்துக்கொண்டு, அணிந்த - ஒழுங்காக அலங்கரித்துக்கொண்ட, அணிச்சுடர் - ஆபரணங்களின் சோதியானது, கோடி சூரியர் - கோடி சூரியர்கள், கூடியது ஒத்தது - ஓரிடத்தில் கூடியதை ஒத்திருந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

'ஒத்ததால்' என்றதில் உள்ள ஆல், அசை. 'குழல் சிகை' குழலாகிய சிகை என்றும் விரியும். (உ0ரு)

நச்சுக்கட்டிய நல்லமுதும்மிக
வைச்சுக்கட்டிய மாமுலையாலுல

கச்சுக்கட்டழி யும்மழியும்மெனக்
கச்சுக்கட்டி மறைத்தனர்கண்ணையே.

[நஞ்சையும் அமுதையும் மிகுதியாக அமைத்து வைத்துக் கட்டிய பெரிய முலைகளினால் உலகமானது அச்சுக்கெட்டழிந்து போமென்று இரவிக்கை இட்டு மூடினார்கள் என்பதாம்.]

இ-ள். நச்சு கட்டிய - நஞ்சைக்கட்டியதும், நல் அமுதும் மிக - நல்ல அமிர்தத்தையும் அதிகமாக, வைச்சுக்கட்டிய - வைத்துக்கட்டி அமைத்திருக்கிற, மாமுலையால் - பெரிய முலைகளினால், உலகு - உலகமானது, அச்சுகட்டு அழியும் - தனது நிலை குலைந்து போகும், என - என்று, கச்சுகட்டி - ரவிக்கை கொண்டு கட்டி, கண்ணை - அவைகளின் கண்களை, மறைத்தனர் - மறைத்தார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

'நஞ்சு' நச்சென்று ஆனது வலித்தல் விகாரம். 'வைத்துக்கட்டிய' என்று 'வச்சுக்கட்டிய' என்றாயதுபோலி 'கண்ணை' என்றது முலைக்காம்புகளை, நஞ்சென்றது கருமை நிறத்தை. 'அழியும் அழியும்' என்றடுக்கியது சாதம்பற்றி. ()

ஆதிநூலு மனைத்துலகுங்கெடு
நீதியன்றிவ ணீசெல்வதென்னவே
காதியோடிய கண்களைக்காதுபோய்ச்
சோதிவார்குழை தொட்டுமறிக்கவே.

[கண்ணே உன்னால் வேதசாஸ்திரங்களும் எல்லா உலகும் கெடும், நீதியல்ல இங்கே நீ செல்வது என்று தன்னை வென்று நீண்டிருக்கும் கண்களை காதானது குழையினால் தொட்டுத்தடுக்கும் என்பதாம்.]

இ-ள். ஆதிநூலும் - ஆதியாகிய வேதசாஸ்திரங்களும், அனைத்து உலகும் - எல்லா உலகங்களும், கெடும் - கெடுவனவாகும், (ஆகையால்) நீதியன்று நீ இவண் செல்வது என்னவே - இங்கே நீ செல்லுதல் நியாயம் அல்ல என, காதி ஓடிய கண்களை - தம்மைவென்று நீளுவனவான கண்களை, காது போய் - காதானது சென்று, சோதி வார்குழை தொட்டு - ஒளியைக்கொண்டு தொங்குவனவாகிய குழையினால் தொட்டு, மறிக்க - தடுக்கவும். எ-று. ஏ-ஈற்றசை.

'என்னவே' என்றதில் உள்ள ஏகாரம் அசை, இச்செய்யுள் குளகம்; இது முதல் நான்கு பாடல்கள் குளகம்; உம்மைகள் - எண்ணும்மைகள்.(உ0எ)

காவென்றெண்ணுங் காத்தரிச்சந்திர
வாவென்றெண்ணரு மன்னரையப்புரம்
போவென்றெண்ணிப் புகல்கின்றபோலவே
தாவுசோதிக் கலாபந்தழங்கவே.

[அரிச்சந்திரனே வா! மற்றைய அரசர்களே போங்கள் என்று சொல்லுவது போல கலாபம் என்னும் அரைநூன்மாலை ஒலித்தது என்பதாம்.]

இ-ள். கா என்று - கற்பகத்தருவே என்று, எண்ணும் - மதிக்கலான, காத்து-கையை உடைய, அரிச்சந்திரா - அரிச்சந்திர மஹாராஜனே! வா என்று-நீர் வாக்கடவீர் என்றும், எண் அரும் மன்னரை - எண்ணுதற்கு அரிதான அரசர்களை எல்லாம், அப்புறம்போ என்று - அப்பாலே தூரப்போங்கள் என்றும், எண்ணி - ஆலோசித்து, புகல்கின்றபோல - சொல்லுகின்றமைபோல, தாவு சோதிக்கலாபம் - வீசுகின்ற ஒளியைக்கொண்ட கலாபம் என்கிற அரைநூன்மாலை, தழங்க - ஒலிக்கவும். எ-று. ஏ - ஈற்றசை.

'போலவே' என்றதில் உள்ள ஏகாரம் தேற்றப்பொருளது. (உ0அ)

கைத்தலத்துணை வீசிக்கதிர்மணிப்
பத்திபின்னுமுன் னுஞ்சென்றுபாயவே
யெய்த்தநுண்ணிடை யிற்றிடுமென்றுமேல்
மொய்த்தவண்டு கலந்துமுழங்கவே.

[இரண்டு கைகளையும் வீசி ரத்தினவரிசைகள் பின்னும் முன்னும் சென்று காந்தியை வீசவும், இளைத்த நுண்ணிடை நாம் ஏறினால் ஒடிந்து போமென்று மேலே மொய்த்திருக்கிற வண்டுகள் கலைதலாகி முழங்கவும் என்பதாம்.]

இ-ள். கைத்தலத்துணை-கைகள் இரண்டையும், வீசி - வீசி, கதிர்மணிப் பத்தி - ஒளியை உடைய ரத்தின வரிசைகள், பின்னும் முன்னும் சென்று பாய(வே) - பின்னும் முன்னும் சென்று காந்தியைவீசவும், எய்த்த நுண் இடை - இளைத்த நுண்ணிதான இடுப்பானது, இற்றிடும் என்று - ஒடிந்து போம் என்று, மேல் - மேலே, மொய்த்த வண்டு - மொய்த்திருக்கிற வண்டுகள், கலந்து முழங்கவே - கலைதலாய் முழங்கவும். எ-று. ஏ - ஈற்றசை.

'பாயவே' என்றதில் உள்ள ஏகாரம் அசை. 'வண்டுகள் தாம் ஏறி இருப்பதால் இடை முறிந்தாலும் முறிந்து போமென்று கலந்து முழங்கின என்பதாம். (உ0க)

சென்னிநின்றிரு சீறடிமட்டும்வான்
மின்னினாலமைத் தன்னசெம்மேனியைப்
பொன்னினான்மணி யாற்புதைத்தேயெழிற்
கன்னிதன்மணக் காவணத்தெய்தினாள்.

[தலையிலிருந்து கால்வரை பொன்னாலும் ரத்தினங்களாலும் மறைத்துக் கொண்டு மின்னலால் அமைத்தது போன்ற மேனியை உடைய சந்திரவதி தன் கல்யாணப்பந்தலுக்குள் வந்தாள் என்பதாம்.]

இ-ள். சென்னி நின்று - தலையில் இருந்து, இருசீறடிமட்டும் - இரண்டு சிறிதான கால்கள் அளவும், வான் மின்னினால் - மேகத்தில் உள்ள மின்னலி

ஞாலே, அமைத்தன்ன செம்மேனியை - அமைத்தாற்போல் இருக்கிற செவந்த தேகத்தை, பொன்னினால் - பொன்னாலும், மணியால் - ரத்நங்களாலும், புதைத்து - மறையச் செய்துகொண்டு, எழில் கன்னி - அழகுள்ளவளும் இளவயதுடையவளுமாகிய சந்திரவதி, தன்மணக்காவணத்து எய்தினாள் - தனது கல்யாணப் பந்தலுக்குள்ளே வந்தாள். எ-று.

'புதைத்தே' என்றதில் உள்ள ஏகாரம் அசை. தேற்றப் பொருளது என்று கூறுவாரும் உளர். 'சேறடி' என்றதைச் 'சீரடி' எனப்பாடமோதி சிறந்த பாதம் என்றும் பொருள் செய்வர். (உ௯0)

பெடைநடைத்திருப் பெண்ணரசெய்திய
திடையினின்றவ ரேத்தியியம்பிடக்
கடையுகத்திற் கடல்கிளர்ந்தாலென
வடையமன்னவ ராலித்தெழுந்தனர்.

[லட்சுமிபோன்ற சந்திரவதி வந்தமையை மத்தியில் இருந்தவர்கள் போய்ப் புகழ்ந்துகூற அரசர்கள் எல்லாம் கடல்பொங்கி வந்தாற் போல் சந்தோஷ ஆரவாரம் செய்து எழுந்தார்கள் என்பதாம்.]

இ-ள். பெடைநடை - பெட்டை அன்னம்போலும் நடையை உடைய, திரு பெண்ணரசு எய்தியது - லட்சுமிபோன்ற பெண்களுக்கு அரசியான சந்திரவதி வந்ததை, இடையில் நின்றவர் - நடுவே நின்றவர்கள், ஏத்தி இயம்பிட - போய்ப் புகழ்ந்துசொல்ல, கடை உகத்தில் - முடிவான யுகாந்தகாலத்தில், கடல் கிளர்ந்தாலென - கடல்பொங்கி வந்தாற்போல, அடைய - ஒரேமட்டாக, மன்னவர் - அரசர்கள், ஆலித்து - சந்தோஷ ஆரவாரம் செய்துகொண்டு, எழுந்தனர் - எழுந்தார்கள். எ-று.

'பெடை நடை' என்றதால் பெடை என்பதற்கு அன்னம் எனப்பொருள் உரைத்தாம்; அன்னத்தை நடைக்கு உவமிப்பது பெருவழக்காதலின். "அன்ன நடையும் அன்னமிலா ஐயர் நடையும்" என்றார் சிவப்பிரகாச சுவாமிகளும். (உ௯௧)

தேரினேறித் திசையெங்கணும்வரப்
போரின்வீரர்கள் பொம்மென்றதிர்ந்தெழு
மூரிவீர முரசமுங்காளமும்
பேரியுஞ்சங்கும் பீலியுமார்த்தவே.

[போர்வீரர்கள் ரதங்களிலே ஏறிக்கொண்டு நாலுதிக்கும் பாவி வந்தனர். அப்பொழுது முரசு எக்காளம், பேரி, சங்கு முதலிய வாத்தியங்கள் ஆர்த்தன என்பதாம்.]

இ-ள். போரின் வீரர்கள் - யுத்தத்துக்குத்தக்க வீரர்கள் எல்லாம், தேரின் ஏறி - ரதங்களிலே ஏறிக்கொண்டு, திசை எங்கணும் வா - நான்கு திசைகளின்

இடங்கள் எல்லாம் பரவிவர, (அப்பொழுது), பொம் என்று - பொம்மென்று, அதிர்ந்து எழும் - அதிர்ந்து வருவனவான, மூரிவீர முரசமும் - பெரிய வீர முரசங்களும், காளமும் - எக்காளங்களும், பேரியும் - பேரிகைகளும், சங்கும் - சங்குகளும், பீலியும் - மற்ற வாத்தியங்களும், ஆர்த்த - ஒலிக்கல் ஆயின. எ-று. ஏ - ஈற்றசை.

'எங்கணும்' என்றதில் உள்ள உம்மை முற்றும்மை. 'பொம்' ஒலிக்குறிப்புச்சொல். ஏனைய உம்மைகள் எண் உம்மைகள். (உகஉ)

தாளமத் தளந் தண்டிகையாழ்தெரு
நீளமட்டு நிறைந்தனசக்கர
வாளமட்டு மலிந்தன தூளண்ட
கோளமட்டுங் கொடித்திரளுற்றவே.

[கைத்தாளங்கள், மத்தளங்கள், வீணைகள் யாழ்கள் ஆகிய இவைகள்
எல்லாம் தெரு முழுமையும் நிறைதல் ஆயின, நடப்பதனால்
எழுந்த தூள்கள் சக்கரவாள கிரிமட்டும் சென்றன,
கொடித்திரள் அண்டகோளமட்டும் சென்றன
என்பதாம்.]

இ-ள். தாளம் - கைத்தாளங்களும், மத்தளம் - மத்தளங்களும், தண்டிகை - வீணைதண்டங்களும், யாழ் - இராகம் பாடுகின்ற தம்பூருகள், தெருநீளமட்டும் - (ஆகிய இவைகள்) தெருவின் நீளம் முழுதும், நிறைந்தன - நிறைதல் ஆயின; தூள் - (நடப்பதினால் எழுந்த செம்மண்) தூளிகள், சக்கரவாளமட்டும் மலிந்தன - சக்கரவாள கிரிவரையிலும் பெருகிப்போயின, அண்டகோளமட்டும் - அண்டகோள வரையிலும், கொடித்திரள் உற்ற - கொடிக் கூட்டங்கள் சென்றன. எ-று. ஏ - ஈற்றசை.

'சக்கரவாளம்' வட்டமாகப் பூமியைச் சூழ்ந்திருக்கும் ஓர் மலை. 'அண்டகோளம்' அண்ட உருண்டை ஈங்கு ஆகாயவட்டத்தைக் குறித்தது. (உகங)

பாரினின்று பரந்தெழுந்தண்டர்த
மூரினோடி யுயர்ந்தபெருந்துகள்
காரினுண்டுளிக் கண்மறைந்தெண்டிசை
மூரியானை மதத்துளைமூடிற்றே.

[தூளிகள் பூமியிலிருந்து) விண்ணிற் பறந்து மழைக்கண்களை
அடைத்து அட்டகஜங்களின் மதத்துவாரங்களையும்
அடைத்தது என்பதாம்.]

இ-ள். பாரின் நின்று - பூமியிலிருந்து, பரந்து எழுந்து - பரவிச்சென்று, அண்டர்தம் ஊரின் ஓடி - தேவர்களின் ஊர் அளவும் ஓடி, உயர்ந்த - அதற்கு மேலும் உயர்ந்துபோன, பெரும் துகள் - பெரிய தூளிகள், காரின் - மேகத்

தின், நுண் துளிக்கண் மறைந்து - சிறிதான மழைக்கண்களை மறைத்து, எண் திசை - எட்டுத்திக்கிலும் உள்ள, மூரியானை - பெரிய யானைகளின், மதத் துளை - மதத்துவாரங்களையும், மூடிற்று - மூடிவிட்டது. எ-று. ஏ - ஈற்றசை.

தூளி, மழைக்கண்களையும் அட்டகஜங்களின் மததுவாரங்களையும் அடைத்ததாகக் கூறியது மிகை உயர்வு நவிற்சி அணி. "நின்றும்" நீக்கப் பொருளுருபு. 'ஊரின்' ஊரின் இடத்து; 'இன்' இடப்பொருளுருபு. (உகச)

யானையும்பரி மாவுமிரதமுந்
தேனைவென்ற திருமொழிமாதரு
மேனைநின்ற விருபிறப்பாளருஞ்
சேனையுந்திசை தோறுஞ்செறிந்தவே.

[யானை, தேர், குதிரை, இரதம், மாதர், பிராமணர்கள், சைனியங்கள் ஆகிய இவைகள் திக்குகளில் எல்லாம் நெருங்கின என்பதாம்.]

இ-ள். யானையும் - யானைகளும், பரிமாவும் - குதிரைகளும், இரதமும் - இரதங்களும், தேனைவென்ற - தேனின் ரசத்தைவென்ற, திருமொழி - அழகிய வசனங்களை உடைய, மாதரும் - பெண்களும், ஏனைநின்ற - மற்றுமுள்ள, இருபிறப்பாளரும் - பிராமணர்களும், சேனையும் - சைனியங்களும், திசை தோறும் - திக்குகளில் எல்லாம், செறிந்த - நெருங்கின. எ-று. ஏ - ஈற்றசை.

உம்மைகள் - எண்ணும்மைகள். (உகரு)

இமக்குடங்க ளிரண்டுதனமெனச்
சுமக்குமென்கொடி சூட்டுஞ்சுயம்வர
மெமக்கெமக்கென வெண்ணிவருமவர்
தமக்குப்பின்னரிச் சந்திரன்றோன்றினன்.

[சந்திரவதி சூட்டும் சுயம்வரம் எனக்கு எனக்கு என்று நினைத்து வரும் அரசர்களுக்கெல்லாம் பின்னால் அரிச்சந்திரன் வந்தான் என்பதாம்.]

இ-ள். இமம் - குளிர்ந்த, குடங்கள் - குடங்களை, இரண்டு தனமென - இரண்டு கொங்கைகளென்று, சுமக்கு மென்கொடி - சுமப்பதான மிருதுவாகிய கொடிபோன்ற சந்திரமதி, சூட்டும் சுயம்வரம் - சூட்டுவதான சுயம்வரமானது, எமக்கு எமக்கு என - எனக்கு உண்டு எனக்கு உண்டு என்று, எண்ணி வருமவர் தமக்கு - நினைத்து வருகின்ற அரசர்களுக்கு எல்லாம், பின்னர் - பின்னாலே, அரிச்சந்திரன் தோன்றினன் - அரிச்சந்திரமகாராஜன் தோன்றினன். எ-று.

"மென்கொடி" மெல்லிய பூங்கொடி போல்பவளாகிய சந்திரமதியைக் குறித்தது. 'எமக்கு எமக்கு' என்றது மிகுதியால் அடுக்கியது. (உகசு)

அன்னகாலையி னங்கைகணீட்டியே
கன்னன்மாமொழிக் காரிகைதோழிமார்
மன்னர்நாமமு நாடும்வழிகளு
மின்னதின்ன தெனவெடுத்தோதுவார்.

[அந்தச்சமையத்தில் சந்திரமதியின் தோழிமார் அங்கு வந்திருந்த அரசர்களின் பெயர், ஊர், குலம் முதலியவற்றை இன்னபடி, இன்னபடி என்று கூறினார்கள் என்பதாம்.]

இ-ள். அன்ன காலையின் - அந்தச்சமையத்தில், அங்கைகள் நீட்டியே- அழகிய கைகளை நீட்டி, கன்னல் - கரும்பை ஒத்த, மாமொழி - பெருமை பொருந்திய வசனத்தையுடைய, காரிகை-பெண்ணாகிய சந்திரமதியின், தோழி மார் - தோழிமார்கள், மன்னர் நாமமும் - வந்திருக்கிற அரசர்களின் பெயரும், நாடும் - அவர்கள் நாடும், வழிகளும் - குலமுறைகளும், இன்னது இன்னது என - இன்னபடி இன்னபடி என்று, எடுத்து ஓதுவார் - எடுத்துச்சொல்லத் தொடங்கினார்கள். எ-று. (உகஎ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அதிபாரதனபாரவதிரூபமலர்மானையனையாயிவ
னதிபாயவுயர்போதினறைபாயநிறையாதசிறைவாவியில்
மதியாமல்வலைபீறிவெடிபோனபருவாளைவளைபூகமேற்
குதிபாயமடல்கீறிவிழுதேறல்கரைசாடுகுடநாடனே.

[லட்சுமியை ஒத்தவளே இங்கு இருப்பவன் குடநாட்டரசனாகிய சேரன் என்றாள் என்பதாம்.]

இ-ள். அதிபார-அதிக கனங்கொண்ட, தனபார-தனபாரங்களையும், அதி ரூப - மிகுந்த அழகையும் கொண்ட, மலர்மானை - செந்தாமரைப்பூவில் இருக் கிற லட்சுமிதேவியை, அனையாய் - ஒத்த சந்திரமதியே, இவன் - இங்குள்ள அரசன், நதிபாய - ஆறுபாய, உயர்போதின் நறைபாய - சிறந்த மலர்களின் தேன்பாய, (ஆகிய இவைகளா லெல்லாமுங்கூட) நிறையாத - நிறையாத, சிறைவாவியில் - கட்டுக்குளங்களிலே, மதியாமல் - (வலைஞர்களின் வலையை) சட்டைபண்ணாமல், வலைபீறி - வலையைக் கிழித்துக்கொண்டு, வெடிபோன பருவாளை - துள்ளிபாய்ந்த பருத்தவாளை மச்சமானது, வளைபூகமேல்-வளைந்த குலைகளை உடைய பாக்குமரத்தின்மேல், குதிபாய - குதிக்க, மடல்கீறி - பாளை கள் பிளந்து, விழுதேறல் - விழுகிற தேன்பெருக்கானது, கரைசாடு - குளக் கரையை உடைப்பதான, குடநாடனே - குடநாடனாகிய சேரன். எ-று. ஏ- தேற்றம். ஈற்றசை என்பாரு முண்டு.

'குடநாடு' 'குடக்கு நாடு' என்னும் இருசொல் புணர்ந்து 'குடநாடென் றாயிற்று' மேல்நாடு என்பது பொருள், (குடக்கு - மேற்கு) இதனால் சோ னின் மருதநிலச்சிறப்பு கூறினார். இவை பெரும்பாலும், புளி மாங்காய், புளி

மாங்காய், புளி மாங்காய், புளி மாங்காய், புளி மாங்கனி, என்னும் சீர்கள் ஐந்துகொண்ட சந்தக் கலி நிலைத்துறை. (உகசு)

இருணாறுநஞ்சொத்தவிழியாய்துவண்டெய்த்தவிடையாயிவன்
சுருணாகபந்தத்தினியல்பாமருஞ்சித்ரதொடியேவியே
முரணாரமன்றிட்டமகவானெடுங்கொற்றமுடிசாடினோன்
சரணாரவிந்தத்துமகராலயந்துற்றதமிழ்மாறனே.

[நுண்ணிய இடையை உடைய தமயந்தியே இவன் தமிழ் நாடனாகிய பாண்டியன் என்றாள் என்பதாம்.]

இ-ள். இருள் நாறும் - இருள் தோன்றுவதான, நஞ்சு ஒத்த விழியாய் - விஷத்துக்கு ஒப்பான கண்களை உடையவளே! துவண்டு எய்த்த இடையாய் - துவண்டு இளைத்து இருக்கிற இடுப்பை உடையவளே! இவன் - இங்கு இருக்கின்ற அரசன், சுருள் - சுருண்டிருக்கின்ற, நாகபந்தத்தின் இயல்பு அமரும் - பாம்பின் மண்டலத்தின் தன்மையைப் பொருந்திய, சித்ரதொடி - அதிசயத்தை உடையதான (சிவபெருமான் கொடுத்த) வளையைவிட்டு, முரண் ஆரம் - (வலிமை தோன்ற) வெற்றிமாலையை, அன்று இட்ட - அன்று அணிந்திருந்த மகவானெடும் - இந்திரனோடும், கொற்றமுடி சாடினோன் - போர்செய்து வெற்றிபொருந்திய அவன் முடியை அடித்தவனும், சரணாரவிந்தத்து - தன்னுடைய பாதாரவிந்தங்களிலே, மகராலயந்துற்ற - ஏழுகடலும் வந்து வணங்கின, தமிழ்மாறனே - தமிழ் நாட்டரசனாகிய பாண்டியன். எ-று. ஏ - ஈற்றசை.

பாண்டியர்களில் ஒருவராகிய உக்ரப்பெருவழுதி இந்திரனுடைய முடியில் வளை எவி அவனை மகுடபங்கம் செய்தான் என்பது திருவிளையாடற் புராண கதை; இதை, பாண்டியனில் ஒருவராகவந்த சிவபெருமானாகிய சுந்தரபாண்டியர் மலையத்துவசன் மனைவியாகிய தன் மாமியின் பொருட்டு ஏழுகடலை வருவித்தார் என்பது திருவிளையாடல், (உகஎ)

மலிவாசமலர்பூசிபளிபாடுநறையோதிமயிலேயிவ
னொலியேறுதிரைமோதுமுவராழியுலகேழுமுடனாகவே
வலியோர்களெளியோரைநலியாமலசையாதமணிவாயிலான்
புலியேறுவடமேருகிரிமீதிலிடுமீளிபுனனாடனே

[மயில்போலும் சந்திரவதியே இங்கு இருக்கின்ற இவன் புனல் நாட்டரசனாகிய சோழன் என்றாள் என்பதாம்.]

இ-ள். மலி - மிகுந்த, வாசம் - பரிமளத்தை உடைய, மலர்பூசி - மலரில் உள்ள பூம்பராகங்களைப் பூசிக்கொண்டு, அளிபாடும் - வண்டுகள் பாடுவதான, நறை ஓதி - மணம்கொண்ட கூந்தலுடன் விளங்குகின்ற, மயிலே - மயில்போலும் சாயலை உடைய சந்திரமதியே! இவன் - இங்கு இருக்கின்ற அரசன், ஒலி ஏறு திரை - ஒலிமிகுந்த அலைகள், மோதும் உவர் ஆழி - மோதுவதான உப்

புக்கடல், (சூழ்ந்த) உலகு எழும் - எழு உலகங்களும், உடனுகவே - ஒரு தன்மையை எய்தவும், வலியோர்கள் - வலியவர்கள், எளியோரை நலியாமல்- எளியவர்களை வருத்தப்படுத்தாமல் காத்துவரும், அசையாத மணிவாயிலான்- அசையாத ஆராய்ச்சி மணியை உடைய வாயிலை உடையவன், புலி ஏறு- தனது புலிக்கொடியை, வடமேரு கிரிமீதில் இடும் - வடமேரு கிரியின்மேல் எழுதியிட்ட, மீளி - ஆண்சிங்கம் ஒத்த இவ்வீரன், புனல் நாடனே - புனல் நாட்டதிபதியாகிய சோழன். எ-று ஏ - ஈற்றசை.

'புனல் நாடு' சோழநாடு, "அசையாதமணி வாயிலான்" குறையின்றி ஆளும் அரசன் என்பதாம். இதனை "ஆடுங்கொடிமணி நாவசையாமல் அகில மெலாம், நீடுங்குடையைத் தரித்தபிரான்" என்ற அடிகளா லறியலாம். ()

விடமேவுகடல்போலுமடனீடுகணைபோலும்விழிமாதராய்
வடமேருகிரிபோலுமுயர்தேரினிடையேறிவருகோமகன
றடமாடுமடமாதர்தனபாரநிகரானதடவாயிலார்
குடகேறிவளையாரமணியீனுமணிமேவுகுருநாடனே.

[கணைபோலும் விழியை உடைய சந்திரவதியே! இவ்வரசன் குருநாட்டரசன் என்றுள் என்பதாம்.]

இ-ள். விடம்மேவு - நஞ்சுபொருந்திய, கடல்போலும் - கடலைப்போலவும், அடல் நீடுகணை - வலிமை மிகுந்த அம்பை, போலும் - போலவும், விழி மாதராய் - கண்களை உடைய சந்திரவதியே, வடமேரு கிரிபோலும் - வடக்கே இருக்கிற மகா மேருமலைபோன்ற, உயர்தேரின் இடை - உயர்ந்ததேரின்மேல், ஏறிவரு கோமகன் - ஏறிவரும் தன்மையை உடைய அரசகுமாரன், தடம்ஆடு- குளத்திலே நீராடுகின்ற, மடமாதர் - யௌவன பருவத்தைக்கொண்ட பெண்களினுடைய, தனபார நிகர் - தனபாரங்களை ஒப்பான, தடவாயிலார் - விசாலமான வாயை உடைய, குடமேறி - குடத்திற்குள் ஏறி, வளை - சங்குகள், ஆரமணி ஈனும் - முத்துக்களாகிய மணிகளை பெறுவதான, அணிமேவும் - அழகு பொருந்திய, குருநாடன் - குருநாடன். எ-று. ஏ - ஈற்றசை. (உஉக)

முருகோடுபுழுகோடுபணியோடுபிரியாதமுலையாயிவன்
பொருகோடுகொடுவாசமலர்சாடியிளமேதிபுனல்பாயவே [ண்
வொருகோடிகயலோடவொருகோடியளியோடவொருகோடிவெ
குருகோடவொருகோடிசினவாளைகரையேறுகுருரேசனே.

[இங்கு இருப்பவன் குரு நாட்டரசன் என்றுள் என்பதாம்.]

இ-ள். முருகோடு - பரிமளத்தோடு, புழுகோடு - புனுகோடு, பணியோடு-ஆபரணங்களோடு, பிரியாத முலையாய் - நீங்காதிருக்கின்ற தனங்களை உடையவளே, இவன் - இங்கு இருக்கின்ற அரசன், பொருகோடு கொடு-

போர்செய்கின்ற கொம்பினாலே, இனமேதி - இளமையான எருமையானது, வாசமலர்சாடி - பரிமளத்தை உடைய தாமரைமலர் முதலானவற்றைச் சிதைத்து, பாயவே - நீரிலே குதிக்க, ஒருகோடி கயல் ஓட - அதனால் ஒருகோடி கயல் மச்சங்கள் ஓடவும், ஒருகோடி அளி ஓட - ஒருகோடி வண்டுகள் ஓடவும், ஒருகோடி வெண்குருகு ஓட - ஒருகோடி வெள்ளைக்குருகுகள் ஓடவும், ஒருகோடி சினவாளை - ஒருகோடி கோபங்கொண்ட வாளைமீன்கள், கரை ஏற - கரைமேலே பாய்வதான, குருரேசனே - குருநாட்டு அரசன். எ-று. ஏ - ஈற்றசை.

(குருகு - பட்சி,) 'குருகு' என்றது இங்கு அன்னத்தைக் குறித்தது. நாரை என்றும் கூறலாம். (உஉஉ)

முயறாவியணுகாதுவியர்தாவுமதிபோலுமுகமாதராய்
புயறாவுமுயர்தேரினிடையேறிவருமாலைபுனைமார்பினன்
கயறாவுநறுநீலமுகைபீறிமடையோடுகமழ்தேறல்போய்
வயறாழவயலூடுவளர்சாலிகதிர்தாழுமகதேசனே.

[மதிபோன்ற முகத்தையுடைய சந்திரமதியே இவ்வரசன் மகதேசத்து அரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். முயல்தாவி அணுகாது - முயலானது தாவி அணுகாமல், வியர் தாவும் - வியர்வையைக்கொண்ட, மதிபோலு முகமாதராய் - சந்திரன் போல்வதான முகத்தை உடைய பெண்ணே, புயல்தாவும் - மேக மண்டலம் வரை உயர்ந்திருக்கின்ற, உயர்தேரின் இடை ஏறி - உயர்ந்த தேரின்மேலே ஏறி, வரும் - வருபவனாகிய, மாலைபுனை மார்பினன் - மாலையணிந்த மார்பை உடைய இந்த அரசன், கயல்தாவு நறுநீலமுகை - கயல் மச்சங்கள் பாய்தலினால் நல்ல நீல மலர்களின் அரும்புகள், பீறிமடை ஓடு கமழ்தேறல் - உடைந்து மடைகளிலே ஓடுகின்ற பரிமளமுள்ள தேனானது, போய்வயல்தாழ - சென்று வயலிலே பாய, வயலூடு வளர்சாலி - அந்த வயலினிடத்து உள்ளதாய் வளர்கின்ற நெற்கள், கதிர்தாழும் - கதிர் விடுவதான, மகதேசனே - மகதநாட்டு அரசன். எ-று. ஏ - ஈற்றசை. (உஉஙு)

முளையேறுவண்கிரணவிருதோணறுங்குதலைமொழிமாதரா
யுளையேறுதிண்புரவிகரிசூழவிங்குவருமுயர்தேரினன்
றளையேறுகின்றவயறனிலேயெழுங்கமலதளமீதிலே
வளையீனுமொண்டாளமதிபோலெழுங்கவுடவளநாடனே.

[சந்திரமதியே இங்கு இருக்கின்ற அரசன் கவுடதேசத்து அரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். முளை ஏறு வண்கிரண இருதோள் - மூங்கில்போல நீண்டு அழகு வாய்ந்த ஒளியை உடைய இரண்டு தோள்களைக்கொண்ட, நறும்-நல்ல, குதலை-மழலைச்சொல்போலும், மொழிமாதராய் - மொழிகளை உடைய பெண்ணே!,

உளை ஏறுதிண்புரவி - பிடரி மயிர்கள் நீண்ட வலிமைபொருந்திய குதிரை களும், கரி - யானைகளும், சூழ - சூழ, இந்த வரும் - இங்கே வந்துள்ள, உயர் தேரினன் - உயர்ந்த தேரை உடைய இந்த அரசன், தளை எறுகின்ற - (கலை பிடுக்கும் பெண்களின்) பாதச்சிலம்பு மிகுதியாய் ஒலிக்கின்ற, வயல்தனிலே- வயலிலே, எழும் கமல தளமீதிலே - முளைப்பதான செழித்த தாமரை இத ழிலே, வளைஈனும் ஒண்தாளம் - சங்குகள் பெறுவதாகிய அழகிய முத்துக்கள், மதிபோல் எழும் - சந்திரனைப்போல் விளங்குகின்ற, கவுடவள நாடனே- கவுடதேசம் என்னும் வளப்பு பொருந்திய நாட்டிற்கு அரசன் எ-று. ஏ - ஈற் றசை. (உஉச)

அரிசிந்துவிழியாயிவணிதேரின்மிசையேறியடைகோமகன்
விரிசிந்துவினையுண்டவொருசிந்துமுனிதங்குகிரிசிந்துகால்
பொரிசிந்தவலர்புன்குபொருள்சிந்தவலர்கொன்றைபொரிவண்டி-
வரிசிந்தமகரந்தமலர்சிந்தவருசிந்துவளநாடனே [னம்

[சந்திரமதியே இங்கு இருக்கின்ற அரசன் சிந்துநாட்டரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். அரிசிந்து விழியாய் - செவ்வரிகள் சிதறிய கண்களை உடைய சந் திரவதியே! இவ் அணி தேரின்மிசை ஏறி - இந்த அழகான தேரின்மேல் ஏறி, அடைகோமகன் - வந்த அரசன், விரிசிந்துவினை - விரிவான கடலை, உண்ட ஒரு சிந்துமுனி - உண்ட ஒரு குட்டையான முனிவராகிய அகத்தியர், தங்கு கிரி சிந்துகால் - தங்குகின்ற பொதியமலை வீசுகின்ற தென்றற் காற்றி னால், அலர் புன்கு - மலர்ந்த புன்கு மரங்கள், பொரிசிந்த - பொரிபோல் மல ரைச் சிந்தவும், அலர்கொன்றை - மலர்ந்த கொன்றை மரங்கள், பொருள் சிந்த - பொன்னைப்போல் மலரைச் சிந்தவும், பொரிவண்டினம் - புள்ளிகளை உடைய வண்டுக்கூட்டங்கள், வரிசிந்த - பாட்டுகளைச் சிந்தவும், மகரந்த மலர் சிந்த - மலர்கள் மகரந்தத்தைச் சிந்தவும், வரு - வருவதான, சிந்து - சிந்து என்னும் நதிபாய்கின்ற, வளநாடனே - சிந்துவள நாட்டின் அரசன். எ-று. ஏ - ஈற்றசை. (உஉரு)

சுராங்கமிகநொந்துகடைகின்றதினம்வந்தசுதையென்சொலாய்
நராங்கமலைகொண்டுசதுரங்கவிரிசிந்துநடுமிந்தமால்
பராங்கமிகவென்றுவினைகொண்டுசிலைகொண்டுபடைவந்தநாள்
வராங்கதார்கொன்றமதனங்கமுதுமங்கவளநாடனே.

[சந்திரவதியே இவ்வரசன் அங்கதேசத்தரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். சுரர் - தேவர்கள், அங்கம் மிகநொந்து - தங்களுடைய உடம்பு மிக வும் நொந்து, கடைகின்ற தினம் - திருப்பாற்கடலைக் கடைகின்ற அந்த நாளிலே, வந்த சுதை என்சொலாய் - உண்டான அமுதமே என்னும்படியான சொற்களை உடைய சந்திரவதியே! நரர் அங்கமலைகொண்டு - மனிதர்களுடைய

தேகமாகிய மலையைக்கொண்டு, சதுரங்க விரிசிந்து - நால்வகைச் சேனைகளாகிய விரிந்த கடலில், நடும் இந்தமால் - நடுகின்ற இந்தத் திருமால்போன்ற அரசன்; பார் அங்கம் மிகவென்று - காமம் கொண்டவர்களுடைய உடல்களை அழித்து மிகுதியாகச் செயித்து, வினைகொண்டு - அந்த வெற்றி வினையைக் கொண்டு, சிலைகொண்டு - கரும்புவில்லை ஏந்திக்கொண்டு, படை வந்தநாள் - மன்மதனானவன் படை எடுத்து வந்தநாளில், வார் - சிரேஷ்டரான பிரம்ம விஷ்ணுக்களுடைய, அங்கதார் - எலும்புகளைத்தரித்த சிவபெருமானானவர், கொன்ற - நெற்றிக்கண்ணால் எரித்த, மதன் அங்கம் - மன்மதனுடைய உடம்பானது, உகும் - பொடியாகச் சிந்தின, அங்கவள நாடனே - அங்கநாடென்னும் வளப்பம் பொருந்திய நாட்டிற்கு அரசன்; எ-று. ஏ - ஈற்றசை.

தேஞ்சாலுமிருகுன்றுகளையெஞ்சுமிடையஞ்சதிருவேயிவ
னீஞ்சாலுமிரவாலுமிறலானதிடைபீறியிழிதேறலுங்
காய்ஞ்சாறுகதிர்சாடமாஞ்சோலையிடர்சோர்புகனியூறலும்
பாஞ்சாலவயலூறுபூஞ்சாலிவிளைவேறுபாஞ்சாலனே.

[சந்திரமதியே! இவன் பாஞ்சால நாட்டு அரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். தேம் சாலும் - இனிமையை மிகுதியாகக் கொண்டிருக்கின்ற, இரு குன்றுகளை - இரண்டு தனங்களாகிய மலைகளை, எஞ்சும் இடை அஞ்சு திருவே - தாங்கி இளைத்த இடையானது பயப்படும்படியான லட்சுமியை ஒத்த சந்திரவதியே!, இவன் - இந்த அரசனானவன், ஈஞ்சாலும் - ஈந்தின் முள்ளாலும், இறவாலும் - இறால் மீன்களாலும், இறலானது - தேன்கூடானது, இடைபீறி - நடுவே கிழிந்து, இழிதேறலும் - வழிகிறதேனும், காய்ஞ் சாறு கதிர் - பழுத்தசைகிற சோளக்கதிர், சாட - மோத, மாஞ்சோலை யிடர் சோர்பு கனியூறலும் - மாஞ்சோலையிலுள்ள மாங்கனிகள் நைந்து அதினின்றும் ஒழுகுகின்ற தேனும், பாய்ஞ்சு - பாய்ந்து, ஆலைவயலூறு - ஆலையிலிருந்து கருப்பஞ்சாறுகள் ஊறப்பெற்ற வயலில், பூஞ்சாலி - அழகிய நெற்களின், விளைவேறு - விளைவு மிகுவதான, பாஞ்சாலனே - பாஞ்சால நாட்டுக்கு அரசனே. எ-று. ஏ-ஈற்றசை. 'தேம்'-இனிமை; ஈஞ்சு, 'ஈந்து' என்பதன்போலி; 'இறவு' - இறால்மீன், "குறியதன், கீழாக, குறுகலு, மதனோடுகர, மேற்றலு, மியல்புமாந் தூக்கின்" என்ற விதிப்படி 'இறா' என்றது 'இறவு' என்றாயிற்று, 'இறா' 'இறால்' என்பன ஒருபொருள் குறித்தசொற்களே. 'இறால்' 'இறல்' என்றாயது செய்யுள் விகாரம். 'காய்ந்து' எனற்பாலது 'காய்ஞ்சு' என்றது போலி, (ஆலும் - அசையும், ஆலுதல் - அசைதல்.) 'பாய்ஞ்சு' பாய்ந்து என்றதின் போலி. (உஉஎ)

தேம்போதினீர்ந்தாதுபூம்பாளைநீங்காததேங்கோதையாய்
கூம்போடிவான்றோயுமான்றேரிலீண்டாசைகூர்ந்தேறினோன்
றாம்போடுகூன்கோடுவார்ந்தோடியீன்றேரிதோய்ந்தேறவே
தாம்போடுசேம்போடுசேர்ந்தாரமார்ந்தோடுகாந்தாரனே.

[சந்திரவதியே இவன் காந்தார நாட்டரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். தேம்போதின் - தேனை உடைய மலர்களின், ஈர்ந்தாது - குளிர்ந்த மகரந்தங்களும், பூம்பாளை - அழகிய கூந்தல்பனையின் பாளையின் (இயல்பும்), நீங்காத - அகலாத, தேம் கோதையாய் - தேன் ஒழுகப்பெற்ற கூந்தலை உடைய சந்திரமதியே!, கூம்பு - சிகரமானது, ஒடிவான்தோயும் - நீண்டு ஆகாயத்தைத் தொட்டுக்கொண்டிருக்கும்படியான, மான்தேரில் - குதிரை கட்டின தேரின்மேலே, ஈண்டு - இவ்விடத்திற்கு, ஆசைகூர்ந்து ஏறினோன் - ஆசைமிகுந்து ஏறிவந்த இவ் அரசன், தூம்போடு - ஏரியின் மதகின் வழியாய், கூன்கோடு - வளைந்த சங்குகளானது, வார்ந்து ஓடி - (நீரோடேயே) நெடுக ஓடி, ஈன்று - முத்துக்களைப்பெற்று, ஏரிதோய்ந்து ஏறவே - ஏரியிலே மறுபடியும் பொருந்தி ஏறவும், காம்போடு - காம்பு நீண்டுள்ள, சேம்போடு - நீர்ச்சேம்போடு, சேர்ந்து - பொருந்தி, ஆர் அமர்ந்து ஓடும் - (அவைபெற்ற) முத்துக்களோடும் சேர்ந்து பொருந்த நீர் ஓடும்படியான, காந்தாரனே - (வளப்பம் பொருந்திய) காந்தார நாட்டு அரசன். எ-று. ஏ - ஈற்றசை.

"ஈர்ந்தாது பூம்பாளை" என்றதில் உம்மை தொக்கது, பூம்பாளை நீங்கவிருத்தலாவது பூம்பாளையைத் தன் கூந்தலுக்கு உவமிக்கப்படுதலை, நீங்காத என்பதாம், 'மான்' 'மர்' என்னும் ஓரெழுத்தொருமொழி னகரச்சாரியை பெற்று வந்தது. "ஆமா கோவை வணையவும் பெறுமே" என்பது சூத்திரம், "மீன்றேரி தோய்ந்தேறவே" என்பதை மீண்டேரி தோய்ந்தேறவே என்றும் பாடமாகக் கொள்ளின், திரும்பியும் ஏரியிலே வந்து பொருந்தி ஏற, என்று பொருள்தரும், (ஆரம் - முத்து.) (உஉஅ)

அடர்ந்தோடிநெஞ்சங்கவர்ந்தேவருங்கண்ணணங்கேயிவன்
றடந்தோறுமங்கங்குழன்றூனருந்துஞ்சயங்கூர்காத்
தொடர்ந்தோடவெங்குங்கலைந்தோடிபஞ்சுஞ்சுணங்காழிநீர்
கடந்தோடியென்றுங்கருப்பூடுறங்குங்கலிங்கேசனே.

[சந்திரவதியே இவ்வாசன் கலிங்கதேசத்து அரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். அடர்ந்து ஓடி - நெருங்கி நீண்டு, நெஞ்சம் கவர்ந்தே வரும்-ஆடவர்களுடைய மனதைக் கவர்ந்துகொண்டே வரும்படியான, கண் அணங்கே, கண்களை உடைய தெய்வப்பெண்போன்ற சந்திரவதியே, இவன்-இந்த அரசன், தடம்தோறும் - குளங்களில் எல்லாம், அங்கு அங்கு உழன்று-அங்கங்கே அலைந்து, ஊன் அருந்தும் - மாமிசத்தைத்தின்னும், சயங்கூர்கா - வெற்றி மிகுந்த முதலையானது, தொடர்ந்து ஓட - பின் தொடர்ந்து செல்ல, எங்கும்-எல்லாவிடங்களிலும், கலைந்து - சிதறி, ஓடி - ஓடி, அஞ்சும் - பயப்படும்படியான, சுணங்கு - நீர் நாயானது, ஆழிநீர் - அந்த ஆழமான நீரை, கடந்து ஓடி - விட்டு நீங்கிச்சென்று, என்றும் - எப்போதும், கருப்பு ஊடு-கரும்புத்தோட்டங்களின் மத்தியிலே, உறங்கும் - தூங்குவதான, கலிங்கேசனே - (சீர்வளப்பம் பொருந்திய) கலிங்கநாட்டு அரசன். எ-று. ஏ-ஈற்றசை.

இகழ்ந்திடுமதன் புவிபுரந்திடவளர்ந்தெழுமிளங்கொடியிவ
னிகழ்ந்தவரவிந்தமணிதண்கழனியெங்கணுநிறைந்துநிரவப்
புகழ்ந்தகடவின்கனவிரும்பனகுளம்பிடைபுதைந்துமுனையி
னகழ்ந்துதடங்கொழுநெடுந்தலைமடிந்திடுமவந்தியரசே.

[சந்திரவதியே இவ் அரசன் அவந்திநாட்டு அரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். இகழ்ந்திடுமதன்-(துறவிகளாலே) இகழ்வதையுடைய மன்மதன், புவி புரந்திட - உலகத்தை ஆளும்படி, வளர்ந்து எழும் இளம் கொடி - வளர்ந்து எழும்படியான, இளமையான கொடிபோலும் சந்திரவதியே! இவன்-இந்த அரசன், நிகழ்ந்த - நீரிலே பிரகாசித்துக் கொண்டிருந்த, அரவிந்தமணி - தாமரையிலிருந்துண்டாகிய முத்துகள், தண் - குளிர்ந்த, கழனி எங்கணும்-வயல்கள் எங்கும், நிறைந்து நிரவ - நிறைதலாய்ப்பரவ, புகழ்ந்த கடவின் - புகழத்தகுந்திருக்கின்ற எருமைக் கடாவினுடைய, கன இரும்பன குளம்பிடை - கனமான இரும்புபோன்ற குளம்புகளின் மத்தியிலே, புதைந்து - அழுந்தி, முனையின் - (பிறகு) கொழுவின் முனையினாலே, அகழ்ந்து - (பூமியைப்) பிளந்து, உழு - உழுகின்ற, தடம் கொழு - பெரிய கொழுவினுடைய, நெடும் தலை-நீண்ட நுனியினாலே, மடிந்திடும் - உடைந்து போவதான, அவந்தி அரசே-(நீர்வளம் பொருந்திய) அவந்தி நாட்டிற்கு அரசன். எ-று. ஏ - ஈற்றசை.

'நிகழ்ந்த' நீரிலே சஞ்சரித்துள்ள என்றும் பொருள் கூறலாம். 'கடா' என்பது 'கட்' என்றும் 'கடவு' என்றும் ஆம்; நீண்டு 'கடவு' என்றாயிது. "குறியதன் கீழாக்குறுகலு தோடுகாமேற்றலு மியல்புமாந் தூக்கின்" என்றது விதி. 'அகழ்ந்து' தோண்டி, எனவும் கூறலாம். (உருO)

புத்தமுதமொத்தமொழிவெற்பைநிகரொத்தகனபொற்றொடியி
சுத்தநிபுணக்குசலர்சொற்கரிவழுக்கரியசுத்தநெறியான் [வன்
முத்தணிநகைச்சியர்தனத்திடைதிமிர்த்தெறிமுழுக்கலவையில்
மத்தகரடக்கரிவழுக்குறுதெருச்செறியுமத்திரர்பிரான்.

[சந்திரவதியே! இவன் மத்ரதேசத்து அரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். புத்தமுதம் ஒத்த - புதிதான அமுதத்தை ஒப்பான, மொழி - வசனத்தையும், வெற்பை நிகர் ஒத்த - மலைகளை நிகர்வதற்குச் சரியான, தன பொற்றொடி - கொங்கைகளையும் உடைய பொன் வளையலை அணிந்தவளாகிய சந்திரமதியே! இவன் - இந்த அரசன்! சுத்த - பரிசுத்தமான, நிபுணக்குசலர்-சாஸ்திரங்களில் வல்ல அறிவாளிகள், சொல்கரி - சொல்லியுள்ள ஞான சாட்சிகளினின்றும், வழுக்கரிய சுத்தநெறியான் - வழுவுதல் இல்லாத நீதிமார்க்கத்தை உடையவன், முத்தணி - முத்துப்போலும் அழகு பொருந்திய, நகைச்சியர் - பல் வரிசைகளை உடைய பெண்களின், தனத்திடை திமிர்ந்து எறி-கொங்கைகளில் மிகுதியாகப் பூசப்பெற்று வழிவதனால் வழித்து எறிந்த,

முழுக்கலவையில் - மிகுந்த வாசனையுடைய கலவைச்சேற்றில், மத்தகாடக் கரி வழுக்குறு - மதச்சுவடுகொண்ட யானைகள் வழிக்கி விடுவதான, தெருச்செறியும் - வீதிகள் நெருங்கின, மத்திரர்பிரான் -(வளப்பமுடைய மத்திரதேசத்துக்கு அரசன். எ-று.

(புது அமுதம் - புத்தமுதம்) 'பொற்றொடி' அன்மொழித்தொகை; பொன்னாலாகிய வளையலை அணிந்த பெண்ணைக் குறித்தது. (உ௩க)

கருமச்சமனையொத்தகொலைவைத்தவிழிபெற்றகளிமாதராய்
பெருமச்சமருமிக்கவிரதத்தினிடையுற்றபெருமானிவ
னிருமச்சனயனத்தர்முலைமுத்தில்விழுமச்சவிடையிற்றென
வருமச்சமலர்தற்பமனமச்சமுறுமச்சவளநாடனே.

[சந்திரவதியே இவன் மச்சவள நாட்டரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். கருமச்சமனை ஒத்த - கொல்லும் தொழிலைக்கொண்ட யமனை ஒத்த, கொலைவைத்த விழிபெற்ற - கொல்லும் தன்மையைக் கொண்டிருக்கிற கண்களை உடைய, களிமாதராய் -(கண்டவர்கள் யாரும்) மகிழத்தக்க அழகையுடைய சந்திரவதியே! பெருமச்சு அமரும் - பெரிய மச்சுவீட்டை ஒத்த, மிக்க இரதத்தினிடையுற்ற பெருமான் இவன் - பெரிய தேரிலேறி வந்த பெருமையுள்ளவனாகிய இந்த அரசன், இரு - இரண்டு, மச்சனயனத்தர் - மீன்போலும் கண்களையுடைய பெண்கள், முலைமுத்தில் - கொங்கைகளிலணிந்த முத்துமாலைகளின் கனத்தாலே, விழும் அச்ச இடை - விழுந்துவிடுமென்று அஞ்சக்கூடிய இலேசான இடுப்பானது, இற்று என - இத்தன்மயதென்று, வரும் அச்சம் - வருகின்ற பயம், அலர்தற்பம் - விரிந்த படுக்கையிலும், மனம் அச்சமுறும் - ஆடவர்களின் மனம் பயங்கொள்ளுவதான, மச்சவள நாடனே-(சிறப்புப்பொருந்திய) மச்சவள நாட்டிற்கு அரசன். எ-று. ஏ - ஈற்றசை.

'கருமம்' புண்ணிய பாவங்களை விசாரிக்கும் தொழில் என்றும் பொருள் கொள்ளலாம். சமன் 'எல்லா உயிர்களையும் ஒப்ப சமமாகநோக்கி, அவைகளின் புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி தண்டிப்பவன் என்பது பொருள். "மலர் தற்பம்" புஷ்பசயனம் என்றும் பொருள் கொள்ளலாம். (உ௩உ)

கடனாகமொருகோடிவயவாசிபலகோடிகடல்போலவே
வுடனாகவரமேகவளவாயவொருதேரினூறுகோமகன்
விடனாகமடல்பூகவிரிபாளையெனநாணிவெளிமேய்கிலா
மடனாகமிசைதோகைமயிறேறிமலருமறைகேகயன்.

[சந்திரவதியே இவ்வரசன் கேகயநாட்டு அரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். கடம் நாகம் ஒருகோடி - மதத்தினை உடைய யானைகள் ஒருகோடியும், வயவாசி பலகோடி - வெற்றிபொருந்திய குதிரைகள் பல கோடிகளும், கடல் போலவே - கடலைப்போலவே, உடன் ஆக வர - தன்னோடு கூடவேவர,

மேக அளவாய ஒரு தேரின் உறு கோமகன் - மேகமண்டலத்தின் அளவும் உயர்ந்திருக்கிற ஒப்பற்ற தேரின்மேலே பொருந்தி வந்த இவ்வரசன், மடல்பூக விரிபாளை - மடலை உடைய கமுகமரத்திலே விரிந்திருக்கின்ற பாளையை, விடநாகம் என நாணி - விஷத்தையுடைய நாகப்பாம்பு என்று நினைத்து வெட்கம் கொண்டு, வெளி மேய்கிலா மடநாகம் - வெளியே மேய்கிறதற்கு வாராதிருக்கிற அறிவற்ற சர்ப்பத்தை, மிசை - உண்ணுகின்ற, தோகைமயில் - கலாபத்தை உடைய மயிலானது, ஏறி - அந்தக் கமுகமரத்தின் மேல் ஏறி, மலர் ஊடு மறை - அதன் பாளையிலுள்ள பூவிலே மறைவதான, கேகயன் - (வளப்பம் பொருந்திய) கேகய நாட்டிற்கு அரசன். எ-று.

'கடநாகம்' என்றதற்கு 'கடனாகம்' என தந்நகரம் இருக்கவேண்டிய இடத்தில் றன்னகரம் வந்தது எதுகைபற்றி.' பூகப்பாளை' பாம்பின் படம்போலிருத்தலின் நாகம் மயங்கிற்று. மடநாகம் நாணுதற்குக் காரணம் தன் படத்தினும் பெரிதா யிருத்தலின். (உ௩௩)

வாடிவிழு நூலுமிருமால்வரையு நேரிடையுமாமுலையுமாச்
சூடிமிகவானிழியஞாலம்விளையாடிவருதோகைமயிலே
வாடிநிழல்போலுனுளமேவியணிதேர்மிசையுமாகிவருவோ
னாடியறநாளுமுயிர்கோசலமதானகுலநாடனிவனே.

[சந்திரவதியே இவன்தான் உன் உளத்திலிருக்கின்ற கோசலநாட்டு
அரசன் என்றாள் என்பதாம்.]

இ-ள். வாடிவிழு நூலும் - துவண்டு விழுகின்ற நூலையும், இருமால் வரையும் - இரண்டு பெரிய மலைகளையும், நேர் - ஒத்த, இடையும் - இடையும், மாமுலையுமா - பெரிய முலைகளையுமாக, சூடி - கொண்டு, மிக - மிகவும், வானிழிய - வானலோகத்தவரும் உன் அழகு கண்டு இறங்கி வரும்படிக்கு, ஞாலம் - பூமியிலே, விளையாடி வரு-விளையாடிக்கொண்டு வருகின்ற, தோகை மயிலே - கலாபத்தையுடைய மயில்போன்ற சந்திரமதியே! ஆடி நிழல்போல்- கண்ணாடியிற்றோன்றும் உருவம்போல, உன் உளம்மேவி - உன்னுடைய உள்ளத்தில் பொருந்தி யிருந்து, அணி - அழகிய, தேர்மிசையும் - தேரின்மேலும், ஆகி வருவோன் - தோன்றிவந்த இவ்வரசன்; நாடி - தேடி, அறம்- தருமமானது, நாளும் உயர் - தினந்தினமும் வளர்கின்ற, கோசலமதான- கோசலம் என்கின்ற, குலநாடன் இவனே - சிரேஷ்டமான நாட்டையுடையவன் இவனே. எ-று. ஏ - தேற்றப்பொருளில் வந்தது.

வாடிவிழும் நூலும் இருமால்வரையும் இடையும் மாமுலையும் நேரும். என்றது நிரை நிரைப் பொருள்கோள். "வானிழிய ஞாலம்" என்பதற்கு, மிகவும் மேகங்கள் இறங்க பூமியில் விளையாடிக்கொண்டு, என்றும் பொருள் கொள்வர். முலையின் பருமைக்கும் இடையின் நுண்மைக்கும் மேகங்கள் இறங்க என்பது அவர் கருத்துப்போலும். இப்பொருள் சிறவாமை நுனித்

தாய்ந்து கொள்க, இனி வாவின் மாதர்கள் இவளுக்கு முன் இழிந்தவர் என்று கூறும்படி பூமியில் விளையாடும்படி என்றும் பொருள் கொள்ளலாம். அவ்வாருயின் 'வான்' என்றது ஆதபெயராகி வானத்து மாதரைக்குறிக்கும். (உங்ச)

கலி விருத்தம்.

மந்தாமனையதோள் வள்ளல்பேர்சொலச்
சுந்தாத்தோகைமார் தோளைத்தாழ்த்தியச்
சந்திரவதியரிச் சந்திரன்றனைக்
கந்தாநீட்டியுட் கருத்துநோக்கினுள்.

[அரிச்சந்திரன் பெயரைச் சொன்ன உடனே சந்திரவதி அந்த அரிச்சந்திரனைக் கழுத்தை நீட்டி எட்டிப்பார்த்தாள் என்பதாம்.]

இ-ள். மந்தாம் அனைய தோள்-மந்தாமலைக்கு ஒப்பான தோளை உடைய, வள்ளல் பேர்சொல - அந்தவரை யாது கொடுக்கும் அரிச்சந்திரனின் பேரைச் சொல்லும்போது, அச்சந்திரவதி - அந்தச் சந்திரவதி ஆனவள், அச்சுந்தரத் தோகைமார் - அப்படிச்சொல்லிய அழகிய தோகை மயில்போலும் சாயலை யுடைய தோழிகளின், தோளைத்தாழ்த்தி - தோள்களைத் தாழச்செய்து, அரிச்சந்திரன் தனை - அரிச்சந்திரமகாராஜனை, கந்தாநீட்டி - கழுத்தை நீட்டிப்பார்த்து, உள்கருத்தும் நோக்கினுள் - அவன் உள்ளக்கருத்தையும் நோக்கினுள். எ-று.

'உள்கருத்தும் நோக்கினுள்' என்பதற்கு தன் உள்ளத்தின் கருத்து முற்றுமாக இருக்கின்ற அரிச்சந்திரனை நோக்கினுள் என்பதும் ஆம்; அதாவது தன் கருத்தைவிட்டு அகலாத அல்லது தன் கருத்து மயமாக இருக்கின்ற அரிச்சந்திரனை நோக்கினுள், இவை பெரும்பாலும், விளச்சீர், விளச்சீர், மாச்சீர், விளச்சீர் என்னும் நான்கு சீர்கொண்ட அடிகளாலாகிய கலி விருத்தம். (உங்ரு)

அங்கைவேன் மன்னனுமாசைமீக்கொள
மங்கைதன்பங்கய வதனநோக்கினுன்
செங்கயற்கண்ணினு டிருக்கழுத்தினில்
மங்களநாணுறீஇ வயங்கக்கண்டனன்.

[அரிச்சந்திரனும் ஆசைமிகுந்து சந்திரவதியின் தாமரைபோன்ற முகத்தை நோக்கினுன், அப்பொழுது அவள் கழுத்தில் தாலி விளங்குவதைக்கண்டான் என்பதாம்.]

இ-ள். அம் கை வேல் மன்னனும் - அழகிய கையிலே வேலையுடைய அரிச்சந்திர மகாராஜனும், ஆசைமீக்கொள - தனக்கு ஆசை மேன்மேலாக, மங்கைதன் - சந்திரவதியினுடைய, பங்கயவதனம்-தாமரைபோன்ற முகத்தை, நோக்கினுன் - பார்த்தான், செம்கயல் கண்ணினுள் - செவந்த கயல் மச்சம்போலும் கண்ணை உடையவளாகிய சந்திரவதியின், திருக்கழுத்தினில் - அழகிய

கழுத்திலே, மங்கலநாண் உறீஇ - திருமாங்கல்ய சூத்திரம் பொருந்தி, வயங்கக் கண்டனன் - விளங்குவதைக் கண்டான். எ-று.

"மங்கலம் நாண் உறீஇ வயங்க கண்டனன்." மாங்கல்யமாகிய தாலி கயிற்றிலே பொருந்தி கழுத்திலே விளங்கிக்கொண்டிருக்கக் கண்டான். என்றும் பொருள் ஆம். 'மன்னனும்' என்றதில் உள்ள உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை. 'பங்கய வதனம் உவமத்தொகை. பங்கயம்போலும் வதனம் என விரியும்' உறீஇ, சொல்லிசை அளபெடை. (உ௩௬)

கன்னியென்றெண்ணினங் கன்னியோவலண்
முன்னரேமங்கலம் பூண்டமொய்குழ
லின்னமுமொருவருக் கெய்துமோவென
மன்னவன்மாதுலற் குரைவழங்கினன்.

[இவள் கன்னி என்று நினைத்தோம், முன்னரே தாலி பூண்டிருக்கின்றவள், இன்னொரு புருஷனை அடையத்தகுமோ என்று நினைத்து தன் மாமனாரைக் கேட்கல் உற்றான் என்பதாம்.]

இ-ள். கன்னி என்று - இவள் கல்யாணமாகாத பெண்ணென்று, எண்ணினம் - நினைத்தோம், கன்னியோ அலள் - இவள் கல்யாணமாகாதவள் அல்ல, முன்னரே - முன்னாலேயே, மங்கலம்பூண்ட - தாலியை அணிந்திருக்கிற, மொய்குழல் - நெருங்கின கூந்தலை உடையவள், இன்னமும் - இனிமேலும், ஒருவருக்கு - ஒரு புருஷனுக்கு, எய்துமோ - பாத்தியப்படத்தகுமோ?, என - என்று, மன்னவன் - அரிச்சந்திரமகாராஜன், (தனக்குள் சிந்தித்து) மாதுலற்கு - மாமனை சந்திரதயவாசற்கு, உரை வழங்கினன் - சில சொற்கள் கேட்கலாயினன். எ-று. 'கன்னியோ' என்றதில் உள்ள ஓகாரம் எதிர்மறைப்பொருளது. 'எய்துமோ' என்றதில் உள்ள ஓகாரம் ஐயத்தின்கண் நிகழ்ந்தவினா. எ-று.

பொருத்துமுன்மங்கலம் பூண்டபேதையை
மறுத்திரண்டாவது மணமுடிப்பரோ
சிறுத்தவர்செய்தொழி றிரைவரைப்பிதி
னிறுத்தினீர்நீரோ நெடிதுகூறினன்.

[முன்னாலேயே தாலி அணிந்திருக்கிற ஒருபெண்ணை, மறுபடியும் இரண்டாவது கல்யாணம் செய்வார்களோ, சின்ன ஜாதியார் செய்கிற இதை நீரும் செய்யத்தொடங்கினீர் என்று கூறினன் என்பதாம்.]

இ-ள். பொருத்துமுன் மங்கலம் பூண்ட பேதையை - கழுத்தில் சேர்க்கும்படியான தாலியை முன்னாலேயே அணிந்திருக்கிற பெண்ணை, மறுத்து-

அதைநீக்கி, இரண்டாவது மணம் முடிப்பரோ - இரண்டாவது கல்யாணம் செய்து வைப்பரோ?, சிறுத்தவர் செய்தொழில் - சிறிய ஜாதியார் செய்யும் காரியம், திரைவரைப்பு இதில் - கடல் சூழ்ந்த பூமண்டலத்திலே, நிறுத்தினீர் நீர் என - (இச்செய்கையை நீங்களும் செய்வதாக) சுயம்வரத்தை நீங்களும் நாட்டினீர்கள் என்று, நெடிது கூறினன் - கோபத்தோடு கூறினன். எ-று.

"மங்கலம்" சுபம், சந்தோஷம் என்னும் பொருள் தரும் சொல். இங்கு உலக சந்தோஷங்களை எல்லாம் அடைதற்கு உரியவளாகிய ஒரு பெண்ணிற்கு, இவள் அவைகளைப் பெறற்கு உரியவள் என்று அடையாளமாக இடப்படும் பூணுக்காயிற்று. (உ௩அ)

வள்ளலீதுரைத்தலு மதிதயன்றன
துள்ளம்விட்டோங்கிய வுவகையம்பெரு
வெள்ளமுள்ளடக்கியே வேந்தர்காளிவன்
கள்ளமோமெய்ம்மையோ கட்டுரைத்ததே.

[அரிச்சந்திரன் இப்படிச் சொன்ன உடனே, சந்திரதயன் தனக்குள் எழுந்த சந்தோஷத்தை உள்ளடக்கிக்கொண்டு, ஓ அரசர்களே இவன் சொல்லியது திருட்டுத்தனமா உண்மையா என்றான் என்பதாம்.]

இ-ள். வள்ளல் - பிரபுவாகிய அரிச்சந்திரமகாராஜன், ஈது உரைத்தலும் - இதைச் சொன்ன உடனே, மதிதயன் - சந்திரதய அரசன், தனது உள்ளம் விட்டு ஓங்கிய - தனது மனதினின்றும் பெருகுகின்ற, உவகை அம்பெரு வெள்ளம் - சந்தோஷமாகிய அழகிய பெரிய வெள்ளத்தை, உள் அடக்கியே - உள்ளத்துக்குள்ளே அடக்கிக்கொண்டு, வேந்தர்காள் - அரசர்களே! கள்ளமோ - திருட்டுத்தனமோ?, மெய்ம்மையோ - உண்மையோ, இவன் - இந்த அரசன், கட்டுரைத்ததே - உறுதியாகச் சொல்லியது. எ-று. ஏ - ஈற்றசை.

அரிச்சந்திரன் அம்மங்கல்யத்தைக் கண்டதால் தன் மகளுக்குக் கணவன் ஆவான் நமக்கு மருகன் ஆவான் என்று உள்ளத்தே உவகை பெருகிற்று. அது வெளித்தோன்றாது மறைப்பது மிக அருமை யுடையது என்று தோன்ற தனது உள்ளம்விட்டு ஓங்கிய உவகையம் பெருவெள்ள முள்ளடக்கி" என்றார்.

தையலாள்கழுத்தினிற் றாலியுண்டெனிற்
கையினாற்கண்ணுறக் காட்டுநீரெனச்
செய்யகையறைந்தணி மூக்கிற்சேர்த்தியிவ்
வையனும்பொய்யனென் றாசர்கூறினர்.

[சந்திரதய அரசன் சந்திரவதி கழுத்தில் தாலி இருக்குமானல் கையினு லெடுத்துக் கண்ணுக்குத் தோன்றும்படி காட்டும் நீர் என்று சொல்ல, மற்ற அரசர்கள் கையோடு கையறைந்து மூக்கின்மேல் விரலை வைத்து இந்த அரிச்சந் திரனும் பொய்யன் என்று கூறினர்கள்; என்பதாம்.]

இ-ள். தையலாள் கழுத்தினில் - (சந்திரதய அரசன் அந்தக் கல்யாணப் பந்தலிலுள்ள அரசர்களை நோக்கி) இந்தப் பெண்ணினுடைய கழுத்தில், தாலி யுண்டெனில் - தாலியிருக்குமானல், கையினல் - உங்கள் கையினல், கண் ணுற - கண்ணுக்குத் தோன்றும்படி, காட்டும் நீர் என - நீங்களே காட்டுங்கள் என்றுசொல்ல; அரசர் - (அரிச்சந்திரன் கூறியதையும் சந்திரதயன் கூறிய தையும் எல்லாம் முற்றும் கேட்டுக்கொண்டிருந்த) அரசர்கள், செய்ய கை அறைந்து - தங்கள் செவந்த கரங்களை ஒன்றோடொன்று தட்டி, அணிமூக் கிற் சேர்த்தி - விரலை மூக்கின்மேல் வைத்து, இவ் ஐயனும் - இந்த அரிச் சந்திரமகாராஜனும், பொய்யன் என்று - பொய்யனுக இருக்கின்றான் என்று, கூறினர் - சொன்னர்கள். எ-று.

அரிச்சந்திரன் பொய் சொல்லக்கண்டு பரிகாசித்தற் பொருட்டு, கை கொட்டினர். சத்தியந்தவராத அரிச்சந்திரன் பொய் சொல்வதா என ஆச்சரி யத்தால் மூக்கின்மேல் விரல்வைத்தார், என்பதாம். 'தாலி' என்பது 'தாலம்' என்னும் பெயரின் அடியாகப் பிறந்தது. இ - விகுதி. தாலத்தின் சுகங்களை எல்லாம் அடையும்படிச் செய்வது என்பது பொருள். இதனை இடுகுறிப் பெயர் இது பொருந்ாதெென வாதிப்பாரு முண்டு. (உசΟ)

மண்டலவேந்தனெம் மடந்தைமங்கலங்
கண்டதுநீங்கடாங் கண்டிலாததுந்
திண்டிறலீரொரு தேவராசிய
முண்டெனமதிதய னுரைப்பதாயினன்.

[சந்திரதய அரசன் அரசர்களை நோக்கி அரிச்சந்திரன் என்மகள் கழுத்தில் உள்ள தாலியைக்கண்டதும் நீங்கள் காணுததற்கும் ஒரு தேவரகசிய முண்டு என்று சொல்லி அதைச் சொல்லினன், என்பதாம்.]

இ-ள். திண்டிறலீர் - மிகுந்த சாமர்த்தியத்தைஉடைய அரசர்களே! மண் டலவேந்தன் - இந்தப் பூமண்டலத்தை ஆளுகின்ற அரிச்சந்திரமகாராஜன், எம்மடந்தை - எங்கள் பெண்ணின், மங்கலங்கண்டதும் - (கழுத்திலே) தாலி இருக்கக்கண்டதற்கும், நீங்கள் தாம் கண்டிலாததும் - நீங்களெல்லாரும் காணு திருக்கிறதற்கும், ஒரு தேவராசியம் உண்டு என - ஒரு தேவரகசியம் உண்டு என்று, மதிதயன் உரைப்பதாயினன் - சந்திரதய அரசன் சொல்லுகின்றான். எ-று.

"மண்டலம்" மண்ணுகிய தலம் எனவிரியும். இதை 'மண்டலம்' வட்டம் எனப் பொருள்கொண்டு பூமி என்னும் சொல்லை வருவித்து பூமி வட்டம் என்று பொருள் கொண்டு பூமிவட்ட முழுதையும் ஆள்கின்ற என்றும் மண்ணுகிய தலமுழுதும் என்றும் பொருள் செய்வர் எனெனில் அரிச்சந்திரன் சக்கிரவர்த்தியாதலின் 'ராசியம்' ரகசியம். (உசக)

அண்டர்நாயகன்வர மளித்தநாளையில்
வண்டணிகுழலியோ டுதித்தமங்கலங்
கண்டவர்பதியிவட் கென்றகட்டுரை
யுண்டஃதன்றிவே றுண்டுகேட்டிரால்.

[சிவபெருமான் வரத்தால் பிறந்த என்மகளோடு கூடவே பிறந்த
தாலியைக் கண்டவர்கள் தான் இவளுக்குப் புருஷன் என்
னும் கட்டுரை ஒன்றுண்டு அதுவுமல்லாமல் வேறு
சங்கதியும் உண்டு கேளுங்கள் என்ருன்
என்பதாம்.]

இ-ள். அண்டர் நாயகன் - தேவர்களுக்கெல்லாம் நாயகனுன சிவபெருமான், வரம் அளித்த நாளையில் - வரங்கொடுத்த காலத்திலே, வண்டு அணி குழலியோடு - வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய இந்தச் சந்திரமதியுடனே, உதித்த மங்கலம் - பிறந்த தாலியை, கண்டவர் பதி இவட்கு - கண்டவனே இவளுக்கு நாயகன், என்ற கட்டுரை - என்றுசொன்ன உறுதிவார்த்தை, உண்டு - இருக்கிறது; அஃது அன்றி - அது அல்லாமல், வேறுண்டு- வேறேயும் ஒன்று உண்டு, கேட்டிர் - கேளுங்கள். எ-று. ஆல், அசை.

"அண்டர் நாயகன்" அண்டங்களில் உள்ளவர்களுக்கெல்லாம் நாயகன், எனினும் பொருந்தும்; இதற்கு தெய்வநாயகன் என்று பொருள்கூறினுரும் உண்டு; 'நாள்' இங்கு காலத்தைக் குறித்தது. (உசஉ)

மஞ்சனச்சடையினுன் வரத்தில்வந்தநாள்
கஞ்சனநீழலிற் காண்பதன்றியே
யஞ்சனக்கண்ணிக்கு மங்கைக்கெய்திடா
தெஞ்சலில்பாவரு மியானுங்கண்டிலேம்.

[சிவபெருமான் வரத்தில் இவள் பிறந்த நாளிலிருந்து கண்ணுடி நிழலில்
இவள் மங்கிலியத்தை நாங்கள் பார்த்திருக்கிறதே அல்லாமல்,
சந்திரமதி கைக்கும் அதுதொட அகப்படாது, எங்கள்
வீட்டில் உள்ள எல்லோரும் நானும் இதுவரை
பார்த்ததில்லை என்ருன் என்பதாம்.]

இ-ள். மஞ்சனச்சடையினுன் - கங்கா ஜலாபிஷேகத்தை உடைய சிவபெருமான், வரத்தில் வந்தநாள் - கொடுத்த வரத்தினுலே இவள் பிறந்த நாள்

(முதலாக), கஞ்சன நிழலில் - கண்ணாடி நிழலிலே, காண்பதன்றியே - இவள் மங்கிலியத்தை நாங்கள் பார்த்திருக்கிறோமே அல்லாமல், அஞ்சனக்கண்ணிக்கும் - மையணிந்த அந்தச் சந்திரவதிக்கும், அங்கைக்கு எய்திடா - அவளுடைய அழகிய கைக்குதொட அகப்படாது; எஞ்சல் இல் - குறைவில்லாமல், யாவரும் - எல்லோரும், யானும் - நானும், கண்டிலேம் - பார்த்தோமில்லை. எ-று. (உசங)

மேற்படி வேறு.

என்றலும்வல்லிமு னெண்ணியநாம
மொன்றலதுள்ளுற வுன்னலளாகிச்
சென்றவன்மார்பிது சேர்கெனவுன்னு
மன்றலர்மாலையை வானிலெறிந்தாள்.

[அப்படிச் சொன்ன உடனே சந்திரவதி அந்த அரிச்சந்திரன் நாமத்தை அன்றி வேறு ஒன்றையும் நினையாதவளாகி, இந்த மாலை அந்த அரிச்சந்திரன் மார்பிலேயே சேர்வதாக என்று நினைத்து அந்தச் சுயம்வர மாலையை வானத்தில் எறிந்தாள் என்பதாம்.]

இ-ள். என்றலும் - என்று சொல்லும்போது, வல்லி - வல்லிக்கொடி போன்ற சந்திரவதியானவள், முன் எண்ணிய நாமம் - தான் முன்னே நினைத்த அரிச்சந்திரனுடைய பெயர், ஒன்றலது - ஒன்றையல்லது, உள்ளுற உன்னலள் ஆகி - வேறேயொரு பெயரையும் தன் மனத்தில் நினையாதவளாய், இது சென்று அவன் மார்பு - இந்த மாலையானதுபோய் அந்த அரிச்சந்திரனுடைய மார்பிலே, சேர்கென உன்னு - விழக்கடவதென்று நினைத்து, மன்றலர் மாலையை - மணம் விரிகின்ற பூமாலையை, வானில் எறிந்தாள் - ஆகாயத்திலே எறிந்தாள் எ-று. 'உன்னு' 'செய்யா,' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இவை பெரும்பாலும் விளச்சீர், விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என்னும் நான்கு சீர்கொண்ட அடிகளால் வந்த கலிவிருத்தம். (உசச)

வார்பயில்பூண்முலை மாலையுநெஞ்சும்
பார்பயின்மன்னவர் பற்பலர்கண்ணுந்
தார்பயில்வேலரிச் சந்திரனென்பான்
மார்பிலணைந்து மலர்ந்தனமன்னே.

[சுயம்வர மாலையும் சந்திரவதி நெஞ்சும், பூமி அரசர்களின் கண்களும், அரிச்சந்திரன் மார்பில் பொருந்தி மலர்ந்தன என்பதாம்.]

இ-ள். வார்பயில் - ரவிக்கை பொருந்தின, பூண்முலை - ஆபரணங்களை அணிந்த தனங்களையுடைய சந்திரவதியினுடைய, மாலையும் - எறிந்த சுயம்வர மாலையும், நெஞ்சும் - அவள் மனமும், பார்பயில் மன்னவர் - (அந்தச்சபையில்

வந்திருக்கிற பூமிகளை ஆள்கின்ற அரசர்கள், பற்பலர் கண்ணும் - பலபலபேர்க டைய கண்களும், தார்பயில் - மாலைபொருந்தின, வேல் அரிச்சந்திரன் என் பான் - வேலைக்கொண்ட அரிச்சந்திரன் என்பவனுடைய, மார்பில் அணைந்து- மார்பிலே கூடி, மலர்ந்த-விகசிக்கலாயின. எ-று.

மன் ஓ, அசைகள். 'மன்னவர் பற்பலர் கண் அரிச்சந்திரன் மார்பில் அணைந்து மலர்ந்தது' என்றது அரசர்கள் எல்லோரும் அரிச்சந்திரனையே நோக்கினர்கள் என்பதாம். (உசரு)

வஞ்சிவழங்கிய மாலையணிந்தோன்
செஞ்சுடரின்முக நின்றொளிசெய்ய
வெஞ்சுடர்முன் சசி யாமெனமிக்கோர்
கஞ்சமுகங்கள் கரிந்தனவன்றே.

[சந்திரவதி இட்ட சுயம்வரமாலையை அணிந்துகொண்ட அரிச்சந்திரன் முகம் சூரியனைப்போல் விளங்கிற்று. மற்ற அரசர்களின் முகங்கள் சூரியன் முன் சந்திரன்போலத் தாமரை முகங்கள் வாடிக் கரிந்தன என்பதாம்.]

இ-ள். வஞ்சி - வஞ்சிக்கொடி போன்றவளாகிய சந்திரவதி, வழங்கிய- எறிந்த, மாலையணிந்தோன் - சுயம்வர மாலையை அணிந்து கொண்டவனாகிய அரிச்சந்திரனுடைய, முகம் - முகமானது, செஞ்சுடரின் - சிவந்த சூரியனைப் போல், நின்று ஒளிசெய்ய - நிலைகொண்டு பிரகாசிக்க, வெஞ்சுடர்முன் - வெப் பத்தையுடைய சூரியனுக்குமுன், சசியாம் என - சந்திரனைப்போல, மிக்கோர்- அங்கு மிகுந்துள்ள அரசர்களுடைய, கஞ்சமுகங்கள் - தாமரை மலர்போன்ற முகங்கள், கரிந்தன - வாடி ஒளி மழுங்கின. எ-று. அன்று. ஏ - அசைகள்.

'செஞ்சுடரின்' செஞ்சுடரைப்போல, என்பதாம். ஏனைய அரசர்களின் முகங்கள் வாட்டமடைந்த தென்பதாம். "திண்டேர் வயவேந்தர் செந்தாமரை முகங்கள் வெண்டா மரையாய் வெளுத்தவே - ஒண்டாரை கோமாலை பெற்ற குலமாலை வேற்கண்ணாள் பூமாலை பெற்றிருந்தபோது" என்னும் புகழேந்தி வெண்பா இங்கு ஒப்பிடத்தக்கது. (உசசு)

மாதர்களார்த்தனர் வானவரார்த்தார்
சிதர்களார்த்தனர் கேளிருமார்த்தார்
சூதர்களார்த்தனர் துறவருமார்த்தார்
வேதர்களார்த்தனர் வேலையடங்க.

[பெண்கள், தேவர்கள், சிதர்கள், சுற்றத்தார், சூதர்கள், முனிவர்கள், வேதப்பிராமணர்கள் எல்லோரும் கடலோசையும் அடங்க ஆரவாரித்தார்கள் என்பதாம்.]

இ-ள். வேலை அடங்க - அப்போது கடலோசை அடங்கும்படி, மாதர்கள் ஆர்த்தனர் - பெண்கள் எல்லோரும் ஆரவாரித்தார்கள், வானவர் ஆர்த்தார்-

தேவரும் ஆரவாரித்தார்கள், கீதர்கள் ஆர்த்தனர் - கீதங்கள் பாடுகிறவர்களும் ஆரவாரித்தார்கள், கேளிரும் ஆர்த்தார் - சந்திரவதியின் உறவினரெல்லாம் ஆரவாரித்தார்கள், சூதர்கள் ஆர்த்தனர் - பாடுகிறவர்களும் ஆரவாரித்தார்கள், துறவரும் ஆர்த்தார் - துறவினராகிய முனிவர்களும் ஆரவாரித்தார்கள், வேதர்களார்த்தனர் - வேதப்பிராமணர்களும் ஆரவாரித்தார்கள். எ-று.

ஆர்த்தனர், ஆர்த்தார் என்னும் சொற்கள் மீண்டும் மீண்டு அதே பொருளில் வந்தமையினால் சொற்பொருள் பிரிநிலை அணி. (உசஎ)

நல்லியனூலறி நாவலர்பாடப்
பல்லியமும்பலபாடலுமார்ப்ப
வல்லிமலர்த்தொடை மாலையணிந்த
வல்லியுமன்னனு மாளிகைபுக்கார்.

[வித்துவான்கள் பாடவும் பல வாத்தியங்களும் பல பாடல்களும் முழங்கவும் சந்திரவதியும் அரிச்சந்திரனும் படுக்கை வீட்டுக்குள் புகுந்தார் என்பதாம்.]

இ-ள். நல் இயல் நூல் அறி - நல்ல இலக்கண இலக்கிய நூல்கள் அறிந்த, நாவலர்பாட - வித்துவான்கள் பாடவும், பல்லியமும் - பல வாத்தியங்களும், பலபாடலும் - பலவகைப் பாடல்களும், ஆர்ப்ப - முழங்கவும், அல்லி- அக இதழ்களையுடைய, மலர்த்தொடை மாலை அணிந்த - மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்துள்ள, வல்லியும் - சந்திரவதியும், மன்னனும்- அரிச்சந்திரமகாராஜனும், மாளிகை புக்கார் - படுக்கை வீட்டுக்குள்ளே போனார்கள். எ-று.

'அல்லி மலர்த்தொடை மாலை அணிந்த' வல்லியும் மன்னனும் - அக இதழ்களையுடைய பூக்களால் தொடுக்கப்பட்ட சுயம்வர மாலையைச்சூட்டிய சந்திரமதியும் சூடிக்கொண்ட அரிச்சந்திர மகாராஜனும், என்றும் பொருள் கூறுவர். (உசஅ)

மின்னியதாம விளக்கொருகோடி
கன்னியர்வந்து கலத்தொடெடுப்ப
மன்னியமாமணி மஞ்சமணைந்தே
பொன்னின்முலைக்கொடி யோடுபுணர்ந்தான்.

[ஒருகோடி மணிவிளக்கை பெண்கள் தாங்கி நிற்க பெரிதான ரத்நகசிதமான மஞ்சத்தில் சந்திரவதியோடு அரிச்சந்திரன் கூடினான் என்பதாம்.]

இ-ள். மின்னிய - மின்னுகின்ற, தாமம் - ஒளியை உடைய, விளக்கு- மணிவிளக்குகள், ஒருகோடி - ஒருகோடியை, கன்னியர் - பெண்கள், வந்து- வந்து, கலத்தொடெடுப்ப - அதன் பாத்திரத்துடனே தாங்கி நிற்க, மன்னிய- நிலைபெற்ற, மாமணி - பெரிய ரத்நகசிதமான, மஞ்சம் அணைந்தே - கட்டிலில்

(விரித்துள்ள) படுக்கையில்போய், பொன்னின் முலைக்கொடியோடு - பொன் போலும் தேமல் படர்ந்த முலைகளையுடைய சந்திரவதியுடனே, புணர்ந்தான்- அரிச்சந்திரன் கூடினான். எ-று.

"தாம விளக்கு" சாஞ்சாமாக இருக்கின்ற மணிவிளக்கு, மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட மணிவிளக்கு, என்றும் பொருளாம். (உ௪௧)

ஆரமகிற்புகை காசறைநீர்கர்ப்
பூரநரந்த மணிந்துபுலர்த்திப்
பாரதனத்தினி லிட்டபராகஞ்
சோரவணிந்தெறி சுண்ணமெறிந்து.

[சந்தனமுதலிய பூசிக்கொண்டு ஒருவர்மேல் ஒருவர் எறி சுண்ணத்தை வீசி விளையாடினர் என்பதாம்.]

இ-ள். ஆரம் - சந்தனச்சேறும், அகிற்புகை - அகிற்கட்டையின் புகையும், காசறை - கஸ்தூரியும், நீர் - பனிநீரும், கர்ப்பூரம் - பச்சைக் கர்ப்பூரமும், நரந்தம் - சவ்வாதும், அணிந்து - (ஆகிய இவைகளை எல்லாம்) அணிந்து, புலர்த்தி - உலரும்படியாகச்செய்து, பாரதனத்தில் - கனமான தனங்களிலே, இட்ட - அணிந்த, பராகம் - சுந்தப்பொடிகள், சோர அணிந்து - உதிரும்படிப் பூசி, எறிசுண்ணம் - வீசி விளையாடுகின்ற பொன்னிறப்பொடிகளை, எறிந்து- வீசி விளையாடி. எ-று. இச்செய்யுள் குளகம், காசறை - மயிர்ச்சாந்தும் ஆம்; (உ௫0)

மல்லிகைசண்பக மாதவிபுன்னை
முல்லைகுராமகிழ் முண்டகநீல
மல்லிநிறைந்தசெ வந்திசெருந்தி
புல்லிதழ்வாச மணைந்துபுனைந்தார்.

[மல்லிகை முதலிய மலர்களைச் சூடிக்கொண்டார்கள் என்பதாம்.]

இ-ள். மல்லிகை - மல்லிகைப்பூ, சண்பகம் - சண்பகப்பூ, மாதவி-குருக்கத்திப்பூ, புன்னை - புன்னைப்பூ, முல்லை - முல்லைப்பூ, குரா - குராவம்பூ, மகிழ் - மகிழம்பூ, முண்டகம் - தாமரைப்பூ, நீலம் - நீலப்பூ, அல்லி நிறைந்த செவந்தி - அக இதழ்கள் நிறைந்துள்ள செவந்திப்பூ, செருந்தி - செருந்திப்பூ, ஆகிய இவைகளில், புல் - கூடிய, இதழ் - இதழ்களின், வாசமணைந்து - பரிமளங்களைச் சேர்ந்து, புனைந்தார் - முடித்துக் கொண்டார்கள். எ-று. (உ௫௧)

அங்கையொடங்கை யணைத்துடலொன்றக்
கொங்கைபுயத்திரள் குன்றிலழுந்தச்
செங்கயல்சென்று திருக்குழைதாவ
மங்கையுமன்று மகிழ்ந்துபுணர்ந்தார்.

[சந்திரவதியும் அரிச்சந்திரனும் ஒருவர் உடல் ஒருவர் உடலில் பொருந்த ஒருமித்துப் புணர்ந்தார்கள் என்பதாம்.]

இ-ள். அங்கையொடங்கை அணைத்து - அழகிய கைகளோடு அழகிய கைகளை அணைத்து, உடல் ஒன்ற - இருவர் உடம்புகளும் சேர்ந்து ஒருமித்த தாக, கொங்கை - முலைகள், புயத்திரள் குன்றில் அழுந்த - தோள்களாகிய திரண்ட மலைகளிலே அழுந்த, செங்கயல் - சிவந்த கெண்டைமீன்போன்ற கண்கள், சென்று - போய், திருக்குழைதாவ - அழகிய குண்டலமணிந்த காதுகளிலே பாய, மங்கையும் - (இவ்வாறு) சந்திரவதியும், மன்னனும் - அரிச்சந்திரனும், மகிழ்ந்து புணர்ந்தார் - சந்தோஷித்துக் கூடினார்கள். எ-று. (உ௬உ)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வாசமார்மாலை மன்னவன்முன்னாண் மருவிடாவெகுளியின் மலைந்து, பூசல்வேள்பலகா லெய்தபுண்ணுக்குப் புணர்முலைவேது கொண்டொற்றி, மாசிலாமணிசெய் சூடகக்காந்தண் மலர்க்கர மாகமேற்கட்டி, யாசைநோய்தீர வமுதவாயுதக மளித்தனளரிவையர் பெருமாள்.

[மன்மதன் பலதரம் எய்து பாணங்கள் பட்ட புண்களுக்கு முலைவேது கொண்டு வொற்றி காந்தள் மலர்க்கரங்களால் மார்பின்மேல் கட்டி ஆசைநோய் நீங்க தன் அமுதவாயின் நீரை அளித்தாள் சந்திரவதி என்பதாம்.]

இ-ள். அரிவையர் - பெண்களுக்கு, பெருமாள் - அரசியாகிய சந்திரவதி, வாசம் ஆர் - பரிமளம் மிகுந்த, மாலை மன்னவன் - மாலையைச்சூடிய அரிச்சந்திர மகாராஜன், முன் நாள் - முன்னே, மருவிடா வெகுளியின் மலைந்து- தன்னை வந்து கூடாத கோபத்தினாலே சண்டைசெய்து, பூசல்வேள்-சண்டை செய்கிற மன்மதன், பலகால் - பலதாமும், எய்த புண்ணுக்கு - அப்பு எய்ய அதனால் உண்டாகிய புண்களுக்கு, புணர்முலை வேதுகொண்டொற்றி-தனது இரண்டு தனங்களின் வெப்பத்தைக்கொண்டு ஒற்றி, மாசிலா-குற்றமற்ற, மணி செய் - மாணிக்கங்கள் பதித்திருக்கின்ற, சூடகக்காந்தண் மலர்க்கரமாக மேல் கட்டி - கங்கணங்கள் அணிந்திருக்கின்ற காந்தள் மலர்போலும் கைகளாலே அவன் மார்புமேல் அழுந்தக்கட்டி அணைத்து, ஆசை நோய்தீர - அவனுடைய காமவியாதி நீங்க, அமுதவாய் உதகம் அளித்தனள் - தனது அமுதவாயிலுள்ள நீரைக்கொடுத்தாள். எ-று. 'முன்நாள்' என்றது சந்திரவதியின் சிறப்புகளை முனிவர் சொல்லக்கேட்டதிலிருந்து இன்றுவரையுள்ள நாள்களை, 'மாசிலா மணிய்' என்பதற்குக் குற்றமற்ற பிரகாசத்தைச் செய்கின்ற, என்றும் பொருளாம்.

இவை பெரும்பாலும், விளச்சீர், மாச்சீர், விளச்சீர், மாச்சீர், விளச்சீர் விளச்சீர், மாச்சீர் என வழுசி ஓரடிக்கு வந்த எழுசீர்க் கழில்நெடிலடி ஆசிரிய விருத்தம். (உ௬௩)

கண்டகண்வாங்காதிருவருமதனாற் கலவியும்புலவியும்விளைத்து, முண்டகவதனம்வெயரரும்பிடினுமுகிழ்முலைவடமசைந்திடினுங், கொண்டலங்குழலில்வண்டலம்பிடினுங் குறைவிலாநிறையிடரெய்தி, மண்டலத்தரசன்சிந்தையம்மங்கை மருங்குலினொருவழித்தன்றே.

[ஒருவரை ஒருவர் பார்த்தகண் பெயர்க்காமல் கலவியும் புலவியும் விளைத்தார்கள். சந்திரவதியின் இடைதாங்க மாட்டாதென்று மன்னவன் மனம் ஒருவியாய் இல்லை என்பதாம்.]

இ-ள். இருவரும்-சந்திரமதியும் அரிச்சந்திரனும், கண்டகண் வாங்காது-ஒருவரை ஒருவர் பார்த்தகண் நீங்காமல், மதனால் - மன்மதன் உபத்திரவத்தால், கலவியும் புலவியும் விளைத்து - கூடலும் ஊடலும் செய்து, முண்டகவதனம் - தாமரை மலர்போன்ற முகத்திலே, வெயர் அரும்பிடினும் - சந்திரவதிக்கு வெயர்வை உண்டானாலும், முகிழ் முலை - தாமரை அரும்புபோன்ற தனங்களிலே, வடம்அசைந்திடினும் - முத்துமாலைகள் அசைந்தாலும், கொண்டலம் குழலில் - மேகத்தை ஒத்த சிறிய அழகிய கூந்தலில், வண்டலம் பிடினும் - வண்டுகள் முழங்கினாலும், மண்டலத்தரசன் - பூமண்டலம் முழுமைக்கும் அரசனான அரிச்சந்திரன், (இடைதாங்க மாட்டாமல் வருந்துமென்று) குறைவிலா - குறையாத, நிறையிடர் எய்தி - நிரம்புவதான துன்பத்தை மனத்திலே கொண்டு, சிந்தை - அவ்வரிச்சந்திரனின் மனமானது, அம்மங்கை மருங்குலின் - அந்தச் சந்திரவதியின் இடையினாலே, ஒருவழித்தன்று - ஒரு வழிப்படாதிருக்கின்றது. எ-று. ஏ - ஈற்றசை.

('கலவி' கூடுதல்; 'புலவி' ஊடுதல்;) 'முண்டகம்,' முள்ளரையை உடையது என்னும் காரணம்பற்றி வந்த பெயர். "மண்டலத்தரசன் சிந்தை அம்மங்கை மருங்குலி னொருவழித்தன்றே" இதற்கு பூமியாள்கின்ற அரிச்சந்திரனின் மனம் அந்த சந்திரவதியின் இடைபோல ஒருவழி நில்லாமல் தள்ளாடிக்கொண்டிருந்தது, எனவும் பொருள் செய்வர். (உ௫௪)

உடைப்பெரும்பண்ட மிகக்கலத்தேற்றி யொலிகடனீந்தியோர்துறைசேர்ந் தடைப்பெரும்பரத்தாற் றாழுமென்றோடியறப்பயந் திறக்குவார்போலப், படைக்கலவிழியா ளணியொடுகலையும் பனிமலர்த் தொடையலும்பரமா, யிடைக்கிடர்விளைக்க விறுமெனப்பதறி யிருகையாற்களைந்தரு குறுத்தான்.

[அணிகள், தொடையல், கலை முதலியன இடைக்கு இடர் விளைக்க அவ்விடை இற்றுவிடுமென்று பயந்து அவைகளை விரைந்து கழற்றிப் பக்கத்தில் வைத்தான் என்பதாம்.]

இ-ள். உடைப்பெரும்பண்ட மிகக்கலத்து ஏற்றி - தங்களுக்குச் சொந்தமான பெரிதான சரக்குகள் அதிகமாகக் கப்பலிலே ஏற்றி, ஒலிகடல் நீந்தி-சப்

நிக்கின்ற கடலைக்கடந்து, ஓர்துறை சேர்ந்து - ஒரு இறங்குத்துறையை அடுத்து, அடைப்பெரும்பாரத்தால் - தாங்கள் ஏற்றி அடைத்துவைத்த பொருள்களின் பெரும்பாரத்தினலே, தாழும் என்று - தண்ணீரில் அமிழ்ந்திப்போமென்று நினைத்து, ஓடி அறப்பயந்து இறக்குவார்போல - மிகவும் பயந்து விரைந்து ஓடிவந்து அப்பொருள்களை இறக்குகிறவர்களைப்போல, படைக்கல விழியாள் - வாளாயுதம்போலும் கண்களை உடைய சந்திரவதியின், அணியொடு - அணிந்திருக்கிற ஆபரணங்களோடு, கலையும்-வஸ்திரங்களையும், பனி-குளிர்ச்சி பொருந்திய, தொடையலும் - மாலையையும், பாமாய் - கனமாகி; இடைக்கு இடர் விளைக்க - இடைப்புக்குத் துன்பத்தை உண்டாக்க, இறும் எனப் பதறி - இடைப்பானது அதனல் ஒடிந்து போம் என்று பதறினவனய், இருகையால் - தன்னுடைய இரண்டு கையினலும், களைந்து - அவைகளை நீக்கி, அருகு உறுத்தான் - பக்கத்திலே வைத்தான். எ-று. 'கலம்' கப்பல். (உருடு)

தானைசென்றார்க்க மங்கலமிடற்றுச் சலஞ்சலம்புலம்பிடத் தனக்கோட்டானைசென்றடர மாத்தலைமயங்க வல்குலந்தேரினைச்செலுத்தி, மீனைவென்றடுகண் வேல்படப்புருவ வில்வளைத்தயோத்தியர்வேந்தைத், தேனைவென்றினித்த செஞ்சொலாளின்பச் செருத்தொழில் பற்பலவிளைத்தாள்.

[மேகலை, கழுத்து, முலை, வண்டுகள், அல்குல், கண்புருவம் முதலியவற்றை முறையே சேனை, சங்கு, யானை, குதிரைகள் தேர், வாள், வில்லாகக்கொண்டு அரிச்சந்திரனேடு இன்பச் சண்டைசெய்தாள் என்பதாம்.]

இ-ள். தானைசென்று ஆர்க்க - மேகலையாகிய சேனைகூடி ஒலிக்கவும், மங்கலமிடற்றுச் சலஞ்சலம் - திருமங்கிலியத்தை உடைய கழுத்தாகிய சலஞ்சலச்சங்கு, புலம்பிட - ஒலிக்கவும், தனக்கோட்டு ஆனைசென்றடர-கொங்கைகளாகிய கொம்பானைகள் சேர்ந்து நெருங்கவும், மாத்தலை மயங்க - வண்டுகளாகிய குதிரைகள் அவ்விடத்தே இடம்மயங்கித் திரியவும், அல்குலந் தேரினைச் செலுத்தி - அல்குலாகிய அழகிய தேரினைச்செலுத்தி, மீனை - மீன்களை, வென்று - ஜெயித்து, அடுகண் - கொல்லுவதாகிய கண்கள் என்னும், வேல் பட - வேலாயுதம் தைக்க, புருவ வில்வளைத்து - புருவமாகிய வில்லைவளைத்து, அயோத்தியர் வேந்தை - அயோத்திமாநகரத்திற்கு வேந்தனக இருக்கின்ற அரிச்சந்திர மகாராஜனேடு, தேனைவென்று - தேனினது இனிமையை வென்ற, இனித்த செஞ்சொலாள் - அதனினும் இனிமையாக இருக்கின்ற செவ்விய சொல்லையுடைய சந்திரவதியானவள், இன்பச் செருத்தொழில்-கலவியாகிய இன்பச்சண்டைகள், பற்பல விளைத்தாள் - பற்பலவிதமாகச் செய்தாள். எ-று.

'தானை' இங்கு வஸ்திரத்திற்கும் சேனைக்கும் சிலேடை, 'தலைமயங்க ஒலிக்க என்று பொருள் கூறுவாருமுண்டு இது பொருந்தாது 'வேந்தை' என்றது வேற்றுமை மயக்கம்; மூன்றும் வேற்றுமைப்பொருளில் மயங்கியது.

தானையைச் சேனையாகவும், மிடற்றைச் சலஞ்சலச் சங்காகவும், தனத்தைக் கோட்டு யானையாகவும், வண்டுகளைக் குதிரைகளாகவும், அல்குலைத் தேராகவும், கண்ணை வாளாகவும், புருவத்தை வில்லாகவும், கலவியைப் போராகவும் முற்றும் உருவகப்படுத்தினர். (உ௬௬)

இந்நெறி தளரு திறைவனுமயிலுமின் பமுண்டி டைவிடாதிணங்கிக்
கன்னமா புரியிற்சிலபகல் கழீஇப்பின் கடிநகரெய்துவான்கருதி
மன்னனுமன்னமெனுநடைமயிலு மணிநெடுந்தேர்மிசையேறிப்
பொன்னணிகுடுமிநன்னெடுங்கபாடப்புரிசைநீத்தம்புறம்போனர்

[இவ்வாறு சிலநாள் கன்னேசி நாட்டில் தங்கி, பிறகு தன் அயோத்திமா நகருக்குப் போகக்கருதி அரிச்சந்திரனும் சந்திரமதியும் தேர் ஏறிக் கன்னேசி நாட்டின் கோட்டைமதிலைத் தாண்டி அப்புறம் வந்தார் என்பதாம்.]

இ-ள். இந்நெறி - இவ்வாறு, தளரு து - தளர்ச்சி யடையாமல், இறைவனும் - அரிச்சந்திர மகாராஜனும், மயிலும் - மயில்போலுஞ் சாயலை உடைய சந்திரவதியும், இன்பம் உண்டு - காம இன்பத்தை அநுபவித்து, இடைவிடாது இணங்கி - இடைவிடாமல் கூடி, கன்னமாபுரியில் - அந்தக் கன்னமாபுரியிலே, சில பகல் கழீஇ - சில் காலங்கழித்து, பின் - பின்பு, கடிநகர் எய்துவான் கருதி - தனது காவலையுடைய அயோத்தியாபுரிக்குப் போக நினைத்து, மன்னனும்-அரிச்சந்திர மகாராஜனும், அன்னம் எனும் நடைபயிலும்-அன்ன நடை என்கிற நடையையுடைய, மயிலும் - மயிலின் சாயலைக்கொண்ட சந்திரவதியும், அணிநெடுந் தேர்மிசை ஏறி - அழகிதான நீண்ட தேர்மேல் ஏறிக்கொண்டு, பொன் அணி - பொன்னால் அலங்கரிக்கப்பட்ட, குடுமி - சிகரத்தையும், நல்நெடும் கபாடப்புரிசை நீத்து - நல்ல நீண்ட கதவும் கொண்ட கன்னேசி மாநகரின் கோட்டைமதிலைக் கடந்து, அப்புறம்போனர் - அப்பால் போனர்கள். எ-று.

'கழீஇ' சொல்லிசை அளபெடை, 'எய்துவான்' இதில் 'வான்' தெரிநிலை வினை எச்ச விகுதி. (உ௬எ)

பன்னிறத்தனந்தங் கதிரெழுந்தனபோற் பலமணிக்குடை
கள்மேனிழற்ற, நன்னெறித்தவளக் கொடிமிசைநெருங்க நவ
மணிக்காகளமார்ப்ப,மின்னிறக்கொடிமென் மருங்குலார் மருங்கு
மிடைந்துவெண் சாமரமிரட்ட, வன்னிறப்பொழில்சூழ் கன்ன
மாபுரியி னரணமு மகழும்விட்டகன்றூர்.

[பலநிறக் குடைகள் நிழலைச்செய்யவும், வெள்ளைக்கொடிகள் மேலே நெருங்கவும், எக்காளம் ஊதவும், பெண்கள் சாமரை யிரட்டவும், கன்னமாபுரத்தின் கோட்டைகளையும் அகழியையும் கடந்து நீங்கினர் என்பதாம்.]

இ-ள். பன்னிறத்தனந்தம் - பல நிறத்தையுடைய அநேகம், கதிர் எழுந்தனபோல் - சூரியர்கள் எழுந்ததைப்போல, பல மணிக்குடைகள் மேல் நிழற்ற-

அநேக ரத்தினக்குடைகள் மேலே நிழலைச்செய்ய, நல்நெறித் தவளக்கொடி- நல்ல மார்க்கம்போல வெள்ளைக்கொடிகள், மிசை நெருங்க - மேலே நெருங்கவும், நவமணிக்காகளம் ஆர்ப்ப - நவரத்ந மயமான எக்காளம் ஊதவும், மின்னிறக்கொடி மென் மருங்குலார் - மின்னலைப்போல் ஒளியும் கொடிபோல் துவளுகின்ற இடையும் உடைய பெண்கள், மருங்கு மிடைந்து - பக்கங்களிலே நெருங்கி, வெண்சாமர மிரட்ட - வெண்சாமரை வீசவும், அல்நிறப் பொழில்சூழ் - இருள் நிறமான சோலைகள் சூழ்ந்த, கன்னமாபுரியின்-கன்னமா புரியினுடைய, அரணமும் அகழும் விட்டு அகன்றார் - கோட்டைகளையும் அகழியையும் விட்டு நீங்கினார்கள். எ-று.

நல்நெறிக்கு வெண்மை 'நிறம்' என்று கூறுதல் கவிமரபு, 'மின்னிறக் கொடி' என்பதற்கு மின்னலாகிய அழகிய கொடி என்றும் பொருள் கூறுவர். (அல் நிறப்பொழில் - அன்னிறப்பொழில்.) சூரியன் கதிர் செல்லாப் பொழில் என்பதாம். (உ௫அ)

காந்தளஞ்செங்கைக் கன்னியர்சில்லோர் கைதொழுதிடை யிடைமீள, மாந்தர்கள்வணங்கி வவரவருடனே மந்திரத்தலைவர் மீண்டேக, வேந்தர்வீழ்ந்திறைஞ்சிப் பணிவிடைகேட்டு விடைகொடுமீண்டுமூரெய்தப், போந்தனன் களிறும் புரவியுந்தேரும் புடைதொறுங் கடலெனப்பொலிய.

[பெண்கள் சிலர் கும்பிட்டு மீண்டனர், மனிதர்கள் வணங்கிக்கொண்டு
கூட வந்தனர். அரசரும் அவர்களோடு மந்திரிகளும், விடைபெற்று
மீளவும், அரசர்கள் காலில் விழுந்து வணங்கிப் பணிவிடை
கேட்டு பின் உத்தரவுபெற்று ஊர்செல்லவும், களிறும்
குதிரையும் தேரும் பக்கங்களில் கடல்போல்
சூழ்ந்துவர வந்தான் என்பதாம்.]

இ-ள். காந்தளஞ்செங்கை - வழிவிடவந்த காந்தட்பூப்போலும் சிவந்த கைகளை உடைய, கன்னியர் சில்லோர் - பெண்கள் சிலர், கைதொழுதிடையிடை மீள - கைகளால் வணங்கி மத்தியில் திரும்பித் திரும்பிப் போகவும், மாந்தர்கள் - மற்ற மனிதர்கள், வணங்கிவா - வணங்கிக் கொண்டு கூடவேவா, அவருடனே - அவ்வரசர்களுடனே, மந்திரத்தலைவர் மீண்டேக - மந்திரிகள் திரும்பிப்போகவும், வேந்தர் - அரசர்கள், வீழ்ந்து இறைஞ்சி - காலில் விழுந்து வணங்கி, பணிவிடைகேட்டு - சொன்ன உத்தரவுகேட்டு, விடைகொடு - செலவு பெற்றுக்கொண்டு, மீண்டும் ஊரெய்த-திரும்பிக் கன்னமாபுரத்துக்குப் போகவும், களிறும் - யானைகளும், புரவியும் - குதிரைகளும், தேரும் - தேர்களும், புடைதொறும் - நாலுபக்கங்களிலும், கடலெனப்பொலிய - கடல்போல விளங்க, போந்தனன் - வந்தான். எ-று.

"காந்தளம் செங்கை" காந்தள் மலர்போலும் செவந்த கைகள், 'மந்திரத் தலைவர்' மந்திரிகளும் பிரதானிகளும் என்றும் பொருள் கொள்வர். (உ௫௯)

கலி நிலைத்துறை.

தோடுதுன்றியமரைமிசைத்துணைபுணரன்ன
மாடுநின்றதோர்மதிநிழறனைக்கண்டுமற்றோர்
பேடுநின்றெனச்சேவலைப்பிரிந்தயன்மலர்சேர்ந்
தூடுகின்றவச்செழும்புனற்றண்பணையுற்றார்.

[தன் ஆண் அன்னத்தின் பக்கத்தில் உள்ள சந்திரன் நிழலை வேறு
பெட்டை அன்னம் என்று பெட்டை அன்னமானது ஊடி
வேறு பூவில் தங்கும்படியான குளிர்ந்த மருத நிலத்தி
ற்கு வந்தார்கள் என்பதாம்.]

இ-ள். தோடு துன்றிய - இதழ்கள் நெருங்கின, மரைமிசை - தாமரை மலர்கள் மேலே, துணைபுணர் அன்னம் - தனது ஆண்பட்சியுடனே கூடிக் கொண்டிருந்த பெட்டை அன்னமானது, மாடுநின்ற - பக்கத்தில் இருந்த, ஓர் மதிநிழறனைக்கண்டு - ஒப்பற்ற சந்திரனின் நிழலைக்கண்டு, மற்றோர் பேடு நின் றெனு - வேறே ஒரு பெட்டை அன்னம் (நமது ஆணுடனே) கூடியிருக்கிற தென்று, சேவலைப் பிரிந்து - சேவலை விட்டு நீங்கி, அயல்மலர் சேர்ந்து- வேறொரு பூவிலே யிருந்துகொண்டு, ஊடுகின்ற - பிணங்குவதான, அச்செழும்புனல் தண்பணையுற்றார் - அந்தச் செழிப்புடைய நீர்சூழ்ந்த குளிர்ந்த மருத நிலத்திற்கு வந்தார்கள். எ-று.

'மரை' இது முதற்குறை விகாரம் தாமரை மலரைக் குறித்தது. "மாடு நின்றதோர் மதிநிழல்" உயரத்தில் பிரகாசித்துக்கொண்டு நின்ற ஒப்பற்ற சந்திரனின் நிழலை, என்றும் பொருள் செய்வார். இவைகள் கலிநிலைத்துறை. ()

கோடுவார்மலர்ப்பொழிலையுங்குளிர்தடத்தினையு
நீடுவார்சிறைப்பறவையின்குழாத்தையுநிறைநீ
ராடுவாரையுமவ்விடத்தணிமலர்கொய்து
சூடுவாரையுங்காட்டுவான்றோகைக்குத்துணைவன்.

[சோலைகளையும், குளங்களையும், பறவையின் கூட்டங்களையும், நீராடுகின்ற
வர்களையும், அங்குப் பூக்கொய்து சூடுகின்றவர்களையும் சந்திரவதிக்
குக் காட்டிக்கொண்டு சென்றான் என்பதாம்.]

இ-ள். கோடுவார் - கிளைகள் நீண்டுள்ள, மலர்ப்பொழிலையும் - பூஞ்சோலைகளையும், குளிர் தடத்தினையும் - குளிர்ந்த தடாகங்களையும், நீடுவார் - அதிகமாக நீண்ட, சிறைப்பறவையின் குழாத்தையும் - சிறகுகளையுடைய பட்சிக் கூட்டங்களையும், நிறை நீர் ஆடுவாரையும் - நிறைந்த நீர்க்குளங்களிலே நீர் ஆடுகிறவர்களையும், அவ்விடத்து - அந்த இடங்களிலே, அணிமலர் கொய்து - அழகிய புஷ்பங்களைப் பறித்து, சூடுவாரையும் - சூடிக்கொள்ளுகிறவர்களையும், தோகைக்கு - மயில்போலும் சாயலையுடைய சந்திரவதிக்கு, துணைவன் - நாயகனாகிய அரிச்சந்திரன், காட்டுவான் - காட்டலாயினன். எ-று. 'குழாம்' கூட்டம். (உசுக)

செய்யமாமலரடுத்துமொண்பெடைகடேனருந்தாப்
பையவேசுரும்படைவழிபார்த்தினிதுறலாற்
றையலாருணவமைத்தன்பர்தாம்வரநோக்கஞ்
செய்யுநாளொத்தசெழுமலர்க்காவெலாந்திருவே.

[சோலையிலே செழுமையான பூவினிடத்தே பெண் வண்டு தேன் உண்ணாது ஆண்வண்டின் வருகைக்காகக் காத்திருத்தல் பெண்கள் உணவு சமைத்து தங்கள் நாயகர் வருகைக்காகக் காத்திருப்பதை ஒத்திருக்கிறது என்பதாம்.]

இ-ள். திருவே - லட்சுமி போன்றவளே, செழுமலர்க்காவெலாம் - இந்தச் செழுமையான சோலையினிடம் எல்லாம், செய்யமாமலரடுத்து - செம்மையான பெருமைபொருந்திய புஷ்பங்களை அடுத்து, ஒண் பெடைகள் - அழகிய பெட்டை வண்டுகள், தேன் அருந்தா-தேனைப் புசியாமல், பையவே-மெள்ள, சுரும்பு - ஆண்வண்டுகள், அடை - வருகிற, வழிபார்த்து இனிதுஉறலால்-வருகிறவழியைப்பார்த்துக்கொண்டு அதுவாச் சந்தோஷித்திருக்கிறதினாலே; தையலார் - உலகத்திலே பெண்கள், உணவு அமைத்து - சோறு சமைத்து, அன்பர் தாம்வா - தங்கள் நாயகர்கள் வரவை, நோக்கம் செய்யும் - பார்த்துக்கொண்டிருக்கிற, நாள் ஒத்த-காலத்தை ஒத்திருக்கின்றது. எ-று. (உகூஉ)

கடிமனைக்கணே தமர்நிறீஇயெதிலார்க்கடியுங்
கொடியர்போலத்தம்பிள்ளையைக்கூட்டினிற்கூட்டி
வடிநெடுங்கணாய்மலர்நெடுஞ்சோலைகடோறுங்
கொடியினங்கருங்குயில்களைத்துறப்பனகுறியாய்.

[தன் பிள்ளைகளை வீட்டில் வைத்துக்கொண்டு மற்றவர்களை தூரத்தும் கொடியர்போல் காக்கைகள் தன் குஞ்சுகளை கூட்டில் வைத்துக் கொண்டு குயில்களைத் தூரத்துவதைக் காணாய் என்றான் என்பதாம்.]

இ-ள். வடிநெடுங்கணாய் - கூரிய நீண்ட கண்களையுடையவளே, கடிமனைக்கணே - காவலையுடைய தங்கள் வீட்டிலே, தமர் நிறீஇ - தம்மைச்சேர்ந்தவர்களை இருக்கச்செய்து, எதிலார்க்கடியும் - அந்நியரை நீக்குகின்ற, கொடியர் போல - கொடுஞ்செய்கை யுள்ளவர்கள் போல, மலர்நெடும் சோலைகடோறும்-நீண்ட பூஞ்சோலைகளிலெல்லாம், கொடியினம் தம்பிள்ளையைக் கூட்டினிற் கூட்டி - காக்கைகளின் கூட்டம் தமது குஞ்சைக் கூட்டிலே யிருக்கச்செய்து, கருங்குயில்களை - கரிய குயில்களை, துறப்பன - ஓடச்செய்வனவற்றை, குறியாய் - நீ பார்ப்பாயாக. எ-று.

'பிள்ளை' என்னும் இளமைப்பெயர் பறவைகளுக்கும் உண்டு, குயில் காக்கையின் கூட்டில் முட்டையிட்டு வைப்பதாகவும் அதனைக் காக்கை அடைகாத்துப் பொறிப்பதாகவும், பின் சத்தத்தால் தெரிந்து தூரத்தி விடுவதாகவும் கூறுவர். 'கொடி' காக்கை. 'நிறீஇ' சொல்லிசை அளபெடை. (உகூங.

ஆரநீண்மடைப்படப்பையிற்புகாதிடையழுந்து
தூரவோடியேவெளியிடைப்பரவுறுந்தோயந்
தாரமானவள்வருந்திடக்கணிகையைச்சாருஞ்
சோரரொத்தனமுத்தனதிருநகைத்தோகாய்.

[முத்தைப்போன்ற பல்வரிசையையும் மயில்போலும் சாயலையும் உடைய பெண்ணே! நீரானது வயல்களுக்குள் புகாமல் நடுவேயுள்ள பள்ளங்களின் வழியே ஓடி வெறும் நிலங்களில் பரவுவது மனைவியை விட்டு வேசையரை அடைகிற விபசாரமுடையவரை ஒத்திருக்கிறது என்றான் என்பதாம்.]

இ-ள். முத்தன திருநகைத்தோகாய் - முத்தைப்போலும் அழகிய பல்வரிசையை உடைய மயில்போலும் சாயலையுடைய பெண்ணே! ஆரநீண் மடைப் படப்பையிற் புகாது - மிகவும் நீண்டுள்ள வயலின் மடைகளையுடைய வயல்களுக்குள்ளே புகாது, இடை அழுந்து தூரவோடியே - நடுவே பள்ளமாய் அழுந்திக்கிடக்கிற நீண்ட (வெகு) தூர வரையிலும் சென்று, வெளியிடை - வேறு வெளியான நிலங்களிலெல்லாம், பரவுறுந்தோயம் - பரவுகின்ற நீரானது, தாரமானவள் வருந்திட - தனது மனைவியானவள் வருந்த, கணிகையைச்சேரும்- வேசையை அடைகிற, சோரரொத்தன - விபசாரம் செய்பவரை ஒத்தது எ-று.

மன்றல்வண்டிசைபாடமாமயினடமாடத்
தென்றல்வந்தலைத்தலைபலமுழவொலிசெய்ய
நின்றபூதங்களிலைபழுக்காயெதிர்நீட்டக்
கொன்றைபொன்சொரிவளமைபாராய்குலக்கொடியே.

[பெண்ணே! வண்டுகள் ராகம்பாடவும் மயில்கள் நடமாடவும் தென்றல் வந்து வீசி அலைகளாகிய மத்தளம் ஒலிக்கவும் பாக்குமரம் வெற்றிலைக்கேற்ற பாக்குத்தரவும் கொன்றைமரங்கள் பொன் சொரிவனபோல் பூக்களைச் சொரிவது பாராய் என்பதாம்.]

இ-ள். குலக்கொடியே-உயர் குலத்திற் பிறந்த பூங்கொடிபோலும் பெண்ணே! மன்றல் - (மலர்களில் தங்குவதனால்) வாசனையைக்கொண்ட, வண்டு- வண்டுகள், இசைபாட - பாட்டுகளைப்பாடவும், மாமயில் - சிறந்த மயில்கள், நடமாட - நடனஞ்செய்யவும், தென்றல் - தென்றற் காற்றானது, வந்து அலைத்து - வந்துவீசி, அலைபல முழவு ஒலிசெய்ய - அலைகளானது பல் மத்தளங்களின் ஓசையைச்செய்யவும், நின்ற பூகம் - அங்கே நிற்கின்ற கமுகமரங்கள், இலைபழுக்காய் எதிர் நீட்ட - வெற்றிலைக்கு ஏற்ற பாக்குகளை எதிரே நீட்ட, கொன்றை - கொன்றை மரங்கள், பொன்சொரி வளமைபாராய் - (ஆடுகிறவர்களுக்கு) பொன் கொடுப்பனபோல் மலரைச்சொரிகிற அழகையும் நீ பார்ப்பாயாக. எ-று.

'பாராய்' முன்னிலை ஒருமை ஏவல்; மயில் நடனம் செய்வதாகவும் வண்டு இசை பாடுவதாகவும், அலைகள் பல மத்தள ஒலி காட்டுவதாகவும் உருவகப்

படுத்தினதற்கு ஏற்க ஆடிப்பாடி மத்தளம் அடிப்பவர்களுக்கு பூகம்பாக்கு உத வியதாகவும் கொன்றை தன் மலராகிய பொன்னைச் சொரிந்ததாகவும் முற்றும் உருவகப்படுத்தினர். (உகூரு)

மதகுமங்கலமுரசெழவண்டுவாழ்த்திசைக்க
வுதிரமொத்தசெந்தாமரையோமத்தீவளரப்
புதுமலர்த்துணைபுணரிளவன்னமும்பெடையும்
வதுவைசெய்வனவொப்பனகண்டருண்மயிலே.

[மயில்போன்ற பெண்ணே! மதகுகள் மங்கல வாத்தியம்போல் சப்திக்கவும், வண்டுகள் வாழ்த்தவும், செந்தாமரை தீயைப்போல் விளங்கவும், புதிதாக மலர்ந்த பூவிலே ஜோடியாகக் கூடி யிருக்கின்ற இளமையான ஆண் அன்னமும் பெட்டை அன்ன மும் கல்யாணம் செய்வதை ஒத்திருக்கின்றது பார்த்தருள்வாயாக என்பதாம்.]

இ-ள். மயிலே - மயில்போலும் சாயலை உடையவளே! மதகு - மதகுகள் ஆனவை, மங்கலமுரசு - மங்கல முரசவாத்தியம்போல், எழ - சப்திக்கவும், வண்டு - வண்டுகள், வாழ்த்து இசைக்க - வாழ்த்திப்பாடவும், உதிரம் ஒத்த- இரத்தத்தை நிறத்தால் ஒத்திருக்கின்ற, செந்தாமரை - செவந்த தாமரைகள், ஓமத்தீவளர - ஓமாக்கினிகள் போல விளங்கவும், புதுமலர் - புதிதாக மலர்ந்த பூவிலே, துணைபுணர் - ஜோடியாகக் கூடுகின்ற, இள அன்னமும் - இளமை யான ஆண் அன்னமும், பெடையும் - பெட்டை அன்னமும், வதுவை செய் வன - விவாகம் செய்து கொள்வனவற்றை, ஒப்பன - ஒத்திருக்கின்றன, கண் டருள் - நீ பார்த்தருளாய். எ-று.

மதகில் தண்ணீர் மோதுவதால் உண்டாகும் ஒலியை மங்கல முரசவாத் திய முழக்கமாகவும், வண்டின்ஒலியை வாழ்த்து ஒலியாகவும், செந்தாமரையை ஓமாக்கினியாகவும் உருவகப்படுத்தினர். (உகூசு)

வெடித்தவாற்சிறுகன்றுகண்மேதியின்முலைப்பால்
குடித்தவேம்பலாலரும்பலர்கோகனகப்பூக்
கடித்துவாங்குதலூடலின்மகளிர்கைகணவர்
பிடித்துவாங்குதலொப்பதுபெண்கொடிபாராய்.

[எருமையின் முலைப்பாலைக்குடித்து இருக்கிற கன்றுகள் களிப்பினல் செந்தாமரையை கடித்திழுப்பது ஊடிய பெண்களின் கையைக் கணவர் பிடித்திழுப்பதுபோல் இருக்கிறது என்பதாம்.]

இ-ள். பெண்கொடி - வஞ்சிக்கொடிபோலும் பெண்ணே! வெடித்த வால் - மேலே தூக்கிக்கொண்டிருக்கின்ற வாலை உடைய, சிறு கன்றுகள்- இளங்கன்றுகள், மேதியின் - எருமை மாட்டினது, முலைப்பால் குடித்த ஏம்ப லால் - முலைப்பாலைக்குடித்த மகிழ்ச்சியினலே, அரும்பலர் கோகனகப்பூ-அரும் பாகி மலர்கின்ற தாமரைப்பூவை, கடித்து வாங்குதல் - கடித்து இழுப்பதா

னது, வாடலின் மகளிர்கை - பிணங்கியிருக்கும் சமையத்திலே பெண்களின் கையை, கணவர் பிடித்து வாங்குதல் - நாயகர் பிடித்து இழுப்பது, ஒப்பது பாராய் - ஒத்திருக்கின்றதை பார்ப்பாயாக. எ-று. செந்தாமரையை கன்றுகள் பிடித்து இழுப்பது, வாடிய மாதரின் கையை ஆடவர் பிடித்து இழுப்பது போல் இருக்கின்றது, என்பது பொருள். (உகஎ)

இத்தடத்துமீனருந்தியவன்னங்களெல்லா
மத்தடத்தின்மொய்த்திழிவனவருநிதியெல்லாந்
தத்தமக்களிந்திகழ்ந்தவர்தங்களைத்துறந்து
கைத்துளார்கட்செல்கணிகையரொப்பனகாணாய்.

[இந்தக்குளத்தில் மீனைத்தின்ற அன்னங்கள் எல்லாம், அந்தக்குளத்தில் போய் நெருங்கி இறங்குந்தன்மை வேசையர்களாகிய தமக்கே பொருள்களைக்கொடுத்து இழந்தவர்களை விட்டு விட்டு வேறு பொருள் உள்ள ஆடவர்களிடம் சேரும் வேசையர்களை ஒத்திருக்கின்றதைப் பாராய் என்பதாம்.]

இ-ள். இத்தடத்து - இந்தக்குளத்திலே, மீன் அருந்திய - மீனைப்புசித்த, அன்னங்கள் எல்லாம் - அன்னப்பட்சிகள் முழுமையும், அத்தடத்தில் மொய்த்து இழிவன, அந்தக்குளத்திலே நெருங்கிப்போய் இறங்குகின்ற தன்மையானது, அருநிதி எலாம் - அருமையான திரவியங்கள் எல்லாவற்றையும், தத்தமக்கு அளித்து - வேசையர் தங்களுக்கே கொடுத்து, இழந்தவர் தங்களை - கைப்பொருளை எல்லாம் இழந்தவர்களை, துறந்து - விட்டு நீங்கி, கைத்துளார்கட் செல் - வேறே பொருள் உள்ளவர்களிடத்திலே போகின்ற, கணிகையர் - வேசையர்களை, ஒப்பன - ஒத்திருக்குந் தன்மையைக், காணாய் - பார்ப்பாயாக. எ-று

"தத்தமக்களித் திகழ்ந்தவர் தங்களை" என்றும் பாடமோதுவாருண்டு அப்பொழுது, வேசையர்களாகிய தங்களுக்கே கொடுத்து (தம்பொருள் போனமை கண்டு,) வேசையர்களாகிய தங்களை இகழ்ந்து பேசிய ஆடவரை; என்று பொருள் செய்யலாகும். (உகஅ)

மேயுமோதிமஞ்சேலினைக்கவர்ந்திடவெருண்டு
பாயுநீள்கயல்செங்கமலத்தலர்படிவ
வாயின்மிக்கநற்கணவனையமரிடையிழந்து
தீயில்வீழ்குவாரொப்பனதிருந்திழைகாணாய்.

[குளத்திலே அன்னம் சேல் மீனைத்தின்ன, கயல் மச்சங்கள் பயந்து செந்தாமரையிலே படிவதானது தங்கள் புருஷர்கள் யுத்தகளத்திலே மாள தீயிலே குதிக்கும் கற்புடை மாதரை ஒத்திருப்பதைப் பார்ப்பாயாக என்பதாம்.]

இ-ள். திருந்திழை - திருத்தமான கல்லாபரணங்களை அணிந்துள்ள பெண்ணே! மேயும் ஓதிமம் - குளத்திலே மேய்கிற அன்னப்பறவைகள், சேலி

னைக் கவர்ந்திட - சேல்கெண்டையைப் பிடித்துத்தின்ன, வெருண்டு - அதற்குப் பயந்து, பாயும் நீள்கயல் - பாய்கின்ற நீண்ட கயல்கெண்டை மச்சங்கள், செங்கமலத்து அலர் படிவ - செந்தாமரைப் பூவின்மேலே போய்ப் பொருந்துந் தன்மையானது, ஆயின்மிக்க - தன் தாயைப்பார்க்கிலும் அன்பு மிகுந்த, நல் கணவனை அமரிடை இழந்து - நல்ல தன் புருஷனைச் சண்டையினிடத்தே சாவக்கொடுத்து, தீயில் - நெருப்பில், வீழ்குவார் - விழுகின்ற கற்புடைய பெண்களை, ஒப்பன - ஒத்திருப்பதைக், காணாய் - காண்பாயாக. எ-று.

"ஆயின் மிக்க நற்கணவனை" இதற்கு, ஆராயுமிடத்து அன்பு மிகுந்த நல்ல புருஷனை" என்றும் பொருள் கூறலாம். 'சேல்' ஆண்மீன்; 'கயல்' பெண் மீன். "இழை" கல்பதித்த ஆபரணம், (இழைத்தல் - கல்பதித்தல்) ()

கூடுமன்னங்கள்பறந்திரைகவர்ந்திடகுழாத்தி
லூடுமன்னமொன்றுயர்ந்ததாமரைமிசையுகள
னீடுவார்கழையேறியேநிறையவைநடுநின்
றாடுவேழம்பமாதரைநிகர்த்தல்பாரணங்கே.

[பெண்ணே! கூட்டமாக அன்னப்பட்சிகள் போய் இரைதின்ன அவைகளினின்றும் ஊடின அன்னமானது உயர்ந்து தோன்றுகின்ற ஒரு தாமரைமேலே ஏறிக் கோபத்தால் குதிக்குந் தன்மையானது சபை நடுவே நின்று ஆடுகிற ஒரு கழைக்கூத்தாடிச்சியை ஒத்திருத்தலைப் பார்ப்பாயாக என்பதாம்.]

இ-ள். அணங்கே - தெய்வப்பெண்ணை ஒத்தவளே, கூடும் - கூடியிருக்கிற, அன்னங்கள் - அன்னப்பட்சிகள், பறந்து - பறந்துபோய், இரை கவர்ந்திட - இரையைப் பொறுக்கித்தின்ன, குழாத்தில் - அந்தக் கூட்டத்திலே, ஊடும் அன்னம் ஒன்று - பிணங்கின ஒரு அன்னமானது, உயர்ந்த தாமரை மிசை - உயர்ந்து தோன்றுகின்ற தாமரை மலரின்மேலே, உகள - வருத்தத்தால் குதிக்க, (அத்தன்மை) நீடுவார் - மிகவும் நீண்ட, கழை ஏறியே - மூங்கிலின்மேலே ஏறியே, நிறை அவை நடுநின்று - நிறைந்த சபை நடுவே நின்று, ஆடு - ஆடுகிற, வேழம்பமாதரை - கழைக்கூத்தாடிச்சியை, நிகர்த்தல் - ஒத்திருக்கிறதை, பார் - பார்ப்பாயாக. எ-று.

'நீடுவார்' 'நீடு' எனினும் 'வார்' எனினும் ஒரு பொருளே, "ஒருபொருட் பன்மொழி சிறப்பினில் வழாஅ" என்ற இலக்கணப்படி சிறப்புப்பொருளில் வந்தது இதனை "மீமிசைச்சொல்" என்பர் இலக்கண நூற்புலவர். 'மிக நீண்ட' என்பது பொருள். (உஎ0)

நன்புனற்பதுமந்துதைந்தளிநறவுணலால்
வன்பினிற்பிடித்தூடியமகளிரைமணாள
ரன்புறத்தெவிட்டாவிதழாரமுதருந்து
மின்பமெல்லணையொப்பனவிளங்கொடிகாணாய்.

[வண்டுகள் தாமரையில் நெருங்கி தேனையுண்ணுதலானது, ஊடிய பெண்களை வன்பினால் பிடித்து நாயகர்கள் இதழ் அமுது அருந்தும் இன்பமெல் அணைபோலிருக்கிறது பார்ப்பாயாக என்றான், என்பதாம்.]

இ-ள். இளங்கொடி - இளமையாகிய பூங்கொடிபோலும் பெண்ணே! நல்புனல் பதுமம் துதைந்து அளி - அந்த நல்ல நீரிலே மலர்ந்துள்ள தாமரை மலரிலே வண்டுகள் நெருங்கி மொய்த்து, நறவு உணலால் - தேனைக் குடிக்கிறதினால், வன்பினிற் பிடித்து - பலாத்காரமாகப் பிடித்துக்கொண்டு, ஊடிய மகளிரை - பிணங்கின பெண்களை, மணாளர் - நாயகர்கள், அன்புற - பிரீதியாக, தெவிட்டா - தெவிட்டாத, இதழ் - இதழ்களிலுள்ள, ஆர் - அரிய, அமுது அருந்தும் - அமுதத்தைப் பருகுகின்ற, இன்பம் - சுகத்தை உடையதாகிய, மெல் அணை ஒப்பன காணாய் - மெல்லிய மெத்தையை ஒத்திருக்கின்றதைப் பார்ப்பாயாக. எ-று. 'உணலால்' இது 'உண்ணலால்' என்பதின் தொகுத்தல் விகாரம். (உஎக)

துஞ்சவந்தநாடோழரைவிட்டயறுறக்கும்
வஞ்சநெஞ்சர்போலலாதுவண்டணிகுழன்மாதே
யஞ்சலாதுநின்றவருடனிறந்தநல்லவர்போற்
கஞ்சநெல்லுடனறப்புண்டுகிடப்பனகாணாய்.

[வண்டுகள் மொய்த்த அழகான கூந்தலையுடைய பெண்ணே! சாவு வந்த நாளிலே தோழர்களை விட்டு அயலிலே ஓடிப்போகும் வஞ்சகமனத்தை உடையவர்களைப் போலல்லாமல், அவரோடு அஞ்சாது நின்று சிறந்த நல்லவர்களைப்போல் நெல்லோடு அறுப்புண்டு கிடக்கும் தாமரைகளைக் காண்பாயாக என்றான் என்பதாம்.]

இ-ள். வண்டணி குழல் மாதே - வண்டுகள் மொய்க்கும் அலங்காரமான கூந்தலை உடைய பெண்ணே! துஞ்ச வந்த நாள் - சாவானது வந்த நாளிலே, தோழரை - நண்பரை, விட்டு - நீங்கி, அயல் துறக்கும் - வேறாகிச்செல்கின்ற, வஞ்ச நெஞ்சர்போல் - வஞ்சனையை உடைய மனத்தை உடையவர்களைப் போல, அலாது - அல்லாமல், அஞ்சலாது - பயப்படாமல், நின்ற - தமது அன்பாக நின்ற, அவருடன் - அந்நண்பருடனே, இறந்த நல்லார்போல்-சாகிற அந்த நல்லாரைப்போல, கஞ்சம் - தாமரைகள், நெல்லுடன் - (அறுக்கப்பட்ட) அந்த நெல்லுகளோடே, அறப்புண்டு - அறுபட்டு, கிடப்பன - கிடக்கின்றனவற்றை, காணாய் - நீ பார்ப்பாயாக. எ-று.

'துஞ்சுதல்' - சாதல்; 'அல்லாது' என்றது 'அலாது' எனவாயது தொகுத்தல் விகாரம். "கெடுங்காது கைவிடுவார் கேண்மை யடுங்காது, உள்ளினும் உள்ளம் சுடும்" இத்திருக்குறள் ஈண்டு கருதற்பாலது. (உஎஉ)

அடலனங்கனுர்கணியபிடேகமேயனையாய்
மடல்கொள்வாவிநீர்குடைந்திடப்பாய்கின்றமடவார்

மிடனெடுஞ்சிலைபுயல்பிறைசுமந்துபன்மின்போய்க்
கடலில்வீழ்ந்திடுகாட்சியைநிகர்ப்பதுகாணாய்.

[மன்மதனுக்குச் சூட்டும் கிரீடம் போன்றவளே! குளங்களிலே நீராடு
தற்கு விழுகின்ற பெண்களின் தோற்றம், மின்னல்கள் பல,
பலங்கொண்ட வில்லும், புயலும், பிறைச்சந்திரனும்
கொண்டு கடலில் விழுகிற தோற்றம்போ லிருப்ப
தைக் காண்பாயாக என்றனன் என்பதாம்.]

இ-ள். அடல் - வலிமை பொருந்திய, அனங்கனுக்கு - மன்மதனுக்கு, அணி அபிடேகமே அனையாய் - சூட்டுவதாகிய கிரீடம்போன்றவளே! மடல் கொள் - பூ இதழ்களைக்கொண்ட, வாவிநீர் - குளத்து நீரிலே, குடைந்திட - ஸ்நானம் செய்தற்கு, பாய்கின்ற மடவார் - விழுகிற பெண்களுடைய, (தோற்றம்) மிடல் நெடும் சிலை - பலங்கொண்ட நீண்ட வில்லும், புயல் - மேகமும், பிறை - பிறைச்சந்திரனும், சுமந்து - தாங்கி, பன்மின் - பல மின்னல்கள், போய் - சென்று, கடலில் விழுந்திடு - கடலிலே விழுகிற, காட்சியை நிகர்ப்பது - தோற்றத்தை ஒத்திருக்கிறதை, காணாய் - நீ பாராய். எ-று.

'அபிடேகம்' - மகுடம், 'மடவார்' - இளமையை உடைய பெண்கள்; 'பிறை' 'பிற' என்னும் பகுதியடியாகப் பிறந்தபெயர். மாதாமாதம் புதிதாகத் தோன்றும் காரணம்பற்றி வந்த பெயர். புருவங்களைச் சிலையாகவும், கூந்தலைப் புயலாகவும், நெற்றியைப் பிறையாகவும் குறித்தார். (உஎங)

ஏந்திளந்தனத்தொருத்தியின்புனல்குடைந்தெழுந்து
கூந்தலங்கையான்முறுக்குவாள்குளிர்முகத்தோற்றங்
காந்தண்மாமலரூடுபோய்த்திங்களைக்கரிய
பாந்தடீண்டுவதொப்பதுபசுங்கொடிபாராய்.

[பசுங்கொடி போன்றவளே! தாங்கும் இளமுலையை உடைய ஒரு பெண்
தண்ணீரிலே மூழ்கி தன் கூந்தலை நீரைப்பிழிகிறதற்காகத் தன்
கையால் முறுக்குகிறவளின் குளிர்ந்த முகத்தோற்றமானது
ஒரு கரும்பாம்பானது காந்தலின் வழியே ஓடி சந்திர
னைப் பற்றுவதுபோலிருக்கிறது பார் என்றான்
என்பதாம்.]

இ-ள். பசுங்கொடி - பசுமையான கொடி போல்பவளே, ஏந்து - தாங்குகின்ற, இளம் தனத்து ஒருத்தி - இளமையான கொங்கைகளையுடைய ஒரு பெண்ணானவள், இன்புனல் - இனிதான நீரிலே, குடைந்து எழுந்து - முழுகி எழுந்திருந்து, கூந்தல் - கூந்தலை, அங்கையால் முறுக்குவாள் - அழகிய கையினால் முறுக்கி நீரைப்பிழிகிறவளுடைய, குளிர்முகத்தோற்றம் - குளிர்ந்த முகத்தினது தோற்றமானது, காந்தள் மாமலர் ஊடு - காந்தளின் பெரிய பூக்களின் ஊடே, போய் - போய், திங்களை - சந்திரனை, கரியபாந்தள் - கருத்த நிறத்தையுடைய பாம்பானது, தீண்டுவது ஒப்பது பாராய் - பிடித்தலை ஒத்திருப்பதை நீ பார்ப்பாயாக. எ-று.

'காந்தள்' கைக்கு உவமம், 'கரிய பாந்தள்' கூந்தலுக்கு உவமம், 'சந்திரன்' முகத்துக்கு உவமம், கரிய பாம்பென்றது "கேதுவை" (உஎச)

சிறுநுதற்பெருங்கண்ணியோர்தெரிவைநீர்மூழ்க
நறுமலர்க்குழல்வண்டெழுந்தலமந்துநரல்வ
வறநெறிப்படிபுரந்தகோலரசர்களிறக்க
மறுகுமக்குடிபோல்வனகாண்டிமாமயிலே.

[மயில்போலும் பெண்ணே! ஒருபெண் தண்ணீரிலே மூழ்க அவள் கூந்தலில் மொய்த்துக்கொண்டிருந்த வண்டுகள் கிளம்பி சுழன்று சப்திப்பதானது தமது செங்கோலரசன் இறக்கத் துக்கப்படும் குடிகள்போற் காண்பதை நீ பாராய் என்றான் என்பதாம்.]

இ-ள். மாமயிலே - அழகிய மயில்போலும் சாயலை உடையவளே! சிறு நுதல் - சிறிதான நெற்றியையும், பெரும் கண்ணி - பெரிதான கண்களையும் உடைய, ஓர் தெரிவை - ஒருபெண், நீர் மூழ்க - நீரிலே முழுக, நறு - நல்ல, மலர்க்குழல் - மலர்மாரயணிந்த கூந்தலிலுள்ள, வண்டு - வண்டுகளானவை, எழுந்து - கிளம்பி, அலமந்து நரல்வ - சுழன்று சப்திப்பதானது, அறநெறிப் படி - தரும வழிப்படி, புரந்த - ஆண்ட, கோல் அரசர்கள் - செங்கோல் அரசர்கள், இறக்க - இறந்துபோக, மறுகும் - துக்கப்படுகின்ற, அக்குடி போல்வன - அந்த (ராஜ விசுவாசமுள்ள) குடிகளைப்போல இருப்பதை, காண்டி - நீ பார்ப்பாயாக. எ-று.

'சிறுநுதல் பெருங்கண்ணி' சிறிது என்பதும் அதற்கு எதிரிடையான 'பெரும்' என்பதும் ஓாடியில் வரத்தொகுத்தமையால் 'முரண் தொடை'; 'தெரிவை' பெண்களின் பருவப்பெயர் பெண்ணுக்காயது; 'நறு' வாசனையும் ஆம்; 'கோல்' என்றது செங்கோலைக் குறித்தது. 'புரந்த' காத்த; புரக்கும் காரணம்பற்றியே அரசனுக்குப் "புரவலன்" என்றோர் பெயரும் வந்தது. (உஎடு)

மஞ்சனங்குடைந்தாடியோர்வாணுதன்மடந்தை
கஞ்சநன்மலர்க்கடைந்ததன்மிசைக்கரம்வைத்தற்
சஞ்சலந்தவிரென்முகந்துனைக்கண்டுதளும்பா
தஞ்சலென்றுகையமைப்பதுநிகர்த்தல்பாரணங்கே.

[ஒரு பெண்ணானவள் தண்ணீரிலே ஸ்நானம் செய்து ஒரு தாமரையைக் கிண்டி அதன்மேல் கையை வைத்திருப்பது என்முகத்தைக் கண்டு கண்ணீர் தளும்பாமல், துன்பத்தை விட்டிரு பயப்படாதே என்று தனது கையால் அமைக்கின்றதை ஒத்திருக்கிறதை நீ பார் என்றான் என்பதாம்.]

இ-ள். அணங்கே - தெய்வப்பெண்ணை ஒத்தவளே! ஓர் வாள்நுதல் மடந்தை - ஒரு ஒளிபொருந்திய நெற்றியை உடைய பெண்ணானவள்; மஞ்சனம்

குடைந்து ஆடி - திருமஞ்சனமாக நீரிலே முழுகி விளையாடி, கஞ்ச நன்மலர்- தாமரையின் நல்ல பூவை, கடைந்து - கிண்டி, அதன்மிசை - அதன்மேலே, காம் வைத்தல் - தன் கையை வைத்திருத்தலானது, என்முகம் தனைக்கண்டு- என்முகத்தைப்பார்த்து, துளும்பாது - கண்ணீர் துளும்பாமல், சஞ்சலந்தவிர்- துன்பத்தை விட்டிரு, அஞ்சல் என்று - பயப்படாதே என்று, கை அமைப் பது - தனது கையால் அமைக்கின்றதை, நிகர்த்தல் பார் - ஒத்திருக்கின்ற தைப்பார். எ-று. மஞ்சனம், நீர். இவள் முகம்போல் நாம் இல்லையே என்று கொள்ளும் துக்கத்தை நீக்குக; அதற்காக கண்ணீர் விடாதே, பயப்படாதே என்றான் என்பதாம். (உஎசு)

காநிரைப்பெருநீழலின்வருமொருகன்னி
தேனிரைத்தமென்சிகழிகைநறுமலர்தெரிவ
வானிரைத்ததண்கருமுகிலிடையிடைவயங்கி
மீனிரைத்தனவொப்பனகாண்டியான்மின்னே.

[மின்னல்போலும் சாயலையுடைய பெண்ணே! சோலையின் மரவரிசை களின் பெரு நிழலில், செல்லும் ஒரு பெண்ணின் கூந்தலில் விள ங்குகின்ற நல்ல வாசனையை உடைய பூக்கள், ஆகாயம் முழு மையும் பரவியுள்ள கருத்த மேகத்தினிடத்தே நட்சத்தி ரங்கள் பரவி யிருப்பதுபோல் இருப்பதைப் பார் என்றான் என்பதாம்.]

இ-ள். மின்னே - மின்னல்போலும் சாயலையுடைய பெண்ணே! கான்- சோலையினது, நிரைப்பெரு நீழலில் - மரவரிசையில் உள்ள பெரிய நிழலில், வரும் ஒரு கன்னி - வருகின்ற ஒரு பெண்ணின், தேன் இரைத்த - வண்டு கள் ஒலிக்கின்ற, மென் சிகழிகை - மிருதுவான கொண்டையிலே, நறுமலர் தெரிவ - மணங்கொண்ட மலர்கள் விளங்குதலானது, வான் நிரைத்த - ஆகாய மெல்லாம் பரவிக்கொண்டிருக்கிற, தண் கருமுகில் இடை இடை - குளிர்ந்த கறுத்த மேகங்களில் மத்தியில் மத்தியில், வயங்கி - விளங்கிக்கொண்டு, மீன்- நட்சத்திரங்கள், நிரைத்தன ஒப்பன - பரவிய தன்மையை ஒத்திருப்பதை, காண்டியால் - காண்பாயாக. எ-று. 'இறைத்தல்' - சப்தித்தல்; 'சிகழிகை'- மயிர்முடி; 'ஆல்' அசை. (உஎஎ)

பணைமலர்த்தடமூழ்குவாளுசியிற்பகைகால்
மணமறிந்திடவைத்தவிந்தீவரமலர்தா
னிணைவிழிக்குமுன்றோற்றிணக்குதற்கிசைந்தயலோர்
துணைபிடித்திதஞ்சொல்வதுபோல்வதுநோகாய்.

[தோகைபோலும் சாயலை உடைய பெண்ணே! குளத்திலே மூழ்கு
கின்றவள் எப்போதும் வாசனை அறிய வைத்திருக்கின்ற
நீலோற்பல மானதுதான் கண்களுக்கு ஒப்பாகாமை
யினால் தோன்றும் சமாதானம் செய்துகொள்ள
விரும்பி ஒருவரைத் துணையாகக்கொண்டு
இதம் சொல்வதுபோல் இருக்கிறது
என்றான் என்பதாம்.]

இ-ள். தோகாய் - தோகை மயில்போலும் சாயலை உடைய பெண்ணே!, பணை - பெருமைபொருந்திய, மலர்த்தடம் - பூக்கள் நிறைந்துள்ள குளத்திலே, மூழ்குவாள் - மூழுகுகின்றவள், நாசியில் - தன் மூக்கிலே, பலகால் - எப்போதும், மணமறிந்திட - வாசனை அறிந்துகொள்ளுதற் பொருட்டு, வைத்த- வைத்திருக்கின்ற, இந்தீவாமலர் - நீலோற்பல மலரானது, தான் - தான், இணைவிழிக்கு முன் - இரண்டு கண்களுக்கு முன்னே, தோற்று - (ஒப்பாகாமையினால்) தோல்வி அடைந்து, இணக்குதற்கு இசைந்து - பின்பு சமாதானம் செய்து கொள்ளுவதற்காக மனம் விரும்பி, அயல் ஓர் துணைபிடித்து- வேறாகிய (கையாகிய தாமரையாகிய) ஒருவரைத் துணையாகக்கொண்டு, இதன் சொல்வது போல்வது-நன்மை சொல்லுகிறவர்களை ஒத்து இருக்கிறது. எ-று.

'பணை' என்றதற்குப் 'பருத்த' பெரிய என்றும் பொருள் கொள்ளலாம். 'இந்தீவாம்' நீலோற்பலம். (உ௭அ)

அடலையுற்றவேல்விழியினாள்வாய்கண்டமாம்ப
லுடலினுட்பசந்துட்டுளைப்பட்டசைந்தொல்கி
மடலெடுத்திருமலரடிபூணலான்மயிலே
படர்தடங்குடைந்தேறுவாள்படும்படர்பாராய்.

[மயில்போன்ற சாயலை உடைய பெண்ணே! வேல்போலும் விழியை உடைய
ஒருத்தியின் வாயைக்கண்ட ஆம்பல் உடம்பு பசந்து, மனந்துளைபட்டு,
அசைந்து துவண்டு இதழ்களால் மலர்போன்ற பாதங்களை
வணங்குதலால் விசாலமான குளத்தில் முழுகி
ஏறுகின்றவள் படும் துன்பத்தைப்பாராய்
என்றான் என்பதாம்.]

இ-ள். மயிலே - மயில்போலும் சாயலை உடைய பெண்ணே! அடலை யுற்ற - வலிமையைக்கொண்ட, வேல்விழியினாள் - வேலாயுதம்போன்ற விழியை உடைய ஒருபெண்ணின், வாய்கண்ட ஆம்பல் - வாயைக்கண்ட செவ்வல்லி மலரானது, உடலினுள் பசந்து - தனது உடம்புக்குள்ளே பசுநிறத்தைக் கொண்டு, உள் துளைபட்டு - உள்ளே துவாரமுடையதாய், அசைந்து ஒல்கி- ஆடித்துவண்டு, மடலெடுத்து - தனது மலர்களின் இதழ்களைக்கொண்டு, இரு மலரடி பூணலால் - இரண்டு செந்தாமரைபோலும் பாதங்களை வணங்கலால்,

படர்தடம் குடைந்தேறுவாள் - விசாலமான குளத்திலே மூழ்கி ஏறுகின்றவள், படும்படர் பாராய் - படுகிற துன்பத்தை நீ பார்ப்பாயாக. எ-று.

"அடலையுற்ற" என்பதற்கு வெற்றியைக்கொண்ட என்றும் பொருள் கூறுவர்; 'வேல்விழியினள்' - வேல்போலும் விழியை உடைய ஒருத்தி என்பதாம். இது உவமைத்தொகை; உடல் பசத்தல், உள்ளம் துளைபடல், ஒல்கல் முதலியன தான் வாய்க்கு ஒவ்வாமைபற்றி நாணத்தால் உண்டாயது; மலரடிகளில் மடலெடுத்துப் பூணல் உயர்ந்தோர்க்குத் தாழ்ந்தோர் செய்யவேண்டிய வணக்கப்படி அவள் பாதங்களை ஆம்பல் வணங்கிற்று என்பதாம்; 'படும்படர் என்றது மலர் மிகுதியைக் கடந்துவர முடியாமையால் உண்டாகும் பாத வருத்தத்தை. (உஎகூ)

நறுமலர்க்குழலாயொருநன் னுதலோடுந்
துறுமலர்த்தடமாடுதன்றோன் றலையொருத்தி
முறுவலாலிதழதுக்கியேமுனைவிழிசிவக்கக்
கருவிநோக்கியநோக்கமுநோக்குநீகாணாய்.

[வாசனை பொருந்திய மலர்களைச்சூடிய கூந்தலை உடைய பெண்ணே!
வேறு ஒரு பெண்ணோடும் தன் நாயகன் மலர்க்குளத்தில் நீராடு
வதைக்கண்ட ஒருத்தி பல்லால் உதட்டைக் கடித்துக்கொ
ண்டு கண்சிவக்கக் கோபத்தோடு பார்க்கிற பார்வை
யும் அதற்கு அவன் பார்க்கிற பார்வையை
யும் நீ பார்ப்பாயாக என்றான்
என்பதாம்.]

இ-ள். நறு - வாசனைபொருந்திய, மலர்க்குழலாய் - பூவை அணிந்துள்ள கூந்தலை உடைய பெண்ணே! ஒரு நல்நுதலோடும் - ஒரு நல்ல நெற்றியையுடைய (வேறு) பெண்ணோடும், துறு - நெருங்கிய, மலர்த்தடம் - புஷ்பங்கள் நிறைந்த குளத்திலே, ஆடும் நீராடுகின்ற, தன் தோன்றலை - தன் நாயகனை, ஒருத்தி - ஒரு பெண்ணானவள் (கண்டு) முறுவலால் - பற்களினால், இதழ் அதுக்கியே - உதடுகளைக் கடித்து, முனைவிழி - கூரிய கண்கள், சிவக்க-சிவந்துபோக, கருவி நோக்கிய நோக்கமும் - மனதிலே கோபம் கொண்டு அவள் பார்க்கிற பார்வையையும், நோக்கும் - அதற்கு அவன் பார்க்கிற கண் பார்வையையும், நீ காணாய் - நீ காண்பாயாக. எ-று.

முறுவலால் இதழ் அதுக்கி, முனைவிழி சிவக்கக் கருவி நோக்கல் தன் நாயகன் அயலாளோடு கூடி நீராடுதல் பற்றி வந்த வெகுளியாலாம். "நன்னுதல்" அன்மொழித்தொகை; நல்ல நெற்றியை உடைய பெண் என்பது பொருள். (உ அ0)

இன்னதன்மையயாவையுங்கண்டுகண்டேகி
மின்னுமன்னனுங்கலவியும்புலவியும்விளைத்து
நன்னெடும்பணைகடந்தருஞ்சுரத்திடைநண்ணி
வன்னமாமுலைவராவிகோட்டத்தில்வந்தார்.

[இந்தவிதமான வேடிக்கைகள் எல்லாம் பார்த்துக்கொண்டே சென்று
மருத நிலங்களைக்கடந்து பாலை நிலத்துக்கு வந்து அங்குள்ள
காளி கோவிலுக்கு இருவரும் வந்தார்கள்
என்பதாம்.]

இ-ள். இன்ன - இப்படிப்பட்ட, தன்மைய யாவையும் - வேடிக்கைகள் எல்லாவற்றையும், கண்டு கண்டு ஏகி - பார்த்துக்கொண்டே பார்த்துக்கொண்டேபோய், மின்னும் மன்னனும் - மின்னல்போலும் சாயலையுடைய சந்திரவதியும் அரிச்சந்திர மகாராஜனும், கலவியும் புலவியும் விளைத்து - கூடலும் ஊடலும் செய்துகொண்டே, நல்நெடும்பணை கடந்து - அந்த நல்லதான பெரிய மருதநிலத்தை நீங்கிச்சென்று, அருஞ்சுரத்திடை நண்ணி - அரியதாகிய பாலை நிலத்துக்கு வந்து, வுன்னமாமுலை - அழகிய பெரிய முலையை உடைய, வைரவி கோட்டத்தில் வந்தார் - காளியினுடைய கோயிலுக்குள்ளே இருவரும் வந்தார்கள். எ-று. 'கண்டு கண்டு' இது மிகுதியால் அடுக்கி வந்தது. (உஅக)

யோகினிக்கணஞ்சூழ்ந்திடக்கொடுஞ்சுரத்துறையு
மோகினிப்பெருமாடிருமுன்றிலிற்றொழுது
பாகினிற்சிறந்திரதித்தமொழியொடுபனிமந்
தாகினித்துறையணைந்ததிற்படிந்தயலகன்றார்.

[யோகினிக்கூட்டம் சூழப் பாலைவனத்தில் கோயில் கொண்டிருக்கும்
காளிகாதேவியின் திருமுற்றத்திலிருந்து அவளை வணங்கிவிட்டு
கங்காநதிக் கரைக்குச்சென்று அங்கே நீராடி அதைக்கடந்து
அப்பாற் போனார் என்பதாம்.]

இ-ள். யோகினிக்கணம் சூழ்ந்திட-யோகினிக்கூட்டங்கள் சூழ, கொடும்-கொடுமையான, சுரத்து உறையும் - பாலைவனத்தில் வாசம் செய்கின்ற, மோகினிப்பெருமாள் - மோகினித் தலைவியாகிய காளிகாதேவியின், திருமுன்றிலில் தொழுது - திருமுற்றத்திலே நின்றுஅவளை வணங்கிக்கொண்டு, பாகினில்-சர்க்கரைப்பாகிலும், சிறந்து - சிறப்புள்ளதாகி, இரதித்த - தித்திக்கின்ற, மொழியொடு - வசனத்தை உடைய சந்திரவதியோடு, பனி - குளிர்ந்த, மந்தாகினி - கங்காநதியின், துறை யணைந்து - துறைக்கு வந்து, அதில் படிந்து-அதிலேநீராடி, அயல் அகன்றார் - அப்பாற் போனார்கள். எ-று. "கொடும் சுரம்" 'கொடும்' - வெவ்விய, 'முன்றில்' கோயிலின் முன்பக்கம் 'மந்தாகினி' கங்கை நதி. (உஅஉ)

வேரலோங்கியமலைகளும்வனங்களும்விடுத்துச்
சூரலோங்கியவருவியுந்துருத்தியுங்கடந்து
சாரலோங்கியசக்கரப்பொருப்பையுந்தள்ளி
யாரலோங்கியவயோத்திமாநகரியையணைந்தார்.

[மலைகளையும் காடுகளையும் கடந்து, மலையாறுகளையும் அற்றிடைக் குறைகளையும் தாண்டி, சக்கரவாள கிரியையும் தாண்டி மதில்கள் உயர்ந்துள்ள அயோத்திமாநகரம் வந்துற்றார்கள் என்பதாம்.]

இ-ள். வேரல் - மூங்கில்கள், ஓங்கிய - வளர்ந்துள்ள, மலைகளும் - மலைகளும், வனங்களும் - காடுகளும், விடுத்து - நீங்கி, சூரல் - பிரம்புக்காடுகள், ஓங்கிய - வளர்ந்துள்ள, அருவியும் - மலை ஆறுகளையும், துருத்தியும் - அற்றிடைக் குறைகளையும், கடந்து - தாண்டி, சாரல் ஓங்கிய - பக்கங்கள் உயர்ந்துள்ள, சக்கரப்பொருப்பையும் தள்ளி - சக்கரவாளகிரியையும் கடந்து, ஆரல் ஓங்கிய - மதில்கள் உயர்ந்துள்ள, அயோத்திமாநகரியை அணைந்தார் - அயோத்தியாபுரியைச் சேர்ந்தார்கள். எ-று. (உஅங)

வாரணத்தொலியெழுமணிவாயிலிற்புகுந்து
தோரணத்தெருக்கடந்துசோபனம்பலர்சொல்ல
வாரணத்தொலியாதிகண்மழையெனவார்க்கப்
பூரணக்குடஞ்சுமந்தபொற்கோயிலிற்புகுந்தார்.

[யானைகளின் தொனி மிகுந்த அழகிய கோட்டைவாயிலுக்குள் நுழைந்து போய், தோரணங்கட்டிய தெருக்களையும் கடந்து பலர் மங்கல வாழ்த்துப் பாடவும், வேதஒலி முதலிய ஒலிகள் மேகங்கள்போல் முழங்கவும் நிறை நீர்க்கும் தாங்கியுள்ள அரண்மனைக் குள்ளே போயினர் என்பதாம்.]

இ-ள். வாரணத்து ஒலி - யானைகளினுடைய தொனி, எழும் - எழுகின்ற, அணி - அழகிய, வாயிலில் புகுந்து - கோட்டை வாயிலுக்குள்ளே நுழைந்துபோய், தோரணத்தெரு - தோரணங்கள் கட்டியிருக்கின்ற வீதிகளையும், கடந்து - கடந்து, சோபனம் பலர் சொல்ல - மங்கல வாழ்த்துகள் அநேகர் பாட, ஆரணத்து ஒலி - வேத ஓசைகள், ஆதிகள் - முதலாகிய ஓசைகள், மழை என - மேகங்கள்போல், ஆர்க்க - முழங்க, பூரணக்குடம் சுமந்த-பூரணக் குடங்கள் சுமந்துள்ள, பொற்கோயில் - சுவர்ணமயமான அரண்மனைக்குள்ளே, புகுந்தார் - போனார்கள். எ-று.

"சோபனம் பலர் சொல்ல" மங்களங்கள் பல பெண்கள் பாட, என்றும் கொள்ளலாம். "பூரணக்குடஞ் சுமந்த பொற்கோயிலில்" நிறைந்த நீர்க்குடத்தைத் தாங்கி யிருப்பதுபோல் சிகரத்தைத் தாங்கி யிருக்கிற பொன்னாற்செய்த அரண்மனை, என்றும். நிறை நீர்க்குடங்களை மங்களகரமாகப் பெண்கள் தாங்கியுள்ள வாயிலையுடையதும் சிகரத்தையுடையதும் பொன்னாற் செய்ததுமான மாளிகை என்றும் கூறலாம். (உஅச)

முளைத்தவெற்பனகோயிலின்முதிர்மலரணைமே
லிளைத்தநுண்ணிடையிரதியுங்காமனுமெனத்தாம்

விளைத்தநல்லின்பவெள்ளத்துவேந்தனுமயிலுந்
திளைத்திளைத்தருள்பொழிந்திடக்கழிந்தனசிலநாள்.

[தானே தோன்றி மலைபோன்ற அரண்மனையில் மலர் அணைமேலே ரதியும் மன்மதனும்போல அரிச்சந்திரனும் சந்திரவதியும் இன்பவெள்ளத்திற் கூடி முழுகித் தமக்குள் அருள்பெருக இந்த விதமாகச் சிலநாள் கழிந்தது என்பதாம்.]

இ-ள். முளைத்த வெற்பன - தானே தோன்றின மலைபோன்ற, கோயில் - அந்த அரண்மனையிலே, முதிர் அலர் அணைமேல் - அதிகமாகப் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட மெத்தைமேலே, இளைத்த நுண்ணிடை இரதியும்- சிறிய இடையை உடைய இரதிதேவியும், காமனும் என - மன்மதனும்போல, தாம் விளைத்த - தாங்கள் செய்துகொண்ட, நல் இன்ப வெள்ளத்து - நல்ல சுகக்கடலிலே, வேந்தனும் மயிலும் - அரிச்சந்திரமகாராஜனும் மயில்போலும் சாயலை உடைய சந்திரவதியும், திளைத்து இளைத்து - கூடிமெலிந்து, அருள் பொழிந்திட - ஒருவருக்கொருவர் தயவு பெருகி வளர, கழிந்தன சிலநாள்- இந்தவிதமாகச் சில நாள்கள் சென்றன. எ-று.

"திளைத்திளைத்து" என்றது "திளைத்து - திளைத்து" எனப் பிரித்துக், 'கூடிக் கூடி' என்று பொருள் கூறுவர். திளைத்து திளைத்து - 'திளைத்துத் திளைத்து' என்றிருக்க வேண்டியது திளைத்திளைத்து என்றாயது செய்யுள் விகாரம் என்பர்; 'இளைத்தல்' என்றது சுரதந்தனில் இளைத்தல். (உஅ௫)

கலி விருத்தம்.

தருவையொத்தகரத்தரிச்சந்திர
னரிவையைப்பிரியாமலணைந்தநாள்
மருவையுற்றமலர்க்குழல்வல்லிதன்
திருவயிற்றிற்கருப்பந்திகழ்ந்தவே.

[அரிச்சந்திரமகாராஜனும் சந்திரவதியும் பிரியாமல் கூடிவரும் காலத்தில் சந்திரவதியின் அழகிய வயிற்றில் கருப்பம் உண்டாயிற்று என்பதாம்.]

இ-ள். தருவை ஒத்த - கற்பகத்தருவுக்கு ஒப்பான, கரத்து - கையை உடைய, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜன், அரிவையை-சந்திரவதியை, பிரியாமல் அணைந்தநாள் - பிரியாமல் கூடி வருகிற காலத்திலே, மருவை யுற்ற - மணத்தைக்கொண்ட, மலர்குழல் வல்லிதன்-புஷ்பங்களைச்சூடிய கூந்தலையுடைய வல்லிபோன்ற சந்திரவதியின், திருவயிற்றில் - அழகிய வயிற்றிலே, கருப்பந்திகழ்ந்தவே - கருப்பம் உண்டாயிற்று. எ-று. ஏ - ஈற்றசை.

செயிரறப்புனறேக்கிடக்காமத்தண்
பயிர்முளைத்தெழும்பான்மையிதாமென

வுயிர்நலக்கொடியொண்ணுதல்வண்ணமெய்ம்
மயிர்பொடிப்புற்றரும்பிமலர்ந்தவே.

[குற்றம் நீங்க நீரை நிறப்புதலினாலே, காமம் என்னும் குளிர்ந்த பயிரானது, முளைத்து எழும் தன்மை இப்படித்தான் இருக்கும் என்னும்படி அரிச்சந்திரன் உயிர்போன்ற சந்திரவதியின் அழகிய உடம்பில், உரோமஞ் சிலிர்த்து, புளகாங்கிதம் தோன்றி மலர்ந்தது என்பதாம்.]

இ-ள். செயிர் அற - குற்றம் நீங்க, புனல் தேக்கிட - நீரை நிரப்புதலினாலே, காமத்தண்பயிர் - காமம் என்கின்ற குளிர்ந்த பயிரானது, முளைத்து எழும் - முளைத்து எழுவதான, பான்மையிதாம் என - தன்மை இப்படித்தான் இருக்கும் என்னும்படி, உயிர் நலக்கொடி - அரிச்சந்திரனுக்கு உயிர்போலும் நலத்தையுடைய பூங்கொடிபோலும், ஒண்ணுதல் - அழகிய நெற்றியை உடைய சந்திரவதியின், வண்ணமெய் - அழகிய உடம்பில், மயிர்பொடிப்புற்று - உரோமஞ் சிலிர்த்து, அரும்பி மலர்ந்தவே - புளகாங்கிதம் தோன்றி மலர்ந்தன. எ-று.

கருப்பங்கொண்டார் குறிகள் கூறத்தொடங்கி இதில் சில கூறினர். ()

நிலைமயிர்க்கண்குருக்கொண்டுநீள்கருங்
கொலைமதர்க்கண்குழிந்துகுளிர்முகங்
கலைநிலாவின்விளர்த்துக்கதிர்மணி
முலைமுகங்கள்கறுப்புமுதிர்ந்தவே.

[மயிரின் இடமெல்லாம் புளகித்தலாகி, கண்கள் குழிந்து முகமானது சந்திரனைப்போல வெள்ளையாகி முலைக்காம்புகள் மிகவும் கறுத்தது என்பதாம்.]

இ-ள். நிலை - உடம்பில் நிலைத்துள்ள, மயிர்க்கண் - மயிர்களின் இடமெல்லாம், குருக்கொண்டு - புளகிக்கப்பெற்று, நீள்கரும் - நீண்ட கறுத்த, கொலைமாதர் கண் குழிந்து - கொலைத்தொழிலைக்கொண்ட மதர்த்த கண்கள் குழிந்து பள்ளமாய், குளிர்முகம் - குளிர்ந்த முகமானது, கலைநிலாவின் விளர்த்து - கலைகளையுடைய சந்திரனைப்போல வெண்மையாகி, கதிர்மணி முலைமுகம் - ஒளிபொருந்திய நீலரத்நம்போன்ற முலைக்காம்புகளும், கறுப்பு முதிர்ந்தவே - கறுப்பு மிகுவதாயிற்று. எ-று. இதனாலும் கருப்பக்குறி கூறினர். ()

தொடைமலர்க்குழல்சோர்ந்துசெழுந்துகி
லுடைநெகிழ்ந்துபையப்பையவொல்கியே
நடைபெயர்ந்துநரம்புபசுத்தவா
விடையுண்டென்றறிபப்பட்டதியார்க்குமே.

[கூந்தல் சோர்ந்தது, வஸ்திரம் உடுத்துதல் குலேந்தது, நடை துவண்டது, நாம்பு பசத்தது, இடையும் தோன்றிற்று என்பதாம்.]

இ-ள். தொடை மலர்க்குழல் - தொடுக்கப்பட்ட புஷ்பங்களை அணிந்த கூந்தல், சோர்ந்து - சோர்தலாகி, செழும் - செழுமையான, துகில் - வஸ்திரமும், உடை நெகிழ்ந்து-உடுத்துதல் குலேந்து, பையப்பைய வொல்கியே-மெள்ள மெள்ளத் துவண்டு, நடைபெயர்ந்து - நடை நடந்து, நாம்பு பசத்தலால் - நாம்புகள் பச்சை நிறமாயின, யார்க்குமே - அப்பொழுது எல்லார்க்குமே, இடை உண்டு என்று - இடுப்பும் ஒன்று இருக்கிறதென்று, அறியப்பட்டது - தெரிய வந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

'ஒல்கியே' என்றதில் ஏகாரம் எண்ணுப்பொருள். 'பசுத்தலால்' என்றதில் உள்ள 'ஆல்', அசை; இடையுண்டென்பது இப்பொழுதுதான் தோன்றிற்று இதற்குமுன் ஐயத்தில் இருந்தது; 'தொடை' தொடுக்கப்பட்டது'' தொடுத்தல் - சேர்த்தல் இணைத்தல்; இதனுலும் கருப்பக்குறி கூறினர்.(உஅகூ)

பாங்கிமாரிருபக்கமுநின்றுகை
தாங்கிமுன்செலத்தானடந்தொல்கியே
வாங்குதிங்கணிறைந்தபின்பாயிழை
தீங்கிலாமற்சிறுவனைப்பெற்றனள்.

[பாங்கிமார்கள் பக்கத்திலிருந்து கையைத்தாங்கி முன்னுலே போக தானும் பின் நடந்து இந்தவிதமாகப் பத்துமாதமும் கடந்து சந்திரமதி கெடுதல் ஒன்றும் இல்லாமல் புத்திரனைப் பெற்ருள் என்பதாம்.]

இ-ள். பாங்கிமார் - தோழிமார்கள், இருபக்கமும் நின்று - இருபுறத்திலும் நின்று, கைதாங்கி - கைகளைத் தாங்கிக்கொண்டு, முன்செல - முன்னே போக, தான் நடந்து - பின்பு தானும் நடந்து, ஒல்கியே - துவண்டு, ஆங்கு திங்கள் நிறைந்த பின்பு - அப்படிப் பத்துமாதமும் நிறைந்த பிற்பாடு, ஆயிழை - ஆராய்ந்து எடுக்கப்பட்ட கல்லாபரணங்களையுடை சந்திரமதி, தீங்கு இல்லாமல் - யாதொரு கெடுதலும் இல்லாமல், சிறுவனைப்பெற்றனள் - புத்திரனைப்பெற்ருள். எ-று.

'பாங்கிமார்' பாங்கு பார்ப்பவர், பாங்கிமார். (பாங்கு பார்த்தல் - சிறப்புச் செய்தல்) இனி எப்பொழுதும் பக்கத்தே இருப்பவர் என்றும் பொருள் செய்வர். 'தீங்கிலாமல்' என்றது பெற்ற தாய்க்கும், தந்தைக்கும் குழந்தைக்கும் நாட்டிற்கும் எவர்க்கும் தீங்கில்லாதபடி என்று பொருளாம். (உகூ0)

பிள்ளைவந்துபிறந்தனனென்றலும்
வள்ளலுள்ளமகிழ்ந்திரவோர்க்கெலா
மள்ளிநீரறைபைத்திறந்தேழுநாள்
கொள்ளைகொண்மினெனக்கொடுத்தானரோ.

[பிள்ளை பிறந்தான் என்று கேட்டவுடனே மனதிற் சந்தோஷங்கொண்டு நீங்கள் பொக்கிஷ அறையைத்திறந்து ஏழுநாள்வரையும் பொருள்களை அள்ளிக் கொள்ளை கொள்ளுங்கள் என்று யாசகர்களுக்கு உத்தரவு கொடுத்தான் என்பதாம்.]

இ-ள். பிள்ளை வந்து பிறந்தனன் என்றலும் - பிள்ளையானவன் வந்து பிறந்தான் என்று (தோழியர்கள்) கூறின உடனே, வள்ளல் - கொடையாளியாகிய அரிச்சந்திரமகாராஜன், உள்ளம் மகிழ்ந்து - மனத்திலே மகிழ்ச்சி கொண்டு, இரவோர்க்கு எலாம் - யாசகர்களுக்கெல்லாம், நீர் அறையைத் திறந்து - நீங்கள் பொக்கிஷ அறையைத்திறந்து, ஏழுநாள் - ஏழுநாளளவும், அள்ளி கொள்ளை கொண்மின் - பொருள்களை அள்ளிக் கொள்ளைகொள்ளுங்கள், எனக்கொடுத்தான் - என்று உத்தரவு கொடுத்தான். எ-று. அரோ-அசை. அரிச்சந்திரன் இடை ஏழு வள்ளல்களில் ஒருவனாதலின் 'வள்ளல்' என்றார்.

முதல் ஏழு வள்ளல் ஆவார்:—குமுணன்; சகரன்: செம்பியன்; துந்துமாரி, நளன், நிருதி, இடை ஏழு வள்ளல்—களவார் அக்ரூரன், அந்திமான், அரிச்சந்திரன், கன்னன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன், கடை ஏழுவள்ளல்:—எழிலி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன், மலையன். (உகக)

மதலைவந்துபிறந்தமகிழ்ச்சியாற்
றிதலையல்குனல்லார்தெருவெங்கணும்
பதலைதோறும்பனிநீர்புழுகுநெய்
குதலைமாதர்கொணர்ந்துசொரிந்தனர்.

[மதலை பிறந்த சந்தோஷத்தால், பெண்கள் இருக்கிற தெருக்களிலெல்லாம் பானைகளில், பனிநீரும், புழுகும் வாசநெய்யும் மழலைச்சொற்களை உடைய பெண்கள் கொண்டுவந்து கொட்டினார்கள் என்பதாம்.]

இ-ள். மதலை - பிள்ளை, வந்து பிறந்த மகிழ்ச்சியால் - தனக்கு உண்டாகிப்பிறந்த சந்தோஷத்தினால், திதலை அல்குல் - தேமல் படர்ந்த அல்குலை உடைய, நல்லார் - பெண்கள் இருக்கிற, தெரு எங்கணும் - தெரு எல்லாம், பதலைதோறும் - பானைகளில் எல்லாம், பனிநீர் - பனீரும், புழுகு - புழுகும், நெய் - வாசநெய்யும், குதலைமாதர் - மழலைச்சொற்களை உடைய பெண்கள், கொணர்ந்து - கொண்டு வந்து, சொரிந்தனர் - கொட்டினார்கள். எ-று.

'மதலை' - பிள்ளை, ஒரு குடும்பத்தைத் தாதைக்குப்பின் தூண்போல் நின்று தாங்கவேண்டியவன் ஆதலின் "தூண்" என்னும் பொருளுடைய 'மதலை' என்னும் சொல் பிள்ளைக்கு ஏற்பட்டது. 'நல்லார்' பெண்கள்; 'பதலை' - தாழி. "குதலை" மழலைச்சொல்; பிள்ளை பிறந்த சந்தோஷத்தால் இது செய்தார் என்பதாம். (உகஉ)

தொட்டிதாழிடோணிகடாரங்கண்
மட்டிலாதமறுகுதொறுமிரீஇ

விட்டமஞ்சனம் வீதியெலாங் கடை
கட்டி வைத்தபின் கன்னியர் கூடினார்

[மாத்தொட்டிகளிலும், பெரும்பானைகளிலும், தோணிபோன்ற கடாரங்களி
லும் அளவில்லாத வீதிகளில் எல்லாம். திருமஞ்சன நீர்கட்டி
அமைத்து வைத்த பின்பு மஞ்சள் நீராடப் பெண்கள்
கூடினார்கள் என்பதாம்.]

இ-ள். தொட்டி - மாத்தொட்டிகளிலும், தாழிகள் - பெரும்பானைகளி லும், தோணி கடாரங்கள் - தோணிபோலிருக்கும் கடாரப் பாத்திரங்களிலும், மட்டிலாத மறுகுதோறும் - அளவில்லாத வீதிகளிலெல்லாம், இரீஇ-வைத்து. விட்ட மஞ்சனம் - ஊற்றின திருமஞ்சன நீர், வீதி எலாம் கடைகட்டி வைத்த பின் - அந்த வீதிகளில் எல்லாம், நிரம்ப எந்த இடங்களும் அமைத்துக் கொண்ட பின்பு, கன்னியர் கூடினார் - மஞ்சள் நீராடப் பெண்கள் கூடி னார்கள். எ-று.

'இரீஇ' சொல்லிசை அளபெடை; மஞ்சனம் - நீர். (உகங)

இளகிலா திடைச்சேலையி றுக்கிமென்
புளகக்கொங்கையிற்கச்சுறப்பூட்டியே
யளகம்பின்னியணிகளணிந்துமாப்
பிளவுதோன்றுகட்பேதையர்தோன்றினார்.

[சேலை இளகாதபடி இறுக்கிக்கட்டிக்கொண்டு புளகக்கொங்கையில்
இரவிக்கை யிட்டுக்கொண்டு தலையைப் பின்னிக்கொண்டு
ஆபாணங்கள் பூண்டுக்கொண்டு மாவடு பிளந்ததை
யொத்த பெண்கள் தோன்றினர் என்பதாம்]

இ-ள். இளகிலாது - தளராதபடிக்கு, இடை - இடுப்பில், சேலையிறுக்கி- சேலைகளை இறுகக் கட்டிக்கொண்டு, மென் - மெதுவான, புளகக்கொங்கையில்- புளகரும்பிய கொங்கைகளிலே, கச்சு - இரவிக்கைகளை, உறப்பூட்டியே - நெரு ங்க அணிந்துகொண்டு, அளகம்பின்னி - கூந்தலைப் பின்னிக்கொண்டு, அணி கள் அணிந்து - ஆபாணங்களையும் அணிந்துகொண்டு, மா - மாவடுவினுடைய, பிளவு தோன்று - பிளவுபோலும் தோன்றுகின்ற, கண்பேதையர் - கண்களை யுடைய பெண்கள், தோன்றினார் - நீராடப் புறப்பட்டார்கள். எ-று.

ஆபரணத்திற்கு 'அணி' என்றபேர் அணிந்துகொள்ளும் வினைக்குப் பொருளா யிருப்பதால் ஏற்பட்ட காரணப்பெயர்; கண்ணுக்கு 'மாவடு, மாவடு வின் பிளவும், உபமானமாகும். (உகச)

பொன்னின்வட்டிலும்பொன்னின்விசிறியுந்
துன்னுதங்கக்குழலுந்துருத்தியு
மின்னுநுண்ணிடைமெல்லியலார்கொடு
நின்னிலென்றெதிர்நீர்விளையாடினார்.

[நுண்ணிய இடையை உடைய பெண்கள், பொற்கிண்ணங்கள், பொன் துருத்திகள், தந்தக்குழாய்கள், தோல் துருத்திகள் முதலிய கொண்டு நில் நில் என்று சொல்லிக்கொண்டு ஒருவருக்கொருவர் எதிர் நின்று நீர் விளையாடினார்கள் என்பதாம்.]

இ-ள். மின்னும் - பிரகாசிக்கின்ற, நுண் - நுண்ணிதான, இடை-இடுப்பையுடைய, மெல்லியலார் - மெல்லிய தன்மையை உடைய பெண்கள், பொன்னின் வட்டிலும் - பொன்னாற்செய்த வட்டிலும், பொன்னின் விசிறியும்- பொன்னால் செய்த நீர் தூற்றுங்கருவியும், துன்னும் - நெருங்கிய, தந்தக்குழலும் - தந்தக்குழாய்களும், துருத்தியும் - தோல் துருத்திகளும், கொடு- கொண்டு, நில் நில் என்று - நில்லும் நில்லும் என்று, எதிர் நீர் விளையாடினர்- ஒருவருக்கொருவர் எதிர் நின்று நீர் விளையாடினர். எ-று.

'விசிறி' நீரைச்சிதறும் ஓர் விளையாட்டுக்கருவி, காற்று உண்டாக்கும் கருவி என்று ஈங்கு பொருள் பண்ணுவாருமுண்டு. (உகரு)

ஆழிசோரவணிவடஞ்சோர்ந்திடத்
தாழிநீர்மொண்டுதாமெறிந்தாடின
ரேழுமேகமுமொத்திடத்துப்பொழி
யூழிகாலத்துமாரியையொக்கவே.

[பெண்கள் தாமணிந்த மோதிரங்கள் சோரவும் முத்துமாலைகள் அற்று வீழவும், எழுமேகமும் ஊழிகாலத்துப் பெய்வதுபோல் தாழி நீரை ஒருவர்மேல் ஒருவர் ஊற்றி விளையாடினார்கள் என்பதாம்.]

இ-ள். ஆழிசோர - மோதிரங்கள் சோரவும், அணி - அணிந்திருக்கின்ற வடம் - முத்துமாலை, சோர்ந்திட - அற்றுவிழவும், எழுமேகமும் - எழுமேகங்களும், ஒத்து - ஒன்றுசேர்க்கூடி, இடத்துபொழி-(பூமியின்) இடத்தே பொழிகின்ற, ஊழிகாலத்து - உகாந்தக்காலத்து, மாரியை ஒக்கவே - மழையை ஒப்பாக, தாழிநீர் - பானைகளிலிருக்கிற மஞ்சள்நீரை, மொண்டு - மொண்டு, தாம் எறிந்து - தாங்களே ஒருவர்மேல் ஒருவர் ஊற்றிக்கொண்டு, ஆடினர் - விளையாடினர்கள். எ-று. ஏ - ஈற்றசை.

எழு மேகங்களாவன:—சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம், இவை பொழிவன முறையே மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ. (உகசு)

துடியிடக்கைவளைபணைதுந்துபி
திடிமென்பேரிகைசின்னநற்காளை
மிடியெனக்கிளர்ந்தார்த்திடவேழையர்
படியின்மின்பரந்தென்னப்பரவினர்.

[உடுக்கை, இடக்கை, சங்கு, நகாரு, துந்துமி, பேரிகை, சின்னம், எக்காளம் முதலிய வாத்தியங்கள் இடிபோல் முழங்கி ஒலிக்க மின்னல் பூமி யிலே பரவினதுபோல எங்கும் பெண்கள் பரவினார்கள், என்பதாம்.]

இ-ள். துடி - உடுக்கையும், இடக்கை - இடக்கையும், வளை - சங்கும், பணை - நகாராவும், துந்துபி - துந்துமியும், திடிம் என் - திடிமென்று ஓசை முழங்குகின்ற, பேரிகை - பேரிகையும், சின்னம் - சின்னமும், நல் காளம் - நல்ல எக்காளமும், இடி என - முதலிய வாத்தியங்கள் இடியைப்போல, கிளர்ந்து ஆர்த்திட - மிகுந்து சப்திக்க, படியில் - பூமியிலே, மின் - மின்ன லானது, பரந்தென்ன - பரவினதுபோல, ஏழையர் - பெண்கள், பரவினார் - பரவினார்கள். எ-று. வாத்தியங்கள் கடல்போல முழங்க பெண்கள் எங்கும் மின்னல்போல் பூமியில் பரவினார்கள் என்பதாம். 'திடிம்' ஒலிக்குறி. (உகஎ)

முருக்கின் வாய்ச்சியொருத்திமுகத்திலோர்
திருக்குழற்பெய்செழும்புனல்சிந்துத
லருக்கற்கென்றுமளித்திடுமர்க்கியஞ்
சாற்சசிக்குந்தருசெயல்போன்றதே.

[முருக்கமலர்போலும் வாயை உடைய ஒருத்திமுகத்தில் ஒருத்தி அழகிய பீச்சுக்குழலால் தண்ணீரைச் சிந்துதலானது சூரியனுக்கு எப்போ தும் கொடுக்கிற அர்க்கிய சலம் சாற்கால சந்திரனுக்கும் கொ டுக்கிற செய்கைபோல் இருந்தது என்பதாம்.]

இ-ள். முருக்கின் வாய்ச்சி ஒருத்தி - முருக்கம்பூவைப்போலும் வாயை உடைய ஒருத்தி, முகத்தில் - முகத்திலே, திருகுழல் - (மற்றொருபெண்) அழ கிய பீச்சுக்குழலினாலே, பெய் - சிந்துகின்ற, செழும்புனல் சிந்துதல் - செழு மையான நீரைச் சிந்துதலானது, அருக்கற்கு என்றும் அளித்திடும் அர்க்கியம் - சூரியனுக்கு எப்பொழுதும் கொடுத்திடும் அர்க்கியசலம், சாற்சசிக்கும் - சாற் கால சந்திரனுக்கும், தருசெயல் - கொடுக்கிற செய்கையை, போன்றதே - போன்றிருந்தது. எ-று. ஏ - ஈற்றசை. சாற்காலம் - மாரிகாலம். (உகஅ)

ஒருத்திகொங்கையிரண்டினிலொன்றன்மேற்
றுருத்திநீருதோகையர்வீசினர்
பெருத்தமந்தரவெற்பைப்பிணித்ததோர்
பருத்தவாசுகித்தாம்பிழுப்பாரென.

[பெரிய மந்தரமலையைக்கட்டின பெரிய பாம்பாகிய வாசுகி என்னும் கயிறை இழுப்பவர்கள்போல் ஒரு பெண்ணின் இரு கொங்கைகளில் ஒன்றின் மேல் இருபெண்கள் துருத்தி நீரை பீச்சினார்கள் என்பதாம்.]

இ-ள். பெருத்த - பெரிதான, மந்தரவெற்பை மந்தரமலையை, பிணித் தது ஓர் - கட்டியதோர், பருத்த - பெரிய, வாசுகித்தாம்பு - வாசுகியாகிய

யிறை, இழுப்பாரென - இழுப்பவர்களைப்போல, ஒருத்தி - ஒரு பெண்ணி னுடைய, கொங்கையிரண்டினில் - இரண்டு தனங்களில், ஒன்றன்மேல்-ஒரு தனத்தின் மேலே, துருத்தி நீர் - துருத்தியிலுள்ள ஜலத்தை, இருதோகையர் கள் பீச்சினார்கள். எ-று,

மந்தரமலையைத் திருப்பாற்கடல் கடைந்தகாலத்து மத்தாகக் கொண்டு வந்துபோட்டு வாசுகியைக் கயிறாக்கிக் கடைந்தனர். என்பது புராணகதை. ஈங்கு ஒரு முலைமேல் இரண்டு பெண்கள் நீரைப் பீச்சுதலானது முலையாகிய மந்தரமலையை நீராகிய வாசுகியால் கடைவதுபோல் இருக்கிறதென்று உவ மித்தார். (உகக)

நவ்விநோக்கிநளிர்முகத்தேயொரு
செவ்வியாள்சிந்திடுஞ்சிவிறிப்புன
லவ்வியத்துடனாழிவெண்டிங்களைக்
கவ்விமுன்னிமிர்கட்செவியொத்ததே.

[மான்போன்ற கண்ணையுடைய ஒரு பெண்ணின் முகத்தில் மற்றோர் அழகிய பெண் நீர் சிந்துகிற கருவியால் சிந்தின நீரானது கடலில் தோன்றிய சந்திரனை கேது முன்பற்றி கவ்வித் தோன்றுவது போல் இருந்தது என்பதாம்.]

இ-ள். நவ்விநோக்கி-மான்போலும் கண்ணை உடைய ஒரு பெண்ணின், நளிர்முகத்தே - பெருமை பொருந்திய முகத்திலே, ஒரு செவ்வியாள் - மற் றொரு அழகினையுடையவள், சிந்திடும் - வீசுகின்ற, சிவிறிப்புனல் - நீர் சிந்து கருவியினால் சிந்தின தண்ணீரானது, ஆழிவெண் திங்களை - சமுத்திரத்தில் உதித்த வெள்ளைச்சந்திரனை, அவ்வியத்துடன் - பொறாமையுடனே, கவ்வி- கவ்விக்கொண்டு, முன் நிமிர் - யாவருக்கும் முன்னாலே தோன்றுகின்ற, கட் செவி ஒத்தது - கேது என்னும் பாம்பை ஒத்திருந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

"நளிர்முகம்" குளிர்ந்த முகம் என்றும் பொருள் கொள்ளலாம்; "செவ் வியாள்" அழகை உடையவள்; (செவ்வி - அழகு) கண்ணையே காதாக உடை மையினால் பாம்புகளுக்குக் "கட்செவி" என்னும்பெயர் உண்டாயிற்று. 'ஆழி'- கடல் ஆழ முடையது என்னும் காரணம்பற்றி வந்தபெயர். சந்திரன் அமு தோடு திருப்பாற்கடலில் பிறந்தான் என்னும் புராண கதைப்பற்றி கடலில் தோன்றும் சந்திரன் என்றார்; தினமும் கீழ்க்கடலில் இருந்து எழுகின்ற சந்தி ரன் எனினும் ஆம்; (௩௦௦)

காருருக்கொள்கருங்குழல்கைக்குழ
னீரொருத்திநிதம்பத்திற்றூக்கலாற்
போருக்கென்றுபுறப்படும்புட்பகத்
தேருக்கிட்டதிரள்வடமொத்ததே.

[மேகத்தை ஒத்த கரிய கூந்தலை உடைய ஒருத்தி தன் கையிலுள்ள பீச்சுக் குழலினால் பீச்சிய நீர் மற்றொரு பெண்ணின் நிதம்பத்தில் படுதல் போருக்கெழுந்த புட்பகத்தேருக்கு முத்துமாலை யிட்டதுபோல் இருக்கிறது என்பதாம்.]

இ-ள். கார் - மேகத்தின், உருக்கொள் - நிறத்தைக்கொண்ட, கரும்-கருமையாகிய, குழல் - கூந்தலை உடைய ஒரு பெண்ணின், கைக்குழல்-கையிலே பிடித்திருக்கின்ற பீச்சாங்குழலின், நீர் - நீரானது, ஒருத்தி - மற்றொருத்தியின், நிதம்பத்திற்றாக்கலால் - அல்குலில் பீச்சப்படுகின்றதனால், போருக்கென்று புறப்படும் - சண்டைக்கு என்று வெளிப்படுகின்ற, புட்பகத்தேருக்கு, இட்ட - இட்ட, திரள்வடம் ஒத்தது - திரண்ட முத்துமாலையை ஒப்பாயிருந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

"திரள்வடம்" திரண் கயிறு என்று பொருள் செய்யலாகாதோ எனின் 'புட்பகத்தேர்' தெய்வீகத்தேர் ஆகாயத்தே பறக்கும் ஆற்றலுடையது ஆதலின் கயிறு வேண்டிற்றில்லை சண்டைத்தேருக்கு அலங்கரித்தல் மரபாதலின் "முத்துமாலை' எஃதே பொருள் கோடல் சாலச்சிறந்ததாகும். தேரை 'அல்குலுக்கு' ஒப்பிடுதல் உண்டாதலின் தேர் என்றார். (௩0௧)

புழுகுசந்தனப்பொன்னிறக்குங்கும
மொழுகுசெச்சையுதகமிமசலம்
வழுவில்பொற்சுண்ணநல்லெண்ணெய்மஞ்சணீர்
முழுதும்வல்லியர்மொண்டெறிந்தாடினர்.

[புழுகு, சந்தனம், குங்குமம், சந்தனநீர், குளிர்ந்தநீர், பொற்சுண்ணம், நல்லெண்ணெய், மஞ்சள்நீர் ஆகிய இவைகளை எல்லாம் பெண்கள் மொண்டு வீசி விளையாடினார்கள் என்பதாம்.]

இ-ள். புழுகு - புனுகும், சந்தனம் - சந்தனமும், பொன்னிற - பொன்னிறமாகிய, குங்குமம் - குங்குமமும், ஒழுகு - ஒழுகுவதாகிய, செச்சை-செஞ்சாந்தின் குழம்பின், உதகம் - நீரும், இமசலம் - குளிர்ந்த நீரும், வழுவில்-குற்றமற்ற, பொற்சுண்ணம் - பொன்னிறமான கந்தப்பொடியும், நல் எண்ணெய்-நல்லெண்ணெயும், மஞ்சள் நீர் - மஞ்சள் நீரும், முழுதும் - ஆகிய இவைகள் எல்லாம், வல்லியர் - வல்லிக்கொடிபோலும் அந்தப்பெண்கள், மொண்டு-முகந்து, எறிந்து - வீசி, ஆடினர் - விளையாடினார்கள். எ-று.

எள்ளிலிருந்து எடுக்கும் நெய் ஆதலின், 'எண்ணெய்' என்று பெயர் வந்தது. (என் - நெய்) இதனால் மாதர்களின் மகிழ்ச்சியும் விளையாட்டும் கூறினார்.

வம்புலாமுலைமாதர்க்குமைந்தர்க்குங்
கம்பமால்களிற்றோனுக்குங்கன்னிக்கு
மம்புராசியிலாரமுதுற்றநா
ளும்பர்கோனுற்றவோகைவந்துற்றதே.

[அயோத்திமாநகரத்திலுள்ள பெண்களுக்கும், புருஷர்களுக்கும், அரிச்சந்திர மகாராஜனுக்கும், சந்திரவதிக்கும், கடலில் அமிர்தம் எழுந்தநாளில் தேவர்களுக்கும், அவர்கள் அரசனுக்கும் உண்டான சந்தோஷம் போல் மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று என்பதாம்.]

இ-ள். வம்பு - வாசனை, உலாம் - உலவுகின்ற, முலை-தனங்களையுடைய, மாதர்க்கும் - பெண்களுக்கும், மைந்தர்க்கும் - புருஷர்களுக்கும், கம்பம்-அசைந்துகொண்டிருக்கும் தன்மையை உடைய, மால்களிற்றோனுக்கும் - பெரிய பட்டத்து யானையை உடைய அரிச்சந்திரனுக்கும், கன்னிக்கும் - சந்திரவதிக்கும், அம்புராசியில் - கடலிலே, ஆர் அமுது உற்றநாள் - அரிதான அமுதம் உண்டானபோது, உம்பர்கோன் - தேவர்களுக்கும் அவர்கள் அரசனுக்கும், உற்ற - உண்டான, ஓகை - சந்தோஷம்போல, வந்து உற்றது - சந்தோஷம் வந்து கூடியது. எ-று.

"வம்பு" இரவிக்கை என்றும் பொருள் கூறுவர்; கம்பம் - கம்பத்தில் கட்டும்படியான என்றும் பொருள் கூறினாரும் உண்டு, யானை எப்போதும் அசைந்து கொண்டிருக்கும் தன்மையுடையது இதுபற்றியே பிறரும் "தூங்குங் களிறோ துயர் உறூர்" என்றார். "அம்புராசி" கடல், தண்ணீர் மிக்குள காரணம்பற்றி வந்தபெயர். (அம்பு - ஜலம்,) 'உம்பர்கோன்' என்றதை உம்மைத் தொகையாகக் கொண்டு பொருள் செய்தாம். இதனை "உம்பர்கோன்" தேவேந்திரனுக்குச் சந்தோஷம் உண்டானதுபோல் அரிச்சந்திரமகாராஜனும் மற்றவரும் சந்தோஷம் கொண்டார்கள் என்றும் கொள்ளலாம். (௩௦௩)

மேலினோர்தம்விதரணமுந்தனிக்
கோலினோர்தங்குணமுங்குலமனு
நூலின்வந்தநுணங்கியகேள்வியும்
பாலினோடுகலந்துபருகினர்.

[அந்நகரத்தோர் மேன்மக்கள் புத்தியையும் நீதியுடையோர் குணத்தையும், மனுநூலின் நுண்ணிய கேள்வியும் தம் புத்தியோடு கலந்து உண்டு மகிழ்ந்தார் என்பதாம்.]

இ-ள். மேலினோர் தம் விதரணமும் - மேன்மக்களுக்குள்ள புத்தியும், தனி - நிகரில்லா, கோலினோர் தங்குணமும் - நீதியை உடையவர்களுக்குள்ள குணமும், குலமனுநூலில் - அந்தக் குலத்திலுள்ள மனுவாலே சொல்லிய நீதி நூலில், வந்து - வந்த, நுணங்கிய கேள்வியும் - அதிசூட்சமமான கேள்வியும், பாலினோடு வந்து பருகினர் - தங்கள் முறையுடனே கூட்டிக் குடித்தார்கள். எ-று.

மேலோரின் புத்தியையும், நீதியுடையோர் தம் குணத்தையும், மனுநூலில் வந்த சூட்சமமான கேள்விகளையும் தங்கள் புத்தியாகிய பாலுடனே கலந்து பருகினர்கள் என்பதாம். (௩௦௪)

ஆவலின்னரிச்சந்திரன்மைந்தனை
மூவரன்னமுனிவர்கள்வாழ்த்தியே
யாவருந்நிகரல்லவற்கேற்றிடத்
தேவதாசனெனப்பெயர்செப்பினர்.

[மும்மூர்த்திகளை ஒத்த முனிவர் அதிக பிரீதியோடு அரிச்சந்திர மகாராஜன் புத்திரனை வாழ்த்தி யாரும் நிகரில்லாத அந்தப் புத்திரனுக்குத் தகுதியாகும்படி தேவதாசன் என்று நாமகரணம் செய்தார்கள் என்பதாம்.]

இ-ள். மூவர் அன்ன முனிவர்கள் - மும்மூர்த்திகளை ஒப்பான முனிவர்கள், ஆவலின் - பிரியத்தினல், அரிச்சந்திரன் மைந்தனை - அரிச்சந்திரமகாராஜன் புத்திரனை, வாழ்த்தியே - ஆசீர்வதித்து, யாவரும் - எவரும், நிகர் அல்லவற்கு - ஒப்பில்லாத அந்தப்புத்திரனுக்கு, ஏற்றிட - பொருந்தும்படியாக, தேவதாசன் என - தேவதாசன் என்று, பெயர் செப்பினர் - நாமகரணம் செய்தார்கள். எ-று.

'வாழ்த்தியே' என்றதில் ஏகாரம் பிரிநிலைப் பொருளது. (௩0௫)

பொலன்கொள்காப்புப்புலியுகிர்த்தண்டைமுத்
தலங்கல்கிண்கிணியைம்படையாழிக
ளிலங்குபொன்னரைஞாணிவைசாத்தியே
துலங்குமாமணித்தொட்டிலிலேற்றினர்.

[பொற்காப்பு புலி நகத்தால் செய்த பதக்கமும், தண்டையும், முத்துமாலையும், கிண்கிணியும், பஞ்சாயுதம்போற் செய்த ஆபரணமும், மோதிரங்களும், பொன்னரை நாணும் ஆகிய இவைகளை அணிந்து இரத்நகசிதமான தொட்டிலில் புத்திரனை படுக்க வைத்தார்கள் என்பதாம்.]

இ-ள். பொலன்கொள் காப்பு - பொன்னல் செய்த காப்பும், புலியுகிர்-புலியின் நகத்தால் செய்த பதக்கமும், தண்டை - தண்டைக்காப்பும், முத்தலங்கல் - முத்துமாலையும், கிண்கிணி - கிண்கிணியும், ஐம்படை - பஞ்சாயுதப் பூணும், ஆழிகள் - மோதிரங்களும், இலங்கு - விளங்குகின்ற, பொன்னரை ஞாண் - பொன்னாற்செய்த அரைநாணும், இவை சாத்தியே - இவைகளையெல்லாம் அணிந்து, துலங்கு - விளங்குகின்ற மாமணித்தொட்டிலில்-பெரிய ரத்தினங்கள் இழைத்த தொட்டிலிலே, ஏற்றினர்-படுக்க வைத்தார்கள். எ-று.

'கிண்கிணி' பாதச்சதங்கை, ஒலிபற்றி வந்தபெயர்; 'ஐம்படை' காவற்கடவுளாகிய விஷ்ணுவின் பஞ்சாயுதங்கள் போல் பொன்னாலும் மணியாலும் அமைத்துச்செய்த ஆபரணம், இது அணியின் தீர்த்தேவதைகளால் குழந்தைக்கு நலிவுஉராதென்பது முன்னோர் அபிப்பிராயம். 'அரைநாண்' இடுப்பில் அணியும் கயிறு. அரை - இடுப்பு, நாண் - கயிறு; 'அரை' என்றது, எண்ண

லளவை ஆகுபெயராய் இடுப்பைக் குறித்தது; உடம்பின் சரிபாதி இடம் ஆதலின் 'பாதி' என்னும் பொருளையுடைய 'அரை' என்னும் சொல் உடம்பின் அரைப்பாகமாகிய இடத்துக்கு ஆயது. (௩0௬)

சூழுமாமணிதொட்டிலிமேலேற்றியே
தாழுநீள்குழற்றாதியர்போற்றயாண்
டேழுபுக்கனனிவ்வகைகாதலன்
வாழுநாளினில்வந்தவைகூறுவாம்.

[மணித்தொட்டிலிலே பிள்ளையைப் படுக்கவைத்து நீண்ட கூந்தலை யுடைய தோழிப்பெண்கள் வளர்க்க தேவதாசன் ஏழு வயதை அடைந்தான். பின்னர் இவர்களுக்கு வந்த இடை யூறு களைக் கூறுவோம் என்பதாம்.]

இ-ள். சூழுமாமணித் தொட்டிலில் - முற்றும் சுற்றிப் பெரிய ரத்தினங் கள் பதித்துள்ள, தொட்டிலின் மேலே, ஏற்றியே - படுக்கவைத்து, தாழும் நீள் குழல் - தாழ நீண்டு தொங்குவதாகிய கூந்தலை உடைய, தாதியர் போற்ற - தாதிமார்கள் வளர்க்க, ஆண்டு ஏழு புக்கனன் - தேவதாசன் ஏழுவயது பெற்ற னன். இவ்வகை - இந்தவிதமாக, காதலன் - பிள்ளையிடத்தும் மனைவியினிடத் தும் ஆர்வமுடையவனாகிய அரிச்சந்திரன், வாழுநாள் - சந்தோஷத்தோடு வாழ்ந்துகொண்டிருக்கும் நாளில், வந்தவை - இவர்களுக்கு வந்த செய்கை களைக், கூறுவாம் - இனிச்சொல்லுவோம். எ-று.

"சூழும்" ஒளி சூழும் என்றும் பொருளாம். 'மாமணி' பெரிய மணிகள், மாட்சிமைபெற்ற மணிகள் என்பதாம்; 'தாழ நீண்டு' தாழும்படி நீண்டு, தாழ்ந்து நீண்டுள்ள, மிக நீண்டுள்ள, என்பன பொருளாம். இதுபற்றியே "வார்சான்ற கூந்தல்" என்றார் பிறரும். (௩0௭)

விவாககாண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - ௩௧௧.

---

உ

திருச்சிற்றம்பலம்.

இ ர ண் டா வ து,

# இ ந் தி ர கா ண் ட ம்.

[இந்திரன் உலகமாகிய பொன்னுலகிலே நிகழ்ந்த விஷயங்களைக் கூறுகின்றமையினால் இது இந்திரகாண்டம் என்னும் பெயர் எய்தியது. காண்டம் - பெரும்பிரிவு.]

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

இம்மையம்மைமறுமையென்னவிசைத்துமாமறைகூறிய
மும்மையுந்தெளிவுற்றநெஞ்சினின்முக்குறும்புமறுத்திடுஞ்
செம்மையன்பர்மனத்துவைகியதெய்வநாயகர்தேவிமற்
றெம்மையாளுடையம்மைதாள்களிரண்டுமேத்தியிறைஞ்சுவாம்.

[இப்பிறப்பு, வரும்பிறப்பு, மோக்ஷம் என்ற மூன்றையும் தெளிந்த மனத்திலே மூன்று குற்றங்களும் அறுத்த சிறந்த அடியார்கள் மனத்திலே வசிக்கின்ற தெய்வநாயகர் தேவியாகிய எம்மை அடிமை கொண்ட அம்மையாரின் இரண்டு பாதங்களைத் துதித்து வணங்குவோம் என்பதாம்.]

இ-ள். இம்மை - இப்பிறப்பும், அம்மை - வரும்பிறப்பும், மறுமை - மரணத்திற்குப்பின் வரு நிலையும் - (மோக்ஷமும்), என்ன இசைத்து - என்பன உண்டென்று சம்மதித்து, மாமறை கூறிய - சிறந்த வேதங்கள் சொன்ன, மும்மையும் தெளிந்து - மூன்று நிலைகளையும் தெளிந்து, உற்ற நெஞ்சினில் - ஞானம்பொருந்திய மனதில், முக்குறும்பும் - மூன்றுவகைக் குற்றங்களையும், அறுத்திடும் - களைந்து நீக்குகின்ற, செம்மை அன்பர் - சிறந்த அடியார்களின், மனத்து வைகிய - மனத்திலே தங்குகின்ற, தெய்வநாயகர்தேவி - தெய்வநாயகராகிய சிவபெருமானின் தேவியும், மற்று எம்மை ஆளுடை அம்மை - எங்களை அடிமைகொள்ளும் அம்மையாகிய சிவசத்தியாரின், தாள்கள் இரண்டும் - பாதங்கள் இரண்டையும், ஏத்தி இறைஞ்சுவாம் - துதித்து வணங்கக் கடவோம். எ-று.

'இம்மை அம்மை மறுமை' என்பதற்கு இப்பிறப்பு முன்பிறப்பு வரும் பிறப்பு என்று பொருள் கூறுவாரும் உண்டு; 'மும்மையும்' என்றதில் உள்ள 'உம்மை' முற்றும்மை, 'முக்குறும்பும் - இதில் உள்ள உம்மையும் முற்றும்மை; முக்குறும்புகளாவன:—காமம், வெகுளி, மயக்கம், என்பனவாம்; "மற்று எம்மை ஆளுடையம்மை" என்பதிலுள்ள. 'மற்று' அசை; இதனால்

சிவசத்தியாரின் வணக்கம் சொல்லப்பட்டது. இவை பெரும்பாலும் மாச்சீர் விளச்சீர்களாகிய எழுசீர்கள் ஓரடிக்கு அமைந்த எழுசீராசிரிய விருத்தம். (க)

கொற்றவாசவன்முன்வசிட்டனுரைத்ததற்கெதிர்கோசிகன்
சொற்றவாறுமுடிக்கவன்மைதொடங்கிநாடுவிலங்கினாற்
செற்றவாறுமுருத்துவண்டிரிசங்குமைந்தனெழுந்துகா
னுற்றவாறுநிகழ்ந்தவாறுமுணர்ந்தவாறுவிளம்புவாம்.

[இந்திரனுக்கு முன்னே வசிஷ்டமுனிவர் கூறியதற்கு, கோசிகமுனிவர் மறுத்துக்கூறியதும், சொன்னபடி முடிப்பதற்குப் பலாத்காரமாகக் கோசலநாட்டை விலங்கினால் அழித்தவிதமும், விலங்குகள் மேல் கோபித்து திரிசங்கு புத்திரன் காட்டுக்குச் சென்றதும், அங்கு நடந்தவைகளையும் தெரிந்தமட்டில் சொல்லுகிறோம் என்பதாம்.]

இ-ள். கொற்ற - வெற்றிபொருந்திய, வாசவன் முன் - இந்திரனுக்கு முன்னே, வசிட்டன் உரைத்ததற்கு - வசிஷ்டமுனிவர் கூறியதற்கு, எதிர்- எதிராக, கோசிகன் சொற்றவாறும் - கௌசிகமுனிவர் சொல்லிய விதமும், முடிக்க வன்மை தொடங்கி - (தான் சொன்னபடியே) முடித்துக்காட்ட பலாத்காரமாகத் தொடங்கி, நாடு - கோசலநாட்டை, விலங்கினால் - மிருகங்களினால், செற்றவாறும் - அழித்தவிதமும், உருத்து - (மிருகங்களின்மேல்) கோபங்கொண்டு, வண்திரிசங்கு மைந்தன் - ஈகைத்தன்மையை உடைய திரிசங்கு புத்திரனாகிய அரிச்சந்திரமகாராஜன், எழுந்து - புறப்பட்டு, கான் உற்றவாறும்- காட்டுக்குப்போன தன்மையும், நிகழ்ந்தவாறும் - அங்கே நடந்த விஷயங்களும், உணர்ந்தவாறு - எமக்குத் தெரிந்த அளவு, விளம்புவாம் - சொல்லுகின்றோம். எ-று.

'விலங்கு' குறுக்கான யோனியை உடையது என்னும் பொருளால் வந்த பெயர். 'வாசவன்' - இந்திரன், வசுக்களுக்குத் தலைவன் ஆகையால் 'வாசவன்' என்னும் பெயர் வந்தது, (வசுக்கள் - தேவர்கள்.) (உ)

முண்டகத்திலுதித்தநாலுமுகத்தவன்றருகாசிபன்
கொண்டகாதலிபெற்றெடுத்தகுலக்குமாரன்வலத்தினாற்
பண்டமுன்றுவிலங்கலங்கையரிந்தவச்சிரபாணியோ
னண்டர்கோனரசாளுநீடமராவதித்திறமோதுவாம்.

[பிரம்மாவின் புத்திரராகிய காசிபருக்கு அவர் மனைவி அதிதி என்பவள் வயிற்றில் புத்திரனாகப்பிறந்து மலைகளின் சிறகை அறிந்த வச்சிரப் படையை உடைய தேவர்களுக்கரசான இந்திரன் அரசாளும் அமராவதியின் சிறப்பைச் சொல்வாம், என்பதாம்.]

இ-ள். முண்டகத்தில் - மகாவிஷ்ணுவின் திருவுந்தியில் தோன்றிய தாமரையில், உதித்த - பிறந்த, நாலுமுகத்தவன் - நான்கு முகங்களை உடைய

பிரமதேவன், தரு - பெற்ற, காசிபன் கொண்ட காதலி - காசிபமுனிவர் கொண்ட மனையாளான அதிதி என்பவள், பெற்று எடுத்த குலக்குமரன்- பெற்று வளர்த்து வந்த குலபுத்திரனாகிய, வலத்தினால் - தன் பலத்தினாலே, பண்டு அழன்று - முன்னாளிலே கோபங்கொண்டு, விலங்கல்-மலைகளினுடைய, அங்கை அரிந்த - அழகிய கைகளான சிறகுகளை அறுத்த, வச்சிரபாணியோன்- வச்சிராயுதத்தைக் கையிலே கொண்ட, அண்டர்கோன் - தேவர்களுக்கு அரசனான தேவேந்திரன், அரசாளும் - அரசாட்சிசெய்கிற, நீள் - பெரிய, அமராவதித்திறம் - அமராவதிப்பட்டணத்தின் பெருமையை, ஓதுவாம் - இனிச் சொல்லுகிறோம். எ-று. 'அண்டர்' தேவர், "அமராவதி" பொன் உலகம். ()

மாடமண்டபமேடைமாமதில்வாயின்ஞாயில்கபாடநீள்
கூடகோபுரநீடுமாளிகைகோலவேதிகையாலய
நாடகம்பயில்சாலைசூளிகைநாவலங்கனியூறல்பா
யாடகங்கொடமைத்துமாமணியானிறைத்தவனந்தமே.

[சம்பூநதம் என்னும் பொன்னால் செய்து பெரிய மணிகள் பதித்த மாடங்களும், மண்டபங்களும், மேடைகளும், பெரிய மதில்களும், வாயில்களும், மதில் உறுப்புகளும் கதவுகளும், கூடங்களும், கோபுரங்களும், உயர்ந்த மாளிகைகளும் அலங்காரமான திண்ணைகளும், கோயில்களும், நாடகசாலைகளும், சிகரங்களும் கணக்கற்றன என்பதாம்.]

இ-ள். மாடம் - மாடங்களும், மண்டபம் - மண்டபங்களும், மேடை- மேடைகளும், மாமதில் - பெரிய மதில்களும், வாயில் - வாயில்களும், ஞாயில் - மதில் உறுப்புகளும், கபாடம் - கதவுகளும், நீள்கூடம் - நீண்ட கூடங்களும், கோபுரம் - கோபுரங்களும், நீடு மாளிகை உயர்ந்த மாளிகைகளும், கோலவேதிகை - அலங்காரமான திண்ணைகளும், ஆலயம் - கோயில்களும், நாடகம்பயில் சாலை - நாடகம் ஆடுகிற சாலைகளும், சூளிகை - சிகரங்களும், (ஆகிய இவைகள்) நாவலங் கனியூறல்பாய் - நாவற்கனியினது ரசம் பாய்கின்ற, ஆடகம் கொடு அமைத்து - சம்பூநதம் என்னும் பொன்னாலே செய்து, மாமணியால் நிறைத்த அனந்தம் - பெரிதான ரத்தினங்கள் பதித்திருக்கிறவைகள் ஒவ்வொன்றும் அநேகம். எ-று. (ந - அந்தம் அநந்தம்) - முடிவற்றது எண்ணிமுடியாதது, என்பது பொருள். (சு)

வேதசாலையும்யாகசாலையும்யோகசாலையுமின்னார்
கீதசாலையுநாதமேதருகின்னரம்பயில்சாலையுங்
காதலானவர்யாவருந்தொடர்காமசாலைபுமாபலிப்
பூதசாலையுமாறிலாவனுபோகசாலையுமூரெலாம்.

[வேதசாலைகளும், யாகசாலைகளும், யோகசாலைகளும், கீதசாலைகளும், கின்னரம் பயில் சாலைகளும், காமசாலைகளும், மாபலிப்பூதசாலைகளும், அனுபோகசாலைகளும் ஊரெல்லாம் நிரம்பி இருந்தன என்பதாம்.]

இ-ள். வேதசாலையும் - வேதசாலைகளும், யாகசாலையும் - யாகசாலைகளும், யோகசாலையும் - யோகசாலைகளும், மின்னனார் கீதசாலையும் - மின்னலுக்கு ஒப்பான பெண்கள் பாடுகின்ற கீதசாலையும், நாதமேதரு - சுதிகூட்டிப் பாடுவதான, கின்னரம்பயில் சாலையும் - கின்னரி வாசிக்கிற சாலையும், காதலானவர் யாவரும் தொடர் காமசாலையும் - ஆசைகொண்டவர்கள் யாவரும் செல்லத்தகுந்த காமசாலைகளும், மாபலி பூதசாலையும் - பெரிதான பூஜை பண்ணத்தகுந்த பூதசாலைகளும், மாறு இலாத - விரோதமில்லாத, அனுபோகசாலையும் - சுகங்களை அனுபவிக்கிற சாலைகளும், ஊர் எலாம் - அந்த அயாவதி நகரமெல்லாம் உள. எ-று. (ரு)

உயிரெனத்தகுமன்பர்தம்முடனும்பர்மங்கையரின்பமென்
பயிர்விளைத்திடுமனைதொறும்பலபதுமராகமிலங்குவ
செயிர்விளைத்திடுமவுணருற்றுறைதிரிபுரத்தழலொக்குநீள்
வயிரமுத்தொளிவிரிவதப்புறமண்டுவெண்புகையொக்குமே.

[உயிர்போன்ற தம் நாயகருடனே தேவகன்னிகைகள் சுகபோகம் அனுபவிக்கும் வீடுகளிலெல்லாம் பதுமராகம் பிரகாசிப்பது திரிபுரத்தே பற்றி எரிகிற நெருப்பை ஒத்துத்தோன்றும் வயிரமும் முத்தும் பிரகாசிப்பது அத்திரிபுரத்திலே பற்றின நெருப்பிலே உண்டான புகைபோன்று இருந்தது என்பதாம்.]

இ-ள். உயிர் எனத்தகும் அன்பர் தம் உடன் - தங்களுக்கு உயிரே என்று சொல்லத்தகுந்த நாயகருடனே, உம்பர் மங்கையர் - அந்தத் தேவகன்னிகைகள், இன்பம் என்பயிர் - சுகம் என்கிற பயிரை, விளைத்திடும் மனைதொறும்- விளையச்செய்கிற வீடுகளில் எல்லாம், பலபதுமராகம் இலங்குவ - அநேக பதுமராக ரத்தினங்கள் பிரகாசிப்பதானது, செயிர் - துன்பத்தை, விளைத்திடும் அவுணர் - உண்டாக்குகின்ற அசுரர்கள், உற்று உறை-இருந்து வாசம் செய்கின்ற, திரிபுரத்து அழல் ஒக்கும் - திரிபுரத்துப்பற்றிய நெருப்பை ஒத்துத்தோன்றும், நீள்வயிரம் - (அந்த வீடுகளிலே) மிகுந்த வயிரமும், முத்து - முத்துக்களும், ஒளிவிரிவது - பிரகாசத்தைச்செய்வது, அப்புறம் மண்டு புகை ஒக்கும் - அந்தத் திரிபுரத்திலே பற்றின நெருப்பிலுண்டாகின்ற புகையைப்போலிருக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

உம்பர் - தேவலோகம், உயர்ந்த இடத்தைச்சுட்டும் "உகரச்" சுட்டடியாகப் பிறந்தபெயர். 'பதுமராகம்' ஓர் வகைமணி- செம்பு; "செயிர்" பகை, குற்றமும் ஆம். (சு)

அரவுமிழ்ந்தசெமணியுமாரமுமணிகொளிந்திரநீலமும்
பாவுகின்றமதிற்புறத்தபரப்பனைத்துமழுத்தின
நிரவிடும்பலதிசையடங்கலுநிமிர்கொழுஞ்சுடர்விரிதலா [னே.
லிரவுமுண்டிளநிலவுமுண்டெறிவெயிலுமுண்டொருபொழுதி

[பரந்த மதிலின் பரப்புகளில் எலலாம், பாம்பு கக்கின செம்மணிகளும் முத்துக்களும் இந்திர நீலமும் பதித்து நிரம்பி யிருத்தலினுல் பல திக்குகளும் ஒளி விரிப்பதானது ஒரேகாலத்தில் இரவும் நில வும் வெயிலும் எரிப்பதுபோல் இருக்கிறது என்பதாம்.]

இ-ள். பாவுகின்ற - பரவுதலாய் இருக்கின்ற, மதில்புறத்த பரப்பு அனைத்தும் - மதிலில் உள்ள இடமாகிய விரிவு முழுதும், அழுத்தின - பதித்திருக்கின்ற, அரவு - பாம்புகள், உமிழ்ந்த - கக்கின, செமணியும் ஆரமும் - செவந்த ரத்தினங்களும் முத்துக்களும், அணிகொள் - அழகைக்கொண்ட, இந்திர நீலமும் - இந்திர நீலக்கற்களும், நிரவிடும் பலதிசை யடங்கலும் - நிரம்பியுள்ள பல திக்குகளில் எல்லாம், நிமிர் கொழும் சுடர் விரிதலால் - உயர்வாகுகின்ற செழுமையான பிரகாசம் பரவுதலால், ஒரு பொழுதினை - ஒரே காலத்திலேயே, இரவுமுண்டு - இராக்காலமும் உண்டு, இளநிலவும் உண்டு - இளஞ்சந்திரன் ஒளியுமுண்டு, எரிவெயிலு முண்டு - எரிக்கின்ற வெயிலும் உண்டு, எ-று. ஏ - தேற்றப்பொருளில் வந்தது.

'செம்மணி' என்பது "செமணி" எனவாயது 'தொகுத்தல் என்னும் செய்யுள் விகாரம். (எ)

உரகனுச்சியின்மணிபதித்தவுயர்ந்தபத்தியிடத்துமா
மரகதத்திரண்மணிகுயிற்றிவகுத்தபத்தியடங்கலுங்
காதலத்தினில்விரிதிரைக்கடல்கவருமத்தகசங்களுங்
குரகதத்திரளுஞ்செறிந்தனகோடிகோடியிரட்டியே.

[ஆதிசேஷன் உச்சியில் இருக்கிற ரத்னங்கள் பதித்த உயர்வாகிய பத்தியிடங்களிலும், பெரிய மரகதங்களாகிய திரண்ட ரத்தினங்கள் பதித்திருக்கிற பத்திகள் முழுவதிலும் யானைகளும் குதிரைகளும் இரண்டுகோடி இரண்டுகோடி நெருங்கின என்பதாம்.]

இ-ள். உரகன் உச்சியின் மணி - ஆதிசேடனுடைய, உச்சியில் இருக்கிற ரத்தினங்கள், பதித்த உயர்ந்த பத்தியிடத்து-பதித்திருக்கின்ற உயர்வான பத்தி இடங்களிலும், மா மரகதத்திரள்மணி - பெரிதான மரகதங்களான திரண்ட ரத்தினங்கள், குயிற்றி - பதித்து, வகுத்த பத்தி அடங்கலும் - செய்திருக்கிற பத்திகள் முழுதிலும், காதலத்தினில் - துதிக்கையினுலே, விரிதிரைக்கடல் விரிந்த அலைகளை உடைய கடலை, கவரும் மத்த கசங்களும் - வாரிக்கொள்வன வான மதயானைகளும், குரகதத்திரளும் - குதிரைக்கூட்டங்களும், கோடிகோடி

இரட்டியே - இரண்டு கோடானு கோடிகள், செறிந்தன - நெருங்கி நின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

(குயிற்றிய - பதித்த) 'காதலம்' காமாகிய தலம் என விரியும். (அ)

ஆடலும்புனலாடலும்பொழிலாடலும்வெறியாடலும்
பாடலுந்துணர்சூடலும்பலபாவைபைங்கிளிபூவையாழ்
தேடலும்பொழில்சேர்தலுங்கலைதேர்தலுங்குறைதீர்தலுங்
கூடலுந்தமிலூடலுந்தொழில்கோதையர்க்குளநாளெலாம்.

[பந்து ஆடலும், புனல் ஆடலும், நீராடலும், பூக்கொய்து சோலையில் ஆடலும், தேனருந்திக் களித்தாடலும், பாட்டுப்பாடலும், பூங்கொத்துகள் சூடலும், பலவிதமாகப் பொம்மைகள், பச்சைக்கிளிகள், நாகணவாய்ப்புட்கள், வீணைதேடலும், பூஞ்சோலைகளுக்குப் போதலும், மதனநூல் ஆராய்தலும், மனக்குறைவு தீர்தலும், கூடுதலும் தங்களுக்குள்ளே பிணங்கிக்கொள்ளுதலும் ஆகிய இவைகளே எப்பொழுதும் பெண்களுக்கு வேலை என்பதாம்.]

இ-ள். ஆடலும் - பந்து முதலியன ஆடலும், புனல் ஆடலும் - நீராடுதலும், பொழில் ஆடலும் - (மலர் கொய்து) சோலைகளிலே விளையாடுதலும், வெறியாடலும் - தேனருந்திக் களித்து ஆடலும், பாடலும் - பாட்டுப்பாடலும், துணர் சூடலும் - பூங்கொத்துகள் சூடலும், பலபாவை - பலவிதமாகப் பொம்மைகள், பைங்கிளி - பச்சைக்கிளிகள், பூவை - நாகணவாய்ப்புட்கள், யாழ் - வீணை, தேடலும் - (ஆகிய இவைகளைத்) தேடலும், பொழில் சேர்தலும் - பூஞ்சோலைகளுக்குப் போதலும், கலைதேர்தலும் - மதனநூல் ஆராய்தலும், குறைதீர்தலும் - மனக்குறைவு தீர்தலும், கூடலும் - கூடுதலும், ஊடலும் - தங்களிலே பிணங்கிக்கொள்ளலும் (ஆகிய இவைகளே), கோதையர்க்கு - பெண்களுக்கு, உளநாளெலாம் - காலமுழுமையும், தொழில் - வேலைகள். எ-று. அமராவதியில் உள்ள பெண்களின் தொழில் கூறுகின்றார்.

'வெறியாடல்' தேவர்க்காடுதலும், என்றும் பொருள் கூறுவர். 'கோதை' போல்வாரைக் கோதை எனல் உவமை ஆகுபெயர். (கூ)

பூசன்மேவியபாசநீள்விழி காதினோடுறுபோர்செயத்
தூசினோடணிமேகலாபரம்வீசுசோதிகள்சூழவே
வாசனூறுமரம்பைமாதர்நிவந்தமாமணிவச்சிரத்
தூசலாடுவதந்தரத்திலுலாவுமின்கொடியொக்குமே.

[நாயகருடன் போர்செய்யும் நீண்டவிழி காதோடு போர்செய்யவும், வஸ்திரத்தோடு அழகிய மேகலாபாரம் வீசும் பிரகாசங்கள் சூழவும், வாசல்களில் எல்லாம் ரம்பாஸ்திரீகள் ரத்தினகசிதமான ஊஞ்சலில் ஊஞ்சலாடுதல் அந்தரத்தில் உலவும் மின்னல் கொடியை ஒத்திருக்கும் என்பதாம்.]

இ-ள். பூசல்மேவிய - தம் நாயகருடனே பொருதுதலை உடைய, பாச நீள்விழி - அன்பையுமுடைய நீண்ட கண்கள், காதினோடுறு போர்செய-

காதுகளோடு மிகவும் சண்டைசெய்யவும், தூசினோடு - வஸ்திரங்களுடனே, அணி - அணிந்திருக்கிற, மேகலாபரம - மேகலாபரணங்கள், வீசு சோதிகள் சூழவே - வீசுகின்ற ஒளிகள் சுற்றவும், வாசரூறும் - வாசல்லெல்லாம், அரம்பை மாதர் - அரம்பாஸ்திரீகள், நிவந்தமாமணி வச்சிரத்து - உயர்ந்த பெரிய வயிரமணிகள் பதித்த, ஊசல் ஆடுவது - ஊஞ்சலிலிருந்தாடுவது, அந்தரத்தில் உலாவும் - ஆகாயத்தில் உலாவுகின்ற, மின்கொடி யொக்கும்-மின்னல் கொடியை ஒத்திருக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

"பூசன் மேவிய" நஞ்சும் அமுதும் பூசப்பெற்ற என்றும். 'தூசு' - வஸ்திரமும், "நிவந்தமாமணி வச்சிரத்தூசல்" என்பதற்கு பெரிய ரத்தினங்கள் பதித்து உயர்ந்த உறுதியான ஊசல், என்றும் பொருள் கூறுவார். 'மின் கொடி' மின்னல் கொடி. (௪0)

நனிசிவப்புறு தளிர் விளைப்பன நனை விளைப்பன நனைதொறு
மினியவுத்தமநறை விளைப்பன விலையுகுப்பன விளமதுப்
பனியுகுப்பன மணியுகுப்பன பணியுகுப்பன படுசெழுங்
கனியுகுப்பன மலருகுப்பன கற்பகப்பொழிலைந்துமே.

[சோலைகளில் எல்லாம் பஞ்சதருக்களும், தளிர்களைத் தளிர்க்கின்றவைகளும், அரும்பு வகைகளும், தேனைப் பெருக்குகின்றவைகளும், இலைகளை உதிர்க்கின்றவைகளும், தேன் துளிகளைச் சிந்துகின்றவைகளும், ரத்திநங்களைச் சிந்துகின்றவைகளும், ஆபரணங்களைச் சிந்துகின்றவைகளும், செழுமையான கனிகளைச் சிந்துகின்றவைகளும் பூக்களைச் சிந்துகின்றவைகளுமாக விளங்கின என்பதாம்.]

இ-ள். கற்பகப்பொழில் ஐந்துமே - கற்பகச்சோலைகளில் எல்லாம் ஐந்து தருக்களும், நனி சிவப்புறு தளிர் விளைப்பன - மிகவும் சிவந்திருக்கின்ற தளிர்களை விளைக்கின்றனவும், நனை விளைப்பன - அரும்புகள் விடுகின்றவையும், நனைதொறும் - அவ் அரும்புகளில் எல்லாம், இனிய - இனிப்பையுடைய, உத்தம - உத்தமமான, நறை விளைப்பன - தேனைப் பெருக்குகின்றவைகளும், இலை உகுப்பன - இலைகளை உதிர்க்கின்றவையும், இளமதுப்பனி உகுப்பன- இளமையான தேன் துளிகளைச் சிந்துவனவும், மணி உகுப்பன - ரத்திநங்களை உதிர்க்கின்றவைகளும், பணி உகுப்பன - ஆபரணங்களை உதிர்க்கின்றவைகளும், படுசெழும் கனி உகுப்பன - பொருந்திய செம்மையான கனிகளைச் சிந்துகின்றவைகளும், மலர் உகுப்பன - பூவைச் சிந்துகின்றவைகளும் (ஆகி விளங்கின.) எ-று. ஏ - ஈற்றசை.

'தளிர்,' 'துளிர்' 'அரும்பு' 'மலர்' 'அலர்' இவை முறையே 'தளிர்ப்பது,' 'துளிர்ப்பது' 'அரும்புவது' 'மலர்வது' 'அலர்வது' என்னும் காரணம்பற்றி வந்தபெயர்கள்; 'ஐந்தும்' என்றதில் உள்ள 'உம்மை' முற்றும்மை

பஞ்ச தருக்களாவன:—அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம், என்பன. (கக)

வாரிறுக்கிவிசித்துமாமணிமாடமேறிமலர்க்குழற்
காரிறுக்கிமடந்தைமாதர்கழங்குகந்துகமம்மனை
கூருகிர்க்கைசிவப்பவாடுவகொத்துமாமுடியுற்றபொன்
மேருவிற்பலகால்விழுந்தெழுமீனினத்தைநிகர்க்குமே.

[இரவிக்கையை இறுக்கிக் கட்டிக்கொண்டு கூந்தலை முடித்துக்கொண்டு, மடந்தைப் பருவப்பெண்கள் கழங்கும், பந்தும் அம்மனையும் தம் கைகளால் விளையாடுவது பல சிகரங்களை உடைய பொன்மயமான மகாமேருமலைமேல் பலதரம் நட்சத்திரக்கூட்டங்கள் வந்து படிவதுபோல் இருக்கிறது என்பதாம்.]

இ-ள். வார் - ரவிக்கையை, இறுக்கி விசித்து-இறுக்கிக் கட்டிக்கொண்டு, மாமணிமாடம் ஏறி - பெரிதான ரத்னகசிதமான உப்பரிக்கைமேலேறி, மலர்க்குழல் - பூவை அணிந்த கூந்தலாகிய, கார் இறுக்கி - மேகங்களை இறுக்கிக் கட்டிக்கொண்டு, மடந்தை மாதர் - மடந்தைப் பருவத்தை உடைய பெண்கள், கழங்கு - கழங்கும், கந்துகம் - பந்தும், அம்மனை - அம்மானையும், கூர் உகிர் கை சிவப்ப ஆடுவ - கூர்மையான நகங்களையுடைய கைகள் சிவக்கும்படி விளையாடுதலானது, கொத்து - கூட்டமாகிய, மாமுடியுற்ற - பெரிய சிகரங்களையுடைய, பொன்மேருவில் - பொன்மயமான மகா மேருவின் மேலே, பலகால்-பலமுறை, விழுந்து எழும் - விழுந்து எழுகின்ற, மீன் இனத்தை - நட்சத்திரக் கூட்டங்களை, நிகர்க்கும் - ஒத்திருக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

'மணிமாடம்' அழகிய உப்பரிக்கை எனினும் 'ஆம்' "மீனினத்தை நிகர்க்கும்' என்பதற்கு - கடலிலிருந்து விழுந்து எழுகின்ற மீன்கூட்டங்களை ஒத்திருக்கும் என்றலும், உண்டு. (கஉ)

துடிநுடங்கிடைமாதர்கைபுனைதொடிமுழங்கிடுமாடமே
லடிநுடங்கிடநடுநுடங்கிடநுனிநுடங்கிடவமபொனின்
கொடிநுடங்குவகடையுகத்தெழுதரைகடற்றொனியன்றியவ்
விடிநுடங்குவதென்னின்மற்றினியாவதேதிகராவதே.

[உடுக்கை போன்றதும் துவளுவதுமாகிய இடையை உடைய பெண்கள் கையில் அணிந்திருக்கின்ற வளையல் சப்திக்கும் உப்பரிக்கைமேல் பொன்மயமான கொடிகளின் அடியும், மத்தியும், நுனியும் துவண்டாடுகின்ற சப்தமானது கலியுகக் கடைசியில் எழும் சப்திக்கின்ற கடலொலியும் அக்காலத்தில் உண்டாகும் இடி ஒலியும் ஒப்பாகுமென்றால் வேறு எது நிகராகும் என்பதாம்.]

இ-ள். துடி - உடுக்கைபோன்ற, நுடங்கு - துவளுதலையுடைய, இடை மாதர் - இடையை உடைய பெண்கள், கைபுனை-கையிலே அணிந்திருக்கின்ற,

கொடி முழங்கிடும் மாடமேல் - வளையல்கள் ஒலிக்கின்ற உப்பரிகைமேல், அடி நடங்கிட - அடிதுவளவும், நடு நடங்கிட - நடு துவளவும், நுனி நடங்கிட - நுனி துவளவும், அம்பொனின் கொடி நடங்குவ - அழகிய பொன்மயமான கொடிகள் துவண்டு ஆடுகின்றஒலியானது, கடையுகத்து எழு - கலியுக முடிவிலே எழுகின்ற, குரைகடல் தொனியன்றி - சப்திக்கின்ற கடல் ஓசை அல்லாமல், அவ் இடி நடங்குவது என்னில் - அந்தக்காலத்தில் இடிக்கிற இடி முழக்கம் ஒக்கும் என்றால், மற்றினியாவதே நிகராவதே - இனி எதுதான் அதற்கு ஒப்பாகும். எ-று. ஏ - ஈற்றசை.

அம்பொனின் கொடி என்றது, துவஜங்களை "அம்பொனின் கொடி நடங்குவ" என்பதற்கு அழகிய பொன்கொடிபோன்ற பெண்கள் என்று பொருள் செய்யின் 'அடி நடங்கிட, இடை நடங்கிட நுனி நடங்கிட" என்பவைகளுக்கு முறையே காற்சிலம்பு சப்திக்கவும், மேகலாபாரம் சப்திக்கவும். மார்பணிகள் சப்திக்கவும். எனக்கொள்க, 'நடங்குதல்' - அசைதல், இங்கு அசைந்துண்டாகிய ஒலியைக் காட்டிற்று. (கரு)

தலவியப்புறுமாமியச்சிறுசாளரப்புழைபால்விழும்
புலவியிற்பரிபந்தியின்னிருபுடைவிழுந்துநடங்கிய
கலவியிற்பரிதாளமாமணிகங்குனங்கைகைபற்றியே
நிலவெனக்கெனவரியெனக்கெனுநீதியொப்பனவீதியே

[நிலாமணி முற்றத்திலே பெண்கள் புலவியிலும் கலவியிலும் சிதறிய முத்தும் மணிகளும் கிடந்து விளங்கும் தன்மை இரவாகிய பெண்ணைச் சந்திரன் நீ எனக்கு உரியவள் என்றும் சூரியன் நீ எனக்கு உரியவள் என்றும் கைபிடித்திழுப்பதுபோல் இருக்கிறது என்பதாம்.]

இ-ள். தலம் - இடங்களில், வியப்புறும்-அதிசயிக்கத்தகுந்த, அரமியச் சிறு சாளரப்புழையால் - நிலாமணி முற்றத்திலேயுள்ள சிறு சன்னல்கள் போன்ற துவாரங்களின் வழியாய், விழும் - விழுகின்ற, புலவியில் - (முன்) ஊடலினால், பரி - பரித்தெறிந்த (முத்துகளும் மாணிக்கங்களும்), பந்தியின்- வரிசையாக, இருபுடை விழுந்து - இருபக்கத்திலும் விழுந்து, நடங்கிய கலவியில் - (பின்னர்தம் கணவரோடு) துவண்ட கிரீடையாகிய கூடலினாலே, பரிதாளமாமணி - சிதறி விழுந்து கிடக்கின்ற முத்துக்களும் பெரிய மாணிக்க மணிகளும், (சிந்திக்கிடக்கும் காட்சியானது,) கங்குல் நங்கை கைப்பற்றியே- இரவு என்னும் பெண்ணின் கையைப் பற்றிக்கொண்டு, நிலவு எனக்கு என- சந்திரன் எனக்கு நீ உரியவள் என்று கூறவும், அரி எனக்கெனும் நீதி - சூரியன் நீ எனக்கு உரியவள் ஆகென்று சொல்லும் தன்மையையும் ஒப்பன வீதியே - வீதிகள் எல்லாம் ஒத்திருந்தது. எ-று.

'சாளரப்புழை' - மழைநீர் போவதற்காக விட்டிருக்கும் சன்னல் போன்ற சிறுதுவாரம், புலவியிற் பரிபந்தி என்னும் இடத்தும் 'தாளமாமணி' என்னும் சொற்கள் பொருள் செய்தல் தீபக அலங்காரமாம். 'கங்குல் நங்கை' கங்குலா

கிய நங்கை என விரியும், "புழைபால் விழும் தாளமாமணி" என்று கூடிப் பொருள் முடிவுபெற்றது. 'கலவியில் தாளம் 'மாமணி' சிந்துவது கலவித்தொழில் விளைக்குங்கால் கைகால் முதலிய உறுப்புகளால் தாக்குண்டு மணிகள் சாளரவழியே சிந்தின என்க. (கச)

நீடுமாசையினீவதெண்ணு நெஞ்சினர்பலராயினுங்
கூடுமாசையினோடுமுற்றதுகொள்ளுவாரவணின்மையாற்
பாடுமாதரியாழினோடுபயிற்றுமாதரரங்கினின்
றாடுமாதர்தினம்பெறுங்கொடையண்டவாணர்நெஞ்சமே.

[கொடுத்தற்கே மிகவும் ஆசையுடைய ஆடவர்கள் அநேகர் இருந்தாலும்; கிடைத்ததைப் பெற்றுக்கொள்ளுவோம் என்னும் ஆசை உடையவர்கள் அங்கு இல்லாமையினால், பாடுகின்ற பெண்களும், யாழ் வாசிக்கின்ற பெண்களும், நாடகசாலையிலிருந்து ஆடும் பெண்களும் நாள்தோறும் பெருகின்ற கொடைப் பொருள் ஆகாயவாசிகளுடைய மனமேயாம், என்பதாம்.]

இ-ள். நீடும் ஆசையின் - மிகுவதாகிய ஆசையுடனே, ஈவதெண்ணும்- கொடுத்தற்கே எண்ணுகின்ற, நெஞ்சினர் பலர் ஆயினும் - மனமுள்ள ஆடவர்கள் அநேகர்களாயிருந்தாலும், கூடும் ஆசையின் ஓடும் - கூடுவதான ஆசையுடனே, உற்றது - கிடைத்ததை, கொள்ளுவார் - வாங்கிக் கொள்ளுகின்றவர்கள், அவண் இன்மையால் - அங்கு இல்லாமையினால், பாடும் மாதர் - பாடுகின்ற பெண்களும், யாழினோடு பயிற்றும் மாதர் - யாழோடு பழகுகின்ற பெண்கள், அரங்கினில் நின்றும் ஆடுமாதர் - நாடகசாலையிலிருந்தும் ஆடுகிற பெண்களும், தினம் பெறுங்கொடை - நாள்தோறும் பெறுவதாகிய கொடைப்பொருள், அண்டவானர்கள் நெஞ்சமே - ஆகாயவாசிகளுடைய மனமே. எ-று. ஏ- ஈற்றசை. தேற்றமும் ஆம்.

"பாடும் மாதர் யாழ்" என்றெடுத்து, பாடுகின்ற அழகான வீணையுடனே என்றும் பொருள் கொள்ளலாம். (கரு)

பாதிமாமதியொத்தவாணுதலுற்றபட்டமிலங்கிடச்
சோதிவார்குழைவீசவேய்புரைதோண்மணித்தொடைமின்ன
கோதிவாரிமுடித்தபாரியகொண்டைநின்றுகுலுங்கிட [மே வ
வீதியாய்வருமாதரேநிலமின்னுமேகமுமென்பவே.

[பாதிச்சந்திரனை ஒத்த நெற்றியில் பட்டம் விளங்க, காதில் பிரகாசம் பொருந்திய குண்டலம் ஆட மூங்கிலை ஒத்த தோளில் ரத்தின ஆரங்கள் விளங்க, கோதி வாரி முடித்த பருத்த கொண்டைகள் நின்று குலுங்கப் பொன்னுலக வீதியில் வரும் பெண்களையே பூமியில் உள்ளவர்கள் மின்னலென்றும் மேகமென்றும் சொல்லுகின்றனர் என்பதாம்.]

இ-ள். பாதி மாமதி ஒத்த - பாதிச்சந்திரனுக்கு ஒப்பான, வாள் நுதல்- ஒளியை உடைய நெற்றியில், உற்றபட்டம் இலங்கிட - பொருந்தி யிருக்கின்ற

பட்டம் விளங்கவும், சோதிவார்குழை வீச - பிரகாசம் பொருந்திய நீண்ட குழைகள் ஆடவும், வெய்பிறை - மூங்கிலை ஒத்த, தோள்மணித்தொடை மின்னவே - தோள்களுக்குமேலே ரத்நமாலைகள் மின்னவும், கோதி - சிக்கறுத்து, வாரிமுடித்த - வாரிமுடித்த, பாரிய கொண்டை - பருத்திருக்கிற கொண்டைகள், நின்று குலுங்கிட - நிலைகொண்டு குலுங்கவும், வீதி வாய்வரு மாதரே- அந்த வீதியில் வருகின்ற பெண்களேயே, நிலம் - பூமியில் உள்ளவர்கள், மின்னும் மேகமும் என்ப - மின்னலென்றும் மேகம் என்றும் சொல்லுவார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

"பாதிமாமதி" பிறைச்சந்திரன். 'பட்டம்' நெற்றியில் சூடும் தங்கப் பட்டம். (கசு)

நன்னகர்ப்பெருவண்மையுந்திருவுஞ்சிறப்புநவின்றிடிற்
பொன்னகர்க்குவமிப்பர்பற்பலநூனெறிப்புலவோரெலா
மன்னகர்க்குவமிக்கவொப்பதிலண்டரண்டமனைத்திலு
மென்னகர்ப்பொலிவந்நகர்க்குநிகர்க்குமென்னவியம்புவேன்.

[நூல்பல கற்ற புலவர்கள் நல்ல நகரத்தின் அழகு, செல்வம், சிறப்பு முதலியவைகளைப்பற்றி உவமிக்கப் புகுந்தால் பொன்னகரத்துக்கு ஒப்பாகச் சொல்லுவார்கள், அப்படிப்பட்ட பொன்னுலகத்திற்கு உவமிக்கத்தகுந்தது இல்லவே இல்லை, அண்டாண்டம் எல்லாவற்றிலும் உள்ள எந்த நகரினுடைய அழகை ஒப்பாகும் என்று யான் சொல்லுவேன்; என்பதாம்.]

இ-ள். பற்பலநூல் நெறிப்புலவோரெலாம் - அநேக சாஸ்திர மார்க்கங்களை (ஆராய்ந்தறிந்த) புலவர்கள் எலாம், நல்நகர்ப்பெரு வண்மையும் திருவும்- நல்ல நகரத்தினுடைய பெரிதாகிய அழகையும் செல்வத்தையும், சிறப்பும்-சிறப்பையும், நவின்றிடில் - சொல்வதானால், பொன் நகர்க்கு உவமிப்பர் - பொன்னகரத்தை ஒப்பாகச் சொல்லுவார்கள், அந்நகர்க்கு - அப்படிப்பட்ட பொன்னகர்க்கு, உவமிக்க ஒப்பது இல் - ஒப்பாகச் சொல்வதற்கு ஒரு நகரும் இல்லை, அண்டாண்டம் அனைத்திலும் - அண்டபகிரண்டங்கள் எல்லாவற்றிலும், என்நகர் - உள்ள எந்த நகரத்தினுடைய, பொலிவு - அழகை, அந்நகர்க்கு - அந்தப் பொன்னுலகத்திற்கு, நிகர்க்கும் என்ன இயம்புவேன் - ஒப்பாகும் என்று யான் சொல்லுவேன். எ-று. "புலவோர்" ('புலம்' - அறிவு) மிக்க அறிவையுடையோர் என்பது பொருள். (கஎ)

ஆனசித்திரமாநகர்க்குளலர்ந்துபர்ந்தெழுகற்பகக்
கானகத்திடைவேலைபுக்கதொர்காசுநீள்வரையாமெனத்
தானவர்க்குடனுனவெற்பரிதாழ்சுடர்க்குலிசக்கர
வானவர்க்கிறைநீயோனமர்ந்துறைமண்டபத்தைவிளம்புவாம்.

[அப்படிப்பட்ட வேடிக்கைகள் அமைந்த நகரத்துக்குள் பூக்கள் மலர்ந்துள்ள
கற்பகக்காட்டின் மத்தியில், அசுரர்களுக்கு உதவியான மலையின் சிறகுகளை
அறுத்த வச்சிராயுதத்தைத் தாங்கிக்கொண்டிருக்கும் இந்திரன் கடலில்
போய் முழுகிய இரத்தினங்கள் நிறைந்த மைநாக மலைபோல்
சபாமண்டபத்தில் இருந்த சிறப்பு சொல்வாம்;
என்பதாம்.]

இ-ள். ஆன - அப்படிப்பட்ட, சித்திரமாநகர்க்குள் - வேடிக்கைகளைக் கொண்ட பெரிதான அந்தப் பொன்னகரிலே, அலர்ந்து - புஷ்பங்கள் பூத்து, உயர்ந்தெழு கற்பகக் கானகத்திடை - உயர்ந்தெழுந்து நிற்கின்ற கற்பகக்காட்டின் இடத்தில், தானவர்க்கு உடன் ஆன - அசுரர்களுக்கு உதவியான, வெற்பு அரி - மலைகளின் இறகைவெட்டின, தாழ்சுடர் - ஒளிவீசுகின்ற குலிசக்கா-வச்சிராயுதத்தைக் கையிலே கொண்ட, வானவர்க்கிறையோன் - தேவர்களுக்கெல்லாம் அரசனாகிய இந்திரன், வேலைபுக்கதோர் காசு நீள்வரையாமென-கடலிலேபோய் முழுகின ரத்தினங்களதிகமாயுள்ள மைநாகமலையே நிகர் என்னும்படி, அமர்ந்துஉறை - பொருந்தி யிருக்கப்பெற்ற, மண்டபத்தை விளம்புவாம்-சபா மண்டபத்தைப் பற்றிச்சொல்லுவாம் எ-று.

"சித்திரம் ஆன" என்றும் கொண்டு கூட்டிப் பொருள் கூறலாம். 'காசு; மணி. 'தாழ்' சுடர் என்றதில் 'தாழ்' நீள்வதாகிய, நீண்டு தாழ்ந்து விரிவதாகிய சுடர், என்பது பொருள், தனுவின் புத்திரர்கள் ஆகையால் தானவர் என்று பேராயது, "மண்டபம்" என்றது ஈண்டு சபாமண்டபத்தை. (கஅ)

அத்திவாரமிருத்திவெண்படிகத்தமைத்ததளத்ததாய்ச்
சித்திரக்கனகத்தகட்டளைசெய்துயர்த்தகுறட்டினிற்
பத்தியாயிரவாயிரத்தபருத்ததூண்கணிறுத்திமேல்
வைத்தபோதிகையுத்திரம்பலவச்சிரத்தின்வகுத்ததே.

[அடிவாரம் அழுத்தி, பளிங்கினால் செய்த தளவரிசை உடையதாய், வேடிக்கையாகச் சுவர்னத் தகடுகளாலே சந்து பதிவுசெய்து, அதன்மேல் உயரமாகக்கட்டி யிருக்கிற திண்ணைக் குறட்டின்மேலே, ஒரு வரிசைக்கு ஆயிரம் ஆயிரம் பருத்த தூண்களை நிறுத்தி அவைகளின் மேலே வைத்திருக்கின்ற போதிகைகளும் உத்தரங்களும் அநேகமாக வயிரத்தினாலே செய்திருக்கின்றன என்பதாம்.]

இ-ள். அத்திவாரம் இருத்தி - அடிவாரம் அழுத்தி, வெண் - வெண்மையாகிய, படிகத்தமைத்த - பளிங்கினாலே செய்த, தளத்ததாய் - தளவரிசையை உடையதாய், சித்திரக் கனகத்தகட்டு அளைசெய்து - வேடிக்கையாகச் சுவர்னத்

தகட்டுகளினால் சந்து பதிவுசெய்து, உயர்த்த குறட்டினில் - அதன்மேலே உயரமாகக் கட்டியிருக்கிற திண்ணைக்குறட்டின்மேலே, பத்தி - ஒருவரிசைக்கு, ஆயிரவாயிரத்த - ஆயிரம் ஆயிரமான, பருத்த - பருமனான, தூண்கள் நிறுத்தி - தூண்களை நிறுத்தி, மேல் வைத்த - அவைகளின் மேலே வைத்திருக்கின்ற, போதிகை - போதிகைகளும், உத்திரம் - உத்திரங்களும், பல - அநேகம், வச்சிரத்தின் வகுத்ததே - வயிரத்தினால் செய்ததே. எ-று.

"சித்திரக்கனகத்த கட்டளைசெய்து" 'என்பதற்கு,' 'அழகிய பொன்னினாலாகிய செங்கல் செய்து,' என்றும் பொருள் செய்வர்; கட்டளை=செங்கல்.

இட்டபத்தியினிந்த்ரநீலமிசைத்தடுத்தசுவர்க்குமேல்
மட்டறச்சுடர்மாகதத்தில்வகுத்தெடுத்தநிலத்தது
விட்டவாயிலினட்டதூண்மணிமேதகத்தநாகமணி
முட்டவைத்தமுகட்டதொண்கதிர்முத்தணிந்தமுகப்பதே.

[அப்படிச் செய்திருக்கிற வரிசைகளிலே இந்திரநீலம் பதித்து உயர்த்திய
சுவருக்குமேல் அளவில்லாமல் மாகதத்தால் செய்துயர்த்தியது.
விட்டிருக்கிற வாயில்களில் நட்ட தூண்கள் அழகிய மேத
கங்களால் செய்தது, முகடுகள் நாகரத்தினங்களால்
முழுதும் அமைத்தது, முகப்புகள் எல்லாம்
முத்தால் அலங்கரிக்கப்பட்டது
என்பதாம்.]

இ-ள். இட்ட - அப்படிச் செய்திருக்கிற, பத்தியின் - வரிசைகளிலே, இந்த்ர நீலமிசைத்தடுத்த சுவர்க்குமேல் - இந்திர நீலங்களைச் சேர்த்து உயர்த்தியிருக்கிற சுவருக்குமேலே, மட்டறச்சுடர் மாகதத்தில் - அளவில்லாமல் பிரகாசத்தை உடைய மாகதத்தினால், வகுத்தெடுத்த நிலத்தது - செய்து உயர்த்தின நிலத்தை உடையது; விட்டவாயிலின் - உள்ளே போகும்படி விட்டிருக்கிற வாயிலில், நட்டதூண் - நட்டுள்ள தூண்களானவை, மணிமேதகத்தது - அழகிய மேதகத்தினாலாயது. நாகமணி முட்டவைத்த முகட்டது - நாகமணிகள் முற்றும் வைக்கப்பெற்ற முகட்டை உடையது; ஒண்கதிர் முத்தணிந்த முகப்பதே - அழகுபொருந்திய ஒளியை உடைய முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட முன் முகப்பை உடையது. எ-று. ஏ - ஈற்றசை. (௨0)

ஆளிசிங்கமிபப்பரித்திரளன்னமஞ்சுகமெண்ணிலா
வோளிதோறுநிறுத்திநீள்வயிடூரியத்தினிரைத்ததாற்
கோளிருந்தவோமடங்கல்கொழுந்துவிட்டனவோகுழூஉம்
வாளிருந்தனவோமுகட்டினில்வைத்தபூரணகும்பமே.

[யாளிக்கூட்டங்களும், சிங்கக்கூட்டங்களும், யானைக்கூட்டங்களும், குதிரைக் கூட்டங்களும், அன்னங்களும், கிளிகளும், கணக்கில்லாதபடி ஒழுங்குகள்தோறும் நிற்கச்செய்து ஒளியிருந்த வைடூரியத்தினால் நிரைந்திருந்தது. அப்படிப்பட்ட சபாமண்டபத்தில் மேல் முகட்டிலே வைத்திருக்கிற பூரணகலசம், நட்சத்திரங்கள் கூடியிருந்ததுபோலவும் வடவாமுகாக்கினி கொழுந்து விட்டெரிவது போலவும் ஒளிகள் எல்லாம் கூடியிருந்ததுபோலவும் பிரகாசித்தது; என்பதாம்.]

இ-ள். ஆளி - யாளிக்கூட்டங்களும், சிங்கம் - சிங்கக்கூட்டங்களும், இபம் - யானைக்கூட்டங்களும், பரித்திரள்-குதிரைக்கூட்டங்களும், அன்னம்-அன்னப் பட்சிகளும், அஞ்சுகம் - கிளிகளும், எண்ணிலா - கணக்கில்லாதபடி, ஒளிதோறும் நிறுத்தி - ஒழுங்குகள்தோறும் நிற்கச்செய்து, நீள்வயிடூரியத்தின்-ஒளியிருந்த வைடூரியத்தினால், நிரைத்ததால் - நிறைத்திருந்தது: முகட்டினில் வைத்த பூரணகும்பம் - (அப்படிப்பட்ட சபாமண்டபத்தில்) மேல் முகட்டிலே வைத்திருக்கிற பூரணகலசம், கோளிருந்தனவோ - நட்சத்திரங்கள் கூடியிருந்தனவோ, மடங்கல் கொழுந்து விட்டனவோ - வடவாமுகாக்கினியே கொழுந்து விட்டெரிகின்றதோ, குழூஉம் - கூடிய, வாளிருந்தனவோ - (உலகில் உள்ள) ஒளிகள் எல்லாம் கூடியிருந்தனவோ, என்றெண்ணும்படித் தோன்றிற்று. எ-று. ஏ - ஈற்றசை.

"கோள்" கிரகங்களாகிய சூரிய சந்திரர்கள் என்றும் ஒளியுடைய சூரியன் சந்திரன் முதலிய கிரகங்கள், என்றும் பொருள்செய்வர்; "மடங்கல்" வடவாமுகாக்கினி, ஈண்டு பிரகாசத்திற்காகக் கூறினர், இனி 'மடங்கல்' என்பதற்கு இடி என்றும் பொருள் கூறுவர்; 'வாள்' பிரகாசம், உலகத்திலுள்ள பிரகாசங்கள் எல்லாம் கூடினதோ என்னும்படி என்பதாம். 'மடங்கல்' அக்கினிக்கொழுந்தும்; ஆம். (உக)

காதமாயிரநான்மருங்குகணித்தகன்றநிலந்தொறும்
பூதமாயிரகோடிகோடிபுறத்தினின்றசுமந்திட
மீதடர்ந்துநிவந்துமேனிலம்விண்டெழுந்துவளர்ந்துபோ
யாதிநான்முகனூர்பதத்தினுமப்புறத்துமுயர்ந்ததே.

இ-ள். பூரண கலசத்தையுடைய அச்சபாமண்டபம், ஆயிரங்காதவளவு நாலுபக்கத்திலும் அளவுள்ளதாய் விசாலித்த விடங்களெல்லாம், ஆயிரங் கோடானுகோடி பூதங்கள் வெளியே நின்று தாங்க, மேலே நெருங்கி உயர்ந்து, அதற்கு மேலுலகங்களையுங் கடந்து எழுந்து வளர்ந்து சென்று, உலகத்துக்கு முதலான பிரமதேவனுடைய சத்தியலோகத்துக்கப்பாலு முயர்ந்திருக்கின்றது. எ-று. (உஉ)

அயனறிந்துவிதித்தவண்டமனைத்துமிங்கிதரன்றென
மயனறிந்துபடைத்தசித்திரமண்டபத்தினிலங்கவன்
வியனறிந்துகொடுத்தவாதனமீதுமாதொடும்வேதநூற்
பயனறிந்துணர்குபவர்தம்மொடுபாகசாதனன்மேவினன்.

இ-ள். பிரமதேவன் தெரிந்து சிருஷ்டித்த அண்டங்களெல்லா மிதற்குச் சமானமல்லவென்னும்படி, மயனானவன் எண்ணிச் சமைத்திருக்கிற (வேடிக் கைகளையுடைய) அச்சித்திரமண்டபத்திலே, மயனானவன் இவனது பெருமை யைத் தெரிந்து செய்து கொடுத்திருக்கிற சிங்காசனத்தின்மேலே தேவேந்தி ரன் இந்திராணியுடனே கூடி வேதசாஸ்திரங்களின் பிரயோஜனந் தெரிந்த பெரியோர்களுடனே கொலுவிருந்தான். எ-று. (உங)

நரகினின்றிடுமிருளையுந்திருமணிமுடிச்சுடர்நக்கிட
விரகினின்றொருகோடிஞாயிறுமிக்கெழுந்தனவாமெனப்
பெருகினின்றொளிர்மகரதோரணமிசைசிறந்துபிறங்கிட
வருகுநின்றணிகவரிகோடியரம்பைமாதரிரட்டவே.

[அழகிய ரத்நகிரீடத்தின் பிரகாசம் நரகலோகத்து இருளையும் விழுங்கி விடவும், உச்சாகம் கொண்டு ஒருகோடி சூரியர்கள் மிகுந்து தோன்றினதுபோல மிகுந்து நிலைபெற்று விளங்குகின்ற மகரதோரணங்கள் மேலே சிறப்பாக விளங்கவும், சமீபத்திலிருந்து அழகிய சாமரங்களை கோடி ரம்பாஸ்திரீகள் வீசவும், என்பதாம்.]

இ-ள். நரகில் நின்றிடும் - பாதாளலோகத்தில் இருக்கின்ற, இருளையும்- இருட்டையும், திருமணி முடிச்சுடர் - அழகிய ரத்ன கிரீடத்தின் பிரகாசம், நக்கிட - விழுங்கி விடவும், ஒருகோடி ஞாயிறு - ஒருகோடி சூரியர்கள், விரகில் நின்று - உச்சாகம் கொண்டு, மிக்கு எழுந்தனவாமென - கூடிவந்து தோன்றி னதுபோலவும், பெருகி - அதிகரித்து, நின்று ஒளிர் - நிலைகொண்டு விளங்கு கின்ற, மகரதோரணம் - மகரதோரணமானது, மிசை - மேலே, சிறந்து-பிறங் கிட - சிறந்து விளங்கவும், அருகு நின்று - சமீபத்தில் நின்று, அணிகவரி-அழ கிய சாமரங்களை, கோடியரம்பைமாதர் - கோடிக்கணக்கான ரம்பாஸ்திரீகள், இரட்டவும் - வீசவும், எ-று. ஏ - ஈற்றசை.

இச்செய்யுள் குளகம்; வருஞ்செய்யுளோடு ஒத்துப்பொருள் முடிகின்றது; மன்னன் இருந்தனன் என்று ஆகும், 'விரகில் நின்று' என்பதற்கு ஒரு கார ணத்தாலே கூடி, என்றும் பொருள் கூறுவர். (உச)

வெண்ணிழற்றிதழ்முத்தநீள்குடைமேனிழற்றுவதாயிரங்
கண்ணிழற்படவேயிருண்டுகறுத்துமீளவெளுப்பதாய்த்
தண்ணிழற்செயவிந்திராணிதடம்பெருங்குழலாயநா
ரொண்ணிழற்றிருமேனிதாவிடவும்பர்மன்னனிருந்தனன்.

[அழகிய பிரகாசத்தைச் செய்கின்ற முத்துக்குடைமேலே பிரகாசித்துக் கொண்டிருப்பது ஆயிரம் கண்களில் கருப்பு விழிபட்டுக் கருப்பாகவும், வெள்விழிபட்டு வெண்மையாகவும் தோன்றிக் குளிர்ந்த நிழலைச் செய்யவும், இந்திராணியின் பெரிய கூந்தலாகிய மேகத்தின் நிழல் இந்திரனின் அழகிய மேனியில் பிரகாசிக்கவும் தேவேந்திரன் கொலு இருந்தான் என்பதாம்.]

இ-ள். உம்பர் மன்னன் - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன், வெண்ணிழற்று - வெண்மையான பிரகாசத்தைப் பிரகாசிக்கச்செய்கிற, இதழ் - (கற்பக) மலரினால் சிங்காரிக்கப்பட்ட, முத்த நீழ்குடை - நீண்ட முத்துக்குடை, மேல் நிழற்றுவது - மேலே நிழலைப்பரப்புவது, ஆயிரங்கண் நிழல் படவே- இந்த இந்திரனுடைய ஆயிரம் கண்களின் ஒளிபடுதலினாலே, இருண்டு கறுத்து - இருண்டு கறுப்பாகி, மீள வெளுப்பதாய் - மறுபடி வெண்மையதாகி, தண்ணிழல்செய - குளிர்ந்த நிழலைக்கொடுக்க, இந்திராணி - இந்திராணியினுடைய, தடம் - விசாலமான, பெரும் - நீட்சியால் பெரிய, குழல் ஆயகார்- கூந்தலாகிய மேகத்தின், ஒண்ணிழல் - அழகிய நிழலானது, திருமேனி தாவிட- இந்திரனுடைய, அழகிய தேகத்திலே வீசவும், இருந்தான் - கொலு இருந்தான். எ-று.

முத்துக்குடையின் பிரகாசம் இந்திரனின் தேகத்திலுள்ள ஆயிரம் கண்களின் கருவிழிப் பிரகாசம்பட்டு கறுத்தும், பின் கண்ணின் வெண்ணிறம்பட்டு வெளுத்தும் தோன்றிற்று என்பதாம். 'இதழ்' ஆகுபெயராய் 'மலரை'க் காட்டிற்று, இனி இதற்கு 'ஒளி' என்றும் பொருள் கூறும் இது பொருந்தாது. ()

மேற்படி வேறு.

சுரர்தானவர்கேசரர்தும்புருசித்தர்விச்சா
தரர்சாரணர்பூதர்பைசாசர்கடந்திரக்கின்
னரர்நாரதனாகரியக்கரரக்கர்போற்ற
வராசனிருந்தனன்மாமணியாதனத்தே

[தேவர்களும், அசுரர்களும், கேசரர்களும், தும்புருக்களும் சித்தர்களும், விச்சாதரர்களும், சாரணர்களும், பூதர்களும், பைசாசர்களும், கின்னரர்களும், நாரதரும், இயக்கர்களும், ராட்சதர்களும் போற்ற தேவேந்திரன் பெரிய சிங்காதனத்தில் இருந்தான் என்பதாம்.]

இ-ள். சுரர் - தேவர்களும், தானவர் - அசுரர்களும், கேசரர் - கேசரர்களும், தும்புரு - தும்புருக்களும், சித்தர் - சித்தர்களும், விச்சாதரர் - விச்சாதரர்களும், சாரணர் - சாரணர்களும், பூதர் - பூதர்களும், பைசாசர்கள் - பைசாசர்களும், தந்திரக்கின்னரர் - யாழினைமீட்டுகிற கின்னரர்களும், நாரதன் - நாரதமுனிவரும், நாகர் - நாகலோகத்தவர்களும், இயக்கர் - இயக்கர்களும், அரக்கர்- அரக்கர்களும், போற்ற - துதிசெய்ப, வராசன் - அந்தச்சிரேஷ்டனான தேவ

ராஜன், மாமணி ஆதனத்தே - பெரிய நவரத்தினகசிதமான ஆசனத்தில், இருந்தனன் - இருந்தான். எ-று. ஏ - ஈற்றசை.

'கேசரர்' ஓர்வகை வித்தியாதரர், இவை, கலி நிலைத்துறை. (உசு)

ஆதித்தனோடம்புலியாரல்புதன் வியாழம்
சோதிப்பெருமாமதிச்சுக்கிரன் சௌரிதூம
கேதுப்பவனன் வருணன் சமன் கேடிலாத
நீதிக்குபேரன்முதலோர்கணிறைந்துமொய்த்தார்

[சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, அக்கினி, வாயு, வருணன், யமன், குபேரன், முதலியவர்கள் நிறைந்து கூடினார்கள் என்பதாம்.]

இ-ள். ஆதித்தனோடு - சூரியனுடனே, அம்புலி - சந்திரன், ஆரல்-செவ்வாய், புதன் - புதன், வியாழம் - வியாழன், சோதி - பிரகாசத்தையுடைய, பெரு - பெரிய, மாமதி - சிறந்த புத்தியை உடைய, சுக்கிரன் - சுக்கிரன், சௌரி - சனி, தூமகேது - அக்கினி, பவனன் - வாயு, வருணன் - வருணன், சமன் - யமன், கேடிலாத - கெடுதலில்லாத, நீதி - நீதியைக்கொண்ட, குபேரன் - குபேரன், முதலோர்கள் - முதலியவர்கள், நிறைந்து மொய்த்தார்- நிறைந்து கூடினார்கள். எ-று.

'கேடிலாத நீதிக்குபேரன்' என்றது, எமது சிவபெருமானுக்குத் தோழனும் தன்மையால்: 'சுக்கிரன்' - வெள்ளி, 'சுக்கிரன்' அசுரர்களுக்கு குருவாதலினால் 'சோதிப்பெருமா மதிச்சுக்கிரன்' என்றார். (உஎ)

சனகன்சமதக்கினிமிக்கசனற்குமார
னனகன்பிருகத்திரிசத்தியகத்தியன்சீர்க்
கனகன்சுகன்காசிபன்கௌதமனாபத்தம்பன்
பனகன்னுபமன்னியன்சங்கனுரோமபாதன்.

[சனகர்முதல் பல முனிவர்கள் வந்தார்கள் என்பதாம்.]

இ-ள். சனகன் - சனகன், சமதக்கினி - சமதக்கினி, மிக்க - பெருமைமிகுந்த, சனற்குமாரன் - சனற்குமாரன், அனகன் - அநகன், பிருகு - பிருகு, அத்திரி - அத்திரி, சத்தி - சத்தி, அகத்தியன் - அகத்தியன், சீர் - சிறப்பை உடைய, கனகன் - கனகன், சுகன் - சுகன், காசிபன் - காசிபன், கௌதமன்- கௌதமன், ஆபத்தம்பன் - ஆபத்தம்பன், பனகன் - பனகன், உபமன்னியன்- உபமன்னியன், சங்கன் - சங்கன், உரோமபாதன் - உரோமபாதன். எ-று.

இச்செய்யுள் குளகம்; வரும்பாட்டோடு பொருள் முடிவு பெறுகின்றது.

பாரத்துவாசன்குழுதாக்கன்பராசரன்கர்ப்
பூரத்துவாசவடமீனசைபூண்வசிட்டன்
வீரத்துவாசந்திசைவீசியகோசிகன்னந்
நேரத்துவாசவனைநண்ணிநிறைந்தணைந்தார்.

[முன்சொன்ன முனிவர்களோடு பாரத்துவாசன் முதலிய மற்ற முனிவர்களும் வந்தார்கள் என்பதாம்.]

இ-ள். பாரத்துவாசன் - பாரத்துவாசன், குமுதாக்கன் - குமுதாக்கன், பராசரன்-பராசரன், கர்ப்பூரத்து-கர்ப்பூரத்து, வாச - வாசங்கொண்ட, வடமீன்-அருந்ததி, நசை-விரும்புகின்ற, பூர்ணவசிட்டன்-ஞானத்தால் நிறைந்த வசிட்டனும், வீரத்துவாசம் - தனது வீரபரிமளமே, திசைவீசிய - எட்டுத்திக்கிலும் வீசுவதான, கோசிகன் - விஸ்வாமித்திரன், (முதலிய முனிவர்கள்) அங்கேரத்து - அந்த நேரத்திலே, வாசவனை நண்ணி - இந்திரனைக்கிட்டி, நிறைந்து அணைந்தார் - நிறைந்து கூடினார்கள். எ-று.

'அருந்ததி' வடதிசையில் நட்சத்திர வடிவாய் இருத்தலினால் வடமீன் என்னும் பெயர் எய்தது. 'விஸ்வாமித்திர' முனிவர் க்ஷத்திரியப் பிறப்புடையவராதலினால், "வீரத்துவாசந் திசைவீசிய கோசிகன்" என்றார். (உக)

அருமாமணியாதனமன்னவர்யார்க்குநல்கி
யிருமாதவத்தீரெனயாருமிருந்தபின்னர்
திருமாமுடிசாய்த்தெழிற்சங்கையமைத்துவிண்ணோர்
பெருமான்கனிவாய்மலர்ந்தின்னனபேசலுற்றான்.

[வந்த முனிவர்களுக்கெல்லாம் அருமையான பெரிய மணி ஆசனங்கள் தந்து, மகா தவத்தை உடையவர்களே இருங்கள் என்றுகூற அவர்களும் இருந்தபின்னர், தன் தலையால் வணங்கி தன் செவந்த கைகளை நீட்டி அரிச்சந்திரமகாராஜன் தன் கொவ்வைக்கனிபோலும் வாயைத்திறந்து பின் வருவனவற்றைச் சொல்லத் தொடங்கினான் என்பதாம்.]

இ-ள். அருமாமணி ஆதனம் - அருமையான பெருமையை உடைய ரத்தினாசனங்களை, அன்னவர் யார்க்கு நல்கி - அப்படி வந்திருந்த முனிவர்கள் எல்லோர்க்கும் கொடுத்து, இரும் மாதவத்தீர் என - பெரிய தவத்தை உடையவர்களே! இருங்கள் என்று சொல்ல, யாரும் இருந்தபின்னர் - அவர்கள் எல்லாரும் இருந்த பிறகு, விண்ணோர்பெருமான் - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன், திருமாமுடி சாய்த்து - தனது அழகிய பெருமைபொருந்திய தலையால் வணங்கி, எழில் செங்கை அமைத்து - அழகிய செவந்த கையை நீட்டி, கனிவாய் மலர்ந்து - கொவ்வைக்கனிபோன்ற வாயைத்திறந்து, இன்னன பேசல் உற்றான் - இப்படிப்பட்டவைகளைச் சொல்லத்தொடங்கினான். எ-று. (௩0)

பாய்மைக்கலோலக்கடல்சூழ்புவிபார்த்திவர்க்குள்
தீமைக்கும்வேநச்சிலுருக்குமிடங்கொடாது
வாய்மைக்குநன்னூல்வளனுக்குமனத்திலுற்ற
தூய்மைக்குமிக்கார்தமைபாய்ந்துனிர்சொன்மினென்றான்.

[கடல் சூழ்ந்த இந்த உலகத்தில் உள்ள அரசர்களில் தன் நாட்டில் பாவத்
துக்கும் துன்பத்துக்கும் இடம் கொடாமல் ஆண்டு சத்தியத்திலும்
நல்ல சாஸ்திர விசாரணைசெய்த செப்பத்திலும் மனப்பரி
சுத்தத்திலும் சிறந்தவர்களை நீங்கள் தெரிந்து
சொல்லுங்கள் என்பதாம்]

இ-ள். பாய் - (கரைமேலே அலை) பாய்கின்ற, மை - கறுத்த, கல் ஒலக் கடல் - கல் என்னும் சப்தத்தை உடைய கடல், சூழ்புவி - சூழ்ந்துள்ள பூமி (யிலுள்ள), பார்த்திவர்க்குள் - அரசர்களுக்குள்ளே, தீமைக்கும் - (தன் நாட்டிலுள்ளவர்களைத்) தீமைக்கும்; வேகச்சிறுக்குக்கும் - விரைந்து பற்றுகிற துன்பத்துக்கும், இடம் கொடாது - இடம் கொடுக்காமல் ஆண்டு; வாய்மைக்கும்-சத்தியத்திற்கும், நல்நூல் வளனுக்கும் - நல்ல சாஸ்திர விசாரணைசெய்த செப்பத்துக்கும், மனத்தில் உற்ற தூய்மைக்கும் - மனதிலே பொருந்தி யிருக்கின்ற பரிசுத்தத்துக்கும், மிக்கார்தமை - மிகுந்த யோக்கியர்களை, ஆராய்ந்து நீர்-நீங்கள் இன்னாரென்று தெரிந்து, சொல்மின் என்றான் - சொல்லுங்களென்று கேட்டான். எ-று.

'கல் ஒலக்கடல்' என்பதற்கு, 'கல் என்னும் சப்தத்தைக்கொண்ட, ஒலம்-அலைகளை உடைய கடல் - கடல்' என்றும் பொருள் கூறலாம். "மிக்கார் தமை ஆய்ந்துளீர் சொல்மின்" என்பது பாடமாயின் மிகுந்த யோக்கியர்களை ஆராய்ந்துள்ளவர்களே! சொன்மின் அவர்களை இன்னார் என்று எடுத்துச் சொல்லுங்கள் என்பதாம். (௩௧)

நறையோதியினளயிராணிநலந்திளைக்கு
மிறையோதியமாற்றமியாவருங்கேட்டபின்னர்ச்
சிறையோதிமமேல்வருநான்முகன்செல்வன்றெய்வ
மறையோதியநீதிவசிட்டனெடுத்துரைப்பான்.

[இந்திராணிக்குப் புருஷனாகிய இந்திரன் சொல்லியதை எல்லோரும்
கேட்டப் பின் அன்னவாகனத்தையுடைய பிரம்மாவின் புத்தி
ரராகிய வசிட்டர் சொல்லலாயினர் என்பதாம்]

இ-ள். நறை ஓதியினள் - வாசனை வீசப்பெற்ற கூந்தலை உடையவளான, அயிராணி - இந்திராணியின், நலம் திளைக்கும் - சுகத்தை அனுபவிக்கின்ற, இறை ஓதிய மாற்றம் - இந்திரன் சொல்லிய வார்த்தையை, யாவரும் கேட்ட பின்னர் - எல்லாரும் கேட்டபின்பு, சிறை ஓதிமமேல்-இறகை உடைய அன்னத்தின்மேல், வரு நான்முகன் செல்வன் - ஏறி வருகிற சதுர்முகக் கடவுளுடைய புத்திரனாகிய, தெய்வமறை ஓதிய - தெய்வத்தன்மை கொண்ட வேதங்கள் எல்லாம் ஓதிய, நீதி வசிட்டன் - நீதிமுறை தெரிந்த வசிட்டமுனிவர், எடுத்துரைப்பான் - சொல்லலானர். எ-று. (௩௨)

பாருக்கொருவன்பரதாரசகோதரன்வெம்
போருக்கொருவன்புகழுக்குமறைப்பொருட்கு

நேருக்கும்வீடாமனுநூனெறிக்கும்பொறைக்கு
மாருக்குமிக்கானரிச்சந்திரனாகுமென்றான்.

[இந்த உலகத்தில் எவரும் நிகர் இல்லாதவன், அந்நியர் மனைவிகளுக்கு
சகோதரனை ஒத்தவன், வெவ்விய யுத்தத்தில் ஒப்பற்ற வீரன்,
கீர்த்திக்கும், வேதார்த்த உணர்விற்கும் ஒழுங்குக்கும்,
மோக்ஷத்தைத் தரத்தக்க மனுசாஸ்திர நெறிக்கும்
பொறுமைக்கும் யாரிலும் சிறந்தவன் அரிச்
திரன் ஆகும் என்றான் என்பதாம்.]

இ-ள். பாருக்கு - இந்தலோகத்திலே, ஒருவன் - ஒப்பற்றவன், பரதார சகோதரன் - அந்நியர்களின் மனைவிகளுக்குச் சகோதரனானவன்; வெம்போருக்கு ஒருவன் - வெவ்விதான சண்டையிலும் நிகரற்றவீரன்; புகழுக்கும்-கீர்த்திக்கும், மறைப்பொருட்கும் - வேதார்த்த உணர்வுக்கும், நேருக்கும் - ஒழுங்குக்கும், வீடாம் - மோக்ஷத்தைத் தரக்கூடிய, மனுநூல் நெறிக்கும் - மனுசாஸ்திர மார்க்கத்துக்கும், பொறைக்கும் - பொறுமைக்கும், ஆருக்கும் மிக்கான் - எப்படிப்பட்ட சிறந்தவர்களுக்கும் சிறந்தவன், அரிச்சந்திரன் ஆகும் என்றான் - அரிச்சந்திரமகாராஜனே ஆவான் என்று கூறினான் எ-று.

"நேருக்கும்" சத்தியத்திற்கும், என்று பொருள் கூறுவர்; 'வீடாம் மனுநெறி. மோக்ஷமார்க்கமே ஆகிய மனுசாஸ்திர மார்க்கத்திற்கும், என்றும் பொருள் கூறுவர். (௩௩)

அன்னனதுகூறிடமைந்தரையட்டதாலு
முன்னாளமர்வென்றொருதண்டின்முடித்ததாலுந்
தனனாலுணராதசலத்தினன்றானழன்று
சொன்னார்தவத்தோங்கியகௌசிகன்கூறலுற்றான்.

[அப்படி வசிட்டமுனிவர் சொன்ன உடனே, கௌசிகமுனிவர் தன்னுடைய
புத்திரர்களை அந்த வசிட்டர் கொன்றதனாலும் தன் யுத்தத்தை ஒரு
தண்டினால் முடித்து வென்றதனாலும் தன்னாலே தானே
உணர முடியாதபடி அவ்வளவு கோபமுடையவனாய்
கொதித்து சொல்லத் தொடங்கினான் என்பதாம்.]

இ-ள். அன்னான் - அப்படிப்பட்ட வசிஷ்டர், அது கூறிட - அந்தவிதமாகச்சொல்ல, மைந்தரை சுட்டதாலும் - தன் புத்திரர்களைக் கொன்றதாலும், முன் நாள் - முன் நாளிலே, அமர் - தன் யுத்தத்தை, வென்று - ஜெயித்து, ஒரு தண்டின் முடித்ததாலும் - ஒரு யோகதண்டத்தினாலே முடிவுசெய்ததினாலும், தன்னால் உணராத - தன்னாலும் தெரிந்து கொள்ளக்கூடாத, சலத்தினன் - கோபத்தை உடையவனாய், தான் அழன்று-தான் கொதிப்புக்கொண்டு, சொன் ஆர் - பெருமை தங்கிய, தவத்து ஓங்கிய - தவத்தினால் உயர்ந்த,

கௌசிகன் கூறலுற்றான் - கௌசிகனாகிய விஸ்வாமித்திரமுனிவர் சொல்லத் தொடங்கினார். எ-று.

'அட்டதாலும்' 'அடு' என்னும் பகுதி அடியாகப் பிறந்தது; "கொன்னார் தவத்தோங்கிய" என்றதனால் அக்கௌசிகருக்குத்தவத்தால் வந்த பெருமையே யன்றி இயற்கையாகப் பெருமைக்கு ஏற்ற குணங்கள் பெற்றிலன் என்பது குறிப்பித்ததாகும். காதியின் புத்திரனாகிய கோசிகன், வேட்டையாட வனஞ் சென்றபொழுது வசிட்டர் விருந்துசெய்ய உண்டு, வசிட்டர் உத்தரவின்படி தனக்கும் தன் பரிவாரங்களுக்கும் உணவளித்த காமதேனுவைக்கவர அது அக்கௌசிகனின் சேனையை அழித்தது. இது தெரிந்து கௌசிகன் புத்திரர்கள் வெகுண்டு வசிட்டருடன் யுத்தத்திற்குவர, வசிட்டர் விழித்துப்பார்த்த மாத்திரத்தில் சாம்பலாயினர், கோசிகன் பெரும்படையோடு யுத்தத்திற்கு வர வசிட்டர் தன் யோகதண்டத்தை முன்னே நட்டார் அது அவர்கள் விடுத்த படைகளை எல்லாம் கவுளீகரித்துவிட்டது; உடனே கோசிகன் அரச வலிமையினும் தவவலிமை சிறந்ததென்று தன் நாட்டைத்துறந்து தவஞ்செய்து உயர்வு பெற்றான் என்பது புராணகதை. (ருச)

வெய்யன்பதகன்பரதாரவிருப்பன்வீணன்
பொய்யன்னிறையும்பொறையுஞ்சிறிதுமில்புல்லன்
கையன்கபடன்கயவன்றனை நல்லவென்றிவ்
வையன்றிருமுன்னுரைத்தாயிதென்னாகவென்றான்.

[பொல்லாதவன், பாதகன், அயலார் மனைவிகளை விரும்புகின்றவன், பிரயோஜன மற்றவன், பொய்யன் மனஒழுங்கும் பொறுமையும் சிறிதும் இல்லாத அற்பன், திருடன், வஞ்சகன், கீழானவன் ஆகிய இப்படிப்பட்டவனை நல்லவன் என்று இந்த அரசன் முன் சொல்லியது எதைக்குறித்து என்றான் என்பதாம்.]

இ-ள். வெய்யன் - கொடியவன், பதகன் - பாதகன், பரதார விருப்பன்- அன்னியர்களின் மனைவிகளின்மேல் இச்சையுள்ளவன், வீணன் - பயன் அற்றவன், பொய்யன் - பொய்பேசுகின்றவன், நிறையும் பொறையும் சிறிது மில் புல்லன் - மன ஒடுக்கமும் பொறுமையும் கொஞ்சமேனும் இல்லாத அற்பன், கையன் - திருடன், கபடன் - வஞ்சகன், கயவன்றனை - கீழானவன்றன்னை, நல்லன் என்று - நல்லவன் என்று, இவ் ஐயன் திருமுன் - இந்த அரசன் சமுகத்தில், உரைத்தாய் - சொன்னாய், இது என் ஆக என்றான் - இது என்ன பயனுக்காக என்றான். எ-று.

'கையன்' கீழான ஒழுக்கமுடையவன். 'கை' ஒழுக்கத்தைக் குறிக்கும் சொல். 'ஐயன்' உயர்ந்தவன், ஆரியா என்னும் வடமொழியிலிருந்து வந்தது என்றும் கூறுவர். (ருரு)

தீவெந்தொழிலின்றியொப்பற்றமெய்ச்செவ்வியோனைக்
காய்வெந்திறலாலிவைகூறியகௌசிகாநின்
வாய்வெந்திலைநின்மனம்வெந்திலைவம்புசொன்ன
நீவெந்திலைதெய்வமுநின்வயிற்பொய்த்ததென்றான்.

[தீயனவான கொடிய செய்கைகள் ஒன்றும் இல்லாமல், சத்தியமாகிய அழகைக்கொண்டவனை உன் கோபத்தோடு கூடிய கொடுமைக் குணத்தின் பலத்தால் இவைகளைச்சொன்ன உன் வாய் வேகவில்லை, உன்மனம் வேகவில்லைநீரும் வேக வில்லை உன்மட்டில்தெய்வமும் பொய்யா யது என்றான் என்பதாம்.]

இ-ள். தீவெந்தொழிலின்றி - (அதற்கு வசிட்டமுனிவர்) தீயனவான கொடிய செய்கைகள் ஒன்றும் இல்லாமல், ஒப்பற்ற - நற்செய்கைகளிலே நிகர் அற்ற, மெய்ச்செவ்வியோனை - சத்தியத்தைக்கொண்ட செம்மைக் குணத்த வனை, காய்வெந்திறலால்-உம்முடைய கோபமாகிய கொடும்பலத்தினால், இவை கூறிய - இவைகளைச் சொல்லிய, கௌசிகா - கௌசிகமுனிவரே! நின்வாய் வெந்திலை - இப்படிச்சொல்லிய உம்முடையவாயும் - வேகாதிருக்கின்றீர்; நின்மனம் வெந்திலை - உம்முடைய மனமும் வேகாதிருக்கின்றீர்; வம்பு சொன்ன நீ வெந்திலை - இப்படி இல்லாதவற்றைச்சொன்ன நீரும் வேகா திருக்கின்றீர்; தெய்வமும் - (உம்மை வேவச்செய்யாததினால்) தெய்வமும், நின்வயில் - உன்மட்டில், பொய்த்ததென்றான் - பொய்யாயிருக்கின்றது என் றார். எ-று.

"மெய்ச்செவ்வியோன்" சத்தியமாகிய அழகைக்கொண்டவனை, என்றும் பொருள் கூறுவர்; "காய்வெந்திறலால்" கோபத்தோடு கூடிய இயற்கைக் குணமாகிய தீக்குணங்களின் வலிமையால், என்றும் பொருள் கூறுவர். (௩௬)

தெய்வந்தனைநொந்துவசிட்டனிச்செய்திசெப்பக்
கைவந்தகொடுந்தொழிற்கௌசிகன்கன்றிநோக்கிப்
பொய்வந்தநின்வாய்புழுவாகுதலன்றிப்பொய்யா
மெய்வந்தவென்வாய்மனம்வேவலவென்றுசொன்னான்.

[தெய்வத்தை நொந்து வசிட்டமுனிவர் இச்சங்கதிகூற, கொடுந்தொழில் களில் தேர்ச்சிபெற்ற விஸ்வாமித்திரமுனிவர் கோபித்து நோக்கிப் பொய்சொல்லிய உன்வாய் புழுவாகுதலல்லாமல் பொய் அல் லாத மெய்வந்த என்னுடைய வாயும் மனமும் வேகா தென்று சொல்லினார் என்பதாம்.]

இ-ள். வசிட்டன் - வசிட்டமுனிவர், தெய்வந்தனைநொந்து-தெய்வத்தை நொந்துகொண்டு, இச்செய்தி செப்ப - இந்தச்சங்கதியைச் சொல்லவே, கொடுந்தொழில் - கொடுஞ்செய்கையில், கைவந்த - தேர்ந்த, கௌசிகன் - விசு வாமித்திரமுனிவன், கன்றி நோக்கி - கோபித்துப் பார்த்து, பொய்வந்த-

பொய்ச்சொற்கள் வெளிப்பட்ட, நின்வாய் - உன்வாய், புழுவாகுதல் அன்றி- புழுக்குமே அல்லாமல், பொய்யா - பொய்சொல்லாது, மெய்வந்த - சத்தியமே வந்த, என்வாய் - என்வாயும், மனம் - மனமும், வேவலவென்று சொன்னான்- வேகாதென்று கூறினார். எ-று.

'கைவருதல்' தேர்ச்சிபெறல்; 'கைவா' பகுதி 'வாய் மனம்' உம்மைத் தொகை; வாயும் மனமும் என விரியும். (ருஎ)

புனங்கொண்டசெந்தீப்புயறாவியெழுந்ததேபோல்
மனங்கொண்டடங்காப்பெருவன்மைவசிட்டற்கெய்திக்
கனங்கொண்டகற்பகமுடிவின்கணுருத்திரன்போற்
சினங்கொண்டெழுந்தான்விழித்தீத்திசைதோறுஞ்சிந்த.

[காட்டிலே பிடித்த நெருப்பானது மேகமண்டலத்தளவு நிமிர்ந்து கிளம்பி யதுபோல் வசிட்டருக்குப் பெரிதான சாமர்த்தியம் மனதிலே அட ங்காதுண்டாகி கனமான பிரமகற்ப முடிவில் தோன்றுகின்ற கால ருத்திரனைப்போல கண்களில் உண்டான நெருப் புப்பொறி எல்லாத்திக்கிலும் சிந்தக் கோபம் கொண்டு எழுந்தார் என்பதாம்.]

இ-ள். புனம் - காட்டிலே, கொண்ட - பிடித்த, செந்தீ - செவந்த நெருப் பானது, புயல்தாவி - மேகமண்டலத்தளவு தாவி, எழுந்ததேபோல் - கிளம்பி னதைப்போல, வசிட்டற்கு - வசிட்டமுனிவருக்கு, மனங்கொண்டு அடங்கா- மனமுழுதிலும் பற்றிப்பாவி அடங்காத, பெருவன்மைஎய்தி - பெரிய வலிமை உண்டாகி, கனம் கொண்ட - கனமான, கற்ப முடிவின்கண் - பிரமகற்ப முடி வில் (தோன்றும்), உருத்திரன்போல் - காலருத்திரனைப்போல, விழி - கண் களிலே, தீ - நெருப்பானது, திசைதோறும் சிந்த - எந்தத்திசைகளிலும் சிந்த, சினம் கொண்டு எழுந்தான் - கோபங்கொண்டு எழுந்தார். எ-று.

"வன்மை" வன்மம் என்றும் பொருள் கூறுவர். (ருஅ)

தாங்கிற்றிலன்கௌசிகன்றானுமவ்வாறுசீற்ற
மோங்கக்கதித்துற்றனனுற்றவப்போதிரண்டு
பாங்கிற்படுசெந்தழல்பம்பியுறங்குமிங்கு
நீங்கிற்றிலநீள்கொழுந்தோடிநிமிர்ந்ததன்றே.

[அதற்குக் கௌசிகமுனிவரும் பொறாதவராய் அதேவிதமாகக் கோபம் அதி கரிக்க அதட்டிக்கொண்டு நின்றார். அப்பொழுது இருவரிடத்தும் உண்டான கோபாக்கினி மேலும் கீழும் எல்லா இடங்களிலும் நீங்காது நெருங்கிப் பாவி உயர்ந்தது என்பதாம்.]

இ-ள். கௌசிகன் தானும் - அதற்குக் கௌசிகமுனிவரும், தாங்கிற் றிலன் - பொறாதவராய், அவ்வாறு சீற்றம் ஓங்க - அதேவிதமாகக் கோபம் அதி

கரிக்க, கதித்து உற்றனன் - அதட்டிக்கொண்டு நின்றார், உற்ற அப்போது- கோபம்கொண்ட அப்பொழுது, இரண்டு பாங்கில் - இருவர் இடங்களிலும், படுசெந்தழல் - உண்டாகிற செவந்த கோடாக்கினியானது, பம்பி உற்று-நெருங் கிக்கிளர்ந்து, அங்கும் இங்கும் - மேலும் கீழும், நீங்கிற்றில - நீங்காததாகி, நீள்கொழுந்தோடி - நீண்ட கோபாக்கினியின் சுவாலை ஓடி, நிமிர்ந்தது - உயர்ந் தது. எ-று. அன்று, ஏ - அசைகள்.

"கதித்து உற்றான்" பெருகி நின்றான் என்றும் பொருள், கொள்வர். ()

கானந்திகழ்தாமரைக்கட்பிறந்துற்றபுத்தேள்
தானந்தனைநாடியெழுந்தெரிதாக்கலோடும்
வானென்படும்வையகமென்படுமென்றுவானோர்
கோனன்றுநடுங்கியலைந்துகுலைந்தெழுந்தான்.

[அவ்விருவர் கோபாக்கினிகள் பிரலோகத்திலும் சென்று சுவாலைவீச, இந்திரன் வானுலகம் என்ன பாடுபடும் பூலோகம் என்ன பாடு படும் என்று நடுங்கி அலைந்து குலைந்தான் என்பதாம்.]

இ-ள். கானம் திகழ் - (அந்த நெருப்புச் சுவாலையானது,) வண்டுகள் இராகம் பாடுவதான, தாமரைக்கண் பிறந்து உற்ற - (உந்தித்) தாமரை மல ரிலே பிறந்திருக்கிற, புத்தேள் - கடவுளாகிய பிரமனின், தானந்தனை நாடி- உலகத்திலே சென்று, எழுந்து எரிதாக்கலோடும் - கிளம்பிக் கோபாக்கினி வீசினபொழுது, அன்று - அந்தச்சமையத்தில், வானோர்கோன் - தேவேந்தி ரன், வான் என்படும் - ஆகாசம் தான் என்ன பாடு படும், வையகமென் பாடு படும் - பூலோகந்தான் என்ன பாடுபடும், என்று - என்று, நடுங்கி - பயத்தினால் நடுங்கி, அலைந்து - அலைந்து, குலைந்து - குலைந்து, எந்தான் - எழுந்திருந்தான். எ-று.

'கானம் திகழ்' வாசனை வீசுகின்ற, என்றும் பொருளாம். 'பிரமன் தானம்' என்றது பொன்னுலகத்திற்கு மேல் உள்ள சத்தியலோகத்தை; (௪0)

ஆற்றாநெடுவெஞ்சினமாற்றியமர்த்தியுள்ளத்
தேற்றாமகவான்றிருச்செம்மலர்க்கையமைத்துக்
கூற்றால்விளைவாவனகண்டிடிற்கூறுநீர்மை
தோற்றாலிழிதக்கதுசெய்வதென்சொன்மினென்றான்.

[இந்திரன் அவர்கள் கோபத்தை ஆற்றித் தன் கைகளால் அமைத்து இருக்கச் செய்து, உங்கள் சொல்லின்படி அரிச்சந்திரன் குணங்களைக் காண்கிற போது இல்லாமல் உங்களில் யாராகிலும் தோற்றப்போனால் தோற்றவர்கள் தாழ்ந்து செய்யத்தக்கது எது சொல்லுங்கள் என்றான் என்பதாம்.]

இ-ள். ஆற்றா ஒருவராலும் தணிக்கக்கூடாத, நெடுவெஞ்சினம் ஆற்றி- அவ் இருவருடைய நெடிதான வெப்பங்கொண்ட கோபத்தைத்தணிப்பச்செய்து

உள்ளம் தேற்று - அவர்கள் மனத்தைத்தேற்றி, மகவான் - இந்திரனானவன், திருச்செம்மலர்க்கை அமைத்து - தனது அழகிய செவந்த தாமரைபோலும் கையால் அமைத்து இருக்கச்செய்து, கூற்றால் - உங்கள் சொல்லினால், விளைவாவன - (அரிச்சந்திரனிடத்தில்) உண்டாமவற்றை, கண்டிடில் - பரிசோதித்தால், கூறும் நீர்மை - நீங்கள் சொல்லுகின்றதன்மை, தோற்றால் - ஒருவர் பக்கம் தோற்றுப் போகுமானால், இழிதக்கது செய்வதென் - தோற்றவர்கள் தாழ்ந்து செய்யத்தக்கது என்ன, சொல்மின் என்றான் - சொல்லுங்கள் என்று கேட்டான். எ-று.

"ஆற்று நெடுவெஞ்சினமாற்றி" என்றது முரண்டொடை; என்னை, 'முரணத்தொடுப்பது முரண்டொடை' என்றாராகலின். "மகவான் திருச்செம் மலர்கை அமைத்து ஆற்றுநெடு வெஞ்சினமாற்றி யமர்த்தி யுள்ளந்தேற்று" என்றும் அன்வயித்துப் பொருள் கொள்ளலாம். (சக)

அன்பாற்கடலாயவசிட்டனமுன்றுமன்னன்
றன்பாற்றவறுண்டெனக்கௌசிகன்சாய்க்கினன்றே
வென்பாற்றவம்விட்டிழிகட்டலையோட்டினேந்தித்
தென்பாற்றனிச்செல்குவன்யானிதுதிண்ணமென்றான்.

[வசிட்ட முனிவர் கோபித்து இந்தக் கௌசிகர் அந்த அரிச்சந்திரனிடத்தில் நான் சொல்லியதற்கு மாறாகத் தீக்குணங்கள் இருப்பதாக மெய்ப்பித்தால் தலையோட்டிற் கள் ஏந்திக்கொண்டு தென்பால் உள்ள எமதிசைபோவேன் இது உறுதியாகும் என்றான் என்பதாம்.]

இ-ள். அன்பால் - அன்பினால், கடல் ஆய - கடல் போன்றவராகிய, வசிட்டன் - வசிட்டமுனிவர், அழன்று - கொதித்து, மன்னன் தன்பால்- அரிச்சந்திரனிடத்தில், தவறு உண்டென - நான் சொல்லியதற்கு மாறாகக் குற்றமுண்டு என்று, கௌசிகன் சாய்க்கின் - கௌசிகமுனிவர் காட்டினால், அன்றே - அப்பொழுதே, என்பால் தவம்விட்டு - என்னிடத்தில் உள்ளதாகிய தவத்தை விட்டு விட்டு, இழிகள் - தாழ்ந்த கள்ளைத், தலை ஓட்டில் ஏந்தி-தலை ஓட்டிலே தாங்கிக்கொண்டு, தென்பால் - தெற்கே உள்ள யமலோகத்திற்கு, தனி செல்குவன் - தனியே போவேன், இது திண்ணம் என்றான் - இது சத்தியம் என்று சொன்னார். எ-று.

'அழன்று' கோபங்கொண்டு, என்றும் கூறலாம்; 'சாய்க்கின்' மெய்ப்பித்தால் என்பதாம்; 'திண்ணம்' - உறுதி; என்றலும் ஆம்; (சஉ)

மாறுநெறிகொண்டவசிட்டனம்மன்னனுள்ளம்
வேறுமெனினிச்சபதத்தைவிளம்புவானே
தேறுவினிநின்சபதத்தையித்தேவர்கோன்முன்
கூறுயெனநாரதன்கோசிகனுக்குரைத்தான்.

[நாரதமுனிவர் கௌசிகனை நோக்கி மாறாத நல் ஒழுங்கைக்கொண்ட வசிட்டர் அரிச்சந்திரன் மனம் அவர் சொல்வதற்கு மாறாக இருந்தால் இப்படிப்பட்ட சபதத்தைச் சொல்லுவாரோ, ஆகையால் இனி நீ இந்தத் தேவேந்திரன் முன் சொல்லுவதைத் தெளிந்து சொல்வாயாக என்றார் என்பதாம்.]

இ-ள். நாரதன் - நாரதமுனிவர், கோசிகனுக்கு - விஸ்வாமித்திர முனிவனை நோக்கி, மாறுநெறிகொண்ட வசிட்டன் - மாறுபடாத நல் ஒழுங்கைக் கொண்ட வசிஷ்டர், அம்மன்னன் உள்ளம் வேறு ஆம் எனின் - அந்த அரிச்சந்திரமகாராஜனின் மனம் தாம் சொல்வதற்கு மாறாக இருக்குமானால், இச்சாபத்தை - இப்படிப்பட்ட சபதத்தை, விளம்புவானோ - சொல்லுவாரோ, இனி- ஆகையால் இனி, நின் சபதத்தை - உம்முடைய சபதத்தை, இத்தேவர்கோன் முன் - இந்தத் தேவேந்திரனுக்கு முன்னே, தேறு - தெளிந்து, கூறாய் என உரைத்தான் - சொல்லக்கடவீர் என்று சொன்னார். எ-று.

'மாறுநெறி' மாறுபடாத நீதி, எனினும் ஆம்; (சஙு)

நன்றாகுகவென்றவனாரதனுக்குரைத்துப்
பின்றாதிவன்போற்பெரும்பாடைபிதற்றமாட்டேன்
வென்றானெனின்யான்செய்தமெய்த்தவந்தன்னிற்பாதி
குன்றாமலீவேனெனக்கௌசிகன்கூறினானல்.

[விஸ்வாமித்திரர் நாரதரைப்பார்த்து நல்லது அப்படியே ஆகட்டும், என்று கூறி இந்த வசிட்டரைப்போல் பின் வாங்காமல் பெரிதான சபதத்தைச் சொல்லமாட்டேன், இந்த வசிட்டர் ஜெயித்தால் என் மெய்யான தவத்திலே பாதியைக் குறையாமல் தருவேன் எனக் கூறினார் என்பதாம்.]

இ-ள். நன்று ஆகுக என்று - நல்லது அப்படியே ஆகட்டும் என்று, அவன் நாரதனுக்கு உரைத்து - அந்த விஸ்வாமித்திரமுனிவர் நாரதருக்குச் சொல்லி, (பின்னும்), பின்றாது - பின் வாங்காமல், இவன்போல் - இந்த வசிட்டமுனிவரைப்போல, பெரும்பாடை பிதற்றமாட்டேன் - பெரிய சபதத்தைச் சொல்லமாட்டேன், வென்றான் எனின் - அந்த வசிட்டர் வெல்லுவாரேயானால், யான் செய்த மெய்த்தவந் தன்னில் - நான் செய்திருக்கிற மெய்யான தவத்திலே, பாதி - பாதிக்குக், குன்றாமல் - குறையாமல், ஈவேன் என - கொடுப்பேனென்று, கௌசிகன் - விஸ்வாமித்திரமுனிவர், கூறினான் - சொன்னார். எ-று. ஆல், ஈற்றசை.

'பெரும்பாடை' அதிகப்பேச்சு என்றும் உரைப்பர், 'பிதற்றல்' - உளறுதல்; (சச)

அமையும்மமையும்மிஃதேயரிச்சந்திரன்பால்
சமையுஞ்சமையின்றிறம்பாவதுஞ்சாற்றுறும

லைமயுஞ்சுரர்காவலிலென்றமிருத்திநீயிச்
சமைமாந்துறந்தேகெனப்பின்னருஞ்சாற்றலுற்றான்.

[நாரதர் இதுவே போதும் போதும் நான் இதை அரிச்சந்திரனிடம
தெரிவிக்காதபடி எம்மைத் தேவர்களின் காவலில் வைத்து நீர்
சொன்னதை மெய்ப்பிக்க இப்பொழுதே இதை விட்டு
நீங்கிப்போம் என்று கூறி பின்னும் சொல்லுகிறார்
என்பதாம்.]

இ-ள். அமையும் அமையும் இஃதே - (நாரதர்) இதுவே போதும் போதும்; அரிச்சந்திரன்பால் - அரிச்சந்திரனிடத்தில், சமையும் சபையில் - பொருந்தி யிருக்கின்ற சபையினிடத்தில், திறம் யாவதும் சாற்றாமல் - இங்கே நடந்த காரியங்கள் எதையும் சொல்லாதபடி, எமையும் - எம்மையும், சுரர் காவலில் - தேவர்கள் காவலுக்குள்ளே, என்றும் இருத்தி - நீர்தெரியச் செய்கிறவரைக்கும் இருக்கப்பண்ணி, நீ - நீர், இச்சமையம்-இந்த க்ஷணமே, துறந்து-இவ்விடம் விட்டு நீங்கி, ஏகென - போமென்று கூறி, பின்னரும் - அதற்கு மேலும், சாற்றலுற்றான் - சொல்லுகின்றார்; எ-று.

'அமையும்' என்றசொல் மகிழ்ச்சியால் அடுக்கி வந்தது. 'எமையும். எம்மையும் என்றதின் தொகுத்தல் விகாரம்; தன்னால் கெட்டுவிட்டது என்று வாராதபடிக்கு நாரதர் முன்னாலேயே தேவர் காவலில் தன்னை வைத்து விடும்படிக் கூறுகின்றார். (சரு)

ஆதித்தனருங்குலத்தண்ணலைநண்ணியான்ற
நீதித்தொழிலுங்நெறியுந்தருமத்தினேருஞ்
சாதித்தவுன்றன்சமைப்பாற்சமைத்தாற்றுமாற்றாற்
சோதித்திடுபோவெனச்சொல்லியச்சூழலுற்றான்.

[சூரியகுலத்து அரிச்சந்திரனை அடைந்து அவனிடத்தே அமைந்திருக்கின்ற
நீதித்தொழிலையும், நல்வழிகளையும், தருமத்தின் ஒழுங்குகளையும், இங்கு
உறுதியாகச்சொன்ன உம்முடைய முயற்சியாலும் உம்முடைய
சாமர்த்தியமான முடிக்கும் வன்மையினாலும் சோதித்து
அறிந்துகொள்ளும் போம் என்று கூறி நாரதர்
தேவர் காவலில் இருந்தார் என்பதாம்.]

இ-ள். ஆதித்தன் அரும் குல அண்ணலை - சூரியனுடைய அருமையான குலத்திலே பிறந்த அரிச்சந்திரனை, நண்ணி - அடைந்து, ஆன்ற - அங்கே பொருந்தியுள்ள, நீதித்தொழிலும் - நீதிச்செயல்களையும், நெறியும் - வழிகளையும், தருமத்தின் நேரும் - தருமத்தின் ஒழுங்குகளையும், சாதித்த உன் தன் சமைப்பால் - இங்கே உறுதியாகச்சொன்ன உம்முடைய முயற்சியாலும், சமர்த்து ஆற்றும் ஆற்றால் - உம்முடைய சாமர்த்தியத்தை முடிக்கும் வகையினாலும், சோதித்திடு - சோதித்து அறிந்துகொள்ளும், போ எனச் சொல்லி-

போ என்று நாரதர் கூறி, சூழல் உற்றான் - நாரதமுனிவர் தேவர்கள் காவலுக்குள் இருந்தார். எ-று.

அண்ணல், பெருமையையுடையவன், என்பது பொருள்; (அண் - அல்) யாவராலும் பெருமையினால் சமீபிக்க முடியாதவன் என்னும் காரணம் பற்றி வந்த பெயர். 'சுழல்' இடம், என்றும் பொருளாம்; (சகசு)

அக்காலையிலந்தவருஞ்சபையுங்குலைந்து
தொக்கார்முனிவோர்பலருந்தஞ்சூழல்சார்ந்தார்
மைக்கார்நிறவண்ணலைவாழ்த்தியக்கௌசிகன்போய்ப்
புக்கான்முதல்வைகியபொன்மலைச்சாரற்பொங்கர்.

[அப்பொழுது அந்த அருமையான சபைக்கூட்டம் கலைந்தது. அங்கே கூடியிருந்த முனிவர்கள் எல்லாம் தம் தம்மிடம் போய்ச்சேர்ந்தார்கள்; கௌசிக முனிவரும் இந்திரனை வாழ்த்திவிட்டு முன் தான் வசித்துக்கொண்டிருந்த மகாமேருவின் சாரலிலுள்ள சோலைக்குள் போய்ப்புகுந்தார் என்பதாம்.]

இ-ள். அக்காலையில் - அப்போது, அந்த அருஞ்சபையுங் குலைந்து-அந்த அருமையான சபைக்கூட்டமும் கலைந்து, தொக்கார் முனிவோர் - அங்கே கூடியிருந்தவர்களான முனிவர்கள், பலரும் - எல்லோரும், தம் சூழல் சார்ந்தார் - தங்கள் தங்கள் இடம்போய்ச் சேர்ந்தார்கள், கௌசிகன் - விஸ்வாமித்திர முனிவரும், மைக்கார் - கறுத்த மேகம்போன்ற, நிற அண்ணலை - நிறத்தை உடைய இந்திரனை, வாழ்த்தி - ஆசீர்வதித்து, முதல் வைகிய - முன்னே வசித்துக்கொண்டிருந்த, பொன்மலைச்சாரல் பொங்கர் - மகாமேருவின் சாரலிலே யுள்ள சோலைக்குப், போய்ப்புக்கான் - போய்ப்புகுந்தார். எ-று.

'மைக்கார் நிற அண்ணல்' என்றது இந்திரனை, இந்திரன் கருப்பு நிறமுடையவன், 'பொன்மலை' - மகா மேருமலை. (சஎ)

இந்திரகாண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - சஙஅ.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மூன்றுவது,

# வஞ்சனைக்காண்டம்.

[இதனுல் விஸ்வாமித்திரர் அரிசந்திரனிடத்தில் வஞ்சனையாக நடந்துகொண்ட காரியங்கள் கூறப்படுகின்றது.]

கலி விருத்தம்.

திருந்து செஞ்சொற் செழுமறைக் கௌசிகன்
பொருந்து நீர்க்கடற் பூதலஞ் சார்ந்துபண்
டருந்த வம்புரி சாலை யணைந்துபுக்
கிருந்த னன்பின் னிகழ்ந்த தியம்புவாம்.

[திருத்தமான சொற்களைக்கொண்ட செழுமையான வேதங்களை உணர்ந்த கௌசிகமுனிவர் பூமிக்கு வந்து முன் தான் அருமையான தவத்தைச்செய்த பர்னசாலைக்குள் போய் இருந்தார் பின் நடந்த வற்றைச் சொல்லுவோம், என்பதாம்.]

இ-ள். திருந்து - திருத்தமான, செம்சொல் - செவ்விய சொற்களைக் கொண்ட, செழுமறைக் கௌசிகன் - செழுமையான வேதங்களை உணர்ந்த விஸ்வாமித்திர முனிவரானவர்; பொருந்து நீர்க்கடல் பூதலம் சார்ந்து - நீர்பொருந்திய கடலால் சூழப்பட்ட பூலோகத்துக்கு வந்து, பண்டு - முன்னே, அரும் தவம்புரிசாலை - தாம் அருமையான தவத்தைச் செய்துக்கொண்டிருந்த பன்னசாலையை அணைந்து - போய்ச்சேர்ந்து, புக்கு இருந்தனன் - அதற்குள்ளே புகுந்து இருந்தான்; பின் நிகழ்ந்தது - பின்பு நடந்ததை, இயம்புவாம் - சொல்லுவோம். எ-று.

முனிவர்கள் வசிப்பது பர்னசாலை ஆதலின், சாலை என்பதற்கு பர்னசாலை என்ரும்; இவை பெரும்பாலும் மாச்சீர், மாச்சீர் விளச்சீர், 'விளச்சீர் என நான்குசீர், ஓரடிக்குக்கொண்ட கலி விருத்தம். (க)

செவ்வி யன்றனைத் தியவ னென்றியாம்
வெவ்வி யற்பட விண்ணவர் முன்புக
லவ்வி யத்தைமெய் யாக்கு மருந்திற
மெவ்வி யற்றென் றிதயத்தி லெண்ணினன்.

[நல்லவனைக் கெட்டவன் என்று தேவர்களுக்கு முன்னே நம் கொடுமை தோன்றச்சொல்லி விட்டோமே, நம்பொருமைச்சொல்லை உண்மை ஆக்கும் அரிதான வகை எவ்வகையால் ஆகும் என்று மனத் திலே ஆலோசிக்கலானார் என்பதாம்.]

இ-ள். செவ்வியன் தனை - நல்லவனை, தீயவன் என்று - கெட்டவன் என்று, யாம் - நாம், வெவ் இயல்பட - நமது கொடுமைதோன்ற, விண்ணவர் முன்புகல் - தேவர்களுக்கு முன்னே சொன்ன, அவ்வியத்தை - பொருமைச் சொற்களை, மெய் ஆக்கும் - உண்மையாக்கும், அரும்திறம் - அரிதானவகை, எவ் இயற்று - எந்தவிதத்தால் ஆகும் என்று, இதயத்தில் எண்ணினன்-மனத் திலே ஆலோசிக்கல் ஆனார். எ-று.

'வெவ் இயல்' கொடுமைத்தன்மை; 'விண்ணவர்' தேவர்கள் இட அடியாகப் பிறந்தபெயர், 'அவ்வியம்' 'பொருமை' ஈண்டு பொருமையினால் எழும் சொல்லைக் குறித்தது. (உ)

விண்ணி ழிந்து விரிமலர்ச் சோலையின்
கண்ணி ருந்த கவுசிகற் காண்டுமென்
றெண்ணி கந்த முனிவர்வந் தீண்டுபு
மண்ணில் வீழ்ந்து வணங்கி யிருந்தனர்.

[அப்போது, விஸ்வாமித்திரரைப்பார்க்க நினைத்து அளவற்ற முனி வர்கள் வந்து நெருங்கி மண்மேல் விழுந்து வணங்கி இருந்தனர் என்பதாம்.]

இ-ள். விண்ணிழிந்து - (அப்போது,) ஆகாயத்தை விட்டு இறங்கி, விரி மலர்ச் சோலையின்கண் - மலர்ந்த பூக்களை உடைய சோலையின் இடத்தில், இருந்த - இருக்கிற கவுசிகற் காண்டும் என்று - விசுவாமித்திரரைப் பார்ப்போமென்று, எண் இகந்த - கணக்கில்லாத, முனிவர் - முனிவர்கள், வந்து ஈண்டுபு - வந்து நெருங்க, மண்ணில் வீழ்ந்து - பூமியிலே வீழ்ந்து, வணங்கி இருந்தனர் - வணங்கி இருந்தார்கள். எ-று.

'விரிமலர்ச்சோலை' வரிவாகியதும் மலர்களை உடையதுமாகிய, சோலை, எனப் பொருள் கொள்வாரும் உண்டு; 'எண் இகந்த' எண்ணுதலைக்கடந்த, அதாவது எண்ணமுடியாத, அல்லது கணக்கற்ற, என்பதாம். (ந)

இருந்த பின்ன ரிருளறு நன்குணத்
தருந்த வத்த ரனைவரு மையநீ
பொருந்து பொன்னகர் புக்கபி னுற்றது
திருந்த வேயருள் செய்கென்று செப்பினர்.





[இப்படி இருந்தபின் மயக்கம் நீங்கிய நல்ல குணத்து முனிவர்கள் எல்லாம், விஸ்வாமித்திரரை நோக்கி நீங்கள் தெய்வலோகத்திற்குப் போனபோது அங்கு நடந்தவைகள் என்ன, அவைகளை எங்களுக்குத் திருந்தவே சொல்லி யருளவேண்டும் என்றார்கள் என்பதாம்.]

இ-ள். இருந்த பின்னர் - இப்படி இருந்தபின்பு, இருள் அறு - மயக்கம் நீங்கிய, நன்குணத்து - நல்ல குணத்து, அரும் தவத்தர் அனைவரும் - அருமையான தவத்தைச்செய்த முனிவர்கள் எல்லாம், ஐய! - ஐய விஸ்வாமித்திரமுனிவரே! நீ - நீர், பொருந்து பொன்னகர் - பொருத்தமான தேவலோகத்துக்கு, புக்கபின் - போனபிறகு, உற்றது - அங்கே நடந்தவைகளை, திருந்தவே - செவ்வையாக, அருள்செய்க - சொல்லி யருளுங்களென்று, செப்பினர் - கேட்டார்கள். எ-று.

'இருள் அற' அஞ்ஞான இருள் நீங்கிய, என்றும் பொருள் உரைக்கலாம், (நன்குணம், நன்மை - குணம்.) 'ஐய' அண்மை விளி; "பொருந்து பொன்னகர்" தேவர்கள் பொருந்தியிருக்கின்ற, தவத்தோர்கள் பொருந்தி யிருக்கின்ற, சிறப்புப்பொருந்தி யிருக்கின்ற, என விவ்வகைகளாகவும் பொருள் கூறுவர். 'திருந்தவே'' நாங்கள் செம்மையாதற் பொருட்டு என்றும் பொருள் கொள்ளலாம். (ச)

கொற்ற வாசவன் கூறிய மாற்றமு
மற்றோர் வாய்மை வசிட்ட னுரைத்ததும்
முற்ற வாறு முணர்த்துத லின்றியே
கற்றோர் வஞ்சனைக் கட்டுரை கூறுவான்

[இந்திரன் சொல்லியதும் அதற்கு வசிட்டர் சொல்லியதும் அதற்கு மேல் நடந்தவைகளையும் சொல்லாமல் வஞ்சனையாக ஒரு விஷயத்தைப் பொய்யாய்க் கற்பித்து கட்டு வார்த்தை சொல்லுகின்றார் என்பதாம்.]

இ-ள். கொற்ற வாசவன் - வெற்றிபொருந்திய தேவேந்திரன், கூறிய மாற்றமும் - சொல்லிய விஷயமும், மற்று ஓர் வாய்மை - அதற்கு வேறு பதில் வார்த்தை, வசிட்டன் உரைத்ததும் - வசிட்டர் சொல்லியதும்; உற்ற ஆறும்- அதற்குமேல் அங்கு நடந்தவைகளையும், உணர்த்துதல் இன்றியே - சொல்லாமல், கற்றோர் வஞ்சனை - வேறொரு வஞ்சனையைக் கற்பித்து, கட்டுரை கூறுவான் - புதிதாகக் கூடிய வார்த்தையைச் சொல்லுகின்றார்; எ-று.

'மற்று ஓர் வாய்மை வசிட்டன் உரைத்ததும்.' அதற்கு ஒப்பற்ற சத்தியத்தை வசிட்டர் சொல்லியதும், என்றும் பொருள் கூறுவர்; 'கற்றோர் வஞ்சனை' - ஒரு வஞ்சனையை மனதில் தெரிந்து கற்று, எனவும் பொருள் கொள்வர்; "கட்டுரை" புதிதாகப் பொய்யாய்க் கட்டியசொல். இனி தான் கொண்ட எண்ணத்திற்கு உறுதி பயப்பதாகிய சொல் என்றலும் ஆம். (ரு)

தெரியு நீண்மறைத் தேவ ரவைக்கணே
பெரிய மாதவர் பேசிய வேள்வியி
லரிய தொன்று முடிக்கு மவாவினுற்
கரிய வோலக் கடற்புவி யெய்தினேன்.

[தேவர்கள் சபையிலே, பெரிய முனிவர்கள் சொல்லிய யாகங்களில் அரியதாகிய ஒன்றை முடிக்கும் ஆசையினுல் இந்தப்புவிக்கு வந்தேன் என்று விஸ்வாமித்திரமுனிவர் கூறினுர் என்பதாம்.]

இ-ள். தெரியும் நீண்மறை - நீண்ட வேதங்களைத் தெரிந்திருக்கிற, தேவர் அவைக்கணே - தேவர்கள் சபையிலே, பெரிய மாதவர் - சிறந்த பெருமை பொருந்திய முனிவர்கள், பேசிய - சொல்லிய, வேள்வியில் அரியது ஒன்று - யாகங்களில் அருமையாகிய யாகம் ஒன்றை, முடிக்கும் அவாவினுல்- முடிக்கவேண்டும் என்னும் ஆசையினுல், கரிய ஒலக் கடல்புவி - கருநிறமாகிய ஒலித்தலையுடைய கடலால் சூழப்பட்ட பூமிக்கு, எய்தினேன்-வந்தேன். எ-று.

"தெரியும் நீண்மறைத்தேவர்" ஆராயக்கூடிய நீண்ட வேதங்களை யுணர்ந்த தேவர் என்றும் பொருளாம். (சு)

சொல்வ தொன்றுண்டு கேட்கத் துணிந்திரே
னல்ல தென்று கௌசிக ஞட்டினு
னல்ல தாயினு நின்சொன் மறுத்திடல்
வல்ல மோவென்று மாதவர் கூறினுர்.

[அதற்காக நான் சொல்லவேண்டியது ஒன்று இருக்கிறது, அதை நீங்கள் கேட்கச் சம்மதிப்பீர்களானுல் நல்ல காரியம் என்று கௌசிகர் கூற அதற்கு அந்த ரிஷிகள் தகாதகாரியமாய் இருந்தாலும் உன்னுடைய சொல்லைத் தடுத்துச்சொல்ல வல்லமை யுடையவர்களாய் இருக்கிறேமே என்று கூறினர் என்பதாம்.]

இ-ள். சொல்வது ஒன்று உண்டு - அதற்காக நான் சொல்லவேண்டியது ஒன்று இருக்கிறது, கேட்கத் துணிந்திரேல் - அதை நீங்கள் கேட்கச் சம்மதிப்பீர்களானுல், நல்லது என்று - நல்ல காரியமென்று, கௌசிகன் நாட்டினுன்- விஸ்வாமித்திரமுனிவர் சொல்லினுர், மாதவர் - அதற்கு அந்த ரிஷிகள், அல்லது ஆயினும் - தகாத காரியமாய் இருந்தாலும், நின்சொல் - உன்னுடைய சொல்லை, மறுத்திடல் வல்லமோ-தடுத்துச்சொல்ல வல்லமையுடையவர்களாய் இருக்கிறேமோ, என்று கூறினுர் - என்று கூறினுர்கள். எ-று.

"அல்லதாயினு நின்சொல் மறுத்திடல்" இது செந்தொடை. (எ)

அருளை யோத்தி யரிச்சந்தி ரனையுற்
றிருள ரும்பெறு வேள்விக்கி யான்சொலும்

பொருட ரும்படி யின்று பொருத்திநீர்
வருக வென்று மறைமுனி கூறினன்.

[அரிச்சந்திரனை நீங்கள் போய்க்கண்டு, அஞ்ஞானத்தை நீக்கும் ஒரு பெரிய யாகத்துக்கு நான் கேட்கும் பொருள் தரும்படி அவனைச் சம்மதிக்கச்செய்து வாருங்கள் என்று விஸ்வாமித்திரமுனிவர் கூறினர் என்பதாம்.]

இ-ள். அருள் - அருளை உடைய, அயோத்தி - அயோத்தியாபுரியை ஆள் கின்ற, அரிச்சந்திரனையுற்று - அரிச்சந்திரனை நீங்கள் போய்க்கண்டு, இருள் அறும் - அஞ்ஞானத்தை நீக்கும், பெரும் வேள்விக்கு - பெரிய யாகத்துக்கு, யான்சொலும் - நான் சொல்லுகின்ற, பொருள் தரும்படி - திரவியத்தைக் கொடுக்கும்படி, இன்று பொருத்தி - இப்பொழுதே அவனைச் சம்மதிக்கச் செய்துகொண்டு, நீர் வருக என்று - நீங்கள் போய் வாருங்கள் என்று, மறை முனி கூறினன் - வேத முனிவராகிய விஸ்வாமித்திரர் கூறினர். எ-று.

'அருள்' ஈகைத்தன்மையை உடைய, என்றும் பொருளாம். (அ)

கேட்ட போதி லெழுந்து கிரிப்பெருங்
காட்டை நீங்கிக் கடிபொழி னீங்கியே
கூட்ட மோடு குளிர்புனற் கோசல
நாட்டை நண்ணினர் நான்மறை யாளரே.

[அந்தச்சொல்லைக் கேட்ட உடனே முனிவர்கள் கூட்டமாய் எழுந்து மலைகளையும் காடுகளையும் வாசனைச் சோலைகளையும் தாண்டிச்சென்று குளிர்ந்த நீரையுடைய கோசலநாட்டைப் போய்ச்சேர்ந்தார்கள் என்பதாம்.]

இ-ள். கேட்டபோதில் - அந்தச்சொல்லைக் கேட்டவுடனே, நான்மறையாளர் - நான்கு வேதங்களையும் பாராயணஞ்செய்யும் முனிவர்கள், கூட்டமோடு - கூட்டத்துடனே, எழுந்து - புறப்பட்டு, கிரி - மலைகளையும், பெரும் காட்டை - பெரிய காடுகளையும், நீங்கி-கடந்து சென்று, கடிபொழில் நீங்கியே-வாசனை மிகுந்த சோலைகளையும் தாண்டியே, குளிர்புனல் - குளிர்ந்த நீரையுடைய, கோசலநாட்டை நண்ணினர் - கோசல நாட்டைப்போய்ச் சேர்ந்தார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

'குளிர் புனல்' குளிர்ந்த நீரையுடைய கங்கையை உடைய என்றும் பொருள் கூறுவர். (க)

கன்ன லோங்கு கழனியிற் பொன்னிறச்
சென்னல் கால்பொரச் சேக்கையின் மேவிய
வன்ன மென்கணு மோடு மணிநகர்
முன்னர் முன்னவன் மண்டபத் தெய்தினர்.

[கரும்புகள் ஓங்கி வளர்ந்துள்ள வயல்களில், பொன் நிறச்செந்நெல்
காற்றைவீச தாமரைப் படுக்கையில் இருக்கும் அன்னங்கள்
அங்கும் இங்கும் ஓடித்திரியும் அயோத்தியாபுரிக்குள்
சென்று ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரனின்
சபாமண்டபம் புகுந்தார் என்பதாம்.]

இ-ள். கன்னல் ஓங்கு கழனியில் - கரும்புகள் வளர்ந்திருக்கின்ற வயல்களில், பொன் நிறச் செந்நெல் - பொன்னிறத்தையுடைய செந்நெற் பயிர்கள், கால்பொர - காற்றை வீச, சேக்கையில் மேவிய அன்னம் - தாமரையாகிய படுக்கையில் இருக்கின்ற அன்னப்பட்சிகள், எங்கணும் ஓடும் - எல்லா இடத்திலும் பரந்து சென்று சஞ்சரிப்பதான, அணிநகர் - அழகுபொருந்திய அயோத்தியாபுரிக்குள்ளே (உள்ள), மன்னர் மன்னவன் - ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரமகாராஜனின், மண்டபத்து எய்தினர் - சபா மண்டபத்துக்குள்ளே போனார்கள். எ-று.

'கால்'—காற்று; "கால்பொர" காற்று உண்டாகும்படி சாமரைபோல் அசைய, என்பதாம்.

எய்தி னாரை யிறைஞ்சி யிருத்தியே
நொய்தின் மன்னவன் மாமுக நோக்குறீஇ
வைதி கத்திரு மாதவத் தீர்வந்த
செய்தி செப்புமென் றானுரை செய்குவார்.

[அரிச்சந்திரன் அப்படி வந்த முனிவர்களை வணங்கி இருக்கச்செய்து
அவர்களை நோக்கி நீங்கள் வந்த காரியம் என்னவென்று கேட்க
முனிவர்கள் சொல்லுகின்றார்கள் என்பதாம்.]

இ-ள். எய்தினாரை - அப்படி வந்த முனிவர்களை, இறைஞ்சி - வணங்கி, இருத்தியே - இருக்கச்சொல்லி, மன்னவன் - அரிச்சந்திரமகாராஜன், நொய்தின் - விரைவில், மாமுகம் நோக்குறீஇ - (அந்த முனிவர்களுடைய) திருமுகங்களைப்பார்த்து வைதிகத்திரு மாதவத்தீர் - வேதக்கிரமமாய் நடக்கின்ற மிகப்பெரிய தவமுனிவர்களே! வந்தசெய்தி - நீங்கள் வந்த காரியத்தை, செப்பும் என்றான் - சொல்லுங்கள் என்றான், உரைசெய்குவார் - அதற்கு அம்முனிவர்கள் சொல்லுகிறார்கள். எ-று.

"நோக்குறீஇ" சொல்லிசை அளபெடை. (கக)

மன்ன கேளொரு வாசகங் கௌசிகன்
சொன்ன துண்டது நல்லநத் துணிந்திடி
னின்ன தென்றிங் கியம்புது மென்றனர்
பின்னர் மன்னவன் பேசத் தொடங்கினான்.

[அம்முனிவர்கள் அரிச்சந்திரனை நோக்கி விஸ்வாமித்திரமுனிவர் சொல்லிய ஒரு சங்கதி உண்டு, அதை நீ கொடுக்கச் சம்மதித்தால் சொல்லுகின்றேம் என்றார்கள், அதற்கு அரிச்சந்திரன் பதில் கூறுகின்றார் என்பதாம்.]

இ-ள். மன்ன - அரசனே! கேள் - கேட்பாயாக, ஒருவாசகம் கௌசிகன் சொன்னது உண்டு - விசுவாமித்திரமுனிவர் சொல்லி அனுப்பினது ஒரு வார்த்தை உண்டு, அது - அதை, நல்கத்துணிந்திடின்-நீர் ஒப்புக்கொண்டு கொடுக்கச் சம்மதிப்பீரேயானால், இன்னது என்று - அது இன்னதென்று, இங்கு இயம்புதும் என்றனர்-இங்கு சொல்லுகின்றேம் என்றார்கள்; பின்னர்-பிறகு, மன்னவன் - அரிச்சந்திரமகாராஜன், பேசத்தொடங்கினான் - சொல்லத்தொடங்கினான். எ-று. (கஉ)

இறுதி யெய்த லெனினு மினிதுமற்
றறுதி யற்றுள தாயெற் கமைவதே
லுறுதி நீருரை செய்ததற் கொத்திடப்
பெறுதும் யாமென மாதவர் பேசுவார்.

[உங்களுக்குக் கிடைக்காததாய் எனக்குக் கிடைப்பதாய் இருக்குமானால் எனக்குக் கேடு வருவதாய் இருந்தாலும் நல்லதே நீங்கள் சொல்லியதற்குச் சம்மதிக்கின்றேன் இது உறுதி என்றான். அதற்கு அந்தமுனிவர்கள் சொல்லுகிறார்கள் என்பதாம்.]

இ-ள். இறுதியற்றுளதாய் - (உங்களுக்கு) கிட்டாமல் அற்றுப்போனதாய், எற்கு அமைவதேல் - எனக்குக் கிட்டுவதாய் இருக்குமேயானால், இறுதி எய்தல் எனினும் இனிது - கெடுதிவருவதாய் இருந்தாலும் நல்லதே, நீர் உரை செய்ததற்கு - நீங்கள் சொல்லியதற்கு, ஒத்திடப் பெறுதும் யாம் உறுதி என - நாம் சம்மதிக்கின்றேம் இது உறுதி என, மாதவர் பேசுவார் - அதற்கு அத்தவமுனிவர்கள் சொல்லுகிறார்கள். எ-று.

'உறுதிநீர் உரைசெய்ததற்கு' என்பதற்கு நீங்கள் உறுதியாகச் சொல்லியதற்கு, என்றும், நீங்கள் சொல்லுவதாகிய எனக்கு உறுதிதரப்போகிற அதற்கு என்றும் பொருள் செய்வர். (கங)

சந்தி ராதித்தர் தானவர் வானவர்
ரிந்தி ராதிக ளியாவர்க்கு மெய்திட
வந்தி ராவொரு வேள்வி வளர்ப்பதை
நொந்தி ராமுற்ற நண்ணிதி னெண்ணினேம்.

[சந்திரன், சூரியன், அசுரர்கள், தேவர்கள், இந்திரர் முதலியவர்கட்கும் செய்தற்கு முடியாத ஒரு யாகத்தை முடிப்பதற்காக இரவெல்லாம் சூட்சமமாக எண்ணினேம் என்பதாம்.]

இ-ள். சந்திராதித்தர் - சந்திர சூரியர்கள், தானவர் - அசுரர்கள், வானவர் - தேவர்கள், இந்திராதிகள் - இந்திரன் முதலானவர்கள், யாவர்க்கும் எய்

திட வந்திரர் - எவர்களுக்கும் செய்து கொள்ளுதற்கு முடியாத, ஒரு வேள்வி வளர்ப்பதை - ஒரு யாகத்தைச்செய்தலைப்பற்றி, நொந்து - மிகச்சிரமப்பட்டு, இராமுற்ற - இராத்திரி முழுதும், நுண்ணிதின் எண்ணினேம் - சூட்சமமாக எண்ணினேம். எ-று.

"வளர்பதை நொந்திராமுற்ற" என்பதற்கு 'வேள்வி வளர்ப்பதற்காக வருத்தப்பட்டு இருக்காமல் முடிக்க' என்றும் பொருள் கூறுவாம். (கச)

வேந்த வப்பொரு வேள்விக் கிரும்பொரு
ளீந்தி டற்குரி யாரெவ ரென்றியா
மாய்ந்த நம்முனை யன்றிமற் றில்லெனப்
போந்த னம்மென மன்னன் புகலுவான்.

[அரிச்சந்திரமகாராஜனே அந்தப் பெரிய யாகத்துக்கு வேண்டிய பெரும்பொருளைத் தரத்தக்கவர் யாரென்று ஆராய்ந்தோம், உன்னையன்றி வேறு இல்லை என்று வந்தோம் என்று கூற அரிச்சந்திரன் சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். வேந்த - அரசனே!, அப்பெருவேள்விக்கு - அந்தப்பெரிதான யாகத்துக்கு, இரும்பொருள் - (வேண்டிய) பெரும்பொருளை, ஈந்திடற்கு உரியார் - கொடுக்கத்தக்கவர்கள், எவர் என்று - யாரென்று, யாம் ஆய்ந்தனம்-நாங்கள் ஆராய்ந்து பார்த்தோம்; உனை அன்று மற்று இல் என - உன்னை அல்லாமல், வேறு ஒருவரும் இல்லை என்று, போந்தனம் என - தெரிந்து வந்தோம் என்றுகூற, மன்னன் புகலுவான் - அதற்கு அரிச்சந்திரன் சொல்லுகிறான். எ-று.

(ஆய்ந்தனம் - உன்னை அன்றி) 'ஆய்ந்தன முனையன்றி, என்று புணரல் வேண்டும், 'ம்' தோன்றியது விரித்தல் விகாரம், 'ன்' கெட்டது தொகுத்தல் விகாரம். (கரு)

பாவு மிப்பொருள் பற்றவு மிக்கது
தரலெ னக்கியல் பென் றரிச்சந்திரன்
றிரவி யங்கொடு வம்மெனச் செப்பலும்
பிரம ளரிகண் மீளவும் பேசுவார்.

[அந்தப்பணத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள் அதைத்தருதல் எனக்கு முறையாகும், என்று சொல்லி அரிச்சந்திரன் பொருள்கொண்டு வாருங்கள் எனச்சொல்ல பிரம்மசாரிமுனிவர் திரும்பவும் சொல்லுகின்றார்கள் என்பதாம்.]

இ-ள். பாவும் - துதிக்கக்கூடிய, இப்பொருள் - இந்தத்திரவியத்தை, பற்றவும் - நீங்கள் பெற்றுக்கொள்ளவும், மிக்கது - அதிகமாகிய அதை, தரல் எனக்கு இயல்பு - உங்களுக்குத் தருதல் எனக்கு முறையாகும், என்று-என்று

அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜன், திரவியங் கொடுவம் என - திரவியம் கொண்டு வாருங்கள் என்று, செப்பலும் - சொன்ன உடனே, பிரமசாரிகள்- அந்தப் பிரம்மசரியத்தை உடைய முனிவர்கள், மீளவும் பேசுவார் - மறுபடியும் சொல்லுகிறார்கள்; எ-று,

'பாவும் இப்பொருள்' மிகுந்த இப்பொருள் என்றும், கூறுவர் 'இயல்பு' நீதியும் ஆம். (கரு)

இன்று வேண்டல மியாக மியற்றிடு
மன்று நல்க வமையு மெமக்கென
நன்று நன்றென மன்ன னவின்றபின்
நின்று வாழ்த்தி நெடுநகர் நீங்கினர்.

[இப்போது வேண்டாம், நாங்கள் யாகம் நடத்துகின்ற காலத்தில் எங்களுக்குக் கொடுக்கச் சம்மதியும் என, நல்லது நல்லது என்று அரிச்சந்திரன் சொன்னபின், முனிவர்கள் அரசனை வாழ்த்திச் சென்றார்கள் என்பதாம்.]

இ-ள். இன்று - இப்பொழுது, வேண்டலம் - வேண்டோம், இயாகம்- வேள்வியை, இயற்றிடும் அன்று - செய்கின்ற அக்காலத்தில், எமக்கு - எங்களுக்கு, நல்க - கொடுப்பதற்கு, அமையும் என - சம்மதியுங்கள் என்று சொல்ல, மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், நன்று நன்று என-நல்லது நல்லது என்று, நவின்றபின் - சொன்னபின்பு, நின்று வாழ்த்தி - எழுந்து நின்று ஆசீர்வதித்து, நெடுநகர் நீங்கினர் - அந்த நெடிய நகரைவிட்டுப் போனார்கள். எ-று. ()

செந்நெல் வெண்ணெல் விளையுஞ் செறுக்களுங்
கன்னன் மன்னுங் கழனியுஞ் சோலையு
மன்ன மாடுந் தடமு மகன்றுபோய்ப்
பன்ன சாலைப் பழுவத்து ளெய்தினர்.

[செந்நெல் வெண்ணெல் விளையும் வயல்களும், கரும்புகள் விளைகிற வயல்களும் சோலைகளும், அன்னங்கள் சஞ்சரிக்கின்ற குளங்களும் கடந்துபோய், பன்னசாலையை உடைய சோலைக்குள்ளே சென்றார்கள் என்பதாம்.]

இ-ள். செந்நெல் - செவந்த நெல்லும், வெண்ணெல் - வெள்ளை நெல்லும், விளையும் - விளைவதான, செறுக்களும் - வயல்களும், கன்னல் - கரும்புகள், மன்னும் - விளைகிற, கழனியும் - வயல்களும், சோலையும் - சோலைகளும், அன்னம் ஆடும் - அன்னங்கள் சஞ்சரிக்கின்ற, தடமும் - குளங்களும், அகன்று போய் - கடந்துபோய், பன்னசாலை - பன்னசாலையையுடைய, பழுவத்துள்- சோலைக்குள்ளே, எய்தினர் - சென்றார்கள். எ-று.

செம்மை நெல், வெண்மை நெல் என்பன முறையே செந்நெல் வெண்ணெல் என ஆயின; 'செறு' கழனி என்பன ஒருபொருட் சொற்கள். (கஅ)

அன்ன காலை யருந்தவக் கௌசிகன்
றன்ன டித்துணை தாழ்ந்தரிச் சந்திரன்
பொன்ன ளிக்கப் பொருந்தின னென்றவர்
சொன்ன பின்னர்தஞ் சூழலிற் போயினர்.

[போன உடன் முனிவர்கள் விஸ்வாமித்திரர் பாதங்களில் விழுந்து வணங்கி அரிச்சந்திரன் திரவியம் கொடுக்கச் சம்மதித்தான் என்று சொல்லி விட்டுத் தம்மிடம் சென்றனர் என்பதாம்.]

இ-ள். அன்னகாலை - போன அப்பொழுதே, அருந்தவக் கௌசிகன் தன் - அருமையான தவத்தைச்செய்த விஸ்வாமித்திரமுனிவரினுடைய, அடித்துணைதாழ்ந்து - பாதங்கள் இரண்டிலும் விழுந்து வணங்கி, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜன், பொன் அளிக்க - திரவியத்தைக் கொடுக்க, பொருந்தினன் என்று - சம்மதித்தானென்று, அவர் சொன்ன பின்னர் - அந்த முனிவர்கள் சொன்னபின்பு, தம் சூழலிற் போயினர் - தங்கள் இடங்களுக்குப் போயினார்கள். எ-று. (கசு)

அடிவ ணங்கி யருந்தவர் போனபின்
கடிது சிற்சில திங்கள் கழித்துநீள்
வடிசு டர்ப்படை மன்னனைக் காணிய
கொடிய பாதகக் கோசிகன் றோன்றினான்.

[முனிவர்கள் தன்னை வணங்கிக்கொண்டு சென்றபின் விரைவிலே சிற்சில மாதங்கள் சென்றபின், அரிச்சந்திரனைக் காண்பதற்காக கொடுமையான பாவங்களைச்செய்யத் துணிந்துகொண்ட கௌசிகன் தோன்றினான் என்பதாம்.]

இ-ள். அரும் தவர் - அந்த அரிதான தவமுனிவர்கள், அடிவணங்கி - தன்னுடைய பாதங்களை வணங்கிக்கொண்டு, போனபின் - போனபின்பு, கடிது - விரைவிலே, சிலசில திங்கள் கழித்து - சிற்சில மாதங்கள் சென்றபின்பு, நீள் - நீண்ட, வடிசுடர்ப்படை - வடித்தெடுக்கப்பட்ட ஒளிபொருந்திய வேலாயுதத்தை உடைய, மன்னனைக்காணிய - அரிச்சந்திரமகாராஜனைக் காண்பதற்காக, கொடிய பாதகக் கௌசிகன் - கொடுமையான பாவங்களைச் செய்யத் துணிந்துகொண்ட கௌசிகன்; தோன்றினன் - வந்தார். எ-று.

'படை' ஆயுதப்பொது ஈண்டு வேலைக்குறித்தது; "கொடிய பாதகக் கௌசிகன்" கொடியனும், பாதகத்தைச்செய்யத் துணிந்துகொண்டவனுமாகிய விஸ்வாமித்திரன் என்றும் பொருள் கூறலாம். (உ0)

கெடுக்க வந்தன னென்று கிலேசியா
விடுக்க ணுற்றிளந் தென்ற லியம்பிட
மடுக்க ளும்மலர் வாவியுஞ் சோலையு
நடுக்க மெய்தி யலைந்தன நாடெலாம்.

[இளம் தென்றல் விஸ்வாமித்திரர் கெடுக்க வந்திருப்பதைக் கண்டு கிலேசப்பட்டுத் துக்கித்துக் கூறுவதுபோல் வீச; மடுக்களும், மலர் வாவியும், சோலைகளும் நாடெலாம் நடுக்கம் கொண்டு அலைதல் ஆயின என்பதாம்.]

இ-ள். இளம் தென்றல் - இளமையாகிய தென்றற் காற்றானது, கெடுக்க வந்தனன் என்று கிலேசியா - (விஸ்வாமித்திரமுனிவர் கெடுக்க வந்தனர் என்று கிலேசப்பட்டு, இடுக்கண் உற்று - (மிகவுந்) துக்கித்து, இயம்பிட - சொல்லுவனபோல் காற்றைவீச, மடுக்களும் - மடுக்களும், மலர்வாவியும் - தாமரைக் குளங்களும், சோலையும் - சோலைகளும், நாடெலாம் - நாடுகளில் எல்லாம், நடுக்கம் எய்தி - நடுக்கம் கொண்டு, அலைந்தன - அலைதல் ஆயின. எ-று.

தென்றல் வீசுவதை விஸ்வாமித்திரர் கெடுக்க வந்திருப்பதைக் கிலேசித்து இடுக்கண் உற்றுக் கூறுவதாகவும், மடுக்களும், மலர்வாவியும், சோலையும், அலை வீசுதலை நடுங்குவதாகவும் கற்பித்தார். (உக)

கள்ள நீதிக் கவுசிக னெண்ணிய
துள்ள மார வுணர்ந்திள மந்திகட்
டுள்ளி நீங்கின சோலைக டோறுமென்
புள்ளி ருந்தன பொய்கைக டோறுமே.

[சோலைகளில் இளங்குரங்குகள் விஸ்வாமித்திர முனிவனின் கள்ளத்தன்மையை அறிந்துகொண்டு பயந்து ஓடுவனபோலத்துள்ளிக் குதித்து ஓடின பறவைகள் பயந்து அடங்கினவைகள்போலக் குளங்களில் அடங்கி இருந்தன என்பதாம்.]

இ-ள். கள்ள நீதி - கள்ளமான ஒழுங்கைக்கொண்ட, கௌசிகன் எண்ணியது - விஸ்வாமித்திரமுனிவர் எண்ணியிருப்பதை, உள்ளம் ஆர உணர்ந்து-தம் தம் மனதார அறிந்து, இளமந்திகள் - இளமையாகிய குரங்குகள், சோலைகள் தோறும் - சோலைகள் எல்லாம், துள்ளி நீங்கினதைப்போலக் குதித்துப் போயின, மென்புள் - மிருதுத்தன்மையை உடைய பறவைகள், பொய்கைகள் தோறும் இருந்தன - (அஞ்சி அடங்கினவைகளைப்போல்) குளங்களிலெல்லாம் அமைதியாய் இருந்தன. எ-று. ஏ - ஈற்றசை.

குரங்குகள் பாய்ந்தோடுவதை விஸ்வாமித்திரரின் கள்ளமறிந்து பயந்து பாய்வதுபோலவும், பறவைகள் குளங்களில் அடங்கி இருப்பதை விஸ்வாமித்திரரைக்கண்டு பயந்து இருப்பதாகவும் கற்பித்தார்.

அலைகள் சாய்த்தகல் வாவியின் மீனெலா
நிலைகள் சாய்த்தய னீங்கின வாழைகள்
குலைகள் சாய்த்தயல் குப்புற்று நின்றன
தலைகள் சாய்த்தன சாலியி னீட்டமே

[குளங்களின் மீன்கள் எல்லாம் அலைகளை மோதிக்கொண்டு தங்கள் இடம் விட்டுத் தூரத்தேபோயின, வாழைகள் எல்லாம் குலைகளைச் சாயும் படி விட்டுக்கொண்டு அருகே குனிந்து நின்றன, நெற் பயிர் கள் எல்லாம் தலைசாய்த்து நின்றன, என்பதாம்.]

இ-ள். அலைகள் சாய்த்து - அலைகளைமோதி, அகல்வாவியின் மீன்எலாம்- அகன்றிருக்கிற குளங்களில் உள்ள மீன்கள் எல்லாம், நிலைகள் சாய்த்து - தங் கள் நிலைகளைவிட்டு, அயல் நீங்கின - தூரத்தே போதல் ஆயின, வாழைகள்- வாழைமரங்கள் எல்லாம், குலைகள் சாய்த்து - குலைகளைச் சாயும்படி விட்டுக் கொண்டு, அயல் குப்புற்று நின்றன - அருகே குனிந்து நின்றன, சாலியின் யீட்டம் - நெற்பயிரின் கூட்டம் எல்லாம், தலைகள் சாய்த்தன - தலைகளைத் தாழ்த்தி நின்றன. எ-று. ஏ - ஈற்றசை.

மீன்களும், வாழைகளும், நெற்பயிரும் விஸ்வாமித்திரரைக்கண்டு அவர் செய்யப்போம் கொடுமைக்காக இவ்வாறு நின்றன என்றும் கருத்துத் தோன்ற வைத்தார். (உங)

எள்ளை யேயறி வற்றெடுத் தார்கையிற்
பிள்ளை யாதலிற் பெய்மலர்க் காவெலாங்
கிள்ளை பாடின கேகய மாடின
கள்ளை யுண்டலின் வண்டு களித்தவே.

[கிள்ளைகள் எடுத்தார் கைப்பிள்ளை ஆதலினால் எள்ளத்தனை அறிவும் இன்றிப் பாடின மயில்கள் ஆடின, கள்ளையுண்டிருந்ததால் வண்டுகள் சந்தோஷமாய் இருந்தன என்பதாம்.]

இ-ள். கிள்ளை - கிளிகள், எடுத்தார் கையில் - எடுத்தவர்கள் கையில், பிள்ளையாதலில் - பிள்ளையானபடியினாலே, எள்ளை எய் அறிவு அற்று - எள்ளை ஒத்த அவ் அளவு அறிவும் இல்லாமல், பெய்மலர்க்கா எலாம் - தேன் ஒழுகு கின்ற புஷ்பங்களை உடைய சோலைகளில் எல்லாம், பாடின - பாடுதல் ஆயின, கேகயம் ஆடின - மயில்களும் ஆடின, வண்டு - வண்டுகள், கள்ளைஉண்டலின்- தேனைக்குடித்திருக்கின்ற படியினால், களித்த-சந்தோஷத்தோடிருந்தன. எ-று. ஏ - ஈற்றசை.

(விஸ்வாமித்திரன் எண்ணம் அறிதற்கு முடியாதபடி கிளிகள் எடுத்தார் கைப்பிள்ளை ஆதலின் பாடின என்றும், கள்ளையுண்டவர் அறிவு மயங்கி யிருப் பாராதலின், வருவன அறிதல் கூடாதவர் ஆவர், அதுபோலக் கள்ளையுண்ட வண்டுகள், விஸ்வாமித்திரனால் வரப்போம் தீங்கை அறிதற்கு அறிவின்றி கள் ளின் மயக்கத்தால் அறிவு மயங்கி இருந்தமையினால் களித்த என்பதும். இப் பாட்டினாற் போந்த பொருள். (உச)

மாட மாளிகை மண்டப மாமதி
லாட ரங்க மகழிற் றுளக்துவ

கேட னெய்தக் கிடுகிடுங் கின்றபோ
ஞுட னின்ற நகரிடை நண்ணினுன்.

[மாடமாளிகை முதலிய இடங்களில் முழங்கும் வாத்தியகோஷங்கள், கேடு செய்ய விஸ்வாமித்திரர் வந்திட்டாரென்று அயோத்தி நகரமும் மாடமாளிகை முதலியவையும் பயந்து கிடுகிடுத்துக் கொண்டிருக்கிறதுபோல் இருக்கிறது என்பதாம்.]

இ-ள். மாடம் - பெரும் வீடுகள், மாளிகை - உப்பரிக்கைகள், மண்டபம்- மண்டபங்கள், மாமதில் - பெரிய மதில்கள், ஆடு அரங்கம் - (பெண்கள்) ஆடு கிற சாலைகள், அகழில் - அகழ்கிடங்குகள், (முதலான இந்த இடங்கள்எல்லாம்) துளங்குவ - அச்சமுடையதாகி, கேடன் எய்த - கெடுதி செய்கின்றவன் வரு கிறதினாலே, கிடு கிடுக்கின்றபோல் - கிடுகிடென்று, இருப்பது போன்றது என்று, நாடநின்ற - ஆலோசிக்கும்படி (வாத்தியங்கள் முழங்கும்) நிலையை உடைய, நகரிடை - அயோத்திமா நகரத்துக்குள்ளே, நண்ணினுன் - விஸ்வா மித்திரர் வந்தார். எ-று.

நகரில் கிடுகிடென்று சப்திக்கும் சப்தம் அந்த நகரின் மாடம் மாளிகை முதலிய கேடு செய்கின்றவனைக்கண்டு அஞ்சி கிடுகிடுக்கின்றதுபோல் இருக் கிறது என்று கூறினர். (உரு)

தளரி ளைப்பிற் றமனிய வாயில்புக்
களவில் செல்வத் தயோத்தியை நண்ணியே
கிளரொ ளிக்கதிர் கீழ்பட மேலுறீஇ
வளரொ ளிப்பெரு மண்டபத் தெய்தினுன்.

[பொன்மயமான கோட்டை வாயிலுக்குள்ளே புகுந்து அளவற்ற செல்வத்தை உடைய அயோத்தியாபுரிக்குள்ளே வந்து சூரியனும் தோற்றுப்போக அவனுக்கும் மேல்பட்டு வளர்கின்ற ஒளியை உடைய பெரிதான சபாமண்டபத்துக்குத் தளர்வதான இளைப்புடனே வந்தார் என்பதாம்.]

இ-ள். தமனிய வாயில் புக்கு - பொன்மயமான கோட்டை வாயிலுக் குள்ளே புகுந்து, அளவில் செல்வத்து அயோத்தியை நண்ணி - அளவில்லாத செல்வத்தைக்கொண்ட அயோத்தியாபுரிக்குள் வந்து, கிளர் ஒளிக்கதிர் - விள ங்குகின்ற ஒளியை உடைய சூரியன், கீழ்பட-குறைவுபட்டுத்தாழ, மேலுறீஇ- அச்சூரியனுக்கும் மேற்பட்டு, வளர் ஒளி - வளர்கின்ற ஒளியை உடைய, பெரு மண்டபத்து - பெரிய சபாமண்டபத்துக்குள், தளர் இளைப்பில் - தளர்வதான இளைப்புடனே, எய்தினுன் - வந்தார். எ-று. (உசா)

மந்த ராசல மண்டபத் தெய்தலு
முந்த முதலவற் கண்டரிச் சந்திர

னந்த மாதவ மோவரு ளிங்குநீ
வந்த காரண மென்று வணங்கினான்.

[விஸ்வாமித்திரமுனிவர் மந்தாமலைபோலும் சபா மண்டபத்துக்குள் வந்த உடன் அரிச்சந்திரன் கண்டு நான்செய்த எந்தப் பெரிய தவத்தின் பயனோ தேவரீர் இங்கு எழுந்தருளும்படி நான் பெற்றது, சொல்லி யருளுங்கள் என்று வணங்கினான் என்பதாம்.]

இ-ள். அந்த மாதவன் - அந்தப் பெருமைபொருந்திய விஸ்வாமித்திர முனிவர், மந்தாசல மண்டபத்து - மந்தாமலைபோல் உயர்ந்திருக்கிற அந்தச் சபா மண்டபத்துக்குள்ளே, எய்தலும் - வந்த உடனே, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜன், கண்டு - கண்டு, இங்கு நீ - இங்கே தேவரீராகிய நீங்கள், வந்தகாரணம் - இங்கு எழுந்தருளிய காரணம், எந்த மாதவமோ - நான் செய்த எந்தப் பெரிய தவமோ?, அருள் - சொல்லி அருளுங்கள், என்று - என்று கூறி, வணங்கினான் - தொழுதான். எ-று.

'அசலம்' மலை, இது வடமொழிப்பெயர், அசையாதது என்று காரணம் பற்றி வந்த பெயர் போலும். (உஎ)

காவன் மன்ன கடிமறை வேள்விக்கென்
னேவன் மாக்கட் கிசைந்த பெரும்பொருள்
தாவெ னச்சொலக் கேட்டரிச் சந்திர
னீவ லெத்துணை வேண்டுமென் றேத்தினான்.

[உலகத்தைக் காக்கின்ற அரசனே! யாகத்துக்கு என் ஏவல் கேட்டுவந்த முனிவர்களிடம் தருவதாகச் சம்மதித்த பொருளைத் தா என்று சொல்லக்கேட்டு அரிச்சந்திரன் எவ்வளவு வேண்டும் என்று துதித்துக்கேட்டான் என்பதாம்.]

இ-ள். காவன் மன்ன - உலகத்தைக் காக்கின்ற அரசனே!, கடிமறை வேள்விக்கு - தேவர்களாலே காக்கத்தக்க வேதமந்திரங்களைக்கொண்டு செய்கின்ற யாகத்துக்கு, என் ஏவன் மாக்கட்கு - எனது ஏவல் கேட்டுவந்த முனிவர்களுக்கு, இசைந்த பெரும்பொருள் - தருவதாகச் சம்மதித்த மிகுந்த திரவியத்தை, தா எனச் சொலக்கேட்டு - இப்பொழுது கொடு என்று சொல்லக் கேட்டு, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜன், ஈவல்-இப்பொழுதே கொடுக்கிறேன், எத்துணை வேண்டும் என்று ஏத்தினான் - எவ்வளவு வேணுமென்று சொல்லி துதித்துக் கேட்டான். எ-று. (உஅ)

மான வன்சொல மாமுனி நோக்கியே
யானை மேனின் றெறிந்த கவண்சிலை
போன தூரம் பொருள்குவிப் பாயெனின்
ஞோண வேள்வி முடித்திட லாமென்றார்.

[அரிச்சந்திரன் அவ்வாறு சொல்ல, விஸ்வாமித்திரர் அரிச்சந்திரனை
நோக்கி யானைமேல் நின்று எறிந்த கவண்கல் போகிற தூர
அளவு பொருள் கொண்டுவந்து குவிப்பாயே யானால்
மௌனமாயிருந்து செய்யக்கூடிய அந்த வேள்வி
யை நிறைவேற்றக்கூடும் என்றார்
என்பதாம்]

இ-ள். மானவன் சொல - அந்தப் பெருமைபொருந்திய அரிச்சந்திரன் அவ்வாறு சொல்ல, மாமுனி - அந்தப்பெரிய விஸ்வாமித்திரமுனிவர், நோக்கியே - அரிச்சந்திரனைப்பார்த்து, யானைமேல் நின்று - யானைமேலே நின்று கொண்டு, எறிந்த கவண்சிலை - எறிந்த கவண்கல், போனதூரம் - போகிற தூர அளவுள்ள, பொருள் குவிப்பாய் எனின் - பொருளைக் கொண்டு வந்து குவிப்பாயேயானால், மோன வேள்வி - மௌனமாயிருந்து செய்யும் அந்த யாகத்தை, முடித்திடலாம் என்றார் - முடித்து நிறைவேற்றக்கூடும் என்று சொன்னார். எ-று.

'மானவன்' மகானுபாவனாகிய அரிச்சந்திரன் என்றும் பொருள் செய்யலாம். 'கவண்சிலை' கவண்கல், 'கவண்' கல் எறியும் கருவி. (உகூ)

இறைவ னிவ்வகை யீகுவன் யானென
வறைதி றந்திவ ணானையைத் தம்மெனக்
குறைவில் வாதுவ ரோடிக் கொணர்ந்திடப்
பிறையெ யிற்றுப் பெருங்களி றுற்றதே.

[அதற்கு அரிச்சந்திரன் இந்தவிதமாகத் தருவேன் என்று கூறி, பொக்கிஷ
அறையைத் திறந்து விடுங்கள் யானையைக் கொண்டு வாருங்கள்
என்ற உடனே யானைப்பாகர் ஓடி சந்திரப் பிறைபோலும்
கொம்பை உடைய யானையைக் கொண்டு வந்தார்கள்
என்பதாம்.]

இ-ள். இறைவன் - (அதற்கு) அரிச்சந்திரமகாராஜன், இவ்வகை ஈகுவன் யான் என - இந்தவிதமாக நான் தருகின்றேன் என்றுசொல்லி, அறை திறந்து - பொக்கிஷ அறையைத் திறந்துவிட்டு, இவண் - இங்கே, ஆனையைத் தம்மென - இங்கே ஆனையைக்கொண்டு வாருங்கள் என்று கட்டளையிட, குறைவு இல் வாதுவர் ஓடி - (அப்போதே) குற்றமற்ற (நல்ல லட்சணத்தை உடைய) யானைப்பாகர்கள் ஓடி, கொணர்ந்திட - கொண்டுவர, பிறை எயிற்று - சந்திரப்பிறையை ஒத்த தந்தங்களை உடைய, பெருங்களிறு உற்றது - பெரிய யானையும் வந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

'வாதுவர்' யானைப்பாகர். யானையை என்பது ஆனையை என்று ஆயது போலி. (௩0)

ஒத்த தேயமை யும்மென தொண்பொருள்
வைத்த னன்னின் னிடத்தடை மன்னயான்

சுத்த வேள்வி தொடங்கிடு நாளெனக்
குய்த்தி நீயென் றுரைத்தவ னேகினன்.

[நீ ஒத்துக்கொண்டதே போதுமானது; நீ எனக்குத் தருவதாக வாக்களித்த எனது அழகிய பொருளை உன்னிடத்திலே அடைக்கலமாகத் தருகின்றேன். நான் பரிசுத்தமான வேள்வி தொடங்குகின்ற அந்த நாளில் என்னிடம் கொண்டுவந்து தா என்று கூறி முனிவன் சென்றான் என்பதாம்.]

இ-ள். மன்ன - அரசனே; ஒத்ததே அமையும் - நீ சம்மதித்ததே போதும், எனது ஒண்பொருள் - (இனி எனக்குக் கொடுக்கப்போவதாகிய என்னுடைய அழகிய பொருள் எல்லாம், வைத்தனன் நின்னிடத்து அடை - உன்னிடத்திலே அடைக்கலமாக வைத்தேன்; யான் - நான், சுத்தவேள்வி - பரிசுத்தமான யாகத்தை, தொடங்கிடுநாள் - செய்யத்தொடங்கும் நாளில், எனக்கு உய்த்தி என்று - எனக்கு அதனைக் கொடுப்பாயாக என்று, உரைத்து-சொல்லி, அவன் ஏகினன் - அந்த விஸ்வாமித்திரமுனிவர் சென்றார். எ-று.

'உய்த்தி' கொண்டு வந்து தருதி என்பதாம். "என்று உரைத்தவன் ஏகினன்" என்று சொல்லி மேலாகச்சொல்லும் தவத்தையுடைய விஸ்வாமித்திர முனிவர் சென்றார், என்றும் பொருள் கூறலாம். 'தவன் - தவத்தை உடையவன்.' மேலானவன் என்றும் பொருளாம். (௩௧)

அருவ னங்கடந் தாச்சிர மம்புகுந்
தொருத ருத்தட நீழ லுறைத்துபார்
மிருகம் புள்ளினம் யாவும் விரைந்திவண்
வருக வென் றுமனந்தனி லுன்னினன்.

[விஸ்வாமித்திரர் வனங்கள் எல்லாம் கடந்து சென்று தன் ஆசிரமத்துக்குள் சென்று ஒருமரத்தின் பெரிய நிழலில் இருந்துகொண்டு உலகத்துள்ள மிருகங்கள் பக்ஷிகள் இன்னும் மற்ற எல்லாம் சீக்கிரம் இங்கே வருக என்று மனத்தில் நினைந்தார் என்பதாம்.]

இ-ள். அரு - அரிதான, வனம் கடந்து - காடுகளைக்கடந்து, ஆச்சிரமம் புகுந்து - தம்முடைய ஆச்சிரமத்துக்குள்ளே சென்று, ஒரு தருத்தட நீழல் உறைந்து - ஒரு விருக்ஷத்தின் பெரிய நிழலில் இருந்துகொண்டு, பார்மிருகம்- உலகத்திலுள்ள மிருகங்கள், புள்ளினம் - பக்ஷிக்கூட்டங்கள், யாவும் - எல்லாம், விரைந்து - சீக்கிரத்திலே, இவண் வருக என்று - இந்த இடத்திலே வருவதாகஎன்று, மனந்தனில் - மனத்தினால், உன்னின் - நினைந்தார். எ-று 'யாவும்' என்றது மற்ற ஜீவப்பிராணிகளை. (௩௨)

அலங்க லஞ்சடை மாமுனி யன்பிலா
னலங்கு லைந்து நினைத்தவந் நாடனிற்

கலங்கி வாய்களிற் கௌவிய தீன்விட்டு
விலங்கெ லாமுன் விரைந்துவந் துற்றவே.

[விஸ்வாமித்திரர் அன்பில்லாதவராய் நீதிகெட்டு நினைத்த அந்தச் சமையத்திலே மிருகங்களும் மற்றவையும் வாய்களிற் கௌவி யிருந்த தீனியை விட்டு விட்டு ஓடிவந்து முன் கூடின என்பதாம்.]

இ-ள். அலங்கல் அம்சடை - அசைதலை உடைய அழகிய சடையைக் கொண்ட, மாமுனி - பெரிய விசுவாமித்திரர், அன்பிலான் - இரக்கமில்லாத வராய், நலம் குலைந்து - நன்மைகெட்டு, நினைந்த அந்நாள்தனில் - நினைத்த அக்காலத்திலே, விலங்கெலாம் - மிருகங்கள் எல்லாம், கலங்கி - பயந்து, வாய் களிற் கௌவிய - வாய்களிலே கௌவியிருந்த, தீன்விட்டு - தீனியை விட்டு விட்டு, முன் - விஸ்வாமித்திர முனிவருக்கு முன்னே, விரைந்து - சீக்கிரமாக, வந்து உற்ற - வந்து சேர்ந்தன. எ-று. "தீன்" 'தின்பது' என்னும் கார ணம்பற்றி வந்தபெயர். (௩௩)

வளையும் வாலெடுத் தோச்சி வருகனல்
விளையுங் கண்கள் விழுவன போலுற
வுளைவி ரித்து விதிர்த்துத றிப்பெருங்
கிளையி னோடுற்ற கேசரி கோடியே.

[வளைந்தவால் எடுத்து வீசிக்கொண்டு கண்களிலே நெருப்புப்பொரி சிதற பிடரி மயிரை விரித்து சிலிர்த்து உதறிக்கொண்டு தன் பெரும் சுற்றத்தோடும் வரும் சிங்கங்கள் ஒருகோடி என்பதாம்.]

இ-ள். வளையும் வாலெடுத்து - வளைவான வாலைத் தூக்கிக்கொண்டு, ஓச்சி - வீசி, வருகனல் - (யுகாந்தக்காலத்திலே) வருகிற வடவாமுகாக்கினி யானது, விளையும் - உண்டாகின்ற, கண்கள் - கண்கள், விழுவன போலுற - விழுவதைப்போல் விளங்க, உளைவிரித்து (பிடரி மயிர்களை விரித்து, விதிர்த்து உதறி - சிலிர்த்து உதறிக்கொண்டு, பெரும் கிளையினோடு - தமது பெரிய சுற்றத்தோடு, உற்ற - வந்த, கேசரி - சிம்மங்கள், கோடி - கோடியாம். எ-று. ஏ - ஈற்றசை.

"வருகனல் விளையும் கண்கள் விழுவன போலுற" என்பதற்கு (விளை யும் - கோபம் உண்டாகும், கண்கள் - கண்களிலே, வருகனல் - யுகாந்தக் காலத்திலே வரும் வடவாமுகாக்கினி, விழுவனபோலுற - விழுவதுபோல் நெருப்புப்பொரிகள் சிந்த) என்றும் பொருள் செய்வர். (௩௪)

வாளி மிர்த்து வளைந்துடல் கூனிநீள்
கானி மிர்ந்துவெண் கண்கள் சிவந்துவிண்
மேனி மிர்ந்துவந் துற்றடர் வெங்கட்ற்
போனி மிர்ந்து வரும்புலி கோடியே.

[வாலை நிமிர்த்துக்கொண்டு வளைவுகொண்டு உடல் வளைந்து நீண்ட
கால்கள் நிமிர்ந்து வெண்மையான கண்கள் செவந்து ஆகா
யத்தின்மேல் உயர்ந்து, கடல்போலத் தாவிக்கொண்டு
வரும் புலிகள் கோடி என்பதாம்.]

இ-ள். வால் நிமிர்ந்து - வால்கள் நிமிர்தலாய், வளைந்து - வளைவு கொண்டு, உடல் கூனி - உடல் வளைந்து, நீள்கால் நிமிர்ந்து - நீண்ட கால்கள் நிமிர்ந்து, வெண் கண்கள் சிவந்து - வெள்ளையாகிய கண்கள் எல்லாம் சிவந்து, விண்மேல் நிமிர்ந்து - ஆகாயத்தின் மேலே உயர்ந்து, வந்துற்று - தாவிவந்து, அடர் - நெருங்குகின்ற, வெங்கடல்போல் நிமிர்ந்து - வெவ்விய கடலைப்போல உயர்ந்து, வரும் புலி - வருகின்ற புலிகள், கோடி - கோடியாம். எ-று. ஏ - ஈற்றசை. (௩௫)

குளிறு மாமுகில் கூடிய வாமெனப்
பிளிறு கன்றும் பிடிகளும் பின்வரா
வெளிறு தந்தக் கருநிற வெண்புகர்க்
களிறு கோடி கடிதுவந் துற்றவே.

[சப்திக்கின்ற மேகக்கூட்டங்கள் கூடியதுபோல சப்திக்கின் கன்றுகளும்
பெட்டை யானைகளும் பின்னாலே வர வெள்ளைத்தந்தங்களை உடைய
கருத்த நிறத்தையுடைய புள்ளிகளை உடைய ஆண் யானைகள்
கோடி வேகமாய் வந்து சேர்ந்தது என்பதாம்.]

இ-ள். குளிறும் - சப்திக்கின்ற, மாமுகில் - பெரிய மேகங்கள், கூடிய வாம் என - கூடித்திரண்டன என்னும்படி, பிளிறு - வீறிடுகின்ற, கன்றும்- கன்றுனைகளும்; பிடிகளும் - பெண் யானைகளும், பின்வரா - பின்னே வர, வெளிறு தந்த - வெளுப்பான தந்தங்களும், கருநிற - கருப்பாகிய நிறத்தையும், வெண்புகர் - வெள்ளைப்புள்ளிகளையும், (உடைய) களிறுகோடி - ஆண்யானை கள்கோடி, கடிது - விரைவிலே, வந்து உற்ற - வந்து கூடின. எ-று. ஏ - ஈற்றசை. (௩௬)

கண்ணெ லாங்கனன் மண்டக் கடுவிட
மண்ணெ லாந்துதி கொள்ள மணிச்சுடர்
விண்ணெ லாம்வெயில் வீசிட வாய்பிளந்
தெண்ணி லாவர வெங்கும்வந் தீண்டின.

[கண்முழுதும் நெருப்பு எரிய, கடுமையான விஷம் பூமியில் சிந்த,
நாகரத்தினங்கள் ஆகாசமுழுதும் ஒளியைவீச, வாயைப்
பிளந்துகொண்டு கணக்கற்ற சர்ப்பங்கள் எங்கும்
வந்து நெருங்கின என்பதாம்.]

இ-ள். கண் எலாம் - கண்களில் எல்லாம், கனல் மண்ட - நெருப்பு மிகுந்து எரிய, கடுவிடம் - கடுமையான விடமானது, மண்ணெலாம் - பூமி

எல்லாம், குதிகொள்ள - சிந்த, மணிச்சுடர் - தலையில் உள்ள ரத்தினங்களின் பிரகாசமானது, விண் எலாம் - ஆகாயமுழுதும், வெயில் வீசிட - ஒளியை வீச, வாய்பிளந்து - வாயைப் பிளந்துகொண்டு, எண்ணிலா அரவு - கணக்கற்ற பாம்புகள், எங்கும் - எல்லா இடங்களிலும், வந்து ஈண்டின - வந்து கூடின. எ-று. (௩௭)

மான முழுங்குபுல் வாய்மறை வாங்கலை
யேன நான மெலிபெருச் சாளியெய்
கான மேதி காடிசெந் நாய்நரி
வான ரங்கட மாவிவை வந்தவே.

[மான்கள், ஆமை, கடமைகள், கானக்குதிரைகள், தாவுகின்ற கலைமான்கள், பன்றிகள், புழுகுபூனைகள், எலிகள், பெருச்சாளிகள், முள்ளம்பன்றிகள், காட்டு எருமைகள், காடிகள், செந்நாய்கள், நரிகள், குரங்குகள்; கடமாக்கள், ஆகிய இவைகள் வந்து கூடின என்பதாம்.]

இ-ள். மான் - மான்கள், அழுங்கு - ஆமை, புல்வாய் - கடமைகள், மறை - கானக்குதிரைகள், வாங்கலை - தாவுகின்ற கலைமான்கள், ஏனம்-பன்றி, நானம் - புழுகு பூனைகள், எலி - எலிகள், பெருச்சாளி - பெருச்சாளிகள், எய் - முள்ளம்பன்றிகள், கானமேதி - காட்டு எருமைகள், காடி - காடிகள், செந்நாய் - செந்நாய்கள், நரி - நரிகள், வானரம் - குரங்குகள், கடமா - கடமாக்கள், இவை - ஆகிய இவைகள், வந்தவே - வந்து கூடின. எ-று. ஏ - ஈற்றசை.

'அழுங்கு' ஒருவகை மிருகம் என்றும் பொருள் கூறுவர். 'எய்' முள்ளம்பன்றி, 'கடமா' - காட்டு மிருகம். (௩௮)

தோகை பூவை சுகங்குக்கில் சக்கர
வாக நாரை மடவனங் கோகிலங்
காக மன்றில் சிவல்கவு தாரிபூழ்
வேக மோடு பறந்து விரைந்தவே.

[மயில்கள், பூவைகள், கிளிகள், செம்போத்துகள், சக்கரவாகப் புட்கள், நாரைகள், அன்னங்கள், குயில்கள், காக்கைகள், அன்றில்கள், சிவல் காடைகள், கவுதாரிகள், காடைகள், ஆகிய இப்பட்சிகள் வேகமாய்ப் பறந்து வந்தன என்பதாம்.]

இ-ள். தோகை - மயில்கள், பூவை - நாகணவாய்ப்புட்கள், சுகம் - கிளிகள், குக்கில் - செம்போத்துகள், சக்கரவாகம் - சக்கரவாகப்புட்கள், நாரை - நாரைகள், மட அனம் - இளமையான அன்னப்பட்சிகள், கோகிலம் - குயில்கள், காகம் - காக்கைகள், அன்றில் - அன்றில் பட்சிகள், சிவல் - சிவல் காடைகள், கவுதாரி - கவுதாரிகள், பூழ் - காடைகள், (ஆகிய இவைகள்) வேக

மோடு - அதிவேகத்துடனே, பறந்து - பறந்து, விரைந்தவே - விரைவாய் வந்தன. எ-று. ஏ - ஈற்றசை. (௩௯)

முந்தி வந்த முதிர்சின மாக்களும்
வெந்தி றற்கொடு வேகத்த நாகமும்
பந்தி பந்தி பறவைத் திரள்களும்
வந்து வந்து முனியை வணங்கின.

[மிருகங்களும், சர்ப்பங்களும், பட்சிகளும் கூட்டம் கூட்டமாய் வந்து வந்து முனிவரை வணங்கின என்பதாம்.]

இ-ள். முந்தி வந்த - முன்னே வந்த, முதிர்சினமாக்களும் - முதிர்ந்த கோபத்தைக்கொண்ட சிங்கமுதலிய மிருகங்களும்; வெம்திறல்-வெம்மையான சாமர்த்தியத்தையும், கொடுவேகத்த - கொடிதான வேகத்தையும் கொண்ட, நாகமும் - சர்ப்பங்களும், பந்தி பந்தி - கூட்டம் கூட்டமான, பறவைத்திரள்களும் - பட்சிக் கூட்டங்களும், வந்து வந்து - வந்து வந்து, முனியை வணங்கின - விஸ்வாமித்திர முனிவரை வணங்கின. எ-று.

'பந்தி' பந்தி, முந்தி, முந்தி; என அடுக்கியது மிகுதியினால்; (௪0)

தழைத்த புல்லுந் தழையுங் கனிகளும்
விழைத்த ருந்தி வெருண்டு வெகுண்டகோ
ளிழைத்து நீள்வனம் வாழ்கின்ற வெம்மைநீ
யழைத்த தீதென் றருள்செய வேண்டுமே.

[தழைத்திருக்கிற புற்களையும், இலைகளையும், கனிகளையும் விரும்பித் தின்று பயந்தும் கோபித்தும் எங்கள் கொள்கைகளைச் செய்து கொண்டு இந்த நீண்ட காட்டில் இருக்கும் எங்களை அழைத்தது எதற்கு சொல்லி யருளவேண்டும் என்று வேண்டின என்பதாம்.]

இ-ள். தழைத்த - தழைத்திருக்கிற, புல்லும் - புற்களையும், தழையும்-இலைகளையும், கனிகளும் - கனிகளையும், விழைத்து அருந்தி - விரும்பித்தின்று, வெருண்டு - பயந்தும், வெகுண்டு - கோபித்தும், கோள் இழைத்தும் - எங்கள் கொள்கைகளைச்செய்தும், நீள் வனம் - நீண்ட காட்டில், வாழ்கின்ற எம்மை-வாழ்கின்ற எங்களை, நீ அழைத்தது - நீர் கூப்பிட்டது, ஈதென்று - இன்னதற்கு என்று, அருள்செய்ய வேண்டும்மே - சொல்லி யருளவேண்டும். எ-று. ஏ - ஈற்றசை.

'கோள் இழைத்தும்' கொலைகளைச்செய்தும், என்னும் பொருள் கூறுவர்.

என்று கூற முனிவ னியம்புவான்
குன்றுமேவு விலங்கின் குலத்துளீ
ரொன்று கூறுவ தண்டினி யாதுமக்
கின்று நீர்செய் பணியென் றியம்புவான்.

[மலைகளில் வசிக்கும் மிருகக்கூட்டத்தவர்களே! இனி நான் உங்களுக்குச் சொல்வது ஒன்று உண்டு, அது இப்பொழுது நீங்கள் செய்யவேண்டிய வேலை என்று பின்னும் சொல்லுகின்றார் என்பதாம்.]

இ-ள். என்றுகூற - என்று அவைகள் சொல்ல, முனிவன் - அதற்கு விசுவாமித்திரர், இயம்புவான் - சொல்லுகின்றார், குன்று மேவும்-மலைகளிலே சஞ்சரிப்பதான, விலங்கின் குலத்துளீர் - மிருகத்தின் கூட்டத்தி லிருக்கின்றவர்களே! யான் - நான், உமக்கு - உங்களுக்கு, இனி - இனிமேல், ஒன்று கூறுவது உண்டு - ஒன்று சொல்லவேண்டி யிருக்கின்றது, இன்று நீர் செய்பணி - (அது) இப்பொழுது நீங்கள் செய்யவேண்டியவேலை, என்று - என்று கூறி, இயம்புவான் - சொல்லுகின்றார்; எ-று. (சஉ)

தாரின் மன்னு புயத்தரிச் சந்திரன்
பாரின் மன்னுயிர் பைம்பொழி றண்பயிர்
வேரி னேடுங் களைந்து விரைந்து நீர்
வாரு மென்று மறைமுனி யேவினன்.

[பூமாலைகளைத் தரித்திருக்கின்ற புயத்தை உடைய அரிச்சந்திரன் நாட்டிலுள்ள உயிர்களையும், சோலைகளையும், பயிர்களையும், வேரோடு அழித்து விரைந்து வாருங்கள் என்று விஸ்வாமித்திரர் ஏவினர் என்பதாம்.]

இ-ள். தாரின் மன்னு - பூமாலைகளாலே நிரம்புதலான, புயத்து - தோள்களை உடைய, அரிச்சந்திரன் - அரிச்சந்திரனது, பாரில் - நாட்டில், மன்னு- பொருந்தி யிருக்கின்ற, உயிர் - உயிர்களையும், பைம்பொழில் - பசுமையான சோலைகளையும், தண்பயிர் - குளிர்ந்திருக்கிற பயிர்களையும், வேரின் ஓடும்- வேரோடும், களைந்து - அழித்து, விரைந்து - விரைவாக, நீர் வாரும் என்று- நீங்கள் இங்கே வாருங்கள் என்று, மறைமுனி ஏவினன் - விஸ்வாமித்திரர் சொன்னர். எ-று.

"தாரின் மன்னு புயத்து" என்பதற்கு 'வெற்றிமாலைகள் பொருந்தியுள்ள தோளை உடைய; என்றலும் ஆம்; 'வேரினேடும் களைந்து' இதை, மன் உயிர்க்கும், பைம்பொழிற்கும், தாண் பயிர்க்கும் கூட்டலாம், 'வேரினேடும் களைதல்'- அடியோடு அழித்தல். (சங)

அக்க ணத்தி லிறைஞ்சி யருந்தவன்
பக்க நின்ற விலங்கும் பறவையுந்
திக்க னைத்துஞ் செறிந்து விரைந்துபோய்
புக்க வத்திரு நாட்டின் புறத்தெலாம்.

[முனிவர் பக்கத்திலே நின்றுகொண்டிருந்த விலங்குகளும் பறவை
களும் அவரை அந்த க்ஷணத்திலேயே வணங்கிவிட்டு திக்கு
கள் எல்லாம் நெருங்க விரைந்துபோய், அழகிய கோசல
நாட்டின் பக்கங்கள் எல்லாம் புகுந்தன என்பதாம்.]

இ-ள். அக்கணத்தில் - சொன்ன அந்தக்ஷணகாலத்திலேயே, இறைஞ்சி-வணங்கி, அருந்தவன் பக்கம் - அரிய தவத்தை உடைய விசுவாமித்திரர் பக்கத்திலே, நின்ற - நின்றுகொண்டிருந்த, விலங்கும் பறவையும் - மிருகங்களும் பட்சிகளும், திக்கனைத்தும் செறிந்து - எல்லாத்திக்குகளிலும் நெருங்கி, விரைந்துபோய் - விரைவிலேபோய், அத்திருநாட்டின் - அந்த அழகிய கோசல நாட்டின், புறத்து எலாம் - பக்கங்களில் எல்லாம், புக்க - புகுந்தன. எ-று.

'திக்கனைத்தும் செறிந்து' நாலாபக்கமும் பரவி, என்றும் பொருளாம். ()

வெள்ளை யானிரை வெம்புலி கோளரி
கொள்ளை யாடின கொல்லையுஞ் சோலையும்
வள்ளை சூழும் வயலும் புனங்களுங்
கிள்ளை தோகை கிளையொடு மொய்த்தவே.

[புலியும் சிங்கமும் முதலில் பசுக்கூட்டங்களைக் கொள்ளை கொண்டன;
கிளிகளும் மயிலும் தங்கள் கூட்டங்களோடு கொல்லைகளிலும்,
சோலைகளிலும் வயல்களிலும் தினைப்புனங்களிலும்
போய் மொய்த்தன என்பதாம்.]

இ-ள். வெள்ளை ஆன் நிரை - (முதலில்) வெண்மையான பசுக்கூட்டங்களை, வெம்புலி - கொடிய புலிகளும், கோளரி - சிங்கங்களும், கொள்ளை ஆடின - கொள்ளைகொண்டு கொன்று தின்றன; கொல்லையும் - கொல்லைகளிலும், சோலையும் - சோலைகளிலும், வள்ளை சூழும் - வள்ளைக்கொடிகள் படர்ந்திருக்கின்ற, வயலும் - வயல்களிலும், புனங்களும் - தினைப்புனங்களிலும், கிள்ளை - கிளிகளும், தோகை மயில்களும், கிளையொடு - தங்கள் கூட்டத்தோடு, மொய்த்தவே - போய் மொய்த்தன. எ-று. ஏ - ஈற்றசை.

"ஆன்'' 'ஆ' என்றது னகரச்சாரியை பெற்று வந்தது. "ஆமா கோனவ் அணையவும் பெறுமே'' என்பது விதி. 'வெம்புலி கோளரி' உம்மைத்தொகை.

அடர்ந்து மந்தியும் வண்டு மகன் கடந்
தொடர்ந்து செல்வன சோலைகள் பாழ்படப்
படர்ந்து யர்ந்த பழுமரங் காய்மர
மிடந்தி ரிந்தன யானைக ளெங்குமே.

[குரங்குகளும், வண்டுகளும், நெருங்கி அகன்ற காடுகள் எல்லாம் தொடர்ந்து
சென்றன; யானைகள் சோலைகள் பாழ்படும்படி படர்ந்து உயர்ந்த
பெரிய மரங்கள் காய்த்த மரங்கள் உள்ள இடங்கள் எல்லாம்
திரிதல் ஆயின, என்பதாம்.]

இ-ள். மந்தியும் வண்டும் - மந்திகளும் வண்டுகளும், அடர்ந்து-நெருங்கி, அகன்கடம் தொடர்ந்து - அகன்ற காடுகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகத்

தொடர்ந்து, செல்வன - செல்வதாயின, சோலைகள் - சோலைகள் எல்லாம், பாழ்பட - பாழாகும்படி, படர்ந்து உயர்ந்த - படர்ச்சியாய் உயர்ந்து இருக்கிற, பழுமாம் - பெரிய மரங்களும், காய்மரம் - காய்த்தமரங்கள், இடம் - இவைகள் உள்ள இடங்களில் எல்லாம், எங்கும் - எல்லா இடங்களிலும், யானைகள்-யானைகள், திரிந்தன - திரிதல் ஆயின. எ-று. ஏ - ஈற்றசை.

'பழுமரம்' ஆலமரம், என்றும் பொருள் கூறுவர். (சகூ)

முழங்கு நீர்த்தட முற்று முடைத்துநீர்
வழங்கு வண்டல் மடைகளுந் தூர்த்துராய்த்
தழங்கு சாலியுஞ் சாடித் தழைக்கொடிக்
கிழங்கு மாய்த்தன கேழற் றிரள்களே.

[பன்றிக்கூட்டங்கள், குளங்கள் முழுவதையும் உடைத்து மடைகளைத் தூர்த்து நெற்களை அழித்து, தழைகளையும் கொடிகளையும் கிழங்குகளையும் அழிவுசெய்தன என்பதாம்.]

இ-ள். கேழல் திரள்கள் - பன்றிக்கூட்டங்கள், முழங்கும் - (அலைகள்) சப்திக்கின்ற, நீர்த்தடம் முற்றும் - நீரை உடைய குளங்கள் முழுதையும், உடைத்து - உடைத்து, நீர் வழங்கு - நீர் பாய்கின்ற, வண்டல் மடைகளும் தூர்த்து - சேற்றை உடைய மடைகளையும் தூர்த்து, உராய் - உராவி, தழங்கு சாலியும் சாடி - ஒலிக்கின்ற நெற்கள் எல்லாவற்றையும் அழித்து, தழை-தழைகளையும், கொடிக்கிழங்கும் - கொடிகளையும் கிழங்குகளையும், மாய்த்தன - அழித்தன. எ-று. ஏ - ஈற்றசை.

'தழைக்கொடிக்கிழங்கு, தழைகின்ற கொடிகளின் கிழங்குகளை, என்றும் பொருள் கூறுவர். (சஎ)

காட்டு வாழ்கலை மான்கட மாமரை
நாட்டு வாழ்புனஞ் சேர நலித்திட
வோட்டு வாரை பொதுக்கினின் றேபருங்
கோட்டு வாரணங் குத்திப் பிளந்தவால்.

[காட்டிலே வாழ்கின்ற கலைமானும் கடமாக்களும், கானக்குதிரைகளும் கூடி நாட்டிலேயுள்ள புனங்களை எல்லாம் அழிக்கும்போது ஓட்ட வந்தவர்களை ஒதுக்கு இடங்களில் இருந்து பருத்த கொம்புகளை உடைய யானைகள் குத்திப்பிளந்தன என்பதாம்.]

இ-ள். காட்டுவாழ் - காட்டிலே சஞ்சரிக்கின்ற, கலைமான் - கலைமானும், கடமா - கடமாக்களும், மரை - கானக்குதிரைகளும், நாட்டுவாழ் - (இவைகள் எல்லாம் கூடி) நாட்டிலேயுள்ள, புனம்சேர நலித்திட - புனங்களை எல்லாம் ஒருமிக்க அழிக்கும்போது, ஓட்டுவாரை - ஓட்ட வந்தவர்களை, ஒதுக்கில்

நின்றே - ஒதுக்கு இடத்திலே நின்று, பரும் கோட்டு வாரணம் - பெரிய கொம்புகளை உடைய யானைகள், குத்திப் பிளந்த - குத்திப் பிளந்தன. எ-று. ஆல், அசை.

'ஒதுக்கு' மறைவு இடம், "கோட்டு வாரணம்" 'கொட்டு' என்ற அடைமொழி யானையைக் குறித்தது, "வாரணம்" யானை, கோழி, சங்கு என்னும் பொருள் குறித்து வந்த பெயர்த்திரிசொல். (சஅ)

இரவு காவ லிருப்பவ ரியாரையு
மரவுந் தேளு மரணையுங் கொன்றவால்
கரவி னின்று புலியுங் கரடியும்
வரவ ரக்கொன்று மாக்களை மாய்த்தவே.

[இராத்திரியில் காவல் இருப்பவர்களை எல்லாம், பாம்புகளும், தேள்களும், அரணைகளும் கடித்துக்கொன்றன, புலியும் கரடிகளும் மறைவிடங்களில் இருந்துகொண்டு மனிதர்களை வரவரக்கொன்று அழித்தன; என்பதாம்.]

இ-ள். இரவு - இராத்திரியிலே, காவல் இருப்பவர் யாரையும் - காவல் காத்துக் கொண்டிருக்கிறவர்கள் எல்லோரையும், அரவும் - பாம்புகளும், தேளும் - தேள்களும், அரணையும் - அரணைகளும், கொன்றவால் - கொன்றன; புலியும்-புலிகளும், கரடியும் - கரடிகளும், கரவில் நின்று - மறைவிடங்களிலேயிருந்துகொண்டு, மாக்களை - மனிதர்களை, வரவரக்கொன்று மாய்த்த - வரவரக்கொன்று அழித்தன. எ-று. ஏ - ஈற்றசை.

'கொன்றவால்' என்பதில் உள்ள 'ஆல்' அசை. (சகூ)

மதந்த ருங்கரி மான்மரை வல்லுளி
ததைந்த தாமரைத் தண்வய லிற்புக
புதைந்து சேற்றினிற் புக்கவும் வேரறச்
சிதைந்த வுஞ்செழுஞ் செந்நெலும் வெண்ணெலும்

[யானைகளும், மான்களும், மரைகளும், பன்றிகளும், வயல்களிலே புகுந்து செய்லுதலினாலே சேற்றுக்குள்ளே புகுந்து புதைந்தனவும் வேரற்று அழிந்தனவும் ஆயின செந்நெலும் வெண்ணெலும் ஆகிய பயிர்கள் என்பதாம்.]

இ-ள். மதம் தரும் கரி - மதத்தைச் சிந்துகின்ற யானைகளும், மான்- மான்களும், மரை - மரைகளும், வல்லுளி - பன்றிகளும், ததைந்த - நெருங்கிய, தாமரை - தாமரை மலர்களை உடைய, தண் வயலில் - குளிர்ந்த வயல்களிலே, புக - செல்ல, புதைந்து சேற்றினில் புக்கவும் - சேற்றுக்குள்ளே புதைந்து புகுந்தவும், வேர் அற - வேர் அற்றுப் போம்படி, சிதைந்தவும்-

அழிக்கவுமாக இருந்தன, செந்நெலும் வெண்ணெலும் - செந்நெற் பயிர்களும் வெண்ணெற் பயிர்களும். எ-று.

'வல்லுளி' - பன்றி, 'ததைதல்' நெருங்குதல். (௫0)

நெற்ப சும்பயிர் பற்றி நிமிர் தன்மா
பொற்பின் மன்னர் புயவலி யற்றநாள்
கற்பின் மாதர் கருங்குழல் பற்றிநீள்
வெற்பின் மாக்கள் விசித்திடல் போன்றவே.

[நெல்லின் பசுமையான பயிர்களை மிருகங்கள் பற்றிக்கொண்டு செல்லுதல்; சிறந்த அரசர்கள் புயவலி கெட்டகாலத்தில் கற்புள்ள பெண்களின் கரிய கூந்தலைப்பற்றி நீண்ட மலைநாட்டுக்குறவர்கள் இழுத் துக்கொண்டு போவதுபோல் இருக்கிறது என்பதாம்.]

இ-ள். நெல் - நெல்லினுடைய, பசும்பயிர் - பசுமையான பயிர்களை, பற்றி நிமிர்தல்-மிருகங்கள் வாயிலே பற்றிக்கொண்டு போவதானது; மாபொற் பின் மன்னர் - பெருமைபொருந்திய அழகுடனே கூடின அரசர்களுடைய, புயவலி அற்றநாள் - புஜபலம் குலைந்த காலத்திலே, கற்பின்மாதர் - கற்புடைய பெண்களின், கரும் குழல் பற்றி - கரிதான கூந்தலைப்பிடித்து, நீள் வெற்பின் மாக்கள் - நீண்ட மலையிலுள்ளவர்களாகிய குறவர்கள், விசித்திடல் போன்ற- இழுத்துக்கொண்டு போகின்றதுபோல் இருந்தன. எ-று. ஏ - ஈற்றசை.

''நிமிர்தல்'' செல்லுதல்; 'கற்பின் மாதர்' கற்புடைய பெண்கள்; 'வெற் பின் மாக்கள்' குறிஞ்சி நிலத்துள்ளோர்; குறவர். (௫க)

பண்டு போற்பழ னச்செழுஞ் சாலியை
யுண்டு போத வுழக்கிய மாக்களைக்
கண்டு போய்க்கடி வோர்தமைக் கவ்வியே
கொண்டு போவன கோளரி யீட்டமே.

[நெற்பயிர்களை மிகுதியாக உண்டு மிதித்து அழிக்கும் மிருகங்களைப் பார்த்து போய் விலக்குவோர்களைச் சிங்கக்கூட்டங்கள் கவ்விக்கொண்டு போம்; என்பதாம்.]

இ-ள். பண்டுபோல் - முன்போலவே, பழனச்செழும் சாலியை - வயல் களிலுள்ள செழுமையான நெல் பயிர்களை, உண்டுபோத உழக்கிய மாக்களை- தின்று மிகுதியாக மிதித்து அழித்த மிருகங்களை, கண்டு - பார்த்து, போய்க் கடிவோர்தமை - போய் விலக்குவோர்களை, கோளரியீட்டம் - சிங்கக் கூட்டங் கள், கவ்வியே - கவ்விகொண்டு போவன - கொண்டு போவதாயின. எ-று. ஏ - ஈற்றசை.

'போத' - மிக; 'மாக்கள்' மிருகங்கள். மிருக சுபாவமுடைய மனிதர்களை யும் 'மாக்கள்' என்று கூறல் இலக்கண மரபு இதனை தொல் என்னும் சூத்தி ரத்தால் அறியவும். (௫உ)

இந்த வாறு நிகழ்ந்திட வேங்கியே
யந்த நாட்டி லனைவருங் கூடினர்
வந்த யோத்தியின் மன்னனைப் போற்றித்தஞ்
சிந்த னைப்படர் செப்பத் தொடங்கினர்.

[இத்தவிதமாக நடக்கவே, குடிகள் எல்லாம் துயரப்பட்டு ஒன்றுகூடி அயோத்திக்கு அரசனாகிய அரிச்சந்திரமகாராஜனைக் கிட்டி சொல்லத் தொடங்கினார்கள் என்பதாம்,]

இ-ள். இந்த ஆறு - இந்தவிதமாக, நிகழ்ந்திட - நடக்க, ஏங்கியே - (குடிகள் எல்லாம்) துக்கம் கொண்டு, அந்த நாட்டில் - அந்த அயோத்தியாபுரியில், அனைவரும் கூடினர் - எல்லோரும் ஒன்று கூடினவர்களாகி, வந்து - வந்து, அயோத்தியின் மன்னனை - அயோத்தியாபுரிக்கு அரசனாகிய அரிச்சந்திரனை, போற்றி - துதித்து, தம் சிந்தனைப்படர் - தமது மனத்துயரத்தை, செப்பத் தொடங்கினர் - சொல்ல ஆரம்பித்தார்கள். எ-று.

'சிந்தனைப்படர்' மனத்துயரம்; (படர் - துயரம் துக்கம்.) (ருங)

என்ன பாவ மிதற்குமுன் கண்டிலே
மன்னர் மன்ன வனத்து விலங்கினாற்
செந்நெல் கன்ன றினைப்புனந் தேம்பொழி
லின்ன வெண்ணில விற்றன வின்றென்றார்.

[ஓ ராஜாதி ராஜனே! என்ன பாவமோ அறியோம், இதற்கு முன்னாலே இதுபோல நாங்கள் கண்டறியோம். காட்டு மிருகங்களினால் செந்நெற் பயிரும், கன்னற்பயிரும் தினைப்புனமும் தேன் பொருந்தின சோலைகளும் இவைபோன்ற மற்றவைகளும் எண்ணிறந்தன இப்பொழுது அழிந்து போயின என்றார் என்பதாம்.]

இ-ள். மன்னர் மன்ன! - ஓ ராஜாதிராஜனே, என்னபாவம்-இது என்ன பாவத்தால் இப்படி ஆயிற்றோ தெரியவில்லை, இதற்குமுன் கண்டிலேம்- இதற்கு முன்னாலே இந்தவிதமாக நடக்க நாங்கள் பார்த்தறியோம், வனத்து விலங்கினால் - காட்டு மிருகங்களினால், செந்நெல் - செந்நெல்லும், கன்னல்- கரும்பும், தினைப்புனம் - தினைப்புனமும், தேம்பொழில் - தேன் பொருந்தின சோலைகளும், இன்ன - இவைகள் போன்றவைகளும், எண்ணில - அளவிறந்தன, இற்றன இன்று என்றார் - இப்பொழுது அழிந்து போயின என்றார்கள். எ-று. (ருச)

கலையு மானுங் கடமையு மேனமு
மலியுந் தண்பயிர் யாவையு மாய்த்தன
புலியும் பல்லமுஞ் சிங்கமும் புக்குயிர்
நலியு மோட்ட நடந்தவர் தம்மையே.

[கலைமான்களும், புள்ளிமான்களும், கடமைகளும், பன்றியும் கூடி
குளிர்ந்த பயிர்களை எல்லாம் அழித்துவிட்டன; புலியும் காடி
யும், சிங்கமும் கூடி ஓட்டவந்தவர்களைக் கொல்லுதல்
ஆயின என்பதாம்.]

இ-ள். கலையும் - கலைமான்களும், மானும் - புள்ளிமான்களும், கடமையும் - கடமை மான்களும், ஏனமும் - பன்றிகளும், மலியும் தண்பயிர் யாவையும் - மிகுதியான குளிர்ந்த பயிர்களை எல்லாம், மாய்த்தன - அழித்து விட்டன; புலியும் - புலியும், பல்லமும் - காடிகளும், சிங்கமும் - சிங்கமும், ஒட்ட - ஓட்டுதற்காக, நடந்தவர் தம்மை - போனவர்களை, புக்கு உயிர் நலியும் - வந்து உயிரைப் போக்கி விடுகின்றது. எ-று. ஏ - ஈற்றசை.

'கடமை' காட்டுப்பசு என்றும் கூறலாம். 'பல்லம்' - காடி, (ரு௫)

நீரை மாய்த்தன வாரண நீள்பயிர்த்
தூரை மாய்த்தன மான்மறை சூகரம்
வேரை மாய்த்தன மென்மயில் பைங்கிளி
சேர மாய்த்தன செந்நெற் கதிரையே.

[யானைகள் நீரை உடைய குளங்களை எல்லாம் அழித்து விட்டன.
மான்மரை பன்றி முதலிய மிருகங்கள் நீண்ட பயிர்களின்
தூரை மாய்த்தன; மயிலும், கிளிகளும் செந்நெல்
கதிரை வேரோடழித்ததுபோல் அழித்தது
என்பதாம்.]

இ-ள். வாரணம் - யானைகள், நீரை மாய்த்தன - நீரையுடைய குளங்களை எல்லாம் அழித்துவிட்டன; மான் - மான்களும், மரை - மரைகளும், சூகரம் - பன்றிகளும், நீள் பயிர்த்தூரை - நீண்ட பயிர்களின் வேரை எல்லாம், மாய்த்தன - அழித்தன, மென்மயில் - மிருதுவான மயில்களும், பைங்கிளி - பசுமையான கிளிகளும், வேரை மாய்த்தன - வேரோடழித்தாற்போல, செந்நெல் கதிரை - செந்நெல் பயிரின் கதிர்களை, சேர மாய்த்தன - ஒரேமட்டாக அழித்துவிட்டன. எ-று. ஏ - ஈற்றசை. சூகரம் - பன்றி. (ரு௬)

தின்று தின்று திரண்டபைங் கூழெலா
மொன்று மின்றி யுழக்கின வோட்டவே
சென்று சென்று செறிந்தவர் தங்களைக்
கொன்று கொன்று குவித்தன கோடியே.

[பயிர்களை எல்லாம் தின்று தின்று ஒன்றுமில்லாதபடி மிதித்து அழித்த
மிருகங்களைப் போய்ப்போய் ஓட்டக்கூடினவர்களைக் கொன்று
கொன்று குவித்திருப்பவைகள் கோடி என்பதாம்.]

இ-ள். திரண்ட பைங்கூழெலாம் - மிகுதியாயிருக்கிற பசுமையான பயிர்களை எல்லாம், தின்று தின்று - தின்று, தின்று, ஒன்றும் இன்றி - ஒன்றுமில்

லாதபடிக்கு, உழக்கின - மிதித்தழித்திருக்கிற மிருகங்களை, ஓட்டவே - ஓட்டுவதற்காக, சென்று சென்று - போய்ப்போய், செறிந்தவர் தங்களை - ஓட்டுதற்குக் கூடினவர்களை, கொன்று கொன்று - கொன்று கொன்று, குவித்தன - குவித்திருப்பன, கோடியே - கோடி என்னும் கணக்கின. எ-று. ஏ-ஈற்றசை. தேற்றமும் ஆம். (௩௭)

அரிய னந்த மரவு மனந்தம்வெங்
கரிய னந்தங் கரடிய னந்தமா
னரிய னந்த நவியனந் தங்கொடு
வரிய னந்த மலிந்தன வந்தென்றார்.

[அநேக சிங்கங்களும் அநேகம் பாம்புகளும், அநேகம் கொடிய யானைகளும், அநேகம் கரடிகளும், அநேகம் நரிகளும் அநேகம் மான்களும், அநேகம் புலிகளும், எங்கும் மிகுந்திருக்கின்றன என்றனர் என்பதாம்.]

இ-ள். அரி அனந்தம் - சிங்கங்கள் அநேகம், அரவு அனந்தம் - பாம்புகளும் அநேகம், வெம்கரி அனந்தம் - கொடிய யானைகளும் அநேகம், கரடி அனந்தம் - கரடிகளும் அநேகம், மாநரி அனந்தம் - பெரிய நரிகளும் அநேகம், நவி அனந்தம் - மான்கள் அநேகம், கொடுவரி அனந்தம் - புலிகளும் அநேகம், மலிந்தன வந்து என்றார் - வந்து எங்கும் மிகுந்திருக்கின்றன என்றார். எ-று.

'நவ்வி' எனற்பாலது 'நவி' எனவாயது தொகுத்தல் விகாரம். (௩௮)

மயிலுங் கிள்ளையும் பூவையும் வாவலுங்
குயிலுங் காகமுங் கூகையு மன்றிலு
மயிலுங் காடையு மன்னமு மென்றுபேர்
பயிலுங் கூடப் பரவைய னந்தமே.

[அந்த மிருகங்களோடுகூட மயில்களும், கிளிகளும், நாகணவாய்ப் புட்களும், வௌவால்களும், குயில்களும், காக்கைகளும், கூகைகளும், அன்றில்களும், காடைகளும், அன்னப்பட்சிகளும் என்னும் பட்சிகள் அநேகம் வந்தன என்பதாம்.]

இ-ள். மயிலும் - மயில்களும், கிள்ளையும் - கிளிகளும், பூவையும்-நாகணவாய்ப்புட்களும், வாவலும் - வௌவால்களும்; குயிலும் - குயில்களும், காகமும் - காக்கைகளும், கூகையும் - கூகைகளும், அன்றிலும் - அன்றில்களும், அயிலும் - (பழங்களைத்) தின்னும், காடையும் - காடைகளும், அன்னமும் - அன்னப்பட்சிகளும், என்றுபேர் பயிலும் - என்று பெயர் வழங்குவதான, கூடப்பறவையும் - அந்த மிருகங்களோடு கூடப்பட்சிகளும், அநந்தமே - அநேகம். எ-று. ஏ - ஈற்றசை. (௩௯)

நாற்ற மேற்றுவந் தெம்மை நலிந்திடத்
தோற்று மாகுலச் சூழ்வினை தன்னைநீ
மாற்றி டாயெனின் மன்னவ வெங்களா
லாற்றொ ணாதென் றடிதொழு தேத்தினர்.

[எங்களை வாசனை பிடித்துவந்து வருத்தம் செய்வதாகத் தோன்றின
துன்பமான சூழ்வினையை நீ மாற்றாது இருப்பாயே ஆனால்
அரசனே எங்களால் தாங்க முடியாதென்று பாதங்களை
வணங்கித் துதித்தார்கள் என்பதாம்.]

இ-ள். நாற்றம் ஏற்று வந்து - நாற்றம் பிடித்துக்கொண்டு வந்து, எம்மை நலிந்திட - எங்களை வருத்தம் செய்ய, தோற்றும் ஆகுலச் சூழ்வினை தன்னை - தோன்றிய துன்பமான சூழும் வினையை, நீ மாற்றிடாய் எனின் - நீ மாற்றா திருந்தால், மன்னவ - ஓ அரசனே! எங்களால் - எங்களால், ஆற்றொணாதென்று - இந்தத் துன்பங்கள் தாங்கமுடியாது என்று, அடிதொழுது ஏத்தினர் - பாதங்களை வணங்கித் துதித்தார்கள். எ-று.

தங்கள் வினையே 'இவ்விதத் துன்பரூபமாக வந்தது என்பது அவர்கள் எண்ணமாம். 'ஒண்ணாது' என்பது ஒணாது என்று வந்தது தொகுத்தல் விகாரம். (சு0)

அங்கண் மானிலத் தன்னநன் னாட்டவர்
தங்கள் வாய்மொழி கேட்டரிச் சந்திரன்
றிங்கள் சூடி திருவிளை யாட்டினுக்
கெங்க ளாற்செய்வ தென்னென வெண்ணினன்.

[அந்தக் கோசலநாட்டுக் குடிகள் வாய்ச்சொற்களைக்கேட்டு அரிச்சந்
திரன் சிவபெருமான் திருவிளையாட்டிற்கு எங்களால்
செய்யத்தக்கது என்ன இருக்கிறது என்று
எண்ணினன் என்பதாம்.]

இ-ள். அம் கண் - அழகிய இடத்தை உடைய, மாநிலத்து - அந்தப் பெரிய உலகத்திலே, நல் நாட்டவர் தங்கள் - நல்ல கோசலநாட்டவர்களுடைய, அன்னவாய்மொழிகேட்டு - அப்படிப்பட்ட வார்த்தைகளைக்கேட்டு, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜன், திங்கள் சூடி - சந்திரனைச்சூடின பரமசிவனுடைய, திருவிளையாட்டினுக்கு - (இப்படிச்செய்யும்) திருவிளையாட்டிற்கு, எங்களால் செய்வது - எங்களாலே செய்யத்தக்கது, என் என எண்ணினன்-என்ன இருக்கிறது என்று நினைத்தான். எ-று.

'திங்கள் சூடி' சிவபெருமான், 'அவனன்றி அணுவும் அசையாது' ஆதலின் இந்தவிதமாக நிகழ்வதற்கு ஏதோ காரணம் இருக்கவேண்டும் இது சிவபெருமான் திருவிளையாட்டாதலால் கூடும் என்று நினைத்தான் என்பதாம். (சுக)

அறைபு னற்றிரு நாடழி வுற்றதற்
கிறையு மக்கிரண் டாண்டி னுக்கில்லெனக்
குறைவி லாநிதி கூறை யளித்துநீ
குறையு மூர்தொறுஞ் செல்லுமென் றோதினன்.

[இந்தத்திருநாடு இப்படி அழிந்தபடியினால் உங்களுக்கு வரி இரண்டு வருஷத்திற்கில்லை என்று சொல்லி, குறைவில்லாமல் பொருளும் வஸ்திரங்களும் கொடுத்து உங்கள் உங்கள் ஊருக்குப் போங்கள் என்று சொன்னான் என்பதாம்.]

இ-ள். அறைபுனல் - ஒலிக்கின்ற கங்காநீர் (பாயப்பெற்ற), திருநாடு-இந்தத் திருநாடு, அழிவு உற்றதற்கு - இப்படி அழிந்ததற்காக, இறை - அரசனுகிய எமக்குக் கொடுக்கும் பகுதி, உமக்கு - உங்களுக்கு, இரண்டாண்டினுக்கு இல் என - இரண்டு வருஷங்களுக்கு இல்லையாகக்கடவது என்று சொல்லி, குறைவிலாது - அவர்களுக்குக் குறைவில்லாதபடிக்கு, நிதி - பொருள்களும், கூறை - வஸ்திரங்களும், அளித்து - கொடுத்து, நீர் உறையும் - நீங்கள் வசிக்கும் ஊர்தொறும் - ஊர்களுக்கு, செல்லும் என்று ஓதினன் - போங்கள் என்று சொல்லினன். எ-று.

"அறைபுனல்" அலைமோதுதலால் உண்டாகும் ஒலியை உடைய நீர்; என்பதாம், ஈண்டு 'கங்காநதியைக் குறித்தது. "குறைவிலாது" மிகுதியாக என்றும், வந்து கூறியவர்களுக்குக் குறைச்சல் இல்லாதபடி என்றும், இந்தவித சம்பவத்தால் உண்டாம் நஷ்டம் இல்லாதபடி ஈடாக என்றும் பொருள் செய்யலாம். (௬௨)

வஞ்சனைக்காண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - ௫௨௦.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நான்காவது,

# வேட்டஞ்செய்காண்டம்.

[இக்காண்டத்தில் அரிச்சந்திரமகாராஜன் தன் குடிகள் உயிரையும் பயிரையும் அழித்த விலங்குகளைக் கொல்லுதற்காக வேட்டைக்குச்சென்று வேட்டை ஆடியது சொல்லுகின்றது.]

கலி விருத்தம்.

நிலவு காலு நெடுங்குடை மன்னவன்
புலவு வாய புலிமுதல் யாவையுஞ்
சுலவு தானை தொடர்தர வேட்டஞ்செய்
செலவு மேவிய செய்தி விளம்புவாம்.

[இதனால், அரிச்சந்திரமகாராஜன் புலி முதலிய யாவையும் சேனைகள் தொடர வேட்டை ஆடுதற்குச்சென்ற செய்தியைச் சொல்லுகின்றேன் என்கின்றார்.]

இ-ள். நிலவுகாலும் - சந்திரிகையை வீசுகின்ற, நெடும் குடை மன்னவன் - நீண்ட வெள்ளைக்குடையை உடைய அரிச்சந்திரமகாராஜன், புலவு வாய - புலால் நாற்றத்தை உடைய, புலிமுதல் யாவையும் - புலிகள் முதலான எல்லாவற்றையும், சுலவுதானை - சுற்றி வருவதாகிய சேனைகள், தொடர்தர - கூடவர, வேட்டஞ்செய் செலவு மேவிய செய்தி - வேட்டையாடச் செல்லுதலைப்பொருந்திய சங்கதியை, விளம்புவாம் - சொல்லுவாம். எ-று.

'நிலவுகாலும்' சந்திரிகையைப்போலப் பிரகாசிக்கும், என்றும் பொருளாம். 'புலவுவாய்' மாமிசத்தை வாயிலே கொண்டிருக்கின்ற, என்றும் பொருள் கூறுவர். 'சுலவுதானை' சூழத்தக்க சேனை என்றும் கூறலாம்; இது 'நுதலிப்புகுதல்' அதாவது சொல்லித் தொடங்குதல் என்பதாம். இவை பெரும்பாலும் ஓரடிக்கு மாச்சீர் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் என்னும் நான்கு சீர்கள் கொண்ட அடிகளாலாகிய கலி விருத்தம். (க)

செல்லு மென்னப் பணிந்தவர் சேறலும்
வெல்லும் வெம்படை வேந்த னமைச்சர்காள்
கொல்லு மிந்தக் கொடுவினைக் கென்செய்கோ
சொல்லு மென்னத் தொழுதவர் சொல்லுவார்.

[குடிகளைச் சொல்லுங்கள் என்றலும் அவர்கள் போன உடன், அரிச்சந்திர மகாராஜன் மந்திரிகளை நோக்கி, மந்திரிகளே! குடிகளைக் கொல்லு கின்ற இந்தக் கொடிய வினைக்கு நான் என்னசெய்வேன் சொல்லுங்கள் என்றவுடனே மந்திரிகள் தொழுது சொல்லுகின்றார்கள் என்பதாம்.]

இ-ள். செல்லும் என்ன - (தன்னிடம் முறையிட்டுக்கொள்ள வந்த குடிகளுக்குத்தக்க ஆறுதல்கள் செய்து) போங்கள் என்று சொல்ல, பணிந்து அவர் சேறலும் - அக்குடிகள் அரிச்சந்திரமகாராஜனை வணங்கிச் சென்ற உடனே; வெல்லும் - சத்துருக்களைச் செயிக்கும்படியான, வெம்படை-வெவ்விய சேனைகளை உடைய, வேந்தன் - அரிச்சந்திரமகாராஜன், அமைச்சர்காள் - (மந்திரிகளை நோக்கி) மந்திரிகளே! கொல்லும் குடிகள் முதலானவர்களைக் கொல்லும், இந்த - இந்தக், கொடுவினைக்கு - கொடிய செய்கைக்கு, என்செய்கோ - நான் என்னசெய்வேன், சொல்லும் என்ன - நீங்கள் இதற்கு ஒருவழியை யோசித்துச் சொல்லுங்கள் என்று கேட்க, தொழுது - வணங்கி, சொல்லுவார் - அவர்கள் சொல்லுகின்றார்கள். எ-று.

"செல்லும் என்னப்பணிந்து அவர் சேறலும்" "என்பதற்கு," (இந்தக் கஷ்டங்கள் எல்லாம் அரிச்சந்திரமகாராஜனால்) நீங்கிவிடுமென்று அரிச்சந்திரனை வணங்கிவிட்டு அவன் உத்தாவின்படி தத்தம் இடங்களுக்குக் குடிகள் சென்றவுடனே" என்றும் பொருள் விரிப்பர்; 'வெம்படை' ஆயுதமும் ஆம், 'என்செய்கோ,' இது அருள்பற்றி எழுந்த வினா; அமைச்சர், அரசர்களுக்குப் பக்கத்திருந்து யோசனை கூறுதற்கு பொருத்தமானவர் என்னும் பொருளில் வந்த பெயர். (அமைச்சர் - பொருந்தியவர்) இதனை அமாத்தியர் என்னும் வடமொழித் திரிபு என வடநூற் புலவர் கூறுவர். (உ)

கூட்ட வேடருங் கோலும்வை வேலுநா
யீட்ட முங்கொடு கானகத் தெய்திநீ
வேட்டை யாடி விலங்கின மாய்த்துயிந்
நாட்டை யோம்ப னலனெனக் கூறினர்.

[கூட்டமாகிய வேடர்களையும் அம்புகளையும் வேல் முதலிய ஆயுதங்களையும் நாயின் கூட்டங்களையும் கொண்டு நீர் காட்டுக்குச்சென்று வேட்டையாடி மிருகக்கூட்டங்களைக்கொன்று இந்த நாட்டைக் காப்பாற்றுதல் நல்லதென்று கூறினர், என்பதாம்.]

இ-ள். நீ - நீர், கூட்ட வேடரும் கூட்டமான வேடர்களும், கோலும்-அம்புகளும்; வைவேலும் - கூரிய வேல்களும்; நாய் ஈட்டமும் - நாயின் கூட்டங்களும், கொடு - கொண்டு, கானகத்தெய்தி - காட்டுக்குள்ளே சென்று, வேட்டை ஆடி - வேட்டை ஆடி, விலங்கினம் மாய்த்து - மிருகங்களை எல்லாம் கொன்று, இந்நாட்டை ஓம்பல் - இந்த நாட்டைக் காப்பாற்றுவது, நலன் என - நல்லது என்று, கூறினர் - சொன்னார்கள். எ-று.

வேட்டை ஆடி விலங்குகளைக்கொன்று காட்டைக் காப்பாற்றுவது நலன் என்று கூறினார்கள் அமைச்சர்கள். (இது கருத்து.) (௩)

என்ற மைச்ச ரியம்பலு மன்னவ
னன்று நன்றென நண்ணி மனக்கொளாக்
குன்ற வாணரைக் கூட்டிக் கொணர்கென
நின்ற தூதர் தொழுதய னீங்கினர்.

[என்று மந்திரிகள் சொன்ன உடனே அரிச்சந்திரனும் நல்லது நல்லது என்று சம்மதித்து வேடுவரைக் கூட்டிக்கொண்டு வாருங்கள் எனச் சமீபத்திலிருந்த தூதர்கள் வணங்கிவிட்டுக் கூப்பிடச் சென்றார்கள் என்பதாம்.]

இ-ள். என்று - என்று, அமைச்சர் - மந்திரிகள், இயம்பலும் - சொன்ன உடனே, மன்னவன் - அரிச்சந்திர மகாராஜன், நன்று நன்று என - நல்லது நல்லது என, நண்ணி மனக்கொளா - மனத்திலே பொருந்தச் சம்மதித்து, குன்றவாணரை - மலைகளிலே வாழ்கின்ற குறவர், வேடர் முதலானவர்களைக் கூட்டிக் கொணர்கென - கூட்டி வாருங்கள் என்று சொல்ல, நின்ற தூதர்- (அதுகேட்டு) அங்கு நின்ற தூதர்கள், தொழுது அயல் நீங்கினர் - வணங்கிக் கொண்டு வெளியே போனார்கள். எ-று.

'நின்ற தூதர்' - எப்பொழுது அரசன் கட்டளை யிட்டருளுவானோ வென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் தூதர்கள் என்பது பொருள். (௪)

ஓடி னார்க ளுயர்வரைக் கானக
நாடி னார்கணந் நாயக னுங்களைத்
தேடி னானென்று செப்பலுஞ் சிற்சிலர்
கூடி னார்துடி கொட்டின ரெங்குமே.

[தூதுவர்கள் ஓடினார்கள், உயர்ந்த மலைக்காடுகளில் தேடிக்கண்டு நமது அரசன் உங்களைத் தேடினான் என்று சொல்லினார்கள், சொன்ன உடனே குன்றவாசிகளிற் சிற்சிலர் கூடினார்கள் எங்கும் துடி கொட்டினார்கள், என்பதாம்.]

இ-ள். ஓடினர்கள் - தூதர்கள் ஓடினார்கள், உயர்வரைக்கானகம் - உயர்ந்த மலைக்காடுகளை, நாடினார்கள் - போய்த்தேடினார்கள், நம் நாயகன் - (கண்டு) நமது அரசன், உங்களை - உங்களை, தேடினான் என்று செப்பலும் - தேடினானென்று சொன்ன உடனே, சிற்சிலர் கூடினர் - சிற்சிலர்கள் கூடினார்கள், துடிகொட்டினர் எங்குமே - கூடிய அவர்கள் மற்றையரும் வரும்பொருட்டு) துடி என்னும் பம்பை வாத்தியத்தை எங்கும் அடித்தார்கள். எ-று. 'துடி' குறிஞ்சி நிலப்பறை. (௫)

அந்த வேலை யருஞ்சுரம் யாவினுங்
கந்தன் மேவு குறிஞ்சித் தடத்தினுங்

குந்தம் வேல்சிலை கூன்குனில் கொண்டவண்
வந்த வேடர் வரவு விளம்புவாம்.

[அந்தச்சமயத்தில் அருமையான பாலைநிலங்களிலிருந்தும் கந்தன் வசிக்கும் குறிஞ்சிநிலக் காடுகளிலிருந்தும், ஈட்டி, வேல், வில், வளைதடியாகிய இவைகளைக்கொண்டு அங்கு வந்த வேடர்களின் வரவைப்பற்றிக் கூறுவாம் என்பதாம்.]

இ-ள். அந்தவேலை - பம்பைத்தொனிகேட்ட அந்தச்சமையத்தில், அரும் சுரம் யாவினும் - அருமையான பாலைவனங்கள் எல்லாவற்றினும், கந்தன்-முருகக்கடவுள், மேவு - பொருந்தி யிருக்கின்ற, குறிஞ்சித்தடத்தினும் - குறிஞ்சி நிலக்காட்டிலும், (இருந்து) குந்தம் - கையீட்டி, வேல் - வேலாயுதம், சிலை-வில், கூன்குனில் - வளைதடி, கொண்டு - முதலிய ஆயுதங்களைக் கையிலே கொண்டு, அவண் வந்த - அங்கே வந்த, வேடர் - வேடர்களின், வரவு - வருகையை, விளம்புவாம் - சொல்லுகிறோம். எ-று.

குறிஞ்சி நிலத்துக் கடவுள் கந்தக்கடவுள் ஆதலின் 'கந்தன் மேவு குறிஞ்சி' என்றார். (௬)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பீலிகட்டியதன்மீதுமொய்த்தொளிபிறங்குசெட்டைகளணைத்து
மாலையிட்டுவளர்குஞ்சிதுஞ்சநெல்வருந்திறுக்குமலர்சூடியே[நீள்
காலினிற்றொடுசெருப்பணிந்துகழல்கட்டிநீடுடிகறங்கவை
வேல்பிடித்துடலம்வேர்வரும்பிடவிரைந்துவந்தனரனந்தரே.

[வேடர்கள் தம்மை அலங்கரித்துக்கொண்டு வந்த விதத்தைக் கூறுகின்றார்.]

இ-ள். பீலிகட்டி - மயிற்றோகைகளைக் கட்டிக்கொண்டு, அதன்மீது-அதற்குமேலே, மொய்த்து - நெருங்கி, ஒளி பிறங்கு - ஒளி விளங்குகின்ற, செட்டைகள் - இறகுகளை, அணைத்து - இருபுறத்திலும் கொண்டு, நீள் மாலையிட்டு-நீண்ட மாலைகளை அணிந்துகொண்டு, வளர் - வளர்கிற, குஞ்சி - குடுமிகளிலே, துஞ்ச - பொருந்தும்படி - நெல்வரிந்து இறுக்கி - குளநெல்லை வரிந்து இறுக்கிக் கட்டிக்கொண்டு, மலர் சூடியே - அதற்குமேல் புஷ்பங்களைச் சூடிக்கொண்டு, காலினில் - கால்களிலே, தொடு - மாட்டிக்கொள்ளக்கூடிய, செருப்பு அணிந்து - செருப்பை அணிந்துகொண்டு, கழல்கட்டி - வீரக்கழல்களைக் கட்டிக்கொண்டு, நீள்துடி கறங்க - பெரிய துடி என்னும் வாத்தியம் முழங்க, வைவேல் பிடித்து - கூர்மையான வேலைக் கையிலே பிடித்துக்கொண்டு, உடலம் - உடம்பெல்லாம், வேர் வரும்பிட - வேர்வையுண்டாக, விரைந்து - வேகமாக, அநேகர் - அநேகம்பேர்கள், வந்தனர் - வந்தார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

வேடர்களும், குறவர்களும் தலையிலும் உடம்பிலும் மயில் இறகு முதலிய இறகுகளைச் சூடிக்கொள்ளுதல் வழக்கமாதலினால் 'பீலி கட்டி' என்றும் 'செட்

டைகள் அணைத்து' என்றும் கூறினர். குளநெல் கதிரைக் குறவர்கள் தலையில் சூடிக்கொள்வது வழக்கம். (எ)

கொலையெடுத்தசமனுறைவதற்குரியகூடெனத்தகையதூணியிற்
கலையெடுத்தபிறையனையமுத்தலையகணைநிறைத்துவளர்மார்பினி[ல்
மலையடுத்தனையபுயமணைத்திறுகவார்கள்விசித்துவருகாரெனச்
சிலையெடுத்துவிழிகனலெழக்கடிதுசென்றவேடுவரனந்தரே.

[வேடுவர்கள் ஆயுதங்கள் தரித்துக்கொண்டு வந்தமையை விளம்புகின்றார்.]

இ-ள். கொலை எடுத்த-கொலைத்தொழிலைக்கொண்ட, சமன் உறைவதற்கு-எமன் இருக்கிறதற்கு, உரிய - பொருந்திய, கூடு எனத்தகைய - கூடு என்று சொல்லத்தகுந்த, தூணியில் - அம்புப்புட்டியில், கலை எடுத்த - கலைகளைக் கொண்ட, பிறை அனைய - சந்திரப்பிறையை ஒத்தவைகளும், முத்தலைய- மூன்று தலைகளை உடையனவுமாகிய, கணை நிறைத்து - பாணங்களை நிரப்பிக் கொண்டு, வளர் மார்பினில் - (நீண்டு உயர்ந்து) வளர்ந்திருக்கின்ற மார்பிலு 'ம்' மலை அடுத்தனைய - மலைகள் சமீபித்ததை ஒத்த, புயம் - தோள்களிலும், அணைத்து - பொருந்தச் சேர்த்து, இறுகவார் விசித்து - இறுக்கமாகத் தோல் வார்களினாலே கட்டிக்கொண்டு, கார் என - மேகங்கள்போல, சிலை எடுத்து-வில்லுகளை எடுத்துக்கொண்டு, விழி கனல் எழ - கண்களில் நெருப்பு எழ, கடிது சென்ற - வேகமாக வந்த, வேடுவர் அநந்தர் - வேடர்கள் அநேகர். எ-று. ஏ- ஈற்றசை.

'கலை யெடுத்த 'பிறை' எட்டுக்கலைகொண்ட பிறைபோன்ற என்பர். எனெனில் அர்த்தசந்திர பாணமாதலின். 'இறுகவார் விசித்து' என்பதற்கு மெய்யில் இறுக்கமாகத் தோற்சட்டை யுடுத்துக்கொண்டு என்றும் கூறுவர்; வேடர்கள் கருநிறம் உடையர் ஆதலின் 'கார் என' என்றார். (அ)

பணிலமொத்தபலகறைநிரைத்தபலகவசமிட்டுவெகுதுவசரா
யணிமயிர்க்கரடிமதகரித்திரள்கள்புலிமுதற்கிரியினளவவாய்[க்
கணிலெதிர்த்தவைகள்கரவிலுற்றவைகடுணிபடக்கருவியெறியும
குணிலெடுத்துலகநிறையவந்தனர்கள்கோடிகோடிகொலைவேடரே

[வேடர்கள் ஆபரணங்கள் அணிந்துகொண்டு வந்தமை கூறுகின்றார்.]

இ-ள். கோடி கோடி கொலைவேடர் - கோடி கோடியாகிய கொல்லும் தொழிலை உடைய வேடர்கள், பணிலம் ஒத்த - சங்குகளுக்கு ஒப்பான, பல கறை நிரைத்த - பலகறைகளை நிரப்பி யிருக்கிற, பல கவசம் இட்டு - பலவித மான சட்டைகளை அணிந்து, வெகு துவசராய் - அநேகங் கொடிகளை உடையவராய், அணிமயிர்க்கரடி - அழகிய மயிரை உடைய கரடிகள், மதகரித்திரள்- மதம் ஒழுகப்பெற்ற யானைகளின் கூட்டங்கள், புலிமுதல் - புலி முதலாக, கிரியின் அளவவாய் - பன்றி யிருகவுள்ள, கணில் எதிர்த்தவைகள் - கண்ணிலே எதிர்ப்பட்ட மிருகங்களையும், கரவில் உற்றவைகள் - மறைவிலே இருக்கின்ற

மிருகங்களையும், துணிபட - துண்டங்களாகும்படி, கருவி எறியும் - கோபித்து வீசுகின்ற, அக்கணில் எடுத்து - அந்தக் குறுந்தடிகளையும் எடுத்துக்கொண்டு, உலக நிறைய வந்தனர்கள் - அந்த நாடெல்லாம் நிரம்ப வந்தார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

'பலகறை நிரைத்த கவசம்' என்றதனால் சட்டைகளின்மேல் பல கறைகளை ஒழுங்கு ஒழுங்காக நிரைத்து அலங்கரிப்பது வழக்கம். என்பது புலப்படுகின்றது. 'கணில்' கண்ணில் என்பதன் தொகுத்தல் விகாரம். (௯)

வென்றிமத்தகமதக்களிற்றனெடுவெண்மருப்பில்விளைமுத்தமுங்
குன்றிமுத்துநிரையொக்கவைத்தகன கோவைமார்பினிடைதாழ
வே,பன்றியிற்பருமருப்பிணைத்தெழில்பயின்றகண்டிகையணிந்து
யிர்,கொன்றுதின்பதுவிரும்பிவந்தனர் குடாரவேடரொருகோ
டியே.

[இதனால், குடார வேடர்கள் அணிகளை அணிந்துகொண்டு மிகுதியாக வந்ததன் சிறப்புக் கூறுகின்றார்.]

இ-ள். வென்றி - வெற்றியை உடைய, மத்தக மதக்களிற்றின் - மத்தகத்தோடு கூடிய மதயானைகளினுடைய, நெடுவெண் மருப்பில் - நீண்ட வெள்ளிய கொம்பில், விளைமுத்தமும் - விளைகின்ற முத்துக்களும், குன்றிமுத்தும் - குன்றி மணிகளையும், நிரை ஒக்கவைத்த - வரிசைகளை, சரிக்குச்சரியாக வைத்த, கன - கனமான, கோவை - மாலைகள், மார்பினிடை தாழவே - மார்பிலே தொங்க, பன்றியின் பருமருப்பு - பன்றிகளினுடைய பெரிய கொம்புகளை, இணைத்து - சேர்த்து, எழில் பயின்ற - அழகு விளங்குகின்ற, கண்டிகை அணிந்து - கண்டிகைகளைப் பூண்டுகொண்டு, உயிர்கொன்று திண்பது - உயிர்களைக் கொன்று தின்கிறதையே, விரும்பி - இச்சித்து, குடாரவேடர் - கோடரி கையிலே கொண்ட வேடர்கள், ஒருகோடி வந்தனர் - ஒரு கோடிப்பேர் வந்தார்கள். எ-று. ஏ - ஈற்றசை.

'மத்தக மதக்களிறு,' கபோலங்களிலே மதம் ஒழுகப்பெற்ற களிறு, என்றும் பொருள் விரிப்பர். யானைக்கு மும்மதங்கள் உண்டு; அவையாவன:— கபோலமதம், கன்னமதம், பீஜமதம்; (கபோலமதம் - தலையில் மதம் ஒழுகுவது, கன்னமதம் - கன்னங்களில் மதம் ஒழுகுவது, பீஜமதம் - ஆண்குறி வழியாக மதம் ஒழுகுவது; யானைத்தந்தங்களில் விளையும் முத்தையும் குன்றி மணியையும் சமமாக வரிசை வரிசையாக வைத்தார்கள் என்பதனால் அவர்கள் அறியாமை விளங்குகின்றது, இதனை அவர்கள் செல்வ நிலைமையைக் காட்டுகிறது என்றும் கூறுவர். குடாரம் - கோடரி. (௪0)

பாசமிற்றிடவிசித்தசங்கிலிகள்பற்றறத்தமிலழன்றுவெம்
பூசலிட்டனவெனச்சினத்துறுபுணர்ச்சியின்மிகுமுணர்ச்சிபாய்க்
கேசரிக்குருளையென்னவூளைபயில்கிளைதவோதைதிசைநாவினும்
விசமுற்செலநெருக்கமுற்றுவருவெண்சுணங்குசதகோடியே.

[வெண்சுணங்குகள் நூறுகோடி வந்த தன்மையைக் கூறுகின்றனர்.]

இ-ள். பாசம் இற்றிட - கட்டின கயிறு அற்றுப்போகவும், விசித்த சங்கிலிகள் - கட்டியிருக்கின்ற சங்கிலிகள், பற்றற - பொறுத்துவிட்டுப் போகவும், தமில் அழன்று - தங்களுக்குள்ளே கோபம் கொண்டு, மெய்பூசல் இட்டு - கொடிய சண்டையிட்டுக்கொண்டு, அனல் எனச்சினத்து - நெருப்பைப்போற் கோபித்து, புணர்ச்சியின் மிகும் உணர்ச்சியாய் - பெட்டையோடு கூடுகின்ற புணர்ச்சியிலே மிகுந்த நினைவு உள்ளவைகளாய், கேசரிக்குருளை என்ன - சிங்கக்குட்டிகள்போல், ஊளையில் கீதை - வோதை ஊளையிடுகிற இனிய கீதம் போன்ற சப்தமானது, திசை நாலினும் வீச - நான்கு திக்குகளிலும் பாவ, முற்செல - முன்னே வருதற்காக, நெருக்கமுற்று - நெருக்கிக்கொண்டு, வரு வெண் சுணங்கு - வருகின்ற வெள்ளை நாய்கள், சதகோடியே - நூறுகோடி. எ-று. ஏ - ஈற்றசை.

'பாசம்' கயிறு, 'பூசலிட்டு' சப்தம் இட்டுக்கொண்டு, என்றும் பொருள் கூறுவர். 'குருளை' - குட்டி, தொல்காப்பியச் சூத்திரத்தாலும் அறிக. (கக)

அந்தரத்திடியெனக்குரைத்துமுதிராழிபோலுறமிவார்தடங்
கந்தரத்திறுகநின்றுரப்பியிருகால்மடக்கியெதிர்தாவியே
தந்தமிற்கறுவுகொண்டுபல்பலதயங்கவெங்கனறடங்கணூற்
சிந்திடச்சருவிமுன்கதித்துவருசெஞ்சுணங்குசதகோடியே.

[செந்நாய்கள் நூறுகோடி வந்தது இந்தத் தன்மையது என்பதைக் கூறுகின்றார்.]

இ-ள். அந்தரத்து இடி என - ஆகாயத்தில் உண்டாகும் இடியைப்போல, குரைத்து - குலைத்து, முதிர் ஆழிபோல் - முதிர்ந்த கடலைப்போல, உறமி - உறுமி, வார் - கழுத்திற் கட்டிய தோல்வாரானது, தடம் கந்தரத்து இறுக - பெரிய கழுத்திலே இறுகும்படி, நின்று உரப்பி - நின்று அதட்டி, இருகால் மடக்கி - முன்னுள்ள இரண்டு கால்களையும் மடக்கிக்கொண்டு, எதிர் தாவியே - முன்னே பாய்ந்து, தம் தமில் - தத்தமக்குள்ளே, கறுவுகொண்டு - வயிரம் கொண்டு, பல்பல தயங்க - பல்கள் பல விளங்கவும், வெம் கனல் - வெப்பமான நெருப்பு, தடம் கணூல் சிந்திட - பெரிய கண்களிலிருந்து சிந்த, சருவி - இட்டி, முன் கதித்து வரு - முன்னே வேகம்கொண்டு வருகின்ற, செஞ்சுணங்கு - செவந்த நாய்கள், சதகோடி - நூறுகோடி. எ-று. ஏ - ஈற்றசை.

'சருவி' - சாடை கண்டு அதற்குப் பொருந்தியபடி என்றும் பொருள் கூறுவர். (கஉ)

வெண்டையங்கவடிகண்டைவாரெழில்விளங்குவெங்கனகளங்களுந்
தண்டைகிண்கிணிசிலம்புநின்றொலிதழங்கிடுங்கடியதாள்களுந்

துண்டவெண்பிறையிரண்டுநின்றெதிர்துளங்கவெட்டெயிறுமாக
மண்டலங்குழியவந்தஞாளிபலவண்ணமுள்ளசதகோடியே [வே

[பலநிற நாய்கள் நூறுகோடி வந்ததும் அதன் தன்மையும் கூறுகின்றார்.]

இ-ள். வெண்டயம் - வெண்டயங்களும், கவடி - பல கறைகளும், கண்டை - பெரிய மணிகளும், வார் - தோல்வார்களும், எழில் விளங்கு-அழகு விளங்குகின்ற, வெம்கன - மிகக்கனமான, சமுத்தணிகளும் களங்களும்-கொண்ட கழுத்துகளோடும், தண்டை - தண்டையும், கிண்கிணி - கிண்கிணியும், சிலம்பு - சிலம்புகளும், நின்று - நிலைத்து, ஒலிதழங்கிடும் - ஓசை முழங்கும்படியான, கடிய தாள்களும் - கடினமாகிய கால்களும், துண்ட வெண்பிறை - துண்டமாகிய வெள்ளைப்பிறைச்சந்திரர்கள்; இரண்டு நின்று எதிர் துளங்க - இரண்டும் போலிருந்து முன்னே விளங்குகின்ற, வெட்டெயிறுமாகவே - வெட்டுகின்ற பற்களோடும் கூட, மண்டலம் குழிய - பூமிகள் பள்ளமாகும்படி, வந்த ஞாளி - வந்த நாய்கள், பல வண்ணமுள்ள - பல நிறங்களுடையன, சதகோடி - அவைகளும் நூறுகோடிகளாம். எ-று. ஏ - ஈற்றசை.

'மண்டலங் குழிய' என்றது, நாய்செல்லும் வேகத்தால் மண்டலங் குழிய என்றும், நாய்களணிந்த ஆபரணங்களின் கனத்தால் பூமி குழிந்ததென்றும் கூறுவர். (கங)

வால்சுருண்டுநுனிவாய்வளர்ந்துதடமார்பகன்றிடைசிறுத்துவெங்
மேலுயர்ந்தணிசிரம்பருத்துநெடுவீரவாளெயிலிலங்கிட
நாலுகின்றமணியாரமென்றுநெடுநாநிமிர்ந்துதுளிதாழவே
காலுயர்ந்துகிர்விளர்த்துமொய்த்துவருகரியநாய்கள்சதகோடியே

[கறுநாய்கள் நூறுகோடி வந்ததென்றும், அவைகள் இன்னவிதமாக வந்ததென்றும் கூறுகின்றார்.]

இ-ள். வால் சுருண்டு - வாலானது சுருண்டும், நுனிவாய் வளர்ந்து-நுனிவாயானது நீண்டும், தடமார்பு அகன்று - பெரிய மார்பானது அகன்றும், இடை சிறுத்து - இடுப்பு சிறுத்தும், வெங்மேலுயர்ந்து - முதுகுமேலே உயர்ந்தும், அணிசிரம் பருத்து - அழகான தலைபருத்தும், நெடு - நீண்ட, வீரவாள்-வீரவாள்போல், எயிறு இலங்கிட - பற்கள் விளங்கவும்; நாலுகின்ற - தொங்குகின்ற, மணிஆரமென்று - மணிமாலைகளைக் கடித்து மென்றுகொண்டு, நெடுநா நிமிர்ந்து - நெடிய நாக்கு நிமிர்ந்தும், துளிதாழ - நீர்த்துளிகள் பூமியில் விழவும், கால் உயர்ந்து - கால்கள் உயர்ந்து, உகிர் விளர்த்து - நகங்கள் வெளுத்து, மொய்த்து வரு கரிய நாய்கள் - நெருங்கி வருகின்ற கறுத்த நாய்கள், சதகோடியே - நூறுகோடி. எ-று. ஏ - ஈற்றசை.

'மணி ஆரமென்று' என்பதற்கு மாணிக்கமாலை என்று சொல்லும்படி; 'நெடுநாநிமிர்ந்' து நெடிய நாக்குத் தொங்கவும், 'துளிதாழவே' என்றது நாய்கள் வெயிலில் ஒடி இளைத்தால் நாக்கு நீண்டு அதில் நீர்வடியும். (கச)

நிலைபெயர்ந்துலவுநீலமால்வரைகணிகரெனப்பிடரினுகநிறீஇத்
தலையிறங்கியகல்வாயில்வெண்ணுரைதயங்கநாமுழமிறங்கவே
யலையெழுஞ்சலதியொலியெனக்கதறியணிகரும்பகடிழுக்கநீள்
வலைகளுந்திரையும்வாரும்வன்கயிறும்வந்தவன்சகடனந்தமே.

[இடம்விட்டுப் பெயர்கின்ற நீலமலைகள்போல கரிய எருமைக்கடாக்கள்
பிடரியில் நுகம்பொருந்த தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு
அகன்ற வாயில் நுரைகள் விளங்க நாக்கு முழம் தொங்க கடல்
ஒலிபோல் கதறிக்கொண்டு இழுக்கின்ற அநேக வலிய
வண்டிகளில் வலையும் திரையும், வாரும், கயிறும்,
வந்தன என்பதாம்.]

இ-ள். நிலைபெயர்ந்து - தங்கள் நிலைகளைவிட்டு, உலவும் - சஞ்சரிக்கின்ற, நீல மால்வரைகள் - நீல நிறமான பெரிய மலைகள், நிகர் என - ஒப்பென்று சொல்லும்படி, பிடரில் நுக நிறீஇ - பிடரியிலே நுகத்தடியை நிறுத்தி, தலையிறங்கி - தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு, அகல்வாயில் - அகன்ற வாயில் - வெண்நுரை தயங்க - வெள்ளை நுரைகள் விளங்க, நாமுழம் இறங்கவே - நாக்கு ஒருமுழம் தொங்க, அலை எழும் - அலை கிளம்புகின்ற, சலதி ஒலி என - கடல் ஓசை என்று சொல்லும்படி, கதறி - கதறிக்கொண்டு, அணி- அழகிய, கரும்பகடு இழுக்க - கருத்த எருமைகள் இழுக்க, நீள் வலைகளும்- நீண்ட வலைகளும், திரையும் - திரைகளும், வாரும் - தோல்வார்களும், வன் கயிறும் - வலிதான கயிறுகளும், வந்த - ஏற்றிவந்த, வன்சகடு அனந்தமே- வலிய வண்டிகள் அநேகம். எ-று. ஏ - ஈற்றசை.

தலையிறங்கல், வாயில் வெண்நுரை விளங்கள். நாதொங்கல் முதலியன வண்டியில் ஏற்றிய பாரங்களினுல் உண்டாவன, 'நிலைபெயர்ந்து உலவும் நீல மால்வரை' கரிய எருமைகளுக்கு உவமை ஆயிற்று. (கரு)

இமையமந்தரமுதற்றடங்கிரியுமிதனிடைப்படுசுரங்களு,மனை
யும்வேடுவரனந்தகோடியரணைந்துமேருவரையன்னதோர், சமை
யமண்டபநிறைந்திருந்ததிரிசங்குமைந்தனை வணங்கியே, யெமை
யழைத்தபணிவிடையுரைத்தருள்கவென்றுமண்மிசையிறைஞ்சி
னர்.

[இமையமலை மந்தரமலை முதலிய மலைகளிலிருந்தும் இதற்கு மத்தியில்
உள்ள பாலைவனங்களிலிருந்தும் வேடுவர்கள் அநேகம் கோடியர்கள்,
வந்து சபாமண்டபத்திருந்த அரிச்சந்திரமகாராஜனை வணங்கி
எம்மை அழைத்த பணிவிடை சொல்லியருளும் என்று
வேண்டினர்கள் என்பதாம்.]

இ-ள். இமைய மந்தரமுதல் - இமையகிரி மந்தரகிரி முதலான, தடங் கிரியும் - பெரிய மலைகளிலும், இதனிடைப் படுசுரங்களும் - இந்த மலைகளுக்கு

நடுவிலுள்ள பாலை வனங்களிலும், அமையும் - பொருந்தி யிருக்கின்ற, வேடுவர் அனந்தகோடியர் - அநேகம் கோடி வேட்டைக்காரர்கள், அணைந்து-வந்து, மேருவரை அன்ன - மகா மேருமலையை ஒத்த, சமய மண்டப நிறைந்திருந்த-சபா மண்டபத்தில் நிரம்பக் கொலுவிருந்த, திரிசங்கு மைந்தனை வணங்கியே-திரிசங்கு புத்திரனாகிய அரிச்சந்திரமகாராஜனைக் கண்டு வணங்கி, எமை - எங்களை, அழைத்த - வரவழைத்த, பணிவிடை - பணிவிடைக்கு, உரைத்தருள்க என்று - உத்தரவு கொடுத்தருள வேணுமென்று, மண்மிசை இறைஞ்சினர்-பூமியிலே படிய வணங்கினார்கள். எ-று. 'வணங்கியே' என்றதில். ஏ, ஈற்-அசை.

'சமைய மண்டபம்' சபாமண்டபம், 'மண்மிசை இறைஞ்சினர்' - பூமியில் விழுந்து வணங்கினர்கள். (கசு)

சிங்கமானை புலிபன்றிமான் மரைதிரண் டணைந்து திருநாடெலா
மெங்கணும்பரவிவந்து தண்பயிரியாவையுங்கெடவழித்தலா
லங்கவற்றைவதைசெய்வதற்குமைபழைத்தனன் கடிதுசென்மனு
வுங்களுக்குதவியாகயாம்வருதலுண்டெனப்பலவுணர்த்தினன்.

[நமது அழகிய நாடுமுழுதும் சிங்கம் யானை புலி முதலிய மிருகங்கள் கூடிப் பாவி பயிர்கள் எல்லாவற்றையும் அழித்துவிட்டபடியால் வேட்டை ஆடுதற்கு உங்களை அழைத்தேன். நீங்கள் சீக்கிரம் போங்கள் நானும் உங்களுக்கு உதவியாக வருகின்றேன் என்றான் என்பதாம்.]

இ-ள். திருநாடெலாம் - நமது திருநாடு முழுதும், சிங்கம் - சிங்கங்களும், ஆனை - ஆனைகளும், புலி - புலிகளும், பன்றி - பன்றிகளும், மான் - மான்களும், மரை - மரைகளும், திரண்டு - ஆகிய இவைகள் எல்லாம் திரண்டு, எங்கணும் பரவி வந்து - எங்கும் பரவி வந்து, தண்பயிர் யாவையும் - குளிர்ந்த பயிர்கள் எல்லாவற்றையும், கெட அழித்தலால் - நாசமாகும்படி அழித்ததனல், அங்கு அவற்றை வதைசெய்வதற்கு - அவைகளை எல்லாம் அங்கே கொல்லுதற்கு, உமை அழைத்தனன் - உங்களை வரவழைத்தேன், கடிது சென்மனு - நீங்கள் விரைவாகப் போங்களென்றுகூறி, உங்களுக்கு உதவியாக - உங்களுக்குச் சகாயமாக, யாம் வருதல் உண்டென - நானும் வருவேன் என்று, பல உணர்த்தினன் - பலவகை வார்த்தைகளையும் சொல்லினன். எ-று. 'உமை' உம்மை என்பதன் தொகுத்தல் விகாரம். (கஎ)

முன்னடக்கவெனவாடைபாபரணமுற்றும்வேடுவர்தமக்களித்
தன்னவர்க்குவிடைநல்கிமண்டபமகன்றுபோனபினமைச்சரைச்
சென்னெறிப்படவிரைந்துநீநமதுசேனையோடினிதுசென்மெனு
தன்னகத்திடைபுகுந்துநற்புடையபதையல்வைகுமிடமெய்தினன்.

[முன் நடங்கள் என்று அந்த வேடர்களுக்கு ஆடை ஆபரணம் முதலியன
கொடுத்து அவர்களைப் போகச்சொல்லிவிட்டு, மந்திரிகளை நீங்கள்
விரைவாகச் சேனைகளோடு வேட்டைக்குச் செல்லவேண்டிய
வழியே போங்கள் என்று கூறி தனது கற்புடைய
மனைவி வசிக்கும் மாளிகைக்குச்சென்றான்
அரிச்சந்திரன் என்பதாம்.]

இ-ள். வேடுவர் தமக்கு - வேடுவர்களுக்கு, ஆடை ஆபரணம் முற்றும் அளித்து - வஸ்திரம் ஆபரணம் முழுதும் கொடுத்து, முன் நடக்க என-முன்னாலே நடங்கள் என்று, அன்னவர்க்கு விடை நல்கி - அந்த வேடர்களுக்கு உத்தரவுசெய்து, மண்டபம் அகன்று போனபின் - அந்த வேடர்கள் சபா மண்டபம் விட்டுப் போனபின்பு, அமைச்சரை - மந்திரிகளைப் பார்த்து, சென் நெறிப்பட - போகும் வழியிலே பொருந்த, சேனையோடு - சைனியங்களோடு, விரைந்து - விரைவாக, சென்மெனா - செல்லுங்களென்று, தன்னகத்திடை புகுந்து, தன் மாளிகைக்குள்ளே புகுந்து கற்புடை தையல் - கற்புடைய சந்திரவதி, வைகும் இடம் எய்தினன் - வசிக்கின்ற அந்தப்புரத்திற்குச் சென்றான். எ-று. 'முற்றும்' இன்னும் தரவேண்டிய முற்றும் தந்து என்பதாம். (கஅ)

கரியகாழகம்விரித்துடுத்துவரிகவசமிட்டுமணிமுடிதரித்
தரியவெற்றியுடைவாளயிற்சுரிகையரையழுத்திவயிரவிதரும்
பெரியபொற்சிலையெடுத்துவாளிபலபெய்ததூணிமுதுகெய்தவே
தெரிவையர்க்கரசியுடன்வரக்கடிதுசென்றுதேரின்மிசைஏறினான்

[அரிச்சந்திரமகாராஜன் தன் யுத்த ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு தன்
மனைவியோடு வேட்டைக்காகத் தேரில் ஏறினான் என்பதாம்.]

இ-ள். கரிய - கருத்த நிறமுள்ள, காழகம் - வஸ்திரத்தை, விரித்து உடுத்துக்கொண்டு, வரி கவசம் இட்டு - வரிந்து கட்டுகின்ற, கவசம் இட்டு - கவசமும்போட்டு, மணிமுடி தரித்து-ரத்நகிரீடமுஞ் சூடிக்கொண்டு, அரிய வெற்றி உடைவாள் - அருமையுடையதும் வெற்றியைத் தருவதுமாகிய உடைவாளும், அயில் - வேலும், சுரிகை - சுரிகையும், அரை அழுத்தி - இடையிலே கட்டி, வயிரவிதரும் - காளிகொடுத்த, பெரிய பொற்சிலை எடுத்து - பெரிதான பொன்மயமாயிருக்கிற வில்லும் எடுத்துக்கொண்டு, வாளி பல பெய்த - அம்புகள் பல இட்ட, தூணி - அம்புப்புட்டிலை, முதுகு எய்தவே - முதுகிலே பொருந்தக் கட்டி, தெரிவையர்க் கரசியுடன்வர - பெண்களுக்கு அரசியான சந்திரவதியும் கூடவர, கடிது சென்று - விரைந்து சென்று, தேரின்மிசை - தேரின்மேலே, ஏறினான் - ஏறினான். எ-று.

'கவசம்' - போர்ச்சட்டை, 'கரிய காழகம்' நீலச்சல்லடமும் வஸ்திரமும், என்று பொருள் உரைப்பர். 'சுரிகை' பாகு என்றும் ஆயுதம். 'எய்தவே' இதில் உள்ள 'ஏ' காரம் அசை. (கக)

கோளெழுந்தவெனவந்தெழுந்தனகுடைத்திரட்கடையுகத்தினி
ல், நாளெழுந்தகடல்போலவெங்கணு நடந்தமன்னவர் பெரும்ப
டை, வாளெழுந்தசுடரெண்டிசாமுகமறைத்த மாமுகினெருக்கி
யே, தூளெழுந்தனகயங்கள்சென்றன துரங்கமுந்துறநடந்தவே.

[குடைகளுடனும் பெரும்படையோடும் யானை குதிரைகளுடனும்
எழுந்ததுகள் சூரியனை மறைக்க அரிச்சந்திரன் சென்றான்
என்பதாம்.]

இ-ள். கோள் - கிரகங்கள், எழுந்த என - (ஒருமிக்க மிக அந்தரத்தில்) தோன்றினாற்போல, வந்து எழுந்தன குடைத்திரள் - குடைக்கூட்டங்கள் வந்து கூடின, கடையுகத்தினில் நாள் - யுகாந்த முடிவின் காலத்திலே, எழுந்த கடல்போல - பொங்கி எழும் கடலைப்போல, எங்கணும் - எங்கும், மன்னவர் பெரும்படை - அரசர்களுடைய பெரிய சேனைகள், நடந்த - நெருங்கி நடந்தன, வாள் எழுந்த சுடர் - வாள்களிலிருந்து எழுந்த பிரகாசம், எண்திசாமுகம்-எட்டுத்திக்குகளின் இடங்கள் எல்லாம், மறைத்த - மறைத்தது, மாமுகில் நெருக்கியே - பெரிய மேகங்களை நெருக்கிக்கொண்டு, தூள் எழுந்தன - தூசிகள் கிளம்பின, கயங்கள் சென்றன - யானைகள் சென்றன, துரங்கம் - குதிரைகளும், முந்துற நடந்த - முன்னாலே நடந்தன. எ-று. ஏ - ஈற்றசை.

"வாளெழுந்த சுடரெண்டி சாமுக மறைத்த மாமுகினெருக்கியே தூளெழுந்தன" என்பதற்கு (மாமுகில் நெருக்கியே - பெரிய மேகங்களை நெருக்கிக் கொண்டு, தூள் எழுந்தன - தூசிகள் கிளம்பினவாகி, வாள் எழுந்த சுடர்-மிகப் பிரகாசத்தோடு தோன்றிய சூரியனை, எண் திசாமுகமறைத்த - எட்டுத்திக்குகளிலும் மறைத்தன,) என்றும் பொருள் கூறலாம். 'கோள்' சூரிய சந்திரர்கள்; எனலும் ஆம், 'மாமுகில்' கருமேகம் என்றலும் உண்டு. (உ௦)

கோடகந்தருவிலாழியுங்கரடகுஞ்சரந்தருவிலாழியு
மாடகக்கவரியுஞ்செறிந்துபகிரண்டகோளமுமறைந்திட
மாடவீதிகள்கடந்துசெம்பொன்மதில்வாயில்விட்டகலநண்ணியே
வேடர்சேனையொடுகூடினனமுதவேலைமைக்கடலில்வீழ்தல்போல்.

[குதிரை வாய்நுரையும் யானைவாயில் வருகிற நுரையும் சாமரங்களும் நெருங்கி
அண்டகோளங்களை மறைத்து உயர்ந்திருக்கிற மாடவீதிகளைக் கடந்து
போய் மதில் வாயிலை விட்டு அகன்று சென்று திருப்பாற்கடல்
கருங்கடலில் கலந்ததுபோல அரசன் சேனை வேடர்
கூட்டத்தைச் சென்று சேர்ந்தது, என்பதாம்.]

இ-ள். கோடகம் - குதிரைகளின், தருவிலாழியும் - வாயிலிருந்து வருகின்ற நுரையும், காடகுஞ்சரம் - மதம் ஒழுகுகின்ற யானைகளின், தருவிலாழியும் - வாயிலிருந்து வருகின்ற நுரையும், ஆடகக் கவரியும் - பொற்காம்புள்ள சாமரங்களும், செறிந்து - நெருங்கி, பகிரண்டகோளமும், மறைந்திட - வெளி

யிலுள்ள அண்டகோளமும் மறைந்துபோம்படி, மாடவீதிகள் கடந்து - மாட வீதிகளைக் கடந்துபோய், செம்பொன் மதில்வாயில் விட்டு - செம்பொன் மயமான மதில்களின் வாயிலை விட்டுக் கடந்து, அகல நண்ணியே - தூரமாகப் போய், அமுதவேலை - பாற்கடலானது, மைக்கடலில் வீழ்தல் போல் - கருங் கடலிலே போய்க் கலப்பதுபோல, வேடர் சேனையொடு - முன்சென்ற வேடர்களின் சேனையோடு, கூடினன் - அரிச்சந்திரமகாராஜன் போய்ச்சேர்ந்தான். எ-று.

'கோடகம்' - குதிரை, 'விலாழி' - வாய்நுரை, வேடர்கள் கருநிற மாதலின் கருங்கடலென்றும் அரசன் சேனையின் கொடி குடை சாமரம் யானை குதிரைகளின் நுரை வெண்மை ஆதலின் பாற்கடலென்றும் உவமித்தார். (உக)

சிலையெடுத்தபுயமன்னனைத்தொழுதுசென்றுவேடுவர்பரந்துநீ
ளலையெடுத்தமலர்வாவியும்வயலுமகழுமம்பொழிலடங்கலும்
வலையெடுத்தருகுதிரைவளைத்துமணிவாரொழுக்கியிடைகூவெனக்
கலையுழைத்திரள்கள்கடமைபன்றிபுலிகாடிகோளரிகலந்தவே.

[வேடர்கள் அரிச்சந்திரமகாராஜனை வணங்கிக்கொண்டு சென்று பாவி தாமரைக் குளங்களிலும், வயல்களிலும், அகழ்களிலும், சோலைகள் முதலான எல்லா இடங்களிலும் வலைகட்டிப் பக்கத்திலே திரையும் வளைத்து வார்களை ஒழுங்காகச்சேர்த்து, கூவென்று சப்தமிட மிருகங்கள் எல்லாம் வந்து கூடின என்பதாம்.]

இ-ள். வேடுவர் - வேட்டைக்காரர்கள், சிலை எடுத்த - வில்லைக்கொண்ட, புயமன்னனைத் தொழுது - தோள்களை உடைய அரிச்சந்திரமகாராஜனை வணங்கி, சென்று - போய், பரந்து - பரவி, நீள் அலை எடுத்த - நீண்ட அலைகளைக் கொண்டிருக்கின்ற, மலர்வாவியும் - தாமரைக் குளங்களிலும், வயலும் - வயல்களிலும், அகழும் - அகழ்களிலும், அம்பொழில் அடங்கலும் - அழகிய சோலை முதலான எல்லா இடங்களிலும், வலை எடுத்து - வலைகட்டி, அருகு - சமீபத்தில், திரை வளைத்து - திரையையும் வளைத்து, மணிவார் ஒழுக்கி - மணிவார்களையும் ஒழுங்காகச்சேர்த்து, இடை கூ என - அவ்விடங்களிலே கூ என்று சப்தம் இட, கலை - கலைமான் கூட்டங்களும், உழை - புள்ளிமான் கூட்டங்களும், கடமை - கடமைகளும், பன்றி - பன்றிகளும், புலி - புலிகளும், காடி - காடிகளும், கோளரி - சிங்கங்களும், கலந்த - வந்து கூடின. எ-று. ஏ - ஈற்றசை. (உஉ)

ஏனமெண்குபுலிபாளிசிங்கமதயானைசம்புழைபுல்வாய்மரை
கானமோரிகடமாவழுங்கிரலைநாவியூகமெலியாகணில
கானமேதிவரைபாடும்புழுபல்கால்விசைத்திடைகலந்தன
வானகத்திடைபறந்தெழுந்தபலவன்சிறைப்பறவைவர்க்கமே.

[வந்து கூடின மிருகங்கள் இன்னின்ன என்றும் ஆகாசத்தில் பறவைக் கூட்டங்கள் பறந்தன என்றும்; இப்பாட்டாற் கூறுகின்றார்.]

இ-ள். ஏனம் - பன்றிகள், எண்கு - கரடிகள், புலி - புலிகள், யாளி-யாளிகள், சிங்கம் - சிங்கங்கள், மதயானை-மதயானைகள், சம்பு - நரிகள், உழை-புள்ளிமான்கள், புல்வாய் - புல்வாய்கள், மரை - மரைகள், நானம் - ஜவ்வாதுப் பூனைகள், ஓரி - ஓரிகள், கடமா - கடமாக்கள், அழுங்கு - ஆமைகள், இரலை - கலைமான்கள், நாவி புழுகு பூனைகள், ஊகம் - கரும் குரங்குகள், எலி-எலிகள், ஆகு - பெருச்சாளிகள், அணில் - அணில்கள், கானமேதி - காட்டு எருமைகள், வரையாடு - வரை ஆடுகள், உடும்பு - உடும்புகள், முயல் - முயல்கள், கால் விசைத்திடை கலந்தன - (ஆகிய இவைகள்) கால்வேகம் கொண்டு அந்த இடத்தில் வந்து கூடின; வானகத்து இடை - ஆகாயத்தின் இடத்தே, பலவன் - பலவாகிய வலிய, சிறை - சிறகுகளை உடைய, பறவை வர்க்கம் - பறவைக்கூட்டங்கள், பறந்து எழுந்த - பறந்து வந்து கூடின. எ-று. ஏ - ஈற்றசை.

இதில் பல மிருகங்களின் பெயர்கள் அடைமொழியின்றி வரிசையாக வைக்கப்பட்டன; இது கவிச்சமத்தாம். யாளி - சிங்கமுகமும் துதிக்கையும் கொண்ட ஒருமிருகம், 'ஓரி' நரிகளில் ஓர் வகையினம், 'கடமா' காட்டுப்பசு என்றும் கூறுவர்; (உ௩)

வட்டமாகவரிவிற்குனித்துவயமன்னர்விட்டபலவன்சரம்
பட்டமாவினம்விழுந்துழன்றுடல்பதைத்திறந்தனவனந்தமாற்
றொட்டவேல்குணிலெறிந்துவேடுவர்துணித்தமாவினமனந்தமால்
விட்டஞாளிகள்கடித்திழுத்திடவிழுந்தமாவினமனந்தமால்.

[அரசர்கள் விட்ட பாணங்களால் விழுந்து இறந்தன அநேகம், வேல், குணில் எறிந்து வேடுவர் துண்டித்த மிருகம் அநேகம், நாய்களால் இறந்த மிருகம் அநேகம் என்பதாம்.]

இ-ள். வயமன்னர் - வெற்றிகொண்ட அரசர்கள், வட்டமாக - வளைவாக, வரிவில் குனித்து - கட்டமைந்த வில்லை வளைத்து, விட்ட - எவிய, பலவன்சரம் - பல வலிய பாணங்கள், பட்ட - தைக்கப்பெற்ற, மாவினம் - மிருகக்கூட்டங்கள், விழுந்து - கீழே விழுந்து, உழன்று - துன்பப்பட்டு, உடல் பதைத்து - உடம்புகள் பதை பதைத்து, இறந்தன - செத்தவைகள், அனந்தமால் - அநேகம், வேடுவர் - வேடர்கள், தொட்ட - தங்கள் கையில் கொண்டிருந்த, வேல் - வேலையும், குணில் - குணிலையும், எறிந்து - வீசி, வேடுவர் துணித்த - வேடர்கள் துண்டுசெய்த, மா இனம் - மிருகங்களின் கூட்டம், அனந்தமால் - அநேகம், விட்ட ஞாளிகள் - இந்த வேடர்கள் விட்ட நாய்கள், கடித்து இழுத்திட - கடித்து இழுக்க, விழுந்தமாவினம் - விழுந்த மிருகங்கள், அனந்தமால் - அநேகம். எ-று. ஆல்கள் மூன்று அசை.

'வரிவில்' நீண்ட வில் என்றும் பொருள் கூறுவர். (உ௪)

தண்டலைப்படுவிலங்கினிற்படுசரங்களுந் துணிசிரங்களுந் [யும்
திண்டிறற்குமார்மண்டலத் தலைவர் செங்கையிற்செறிவி லுண்டை
விண்டலத்திலுயர்வன்சிறைப்பறவைமீதுபட்டுயிரிழந்துபோய்
மண்டலத்திலிடமின்றியெத்திசையும்வந்துவீழ்வனவனந்தமே.

[சோலைகளில் உள்ள மிருகங்கள் உடம்பில் உருவிப்பாய்ந்த பாணங்களாலும், அந்த மிருகங்களின் தலைகள் உயரக்கிளம்பி வீழ்வதாலும், வீரர்கள், மண்டலிகர்கள் கைவில்லின் உண்டையாலும் ஆகாயத்தில் உயர்ந்து பறக்கின்ற பறவைகள் தம் உயிர்போய் பூமியில் இடமில்லாமல் எந்தப்பக்கமும் விழுவன அநேகம் என்பதாம்.]

இ-ள். தண்டலை - சோலைகளில், படு - பொருந்தியிருக்கின்ற, விலங்கினில் - மிருகங்கள்மேல், படுசரங்களும் - பட்ட அம்புகளும், துணி - துணிக்கப்பட்ட, சிரங்களும் - தலைகளும், திண் - மிக வலிய, திறல் - வல்லமையை உடைய, குமார் - வீரர்களும், மண்டலத்தலைவர் - மண்டலிகர்களும், செங்கையில் - சிவந்த கையில், செறி - கொண்டிருக்கின்ற, வில் - வில்லினுடைய, உண்டையும் - உண்டைகளும், விண்டலத்தில் - ஆகாயத்தில், உயர் - உயர்ந்து பறக்கின்ற, வன்சிறை - வலிய சிறகுகளை உடைய, பறவைமீது பட்டு - பட்சிகள் மேலே பட்டு, உயிர் இழந்துபோய் - உயிரை விட்டனவாகி, மண்டலத்தில் - பூமியிலே, இடம் இன்றி - இடம் இல்லாமல், எத்திசையும் வந்து-எல்லாத் திக்குகளிலும் வந்து, வீழ்வன - வீழ்கின்ற பறவைகள், அனந்தம் - அநேகம். எ-று. ஏ - ஈற்றசை. (௨௫)

வேல்கள்பட்டவொரு கோடிகோடிவிறல்விலுமிழ்ந்தசுடுபல்
கொடுங், கோல்கள்பட்டவொரு கோடிகோடிபெறிகுணில்கள்
பட்டவொருகோடிதேர்க், கால்கள்பட்டவொருகோடிகோடியெ
றிகவணுமிழ்ந்தபலகற்கள்பட், டோலமிட்டவொருகோடிகோடி
சிலையுண்டைபட்டவொருகோடியே.

[வேல் முதலியவைகளால் இறந்தவைகள் இவ்வளவென்று மிகுதி கூறுகின்றார்.]

இ-ள். வேல்கள் பட்ட வொருகோடி கோடி - வேல்கள் பட்டு (விழுவன) கோடானுகோடி, விறல் - வலிமைபொருந்திய, வில் உமிழ்ந்த - வில்லிலிருந்தும் வந்த, சுடு - சுடுகின்ற, பல் - பல, கொடும் - கொடுமையான, கோல்கள் - பாணங்கள், பட்ட - பட்டு (வீழ்ந்தன) ஒரு கோடானுகோடி, எறி - எறியப்படுகின்ற, குணில்கள் - வளைதடிகள், பட்ட ஒருகோடி பட்டு (விழுவன) ஒருகோடி, தேர் - தேரினுடைய, கால்கள் - சக்கரங்கள், பட்ட ஒருகோடி கோடி - பட்டு (நசுங்கின) ஒரு கோடானுகோடி, எறி - வீசப்படுகின்ற, கவண் உமிழ்ந்த - கவணினின்றும் செல்லுகின்ற, பல கற்கள் பட்டு - பல கற்கள் பட்டு, ஓலமிட்ட ஒருகோடி கோடி - சப்தித்துக்கொண்டு (விழ்வன) ஒரு

கோடானுகோடி, சிலை - வில்லின், உண்டை பட்ட - வில்லுண்டை பட்டு விழுவன, ஒருகோடியே - ஒருகோடி. எ-று. ஏ - ஈற்றசை. (உசு)

துடைகளற்றனசிரங்கள்பற்பலதுணிந்தவீழ்ந்தகைதுமிந்தன
இடைகளற்றகுடரோடியற்றனவெழுந்துதாவுமடியற்றன
நடைகளற்றனநிணந்தெறித்தனநரம்புமூளைகள்கழன்றன
கடையுகத்திலெழுகடலெனக்குருதிககனமீதுறவெழுந்ததே

[மிருகங்கள் தம் அவையவங்கள் அற்று விழுந்தமையை உணர்த்துகின்றார்.]

இ-ள். துடைகளற்றன - அநேக மிருகங்கள், துடைகள் அறுபடலாயின, சிரங்கள் பற்பல துணிந்து வீழ்ந்த - அநேக மிருகங்களின் தலைகள் அநேகம் துணிபட்டு விழலாயின, கை துமிந்தன - அநேக மிருகங்களின் கைகள் அறு படலாயின, இடைகள் அற்ற - அநேக மிருகங்களின் இடுப்புகள் அறுபட லாயின, குடரோடி அற்றன - அநேக மிருகங்களுக்கு ஓடி ஓடிக் குடல்கள் அறு படலாயின, எழுந்து தாவும் அடி அற்றன - அநேக மிருகங்களுக்கு எழுந்து தாண்டுகின்ற கால்கள் அறுபடலாயின, நடைகள் அற்றன - அநேக மிருகங் களுக்கு நடைகள் ஓய்ந்தன, நிணந்தெறித்தன - அநேக மிருகங்களுக்குக் கொ ழுப்புகள் சிந்தின, நரம்பு மூளைகள் கழன்றன - அநேக மிருகங்களுக்கு நரம்பும் மூளைகளும் சிந்தின, கடையுகத்தில் எழுகடலென - யுகமுடிவிலே பொங்குகிற கடல்போல், குருதி - ரத்தம், ககனமீதுற - ஆகாயத்தை அளாவும்படி, எழுந் தது - பொங்கியது. எ-று. ஏ - ஈற்றசை.

'நரம்பு மூளைகள் கழன்றன' என்பதற்கு நரம்பின் மூளைகள் கழன்றன, என்றும் பொருள் செய்வர். (உஎ)

அலிறுடற்களிறுநனிமடிந்துபிடியகல்வதற்கும்வழியற்றன
புலியுடன்கரடியுழைமடிந்துகலைபோவதற்கும்வகையற்றன
வெலியெழுங்கணிலிறந்திறந்துமுயலேகுதற்குமிடமற்றன
வலியசிங்கமுடனாளியிற்றுமரைவருவதற்குநெறியற்றவே.

[ஆண்யானைகள் மிகச்செத்துப் பெண் யானைகள் ஒடுவதற்கு வழியில்லாது
போயின; புலிகள், கரடிகள், மான்களும் இறந்து கலைமான் ஓடுதற்கு
இடமில்லாது போயின; எலிகளும் ஆமைகளும் அணில்களும்
செத்து முயல்கள் ஓடுதற்கு இடமில்லாது போயின;
சிங்கங்களும், யாளிகளும் இறந்து மரைகள் செல்
லுதற்கு வழியில்லாது போயின; என்பதாம்.]

இ-ள். அலிறுடல் களிறு நனி மடிந்து - இருட்டை ஒத்த ஆண்யானை கள் மிகவும் செத்து, பிடி - பெண்யானைகள், அகல்வதற்கும் - போவதற்கும், வழியற்றன - வழியில்லாது போயின, புலியுடன் காடியுழை - புலிகளுடனே, காடிகளும் மான்களும், மடிந்து - இறந்து, கலைபோவதற்கும் - கலைமான்கள்

போவதற்கும், வகையற்றன - இடமில்லை ஆயின, எலி - எலியும், அழுங்கு - ஆமையும், அணில் - அணில்களும், இறந்து இறந்து - செத்துச் செத்து, முயல் ஏகுதற்கும் - முயல்கள் போவதற்கும், இடம் அற்றன - இடம் இல்லாது போயின, வலிய சிங்கமுடன் - வலிமைகொண்ட சிங்கங்களுடனே, ஆளியிற்று - ஆளிகளும் இறந்து, மரை வருவதற்கும் - மரைகள் வருவதற்கும், நெறி - வழி, அற்ற - இல்லை ஆயின. எ-று. ஏ-ஈற்றசை.

'அல்லின் - உடல், என்பது 'அலினுடல்' என்றாயது தொகுத்தல் விகாரம். (உஅ)

பட்டபட்ட வையெடுத்து வேடுவர்பருத்த கட்டைகளடுக்கியே
சுட்டசுட்ட தசைதின்று தின்றுறு சுணங்கினம்பலபிணங்கவே
மட்டறப்பருகியிட்டளித்திலர்மடுக்களிற்புனலருந்தியே
யிட்டமாலைபுனை மன்னர்மன்னவனிருந்தசூழலிடைபெய்தினார்.

[வேடர்கள் இப்படி இறந்த மிருகங்களை எல்லாம் எடுத்து கட்டைகள் அடுக்கி
சுட்ட சுட்ட மாமிசங்கள் எல்லாம் நாய்கள் பிணங்கத் தின்று தின்று
கள்ளைக்குடித்து, விடாயினால் குளங்களில் நீரைக்குடித்து,
அரிச்சந்திரன் இருக்கும் இடத்திற்கு வந்தார்கள்
என்பதாம்.]

இ-ள். பட்ட பட்டவை எடுத்து - அப்படி செத்த செத்த மிருகங்களை எல்லாம் எடுத்து, வேடுவர் - வேட்டைக்காரர்கள், பருத்த கட்டைகள் அடுக்கியே - பெரிய கட்டைகள் அடுக்கி, சுட்ட சுட்ட தசை - சுட்ட சுட்ட மாமிசங்களை எல்லாம், தின்று தின்று - மேலும் மேலும் தின்று, மட்டு அறப்பருகி - கள்ளை மிகுதியாகக்குடித்து, உறுசுணங்கினம் பல பிணங்கவே - அவர்கள் சமீபத்துள்ள நாய்களின் கூட்டங்கள் பல பிணங்கிக்கொள்ள, இட்டளித்திலர் - (குடிவெறியால்) அந்நாய்களுக்குக் கொடாதவர்களாகி (தாமே தின்று) மடுக்களில் புனலருந்தியே - மடுக்களில் நீரைக்குடித்து, இட்டமாலை - தான் விரும்பும் (வாகை) மாலையை, புனை - அணிந்திருக்கின்ற, மன்னர் மன்னவன் - ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரமகாராஜன், இருந்த - இருந்த, சூழலிடை - இடத்திற்கு, எய்தினர் - வந்து சேர்ந்தார்கள். எ-று.

பட்ட, சுட்ட என்பவைகள் மிகுதியால் அடுக்கின, 'சுணங்கினம் பிணங்குதல்' தமக்கு வேடுவர்கள் மாமிசபாகம் கொடாமையினால்; மடுக்களில் புனல் அருந்தல், கள்ளின் மயக்கம் நீங்குதற் பொருட்டு. (உக)

இவ்விடத்தளவிலங்கிறந்தவெறிவேல்பிழைக்தும்வலைபீறியும்
வெவ்விடக்கணைகடப்பியுஞ்சிலவிலக்குபோனவுளவாயினு
மவ்விடத்தினினடப்பதோவடவிபுகுவதோநகரிபணைவதோ [ன்.
வெவ்விடத்தினிதுசேர்துமென்றவர் விளம்பமன்னவனியம்புவா

[இந்தக் காட்டிலுள்ள மிருகங்கள் எல்லாம் இறந்து போயின, வேலுக்குத் தப்பியும், வலையைப் பீறிக்கொண்டும் பாணங்களுக் குத் தப்பியும், சில மிருகங்கள் தப்பி ஓடினவும் உள, அவைகளைத்தொடர்ந்து அந்த இடங்களுக்குப்போவதா, எங்கள் காட்டுக்குப் போகிறதா? அயோத்திக்கு உங்களோடு வருகிறதோ? எங்கே போகிறதென்று அவர்கள் கேட்க அரிச்சந்திரன் சொல்லுகிருன் என்பதாம்]

இ-ள். இவ் இடத்து உள - இந்தக்காட்டிலே உள்ள, விலங்கு இறந்த- மிருகங்கள் எல்லாம் இறந்துபோயின, எறிவேல் பிழைத்தும் - (இனி) நாங்கள் எறிந்த வேலுக்குத்தப்பியும், வலை பீறியும் - வலைகளைக் கிழித்துக்கொண்டும், வெவ்விடக்கணைகள் தப்பியும் - வெப்பமான விஷஜலமூட்டிய பாணங்களுக்குத் தப்பியும், சில விலங்கு - சில மிருகங்கள், போன உள ஆயினும்- ஓடிப்போனவைகள் உள்ளன என்ருலும், அவ்விடத்தினில் நடப்பதோ - நாங்கள் அவைகள் போன இடங்களுக்குப் போவதோ? அடவி புகுவதோ - எங்களுடைய காடுகளுக்குப் போவதோ? நகரி அணைவதோ - அயோத்திமாநகருக்கு உங்களோடு வருவதோ? எவ்விடத்து இனிது சேர்தும் - மற்று எந்த இடத்திற்கு நாங்கள் இன்பத்தோடு சேர்வது? என்று அவர் விளம்ப - என்று அந்த வேடர்கள் கேட்க, மன்னவன் இயம்புவான் - அரிச்சந்திரமகாராஜன் சொல்லுகின்ருன். எ-று. (௩௦)

சென்றசென்றதிசைதோறும்யாமினிதுசென்றுதிண்டிறல்விலங்கெலாங்,கொன்றுகொன்றவைமுடிந்தபின்வருகலாகுமுன்னியகுறிப்பெனக்,கென்றுதேரின்மிசையேறியேயிறைவனேகலுங்கழவிறைஞ்சியே, நின்றவேடுவர்பெரும்படைத்திரணெருங்குகானிடைபரந்தவே.

[அந்த மிருகங்கள் போன போன இடங்கள் எல்லாம் நாமுங் கூடச்சென்று அந்த வலிய மிருகங்களை எல்லாம் கொன்று முடித்துத் திரும்பவேண்டுமென்பது என் எண்ணம் என்றுசொல்லித் தேர்மேலேறிச் சென்ருன். வேடர்கள் அவ்வரிச்சந்திரன் பாதத்தை வணங்கி பெரிய கானில் எங்கும் பரவினுர்கள் என்பதாம்.]

இ-ள். திண் திறல் விலங்கெலாம் - மிக்க பலத்தையுடைய அந்த மிருகங்களை எல்லாம், சென்ற சென்ற திசைதோறும் - அவைகள் போன போன திசைகள் எல்லாம், யாம் இனிதுசென்று - நாமும் இனிமையாகத் தொடர்ந்து போய், கொன்று கொன்று - அவைகளைக் கொன்று கொன்று, அவை முடிந்த பின் - அவைகள் எல்லாம் இறந்த பின்பு, வருகலாகும் - வாத்தகும், முன்னிய

குறிப்பு எனக்கு-இதுவே நான்கொண்ட கருத்து, என்று என்று-கூறி, தேரின் மிசை ஏறியே - தன்னுடைய தேரின்மேலேறிக்கொண்டு, இறைவன் ஏகலும்-அரிச்சந்திரமகாராஜன் செல்லும்போது, கழல் இறைஞ்சியே - அந்த அரிச்சந்திரமகாராஜனின் பாதங்களை வணங்கிக்கொண்டு, நின்ற வேடுவர் - அந்த நின்ற வேடர்களும், பெரும்படைத்திரள் - பெரிய படைக்கூட்டங்களும், நெருங்கு கானிடை - நெருங்கிய காட்டில், பாந்தவே - (எங்கும்) பாவின எ-று. ஏ - ஈற்றசை. (௩௧)

அரிபிளந்தகரிபிளிறுமோசையிவையறிதுமென்றணுகியடர்குவார்
கரிகவர்ந்ததிரள்விளவின்கனிகழன்றவென்றவணெருங்குவார்
வரிநெடும்புலிபிடித்திடக்கதறுமானெனச்சிலைவணக்குவார் [வார்
பருமணற்கிழியவுழுவவோதையிவைபன்றியென்றவிடைதுன்று

[சிங்கம் கொல்லும் யானையின் ஓசையிது என்று ஓசை வந்தவழியே செல்லுவார். யானையுண்ட விளங்கனி சிந்திக் கிடக்கின்றதென்று அவ்விடம் செல்லுவார்கள். பெருப்புலி பிடிக்கக்கதறுகின்ற மான் சப்தமென்று வில்லை வளைப்பார்கள். பருத்த மணல் கிழியக் கிண்டுகின்ற பன்றியின் சப்தமென்று அந்த இடத்திற்குச் செல்லுவார்கள் என்பதாம்.]

இ-ள். அரிபிளந்த - சிங்கங்கள் கொல்லலான, கரிபிளிறு மோசை-யானைகள் வீறிடுகின்ற சப்தம், இவை - இவைகளாகும், அறிதும் என்று - தெரிவோம் என்று, அணுகி அடர்குவார் - கிட்டி நெருங்குவார்கள், கரி கவர்ந்த-யானைகள் புசித்த, திரள் - திரண்ட, விளவின் நன்கனி - விளா மரத்தினுடைய நல்ல பழங்கள், கழன்று - பெய்து கிடக்கின்றன, என்று - என்று, அவண் - அவ்விடத்திலே, நெருங்குவார் - நெருங்கிச் செல்வார்கள், வரி நெடும்புலி - வரிகளை உடைய நீண்ட வேங்கைகள், பிடித்திட - பற்ற, கதறும் மான் என - கதறுகின்ற மானின் சப்தம் இது என்று, சிலை வணக்குவார் - வில்லை வளைப்பார்கள், பருமணல்கிழிய - பருத்த மணல் தரைகள் பள்ளமாகும்படி, உழுவவோதையிவை - உழுகின்ற ஓசை இவைகள், பன்றி என்று - பன்றியின் சப்தம் என்று, அவ் இடை துன்றுவர் - அவ்விடங்களிலே நெருங்குவார்கள். எ-று.

ஓசைகளைக் கொண்டு இன்னின்ன மிருகம் என்று தெரிந்து கொண்டனர் என்பதாம். (௩௨)

குருகலம்புமொலியிதுதடாகமிதுகுஞ்சரங்கள்கரமொண்டுநீர்
பருகுகின்றவொலியிதுவெனக்கடிதுபற்றுவார்நெடிதுசுற்றுவார்
சருகலம்புமொலிசெவியுணர்ந்திலதாவெனக்கடிதுதாவுவார்
முருகலர்ந்தபொழிலலைவதாகமெனமுந்துவார்பகழிசிந்துவார்.

[குருகுகள் சப்திக்கின்ற சப்தம் இது, குளமிது, குளத்தில் யானைகள் நீரை மொண்டு குடிக்கின்ற சப்தம் இது, என்று விரைவிலேபோய்த் தொடரு வார்கள் அதிகமாகச்சூழ்வார்கள், சருகுகளின் சப்தத்தைக் காதிற் கேட்டு மான் ஓசை இது என்று விரைவிலே தாண்டிச் செல்வார்கள், சோலையில் சஞ்சரிப்பது கானக் குதிரை என்று முன்னே சென்று அம்பை விடுவார்கள் என்பதாம்.]

இ-ள். குருகு அலம்பும் ஒலிஇது - குருகுகள் சப்திக்கின்ற சப்தம் இது, தடாகம் இது - குளம் இது, குஞ்சரங்கள் - யானைகள், கரம்மொண்டு - காத்தி னால் மொண்டு, நீர் பருகுகின்ற வொலியிது - நீரைக் குடிக்கின்ற சப்தம் இது, என - என்று, கடிது பற்றுவார் - விரைவாகச் செல்வார்கள், நெடிது சுற்று வார் - அதிகமாகத் தொடருவார்கள், சருகு - சருகுகள், அலம்பும் ஒலி - சப் திக்கின்ற சப்தத்தை, செவியுணர்ந்து - காதிலே கேட்டு, இரலைதானென- இரலை மான்தானென்று, கடிது தாவுவார் - விரைவிலே தாண்டிச் செல்வார் கள், முருகு அலர்ந்த பொழில் - மணம் விரிகின்ற சோலையிலே, அலைவது- சஞ்சரிப்பது, ஆகம் என - கானக்குதிரை என்று, முந்துவார் - முன்னே செல் லுபவராய், பகழி சிந்துவார் - அம்புகளை விடுவார்கள். எ-று.

'ஆவிகம்' என்றது தொகுத்தல் விகாரமாய் 'ஆகம்' என ஆயது; 'ஆகம்' உடல் என்றும் பொருளாம். 'முருகலர்ந்த பொழில் அலைவது ஆகம்.' வாசனை விரிந்த சோலைகளில் அலைவது - அலைந்துகொண்டிருப்பது மிருகங்களின் உடல் என, என்றும் பொருள் செய்யலாம். (௩௩.)

மயின்முழக்கமிதுகிளிமுழக்கமிதுவாருமென்றுசிலரோடுவார்
குயின்முழக்கமிதுசிவன்முழக்கமிதுகூடவாருமெனநாடுவார்
வெயிலெறிந்ததுவிளங்குமாமணியின்வேகநாகமெனநீடுவார்[வார்
துயிலுணர்ந்தநெடுமரைகலித்ததிதுதொடர்வமென்றுபலர்கூடு

[இது மயில் ஓசை, இது கிளியின் ஓசை, வாருங்கள் என்று சிலர் ஓடுவார்கள். இது குயில் ஓசை, இது சிவல் காடை ஓசை, பின்தொடர்ந்து வாருங்கள் என்று சிலர் ஓடித்தேடுவார்கள், இதோ வெயில் ஒளி வீசுகின்றது பெரிய ரத்திநத்தை உடைய நாகம் என்று வெகுதூரம் செல்லு வார்கள், தூங்கி எழுந்த மரை முழங்குகின்றதில் ஓசை, அதன் பின்னே தொடர்ந்து செல்வோமென்று பலரும் கும்பு கூடுவார்கள் என்பதாம்.]

இ-ள். மயில் முழக்கம் இது - இது மயில் ஓசை, கிளி முழக்கம் இது- இது கிளியின் சப்தம், வாரும் என்று - வாருங்கள் என்று, சிலர் ஓடுவார் - சில பேரோடுவார்கள், குயில் முழக்கம் இது - இது குயில் ஓசை, சிவல் முழக்கம் இது - இது சிவலின் முழக்கம், கூட வாரும் என - கூட வாருங்கள் என்று சொல்லி, நாடுவார் - தேடுவார்கள், வெயில் எறிந்தது - வெயில் ஒளி வீசுகின் றது, விளங்கு மாமணியின் - விளங்குவதாகிய பெரிய ரத்திநத்தின் உடைய,

வேகமாகமென்று-விஷவேகங்கொண்ட நாகமென்று, நீடுவார் - நெடுந்தூரம்செல்வார்கள், துயில்உணர்ந்த-தூங்கிவிழித்த, நெடுமரை கலித்ததிது - நீண்ட மரை முழங்குகின்றதிவ்வோசை, தொடர்வமென்று - தொடர்ந்து செல்வோமென்று, பலர் கூடுவார் - பலரும் கூட்டமாகக் கூடுவார்கள். எ-று. (௩௩)

குன்றகுன்றதொறு நீலமேவிய குளந்தொறுங்குளிர்வனந்
தொறுஞ், சென்றுசென்றடிதொடர்ந்தடர்ந்துபல திக்கினுஞ்
செறிவிலங்கெலாங், கொன்றுகொன்றுகுவை செய்தெரித்திடு
கொடுங்கனற்படுகொழுந்தசை,நின்றுநின்றுபுனலுண்டுவென்றி
புனை திண்பெருப்படைநடந்ததே.

[மலைகள் முழுதும் குளங்கள் முழுதும், வனங்களில் எல்லாம் போய் அடி
களைத் தொடர்ந்து சென்று பலதிக்கிலும் உள்ள மிருகங்களையும்
கொன்று, குவித்து நெருப்பில் வாட்டிய மாமிசங்களைத்
தின்று நீரைக்குடித்து பெரிய சேனை நடந்தது
என்பதாம்.]

இ-ள். குன்று குன்று தொறும் - மலைகள் தோறும் மலைகள் தோறும், நீலமேவிய - நீலோற்பல மலர்கள் பொருந்திய, குளந்தொறும் - குளங்களில் எல்லாம், குளிர் வனந்தொறும் - குளிர்ந்த காடுகள் எல்லாம், சென்று சென்று-போய்ப் போய், அடிதொடர்ந்து - மிருகங்களின் காலடிச் சுவடுகளைத் தொடர்ந்துபோய், அடர்ந்து - (பல திசைகளிலும்) நெருங்கி, பல திக்கினும் செறி-பல திசைகளிலும் நெருங்கியுள்ள, விலங்கு எலாம் - விலங்குகளை எல்லாம், கொன்று கொன்று - வதைத்து வதைத்து, குவைசெய்து - குவியல் செய்து, எரித்திடு கொடுங்கனல் - எரிக்கத்தகுந்த கொடுமையாகிய நெருப்பில், படு-வதக்கிய, கொழும் தசை - கொழுமையான மாமிசங்களை, தின்று தின்று-தின்று தின்று, புனல் உண்டு - நீரைக்குடித்து, வென்றி புனை - வெற்றியைக் கொள்வதாகிய, திண் - வலிய, பெரும்படை - பெரியசேனை, நடந்ததே-காட்டுக்குள் சென்றது. எ-று. ஏ - ஈற்றசை.

'நீலமேவிய' - நீல நிறத்தைப் பொருந்திய, என்றலும் ஆம். (௩௪)

இரவினிற்பெரிதிருண்டுசூன்மழைபிரண்டுதுன்றியுலகெங்கணும்
பரவிபெய்தகணையெதிர்வரும்படிபடர்ந்தமுன்டகவிறும்பினுற்
றரவினங்காடிபுலிகள்பன்றிகளுழுங்குடும்பெலிமடங்கன்மான்
கரவினுற்றிதனுளுறையுமென்றெயினர்காடெலாமெரிபரப்பினர்.

[இருண்ட அடர்ந்த முள்ளுக்காட்டைக்கண்டு இதில் பாம்புகள், காடிகள்,
புலிகள், பன்றிகள், ஆமைகள், உடும்புகள், எலிகள், சிங்கங்கள், மான்
கள் முதலியன மறைந்திருக்குமென்று வேடர்கள் அந்தக் காடு
களை எல்லாம் நெருப்பு மூட்டிவிட்டார்கள் என்பதாம்.]

இ-ள். இரவினில் - இராத்திரிக்காலத்திலும், பெரிது இருண்டு - அதிகமாக இருண்டு, சூல் மழை - கருப்பங்கொண்ட மேகங்கள், இருண்டு - மிகவும்

இருண்டு, துன்றி - நெருங்கி, உலகு எங்கணும் பாவி - உலகம் எல்லாம் பாவியிருப்பதை ஒத்த, எய்தகணை - எய்த அம்பு, எதிர் வரும்படி பிடர்ந்த - எதிரிட்டு மேல் வரும்படியாகப் படர்ந்த, முண்டக இரும்பின் உற்று - முள்காட்டிற்குப் பக்கத்திலே போய், அரவினம் - சர்ப்பாதிகளும், கரடி - கரடிகளும், புலிகள் - புலிகளும், பன்றி - பன்றிகளும், அழுங்கு - ஆமைகளும், உடும்பு - உடும்புகளும், எலி - எலிகளும், மடங்கல் - சிங்கங்களும், மான் - மான்களும், காவில் உற்று - மறைவாக வந்து பொருந்தி, இதன் உள் உறையும் என்று - இதற்குள்ளே வசிக்கும் என்று, எயினர் - வேடர்கள், காடெலாம் - காடுகள் எல்லாம், எரி பரப்பினர் - நெருப்பை மூட்டினார்கள். எ-று.

'இரண்டு துன்றி' என்பது பாடமாயின், சூல் கொண்ட மேகம் கருநிறத்திற்கு ஒப்பிடுங்கால் இந்தக்கானிற்கு இரண்டாவதாகச் சொல்லும்படி, என்று பொருளாகும், 'எய்தகணை எதிர் வருதல்' என்றது இடைவெளியின்றி படர்ந்த என்பதாம். (௩௬)

சண்டவெந்தழல்பசித்தழன் றுலகுதன்னையுண் ணவெழுதன்
மைபோல், கண்டமொன்பதுமெரிந்திடத் தெறுகடுங்கொழும்
பொறிகள்சிந்தின, கொண்டலிற்புகை பரந்துசுற்றின கொடுஞ்
சுடர்ப்படு கொழுந்துபோ, யண்டமுற்றனபரந்தகந்தரமதற்கு
மப்புரமெழுந்ததே.

[அப்பொழுது அந்த வேகத்தை உடைய வெப்பமான நெருப்பு தனக்குப்
பசித்து உலகத்தை உண்ண எழுந்த தன்மைபோல் நவகண்டங்களும்
எரியச்சுடுகின்ற கடுமையான செவந்த பொறிகள் சிந்தின, மேகங்
களைப்போல் புகைகள் பரந்து சுற்றின, நெருப்பின் கொழுந்து
கள் போய் ஆகாயமெல்லாம் பரவின, அந்தரம் பரந்தது,
சுவாலை அதற்குமேலும் கிளம்பிற்று என்பதாம்.]

இ-ள். சண்ட வெந்தழல் - அப்போது வேகத்தை உடைய வெப்பமான நெருப்பு, பசித்து - தனக்குப் பசி உண்டாகி, அழன்று - கொதித்து, உலகு தன்னை - உலகத்தை, உண்ண எழு தன்மைபோல் - புசிக்க எழுந்ததுபோல, கண்டம் ஒன்பதும் எரிந்திட - நவகண்டங்களும் எரிந்து போம்படி, தெறு-சுடுகின்ற, கடும் கொழும்பொறிகள் - கடுமையான செழுமையுள்ள நெருப்புப் பொறிகளை, சிந்தின - சிதறல் ஆயின, கொண்டலில் - மேகங்களைப்போல, புகைபரந்து சுற்றின - புகைகள் கம்மிப் பாவி எவ்விடத்தும் சூழ்தல் ஆயின, கொடும் சுடர்ப்படு கொழுந்துபோய் - கொடுமையாகிய நெருப்பிலே யுண்டாகிய அக்கினிச் சுவாலைகள்போய், அண்டம் உற்றன - ஆகாயமெல்லாம் சேர்ந்தன, பரந்த தந்தரம் - அந்தரலோகமும் (இந்நெருப்புக்கஞ்சி) மேலே பரந்தது, அதற்கும் அப்புறம் எழுந்ததே - அக்கினிச் சுவாலையானது அதற்குமேலும் எழுந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

இனி, புகை என்னும் சொல்லை வருவித்துக்கொண்டு அதனாலுண்டாகிய புகைகள் அந்தரமுற்றும் பரவி அதற்கு அப்பாலும் சென்றது என்றும் பொருள் கூறலாம். (௩௭)

சுட்டசெந்தழலில்வெந்துவெந்துடல்சுருண்டபற்பலவிலங்கினங்
கட்டுபாசமதுவிட்டஞாளிகள்தடித்திடச்சிலகழிந்தன [போய்
கெட்டழிந்துநிலையற்றுமீமிசைகிளர்ந்தெழுந்துகுதிகொண்டு
விட்டமாமுனியிருந்தசூழலில்வெருண்டுசிற்சிலவிழுந்தவே.

[பற்பல மிருகங்களின் கூட்டங்கள் அந்த நெருப்பில் வெந்து சுருண்டன,
நாய்கள் கடித்து சில மிருகங்கள் இறந்தன, சில மிருகங்கள் நிலை
குலைந்து இருக்க இடமின்றி மேலே கிளம்பித் தாவிக்
கொண்டுபோய் விஸ்வாமித்திர முனிவரிடம்
பயந்து விழுந்தது என்பதாம்.]

இ-ள். பற்பல விலங்கினம் - அநேகமநேகம் விலங்கினங்கள், சுட்ட செந்தழலில் - அப்படிச்சுட்ட செவந்த நெருப்பிலே, வெந்து வெந்து-மிகுதியாக வெந்து, உடல் சுருண்ட - உடல் எல்லாம் சுருண்டன, கட்டு - கட்டியிருக்கின்ற, பாசமது விட்ட - கயிறு அவிழ்த்து விடப்பட்ட, ஞாளிகள் - நாய்கள், கடித்திட - போய் கடிக்க, சில கழிந்தன - சில மிருகங்கள் இறந்தன, கெட்டழிந்து - (சில மிருகங்கள்) தமது நிலைகெட்டு அழிந்து, நிலையற்று - இருக்க இடம் இன்றி, மீமிசை கிளர்ந்து எழுந்து - அதிக மேலே கிளம்பி எழுந்து, குதிகொண்டுபோய் - தாவிக்கொண்டுபோய், விட்டமாமுனி - தங்களை அனுப்பின பெரிய விஸ்வாமித்திரமுனிவர், இருந்த - இருக்கின்ற, சூழலில் - இடத்தில், வெருண்டு - பயந்து, சிற்சில விழுந்தவே - சிற்சில மிருகங்கள் விழுந்தன. எ-று. ஏ - ஈற்றசை. (௩௮)

மட்டிலாதனவிடுத்தனம்மவன்வதைத்தனன்கொலிவனத்திலே,
பட்டிலாதனவெருண்டுவந்தனவெனச்சினம்பதைபதைத்திட
விட்டிலாவினைவிளைப்பல்யானெனவெகுண்டுவிட்டவெகுவெவ்விலங்,கெட்டிலொன்றுவரல்கண்டிலேமெனவிருந்தமாமுனியிரங்கினான்.

[விஸ்வாமித்திரர் அளவற்ற மிருகங்கள் பறவைகள் முதலியவற்றை ஏவினேம்.
அரிச்சந்திரன் அவைகளைக் கொன்று விட்டான்போலிருக்கிறது, சாகாத
மிருகங்கள் இங்கு பயந்து வந்திருக்கின்றன, என்று கோபம் துடிதுடிக்க,
இவனைத் தப்பவிடாவினை உண்டாக்குவேன் நான் என்று
கோபித்து நாம் விட்ட மிருகங்களில் எட்டில் ஒன்று
கூட வரக்காணேமே என்று கிலேசித்தார்
என்பதாம்.]

இ-ள். இருந்த மாமுனி - அங்கிருந்த பெரிய விஸ்வாமித்திரமுனிவர் (அந்த அஞ்சிவந்த மிருகங்களைக்கண்டு); மட்டிலாதன விடுத்தனம் - அளவற்ற

மிருகங்களை விடுத்தோமே; இவ்வனத்திலே - இந்தக் காட்டுக்குள்ளே, அவன்-அந்த அரிச்சந்திரமகாராஜன்; வதைத்தனன் கொல் - கொன்று விட்டானோ?, பட்டிலாதன - சாகாத மிருகங்கள் அல்லவோ, வெருண்டு வந்தன - பயந்து இங்கு வந்தன, என - என்ற, சினம் - கோபமானது, பதை பதைத்திட-துடி துடிக்க, விட்டிலாவினை - அவனை விடாது தொடரக்கூடிய வினையை, யான்-நான், விளைப்பல் என - உண்டாக்குகிறேன் என்று சொல்லி, வெகுண்டு-கோபித்து, விட்ட வெகு வெவ்விலங்கு - நான் அனுப்பின அநேக கொடிய மிருகங்களில், எட்டில் ஒன்றுவர கண்டிலேம் - எட்டில் ஒருபங்கு இங்கு வரக் காணோம் என்று புகிலேசித்தான். எ-று. 'விட்டு இலாவினை' கோபம் விட்டு இல்லாவினை ஒன்று விளைப்பேன் என்று என்றும் பொருள் கூறலாம். (ங௯)

கலி நிலைத்துறை.

கலங்கலென் றுநீர்கரத் திறைற்கௌசிகன மைத்து
விலங்கினங்களைநோக்கிநீர்வினைவிளைத்ததுவு
மலங்கன்மன்னவன்வதைத்ததுமாருயிர்வருந்த
நலங்கிவந்ததுநவிலுமென் றுரைத்திடநவிலும்.

[விஸ்வாமித்திரர் மிருகங்களைப் பார்த்து நீங்கள் கலங்கவேண்டாம் என்று
கையால் அமைத்து நீங்கள்போய் நாட்டை அழித்ததும் அரிச்சந்தி
ரன் கொன்றதும் நீங்கள் அருமையான உயிர் வருந்துதலாகி
நொந்து இங்கே வந்ததும் சொல்லுங்கள் என்ற உடனே
மிருகங்கள் சொல்லத் தொடங்கின என்பதாம்.]

இ-ள். கௌசிகன் - விஸ்வாமித்திரர், விலங்கினங்களை நோக்கி - மிருகங்களை எல்லாம் பார்த்து, நீர் - நீங்கள், கலங்கல் என்று - கலங்கவேண்டாம் என்று, கரத்தினல் - கையினல், அமைத்து - அமையச்செய்து, நீர் வினை விளைத்ததுவும் - நீங்கள் போய் நாட்டை அழித்ததுவும், அலங்கல் மன்னவன்-(அதற்கு) வெற்றிமாலையைச்சூடிய அரிச்சந்திரமகாராஜன், வதைத்ததும்-கொன்றதும், ஆருயிர் வருந்த - உங்கள் அருமையான உயிர் வருந்துதல் ஆகி, நலங்கி - நொந்து, வந்ததும் - நீங்கள் வந்ததும், நவிலுமென்று உரைத்திட-சொல்லுங்களென்று விஸ்வாமித்திரர் கேட்க, நவிலும் - மிருகங்கள் சொல்லத் தொடங்கின. எ-று. (சο)

கானடுங்கிடக்கண்புனல்சொரிந்திடக்கழுத்தின்
மேனடுங்கிடமெய்யெலாநடுங்கிடவீசும்
வானடுங்கிடமறலியைக்கண்டமன்னுயிரே
போனடுங்கிமாமுனிவனைப்போற்றியேபுகலும்

[கால் நடுங்கவும், கண்களிலே நீர் சிந்தவும், தலை நடுங்கவும், உடம்பெலாம்
நடுங்கவும், வால்கள் நடுங்கவும், எமனைக்கண்ட உயிர்கள்போல் நடுங்கி
விஸ்வாமித்திரரைத் துதித்துச் சொல்லலாயின என்பதாம்.]

இ-ள். கால் நடுங்கிட - கால்கள் நடுங்கவும், கண்புனல் சொரிந்திட-கண்களிலே நீர் சிந்தவும், கழுத்தின்மேல் நடுங்கிட - கழுத்திற்கு மேலான தலை

நடுங்கவும், மெய் எலாம் நடுங்கிட - உடம்பெல்லாம் நடுங்கவும், வீசும் வால்-வீசுகின்ற வால்கள், நடுங்கிட - நடுங்கவும், மறலியைக்கண்ட மன்னுயிரே போல் - யமனைக்கண்ட மிகுதியான உயிர்களைப்போல், நடுங்கி - நடுங்கி, மாமுனிவனைப் போற்றியே - பெரிய விஸ்வாமித்திரரைத், துதித்து, புகலும்-சொல்லலாயின. எ-று.

'மறலி' ஜீவன்களைக் கவரும் வன்மையுடையவன் என்னும் காரணம்பற்றி வந்தபெயர். (சுக)

சென்றனஞ்செழும்பயிர்களுமுயிர்களுஞ்சிதைத்து
நின்றனம்மெமைநெடுமுடிமன்னவனேர்ந்து
கொன்றனன்பிழைத்தெய்தினஞ்சிலசிலகுறையு
மென்றவாலிரிந்தெய்தியவிலங்குகளெல்லாம்.

[ஓடிவந்த மிருகங்கள் எல்லாம் போனோம், போய் உயிர்களையும் பயிர்களையும் அழித்து நின்றோம், எங்களைப் பெரிய கிரீடத்தை உடைய அரிச்சந்திர மகாராஜன் வந்து கொன்றான். நாங்கள் தப்பி வந்தோம், இன்னும் தப்பி வராதவைகள் சிலவும் குறைந்துபோம் என்று சொல்லின என்பதாம்.]

இ-ள். இரிந்து எய்திய விலங்குகள் எல்லாம் - ஓடிவந்து சேர்ந்த மிருகங்கள் எல்லாம், சென்றனம் - நாங்கள் போனோம், செழும்பயிர்களும் - செழுமையான பயிர்களையும், உயிர்களும் - அவைகளைக் காக்கின்றவர்தம் உயிர்களையும், சிதைத்து நின்றனம் - அழித்து நின்றோம், எமை - எங்களை, நெடுமுடி மன்னவன் - நீண்ட கிரீடத்தை உடைய அரிச்சந்திரமகாராஜன், நேர்ந்து - வந்து, கொன்றனன் - கொன்றான், பிழைத்து எய்தினம் - நாங்கள் தப்பிப் பிழைத்து வந்தோம், சிலசில - வராமல் அங்குநின்ற சிலவும், குறையும் - குறைதலாய்ப் போம், என்றவால் - என்றன. எ-று. ஆல் அசை. (சுஉ)

என்றுகூறிடக்கௌசிகனெரியெழவிழித்து
நன்றுநன்றெனநகைத்துக்கைநாசியிற்சேர்த்து
வென்றிவேந்தனைவெல்வதுகருதியோர்வீரப்
பன்றிதன்றவப்பெருமையாலிமைப்பினிற்படைத்தான்.

[நல்லது நல்லது என்று நகைத்து நெருப்புத்தோன்றக் கண்ணைத்திறந்து கையை மூக்கில் வைத்து அரிச்சந்திரனை வெல்ல நினைத்து ஒரு வீரப்பன்றியைத் தன் தவப்பெருமையினால் ஒரு இமைப்பில் படைத்தான் என்பதாம்.]

இ-ள். என்று கூறிட - என்று அம்மிருகங்கள் சொன்ன உடனே, கௌசிகன் - விஸ்வாமித்திரர், எரி எழ விழித்து - நெருப்புத்தோன்றக் கண்களை விழித்து, நன்று நன்று என நகைத்து - நல்லது நல்லது எனச்சிரித்து, கைநாசியிற் சேர்த்து - கையை மூக்கின்மேலே வைத்து, வென்றி வேந்தனை - செயங்

கொண்ட அரிச்சந்திரனை, வெல்வது கருதி - வெல்லுதற்கு நினைத்து, ஓர் வீரப்பன்றி - ஒரு வீரத்தை உடைய பன்றியை, தன் தவப்பெருமையால் - தனது தவப்பெருமையினாலேயே, இமைப்பினில் படைத்தான் - ஒரு க்ஷண நேரத்துக்குள் படைத்தார். எ-று. (சஙு)

பொன்னிறத்துமெய்வெண்ணிறத்துகிர்புட்பராக
நன்னிறக்கண்டநாலுகாலுஞ்செழும்பவளஞ்
செந்நிறத்தகண்செம்மணிசெழுமுகம்பச்சை
யன்னிறக்குரநீலம்வச்சிரத்தெயிறதற்கே.

[அந்தப்பன்றியின் உருவம் முதலியவற்றையும் அவையவங்களையும் பற்றிக் கூறுகிறார்]

இ-ள். பொன்னிறத்து மெய் - பொன்னிறமான உடம்பும், வெண்ணிறத்து உகிர் - வெண்ணிறமான நகங்களும், புட்பராக நல் நிறக்கண்டம்-புட்பராகம்போல் நல்ல நிறமான கழுத்தும், நாலுகாலும் செழும்பவளம், நான்கு கால்களும் செம்பவளம் செந்நிறத்த கண் - செவந்த நிறத்தையுடைய கண்கள், செம்மணி - செவந்த ரத்தினமாகவும், செழுமுகம் பச்சை - செழுமையான முகமோ மரகதம், அல் நிறக்குரம்-இருள்நிறமான குளம்புகளோ, நீலம் - நீலம், வச்சிரத்தெயிறதற்கே - வச்சிரம்போலும் பற்கள் அதற்கு. எ-று. ஏ - ஈற்றசை.

வயிற்றினாற்பெருமண்புவிமறைபடமறைக்கு
மெயிற்றினாலுயர்விண்புவியேழையுமெடுக்குங்
கயிற்றினாலுயிர்கவர்ந்திடுகாலனைக்கலக்கும்
பயிற்றினாற்பினையென்செயாதப்பெரும்பன்றி

[அப்பன்றி வயிற்றாலேயே பெரிதான மண்ணுலகமெல்லாம் மறையும்படி மறைக்கவல்லது, கொம்பினாலே ஆகாயத்தையும் உலகம் ஏழையும் எடுக்கவல்லது, பாசத்தால் உயிர்கவரும் எமனையும் கலக்கும், இப்படிப்பட்ட அப்பெரும்பன்றி என்னதான் செய்யாது என்பதாம்.]

இ-ள். வயிற்றினால் - அது தன் வயிற்றினாலே, பெரு மண்புவி - பெரிதாகிய மண்ணுலகம் எல்லாம், மறைபட - மறையும்படி, மறைக்கும் - மறைக்க வல்லது, எயிற்றினால் - கொம்பினால், உயர்விண் - உயர்ந்த ஆகாயத்தையும், புவி ஏழையும் - ஏழு உலகங்களையும், எடுக்கும் - எடுக்கவல்லது, கயிற்றினால் - பாசக்கயிற்றினாலே, உயிர் கவர்ந்திடு - உயிரைப் பிடிக்க வருகின்ற, காலனை - யமனையும், கலக்கும் - கலங்கச்செயவல்லது, பயிற்றினால் - இன்னும் விஸ்வாமித்திரன், பழக்கினால், அப்பெரும்பன்றி - அந்தப் பெரிதான பன்றி, பினை என் செயாது - பின்னை என்னதான் செய்யாது. எ-று.

'பின்னை' என்பது தொகுத்தல் விகாரம்பெற்று 'பினை' என்றாயது, பெரும்பன்றி' தவப்பெருமையினால் வந்த பன்றி என்றும் பொருளாம். (சஎ)

அப்பெருங்கொடும்பன்றியையருந்தவனோக்கி
யெப்பெரும்படைத்தலைவருமெயினருமிறக்கத்
தப்பறக்கொலைசெய்தரிச்சந்திரன்றன்னை
யிப்பெரும்பொழில்கொணர்ந்துநீபோவெனவிசைத்தான்.

[முனிவர் அந்தப் பெரிய பன்றியைப்பார்த்து, எங்குமுள்ள சேனாதிபதிகளும், வேடர்களும், சாரும்படி தப்பாமல் கொன்று அரிச்சந்திரனை இந்தப் பெரிய சோலைக்குள்ளே கொண்டுவந்து விட்டு நீ அப்பாற் போவென்று சொல்லினான், என்பதாம்.]

இ-ள். அப்பெரும் கொடும்பன்றியை - அப்படிப்பட்ட பெருமையுள்ள கொடிய பன்றியை, அரும்தவன் நோக்கி - அருமையான தவத்தைச்செய்த விஸ்வாமித்திரர் பார்த்து, எப்பெரும் படைத்தலைவரும்-எப்படிப்பட்ட பெரிய படைத்தலைவர்களும், எயினரும் - வேடர்களும், இறக்க - சாகும்படி, தப்பற- தப்பாமல், கொலைசெய்து - கொன்று, அரிச்சந்திரன் தன்னை - அரிச்சந்திர மகாராஜனை, இப்பெரும்பொழில் - இந்தப் பெரிதான காட்டுக்குள்ளே, கொணர்ந்து - கொண்டு வந்து விட்டு, நீ போ என இசைத்தான் - நீ போவாயாக என்று சொல்லினார். எ-று. (சசு)

என்றுகூறிடவிருடியைவணங்கிநெட்டெயிற்றாற்
குன்றுநீறெழவெற்றிநீள்குவடெலாங்குறைத்து
நின்றுநின்றுசெங்கண்களானெருப்புகவிழித்துச்
சென்றுசாடிற்றுமன்னவன்சேனையைச்சிதற.

[என்று முனிவர் சொன்ன உடனே முனிவரை வணங்கிக்கொண்டு, நீண்ட கொம்பினாலே மலைகள் தூளாகத்தாக்கி, நீண்ட மலைகளை எல்லாம் இடித்து, நின்று நின்று செவந்த கண்களால் நெருப்புச் சிதற நோக்கி, அரசன் சேனையைச் சிதறும்படி தாக்கிற்று என்பதாம்.]

இ-ள். என்று கூறிட - என்று சொன்ன உடனே, இருடியை வணங்கி- அந்த விஸ்வாமித்திரரை வணங்கிக்கொண்டு, நெட்டெயிற்றால் - நீண்ட கொம்பினாலே, குன்று - மலைகள் எல்லாம், நீறெழ எற்றி - நீறாகும்படித் தாக்கி, நீள்குவடு எலாம் - உயர்ந்த மலைச்சிகரங்களை எல்லாம், குறைத்து - இடித்து, நின்று நின்று - அங்கங்கே நிலைகொண்டு நின்று, செங்கண்களால் - செவந்த கண்களினாலே, நெருப்பு உக - நெருப்புச் சிந்த, விழித்து - கண்ணைத்திறந்து பார்த்து, மன்னவன் சேனையை - அரிச்சந்திரனின் சேனையை, சிதற -சிதையும்படி, சென்று சாடிற்று - போய் அடித்தது. எ-று. (சஎ)

தலைகளற்றிடத்தடக்கரமற்றிடவீரர்
குலைகளற்றிடக்குஞ்சரமற்றிடக்கொலைஞர்
சிலைகளற்றிடச்செஞ்சரமற்றிடக்கிரைகள்
வலைகளற்றிடவெற்றிற்றுமாயவராகம்.

[அந்த மாயாரூபமான பன்றி தலைகள் அறுபடவும், நீண்ட கைகள் அறுபடவும் வீரர்கள் ஈரற்குலைகள் அறுபடவும், யானைகள் அறுபடவும், வேடர்களுடைய விற்கள் முறியவும், செவ்வையான அம்புகள் முறியவும், திரைச்சீலைகளும் வலைகளும் கிழிபடவும் சாடியது என்பதாம்.]

இ-ள். மாயவராகம் - அந்த மாயாரூபமான பன்றி, தலைகள் அற்றிட - தலைகள் அறுபடவும், தடம் கரம் அற்றிட - நீண்ட கைகள் அறுபடவும், வீரர் - வீரர்களுடைய, குலைகள் அற்றிட - ஈரற்குலைகள் அறுபடவும், குஞ்சரம்-யானைகள்; அற்றிட - அறுபடவும், கொலைஞர் - கொலைவேடர்களின், சிலைகள் அற்றிட - விற்கள் முறிபடவும், செம்சரம் அற்றிட - செவ்வையான அம்புகள் முறியவும், திரைகள் - திரைச்சீலைகளும், வலைகள் - வலைகளும், அற்றிட-கிழிபடவும், எற்றிற்று - தாக்கிற்று. எ-று. (சஎ)

பீளுமீரலும்பித்துநீள்குடர்களும்பிளக்கத்
தாளுநெஞ்சமுமற்றிடமுடுவலைச்சாடி
யாளுமற்றிருதோளுமற்றங்கையிற்பிடித்த
வாளுமற்றிடவெற்றிற்றுமாயவராகம்.

[அந்த மாயப்பன்றி வயிறும், ஈரலும், பித்தும், நீண்ட குடல்களும், பிளவுபட, காலும், நெஞ்சும் ஒடிய நாய்களைக்கொன்று, வீரர்களும் அவ்வீரர்களுடைய இரண்டு தோள்களும் அவர்கள் கையில் பிடித்திருந்த வாளும் ஒடிய மோதிற்று என்பதாம்.]

இ-ள். மாயவராகம் - அந்த மாயாரூபமான பன்றி, பீளும் - வயிறும், ஈரலும் - ஈரலும், பித்தும் - பித்தும், நீள் குடர்களும் - நீண்ட குடல்களும், பிளக்க - பிளவுபடவும், தாளும் - கால்களும், நெஞ்சமும் - மார்பும், அற்றிட - ஒடிய, முடுவலைச்சாடி - நாய்களைக்கொன்று, ஆளும் - வீரர்களும், அற்று-அறுபட்டு, இருதோளும் அற்று - இரண்டு தோள்களும் அறுபட்டு, அம் கையில் - அழகிய கைகளில், பிடித்த - கொண்டுள்ள, வாளும் - வாளாயுதமும், அற்றிட - ஒடிய, எற்றிற்று - மோதியது. எ-று. (சஅ)

கரிபடப்படச்சேனைகள்படப்படக்கலினப்
பரிபடப்படப்பரிகலம்படப்படப்பசுங்கண்
ணெரிபடப்படவிரதங்கள்படப்படவிடைதா
னரிபடப்படச்சுணங்குகள்பட்டனவனந்தம்.

[யானைகள், சேனைகள், குதிரைகள் எல்லாம் அழிந்தன, வீரர்களின் ஆபரணங்கள் சிந்தின, பன்றியின் கண்களில் நெருப்புப்பொரி பறந்தது, ரதங்கள் எரிந்தன, அநேக நாய்கள் இடுப்பும் கால்களும் துண்டாகி இறந்தன என்பதாம்.]

இ-ள். கரி படப்பட - யானைகள் இறக்க இறக்க, சேனைகள் படப்பட - சேனைகள் இறக்கஇறக்க, கலினப்பரி - கடிவாளம்பூண்ட குதிரைகள் எல்லாம்,

படப்பட - இறக்க இறக்க, பரிகலம் படப்பட - வீரர்கள் ஆபரணம் சிதறச் சிதறவும், பகுங்கண் - அப்படியாக இந்தப் பன்றியின் பசுமையான கண்களில் இருந்து, எரி படப்பட - நெருப்புகள் வெளிப்படப்பட, இரதங்கள் - தேர்கள், படப்பட - எரிய எரிய, இடைதாள் அரி படப்பட - இடுப்பும் ஒடிபட ஒடிபட, சுணங்குகள் - நாய்கள், பட்டன அனந்தம் - அழிந்தன அநேகம். எ-று. இடைதாளரிபடப்பட' என்பது பாடமாயின் இடுப்பும் கால்களும் துண்டுபட துண்டுபட என்றும் பொருளாகும். (௯௰)

கைதவம்மிதுவென்றறக்கடற்படைகலங்கி
மைதவழ்ந்ததிண்குன்றினுமரத்தினுமறைந்து
பெய்தவேல்களுங்குணில்களும்பிறைமுகமழுவு
மெய்தவாளியும்பொடிபடவிதிர்த்ததவ்வேனம்.

[அரிச்சந்திரனின் கடல்போன்ற சேனை இது வஞ்சகமுடையதென்று
பயந்து உயர்ந்த மலைகளிலும் மரங்களிலும் மறைந்துகொண்டு
எறிந்த வேல்களும், வளைதடிகளும், அர்த்தசந்திர முக
மழுவும் எய்த அம்புகளும், பொடியாம்படி
அந்தப்பன்றி உதறிற்று என்பதாம்.]

இ-ள். கைதவம் இது - (அந்தப் பன்றியைக்கண்டு) இது ஏதோ தேவ வஞ்சனையாக இருக்கிறதென்று, அற - மிகவும், கடல்படை கலங்கி - கடல் போன்ற சேனைகள் கலங்கி, மைதவழ்ந்த - மேகங்கள் சஞ்சரிக்கின்ற, திண் குன்றினும் - வலிய மலைகளிலும், மரத்தினும் மறைந்து - மரங்களிலும் மறைந்துகொண்டு, பெய்த - எறிந்த, வேல்களும் - வேல்களும், குணில்களும் - வளைதடிகளும், பிறைமுக மழுவும் - அர்த்தசந்திரன் போன்ற முகத்தையுடைய மழுக்களும், எய்தவாளியும் - எய்த அம்புகளும், பொடிபட - தூள்தூளாக, அவ் வேனம் - அந்தப்பன்றி, விதிர்த்த - உதறிற்று. எ-று. (௯௧)

குடர்பிளந்தனகுறங்குகள்பிளந்தனகொடுங்கை
மடல்பிளந்தனவாய்பிளந்தனவிருவகிரா
யுடல்பிளந்தனவுரம்பிளந்தனசிரமுருண்ட
கடல்கிளர்ந்தெனக்குருதிநீர்வனமெலாங்கலந்த.

[சேனாவீரர்களுடைய குடல்கள் சரிந்தன, தொடைகள் முறிந்தன, கை மடல்கள்
பிளந்தன, வாய் கிழிந்தன, இரண்டு பிரிவாக உடம்பு பிளவுபட்டன,
மார்பு பிளந்தன, தலைகள் உருண்டன, கடல் பொங்கியதுபோல
வனமெல்லாம் இரத்தம் ஓடிற்று என்பதாம்.]

இ-ள். குடர் பிளந்தன - சேனாவீரர்களுடைய குடல்கள் சரிந்தன, குறங்குகள் பிளந்தன - தொடைகள் முறிந்தன, கொடும் கைமடல் பிளந்தன - நீண்ட கை மடல்களும் பிளந்தன, வாய்பிளந்தன - வாய்கள் கிழிபட்டன, இருவகிரா - இரண்டு பிளவாக, உடல் பிளந்தன - உடல்கள் பிளவுபட்டன, உரம்பிளந்தன-

மார்புகள் பிளந்தன, சிரம் உருண்ட - தலைகள் உருளலாயின, கடல் கிளர்ந் தென - கடல் பொங்கினாற்போல், குருதி நீர்-ரத்தஜலம், வனமெலாம் கலந்த- அந்த வனமெல்லாம் பரவின. எ-று. (௩௨)

சிரமிதந்தன திரள்பிணமிதந்தன தெறித்த
கரமிதந்தன கழன்றன கால்களுங் கண்ணுங்
குரமிதந்தன குதிரைகளமிதந்தன குணில்வேற்
சரமிதந்தன குருதியந்தடங்கடற்றனிலே

[அவ் உதிரப் பிரவாகத்திலே தலைகளும், பிணக்கூட்டங்களும், ஒடிந்த கைகளும், கால்களும், கண்களும், குதிரைக்குளம்புகளும்; குதிரைகளும், வளைதடிகளும், வேல்களும், பாணங்களும், மிதிந்தன, என்பதாம்.]

இ-ள். குருதி அம் தடங்கடல் தனிலே - அந்த இரத்த நீரை உடைய அழகிய விசாலமான கடலிலே, சிரமிதந்தன - தலைகள் மிதந்தன, திரள் பிணம் மிதந்தன - கூட்டமாகப் பிணங்கள் மிதந்தன, தெறித்த - துண்டிக்கப்பட்ட, கரம் மிதந்தன - கைகள் மிதந்தன, கழன்றன கால்களும் கண்ணும்-கால்களும் கண்களும் வேறு வேருய்ப்போயின, குரம் மிதந்தன - குதிரைக் குளம்புகள் மிதந்தன, குதிரைகள் மிதந்தன - குதிரைகள் மிதந்தன, குணில் - வளைதடி களும், வேல் - வேலாயுதங்களும், சரம் - அம்புகளும், மிதந்தன - மிதக்க லாயின. எ-று. ஏ - ஈற்றசை. (௩௩)

தோளைவீழ்த்தது துடைகளைவீழ்த்தது தோள்சேர்
தாளைவீழ்த்தது தடக்கையைவீழ்த்தது தயிர்போல்
மூளைவீழ்த்தது தாழையின்மாருதமோதப்
பாளைவீழ்ந்தெனவீழ்ந்தனவேடர்தம்பற்கள்.

[தோளையும், துடைகளையும், தோள் தொங்கும் கால்களையும் விசாலமான கைகளையும், தயிர்போல மூளையையும், தென்னமரத்தில் காற்று வீச பாளைகள் சிந்தினாற்போல் பற்களும் விழும்படி செய்தது என்பதாம்.]

இ-ள். தோளை வீழ்த்தது - தோள்களை விழப்பண்ணிற்று, துடைகளை வீழ்த்தது - துடைகளையும் ஒடிந்துவிழப் பண்ணிற்று, தோள்சேர் - தோள்கள் வந்து தொடும்படியான, தாளை வீழ்த்தது - கால்களையும் விழப்பண்ணிற்று, தடக்கையை வீழ்த்தது - நீண்ட கைகளையும் விழப்பண்ணிற்று, தயிர்போல்- தயிர்க் கட்டிகள்போல், மூளை வீழ்த்தது - மூளைகளையும் சிந்தப்பண்ணிற்று, தாழையில் - தென்னமரத்திலே, மாருதம்மோத - காற்றுவீச, பாளை வீழ்ந் தென - பாளைகள் சிந்தினாற்போல், வேடர்தம் பற்கள் - வேடருடைய பற்கள், வீழ்ந்தன - சிந்தின எ-று.

வேடர்களின் பற்கள் தென்னம் பாளைகள் காற்றுமோத நிலத்திற் கிடப் பதுபோலக் கிடந்தன என உவமித்தார். (௩௪)

கொலையெடுத்தவேலெயினர்தங்குருதிநீர்பெருகி
மலையெடுத்துநீண்மரங்களைமுறித்தெடுத்தோடிச்
சிலையெடுத்துவீழ்திரைகளும்வலைகளும்வாரி
யலையெடுத்தநீர்வாரியையணைந்ததையன்றே.

[வேடர்களின் குருதிவெள்ளம்பெருகி மலைகளையும் மரங்களையும் முறித்து எடுத்துக்கொண்டு ஓடி விற்களையும் கட்டி வீழ்ந்திருக்கிற திரைகளையும் வலைகளையும் வாரி அலைகளை உடைய நீர் கடலிற் போய்க் கூடிற்று என்பதாம்.]

இ-ள். கொலை எடுத்த - கொலை செய்யத்தக்க, வேல் - வேல்களைக் கொண்ட, எயினர்தம் - வேடர்களுடைய, குருதி நீர் பெருகி - ரத்த ஜலம் பெருகி, மலை எடுத்து - மலைகளை உருட்டிக்கொண்டும், நீண் மரங்களை-நீண்ட மரங்களை, முறித்து எடுத்து ஓடி - முறித்து எடுத்துக்கொண்டு ஓடி, சிலை எடுத்து - விற்களையும் வாரிக்கொண்டு, வீழ் - வீழ்ந்து கிடக்கின்ற, திரைகளும் வலைகளும் - திரைச்சீலைகளையும் வலைக்கயிறுகளையும், வாரி - வாரிக்கொண்டு, அலை எடுத்த - அலைகளை உடைய, நீர் வாரியை - நீரைக்கொண்ட சமுத்திரத்தை, அணைந்ததையன்றே - சேர்ந்தது. எ-று. ஐ, அன்று, ஏ - அசைகள்.

சென்றசென்றவத்திசையெலாம்பிணக்குவைசெறியக்
கொன்றுவீழ்த்திடக்குலைந்ததக்கொடும்படைக்கூட்ட
நின்றதிக்கினைநாடியேநிருபன்முன்னொருவன்
பன்றியோடியவிசையினைப்பலமுறைபகர்ந்தான்.

[அந்தப்பன்றி போன போன திக்குகளில் எல்லாம், பிணக்குப்பல்கள் குவியக் கொன்று கொன்று வீழ்த்த அந்தச் சேனைக்கூட்டம் குலைந்தது; ஒருவீரன் அரிச்சந்திரனிடம் வந்து பன்றி ஓடித்திரிகிற விசையைப் பலமுறை கூறினன் என்பதாம்.]

இ-ள். சென்ற சென்ற அத்திசை எலாம் - (பன்றியானது) தான் போன போன அந்தத் திசைகளில் எல்லாம், பிணக்குவை-பிணக்குப்பல்கள், செறிய-நெருங்க, கொன்று வீழ்த்திட - கொன்று விழுந்த, அக்கொடும்படைக்கூட்டம்-அந்தக்கொடிதான சேனைக்கூட்டம், குலைந்தது - பயந்து குலைதல் ஆயிற்று, ஒருவன் - அப்பொழுது ஒரு வீரன், நிருபன் - அரிச்சந்திரமகாராஜன், நின்ற திக்கினை நாடியே - நிற்கின்ற இடத்தைத் தேடிக்கொண்டுபோய், முன் - முன்னால் நின்று, பன்றிஓடிய - பன்றி ஓடித்திரிகின்ற, விசையினை - வேகத்தை, பலமுறை - பலதரம் சொன்னான். எ-று.

'பலமுறை பகர்ந்தான்' பலவிதமாக எடுத்துச்சொன்னான் என்றலும் ஒன்று, பலமுறை சொன்னான் என்பதற்கு பலதரம் சொன்னான் என்றால் அவனுக்கு அந்தப் பன்றியினிடத்துள்ள பயம் தோன்றுகின்றது. (௫௬)

அந்தவாசகங்கேட்டரிச்சந்திரன்முனிந்தே
யெந்தவாறுவந்தெய்தியதிவர்களை வதைத்த
தந்தவாறெதுகூறெனவரசனைவணங்கி
யெந்தைகேளெனாவேடுவன்வகைவகையிசைத்தான்.

[அந்த வார்த்தையைக்கேட்டு அரிச்சந்திரன் கோபித்து, அது எந்தவழியாய் வந்தது? இவர்களை எப்படிக்கொன்றது, சொல்லென்ன எந்தையே கேள் என்று வேடன் வகை வகையாகச் சொன்னான் என்பதாம்.]

இ-ள். அந்த வாசகம்கேட்டு - அந்த வார்த்தைகளைக்கேட்டு, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜன், முனிந்தே - கோபங்கொண்டு, எந்தவாறு - (அந்தப்பன்றி) எந்த வழியாக, வந்து எய்தியது - வந்து கூடிற்று, இவர்களை வதைத்த தந்தவாறு எது - இவர்களை எல்லாம் கொன்ற அந்தவழி எது?, கூறு என - சொல்லு என்று கேட்க, வேடுவன் - வந்த வேடன், அரசனை வணங்கி - அரிச்சந்திரனை வணங்கிக்கொண்டு, எந்தை கேளென - எந்தையே கேளும் என்று, வகை வகை இசைத்தான் - வகை வகையாகத் தெரியச் சொன்னான் எ-று. (௩௭)

வானமேழுமண்ணேழுமுன்மருப்பினாலெடுத்த
வேனமோபுரமெரித்தவனுலகெலாமெரிக்குந்
தானமோவுயிர்துரிசறச்சமனெடும்பன்றி
யானதோவதுசிறிதும்யாமுணர்ந்திலமையா.

[ஐயனே! பதினாலு உலகங்களையும் முன்னே ஒரு கொம்பிலே தாங்கிய அந்தப் பெரியவராகமோ? திரிபுரத்தை எரித்தவன் உலகத்தையும் எரிக்கும் சக்தியுள்ளதோ? உயிர்களை அடியோடு அறுப்பதற்காக அந்த யமனே இந்தப் பெரிய பன்றியின் உருவமானதோ, இத்தன்மையதென்று கொஞ்சமேனும் நாங்கள், தெரிந்து கொள்ளவில்லை என்றார்கள், என்பதாம்.]

இ-ள். ஐயா - ஐயனே! வானம் எழும் - மேல் எழு உலகும், மண் எழும் - பூலோகங்கள் ஏழையும், முன் - முன் நாளிலே, மருப்பினால் - தன் கொம்பினால், எடுத்த - தாங்கின, ஏனமோ - (அந்தப் பெரிய விஷ்ணுவின் அவதாரமாகிய) வராகமோ?, புரமெரித்தவன் - திரிபுரத்தை எரித்த சிவபெருமானின், உலகெலாம் எரிக்கும் - (வசிக்கும்) சிவலோக முழுமையும் எரிக்கும், தானமோ - இடமோ? உயிர் துரிசற - உயிர்கள் குற்றமின்றி முழுதும் மடிய, சமன் - யமன், நெடும்பன்றி ஆனதோ - நீண்ட இந்தப்பன்றி உருவுஆனதோ, அது சிறிதும் - இந்தப்பன்றியின் தன்மையை, சிறிதும் - கொஞ்சமேனும், யாம் - நாங்கள், உணர்ந்திலம் - தெரிந்துகொள்ள முடியவில்லை. எ-று.

முன் அசுரன் பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு பாதாளத்திற்குச் சென்றபோது மகாவிஷ்ணு பன்றியாக உருவெடுத்து தன் கொம்பினால் கொண்டுவந்தார் என்பது புராணகதை. இதையே 'முன் மருப்பினால் எடுத்த ஏனம்' என்றார். 'தானமோ' சக்தியோ, என்றும் பொருள் கூறுவர். 'உயிர் துரிசத' 'உயிர்கள் எல்லாம் அடியோடு அழிய என்றும் பொருள் கூறுவர். ()

தலைநிறம்பச்சைதன்னிறம்பொன்னிறந்தறுகண்
ணிலைநிறஞ்செழுமாமணிகுரமிந்த்ரநீல
மலையினும்பெரிதானதோர்வராகம்வந்தெய்திக்
கொலைபுரிந்ததுகூன்பெருங்கோட்டினாலென்றான்.

[தலையின் நிறம் பச்சை, உடம்பின் நிறம் பொன் நிறம், அதன் கண்ணின் நிறம் ரத்தநிறம், குளம்பு இந்திர நீலநிறம், இந்தவிதமான பன்றி மலையினும் பெரிதான தோற்றத்தை உடையது, அது வந்து சேர்ந்து அதனுடைய வளைவான பெரிய கொம்பினால் கொலை செய்தது என்றான் என்பதாம்.]

இ-ள். தலைநிறம் - தலையினுடைய நிறம், பச்சை - பச்சை நிறம், தன் நிறம் - அதன் உடலின் நிறம், பொன் நிறம் - பொன் நிறம், தறுகண் - கொடுமையான கண்ணின், நிலை நிறம் - நிலையான நிறமோ, செழுமாமணி - செழுமையான பெரிய ரத்தினநிறம், குரம் - குளம்போ, இந்திரநீலம் - இந்திர நீல நிறம், மலையினும் - மலையைக்காட்டிலும், பெரிதானது ஓர் - பெரிதாகிய ஒரு, வராகம் வந்து எய்தி - வராகமானது வந்து சேர்ந்து, கூன் - வளைவாகிய, பெருங்கோட்டினால் - பெரிய கொம்பினால், கொலைபுரிந்தது - கொலை செய்தது, என்றான் - என்று கூறினான். (ருக)

சேனையும்பெருந்தேர்களுந்திண்பரித்திரளும்
யானையுங்கொடுமுடுவலுமிறந்திடவெற்றிக்
கானெலாம்பிணக்காடுசெய்தெய்திற்றுக்கண்டாய்
தேனலங்கலாய்தேரினைத்திரித்தருளென்றான்.

[சேனைகளும், பெருந்தேர்களும், வலிய குதிரைக்கூட்டங்களும், யானைகளும், கொடிய நாய்களையும், அழியும்படித்தாக்கி காடெல்லாம் பிணக்காடாகும் படிச்செய்து வந்து சேர்ந்தது, ஆகையால் அரசனே! உமது தேரை அங்கே திருப்பி யருளவேணும் என்று கூறினான் என்பதாம்.]

இ-ள். சேனையும் - நம்முடைய சேனைகளையும், பெருந்தேர்களும்-பெரிய தேர்களையும், திண்பரித்திரளும் - வலிய குதிரைக்கூட்டங்களையும், யானையும்- யானைகளையும், கொடு - கொடிய, முடுவலும் - நாய்களையும், இறந்திட எற்றி- சாகும்படிக் குத்திக்கொன்று, கானெலாம் - காடுமுழுதும், பிணக்காடு செய்து- பிணக்காடாகப் பண்ணிக்கொண்டு, எய்திற்று - வந்திருக்கின்றது, கண்டாய்- கண்டு அறிவாயாக, தேனலங்கலாய் - தேனொழுகுகின்ற மாலையை உடைய

அரசனே!, தேரினை - உமது தேரை, திரித்தருள் என்றான் - அங்கே திருப்பியருள வேண்டுமென்று கூறினான், எ-று. 'கண்டாய்' என்பதை முன்னிலையசையாகவும் ஒதுக்குவாரும் உண்டு. (சுഠ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

என்றுபகர்ந்திடமன்னவர்மன்னவனெழுந்தகதத்துடனே
நன்றிதுநன்றெனவங்கையொடங்கையறைந்துநகைத்துடனே
யின்றுமடிந்தவரின்னுயிர்தம்மிலுமெம்முயிரோவலிதென்
றன்றுசவுந்தரிதந்தநெடுஞ்சிலையங்கையெடுத்தனனே.

[என்று கூறின உடனே, ராஜாதி ராஜனான அரிச்சந்திரன், தனக்குத் தோன்றிய கோபத்துடனே, நல்லது நல்லது என்று கையோடு கை அறைந்து சிரித்து, உடனே, இன்று இறந்தவர்கள் இனிய உயிரிலும் என்னுடைய உயிரோ வலியது என்று காளி தந்த பெரியவில்லை அழகிய கையில் எடுத்தான் என்பதாம்.]

இ-ள். என்று பகர்ந்திட - என்று வேடன் சொல்லவே, மன்னவர் மன்னவன் - ராஜாதி ராஜனானவன், எழுந்த கதத்துடனே - அப்போது தனக்குண்டான கோபத்துடனே, நன்றிது நன்றென - நல்லது! இது நல்லது! என்று கூறி, அங்கையொடங்கை அறைந்து - உள்ளங்கையோடு உள்ளங்கையோடு அறைந்து, நகைத்து - சிரித்து, உடனே - அப்பொழுதே, இன்று மடிந்தவர் இன்னுயிர் தம்மிலும் - இன்றைக்கு மடிந்தவர்களின் இனிய உயிரைப்பார்க்கிலும், எம் உயிரோ வலிது என்று - எங்கள் உயிர்தானே சிறந்ததென்று, அன்று - முன்னே, சவுந்தரி தந்த - சவுந்தரிதேவி (காளிகாதேவி) கொடுத்த, நெடுஞ்சிலை - பெரியவில்லை, அங்கை எடுத்தனன் - தன்னுடைய அழகிய கையில் எடுத்தனன். எ-று. ஏ - ஈற்றசை.

அங்கையோடு அங்கை அறைதல், நகைத்தல் முதலியன வெகுளி பற்றி வந்த மெய்ப்பாடு; இவை பெரும்பாலும் தேமா, கருவிளம், கூவிளம், தேமா, புளிமா, கருவிளங்காய் என ஓர் அடிக்கு அறுசீர் வந்த கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். இவைகள், தந்த தனந்தன தந்தன தந்த தனந்த தனத்தனனா என வந்த சந்த விருத்தம். (சுக)

பாகரின்மிக்கவனான்மறைமுற்றெதிர்பாகுகுறித்தவனுஞ்
சாகாமுற்றெழுபானுகுலத்திறைதாளிணைபைத்தொழுதே
நாகரிகச்சுடராடரவப்பணிநாயகிபொற்சடிலச்
சேகரிபத்திரகாளிகொடுத்தருடேரைநடத்தினனே.

[சாரதி அரிச்சந்திரனை வணங்கிக் காளிகொடுத்த தேரை நடத்தினன் என்பதாம்.]

இ-ள். பாகரின் மிக்கவன் - தேர்ச்சாரதிகளில் சிறந்தவனான, நால்மறை முற்று எதிர்பாகு குறித்தவனும் - நான்கு வேதங்களையும் முழுது முணர்ந்த

(சிவபெருமான் சாரதியாகிய) பிரமனை ஒத்தவனும் ஆகிய சாரதி, சாகரமுற்றெழ - கடலிலிருந்து எழுகின்ற, பானு குலத்து இறை - சூரியகுலத்து அரசனாகிய அரிச்சந்திரனின், தாளிணையைத்தொழுதே - பாதங்கள் இரண்டையும் வணங்கி, நாகரிகச்சுடர் - யோக்கியதையான காந்தியைக்கொண்ட, ஆடு - ஆடுகின்ற, அரவப்பணி - சர்ப்பாபரணம்பூண்ட, நாயகி - தேவியாகிய, பொற்சடிலச்சேகரி - செம்பொன் நிறமான சடைத்தலையை உடைய, பத்திரகாளி - பத்திரகாளியானவள், கொடுத்தருள் - கொடுத்தருளிய, தேரை - தேரை, நடத்தினன் - செலுத்தினன். எ-று. ஏ - ஈற்றசை.

“பாகரின் மிக்கவன் நான்மறைமுற் றெதிர்பாகு குறித்தவன்” என்பதற்கு, தேர்ச்சாரதிகளில் சிறந்தவனும் நான்கு வேதங்களை முழுதும் தெரிந்து செலுத்தத்தக்க சாரதித்தொழிலிலும் வல்லவனுனவன் என்றும் பொருள் கூறுவர். 'நாகரிகம்' - விரும்பத்தக்க என்றும் பொருளாம். 'நாகரிகம்' நகர சம்பந்தமானது என்பதே சொற்பொருளாம். (கூஉ)

படியுமிடிந்தது பொ: டியுமெழுந்தது பலபலபைம்பொழிலு
மடியவிழுந்தன ககனமடர்ந்துயர்வரையுநெரிந்தனவான்
முடியுமதிர்ந்தது கதிருமறைந்தது முகிலுமுழன்றது நீ
ரிடியுமுதிர்ந்தது கொடிமலையுஞ்சுடரிரதநடந்திடவே.

[அரிச்சந்திரன் தேர் செல்லும்பொழுது பூமி பள்ளமாயிற்று, தூளிகள் கிளம்பிற்று பற்பல சோலைகள் சாய்ந்து விழுந்தன, மலைகள் எல்லாம் நெரிந்தன, அண்டமுகடும் அதிர்ந்தது, சூரியனும் மறைந்தது, மேகங்கள் அலைந்தன, நீரிடியும் உதிர்ந்தது என்பதாம்.]

இ-ள். கொடிமலையும் - கொடியை அணிந்துள்ள, சுடர் - பிரகாசமுள்ள, இரதம் நடந்திடவே - தேர் செல்லும்போது, படியும் இடிந்தது - பூமியும் இடிந்து பள்ளமாயிற்று, பொடியும் எழுந்தது - தூளிகளும் கிளம்பிற்று, பலபல பைம்பொழிலும் - பற்பலவகையான காடுகளும், மடிய விழுந்தன-சாய்ந்து விழுந்தன, ககனம் அடர்ந்து - ஆகாயத்தை முட்டி, உயர்வரையும் - உயர்ந்திருக்கின்ற மலைகளும், நெரிந்தனவால் - நெரிந்தன, முடியும் - அண்டமுகடும், அதிர்ந்தது - அதிர்தல் ஆயிற்று, கதிரும் மறைந்தது - சூரியனும் மறைந்தது, முகிலும் - மேகங்களும், உழன்றது - அலைவன ஆயின, நீரிடியும்-நீரிடியும், உதிர்ந்தது - உதிர்ந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

'நீரிடியும் உதிர்ந்தது' என்பதற்கு நீரும் இடியும் ஆகாயத்திலிருந்து உதிர்ந்தது என்றும் பொருள் கூறுவர். இடி, நீரிடி என்றும் நெருப்பிடி என்றும் இருவகைப்படும் என்பர். (கூங)

மாறுபடச்சிலதேரெனவுற்றெழுமால்வரையத்தனையு
நீறுபடப்படநாடிமணிச்சுடர்நேமிநெரித்தனவா

லாறுபடப்பட வூறுபுனற்றிரையாழியையொத்திடவே
வீறுபடத்துயர் கானமனைத்தையும்வேரொடெடுத்தனவே.

[எதிர்த்து வருகின்ற தேர்போல் எதிரே நிற்கின்ற மலைகளை எல்லாம்
நோக்கி, தேடிச்செல்லும்போது சக்கரம் செய்த பள்ளத்திலிருந்து
ஊறுகின்ற நீர் ஆறு ஆருகப்பெருகி அலையை உடைய சமுத்
திரத்தை ஒத்துப்பெருகி காட்டை முற்றும் வேரோடு
பிடுங்கிக்கொண்டு சென்றது என்பதாம்.]

இ-ள். மாறுபட - இந்தத் தேருக்குமாருக, சில தேர் என - சில வீரர்களுடைய தேர் என்னும்படி, உற்று எழு - பூமியிற் பொருந்திக் கிளம்பியுள்ள, மால்வரை அத்தனையும் - பெரிய மலைகளை எல்லாம், நீறுபடப்பட நாடி-தூள்களாக அந்தப்பன்றியைத் தேடிக்கொண்டு, மணிச்சுடர் நேமி -(செல்லும் தேரின்) ரத்நகசிதமான பிரகாசமுள்ள சக்கரம், நெரித்தனவால் - பூமியைப் பள்ளமாக்கிற்று, ஆறுபடப்பட ஊறுபுனல் - அது செல்லும் வழிகளில் எல்லாம் ஊறுகின்ற ஜலமானது, திரை ஆழியை ஒத்திடவே - அலைகளை உடைய சமுத்திரத்தை ஒப்பாகப்பெருகி, வீறுபடத்து - பெருமை பொருந்திய ஆதிசேஷனின் படத்தில் பொருந்தியுள்ள, உயர்கான மனைத்தையும் - உயர்ந்து வளர்ந்துள்ள காடுகளை எல்லாம், வேரொடெடுத்தனவே - வேரோடு பிடுங்கிக்கொண்டு சென்றன. எ-று. ஏ - ஈற்றசை.

"மணிச்சுடர் நேமி நெரித்தனவால் ஆறுபடப்பட ஊறுபுனல்" என்பதற்கு ரத்நகசிதமான பிரகாசமுள்ள சக்கரம் (செல்லும்போது) அநேக ஜீவப்பிராணிகள் நெரிபட்டன அதனுல் ஆறு ஆருகப் பெருகி ஊறும் இரத்தவெள்ளம், என்று பொருள் கூறுவர். (௬௪)

தங்கமுடித்தனிவெண்கவிகைத்திரிசங்குமகற்கெதிரே
திங்களெனத்தவளந்திகழ்முத்தொளிசிந்துமருப்பதனுல்
வெங்கண்மதக்களிறும்பலவிற்செருவென்றபரித்திரளும்
பங்கமுறப்பலபஞ்சுபடுத்தியபன்றியெதிர்த்ததுவே.

[அரிச்சந்திரமகாராஜனுக்கு முன்னே, தன் வெள்ளிய கொம்பினுல்,
மதயானைகளையும், குதிரைக்கூட்டங்களையும் அழியும்படிச்
செய்து பஞ்சுபோல் பறக்கச்செய்த பன்றி வந்து
எதிர்த்தது என்பதாம்.]

இ-ள். தங்கமுடி - தங்கக்கிரீடத்தையும், தனிவெண் கவிகை - ஒப்பற்ற வெள்ளைக்குடையையும் உடைய, திரிசங்கு மகற்கு எதிரே - திரிசங்குவினுடைய புத்திரனை அரிச்சந்திரமகாராஜனுக்கு முன்னே, திங்கள் என - சந்திரனைப்போல, தவளம் திகழ் - வெண்மை நிறமாக விளங்குகின்ற, முத்து ஒளி சிந்தும் - முத்தின் ஒளியை வீசுதலை உடைய, மருப்பு அதனுல் - கொம்பினுலே, வெங்கண் மதக்களிறும் - வெவ்விய கண்களை உடைய மதயானைகளையும், பலவில் செருவென்ற - பல வில்லாளிகளைப் போர்செய்து வென்ற, பரித்

திரளும் - குதிரைக் கூட்டங்களையும், பங்கம் உற - பங்கப்பட, பல பஞ்சு படுத்திய - பலவிதமான பஞ்சுபோல் பறக்கச்செய்கிற, பன்றி எதிர்ந்ததுவே-பன்றி வந்து முனைந்தது. எ-று. ஏ - ஈற்றசை. (சுரு)

வேயின்மிகுத்தெழுமால்வரையெட்டினுமீதுவிசைப்புறவே
பாயுமுகிற்குலமேழையுமப்பொடுபாரில்விழச்சிதறும்
வாயினுரைத்திசைநாலுமிறைத்துயர்வானுமிறைக்கும்விழித்
தீயின்மணித்திரைநீர்வடவைக்கனல்சேரவெரித்திடுமே.

[அந்தப்பன்றி எட்டு மலைகளின்மேலும் வேகமாய்ப்பாயும், மேகக்கூட்டங்கள் ஏழையும் நீரோடு பூமியில் விழும்படிச் சிதறுவிக்கும் தன் வாய் நுரையை நாலு திசையிலும் சிந்தி ஆகாயத்திலும் சிதறுவிக்கும், கண்களிலே தோன்றுகிற நெருப்பினாலே கடலையும் வடவாமுகாக்கினியையும் எரித்துவிடும் என்பதாம்.]

இ-ள். வேயின் - மூங்கிலோடு, மிகுத்து எழும் - மிகுதியாக வளர்ந்துள்ள, மால்வரை எட்டினும் - பெரிய மலைகள் எட்டினும், மீது - அவற்றின் மேலே, விசைப்புறவே பாயும் - வேகம்கொண்டு பாயும்; முகில் குலம் ஏழையும் - (இன்னும்) மேகக்கூட்டங்கள் ஏழையும், அப்பொடு பாரில் விழச்சிதறும் - நீரோடு பூமியில் விழும்படிச் சிதறுவிக்கும்; வாயில் நுரை - தன் வாயிலுள்ள நுரையை, திசை நாலும் இறைத்து - நாலு திக்கிலுஞ் சிந்தி, உயர்வானும் இறைக்கும் - உயர்ந்த ஆகாயத்திலும் சிந்தும்; விழித்தீயின் - கண்களில் தோன்றுகிற நெருப்பினாலே, மணித்திரை நீர் - முத்துக்களை வீசுகிற அலையை உடைய கடலையும், வடவைக்கனல் - வடவை நெருப்பையும், சேர எரித்திடுமே - ஒருசேர எரிக்கும். எ-று. ஏ - ஈற்றசை. (சுசு)

ஆடன்மதத்திருநாலுதிசைக்களிறானவையத்தனையுங்
கோடதனிற்கரமீதுறவைத்துடல்கூசிவெருக்கொளவே
சேடன்முதற்படுவாளரவத்தலைசோரநடுக்குறவே
வோடும்விசைத்தெழுநீள்புவியைப்புனலூறநெரித்துழுமே.

[எட்டுத்திக்கு யானைகளும் பாரந்தாங்காமல் சுமந்து உடல்கூசிப் பயப்படவும், ஆதிசேஷன் முதலிய நாகங்களின் தலை நடுக்கவும், அந்தப் பன்றி ஓடும், விசைத்து எழும், நீண்ட பூமியை ஜலம் ஊறும்படிக் கிண்டும், என்பதாம்.]

இ-ள். ஆடல் - வலிமை பொருந்திய, மதத்து - மதங்கொண்ட, இருநாலு திசைக்களிறானவை - எட்டுத் திக்குகளிலும் உள்ள யானைகளானவை, அத்தனையும் - அத்தனையும், கோடதனில் - கொம்புகளில், கரம்மீதுற வைத்து-தன் துதிக்கைகளை மேலே பொருந்தும்படி வைத்து, உடல்கூசி - (சுமந்தும் தாங்கமுடியாமல்) உடம்புகூசி, வெருக்கொளவே - (இது எதனால் இப்படி திடீரென்று இந்தப்பாரம் ஏற்பட்டதென்று) பயப்படவும், சேடன் முதல்-ஆதிசேஷன் முதல், படு - பொருந்திய, வாள் அரவத்தலை - ஒளியையுடைய சர்ப்

பங்களின் தலைகள், சேர நடுக்குறவே - ஒருமிக்க நடுங்கவும், ஓடும் - ஓடும், விசைத்து எழும் - வேகங்கொண்டு கிளம்பும், நீள்புவியை - பெரிய பூமியை, புனலூற - நீர் பெருகும்படிக்கு, நெரித்துழுமே - கிழித்து முகத்தினால் கிண்டும். எ-று. ஏ - ஈற்றசை.

கோடதனில் காம் வைத்தல், பெரும்பாரம் சுமக்க முடியாமல் யானை துதிக்கையைக் கொம்பில் வைத்துச் சுமக்கும்; அட்டகஜங்களாவன:—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம். அட்ட நாகங்களாவன:—அனந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகா பதுமன், சங்கபாலன், குளிகன். அட்டகஜங்களும் அட்ட நாகங்களும் பூமியைச் சுமப்பதாகப் புராணம் கூறும். (கூஎ)

ஊறுபடுத்திடுபாகர்செலுத்தியவோடைமதக்கரியை
நீறுபடுத்திடும்வீரர்நடத்தியநீளிரதத்தினையே
கூறுபடுத்திடும்வாதுவரெற்றியகோலவயப்பரியைச்
சேறுபடுத்திடுமாமகரத்திரள்சேருமளக்கரையே.

[மதயானைகளை நீருக்கிவிடும், தேர்களைப் பிளந்து பிளந்து எறியும்,
குதிரைகளைக் கடலிற் புகுத்திக் கடலைச் சேருக்கிவிடும்
என்பதாம்.]

இ-ள். ஊறுபடுத்திடு - சத்துருக்களைக் கொலைசெய்யும், பாகர் - யானைப் பாகர்கள், செலுத்திய - செலுத்திய, ஓடை மதக்கரியை - முகபடாத்தை அணிந்த மதயானைகளை, நீறு படுத்திடும் - அழித்துவிடும், வீரர் - வீரர்கள்' நடத்திய - செலுத்திய, நீளி ரதத்தினையே - உயர்ந்த தேர்களை, கூறுபடுத்திடும் - பிளந்து பிளந்து எறியும், வாதுவர் எற்றிய - குதிரை வீரர்கள் செலுத்திய, கோலவயப்பரியை - அழகான வெற்றிகொண்ட குதிரைகளைக்கொண்டு, மாமகரத்திரள் சேரும் அளக்கரை - பெரிய மச்சங்கள் பொருந்தி யிருக்கின்ற கடலை, சேறு படுத்திடும் - சேருக்கும். எ-று. ஏ - ஈற்றசை.

வெருக்கொளவே, நடுக்குறவே, என்றதில் உள்ள ஏகாரங்கள் அசைகள். ()

அனர்த்தம்விளைக்கவிடுத்ததவத்தனளித்தவுரைப்படியே
சினத்துவெரித்துமதக்கரிகற்கிதிடுக்கிடவுற்றணுகி
யினத்துரகத்தருணக்கனதத்திரதத்தினையெற்றுகெனு
மனத்தினினைத்துவலத்தபுறத்தின்மருப்பையொடுக்கியதே.

[கெடுதலைச்செய்ய முனிவன் அனுப்பிய பன்றி அவன் உத்தரவுப்படி
கோபமும் வெறியுங்கொண்டு யானைகளும் குதிரைகளும் திடுக்கிடச்
சென்று, கூட்டமான குதிரை பூண்ட சிவந்த பொன்மயமான
இரதத்தை உடைக்க மனத்தில் நினைத்து வலது கொம்
பைச் சாய்த்துக்கொண்டு சென்றது என்பதாம்.]

இ-ள். அனர்த்தம் விளைக்க - கெடுதலைச்செய்ய, விடுத்த - அனுப்பின, தவத்தன் அளித்த உரைப்படியே - முனிவர் கொடுத்த உத்தரவுப்படியே

சினத்து வெறித்து - சினங்கொண்டு வெறிகொண்டு, மதக்கரி - மதயானைகளும், கற்கி - குதிரைகளும், நடுக்கிட உற்றுருவி - பயப்படும்படிப்போய் நெருங்கி, இனத்துரகத்து - கூட்டமான குதிரைபூண்ட, அருணம் - சிவந்த, கனகத்து - பொன்னாலான, இரதத்தினை - இரதத்தை, எற்றுகென - உடைக்கவேணுமென்று, மனத்தில் நினைத்து - தனது மனதிலே எண்ணி, வலத்த புறத்தின் மருப்பை - வலது புறத்தில் உள்ள கொம்பை, ஒடுக்கியதே - சாய்த்துக்கொண்டு சென்றது. எ-று. ஏ - ஈற்றசை.

'கல்கி' என்பது 'கற்கி' என்றாயது; கற்கி - குதிரை, இது வல்லொற்று மிக்க தத்தச் சந்த விருத்தம். (௬௯)

உதித்ததுணைப்பிறையொத்தமருப்பையொடுக்கவுணர்ச்சிபெறுக்
கதித்தபருத்தசிலைக்குளடுத்தொர்கனற்கணைதொட்டுவிட
வெதிர்த்தகிருட்டியினெற்றியின்முற்றியெடுத்தகலக்கொடுபோய்
விதிர்த்துடலுட்கிவெருக்கொளமற்றொருவெற்பிடையுய்த்ததுவே

[பன்றி தன் கொம்பைச் சாய்த்துக்கொண்டு வரும் குறிப்பை அறிந்த
அரிச்சந்திரன் ஒரு கனற்கணையைவிட அப்பன்றியின் நெற்றியில்
தைத்து அதைத் தூக்கிக்கொண்டுபோய் நடுங்கிக் கூசிப்
பயங்கொள்ளும்படி மற்றொரு மலையில் போய்
விழும்படிச்செய்தது என்பதாம்.]

இ-ள். உதித்த - பிறந்த, துணைப்பிறை ஒத்த - இரண்டு சந்திரபிறை போன்ற, மருப்பை ஒடுக்க - கொம்பை ஒடுக்கவே, உணர்ச்சிபெறு - அரிச்சந்திரன் அதன் குறிப்பை அறிந்து, கதித்த - கெட்டியான, பருத்த-பெரிதாகிய, சிலைக்குள் - தனது வில்லுக்குள்ளே, அடுத்து ஓர் கனல் கணைதொட்டுவிட - சமீபித்து ஒரு அக்கினிமயமான அம்பைத் தொடுத்து எய்ய, எதிர்த்த கிருட்டியின் - எதிர்த்து வந்த பன்றியின், நெற்றியில் முற்றி - நெற்றியிலே பட்டு' எடுத்து - அதைத்தூக்கி, அகலக்கொடுபோய் - தூக்கொண்டுபோய், விதிர்த்து- நடுங்கி, உடல் உட்கி - உடல் கூசி, வெருக்கொள - பயப்படும்படி, மற்றொரு வெற்பிடை - வேறொருமலையிலே, உய்த்ததுவே - கொண்டுபோய் எறிந்தது. எ-று. ஏ - ஈற்றசை.

'உதித்த துணைப்பிறை ஒத்த' என்றது இல்பொருள் உவமை அணி, இது வல்லொற்றுக்கள் மிக்க 'தத்தச், சந்த விருத்தம். (௭௰)

உய்த்ததனீளிடைபத்துளயோசனையுற்றெழுமால்வரைமேல்
வைத்ததும்வாய்வழிதக்கிபசோரியில்வட்டணையாவுமுலா
மெய்த்தவன்வாழ்பொழிலுட்புகவோடலும்விட்டபதாதியெலா
மொய்த்தனகாவலனைப்புடைசூழ்தரமுற்கிளர்வாரிதிபோல்.

[அந்தப்பாணம் பெரிய மலையில் கொண்டுபோய் பன்றியை எறிந்த உடனே, வாய்வழி கக்கின இரதத்திலே, சக்கிராகிருதியாய்ச் சுழன்று, முனிவர் வசிக்கின்ற சோலைக்குள்ளே புகுவதற்காக ஓடவும், முன்னே பயந்து ஓடின சேனைகள் எல்லாம் ஆரவாரித்து எழுகின்ற கடல்போல அரசனை வந்து சூழ்ந்துகொண்டன, என்பதாம்.]

இ-ள். உய்த்து - தூக்கிக்கொண்டுபோய், அது - அந்தப் பாணமானது, நீள் - நீண்டுள்ள, இடை - அகலமுள்ளதுமான, பத்துளயோசனை - பத்து யோசனை, உற்றெழு - பொருந்தி உயர்ந்துள்ள, மால்வரைமேல் - பெரிய மலை மேலே, வைத்ததும் - போட்டவுடனே, வாய்வழி கக்கிய - வாய்வழியாகக் கக்கின, சோரியில் - ரத்தத்தில், வட்டணையா உழலா - சக்கரமாகச் சுழன்று, மெய்த்தவன் - அந்த மெய்யான தவமுனிவர், வாழ்பொழிலுள் - வாசம் பண்ணுகிற சோலைக்குள், புக ஓடலும் - புகுதற்காக ஓடினபொழுது, விட்ட பதாதி எலாம் - முன்னே பயந்து ஓடிவிட்ட சேனைகள் எல்லாம், காவலனை - அரிச்சந்திரமகாராஜனை, முற்கிளர் வாரிதிபோல் - முன்னே பொங்கி எழுந்த கடலைப்போல, புடை சூழ்தா - பக்கங்களில் எல்லாம், சூழ, மொய்த்தன - நெருங்கின; எ-று. 'உழலா' செய்யா என்னும் வாய்பாட்டு வினை எச்சம். (எக)

கடற்படைசுற்றியிரைத்திறைபத்மகழற்றுணையைத்தொழலுந்
தடக்கையமைத்துமனத்திலலைத்தறவிர்த்திரதத்தினைமுன்
நடத்தியெதிர்த்தகிருட்டிவதைக்கநடுத்தனுவைத்துநிணக்
குடற்கடெறித்துவிற்றப்படைபட்டகொலைக்களமுற்றனனே.

[அரிச்சந்திரனைக் கடல்போன்ற சேனை சூழ்ந்து முழங்கிப் பாதங்களை வணங்குதலும், கையால் அமைத்து அவர்கள் மனப்பயத்தை நீக்கி, எதிர்த்து வந்த பன்றியைக்கொல்ல, வில்லின் நடுவில்வில் கையை வைத்துக் கொண்டு கொழுப்பும், குடல்களும், தெறித்து வெற்றி பொருந்திய சேனை அழிந்த கொலைக்களத்துக்கு வந்தான், என்பதாம்.]

இ-ள். கடல்படை - கடல்போன்ற சேனைகள், சுற்றி - சுற்றிக்கொண்டு, இரைத்து - சப்தித்து, இறை - அரிச்சந்திரமகாராஜனின், பத்மகழல் துணையை - தாமரை மலர்போன்ற பாதங்கள் இரண்டையும், தொழலும் - வணங்கும்போது, தடக்கை அமைத்து - தனது நீண் கையால் அமையச்செய்து, மனத்தில் - அவர்கள் மனத்தில் உள்ள, அலைத்தல் தவிர்த்து - சஞ்சலத்தையும் பயத்தையும் நீக்கி, இரதத்தினை முன் நடத்தி - தேரை முன்னே செலுத்தி, எதிர்த்த கிருட்டி வதைக்க - எதிர்த்து வந்த பன்றியைக்கொல்ல, நடுதனு வைத்து - வில்லின் நடுவைக் கையில் பிடித்துக்கொண்டு, நிணக்குடல்கள் தெறித்து - நிணமும் குடலும் சிதறி, விறல் படை பட்ட - வலிமை பொருந்திய தனது சேனை அழிந்த, கொலைக்களம் - கொலைக்களத்திற்கு, உற்றனனே - வந்தான். எ-று. ஏ - ஈற்றசை.

'மனத்தில் அலைத்தல்' என்றது பன்றியைக்குறித்த பயத்தையும், பன்றியைக்கொல்லாது அதற்குப் பயந்து ஓடியதையும் குறித்து அரசன் எங்கே சினந்து கொள்ளுகின்றானோ என்ற வியாகூலத்தையும்; என்பதாம். (எ௨)

புரவலனப்படைகரிபரிபட்டதொர்புதுமைதனைத்தெரிசித்
தாகாவிப்படிவிளைவதெனக்குனதருளினெறிச்செயலென்
றிருகாம்வைத்திருசெவியைமறைத்தெழின் முடியையசைத்தெ
தூரகநடத்திடவிரைவினிழுத்தனசுடரிரதத்தினையே. [திரே

[அரசன் அந்தச் சேனைகளிலே யானைகளும் குதிரைகளும் செத்துக்கிடக்கும் ஆச்சரியத்தைக்கண்டு, அரகரா இப்படி நேர்ந்ததும் உன் அருட்செயலென்று இரண்டு கையையும் காதிலே வைத்து மறைத்துக் கொண்டு, அழகிய தலையை அசைத்துக்கொண்டு முன்னே தேரைச்செலுத்த குதிரைகள் தேரை இழுத்தன என்பதாம்.]

இ-ள். புரவலன் - அரிச்சந்திரமகாராஜனானவன், அப்படை - அந்தச் சேனையும், கரி - யானையும், பரி - குதிரையும், பட்டதோர் புதுமைதனை-செத்துக்கிடக்கின்ற ஆச்சரியத்தை, தெரிசித்து - கண்டு, அரகா - அரகரா!, இப்படி விளைவது - இப்படி ஆகிறது, எனக்கு - எனக்கு, உனது அருளின் - உன்னுடைய கிருபையின், நெறிச்செயல் என்று - வழியாகிய செய்கை என்று, இருகாம் வைத்து - தனது இரண்டு கைகளாலும், இருசெவியை மறைத்து- இரண்டு காதுகளையும் மூடிக்கொண்டு, எழின்முடியை அசைத்து - அழகான தலையை அசைத்து, எதிரே தூரக நடத்திட - அந்தப் பன்றியைக்கொல்ல முன்னே குதிரைகளைச்செலுத்த, சுடர் - பிரகாசம் பொருந்திய, இரதத்தினை- தேரை, விரைவின் - வேகமாக, இழுத்தன - அந்தக்குதிரைகள் இழுத்தன. எ-று. ஏ - ஈற்றசை.

'இருகாம் வைத்து இருசெவி மறைத்தது; பிராணவேதனைப்படும் யானை, குதிரை, சேனை இவைகளின் சப்தம் காதில் விழாதபடிக்கு என்று கூறுவர் ()

ஏனமவிழுந்தயர்மால்வரைகண்டதினேறியிழிந்தகலப்
போனதுணர்ந்தடிமீதுதொடர்ந்துபுகாதவனங்கள்புகுந்
தானனமுந்திருமேனியுநுண்பொடியாடமடந்தையுடன்
மானவன்வந்தொருவாசநெடும்புனல்வாவியணைந்தனனே.

[பன்றி விழுந்த உயர்ந்த மலையைக்கண்டு, அதன்மேல் ஏறி இறங்கி, பன்றி போனது அறிந்து முகமெல்லாம் உடம்பெல்லாம் நுண்பொடி படிய, சந்திரவதியுடனே அரிச்சந்திரன் நறுமணங்கொண்ட நீண்ட நீர் நிறைந்த குளத்தைச்சார்ந்தான் என்பதாம்.]

இ-ள். ஏனம் - பன்றியானது, விழுந்து அயர் - விழுந்து சோர்ந்த, மால் வரை கண்டு - உயர்ந்த மலையைக்கண்டு, அதின் ஏறி - அதிலே ஏறி, இழிந்து.

இரங்கி, அகலப்போனது உணர்ந்து - பன்றி அதைவிட்டு அப்பால் போனதை அறிந்து, அடிமீது தொடர்ந்து - அதன் காலடிச் சுவட்டைக்கண்டு அதையே தொடர்ந்து, புகாத வனங்கள் புகுந்து - போகமுடியாத வனங்களுக்குள் எல்லாம் போய், ஆனனமும் - முகமும், திருமேனியும் - அழகிய உடம்பும், நுண்பொடி ஆட - நுண்ணிதான தூளிகள் பட, மடந்தையுடன் - சந்திரவதியுடன், மானவன் - அரிச்சந்திரமகாராஜன், வந்து - வந்து, ஒரு - ஒரு, வாசம்-வாசனை பொருந்திய, நெடும் - நீண்ட, புனல்வாவி - நீர் நிறைந்த குளத்தை, அணைந்தனனே - சேர்ந்தான். எ-று. ஏ - ஈற்றசை.

(மானம் - பெருமை) மானத்தையுடையவன், மானவன் - பெருமை பொருந்தியவன் என்பது பொருள் ஈண்டு அரிச்சந்திரமகாராஜனைக் குறித்தது.

கானின்மிசைந்தெழு தாமரையிற்படர் காவிகளிற்படருந்
தேனின்முழக்கொலி நாலுதிசாதிசைசேரவியப்புறுமால்
மீனின்முழங்கொலியூழிதனிற்கடைவேலையையொப்பதுநீள்
வானின்முழக்கொலிபோல்வனசக்கரவாகமிரைப்பதுவே

[தாமரையிலும் நீலோற்பலங்களிலும் மொய்க்கும் தேன் வண்டுகளின்
பாட்டொலி நான்கு திசைகளிலும் சென்று அதிசயத்தை உண்
டாக்கும், அந்தக்குளத்தில் உள்ள மீன்கள் அலம்புகின்ற
சப்தமானது ஊழிகாலத்து கடைவெள்ளத்துச்
சப்தத்தை ஒத்திருக்கும், சக்கரவாகப்
பட்சிகள் சப்திப்பது ஆகாய
முழக்கம்போலிருக்கும்
என்பதாம்.]

இ-ள். கானின் - காட்டைப்போல, மிசைந்து எழு - மேற்கிளம்பி உயருகின்ற, தாமரையில் - தாமரைப் பூக்களிலும், படர் காவிகளில் - பரவியுள்ள நீலோற்பல மலர்களிலும், படரும் தேனின் - மொய்க்கும் தேன் வண்டுகளின், முழக்கு ஒலி - முழக்குகின்ற பாட்டுகளின் ஒலியானது, நாலு திசா திசை-நான்கு திக்குத் திசைகளிலும், சேர - போய்ச்சேர, வியப்புறுமால் - அதிசயத்தைத் தருவதாய் இருக்கும், மீனின் முழக்கொலி - அந்தக்குளத்தில் உள்ள மீன்களின் அலம்புதலினால் உண்டாகும் சப்தமானது, ஊழிதனில் - ஊழிக்காலத்திலே, கடைவேலையை - வரும் யுகாந்த வெள்ளத்தை, ஒப்பது - ஒத்து ஒலிப்பதாகும், சக்கரவாகம் - சக்கரவாகப் பட்சிகள், இரைப்பது - சப்திப்பது, வானின் முழக்கொலி - வானத்தில் முழங்குகின்ற சப்தத்தை, போல்வன-போன்றிருப்பனவாம். எ-று. ஏ - ஈற்றசை.

'கானின் மிசைந்தெழு' என்பதற்கு காட்டிலே தேனையுண்டு கிளம்பி வந்த என்றும் பொருள் கூறுவர். (எ௫)

தமரநெடுந்திரைபெறிகுரையும்பலசகுனமுழங்கிரையு
மமரமடந்தையர்குடைபொலியும்பலவருவிழுங்கலியுங்

திமிரமதக்கயநிறைவுறமொண்டறல்சிதறதிர்வுங்குரவங்
கமழ்தருமவ்வனமுனிவர்கமண்டலுகளகளனுந்தொனியும்.

[அவ்விடத்தே உண்டாகும் பல சப்தங்களைக் கூறுகின்றார்.]

இ-ள். தமர நெடுந்திரை எறி - முழக்கத்தை உடைய பெரிய அலைகள் வீசுகின்ற, குரையும் - சப்தமும், பல சகுன முழங்கிலையும் - பல பட்சிகள் முழங்குகின்ற சப்தமும், அமர மடந்தையர் - தேவகன்னிகைகள், குடை ஒலியும் - நீராடுகிற சப்தமும், பல - அநேக, அருவி - நதிகள், விழுங்கலியும்-விழுகின்ற சப்தமும், திமிரம் - இருள் நிறமான, மதக்கயம் - மதயானைகள், நிறைவுறமொண்டு - துதிக்கையால் நிறைய மொண்டு, அறல் சிதறு அதிர்வும்- நீரைச் சிந்துகின்ற சப்தமும், குரவங்கமழ் தரும் - குரவமலர்கள் பரிமளிக்கின்ற, அவ்வனமுனிவர் - அந்த வனத்து முனிவர்கள், கமண்டலு களகளனுந் தொனியும் - நீர் மொள்ளுவதனால் கமண்டலத்தில் உண்டாகும் களகளவென்னும் சப்தமும். எ-று.

இச்செய்யுள் குளகம்; வருஞ் செய்யுளோடு பொருள் முடிவு பெறுகின்றது. (எசு)

முருகுகுடைந்தளிமுரலமிகுந்தொனிமுதலைகடந்தமின்வந் [ண்
தருகுசெறுந்தொனிகுடநிகர்வெள் வளையகடுளையுந்தொனிவெ
குருகிரியுந்தொனிசிரல்கள்விழுந்தொனிகொடுவரிவந்துபுனற்
பருகுமிருந்தொனிபறவைகளின்றொனிபகலிரவுந்தணியா.

[இச்செய்யுளிலும் முன்செய்யுளைத் தொடர்ந்து அங்கு உண்டாகும் சப்தங்களைக் கூறுகின்றார்.]

இ-ள். முருகு குடைந்து - தேனைக்குடைந்து உண்டு, அளிமுரல மிகுந்தொனி - வண்டுகள்பாட மிகுகின்ற சப்தமும், முதலைகள் - முதலைகள், தந்தமின் வந்து - தங்களுக்குத் தாங்களே வந்து, அருகு செறுந்தொனி - பக்கங்களிலே சீறிச் சண்டைசெய்யும் ஓசை, குட நிகர் - குடத்தை ஒத்த, வெள்வளை - வெள்ளைச் சங்குகள், அகடு உளையும் தொனி - கருப்பவேதனைப் படுகின்ற சப்தமும், வெண் - வெள்ளைகுருகு, இரியுந்தொனி - குருகுகள் ஓடுகிற சப்தமும், சிரல்கள் விழும் தொனி - மீன்கொத்திப் பறவைகள் மீன்மேல் விழுகின்ற சப்தமும், கொடுவரி - புலிகள், வந்து - வந்து, புனல் பருகும்- நீரைக்குடிக்கும், இருந்தொனி - பெரிய சப்தமும், பறவைகளின் தொனி- பல பட்சிகளின் தொனியும், பகல் இரவும் - பகலும் இராத்திரியும், தணியா- நீங்காதிருக்கின்றன. எ-று. (எஎ)

அறத்தவர்வற்கலையிற்றுவர்நித்தமலர்ப்பொழில்பொற்பிரசு
மறத்தகளிற்றின்மதத்திளெழுக்குமடக்கவரிப்பொழிபா
னிறத்திடுபச்சைமணித்துகிர்வச்சிரநித்திலமுட்களலக்
கறத்தவெளுத்தசிவத்தபசுத்தகனிப்பதெவர்க்கெளிதே.

[அந்தக் குளத்துள்ளே காவிவேஷ்டிகளின் செவப்பும், பொன் நிறமான தேனின் பொன் நிறமும் யானையின் மதத்தின் கருப்புநிறமும் எருமைப்பாலின் வெண்மை நிறமும், பச்சை, ரத்நம், பவளம், வயிரம், முத்து, முதலிய இவைகள் விளங்குதலினாலும் அந்தக் குளத்து நீர் கருத்ததென்றும், வெளுத்ததென்றும் செவந்ததென்றும், பசுமையானதென்றும் எவராலும் சொல்ல முடியாது என்பதாம்.]

இ-ள். அறத்தவர் - துற அறத்தார்களுடைய, வற்கலையில் - காவிவேஷ்டிகளின், துவர் - செவப்பு நிறமும், நித்த மலர்ப்பொழில் - தினந்தினம் மலருகின்ற மலரை உடைய பூஞ்சோலைகளிலுள்ள, பொற்பிரசம் - பொன் நிறமான தேனும், மறத்த களிற்றின் - வலிமையை உடைய யானையின், மதத்தின் ஒழுக்கும் - மதத்தினது பெருக்கும், மடக்கவரி - இளமையான எருமையின், பொழிபால் - பொழிகின்றபாலும், நிறத்திடு - பிரகாசிக்கின்ற, பச்சை - மரகதமணியும், மணி - ரத்நமணியும், துகிர் - பவளமும், வச்சிரம் - வயிரமணியும், நித்திலம் - முத்துக்களும், உள்களுல - உள்ளே விளங்குகிறதினாலே, கறுத்த - (அந்த வாவியின் நீரானது) கறுப்பானது, வெளுத்த - வெண்மையானது, சிவத்த - சிவப்பானது, பசுத்த - பசுமையானது, (என்பதைக்) கணிப்பது - நிச்சயித்துக் காண்பது, எவர்க்கு எளிது - எவர்களுக்கு லேசானது. எ-று. ஏ - ஈற்றசை. தேற்றம் என்பாரும் உண்டு.

எவராலும் அந்த வாவியின் நிறம் இன்னதென்று கூறுவது முடியாது என்பதாம். 'மடக்கவரி' இளமையான கவரி மானின்பால் எனவும் பொருள் கொள்ளலாம்; யானை மதம் கறுநிற முடையதென்பர் இதுபற்றியே பிரபுலிங்க லீலை, வாட்போக்கிக் கலம்பகம் கூறினர். (எஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

முளரிசெங்குமுதநீலமுண்டகங்குவளைவெள்ளை
கிளர்நறுமலர்களெல்லாங்கிளையொடுமலியப்பூத்த
வளவிலாமதியுமீனுமருக்கருமலியவண்டம்
வளர்புவிதனினும்வேதாவகுத்தனபோன்றவன்றே.

[அந்தப் பொய்கையில் தாமரை, செவ் அல்லி, நீலோற்பலம், செந்தாமரை கருங்குவளை இன்னும் வெள்ளையாகிய நல்ல மலர்கள் எல்லாம் தம் தம் இனத்தோடு பூத்திருப்பது அளவில்லாத சந்திரும், நட்சத்திரங்களும் சூரியரும் நிறைந்த ஆகாயத்தை மனிதர் சஞ்சரிக்கும் உலகத்தில் பிரமன் சிருஷ்டித்ததுபோல் இருந்தது என்பதாம்.]

இ-ள். முளரி - தாமரை, செங்குமுதம் - செவ்வல்லி, நீலம் - நீலோத்பலம், முண்டகம் - செந்தாமரை, குவளை - கருங்குவளை, வெள்ளை - வெள்ளை நிறமாக, கிளர் - விளங்குகின்ற, நறுமலர்கள் எல்லாம் - பரிமள மலர்கள் எல்

லாம், கிளையொடு - தம் தம் இனத்தோடு, மலியப்பூத்த - மிகுதியாகப் பூத்திருப்பதானது, அளவிலாமதியும் - அளவில்லாத சந்திரரும், மீனும் - நட்சத்திரங்களும், அருக்கரும் - சூரியர்களும், மலிய - மிகுதியாகிய, அண்டம் - ஆகாயத்தை, வளர்புவி தனினும் - (மனிதர் சஞ்சரிக்க) வளர்ந்துள்ள பூமியிலும், வேதா - பிரம்மனானவன், வகுத்தன போன்ற - சிருஷ்டித்தன போலிருந்தன. எ-று. அன்று, வ - அசைகள்.

முளரி - வெண்தாமரை, முண்டகம் - செந்தாமரை, இது விளச்சீர் மாச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் என்னும் ஆறுசீர்கொண்ட அடிகளாலாகிய ஆசிரிய விருத்தம். (எக)

மண்கொளாததனுணீரும்வளைகளுமலருமீனும்
விண்கொளாததனுள்வைகும்வெண்குருகன்னநாரை
பண்கொள்வாய்வண்டுவைகும்பதுமத்தின்பரப்புநோக்கிற்
கண்கொளாமனமுங்கொள்ளாகாவியுமன்னதேயால்.

[அந்த வாவியில் உள்ள நீரும், சங்கும், மலர்களும் மீன்களும் இந்த உலகம் கொள்ளாது, அந்தக்குளத்தில் வசிக்கும் வெள்ளைக்குருகும், அன்னமும், நாரையும் ஆகாசங்கொள்ளாது, தாமரையின் மகுதி கண்கொள்ளாது மனமுங்கொள்ளாது நீலோற்பலமும் அந்தத் தன்மையதே என்பதாம்.]

இ-ள். அதனுள் நீரும் - அந்த வாவியில் உள்ள ஜலமும், வளைகளும் - சங்குகளும், மலரும் - புஷ்பங்களும், மீனும் - மீன்களும், மண் கொளா - பூமியிடம் போதாதபடி மிகுந்திருக்கும், அதனுள் - அந்த வாவியிலே, வைகும் - வசிக்கும், வெண்குருகு - வெள்ளைக் குருகுகளும், அன்னம் - அன்னப்பட்சிகளும், நாரை - நாரைகளும், விண்கொளா - ஆகாயமே இடம்போதாமல் மிகுந்திருக்கும், பண்கொள் - இராகத்தைக் கொண்டிருக்கின்ற, வாய் - வாயை உடைய, வண்டு - வண்டுகள், வைகும் - வசிக்கின்ற, பதுமத்தின் - தாமரையின், பரப்பு நோக்கில் - விரிவை நோக்கினால், கண்கொளா - கண்கொள்ளாது மிகுந்திருக்கும், மனமுங்கொள்ள - மனதுக்கும் அடங்காது மிகுந்திருக்கும், காவியும் - நீலோற்பலமும், அன்னதேயால் - அப்படிப்பட்ட தன்மை உடையதாகவே இருக்கும். எ-று. ஏகாரம் - தேற்றம், ஆல் - ஈற்றசை. (அ0)

மீதெலாந்தரங்கமஃதின்மேலெலாங்கமலப்போது
போதெலாஞ்சங்கஞ்சங்கின்புடையெலாம்பொருந்துதாது
தாதெலாம்வண்டுவண்டின்றாளெலாஞ்செழுந்தேன்மற்று
மீதலாவில்லைபந்தவிரும்புனற்றடத்திலம்மா

[அதன்மேல் எல்லாம் அலைகள் அதற்குமேல் தாமரை அதற்குமேல் சங்கம், அதன் பக்கமெல்லாம் மகரந்தம், தாதெல்லாம் வண்டு, அதன் கால் எல்லாம் தேன் இவைகள் அல்லாமல் வேறு ஒன்றும் இந்தக்குளத்தில் இல்லை என்பதாம்.]

இ-ள். மீதெலாந்தரங்கம் - அந்த வாவியின் மேலெல்லாம் அலைகள், அஃதின் மேலெலாம் - அந்த அலைகள் மேலெல்லாம், கமலப்போது - தாமரை

மலர், போதெலாம் - அந்தத் தாமரைப்பூவெல்லாம், சங்கம் - சங்குகள், சங்கின் புடை எலாம் - சங்கின் பக்கங்களில் எல்லாம், பொருந்து தாது - பொருந்திய மகரந்தங்களிருக்கும், தாது எலாம் - அந்த மகரந்தங்களில் எல்லாம், வண்டு - வண்டுகளிருக்கும், வண்டின் தாளெலாம் - வண்டினுடைய கால்களில் எல்லாம், செழுந்தேன் - செழுமையான தேனிருக்கும், மற்றும் ஈதலால் - மற்றும் இவைகள் அல்லாமல், அந்த இரும்புனல் தடத்தில் - அந்தப் பெரிய நீர் நிறைந்த வாவியில், இல்லை - வேறு வகைகள் இல்லை எ-று. அம்மா - அசை. (அக)

பங்கயமுகமுங்கண்ணும்பாதமும்பணைத்தபாரக்
கொங்கையுஞ்சைவலப்பூங்கூந்தலுங்குமுதவாயுஞ்
செங்கயற்கண்ணும்வள்ளைத்திருநெடுங்குழையுங்காட்டி
மங்கைபுட்கரணியென்பாள்வள்ளலையுள்ளங்கொண்டாள்.

[அந்த வாவி என்னும் மங்கை தாமரை மலராகிய முகமும் பாதமும் கண்களும் பெரிய முலையும் பாசியாகிய கூந்தலும், குமுதமாகிய வாயும், செவந்த கயல் மச்சமாகிய கண்ணும், வள்ளையாகிய அழகிய காதுகளையும் காட்டி அரிச்சந்திரனை உள்ளத்தில் கொண்டாள் என்பதாம்.]

இ-ள். மங்கை புட்கரணி என்பாள் - பெண்ணாகிய புட்கரணி என்னும் பெயருடையவள், பங்கயம் - தாமரையாகிய, முகமும் - முகமும், கண்ணும் - கண்களும், பாதமும் - பாதங்களும், பணைத்த - திரண்ட, பார - கனமான, கொங்கையும் - கொங்கைகளும், சைவலம் - பாசியாகிய, பூங்கூந்தலும் - அழகிய கூந்தலும், குமுதம் - குமுத மலராகிய, வாயும் - வாயும், செம் கயல் - செம்மையான கயல் மச்சமாகிய, கண்ணும் - கண்களும், வள்ளை - வள்ளையாகிய, திரு நெடுங்குழையும் - அழகிய நீண்ட காதுகளையும் காட்டி, வள்ளலை - அரிச்சந்திரமகாராஜனை, உள்ளம் கொண்டாள் - தன் மனதின் உள்ளே கொண்டாள். எ-று.

மங்கையர் அவையவங்கள் போன்ற மலர்களும் பொருள்களும் உடைமையினால் வாவியை மங்கை என்றார். 'உள்ளங்கொண்டாள்' என்றது அரிச்சந்திரனை மனத்திலே நினைத்தாள் என்றும் வள்ளலாகிய அரிச்சந்திரனின் உள்ளத்தைக் கவர்ந்தாள் என்றும் பொருளாகும்; 'அரிச்சந்திரனை உள்ளங்கொண்டாள்' என்றது அரிச்சந்திரனின் உருவம் அத்தடாகத்துள்ளே தோன்றுதலினாற் கூறியதாம்; (அஉ)

வரையடுத்தரியசோதிமணிகொழித்தருவிபாய்ந்த
விரைமலர்ப்பொழிலினீழல்வெண்டிரைமேன்மேன்மோதி
நிரைநிரைத்தரளமுந்திநெடுநிலாவிரிந்தவண்டற்
கரையினைமன்னன்சார்ந்தான் கடலினையருக்கன்சார்ந்தான்.

[அந்தக் குளக்கரையை அரிச்சந்திரன் சேர்ந்தான் சூரியனும் அஸ்தமித்தான் என்பதாம்.]

இ-ள். வரை அடுத்து - மலையை அடுத்து இருந்து, அரிய - அருமையான, சோதி - பிரகாசத்தை உடைய, மணி கொழித்து - ரத்தினங்களைக் கொழித்துக்கொண்டு வரும், அருவி பாய்ந்த - ஆறுகள் பாய்வதான, விரை- வாசனையை உடைய, மலர் - மலர்கள் (நிறைந்த), பொழிலின் நீழல் - சோலையின் நிழலிலே, வெண் திரை - வெள்ளிய அலைகள், மேன் மேன் மோதி- மேலும் மேலும் மோதி, நிரை நிரை - வரிசை வரிசையாக, தாளம் உந்தி-முத்துகளை வீசி, நெடுநிலா - நெடிதான சந்திரிகை, விரிந்த - விரிவதான, வண்டல் கரையினை - சேற்றைக்கொண்ட அந்தக் குளக்கரையை, மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், சார்ந்தான் - சேர்ந்தான், கடலினை - (அப்போது) மேலைக் கடலை, அருக்கன் சார்ந்தான் - சூரியனும் போய்ச்சேர்ந்தான். எ-று.

அரிச்சந்திரன் வாவிக்கரையை அடுத்ததும் சூரியன் மேலைக்கடலைச் சேர்ந்தான் என்றது தொடர்பு நவிற்சி அணி. (அ௩)

யானையுந்தேருமாவுமிழிந்தொருங்கியாருமீண்டித்
தேனையொத்தினியவாவிச்செழும்புனல் குடைந்துண்டாறிக்
கானையுற்றிலங்குதண்பூங்கடிபொழிலிடங்கடோறுஞ்
சேனையுமன்னர்தாமுஞ்செல்வனுமினிதிருந்தார்.

[யானை, தேர், குதிரை முதலிய வற்றினின்றும் இறங்கி எல்லாரும் கூடி வாவிநீரில் ஸ்நானம் செய்து, உண்டு களைப்பாறி அந்தக் காட்டை அடுத்த சோலைகள் எல்லாம் சேனைகளும் அரசர்களும் அரிச்சந்திரமகாராஜனும் இனிது இருந்தார்கள் என்பதாம்.]

இ-ள். யானையும் - யானைகளும், தேரும் - இரதங்களும், மாவும் - குதிரைகளும், இழிந்து - விட்டு இறங்கி, ஒருங்கு - ஒரே மட்டாக, யாரும் ஈண்டி- எல்லோரும் ஒன்று கூடி, தேனை ஒத்து - தேனை ஒப்பாய், இனிய - இனிக்கின்ற, வாவிச் செழும்புனல்-குளத்திலுள்ள செழுமையான நீரில், குடைந்து- ஸ்நானம் செய்து, உண்டு - அந்த நீரைக்குடித்து, ஆறி - இளைப்பாறிக்கொண்டு, கானை உற்று - காட்டைச்சேர்ந்து, இலங்கு - விளங்குகின்ற, தண்- குளிர்ந்த, பூம் - அழகிய, கடிபொழில் - மலர்களின் வாசனையை உடைய சோலைகளின், இடங்கடோறும் - இடங்களில் எல்லாம், சேனையும் - சேனைகளும், மன்னர் தாமும் - அரசர்களும், செல்வனும் - அரிச்சந்திரமகாராஜனும், இனிது இருந்தார் - சுகமாகத் தங்கினார்கள். எ-று. (அச)

தாபமும்புனலுங்கொள்வாந்தாபதர்வந்துமாதர்
தீபமுமயோத்திவேந்துஞ்சேனையுமிருக்கக்கண்டு
கோபமுற்றழன்றுமன்னுகோசிகன்கண்டானுன்னைச்
சாபமிட்டெரிப்பனின்டுசோர்ந்தது நகாதேயென்றார்.

[நீர் அருந்தவந்த முனிவர்கள் அரிச்சந்திரனையும் சந்திரமதியையும்
கண்டு உங்களைக் கௌசிகன் கண்டால் சாபமிட்டு எரிப்பான்
இங்கு நீங்கள் வந்தது தகாதென்றான் என்பதாம்.]

இ-ள். தாபமும் - தாபத்தையும், புனலும் - அதை நீக்க நீரையும், கொள்வார் - கொள்பவர்களாகிய, தாபதர் வந்து - முனிவர்கள் வந்து, மாதர் தீபமும் - பெண்களுக்குத் தீபம் போல்பவளான சந்திரவதியும், அயோத்தி வேந்தும் - அயோத்திக்கு அரசனாகிய அரிச்சந்திரனும், சேனையும் - சேனைகளும், இருக்கக்கண்டு - இருக்கப்பார்த்து, மன்னா - ஓ அரசனே! கோசிகன் கண்டால் - விஸ்வாமித்திரமுனிவர் கண்டால், கோபம் உற்று அழன்று - கோபங்கொண்டு மனம் கொதித்து, உன்னை - உன்னைச் சாபம் இட்டு - சாபங்கொடுத்து, எரிப்பன் - எரித்து விடுவர்; ஈண்டு சார்ந்தது - இங்கே நீ வந்தது, தகாதே என்றார் - தகாத காரியம் என்று சொன்னார்கள். எ-று.

"கோபமுற்று அழன்று" என்பதை தாபதர்க்கு ஏற்றிக் கூறுவாரும் உண்டு. (அரு)

யாமவற்கடிமையன்றோவெம்வயிற்சீற்றமென்னோ
யாமவற்கிழைத்ததீங்குண்டெனினுந்திருத்திப்பின்னைப்
போமதேகருமமென்னாப்புரவலன்புகலக்கேட்டீண்
டாமதேகாண்டியென்னாவருந்தவரகன்றுபோனார்

[அதற்கு அரசன் நாங்கள் எல்லாம் அவருக்கு அடிமையல்லவா, எங்கள்
மேல் அவருக்குக் கோபம் என்ன நாங்கள் அவருக்குச்செய்த தீங்
கிருக்குமானால் அவரைச் சமாதானம் செய்து போவதே
காரியம் என்று சொல்ல அப்படியானால் இனி இங்கு
நடப்பதைத் தெரிந்துகொள் என்று சொல்லிப்
போனார்கள் என்பதாம்.]

இ-ள். யாம் - (அதற்கு அரசன் முனிவர்களை நோக்கி நாங்கள், அவற்கு - அந்த விஸ்வாமித்திர முனிவருக்கு, அடிமை அன்றோ - அடிமைகள் அல்லவோ? எம் வயில் - எம்மிடத்தில், சீற்றம் என்னோ - கோபம் உண்டாதல் என்னகாரணத்தாலோ? யாம் - நாங்கள், அவற்கு - அந்த விஸ்வாமித்திரமுனிவருக்கு, இழைத்த - செய்த, தீங்கு - குற்றங்கள், உண்டு - உண்டு, என்னினும் - என்றாலும், திருத்தி - முனிவர்களைச் சமாதானப்படுத்தி, பின்னை - பிறகு, போமதே - எங்கள் ஊருக்குப்போவதே, கருமம் என்ன - எங்களுக்குக் காரியம் என்று புரவலன் சொல்லக்கேட்டு - அரிச்சந்திரமகாராஜன் சொல்லக் கேட்டு, அருந்தவர் - அரிய தவத்தைச்செய்த முனிவர்கள், ஈண்டு - இவ்விடத்தில், ஆமதே காண்டி என்னா - ஆகப்போகிறதைக் காணக்கடவாய் என்று கூறி, அகன்று போனார் - அவ்விடம் விட்டு நீங்கிப் போனார்கள். எ-று. (அசு)

மாதவரகன்றபின்னர்மாலையம்படாத்துணீங்கிப்
பூதலமென்னுமங்கைப்புதையிருட்படாத்துட்புக்காள்

மேதகுதவத்தின்மிக்கோன்வினைப்படாம்புகுதுமுன்னந்
தீதறுகுணத்தின்மிக்கோன்சித்திரப்படாத்துட்புக்கான்.

[மாலைக்காலம் நீங்கி இராவுக்காலம் வந்தது, அரிச்சந்திரன் விஸ்வாமித்திரனின் வினைக்குள் புகுவதற்கு முன் சித்திரக்கூடாரத்துக்குள் புகுந்தான் என்பதாம்.]

இ-ள். மாதவர் - அந்த முனிவர்கள், அகன்ற பின்னர் - போன பிற்பாடு, மாலை அம்படாத்துள் நீங்கி - மாலைக்காலமாகிய அழகிய போர்வையினின்றும் நீங்கி, பூதலம் என்னும் மங்கை - பூமிதேவி என்னும் பெண்ணானவள், புதை-மூடிய, இருள் படாத்துள் புக்காள் - இருளாகிய போர்வைக்குள் புகுந்தாள், மேதகு தவத்தின் மிக்கோன் - (அப்பொழுது) மேலான தவத்தினாலே சிறந்த விஸ்வாமித்திர முனிவர், என் வினைப்படாம் புகுது முன்னம் - தீவினையாகிய போர்வைக்குள்ளே புகுது முன்னே, தீதறு குணத்தின் மிக்கோன் - குற்றமற்ற சிறந்த குணங்களால் மேலானவனாகிய அரிச்சந்திரமகாராஜன், சித்திரப் படாத்துள் புக்கான் - சித்திரப் போர்வையாலான கூடாரத்துக்குள் புகுந்தான். எ-று; 'சித்திரம்' - அழகு, 'படாம்' - போர்வை, திரை. (அஎ)

கடாத்தடங்களிறுமாவுஞ்சேனையுங்கண்கடுஞ்ச
விடாப்படைவேந்தர்தாமுமமைச்சரும்விழிகடுஞ்சக்
கெடாப்பெருங்குணத்துவள்ளல்கிளிமொழிமயிலோடம்பொற்
படாத்திடைப்பரியங்கத்துபஞ்சணைப்பள்ளிகொண்டான்.

[யானைகளும், குதிரைகளும், சேனைகளும் நித்திரைசெய்யக் கூடவந்த அரசர்களும், மந்திரிகளும், நித்திரைசெய்ய, அரிச்சந்திரமகாராஜனும் சந்திரவதியோடு, அழகிய பொன்மயமான கூடாரத்தில் பஞ்சுமெத்தை யமைத்த கட்டிலின்மேல் நித்திரைசெய்தான் என்பதாம்.]

இ-ள். கடாத்தடங்களிறும் - மதத்தை உடைய உயர்ந்த யானைகளும், மாவும் - குதிரைகளும், சேனையும் - சேனைகளும், கண்கள் துஞ்ச - நித்திரை செய்து கொண்டிருக்க, விடா - அகலாத, படைவேந்தர் தாமும் - சேனைகளை உடைய அரசர்களும், அமைச்சரும் - மந்திரிகளும், விழிகள் துஞ்ச - நித்திரை செய்து கொண்டிருக்க, கெடா - கெடாத, பெரும் குணத்து வள்ளல் - பெருமையான குணங்களை உடைய கொடையாளியாகிய அரிச்சந்திரன், கிளிமொழி - கிளிபோன்ற வசனத்தை உடையவளும், மயிலோடு - மயில்போன்ற சாயலை உடையவளும் ஆன சந்திரமதியுடன், அம்பொற் படாத்திடை - அழகிய பொன்மயமான கூடாரத்திலே, பரியங்கத்து - கட்டிலின்மேல், பஞ்சணை - பஞ்சணையிலே, பள்ளிகொண்டான் - நித்திரை செய்பவனானன். எ-று.

'கிளிமொழி மயில்' என்றது கிளிபோன்ற மொழியும் மயில்போன்ற சாயலும் உடையவள்; என்பதாம். இதனைக் கிளிமொழியை உடைய மயில்

போன்றவளாகிய சந்திரவதி என்றும் பொருள் கூறுவர். அப்பொழுது இப் பொரு ளுவமமாகும், 'கடாம்' மதம். (அஅ)

பூவலயத்தை மூடும்புதையிருளறச்செஞ்சூட்டுச்
சேவலார்ப்பெடுப்பக்கீழ்பாற்செங்கதிர்வந்துதோன்ற
யாவருமுணர்ந்தெழுந்தாரிளங்கொடியுடன்றுயின்ற
காவலன்றானுமற்றோர்கனவுகண்டுணர்ந்தெழுந்தான்.

[இருட்டு நீங்க, கோழிகூவ கிழக்கே சூரியன் வந்து தோன்ற, எல்லோரும் நித்திரை விட்டு எழுந்தார்கள் சந்திரவதியோடு தூங்கிய அரிச்சந்திரா னும் கனவுகண்டு நித்திரைவிட்டு எழுந்தான் என்பதாம்.]

இ-ள். பூவலயத்தை - பூமண்டலத்தை, மூடும் - மறைக்கும், புதை யிருள் - கவிந்த இருள், அற - நீங்க, செஞ்சூட்டு - செவந்த உச்சிக்கொண் டையை உடைய, சேவல் - சேவல்கள், ஆர்ப்பு எடுப்ப - சப்திக்க, கீழ்பால்- கிழக்கே, செங்கதிர் வந்து தோன்ற - செவந்த சூரியன் வந்து உதிக்க, யாவரும் உணர்ந்து எழுந்தார் - எல்லாரும் நித்திரைதெளிந்து எழுந்தார்கள். இளங் கொடியுடன் - இளமையாகிய கொடிபோன்ற சந்திரவதியுடன், துயின்ற-தூங் கின, காவலன் தானும் - அரிச்சந்திரமகாராஜன் தானும், மற்று ஓர் கனவு கண்டு - நன்மைக்கு மாறான ஒரு கனவைக்கண்டு, உணர்ந்து எழுந்தான் - நித் திரை தெளிந்து எழுந்தான். எ-று.

'செங்கதிர்' - சூரியன். 'செம்' என்பது இனம் விலக்கவந்த அடை மொழி; 'இளங்கொடி' அன்மொழித்தொகை; 'மற்று ஓர் என்றமையால் நன் மையல்லாத என்பது பெறப்பட்டது; 'கனவு கண்டு உணர்ந்து எழுந்தான்' என்றதனால் அதிகாலையில் நாலாம் சாமத்துக் கடைசியில் கண்ட கனவு என் பது புலப்படுகின்றது, சகுன நூலின்படி கடைச்சாமத்துக் கடையில் காண்பது அதிசீக்கிரம் பலிக்கும் என்பதாம். (அகூ)

மன்னவன்றுணுக்கங்கண்டுவல்லியும்பல்காநோக்கி
யென்னைநின்மனதிலெண்ணமியம்புகென்றிறைஞ்சலேடுங்
கன்னன்மென்மொழியாயானோர்கனவுகண்டுணர்ந்தேனென்ன
பின்னாக்கனவினீர்மைபேசெனப்பேசலுற்றான்.

[அரிச்சந்திரன் கனவினால் திகில் அடைந்திருப்பதைச் சந்திரவதி முகத்தினால் அறிந்து பலதாம் நோக்கி என்ன உங்கள் மனத் தின் எண்ணம் என்று வினவ கனவு கண்டேன் என்று அரிச்சந்திரன் கூற அதைச் சொல்லுங்கள் என்ற வள் கேட்கச் சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். வல்லியும் - (வஞ்சிக்) கொடி போல்பவளாகிய சந்திரவதியும், மன்னவன் - அரிச்சந்திரமகாராஜனின், துணுக்கம் கண்டு - (சொப்பனத்தினா லுண்டாகிய) திகிலைக்கண்டு, பல்கால் நோக்கி - பலதாமும் அரிச்சந்திரன்

முகத்தைப் பார்த்து, என்னை நின்மனத்தில் எண்ணம் - தேவரீருடைய மனதிலே என்ன எண்ணம், இயம்புகென்று இறைஞ்சலோடும் - சொல்லியருளுங்கள் என்று வணங்கும் அளவில், கன்னல் மென்மொழியாய் - கரும்பு போலும் இனிமையானதும் மென்மையானதுமான வசனத்தை உடையவளே! யான் - நான், ஓர் கனவு - ஒரு சொர்ப்பனத்தைக், கண்டு - கண்டு, உணர்ந்தேன் என்ன - விழித்தேன் என்று கூற, பின்னர் - பின்பு, அக்கனவின் நீர்மை - அந்தக் கனவினது குணத்தை, பேசென - சொல்லும் என்று (சந்திரமதி) கேட்க, பேசல் உற்றான் - அரிச்சந்திரன் சொல்லத் தொடங்கினான். எ-று.

மன்னவன் துணுக்கத்தை முகக்குறியால் கண்டாள், அதனை உண்மையோ என்று பார்த்தற் பொருட்டும் தன்னிடம் தெரிவிப்பானோ என்றும் பல்கால் நோக்கியது என்பர் புலவர். (௬௦)

அமைச்சரைத்தூதரோடியழைக்கவென்றரசன்கூற
விமைப்பினிற்சென்றழைத்தாரியாவரும்விரைவின்வந்தார்
சமைத்ததீவினையைவென்றான்றாமரைச்சரணம்போற்றி
யெமைக்கடிதழைத்தவாறென்னிறைவனீயருள்கவென்றார்.

[அரிசந்திரமகாராஜன் தூதுவர்களே மந்திரிகளை அழையுங்கள் என்ற உடனே
இமைக்குமுன்னே அவர்கள் சென்று அழைத்தார்கள், எல்லாரும்
சீக்கிரத்தில் வந்து, விஸ்வாமித்திரர் உண்டாக்கிய தீமையை
விலக்கிய அரிச்சந்திரனின் கமல பாதத்தை வணங்கி,
எங்களை விரைவாய் அழைத்த காரியம் என்ன
என்று அருளும் என்றனர், என்பதாம்.]

இ-ள். அரசன் - அரிச்சந்திரமகாராஜன், அமைச்சரை - மந்திரிகளை, தூதர் - தூதுவர்கள், ஓடி - ஓடி, அழைக்க - கூட்டி வருக, என்று கூற-என்று சொல்ல, இமைப்பினில் - (அந்தத்தூதர்கள்) க்ஷணத்தில், சென்று - போய், அழைத்தார் - கூப்பிட்டார்கள், யாவரும் - மந்திரிகளும் மற்றும் வரத்தக்கவர்களும், விரைவின் வந்தார் - சீக்கிரமாக வந்தார்கள், சமைத்த - விஸ்வாமித்திர முனிவன் உண்டாக்கிய, தீவினையை வென்றான் - (மிருகங்களால் உண்டாகிய) தீவினையை (அவற்றை அழித்து) வென்றவனாகிய அரிச்சந்திரமகாராஜனின், தாமரைச் சரணம் போற்றி - தாமரை மலர்போலும் பாதங்களை வணங்கித் துதித்து, இறைவ - எங்கள் அரசனே! எமைக்கடிது அழைத்தவாறு - எங்களை விரைவிலே அழைத்த காரியம், என் - என்ன, நீ யருள்க என்றார்- நீ சொல்லியருளும் என்றார்கள். எ-று. (௬௧)

மற்றவர்கூறக்கேட்டுவையகமெல்லாங்காக்குங்
கொற்றவனின்றியானேர்கொடியதீக்கனவுகண்டே
னுற்றதுகேட்டுமேல்வந்துறுதிறமுரைமினென்னக்
கற்றடந்தோளினர்க்குக்கனவினைக்கூறலுற்றான்.

[அப்படி மந்திரிகள் சொல்லக்கேட்டு, அரிச்சந்திரன் இன்று நான் ஒரு கொடிய கனவு கண்டேன் அதை நீங்கள் கேட்டு மேலே வருவதைக் கூறுங்கள் என்று கூறி மந்திரிகளுக்குத் தன் கனவின் நிலையைக் கூறுகின்றான். என்பதாம்.]

இ-ள். மற்று அவர் கூறக்கேட்டு - அப்படி மந்திரி முதலியவர்கள் சொல்லக்கேட்டு, வையகம் எல்லாம் - உலகத்தை எல்லாம், காக்கும் - ஆளுகின்ற, கொற்றவன் - வெற்றியை உடைய அரசனாகிய அரிச்சந்திரன், இன்று - இன்றைக்கு, யான் - நான், ஓர் - ஒரு, கொடிய தீக்கனவு - கொடிதான தீய கனவை, கண்டேன் - கண்டேன், உற்று அதுகேட்டு - மனம்பொருந்தி நான் கண்ட அந்தக் கனவைக்கேட்டு, மேல்வந்துறுதிறம் - இனிமேல் வந்து கூடுவதான காரியத்தை, உரைமின் என - சொல்லுங்கள் என்று, கல் தடந்தோளினர்க்கு - மலைபோல் உயர்ந்த தோளை உடைய மந்திரி முதலானவர்களுக்கு, கனாநிலை - தன் கனவை, கூறல் உற்றான் - சொல்லத் தொடங்கினான். எ-று.

'வையகம்' பொருள்கள் வைப்பதற்கு இடமாய் இருப்பது என்னும் காரணம்பற்றி வந்த பெயர். 'தீமை கனவு' தீக்கனவு என்றாயது, பண்பின் ஈறு கெட்டது; 'கல்' - மலை. (கூ௨)

என்னையீன்றெடுத்ததாதையாக்கையோடெய்தியும்பர்
தன்னையுற்றிமையோர்நீக்கத்தாரகைத்தலத்தமர்ந்த
பின்னையான்பிரசக்கூந்தற்பேதையரைவர்தம்மை
முன்னையூழ்விதியினாலேமுயக்கமுற்றினிதிருந்தேன்.

[என் தந்தை உடம்புடன் சுவர்க்கம் புகுந்து தேவர்கள் தள்ள நட்சத்திர மண்டலத்திலே அமர்ந்த பிற்பாடு நான் முன் ஊழினால் பெண்கள் ஐவரை மணந்திருந்தேன் என்பதாம்.]

இ-ள். என்னை ஈன்று எடுத்த தாதை - என்னைப் பெற்று வளர்த்த தகப்பன் ஆனவர், யாக்கையோடு - தேகத்தோடு, எய்தி உம்பர் தன்னையுற்று - போய்ச் சுவர்க்கலோகத்தைச் சேர்ந்து, இமையோர் நீக்க - தேவர்கள் தள்ளிவிட, தாரகைத்தலத்து அமர்ந்தபின் - நட்சத்திர மண்டலத்தில் அமர்ந்தபின்பு, யான் - நான், பிரசக்கூந்தல் - தேன் பொருந்திய மலரையணிந்த கூந்தலையுடைய, பேதையர் ஐவர் தம்மை - பெண்கள் ஐந்துபேரை, முன்னையூழ் விதியினாலே - பூர்வ புண்ணியத் தொடர்ச்சியினாலே, முயக்கமுற்றினிதிருந்தேன் - அவர்களோடு கூடிச் சுகித்திருந்தேன். எ-று.

திரிசங்கு மகாராஜன் சுவர்க்கம் புக்கது. (கூ௩)

அருந்ததியிற்புணர்ந்தமாதரைவரிலருந்தவத்தோற்
கொருத்தியையாமெனயீந்தேனொருத்திபோயவனோடுற்று
ளொருத்தியூணற்றநன்றாளொருத்திபோய்க்கண்ணிழந்தா
ளொருத்திவிட்டென்னைநீங்காதிருமைக்குமுறுதிதந்தாள்.

[அப்படி நான் கூடியிருந்த பெண்கள் ஐவரில் ஒருத்தியை தவமுனிக்கு நானே சம்மதித்துக் கொடுத்தேன், இன்னொருத்தி தானே போய் அம்முனிவனோடு கூடினாள், மற்றொருத்தி உணவு முதலியன இல்லாமல் போனாள், வேறொருத்தி தானே விலகிப் போய் கண் குருடானாள், போகாத ஒருத்தி மாத்திரம் என்னை விடாமல் இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய நன்மை எனக்குத் தருவதானாள் என்பதாம்.]

இ-ள். அருத்தியில் - (அப்படி நான்) ஆசைகொண்டு, புணர்ந்த மாதர்-கூடியிருந்த பெண்கள், ஐவரில் - ஐந்துபேரில், ஒருத்தியை - ஒருத்தியை, அருந்தவத்தோற்கு - அருமையான தவத்தைச்செய்த ஒரு முனிவனுக்கு, யானே - நானே, யீந்தேன் - சம்மதித்துக் கொடுத்தேன், ஒருத்திபோய் அவனோடுற்றாள் - (அவர்களில், மற்று ஒருத்தி தானே போய்) அம்முனிவனோடு கூடினாள், ஒருத்தி - மற்று ஒருத்தி, ஊண் அற்று அகன்றாள் - உணவு இல்லாமல் நீங்கினாள், ஒருத்திபோய் - மற்றொருத்தி விலகிப்போய், கண் இழந்தாள் - கண் குருடானாள், ஒருத்தி - மற்றொருத்தியோ, விட்டு என்னை நீங்காது - என்னைவிட்டு நீங்காமல், இருமைக்கும் உறுதி தந்தாள் - இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய நன்மையை எனக்குத் தருவதாயிருந்தாள். எ-று. ()

இப்படியின்றுகண்டேனிக்கொடுங்கனவினாலே
யெப்படிவிளைவதோஃதுணர்ந்திலேனியம்புமென்னா
வப்படியரசன்கூறவடியினைதொழுதுநன்னூற்
றப்பறவுணர்ந்தகேள்விச்சத்தியகீர்த்திசொல்வான்.

[இப்படி இன்று நான் கண்டேன் இந்தக் கொடிய கனவினாலே இனி எவ்வாறு நடக்குமோ அதை நான் தெரியேன். நீங்கள் சொல்லுங்கள் என்று கேட்க நன்னூல் கேள்வி மிகுந்த சத்திய கீர்த்தி சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். இப்படி - இந்தவிதமாக, இன்று கண்டேன் - இன்று கண்டேன், இக்கொடுங் கனவினாலே - இந்தக் கொடிய கனவினாலே, எப்படி விளைவதோ-எந்தவிதமாக நடக்கப் போகிறதோ?, அஃது உணர்ந்திலேன் - அதை நான் தெரியேன், இயம்பும் என்னா - சொல்லுங்கள் என்று அரசன் சொல்ல, அப்படி அரசன் கூற - அந்தவிதமாக அரிச்சந்திரன் சொல்ல, நன்னூல் தப்பற உணர்ந்த கேள்வி - நல்ல நூற்களை எல்லாம் குற்றம் நீங்கக்கற்று உணர்ந்த ஞானக்கேள்வியை உடைய, சத்திய கீர்த்தி - சத்திய கீர்த்தி என்னும் மந்திரி, அடியினை தொழுது - அரிச்சந்திரனின் இரண்டு பாதங்களையும் வணங்கி, சொல்வான்-சொல்லுகின்றான். எ-று. (கூ௦)

அருவினைவிளைத்ததெல்லாங்கௌசிகனவனாலின்னம்
வருவினைமிகவுமுண்டுவளநகர்நாடிழந்து
திருவினையிழந்துசேயுஞ்செவ்வியும்வேறுவேறாப்
பெருவினைமுடிப்பான்றன்னைப் பின்னையாம்வெல்வோமென்றான்.

[இவ்வளவு வினைகளைச் செய்ததெல்லாம் விஸ்வாமித்திரன், அவனால் இன்னும் வரப்போகிறவைகள் அதிகம் உண்டு, வளநகர் நாடு இவைகளை இழந்து செல்வத்தை இழந்து பிள்ளையும் தாயும் வேறு வேறாகப் பெரிய வினைகளைச் செய்வான் அவனை நாம் பின்னால் வெல்லப் போகிறோம் என்றான் என்பதாம்.]

இ-ள். அருவினை விளைத்தது எல்லாம் - இந்தவிதமாக அரிய கொடுஞ் செய்கைகளை உண்டாக்கியது எல்லாம், கௌசிகன் - விஸ்வாமித்திர முனிவரே, அவனால் - அந்த முனிவரால், இன்னம் வருவினை மிகவுமுண்டு - இனி மேலும் வரப்போகிற தீவினைகள் அதிகமாகவுண்டு, வளநகர் நாடு இழந்து - வளப்பம் பொருந்திய நகரத்தையும் நாட்டையும் இழந்து, திருவினை இழந்து - செல்வத்தை இழந்து, சேயும் செவ்வியும் வேறு வேறாய் - குழந்தையும், சந்திரவதியும் வேறு வேறாகும்படி, பெருவினை முடிப்பான் - பெரிய தீவினைகளைச் செய்வார், தன்னை - அந்த விஸ்வாமித்திர முனிவரை, பின்னை - பிற்பாடு, யாம் - நாம், வெல்வோம் - ஜெயிப்போம், என்றான் - என்று கூறினான். எ-று.

அனையவையமைச்சன்கூறவரசனையரிவைபோற்றி
யெனையிழந்தாலுமன்னாவென்வயிற்றுதித்தமைந்தன்
றனையிழந்தாலுமிந்தத்தலமிழந்தாலும்வெம்போர்
முனையிழந்தாலுநீதிமுறையொன்றுமிழவேலென்றாள்.

[அப்படி சத்தியகீர்த்தி சொன்ன உடனே, சந்திரவதி அரிச்சந்திரனைத் துதித்து வணங்கி அரசனே நீ என்னை இழந்தாலும் நம்பிள்ளையை இழந்தாலும் இந்த நாட்டை இழந்தாலும், வெவ்விய சண்டை முனையை இழந்தாலும் நீதிமுறை ஒன்றை மாத்திரம் 'இழந்துவிடாதே என்றாள்; என்பதாம்.]

இ-ள். அனையவை - அப்படிப்பட்ட கனவின் பொருளை, அமைச்சன் கூற - மந்திரியாகிய சத்தியகீர்த்தி சொல்ல, அரிவை - சந்திரவதியானவள், அரசனை - அரிச்சந்திரவரசனை, போற்றி - வணங்கித் துதித்து, எனை இழந்தாலும் - என்னை இழந்தாலும், மன்னா - அரசனே!, என் வயிற்று - என் வயிற்றிலே, உதித்த மைந்தன் தனை - பிறந்த புத்திரனை, இழந்தாலும் - இழந்தாலும், இந்தத்தலம் இழந்தாலும் - இந்த உலகமெல்லாவற்றையும் இழந்து போனாலும், வெம்போர் முனை - வெவ்விதாகிய சண்டை முனையை, இழந்தாலும் - இழந்துவிட்டாலும், நீதிமுறை ஒன்றும் - நீதிமுறை ஒன்றை மாத்திரம், இழவேல் - இழந்து விடாதேயுங்கள், என்றாள் - என்று கூறினாள். எ-று.

என்றலுமமைச்சரெல்லாமிருகணீரருவிபாய
நின்றுநின்றழுதுவாடிநெட்டுயிர்ப்புற்றகாலை
மன்றலந்தெரியன்மார்பன்வருந்தனீரென்றுதேற்றி
யன்றவணுறைந்தானப்பாலடுத்தவாறெடுத்துரைப்பாம்.

[என்று சொன்னபோது மந்திரிகள் எல்லாம் ஆறுபோல் கண்ணீர் பெருக விட்டு அழுது வாடிப் பெருமூச்சு விட்டு நின்றபொழுது அரிச்சந்திரன் அவர்களை வருந்தாதீர்கள் என்று தேற்றி அங்கு உறைந்தான் அதற்குமேல் நடந்ததைச் சொல்வோம் என்பதாம்.]

இ-ள். என்றலும் - என்று சந்திரமதி அப்படிச் சொன்ன உடனே, அமைச்சர் எல்லாம் - மந்திரிகள் எல்லாம், இருகண் நீர் அருவிபாய - இரண்டு கண்களில் இருந்தும் நீரானது அருவிபோல் பாய, நின்று நின்று - நின்று நின்று, அழுது வாடி - அழுதும் வாடியும், நெட்டுயிர்ப்பு உற்ற காலை - பெரு மூச்சுவிட்டு விசனப்படுகிறபொழுது, மன்றலந் தெரியல் மார்பன் - வாசனை பொருந்திய மாலையை அணிந்த அரிச்சந்திரமகாராஜனானவன், வருந்தல் நீர் என்று தேற்றி - நீங்கள் வருத்தப்படாதீர்கள் என்று தேற்றி, அன்று அவண் உறைந்தான் - அன்று அங்கு தங்கியிருந்தான், அப்பால் - அதற்குப் பிறகு, அடுத்தவாறு - நடந்த விஷயங்களை, எடுத்து உரைப்பாம் - எடுத்துச் சொல்லுகிறோம். எ-று.

அழுதல், வாடுதல், பெருமூச்சு விடுதல் இவைகள் எல்லாம் அவலத்தாலும் அச்சத்தாலும் வந்த மெய்ப்பாடுகள். இனி உடம்பு நடுங்கல் முதலிய வற்றையும் "ஒருமொழியொழி தன் இனங்கொளற் குறித்தே" என்ற விதிப்படி வருவித்துக் கோடலும் ஆம். (கஅ)

வேட்டஞ்செய்காண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - கககஅ

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது,

# சூழ்வினைக்காண்டம்.

[இதில் அரிச்சந்திரன் நாடு நகரங்களை இழந்து முனிவர்க்குக் கடன் காரணக அயோத்தியா நகரத்தையும் கோசல நாட்டையும் விட்டு புறப்படும்படி விஸ்வாமித்திரன் செய்த வஞ்சனைகளைக் கூறுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வென்றிவேன்மன்னன்விட்டவெங்கணைதைத்துவாயாற்
றுன்றியகுருதிசோரச்சுழன்றுடறடிதுடித்துக்
குன்றினைக்கடந்துசென்றுகோசிகன்றன்பாறபோந்து
பன்றியாய்வந்தமாயைபட்டபாடனைத்துஞ்சொல்லும்.

[அரிச்சந்திரன் விட்ட பாணத்தால் வாயில் இரத்தம் பெருக சுழன்று துடி துடித்து பன்றியானது மலையைவிட்டுத் தாண்டி, விஸ்வாமித்திரரிடம் சென்று தான் பட்டபாட்டைக் கூறிற்று என்பதாம்.]

இ-ள். வெற்றிவேல் மன்னன் - வெற்றி பொருந்தின வேலாயுதத்தை உடைய அரிச்சந்திரமகாராஜன், விட்ட - எய்த, வெம்கணை தைத்து - வெவ்விதான அம்புபட்டு, வாயால் - வாயினல், துன்றிய குருதிசோர - நெருங்கின இரத்தம் ஒழுக, சுழன்று - சுழலுதலாகி, துடி துடித்து - உடம்பெல்லாம் பதறித் துடித்து, குன்றினைக் கடந்து சென்று - தான் விழுந்த அந்த மலையை விட்டு அப்பால்போய், கோசிகன் தன்பால் போந்து - விஸ்வாமித்திரரிடம் போய், பன்றியாய் வந்த மாயை - பன்றிருபமாக வந்தமாயை, பட்டபாடனைத் தும் சொல்லும் - தான் பட்ட கஷ்டங்களை எல்லாம் சொல்லுகின்றது. எ-று.

'வெற்றி' என்றது "வென்றி" என்ருயது மெலித்தல் விகாரம்; இது பெரும்பாலும் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் என ஆறுசீர் கொண்ட அடிகளால் ஆகிய ஆசிரிய விருத்தம். (க)

என்னையாளுடையாயுன்றனேவலின்படியானேகி
மன்னருங்கரியுமாவுஞ்சேனையுமாளக்கொன்றேன்
பின்னவன்விட்டவம்பாற்சுழன்றியான்பிழைத்துப்போந்தேன்
வுன்னருளுடையேற்கல்லாலுய்வுண்டோவென்றதன்றே.

[ஆண்டவனே! உன் கட்டளைப்படி நான் போய் அரசர்களையும் யானைகளையும்
குதிரைகளையும் சேனைகளையும் சாவும்படிக்கொன்றேன் அவன் பிறகு
விட்ட பாணத்தால் சுழன்று தப்பி வந்தேன். உன்னருளுடைய
எனக்கல்லாமல் வேறு மற்றையர்க்கு பிழைப்புண்டாகுமோ
என்று சொல்லிற்று என்பதாம்.]

இ-ள். என்னை ஆள் உடையாய் - என்னை அடிமையாகக் கொண்டவரே!, உன்றன் ஏவலின்படி - உம்முடைய உத்தரவின்படியே, யான் ஏகி - நான் போய், மன்னரும் - அரசர்களையும், கரியும் - யானைகளையும், மாவும் - குதிரைகளையும், சேனையும் - சேனைகளையும், மாளக்கொன்றேன் - சாகும்படிக் கொன்றேன், பின் - பிறகு, அவன்விட்ட அம்பால் - அந்த அரிச்சந்திரமகாராஜன் எய்த அம்பினால், சுழன்று - சுழலுதலாகி, யான் - நான், பிழைத்துப் போந்தேன் - தப்பி வந்தேன், உன் அருள் உடையேற்கு அல்லால் - இனி உம்முடைய கிருபையை உடைய எனக்கு அல்லாமல், உய்வு உண்டோ - உன்னருள் பெறாத மற்றவர்களுக்குப் பிழைப்பு உண்டாகுமோ, என்றது அன்றே - என்று கூறிற்று. எ-று. அன்று, ஏ - அசைகள்.

"உன்னருள் உடையோற் கல்லால்" என்பது பாடமாயின்; உம்முடைய கிருபையைப் பெற்றவர்களுக்கு அல்லாமல், என்று பொருளாகும். (உ)

கோலத்தினுரையைக்கேளாக்கோசிகன்வடவைச்செந்தீச்
சீலத்திற்சிவந்தகண்ணன்சிந்தையுமனையனூழிக்
காலத்திற்கடுங்காலன்னமூச்சினன்கடலிற்றோன்று
மாலத்தின்கிளர்ச்சியன்னகோபத்தனழன்றெழுந்தான்.

[அப்படிச்சொன்ன பன்றியின் சொல்லைக்கேட்டு, விஸ்வாமித்திரர் கோபத்
தால் வடவா முகாக்கினிபோல் கண்ணும் மனமும் கொண்டவ
ராகி ஊழிக்காலத்துக் காற்றுப்போல் மூச்சை உடையவ
ராகி ஆலகால விஷம்போலும் கிளர்ச்சி உடைய
கோபத்தனாகி கொதித்தெழுந்தார்
என்பதாம்.]

இ-ள். கோலத்தின் - (அந்தமாயப்) பன்றியின், உரையைக் கேளா - சொல்லைக்கேட்டு, கோசிகன் - விஸ்வாமித்திரமுனிவர், வடவைச் செந்தீ - வடவாக்கினியின், சீலத்தில் - (நிறத்தில்) அழகில், சிவந்த கண்ணன் - சிவந்த கண்களை உடையவராகி, சிந்தையும் - மனமும், அனையன் - அதே தன்மையர் ஆகி, ஊழிக்காலத்தில் - ஊழிக்காலத்திலே, கடுங்கால் அன்ன - வீசுகின்ற வேகமான காற்றுப்போல், மூச்சினன் - மூச்சுடையவராய், கடலில் தோன்றும் - கடலிலே தோன்றின, ஆலத்தின் கிளர்ச்சி அன்ன - ஆலகால விஷத்தின் பெருக்கைப்போல, கோபத்தன் - கோபத்தை உடையவரும் ஆகி, அழன்று எழுந்தான் - கொதித்து எழுந்தார். எ-று. (ஙு)

பேச்சினிற்கிளிபோற்செங்காற் பெயர்ச்சியிற்பெடைபோற்செங் [கை
வீச்சினின்மின்போற்சிற்றமிகுதியான்முனிவன்விட்ட
மூச்சினிற்பிறந்திரண்டுமோகினிமாதராழி
நீச்சினிநிலைத்துநிற்குநீலமென்கொடிபோனின்றார்.

[கிளிபோன்ற பேச்சும், பெட்டை யன்னம்போன்ற நடையும், மின்னல் போன்ற கைவீச்சும், உடைய இரண்டு மோகினிப்பெண்கள், விஸ்வாமித்திரர் கோபத்தால் விடுகின்ற மூச்சில் பிறந்து கடலில் நிலைகொண்டு நிற்கும் நீலக்கொடிகள் போல் எதிரே நின்றார்கள் என்பதாம்.]

இ-ள். பேச்சினில் - பேச்சினாலே, கிளிபோல் - கிளிபோலவும், செங்கால் பெயர்ச்சியில் - செவந்த கால் நடையினாலே, பெடைபோல் - பெட்டை அன்னம்போலவும், செங்கைவீச்சினில் - செவந்த கைவீச்சினாலே, மின்போல்-மின்னலைப்போலவும், இரண்டு மோகினி மாதர் - இரண்டு மோகினிப்பெண்கள், சீற்றம் மிகுதியான் - கோபம் மிகுதியினாலே, முனிவன் விட்ட மூச்சினில் - விஸ்வாமித்திரர்விட்ட மூச்சிலே, பிறந்து - பிறந்து, ஆழி நீச்சினில்-நீந்துதலை உடைய கடலின் இடத்தே, நிலைத்து நிற்கும் - நிலைகொண்டு நிற்பதான, நீலமென் கொடிபோல் - மிருதுவான நீலக்கொடிபோல, நின்றார்-எதிரே நின்றார்கள். எ-று.

'நீலமென் கொடி' நிறத்துக்கும் சாயலுக்கும் உவமானம். 'பெடை' அன்னப்பெடை. (ச)

செந்திருவமுதிற்றோன்றத்திரைக்கடற்பிறந்தநஞ்சில்
வந்திருகருந்திருக்கள்வயங்குவதென்னநீலச்
சந்திராதித்தரென்னத்தலையின்மின்கறுத்ததென்ன
விந்திரநீலக்கொம்பரிரண்டுவந்தெழுந்ததென்ன.

[அமிர்தத்தில் செவந்த லெட்சுமிதோன்ற, கடலில் பிறந்த ஆலகால விஷத்தில் இரண்டு கருப்பு லட்சுமிகள் விலங்குவது போலவும் கறுத்த சந்திர சூரியர்போலவும் ஆகாயத்துள்ள மின்னல் கறுத்தது போலவும் இந்திரநீலக்கொம்புகள் இரண்டு வந்து தோன்றினது போலவும் என்பதாம்.]

இ-ள். செந்திரு - செவந்த லட்சுமியானவள், அமுதில் தோன்ற - அமிர்தத்திலே பிறக்க, திரைக்கடல் பிறந்த நஞ்சில் - அலையை உடைய கடலிலே பிறந்த ஆலகால விஷத்திலே, வந்து இருகரும் திருக்கள் - வந்து இரண்டு கரிய லட்சுமிகள், வயங்குவது என்ன - விளங்குவதைப்போலவும், நீல - நீல நிறமுடைய, சந்திராதித்தர் என்ன - சந்திரசூரியர் போலவும், தலையில் - ஆகாயத்தில், மின்கறுத்தது என்ன - மின்னல் கறுத்தது போலவும், இந்திரநீலக் கொம்பர் - இந்திரநீலக் கொம்புகள், இரண்டு வந்து எழுந்தது என்ன-இரண்டு வந்து தோன்றினாற் போலவும். எ-று.

இச்செய்யுள் குளகம். இதுமுதல் ஐந்து பாடல்கள் ஒருதொடர். 'நஞ்சில் வந்திரு கருந்திருக்கள்' என்பதற்கு நஞ்சைப்போல வந்து இருகருப்பு லட்சுமிகள் விளங்குவதுபோல என்றும் கூறுவர் சிலர். (ரு)

நீலவாரிதியிலிலத்துகிர்க்கொடிநின்றதென்னக்
கூலவாரிதியினீலக்கொம்பிரண்டெழுந்ததென்னப்
பாலவாரிதிகடைந்தபன்றலைபாவங்கான்ற
வாலவாரிதியின்மூழ்கிக்கிளர்ந்தெழுமன்னமென்ன.

[நீலக்கடலில் நீலநிறமாகப் பவளக்கொடி நின்றது போலவும், கடலில்
முழுநீலக் கொம்புகள் தோன்றினது போலவும் பாற்கடல்
கடைந்த பல தலைப்பாம்பு கக்கின விஷக்கடலிலே
முழுகி எழுந்த அன்னம்போலவும் என்பதாம்.]

இ-ள். நீல வாரிதியில் - நீல நிறக்கடலிலே, நீலத்துகிர்க்கொடி - நீல நிறமான பவளக்கொடி, நின்றதென்ன - நின்றாற்போலவும், கூலம் - கரையை உடைய, வாரிதியில் - சமுத்திரத்தில், நீலக்கொம்பு - முழு நீலக்கொம்பு, இரண்டு எழுந்தது என்ன - இரண்டு வந்து தோன்றினால் போலவும், பால வாரிதி - பாற்கடலை, கடைந்த - கடைந்த, பல்தலை - பல தலைகளை உடைய, அரவம் - பாம்பு, கான்ற - கக்கின, ஆலவாரிதியில் விஷக்கடலிலே, மூழ்கி - முழுகி, கிளர்ந்து எழும் - அந்த விஷ நிறமாக எழுகின்ற, அன்னம் என்ன - அன்னங்களைப் போலவும். எ-று.

'பன்றலை அரவம்' என்றது வாசுகியை. 'நீலத்துகிர்க்கொடி' இல்பொருள் உவமை. 'பால் - வாரிதி' பாலவாரிதி என்றாயிற்று. அகரம் சாரியையாக வந்தது. இச்செய்யுளும் குளகம். (சு)

ஆலத்திற்பயின்றகண்டனழற்றிருக்கண்ணான்மாண்ட
காலத்திற்புறங்கொடாதுகாமனோடொத்தலைந்து
நீலத்திற்கருகிவெம்பிநினைவில்வந்துதவியன்பாய்ச்
சீலத்தினுபர்ந்தகாமன்சேனையிலிருவரென்ன.

[மன்மதன் சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணால் இறந்த காலத்திலே,
புறங்கொடுத்தோடாமல் காமனோடு ஒத்து அலைந்து, நெற்றி விழி
நெருப்பில் வெந்து கருகி வெம்பி, அவன் நினைப்புப்படி
வந்து உதவிசெய்யும் காமன் சேனையின் இருவர்
போலவும்; என்பதாம்.]

இ-ள். ஆலத்தில் பயின்ற கண்டன் - ஆலகால விஷத்தினால் விளங்குகின்ற கழுத்தையுடைய சிவபெருமானின், அழல் திருக்கண்ணால் மாண்ட - (நெற்றியிலுள்ள) அழகிய நெருப்புக்கண்ணால் இறந்த, காலத்தில் - காலத்திலே, புறங்கொடாது - முதுகுகாட்டி ஓடாமல், காமனோடு - அந்த மன்மதனோடு, ஒத்து அலைந்து - கூடவே ஒருமிக்க அலைந்து, நீலத்தில் கருகி - நீலத்தைப்போல (அந்தச் சிவபெருமானின் நெற்றிவிழி நெருப்பால்) கருகி,

வெம்பி - வெதும்புதலாய், நினைவில் வந்து உதவி - அந்த மன்மதன் நினைத்த மாத்திரத்திலே வந்து உதவி, அன்பாய் - அன்பாகி, சீலத்தில் - (கலவி) ஒழுக்கத்திலே, உயர்ந்த காமன் - உயர்ந்துள்ள மன்மதனின், சேனையில் - சைனியத்தில், இருவர் என்ன - (உள்ள) சிறந்த இருவர்களைப் போலவும். எ-று.

"நினைவில் வந்துதவி அன்பாய்ச் சீலத்தில் உயர்ந்த காமன் சேனையில் இருவர் என்ன" என்பதற்கு, நினைவில் வந்து உதவி - நினைவிலே வந்து தோன்றி, அன்பாய் - அந்த மன்மதன் இடத்தில் விசுவாசமாய், சீலத்தில் உயர்ந்த காமன் - கலவி ஆசாரத்தினாலே உயர்ந்திருக்கிற மன்மதனுக்கு (உதவியாகி), சேனையில் இருவர் என்ன - அந்த மன்மதனுடைய சேனையில் உள்ள இரண்டு பெண்கள் இவ்விருவரும் என்று சொல்லும்படியும், எனவும் கூறுவர். (எ)

சுழிகொளும்பெருந்தண்கங்கை சூடினோன்றுளங்குநெற்றி
விழிகொளுந்தழலான்மேனிவெந்தழுந்திறந்தகாமன்
பழிகொளக்கருதிகாலபாசமே விழியாக்கொண்டு
வழியிலாவரங்கள்கொண்டரதியுமாற்றவளுமென்ன.

[சிவபெருமான் நெற்றி விழியால் இறந்த மன்மதனின் பழியை வாங்கக் காலபாசத்தையே விழிகளாகக்கொண்டு, அழிவற்ற வரங்கள் பெற்று வந்த ரதியும் அவள் சக்களத்தியையும் போலவும்.]

இ-ள். சுழிகொளும் - சுழிகளைக் கொண்டுள்ள, பெரும் - பெரிய, தண்-குளிர்ந்த, கங்கை சூடினோன் - கங்கையைச்சூடிய சிவபெருமானின், துளங்கு-விளங்குகின்ற, நெற்றிவிழி - நெற்றிக்கண்ணின், கொளுந்தழலால் - கொழுமையாகிய நெருப்பினாலே, மேனி - உடலானது, வெந்து - வெந்து, அழுந்து-அமிழ்ந்து, இறந்த காமன் - சாம்பராகிச்செத்த மன்மதன், பழிகொளக் கருதி-பழியை வாங்க நினைத்து, காலபாசமே - காலபாசத்தையே, விழியாக்கொண்டு-விழிகளாகக்கொண்டு, வழிவிலா - தவறுதல் இல்லாத, வரங்கள் கொண்ட-வரங்களைப்பெற்று தோன்றின, ரதியும் - ரதிதேவியையும், மாற்றவளும் என்ன - அவளுக்கொரு சக்களத்தியையும் போலவும். எ-று. இந்தச் செய்யுளும் குளகம். (அ)

நாவியங்கமலத்துற்றபிரமனை நகைப்பான்வேண்டி
வாவியங்கமலவாசக்கோசிகன்வாதிற்றீட்டு
மோவியமென்னநீலவோதிமமென்னநீண்ட
காவியங்கண்ணார்காந்தட்கைதொழுதிறைஞ்சிநின்றார்.

[பிரமனைச் சிரித்துப் பழிப்பதற்காக விஸ்வாமித்திரர், வாதுகொண்டு எழுதின சித்திரங்கள் போலவும், நீலநிற அன்னங்கள் போலவும் அந்த இரண்டு பெண்களும் கைகளால் வணங்கி விஸ்வாமித்திரரின் முன் நின்றார்கள் என்பதாம்.]

இ-ள். நாவியம் கமலத்து உற்ற பிரமனை - திருவுந்தியிலே தோன்றிய அழகிய தாமரையில் பொருந்தி யிருக்கின்ற பிரமதேவனை, நகைப்பான்

வேண்டி - எழனஞ்செய்து சிரிக்கவேண்டி, வாவியம் கமலவாசக் கோசிகன்- அந்தத் தாமரை வாவிக்கு சமீபத்திலே வாசம்செய்யும் விஸ்வாமித்திரர், வாதிற் றீட்டும் - வாதுகொண்டு எழுதின, ஓவியம் என்ன - சித்திரங்கள் போலவும், நீல ஓதிமம் என்ன - நீலநிற அன்னங்கள்போலவும், நீண்ட - நீண்ட, காவியங் கண்ணார் - நீலோற்பலம் போன்ற அழகிய கண்களைஉடைய அந்த இரண்டு பெண்களும், காந்தட் கைதொழுது - காந்தள் மலர்போலும் கைகளால் வணங்கி, இறைஞ்சி நின்றார் - துதித்து நின்றார்கள். எ-று.

'நாபி' என்பது 'காவி' என எதுகை நோக்கி வந்தது. 'வாவியம் கமல வாசன்' என்பதற்கு அந்தப் பொய்கையின் கமல மலரின் நறுமணிப் பரிமளிக்கும் திருமேனியை உடைய கௌசிகன் எனவுங் கூறுவர். 'நீல ஓதிமம் என்ன' என்றது இல்பொருளுவமை; 'காந்தட் கை' என்றது காந்தள் மலர்போலும் கை என விரியும். (௯)

தீதிலாமறைகணான்குந்தெளிவுறவுணர்ந்தநீர்மைக்
கோதிலாக்குணத்தோர்க்கெல்லாங்கோபஞ்சண்டாளமென்பா
ராதலான்முனிவன்மூக்கினாரழற்சிற்றத்தூடே
போதலாலந்தமாதர்புலைச்சியராயினாரே.

[பெரியோர்களுக்குக் கோபமுண்டானால் அதுவே சண்டாளம் என்பர், ஆகையினால் விஸ்வாமித்திரர் மூக்கிலிருந்து கோபத்தின் வழியாகப் பிறந்ததினால் அந்தப்பெண்கள் புலைச்சியராயினார்கள் என்பதாம்.]

இ-ள். தீதிலா - குற்றம் இல்லாத, மறைகள் நான்கும் - நான்கு வேதங்களையும், தெளிவுற உணர்ந்த - தெளிவாகத் தெரிந்த, நீர்மை - தன்மையை உடைய, கோதிலாக் குணத்தோர்க்கு எல்லாம் - குற்றமற்ற குணத்தை உடைய பெரியோர்களுக்கு எல்லாம், கோபம் - கோபமானது, சண்டாளமென்பார்- சண்டாளமென்று கூறுவார்கள், ஆதலால் - ஆகையினால், முனிவன் - விஸ்வாமித்திரமுனிவரின், மூக்கின் - மூக்கிலே, ஆர் - பொருந்திய, அழல் - கொதிக்கின்ற, சிற்றத்து ஊடே - கோபத்தின் வழியாக, போதலால் - பிறந்ததனாலே, அந்தமாதர் - அந்த இரண்டு பெண்களும், புலைச்சியர் ஆயினாரே - சண்டாளப் பெண்களானார்கள். எ-று. ஏ - ஈற்றசை. (௧0)

மாதரைமுனிவன்பார்த்துவரவழைத்திருத்திநானு
பேதமுமெழுத்துஞ்சொல்லும்பெருங்கலையிருநாலெட்டும்
கீதமுநாதயாழுங்கின்னரமுதலவாய
போதமும்வாரிநீரிற்கரைத்துடன்புகட்டினனே.

[அப்பெண்களை விஸ்வாமித்திரர் அருகில் வரவழைத்து நானுவகையான எழுத்துப் பேதமும், சொல்பேதமும், அறுபத்துநாலு கலைஞானமும் கீதமும், யாழும், கின்னரமும் முதலாகிய ஞானமும் அள்ளி அள்ளி கிரமப்படி சொல்லிக் கொடுத்தனர், என்பதாம்.]

இ-ள். மாதரை - அப்பெண்களை, முனிவன் பார்த்து - விஸ்வாமித்திரர் பார்த்து, வா அழைத்து - சமீபத்தில் வரும்படி அழைத்து, இருத்தி - இருக்

கச்சொல்லி, நானு பேதமும் - பல வகையான (எழுத்துக்களின்) வித்தியாசங்களும், சொல்லும் - சொற்களின் பேதங்களும், பெரும் கலை யிருநாலெட்டு - அறுபத்துநாலு பெருமை பொருந்திய கலைஞானமும், கீதமும் - கீதமும், நாத யாழும் - நாதத்தை உடைய வீணையும், கின்னரம் - கின்னரமும், முதலவாய - முதலாகிய, போதமும் - ஞானமும், வாரி - (அவ்விருவருக்கும்) அள்ளி அள்ளி, நீரில் - கிரமப்படியே, கரைத்துடன் புகட்டினுனே - சொல்லித் தெரியப்படுத்தினுர். எ-று. ஏ - ஈற்றசை.

"வாரிநீரிற் கரைத்துடன் புகட்டினுன்" என்பதற்கு சமுத்திர நீரைப் போல கரைத்துப் புகட்டினுன்' என்றும் பொருள் கூறுவர். (கக)

ஈடிலாநாதருமின்சொற்கின்னரர்யாருமேங்கப்
பாடினுற்றீய்ந்துலர்ந்தபயிரெலாம்விளைவுமல்கும்
வாடிநாளனேகம்பட்டமரங்களுந்தழைக்குமுன்னுள்
வீடினருயிர்வந்துற்றுவெள்ளென்பும்விதிர்விதிர்க்கும்.

[ஒப்பற்ற நாதரும் இன்சொற் கின்னரும் மற்றுமுள்ள யாவர்களும்,
ஏக்கங்கொள்ளவும், பாடினுல் தீய்ந்து காய்ந்த பயிர்கள் எல்லாம்
விளைந்து பெருகவும், வாட்டமடைந்து அநேக நாளாகிப்
பட்ட மரங்களும் தழைக்கும், முன்னுளில் இறந்த
வர்களின் வெள்ளை எலும்பும் உயிர் பொரு
ந்தி அசையும்; என்பதாம்.]

இ-ள். ஈடு இல் - ஒப்பில்லாத, நாரதரும் - நாரதரும், இன்சொல் கின்னரர் யாரும் - இனியசொல்லை உடைய கின்னரர்களும் மற்றவர்களும், ஏங்க - தோற்று விசனப்படவும், பாடினுல் - அவ்விருபெண்களும் பாடினுல், தீய்ந்து உலர்ந்த - தீய்ந்து காய்ந்துபோன, பயிர் எலாம் - பயிர்கள் எல்லாம், விளைவு மல்கும் - விளைந்து பெருகும், வாடி - வாடி, நாளனேகம்பட்ட மரங்களும் - நாள் அனேகமாகிப் பட்டுப்போன மரங்களும், தழைக்கும் - தழைவதாகும், முன் நாள் - முன்நாளிலே, வீடினர் - இறந்து போனவர்களுடைய, வெள் என்பும் - வெள்ளை எலும்பும், உயிர் வந்துற்று - உயிர் வரப்பெற்று, விதிர் விதிர்க்கும் - அசைவுகளைப் பெறும். எ-று.

'நாரதர்' யாழில் வல்லவர், தேவலோகத்தும் அதற்கு மேற்பட்ட உலகங்களும் சென்று யாழ்வாசிப்பவர்கள். கின்னரர் ஓர்வகை யாழ்வாசிக்கும் கூட்டத்தார். (கஉ)

அந்தவேளையிலயோத்தியரசனைக்கண்டுமீண்டு
கந்தவார்சடிலமௌலிக்கௌசிகன்றன்னைப்போற்றி
யிந்தவாவியிலேமன்னனெண்ணருஞ்சேனையோடும்
வந்தனனென்னவேதமாதவரெடுத்துரைத்தார்.

[அந்தச் சமயத்தில் அயோத்தி அரசனைக்கண்டு முனிவர்கள் திரும்பி வந்து விஸ்வாமித்திரரிடம் இந்த வாவியில் அரிச்சந்திரன் தன் சேனை யுடன் வந்திருக்கின்றான் என்றனர் என்பதாம்.]

இ-ள். அந்தவேளையில் - அந்தச் சமையத்தில், வேதமாதவர் - வேதங் களை உணர்ந்த முனிவர்கள், அயோத்தி அரசனைக்கண்டு மீண்டு - அயோத்தி யாபுரிக்கு அரசனாகிய அரிச்சந்திரமகாராஜனைக் கண்டு திரும்பி வந்து, கந்தம் - வாசனை பொருந்திய, வார் - நீண்ட, சடிலம் - சடையாகிய, மௌலி-முடியை உடைய, கௌசிகன் தன்னைப்போற்றி - விஸ்வாமித்திரரை வணங்கித் துதி த்து, இந்த வாவியிலே - இந்தக்குளத்தின் அருகே, மன்னன் - அரிச்சந்திர மகாராஜன், எண்ணரும் சேனையோடும் - எண்ணுதற்கு அரிதான சேனைகள் உடனே, வந்தனன் என்ன - வந்து இறங்கி யிருக்கின்றானென்று, எடுத்து உரைத்தார் - தெரியச்சொன்னார்கள். எ-று. (கங)

புண்ணியந்திரண்டயாக்கைப்புரவலன்வந்தானென்ன
வெண்ணியவெண்ணமெல்லாமுடியுமென்றேம்பலெய்தாப்
பண்ணியன்மதுரச்செஞ்சொற்பவளவாய்கரியசெவ்வேற்
கண்ணியர்தம்மைநோக்கிக்கௌசிகன்விளம்பலுற்றான்

[அரிச்சந்திரன் வந்திருக்கின்றான் என்ற உடனே நாம் எண்ணிய எண்ணம் எல்லாம் முடியும் என்று சந்தோஷங்கொண்டு, அவ்விரு பெண்களை யும் பார்த்து விஸ்வாமித்திரர் சொல்லலாயினர் என்பதாம்.]

இ-ள். புண்ணியம் - புண்ணியந்தானே, திரண்ட - திரண்டிருக்கின் றதை ஒத்த, யாக்கை - தேகத்தை உடைய, புரவலன் - அரசன், வந்தான் என்ன - வந்திருக்கின்றான் என்று சொல்லவே, எண்ணிய - நினைத்திருக் கின்ற, எண்ணம் எல்லாம் - நினைவுகள் எல்லாம், முடியும் என்று - இனி முடிவுபெறும் என்று, ஏம்பல் எய்தா - சந்தோஷம் கொண்டு, பண் இயல் - இராகம் பொருந்தின, மதுரம் - இனிமையான, செஞ்சொல் - செம்மையான சொல்லைக்கொண்ட, பவளவாய் - பவளம்போன்ற வாயை உடைய, கரிய - கறுத்த, செவ்வேல் - செவந்த வேல்போலும், கண்ணியர் தம்மை - கண்களை உடைய அந்தப்பெண்களை, நோக்கி - பார்த்து, கௌசிகன் - விஸ்வாமித்திர முனிவர், விளம்பலுற்றான் - சொல்லலானார். எ-று. (கச)

பெடைநடமடவீர்வாவிப்பெருங்கரைதன்னில்வந்த
படையுடைவேந்தன்பாற்போய்ப்பாடலாலுருக்கிவெற்றிக்
குடையினைக்கொண்மினல்லாற்கவிகையைக்கொண்மினென்ன
விடைகொடுத்திடலுமாதர்விரைவினிற்றெழுதுபோனார்.

[வாவிக்கரையில் இருக்கிற அரிச்சந்திரனிடத்தில்போய் உங்கள் பாட்டி
ஞல் அவனை உருகச்செய்து அவன் வெற்றிக்குடையைக் கொண்டு
வாருங்கள். அது கூடாதாயின், அவனோடு புணர்ந்து வாருங்
கள் என்று விடைகொடுத்தனுப்ப அந்தப் பெண்களும்
விரைந்து வணங்கிப் போனார்கள் என்பதாம்.]

இ-ள். பெடை - அன்னப்பெடைபோன்ற, நடை - நடையை உடைய, மடவீர் - பெண்களே! வாவிப் பெருங்கரை தன்னில் - நமது குளத்தினுடைய பெரிய கரையிலே, வந்த - வந்திருக்கின்ற, படையுடை வேந்தன்பால் போய்- சேனைகளையுடைய அரசனிடத்திலே சென்று, பாடலால் உருக்கி - நீங்கள் உங்கள் பாட்டுகளினாலே உருகச்செய்து, வெற்றிக்குடையினைக் கொண்மின்-அவனுடைய வெற்றிக்குடையை வாங்கி வாருங்கள், அல்லால் - அது கூடாதாயின், கலவியைக் கொண்மின் - அவனோடு கூடி ரமித்தலைக்கொள்ளுங்கள், என்ன - என்று, விடைகொடுத்திடலும் - உத்தரவு கொடுக்கவே, மாதர் - அந்தப்பெண்கள், விரைவினில் - விரைவிலே, தொழுது போனார் - வணங்கிக் கொண்டு போனார்கள் எ-று. (கரு)

எடுத்தநன்மகரயாழுமேந்தியகுழலுந்தோன்ற
வுடுத்தமேகலையுஞ்செம்பொற்சிலம்புநின்றோசைகாட்டத்
தொடுத்தபூங்கோதைசோரத்துணைமுலைத்துமபிவிம்ம
வடுத்தபூஞ்சோலைநீங்கியகன்புனற்பொய்கைபுக்கார்.

[அவ்விருவரும் கையிலே மகரவீணையும், புல்லாங்குழலும் தோன்ற,
உடுத்தின மேகலாபரணமும் செம்பொற் சிலம்பும், சப்திக்க,
பூமாலைகள் அவிழ்ந்து விழவும், இரண்டு கொங்கை
களும் அசைந்து பெருகவும் தாம் இருந்த
பூஞ்சோலையை விட்டு விசாலமான
நீர்க்குளத் தருகேபோய்ச் சேர்ந்
தார்கள் என்பதாம்.]

இ-ள். எடுத்த - கையிலே கொண்ட, நல்மகர யாழும் - நல்ல மகர வீணையும், ஏந்திய - கையிலே தாங்கிய, குழலும் - புல்லாங்குழலும், தோன்ற-தெரியவும், உடுத்த - உடுத்தின, மேகலையும் - மேகலாபரணமும், செம்பொற் சிலம்பும் - செம்பொன்னால் செய்த சிலம்புகளும், நின்று ஓசைகாட்ட-நிலைகொண்டு தொனிகளைக் காட்டவும், தொடுத்த பூங்கோதை சோர - தொடுத்து அணிந்த பூமாலைகள் அவிழ்ந்து விழவும், துணைமுலை - இரண்டு முலைகளும், ததும்பி விம்ம - அசைந்து பெருகவும், அடுத்த பூஞ்சோலை நீங்கி - தாமிருந்த பூஞ்சோலையை விட்டகன்று, அகன்புனல் பொய்கை புக்கார் - அகலமான நீரையுடைய குளத்திற்கு அருகே போய்ச்சேர்ந்தார்கள். எ-று. (கசு)

கனைகழற்கடுங்காற்சேனைக்கடலினிற்சென்றுபுக்க
வினைநெடுவேற்கணாரையருள்பொழிவிழியானோக்கி

யினையரென்றவரைத்தேறாதையுறவெய்துமெல்லை
புனையிழைமாதர்வந்துபுரவலற்போற்றிநின்றார்.

[தனது சேனைகளை எல்லாம் தாண்டி வந்த அந்தப்பெண்களை அருள்
பொழிகின்ற கண்ணால் பார்த்து, இன்னவர் என்று தெரியாமல்
சந்தேகங் கொள்ளுகிற சமயத்தில் அந்தப்பெண்கள் வந்து
அரிச்சந்திரனைத் துதித்து நின்றார்கள் என்பதாம்.]

இ-ள். கனை - சப்திக்கின்ற, கழல் - வீரகண்டாமணிகள் கட்டிய, கடும் கால் சேனை - வேகம் கொண்ட கால்களையுடைய சேனை, கடலினிற் சென்று புக்க - கடலுக்குள்ளே போய்க்கூடின, வினை - கொலைத்தொழிலைச் செய்வதான, நெடுவேல் கணாரை - நீண்ட வேல்போலும் கண்ணை உடைய அப் பெண்களை, அருள்பொழி விழியால் நோக்கி - கிருபை வழிகின்ற கண்களால் பார்த்து, இனையரென்று - இன்னாரென்று, அவரைத்தேறாது - அவர்களைத் தெரிந்து கொள்ளாமல், ஐயுறவு எய்தும் எல்லை - சந்தேகம் கொள்ளுகிற சமயத்திலே, புனையிழை மாதர் வந்து - ஆபரணங்களை யணிந்த அந்தப் பெண்கள் வந்து, புரவலற் போற்றி நின்றார் - அரிச்சந்திரனைத் துதித்து நின்றார்கள். எ-று.

'கணாரை' என்பது கண்ணாரை என்பதின் தொகுத்தல் விகாரம். "அருள் பொழி விழியால் நோக்கி' என்றதனால் தீய நோக்கேனும் காம நோக்கேனும் இல்லாது என்பது போதரும். (கஎ)

தோளுமத்தோளிர்சாத்துஞ்சுடர்மணிவலயமுஞ்செந்
தாளுமத்தாளில்வீரக்கழலுநேர்தாழ்ந்தகையும்
வாளுநீண்மாலைமார்பும்வதனமுநோக்கிமார
வேளுநேரில்லான்றன்னைப்புகழ்ந்தனர்வியந்துரைப்பார்.

[தோள்களும், அந்தத் தோள்களிலே அணிந்த மணிக்கேயூரங்களும், சிவந்த
கால்களும், அந்தக் கால்களில் அணிந்த வீரக்கழலும், நேரே தொங்குவ
தான கைகளும், வாளும், மாலையணிந்த மார்பும், முகமும் பார்
த்து, மன்மதனும் ஒப்பாகாத அரிச்சந்திரமகாராஜனை
தோத்தரித்து அதிசயித்துச் சொன்னார்கள்
என்பதாம்.]

இ-ள். தோளும் - தோள்களும், தோளில் சாத்தும் - அந்தத் தோள்களிலே அணிந்து உள்ள, சுடர்மணி வலயமும் - பிரகாசமுள்ள, ரத்நகேயூரங்களும், செந்தாளும் - சிவந்த கால்களும், அத்தாளில் வீரக்கழலும் - அந்தக் கால்களிலே பூண்ட வீரக்கழல்களும், நேர் தாழ்ந்த கையும் - நேரே தொங்குவதாகிய கைகளும், வாளும் - (இடையிலே கட்டியுள்ள) மந்திரவாளும், நீண் மாலை மார்பும் - நீண்ட மாலை அணிந்த மார்பும், வதனமும் - முகமும், நோக்கி - பார்த்து, மாரவேளும் நேர் இல்லான் தன்னை - மன்மதனுகிய

மேலும் ஒப்புச்சொல்ல முடியாத மிகுந்த அழகு வாய்ந்த அரிச்சந்திரமகாரா ஜனை, புகழ்ந்தனர் - தோத்திரங்கள் செய்தவர்களாய், வியந்து உரைப்பார் - அதிசயித்துச் சொல்வாராயினர் எ-று.

'சுடர்மணி வலயம் என்றது' வாகுவலயத்தை 'கேர் தாழ்ந்த கை' என்றது முழந்தாள்வரை நீண்ட கையை. (கஅ)

யாணர்க்குள் யாண நின்னைப் பெய்துதற் கிழைத்த வேதா
வீணர்க்குள் வீண னெம்மை விதித்தவன் றிந்திரற் கும்
வாணர்க்கு மனந்த னார்க்கும் வாய்த்தவா றேபோ னின்னைக்
காணற்குந் தொழற்கு வாய்த்த கண் கை நா படைத்திலானே.

[உலகத்தில் உள்ள அழகர்கள் எல்லாரிலும் அழகனே! உன்னைச்சேரும்படி எங்களை சிருஷ்டித்த பிரமன் வீணன் ஏன் என்றால், எங்கள் இருவரையும் சிருஷ்டித்த அப்பொழுது தானே இந்திரனுக்கும் வாணாசுரனுக்கும் ஆதிசேஷனுக்கும் அமைத்ததுபோல, உன்னைப் பார்க்கிறதற்கும் வணங்குகிறதற்கும் துதிப்பதற்கும் கண், கை நாக்கும் ஆயிரம் ஆயிரமாகச் சிருஷ்டிக்காது போனதினால் என்பதாம்.]

இ-ள். யாணர்க்குள் யாண - உலகத்தில் உள்ள அழகர்களிலே சிறந்த அழகனே! நின்னை - உன்னை, எய்துதற்கு - சேர்வதற்கு, இழைத்த வேதா - சிருஷ்டித்த பிரமன் ஆனவன், வீணர்க்குள் வீணன் - வீணனவர்களில் அதிகமும் வீணனவன், எம்மை விதித்த அன்று - எங்கள் இருவரையும் சிருஷ்டித்த அப்பொழுது தானே, இந்திரற்கும் - இந்திரனுக்கும், வாணர்க்கும் - வாணாசுரனுக்கும், அனந்தனார்க்கும் - ஆதிசேடனுக்கும், வாய்த்த வாறேபோல் - அமைந்திருப்பதைப்போல, நின்னைக்காணற்கு - உன்னைக் காண்பதற்கும், தொழற்கு - வணங்குதற்கும், வாய்த்த - பொருந்திய, கண் கை நா படைத்திலானே - கண்களும் கைகளும் நாக்குகளும் (ஆயிரம் ஆயிரமாகப் படைத்திலனே). எ-று. ஏ - ஈற்றசை. (கசு)

வையநின் னகரி செம்பொன் வடகிரி நினது பீடம்
வெய்யவ னினது தீபம் வேலைமஞ் சனநீர்ச் சாலை
செய்யவ ணினது பாரி திங்கணின் கவிகை செவ்வே
லையநின் பெருமை யெம்மா லளவிடற் கரிதே யென்றார்.

[உலகம் முழுதும் உனது நகரம், வடமேரு சிம்மாதனம், சூரியன் விளக்கு, சமுத்திரம் திருமஞ்சனம் ஆடுகிற இடம், லட்சுமியே மனைவி, சந்திரனே குடை, செவ்விய வேலை உடைய அரிச்சந்திர மகாராஜனே! உம்முடைய பெருமை எங்களால் அளவுசெய்து சொல்வதற்கு முடியாது என்று சொன்னார்கள் என்பதாம்.]

இ-ள். வையம் நின்னகரி - உலகமே உனது நகரம், செம்பொன் வடகிரி - செம்பொன்மயமான வடமேருமலையே, நினது பீடம் - உமது சிம்மாதனம்,

வெய்யவன் - சூரியன், நினது தீபம் - உமக்கு விளக்கு, வேலை - சமுத்திரமே, மஞ்சனநீர்ச்சாலை - உமக்கு திருமஞ்சனம் ஆடுகிற இடம், செய்யவள் - லட்சுமி ஆனவள், நினது பாரி - உமக்கு மனையாள், திங்கள் நின் கவிகை - சந்திரனே உமக்குக்குடை, செவ்வேல் ஐய - (ஆதலால்) செவ்வையான வேலை உடைய ஐயனே, நின்பெருமை - உம்முடைய பெருமையை, எம்மால் - எங்களால், அளவிடற்கு - அளவுசெய்தற்கு, அரிதே என்றார் - அருமையானதே என்று சொல்லினார்கள். எ-று. (உ0)

சொல்லியமாற்றங்கேளாத்தோன்றலும்வியந்துநோக்கி
வல்லிநீர்யாரேதூர்தான்வந்தவாறேதீண்டென்றான்
அல்லியந்தொடையன்மார்பவிவ்வனத்தகத்துவாழ்வோம்
புல்லியசாதியீனப்புலைச்சியர்யாங்களையா.

[அரிச்சந்திரன் அவர்கள் சொல்லிய வார்த்தையைக்கேட்டு, ஆச்சரியப்பட்டுப் பார்த்து பெண்களே! நீங்கள் யாவர்கள், எந்த ஊர்? இங்கே வந்த காரணம் என்ன? என்று கேட்டான். பூமாலையை அணிந்த மார்பை உடையவனே இந்த வனத்திடை வாழ்கின்றவர்கள் நாங்கள், கீழான ஜாதியாகிய புலைச்சியர்கள் என்றார்கள் என்பதாம்.]

இ-ள். சொல்லிய - அந்தப்பெண்கள் புகழ்ந்து சொல்லிய, மாற்றம் கேளா - வார்த்தைகளைக்கேட்டு, தோன்றலும் - அரிச்சந்திரமகாராஜனும், வியந்து நோக்கி - அதிசயித்துப் பார்த்து, வல்லி - ஓ வல்லிபோலும் பெண்களே, நீர் யார் - நீங்கள் யாவர்கள்?, ஏது ஊர் - எந்த ஊர்?, தான் வந்த வாறு ஏது ஈண்டு - இங்கே என்னிடம் வந்த காரியம் என்ன?, என்றான் - என்று கேட்டான், (அதற்கு அந்தப்பெண்கள்) அல்லியம் தொடையல் மார்ப - அக இதழ்களை உடைய அழகிய மலர்மாலையை அணிந்த மார்பை உடையவனே! இவ்வனத்து அகத்து வாழ்வேம் - நாங்கள் இந்த வனத்துக்குள்ளே வாழ்கின்றவர்கள், புல்லியசாதி - இழிவுள்ள ஜாதியான, ஈனப்புலைச்சியர் யாங்கள் ஐயா- ஈனப்புலைச்சியர்கள் நாங்கள் ஐயனே. எ-று.

'தோன்றல்' சிறப்பு உணர்த்திவரும் ஆண்பாற் பெயர். 'புல்லிய' கேவலமான, 'ஈனம்' குறைந்த, 'தொடையன் மார்ப' அண்மை விளி. (உக)

வேதமாமுனிவன்வைகுமேதகுசாரனின்றன்
பாதமேபணிந்துநோக்குமருத்தியிற்பதறிவந்தோம்
போதமுநெறியுமில்லாப்புல்லியேயல்லியாழுந்
தேமுஞ்சிறிதுவல்லேங்கேளோனுங்கிளத்திப்பின்னர்.

[வேதமாமுனிவரான விஸ்வாமித்திரர் இருக்கும் மேலான இடத்திலிருந்தும் உம்பாதங்களையே வணங்கி உம்மைப் பார்க்கவேண்டும் என்னும் ஆசையோடு வந்தோம் ஞானமும் அதற்கேற்ற அனுஷ்டானமும் இல்லாத இழிந்தவர்கள் ஆனாலும் நல்ல வீணையும் கீதமும் சிறிது தேர்ந்திருக்கிறோம், கேட்பாயாக என்று சொல்லிய பிறகு, என்பதாம்.]

இ-ள். வேதமாமுனிவன் வைகும் - வேதங்களையுணர்ந்த சிறந்த முனிவராகிய விஸ்வாமித்திரர் வசிக்கும், மேதகு - மேலான, சாரல் நின்று - இடத்திலிருந்து, உன்பாதமே - உன்பாதங்களையே, பணிந்து - வணங்கி, நோக்கும்- உன்னைத் தரிசிக்கும், அருத்தியில் - ஆசையினால், பதறி வந்தோம்-விரைந்து வந்தோம், போதமும் - ஞானமும், நெறியும் இல்லா - அதற்கு ஏற்ற அனுஷ்டானமும் இல்லாத, புல்லியேம் - இழிந்த ஜாதியர்களாகிய நாங்கள், நல்யாழும் - நல்ல யாழும், கீதமும் - இசையும், சிறிது வல்லேம் - கொஞ்சம் தெரிந்திருக்கிறோம், கேள் என - கேளும் என்று, கிளத்தி - சொல்லி, பின்னர் - பின்பு. எ-று. (உஉ)

மகரயாழ்வாங்கிநீங்குமாடகமுறுக்கிச்செம்பொற்
சிகரமாமுலையிற்சேர்த்திச்செவியுறவிசைபெழீஇத்தந்
நிகரிலாவமுதப்பாடற்பாணியினிறுவிப்பின்னர்
பகர்தருமிசைகளேழும்வகைவகைபாடினாரே.

[மகரவீணையைக் கையில் கொண்டு தளர்ந்த தந்திகளை மாடகத்தால் முறுக்கி, தங்கள் முலைமேலே வீணையைச் சாத்திக்கொண்டு காதுடனே சுருதி கூட்டி, ஒப்பற்ற அமுதப்பாடலை கைவழியிலே தோன்ற நிறுத்தி, பின்பு சொல்லும்படியான ஏழிசைகளையும் தோன்றப்பாடினார்கள் என்பதாம்.]

இ-ள். மகரயாழ் வாங்கி - மகரவீணையைக் கையிலே எடுத்து, நீங்கும் மாடக முறுக்கி - தளர்ந்துள்ள தந்திகளை முறுக்காணிகளாலே முறுக்கி, செம்பொற் சிகரமாமுலையில் சேர்த்தி - செம்பொன்மலைச் சிகரம்போலுள்ள பெரிய தனங்களிலே அவ்வீணையைச் சாத்திக்கொண்டு, செவியுற - காதோடு பொருந்தும்படி, இசை எழீஇ - சுருதி கூட்டி, தம் நிகரிலா அமுதப்பாடல் - தமது ஒப்பில்லாத அமுதரசம் கொண்ட பாடலை, பாணியின் நிறுவி - கைவழியிலே தோன்ற நிறுத்தி, பின்னர் - பிறகு, பகர்தரும் இசைகள் ஏழும் - சொல்வனவாகிய ஏழிசைகளையும் வகைவகை பாடினாரே - கிரமக்கிரமமாகப் பாடினார்கள். எ-று.

ஏழிசைகளாவன:—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம், என்பன. இவைகளை ஏழ்சுரம் எனவுங் கூறுவர். இவற்றின் ஓசை மயில், இடபம், ஆடு, கொக்கு, குயில், குதிரை, யானை இவற்றிற்கு உவமை கூறுவர், இவைகள் முறையே பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை,

மாதுளம் கனி எனச்சுவை ஒப்புக்கூறுவர்; மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், பொன்னுவிரை, புன்னை என மண உவமையும் கூறுவர். அக்ஷரம் முறையே, ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ என்று கூறுவர் மாத்திரை முறையே நான்கு, நான்கு, இரண்டு மூன்று, நான்கு, மூன்று, இரண்டு எனவும் இவைகளுக்கு இறைவர், முறையே விசுவாமித்திரன், ஜமதக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன், ஈசன் எனவுங் கூறுவர். (உ௩)

காவியங்கண்ணுமூடாகவரிதழ்தானுங்கோடா
வாவியங்கமலமன்னவதனமுநுதலுமேறு
தூவியந்தோகைநல்லார்சுவரின்மேலெழுதிவைத்த
ஓவியம்பாடிற்றென்னப்பாடினருருகயாரும்.

[கண்ணை மூடாமலும், இதழ் கோணுமலும் முகமும் நெற்றியும் ஏறுமலும் சுவரில் எழுதிய சித்திரம் பாடுவதுபோல் அசையாதிருந்து எல்லோருடைய மனமும் உருகும்படிப் பாடினர்கள் என்பதாம்.]

இ-ள். காவி - நீலோற்பலத்தை ஒத்த, அம் கண்ணும் - அழகிய கண்களும், மூடா - மூடாமலும், கவர் - இருபிளவாய் உள்ள, இதழ்தானும் - உதடுகளையேனும், கோடா - கோணுமல், வாவி - குளத்தில் உள்ள, அம் - அழகிய, கமலம் அன்ன - தாமரை மலர்போன்ற, வதனமும் - முகமும், நுதலும்-நெற்றியும், ஏறு - ஏறுமலும், தூவி அம் தோகை - இறகை உடைய, அழகைக் கொண்ட மயில்போன்ற சாயலை உடைய, நல்லார் - அந்தப்பெண்கள், சுவரின் மேல் - சுவரின்மேலே, எழுதிவைத்த - எழுதிவைத்த, ஓவியம் பாடிற்று என்ன - சித்திரம்பாடிற்று என்று சொல்லும்படி, உருக யாரும் - கேட்டவர்கள் யாரும் உருகும்படி, பாடினர் - அசையாமல் இருந்து பாடினர்கள். எ-று.

கரும்பினைக்கடிந்ததீஞ்சொற்காரினைக்கடிந்தகூந்தற்
பரும்பணைக்கொங்கைமாதர்பவளவாய்ப்பிறக்குங்கானம்
வரும்பனிமதியைநோக்கிக்கிண்கிணிவாய்கொண்டார்ப்பி
னரும்பவிழாமற்போதுள்வண்டிருந்தார்ப்பதென்ன.

[கரும்பினைவென்ற இனிய சொல்லும், காரைவென்ற கரிய கூந்தலும், மிகவும் பருத்த முலைகளையும் உடைய அந்தப்பெண்களுடைய பவளம்போன்ற வாயிலே பிறக்கும் கானம், வருகின்ற குளிர்ந்த சந்திரனைகண்டு கிண்கிணி வாய்விட்டுச் சப்திப்பது போல அரும்புமுற்றும் மலராதபடி செவ்வல்லி அரும்புக்குள்ளே யிருந்து வண்டுகள் பாடுவது போல் பாடினர்கள் என்பதாம்.]

இ-ள். கரும்பினைக்கடிந்த தீம்சொல் - கரும்பை சுவையால் வென்ற இனியசொல்லும், காரினைக்கடிந்த கூந்தல் - மேகத்தை கருமையினுல் வென்ற

கரிய கூந்தலும் பரும்பணைக்கொங்கை - மிகப்பருத்த கொங்கைகளும் உடைய, மாதர் - அந்த புலைப்பெண்களின், பவளவாய் பிறக்கும் கானம் - பவளம் போன்ற வாயிலிருந்து பிறக்கும் இசையானது, வரும்பனி மதியை நோக்கி - உதயமாகிற குளிர்ந்த சந்திரனைக்கண்டு, கிண்கிணி வாய்கொண்டு - கிண்கிணி போலச் சிறிது வாய் மலரப்பெற்று, ஆர்ப்பின் - வண்டுகள் சப்திப்பதனால், அரும்ப விழாமல் - செவ்வல்லிகள் முற்றும் மலராதிருப்பதுபோல், போதுள் - அச்சிறிது மலர்ந்த அல்லிக்குள்ளிருந்து, வண்டிருந்தார்பதென்ன - வண்டுகள் இருந்து பாடுவதுபோல் பாடினார்கள். எ-று. (உரு)

இல்லையோவிமைத்தலென்பாரெடாதுதொடாதுவைத்த
வில்லையோபுருவமாகவிதித்தனன்வேதாவென்பார்
முல்லையோமுருந்தோமுத்தோமுறுவலையறியோமென்பார்
நல்லையேநல்லையென்னுநராதிபர்வியந்துரைத்தார்.

[அப்படிப் பாடும்போது கண்டவர்கள் எல்லாம் இப்பெண்களுக்கு இமைத்தல் கிடையாதோ என்றும், எடுப்பதும் தொடுவதும் அற்ற வில்லோ புருவம் என்பார்கள், இவ்விருவர்களுடைய பற்கள் முல்லை அரும்புகளோ! முருந்துகளோ! முத்துக்களோ யாதொன்றும் சொல்லத் தெரியவில்லை என்பார்கள். நன்றாய்ப் பாடுகிறீர்கள் நன்றாய்ப் பாடுகிறீர்கள் நன்றாய்ப் பாடுகிறீர்கள் என்று அரசர்கள் எல்லாம் வியந்து சொன்னார்கள். என்பதாம்.]

இ-ள். இல்லையோ இமைத்தல் என்பார் - (அப்பெண்கள் பாடுவதைக் கண்டவர்கள் எல்லாம்) இந்தப்பெண்கள் இமைப்பது இல்லையோ என்பார்கள், எடாது - ஒருவரும் எடுக்காதபடிக்கும், தொடாது - தொடாதபடிக்கும், வைத்த வில்லையோ - வைத்திருப்பதாகிய வில்லைத்தானே, வேதா - பிரமனானவன், புருவமாக - புருவமாக, விதித்தனன் என்பார் - விதித்தான் என்று கூறுவார்கள். முல்லையோ - முல்லை யரும்புகளோ!, முருந்தோ - முருந்துகளோ, முத்தோ - முத்துக்களோ, முறுவலை - பல் வரிசைகளை, அறியோம் என்பார் - அறிந்துகொள்ள முடியவில்லை என்பார்கள், நல்லையே நல்லையென்னு - பெண்களே! நன்றாய்ப் பாடுகிறீர்கள் - நன்றாய்ப் பாடுகிறீர்கள் என்று, நராதிபர் - அரசர்கள் எல்லாம், வியந்து உரைத்தார் - அதிசயித்துச் சொன்னார்கள். எ-று. ()

அட்டமாவனைத்தும்புள்ளுமாவிபெற்றேகுமென்பார்
சுட்டநீள்வனங்களெல்லாஞ் சோலைபாத்தழைக்குமென்பார்
பட்டவாள்வீரரெல்லாமுப்வகைபலிப்பதென்பார்
வட்டமாமதிபமன்னவதனத்தார்பாடல்கேட்டே.

[வட்டச்சந்திரனை ஒத்த இந்தப்பெண்கள் பாடலைக்கேட்டு நம்மால்
கொல்லப்பட்ட மிருகங்களும் பறவைகளும் உயிர்பெற்றுப்
போகும் என்பார்கள், சுட்ட காடுகள் எல்லாம் சோலைக
ளாகத் தழைக்கும் என்பார்கள், இறந்த வீரர்கள்
எல்லாம் பிழைக்கும்படி பலிதமாயிற்று
என்பார்கள் என்பதாம்.]

இ-ள். வட்டமாமதியம் அன்ன - வட்டமான பூர்ணச்சந்திரனை ஒத்த, வதனத்தார் - முகத்தை உடைய அப்பெண்கள் (பாடுகிற), பாடல் கேட்டே- பாட்டைக்கேட்டு, அட்டமா அனைத்தும் - (இனி) நம்மால் கொல்லப்பட்ட மிருகங்கள் எல்லாம், புள்ளும் - பட்சிகளும், ஆவிபெற்று - உயிர்பெற்று, ஏகும் என்பார் - உயிர்பெற்று ஓடிவிடும் என்பார்கள், சுட்ட - நம்மாலே சுடப் பட்ட, நீள்வனங்கள் எல்லாம் - நீண்ட காடுகள் எல்லாம், சோலையா - சோலை யாகத், தழைக்கும் என்பார் - தழைக்கும் என்பார்கள், பட்டவாள் வீரர் எல் லாம் - நமது சேனையிலே இறந்த வாளையுடைய வீரர்கள் எல்லாம், உய்வகை- பிழைக்கும்படியான விதம், பலித்தது என்பார் - பலிதமாயிற்று என்று கூறு வார்கள். எ-று. ஏ - ஈற்றசை. (உஎ)

நாடெலாமழிக்கக்கேட்டுநரபதிவெகுண்டுவேட்டை
யாடலால்வெருண்டுபோய்த்தம்மாருயிரோம்பித்துன்றுங்
காடெலாங்கரந்தமாக்கள்கன்னியர்மதுரகீதப்
பாடலால்வெளிப்பட்டுற்றபறவையுர்பறந்தவம்மா.

[நாட்டை அழிக்கின்றனவென்று கேள்விப்பட்டு அரசன் கோபித்து வேட்டை
ஆடுகிறபடியினால் பயந்துபோய்த் தமது ஆருயிரை காக்கும்பொருட்டு நெரு
ங்கிய காடுகளிலெல்லாம் ஒளித்துக்கொண்டிருந்த மிருகங்களும் பறவை
களும் இந்தப்பெண்கள் பாடலால் வெளிப்பட்டு ஓடவும்
பறக்கவும் ஆயின என்பதாம்.]

இ-ள். நாடு எலாம் - நாட்டை எல்லாம், அழிக்கக்கேட்டு - மிருகங்கள் அழிக்கின்றது என்பதைக்கேட்டு, நரபதி - அரசன், வெகுண்டு - கோபித்து, வேட்டை ஆடலால் - வேட்டை ஆடுதலினால், வெருண்டுபோய் - பயந்து போய், தம் ஆருயிர் ஓம்பி - தமது அருமையான உயிரைப் பாதுகாத்துக் கொண்டு, துன்றும் - நெருங்கிய, காடெலாம் - காடுகள் முழுதும், கரந்தமாக் கள் - போய் மறைந்த மிருகங்கள், கன்னியர் - இந்தப்பெண்களின், மதுர கீதப் பாடலால் - மதுரகீதப்பாடல்களினாலே, வெளிப்பட்டுற்ற - வெளிப்பட்டு பறவையும் வந்தன, பறந்த அம்மா - பறவைகளும் வெளிப்பட்டுப் பறக்க லாயின. எ-று. அம்மா, ஈற்றசை வியப்பும் ஆம்.

'நரபதி' நரர்களுக்குத் தலைவன் என்னும் காரணம்பற்றி அரசனுக்கு வந்த பெயர். (உஅ)

மஞ்சலம்பிடியேறென்னமாமுரசதிருமோசைக்
கஞ்சலாலனந்தகோடியசுணமாவனைத்துமாவி
துஞ்சலாதீண்டிமொய்ப்பத்தும்புருமுதலோரெல்லா
மின்சொலினோசையெய்தயாழிசையாதென்றோர்வார்.

[மேகங்களின் பெரிய இடி ஓசைபோலச் சப்திக்கும் பெரிய முரசொலிக்கு பயப்படுதலாலே அநேகம் கோடி அசுவைப்பட்சிகள் எல்லாம் உயிர் மாயாமல் கூடி நெருங்கத்தும் புரு முதலியவர்கள் எல்லாம், இனிய சொல்லினோடு கூடிய இவ் இருவர் பாட்டோசைகேட்டு இக் வீணகானம் எதென்று யோசித்தார்கள் என்பதாம்.]

இ-ள். மஞ்சு - மேகங்கள், அலம்பு - முழங்குகின்ற, இடி ஏறு என்ன- பெரிய இடியைப்போல, மாமுரசு - பெரிய முரசங்கள், அதிரும் ஓசைக்கு- ஒலிக்கின்ற ஓசைக்கு, அஞ்சலால் - பயப்படுதலினாலே, அநந்தங்கோடி அசுணமா அனைத்தும் - அநேகம்கோடி அசுணப்பட்சிகள் எல்லாம், ஆவிதுஞ்சலாது - உயிர் மாய்கிறதில்லாமல், ஈண்டிமொய்க்க - கூடிநெருங்க, தும்புரு முதலோரெல்லாம் - தும்புரு முதலியவர்கள் எல்லாம், இன்சொலின் - இனிமையான சொல்லோடு, ஓசை எய்த - இவ் இருபெண்களின் பாட்டின் ஓசை தம் காதில்விழ, யாழிசை - இந்த யாழின் இசை, யாது என்று ஓர்வார்-எவர்களுடையது என்று யோசிக்கல் ஆனார்கள். எ-று; 'இடி ஏறு' ஆண் இடி; பெரிய இடியை ஆண் இடி என்று கூறுவது மரபு.

'அசுணமா' ஓர் இசைப்பிரியமுள்ள ஒருவகைப்பாவை வேடர்கள் இதனைப் பிடிப்பதற்கு யாழ் வாசிப்பார்கள் அப்பொழுது அவைகள் மெய்மறந்து கேட்டிருக்கும். அப்பொழுது 'பறை' என்னும் வாத்தியக்கருவியை அடிப்பார்கள் அப்பொழுது மயங்கிவிடும் அப்பொழுது பிடித்துக்கொள்வார்கள். இதனை ஒருவகை இசையறியும் மிருகம் என்றும் கூறுவர். இதனை,'

"துறையடுத்த விருத்தத் தொகைக்கவிக்
குறையடுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறையடுத்த வசுணநன் மாச்செவிப்
பறையடுத்தது போலுமென் பாவரோ"

என்ற கம்பர் வாக்காலும் தெளியலாம். (உக)

நல்லியன்மகரயாழினதமுமிடறுமொன்றப்
புல்லியகீதவோசைசெவிவழிபுகுதலேடும்
வல்லியர்தம்மைநோக்கிமலர்த்திருக்கரமமைத்து
மெல்லியரூனும்வெற்றிவேந்தனுமிகமகிழ்ந்தார்.

[யாழின் நாதமும் கண்டத்தொனியும் ஒன்றாகக் கூடின பாட்டோசை
காதுக்குள்ளே நுழைந்த உடனே சந்திரவதியும் அரிச்சந்திரனும்
அந்தப்பெண்களைப் பார்த்து கையால் அமையச்செய்து
மிகவும் சந்தோஷப்பட்டார்கள்; என்பதாம்.]

இ-ள். நல் இயல் மகரயாழின் நாதமும் - நல்ல இசைநூல் இலக்கணத்தில் சிறந்த மகரவீணையின் நாதமும், மிடறும் - கண்டத்தொனியும், ஒன்றப் புல்லிய கீத ஓசை - ஒன்றாகக்கூடின பாட்டின் கீத ஓசை, செவிவழி புகுதல் ஓடும் - காதுக்குள்ளே புகுந்த உடனே, மெல் இயல்தானும் - மெல்லிய தன்மையையுடைய சந்திரவதியும், வெற்றி வேந்தனும் - வெற்றிகொண்டிருக்கிற அரிச்சந்திரமகாராஜனும், வல்லியர் தம்மை நோக்கி - அந்தப்பெண்களைப் பார்த்து, மலர்த்திருக்கரம் அமைத்து - தாமரை மலர்போலும் அழகிய கைகளினாலே அமையச்செய்து, மிக மகிழ்ந்தார் - அதிகமாகச் சந்தோஷப்பட்டார்கள். எ-று. (௩௦)

மணியொடுகடகஞ்செம்பொன்வளையெரிமணிப்பொன்னார
மணிதுகில்பிறவுநீட்டிக்கொண்மெனவளித்தலோடும்
பணிகளுந்துகிலும்பொன்னும்பெற்றயாம்படர்ந்தேமல்லேந்
திணிசுடர்முடியாயாங்கடேடியபரிசில்கேளாய்.

[மணியொடு, கங்கணங்களும், செம்பொன்னால் செய்த வளையல்களும்,
பிரகாசிக்கின்ற ரத்னமாலைகளும், பொன்மாலைகளும், அழகிய வஸ்தி
ரங்களும் மற்றயவைகளும் கொடுத்துப் பெற்றுக்கொள்ளுங்
கள் என்று சொன்ன அளவில், இவைகளைப் பெறுதற்கு
நாங்கள் வரவில்லை கிரீடத்தை உடைய அரசனே
நாங்கள் தேடிவந்த வெகுமானத்தைக் கேள்
என்று சொன்னார்கள் என்பதாம்.]

இ-ள். மணியொடு - ரத்தினாபரணங்களுடனே, கடகம் - கங்கணங்களும், செம்பொன் வளை - செவந்த பொன்னால்செய்த வளையல்களும், எரி மணி பொன் ஆரம் - நெருப்பைப்போன்ற மாணிக்க மாலைகளும், பொன் மாலைகளும், அணிதுயில் - அழகிய வஸ்திரங்களும், பிறவும் - மற்றுமுள்ள பொருள்களும், நீட்டிக்கொண்மென அளித்தலோடும் - கொடுத்துப் பெற்றுக் கொள்ளுங்களென்று சொல்லுமளவில், பணிகளும் - ஆபரணங்களும், துகிலும் - வஸ்திரங்களும், பொன்னும் - திரவியமும், பெற்றயாம் - பெறும் பொருட்டு நாங்கள், படர்ந்தேம் அல்லேம் - வந்தோம் அல்லோம், திணி- நெருங்கிய, சுடர் - ஒளியை உடைய, முடியாய் - கிரீடத்தை உடைய அரசனே! யாங்கள் - நாங்கள், தேடிய - வேண்டிவந்த, பரிசில் கேளாய் - வெகுமானத்தைக் கேட்பாயாக. எ-று.

'பெற்றயாம் படர்ந்தேமல்லேம்' என்பதற்கு ஆபரணங்கள் முதலியன உன்னிடத்தில் இப்பொழுது பெறுகின்ற நாங்கள் இதனை விரும்பி வரவில்லை'' என்றும் பொருள் கூறுவர். (௩௧)

எத்தியபரிசிலாளர்க்கெண்ணியவனைத்துநல்கும்
பார்த்திவவிவையெலாநின்றிருவுளப்படியாலுள்ளேம்
மூர்த்திகண்மூவர்க்காகுமுடிபுனையந்நாளேநீ
சாத்தியதவளக்கொற்றக்கவிகையைத்தருதியென்றார்.

[தேவரீரைத் துதிக்கும் பரிசிலாளருக்கு அவர்கள் நினைத்தனவெல்லாம் தரத்தக்க அரசனே! இப்போது நீர்கொடுக்கும் இவைகள் எல்லாம் உம்முடைய திருவுளச் சம்மதத்தால் எங்களிடம் இருக்கின்றன மும்மூர்த்திகளுக்கும் தகுதியானதான வெற்றிமுடி சூடிக் கொண்ட அந்த நாளிலே நீ சாத்திக்கொள்வதாகிய முத்துக்களாலான கொற்றக்குடையை, கொடுத் தருள்வாயாக என்று அவ்விரு பெண்களும் கேட்டார்கள் என்பதாம்.]

இ-ள். எத்திய - தன்னைத்துதிக்கின்ற, பரிசிலாளருக்கு - யாசகர்களுக்கு, எண்ணிய - அவர்கள் விரும்பிய, அனைத்தும் நல்கும் - எல்லாவற்றையும் கொடுக்கும், பார்த்திவ - அரசனே! இவை எலாம் - இப்பொழுது நீ கொடுக்க வருகின்ற இந்தப் பொருள்கள் எல்லாம், நின் திரு உளப்படியால் - உம்முடைய திரு உள்ளச் சம்மதத்தால், உள்ளேம் - (முனிவர்தர) எம்மிடத்திலிருக் கின்றன, (ஆசையால் வேண்டோம்) மூர்த்திகள் மூவர்க்கு ஆகும் - திருமூர்த்தி களுக்கும் புனைதற்குத் தக்கதான, முடிபுனை - முடியைச் சூடிக்கொள்ளுகின்ற, அந்நாளே - அந்த நாளிலேயே, நீ சாத்திய - நீ சாத்திக்கொள்ளும், தவளக் கொற்றக் கவிகையை - முத்துக்களாலாகிய வெற்றிக்குடையை, தருதி என்றார்- தருவாயாக என்று கேட்டார்கள் அந்தப்பெண்கள். எ-று. 'பரிசிலாளர்' இரப் போர்.

"பார்த்திவ.............ளுள்ளேம்" என்பதற்கு, அரசனே! இப்போது கொடுக்கிற இவைகள் எல்லாம் உம்முடைய திரு உளத்தின் சம்மதியாலே தரு வது ஆகும், அவைகளை நாங்கள் விரும்போம், என்றும் பொருள் உரைக்கலாம். "மூர்த்திகள் மூவர்க்காகும் முடி" மும்மூர்த்திகள் தாக்கத்தகுந்த முடி என்பது பொருளாம். (௬௨)

பழிவழியொழுகாநீதிப்பானுவின்குலத்துவேந்தர்
வழிவழிவந்தகொற்றக்கவிகையைவழங்கமாட்டேன்
விழிவழிகண்டவேறுகவிகையைவிளம்பினுங்கள்
மொழிவழிதருவேனென்றுமொழிந்தனன்மன்னர்கோமான்.

[பழிக்கத்தகுந்த வழிகளிலே செல்லாத நீதியையுடைய சூரிய குலத்து அரசர்கள் தலைமுறை தலைமுறையாகப் பிடித்து வருகிற வெற்றிக் குடையை நான் கொடுக்கமாட்டேன் இங்கே உங்கள் கண் ணுக்கு நேராகத் தோற்றுகின்ற வேறு குடைகளைக் கேட்டால் உங்கள் வார்த்தைப்படி தருவேன் என்று ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திர மகாராஜன் கூறினான் என்பதாம்.]

இ-ள். பழிவழி - பழிக்கத்தகுந்த வழிகளிலே, ஒழுகா - நடவாத, நீதி- நீதியை உடைய, நீதி - நீதியையுடைய, பானுவின் - சூரியனுடைய, குலத்து

வேந்தர் - குலத்திலே பிறந்த அரசர்கள், வழி வழி வந்த - தலைமுறை தலை முறையாகப் பிடித்து வருகிற, கொற்ற கவிகையை - வெற்றிக்குடையை, வழங்கமாட்டேன் - நான் கொடுக்கமாட்டேன், விழிவழி கண்ட - உங்கள் கண்களின் நேராக இங்கே கண்ட, வேறு கவிகையை - வேறு ஏதேனும் குடைகளை, விளம்பில் - வேண்டும் என்று கேட்டால், உங்கள் - உங்களுடைய, மொழிவழி - வார்த்தையின்படியே, தருவேன் என்று - நான் கொடுக்க மாட்டுவேன் என்று, மன்னர் கோமான் - இராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரன், மொழிந்தனன் - அந்தப் பெண்களுக்குக் கூறினான். எ-று.

'பழிவழி' சான்றோர் பழிக்கத்தகுந்த ராஜகுலத்திற்குக் குறைவான காரியங்கள். (ருங)

கனத்தவெங்காதலார்க்குக்கணித்தவராலலாதவ்
வினத்தவரொருவராலேயின்பமுண்டாகவற்றோ
மனத்துளேகுறித்துவந்தமணிக்குடைவழங்காயேலெந்
தனத்தினைத்தழுவியின்பந்தருதியென்றவர்கள்சொன்னார்.

[மிகுதியான வெப்பம்பொருந்திய காதலை உடையவர்களுக்கு அவர்கள்
நினைத்த புருஷர்களாலல்லது அவர்களை ஒப்பான மற்று ஒருவ
ராலே சுகமுண்டாக வல்லதோ? நாங்கள் மனத்திலே
எண்ணிவந்த அழகிய கொற்றக்குடையை நீர்
கொடுக்காவிட்டால் அழகிய எங்கள் கொங்
கைகளை அணைத்து எங்களுக்குச் சுகத்தை
கொடும் என்று அவ் இருபெண்களும்
கூறினார்கள் என்பதாம்.]

இ-ள். கனத்த - மிகுந்த, வெம் காதலார்க்கு - வெப்பத்தைச் செய்வதாகிய காதலை உடையவர்களுக்கு, கணித்தவலாது - அவர்கள் ஆசை கொண்ட புருஷர்களாலல்லாது, அவ் இனத்தவர் ஒருவராலே - அவர்களை ஒப்பான வேறு ஒருவராலே, இன்பம் - சுகமானது, உண்டாகவற்றோ - உண்டாகவல்லதோ?, மனத்துளே குறித்து வந்த - நாங்கள் மனத்திலே எண்ணி வந்த, மணிக்குடை - அழகிய கொற்றக்குடையை, வழங்காயேல் - நீர் கொடாவிட்டால், அம் தனத்தினைத்தழுவி - எங்களுடைய அழகிய முலைகளைத்தழுவி, இன்பம் தருதி - எங்களுக்குச் சுகத்தைக்கொடு, என்று - என்று, அவர்கள் சொன்னார் - அவ் இருபெண்களும் கூறினார்கள். எ-று.

'அவ் இனத்தவர்' அவர்களின் சுற்றத்தாராலே என்று பொருள் கூறுவர் அது பொருந்தாது 'மணிக்குடை' மணிகளாலலங்கரிக்கப்பட்ட குடை என்றும் முத்துக் குடை என்றும் பொருள் கூறுவர். (ருச)

வாட்பொருகண்ணார்கூறமந்திரத்தலைவன்சொல்வான்
வேட்பனவில்லையென்னுமெய்ந்நெறிவேந்தன்றன்பாற்
கேட்பனவறிந்துமக்குக்கிடைப்பனவுணர்ந்துகேளீர்
சேட்படநில்லுமென்னத்தெரிவையர்செப்பலுற்றார்.

[அப்படி வாளாயுதத்தை ஒத்த கண்களையுடைய அந்தப்பெண்கள் சொல்ல ஆலோசனையில் சிறந்தவனான சத்தியகீர்த்தி சொல்லுகிறான்; ஆசைப் பட்ட பொருளை இல்லை என்னாமல் கொடுக்கத்தகுந்த மெய்யான நீதிமார்க்கத்தையுடைய அரசனிடத்திலே கேட்கத்தக்கவை களைத் தெரிந்து உமக்குக் கிடைப்பவைகளைத் தெரிந்து கேளுங்கள், தூரமாக நில்லுங்கள் என்று சொல்ல, அந்தப்பெண்கள் சொல்லுகிறார்கள் என்பதாம்.]

இ-ள். வாள்பொரு கண்ணார் - வாளை ஒத்த கண்களையுடைய அந்தப் பெண்கள், கூற - அப்படிச்சொல்ல, மந்திரத்தலைவன்-ஆலோசனையில் சிறந்த முதல் மந்திரியாகிய சத்தியகீர்த்தி, சொல்வான் - சொல்லுகிறான், வேட்பன இல்லை என்னு - ஆசைப்பட்டுக் கேட்கிறபொருளை இல்லை என்று சொல்லாத படி கொடுக்கின்ற, மெய்நெறி - சத்தியமான நீதிமார்க்கத்தையுடைய, வேந் தன் தன்பால் - அரசனிடத்திலே, கேட்பன - கேட்கத்தக்கவைகளை, அறிந்து- தெரிந்து, உமக்குக் கிடைப்பன - உமக்குக் கிடைக்கத்தக்கவைகளை, உணர்ந்து- தெரிந்து, கேளீர் - கேளுங்கள், சேட்பட நில்லும் - (நீங்கள் சண்டாளப்பெண் கள் ஆகையினாலே) தூரத்திலே நில்லுங்கள், என்ன - என்றுகூற, தெரிவை யர் - (அதற்கு) அந்தப்பெண்கள், செப்பல் உற்றார் - சொல்லுகின்றார்கள். எ-று. 'மந்திரத்தலைவன்' முதல் மந்திரி.

"கேட்பன அறிந்து உமக்குக் கிடைப்பன உணர்ந்துகேளீர்" நாம் என்ன கேட்கின்றோம் என்பதை அறிந்து, அப்படிக் கேட்கத்தகாதவைகளைக் கேட் கும் உங்களுக்கு என்ன கிடைக்கும் (என்னதண்டனை) என்பதை அறியாமல் கேட்கின்றீர்கள், என்றும் பொருள் செய்யலாம். (௬௫)

முன்பியாங்கருதிவந்தமுழுமணிக்குடையுநல்காய்
பின்பியாங்குறித்தவின்பப்பெரும்பயன்றானுந்தாரா
யன்பியாமுன்மேல்வைத்ததவத்திலேபோனதந்தோ
வன்பியாமுன்பாற்கண்டோம்வள்ளன்மைகண்டிலேமால்

[முன்னாலே நாங்கள் விரும்பிவந்த முழுதும் முத்துக்களால் அலங்கரிக்கப் பட்ட கொற்றக்குடையையும் நீர் கொடுக்கமாட்டீர், பின்னால் நாங்கள் வேண்டின இன்பமாகிய பெரிய பயனையும் நீர் கொடுக்கமாட்டீர், ஆதலால், நாங்கள் உம்மிடத்திலே கொண்ட அன்பானது வீணாகிப்போயிற்று, ஐயோ! உம்மிடத்திலே கடின சித்தத்தைக் கண்டோமே அல்லது கொடுக் குந் தன்மையை நாங்கள் எவ்வளவுங் காணவில்லை என்றனர் என்பதாம்.]

இ-ள். முன்பு - முன்னால், யாம் கருதிவந்த-நாங்கள் விரும்பிவந்த, முழு மணிக்குடையும் நல்காய் - முழுதும் முத்துக்களால் அலங்கரிக்கப் பெற்றுள்ள

கொற்றக்குடையையும் தாமாட்டேன் என்கின்றாய், பின்பு - அதற்குப் பிறகு, யாம் குறித்த - நாங்கள் வேண்டின, இன்பப் பெரும்பயன்றானும் - இனபமாகிய பெரிய பயனைத்தானும், தாசாய் - தாமாட்டேன் என்கின்றாய், (ஆதலால்) யாம் - நாங்கள், உன்மேல் - உம்மேலே, அன்பு - அன்பை, வைத்தது - வைத்தது, அவத்திலே போனது - வீணிலே போயிற்று, அந்தோ - ஐயோ! உன்பால் - உன்னிடத்திலே, யாம் - நாங்கள், வன்பு - கடின சித்தத்தைக் கண்டோம் - கண்டோம், வள்ளன்மை - ஈகைத் தன்மையை, கண்டிலேம் - காணவில்லை (என்று அந்தாப்பெண்கள் கூறினார்கள். எ-று. 'ஆல்' அசை.

'அவம்' வீண்; "வள்ளன்மை" ஈகைத்தன்மை. (௩௬)

கொடுப்பனகொடுப்பதல்லாற்கொடாதனகொடுக்கமாட்டார்
விடுப்பனவிடுப்பரென்றும்விடாதனவிடவுமாட்டார்
தொடுப்பனதொடுத்துநம்மாற்சொல்வனசொல்லிநுங்கட்
கடுப்பனகொண்மினல்லாலகன்மினென்றமைச்சன்சொன்னான்.

[சூரியகுலத்து அரசர்கள், கொடுக்கத்தக்கவைகளைக் கொடுக்கிறதே அல்லாமல் கொடுக்கத் தகாதவைகளைக் கொடுக்கமாட்டார்கள். எக்காலத்தும் விடத் தக்கவைகளை விட்டு விடுவார்கள். விடத்தகாதவைகளை விடவும் மாட்டார்கள், ஆதலால், நீங்கள் ஆலோசிக்க வேண்டியபடி ஆலோசித்து உங்களாலே கேட்கத்தக்கவைகளைக்கேட்டு, உங்களுக்குத் தக்கபடியே பெற்றுக்கொள்ளுங்கள், அல்லாவிட்டால் போங்கள் என்று மந்திரி கூறினான் என்பதாம்.]

இ-ள். கொடுப்பன - (சூரியகுலத்து அரசர்கள்), கொடுக்கத் தக்கவைவைகளை, கொடுப்பதல்லால் - கொடுக்கிறதே அல்லாமல், கொடாதன - கொடுக்கத்தகாதவைகளை, கொடுக்கமாட்டார் - கொடுக்க மாட்டார்கள், என்றும் விடுப்பன - (இன்னும்) எக்காலத்தும் விடத்தக்கவைகளை, விடுப்பர் - விடுவர், விடாதன - என்றும் விடத்தகாதவைகளை, விடவும் மாட்டார் - விடவு மாட்டார்கன், (ஆகையினால்) தொடுப்பன தொடுத்து - ஆலோசிக்க வேண்டியவைகளை ஆலோசித்து, நம்மால் சொல்வன சொல்லி - உங்களால் கேட்கத் தக்கவைகளைக் கேட்டு, உங்கட்கு - உங்களுக்கு, அடுப்பன - தக்கவைகளையே, கொண்மின் - பெற்றுக்கொள்ளுங்கள், அல்லால் - அப்படி அல்லாவிட்டால், அகன்மின் என்று - போய்விடுங்கள் என்று, அமைச்சன் சொன்னான் - மந்திரி கூறினான். எ-று. (௩௭)

வள்ளலென்றடைந்தோமுன்பால்வந்திரந்தோர்க்கொன்றீயாக்
கள்ளனென்றறிந்தாலிங்குவருகலங்கண்டாயென்று
ருள்ளமுங்கண்ணுஞ்செந்தீபுநக்கெழச்சினத்துவேந்தன்
றள்ளுமென்றருளிச்செய்தான்விளைவதுதன்னையோரான்.

[நீ வள்ளல் என்று எண்ணி உன்னிடத்தில் வந்தோம், உம்மிடத்தில் வந்து யாசித்தவர்களுக்கு ஒன்றையும் கொடாத கள்ளன் என்று நாங்கள் முன்னமே தெரிந்திருப்போமானால் இங்கே வந்திருக்க மாட்டோம் என்பதை நீ யறிவாயாக என்று அந்தப்பெண்கள் கூறினார்கள். அதுகேட்டு மனமும் கண்களும் சிவந்த நெருப்பு கொதித்துத் தோன்றக் கோபங்கொண்டு அரிச்சந்திரமகாராஜன் இனி நடக்கப் போவதை அறியாதவனாகி இவ் இருவரையும் இவ்விடத்தை விட்டுத் தள்ளிவிடுங்கள் என்று உத்தரவுசெய் தான் என்பதாம்.]

இ-ள். வள்ளல் என்று அடைந்தோம் - நாங்கள் உன்னை வள்ளல் என்று நினைத்து (உன்னிடம் யாசிக்க) வந்து சேர்ந்தோம், உன்பால் வந்து இரந்தோர்க்கு - உன்னிடத்திலே வந்து யாசித்தவர்களுக்கு, ஒன்று ஈயா - அவர்கள் யாசித்த ஒன்றைக்கொடாத, கள்ளன் என்று அறிந்தால் - கள்ளன் என்று நாங்கள் அறிந்திருந்தோமானால், இங்கு - இந்த இடத்திலே, வருகலம் கண்டாய் என்றார் - வந்திருக்கமாட்டோம் என்பதை நீ அறிவாயாக என்று அந்தப்பெண்கள் கூறினார்கள்; வேந்தன் - அரிச்சந்திரமகாராஜன், உள்ளமும் - மனமும், கண்ணும் - கண்ணும், செந்தீ - செவந்த நெருப்பு, உருத்து எழ - கொதித்துத்தோன்ற, சினந்து - கோபித்து, விளைவது தன்னை ஓரான் - இனி வரப்போவதையும் அறியாதவன் ஆகி, தள்ளும் என்று - இவ்விருவரையும் இவ்விடத்தைவிட்டுத் தள்ளி விடுங்கள் என்று, அருளிச்செய்தான்-உத்தரவு பண்ணினான். எ-று.

'கள்ளன்' - வஞ்சகமுடையவன், என்றும் பொருளாம். (ருஅ)

பார்த்திபனுரைப்பக்கேட்டுப்பப்பரார்நெருங்கிச்சீறித்
தீத்திரள்செங்கட்சிந்தநூக்குவான்செல்லவேங்கிக்
காத்திரநடுங்கக்கையுங்கால்களுநடுங்கமார்பிற்
சேர்த்தியயாழுமேபோகட்டிரிந்தனர்திசைமயங்கி.

[இந்தவிதமாக அரசன் உத்தரவுசெய்யவே பப்பரர் என்னும் ஒருவகை வீரர்கள் கேட்டு நெருங்கி வந்து கோபித்து நெருப்புப்பொறிகள் சிவந்த கண்களினின்றும் சிந்த அவ் இருவரையும் தள்ள வருகிறதை அவ்விருபெண்களும் கண்டு, பயங்கொண்டெழுந்து உடம்பெல்லாம் நடுங்கவும், கையும் கால்களும் நடுங்கவும் மார்பிலே சேர்த்தியுள்ள யாழையும் போட்டுவிட்டு திசை யறியாதவர்களாகி மயங்கி ஓடினார்கள் என்பதாம்.]

இ-ள். பார்த்திவன் - அரிச்சந்திரமகாராஜன், உரைப்ப - அந்தவிதமாகச் சொல்ல, பப்பரர் - பப்பரர் என்னும் ஓர்வகை வனவீரர்கள் கேட்டு, நெருங்கிச்

சீறி-கிட்டிவந்து கோபித்து, தீத்திரள் - நெருப்புப்பொறிகள், செங்கண் சிந்த-சிவந்த கண்களினின்றும் சிந்த, நூக்குவான் - அவ் இருவரையும் தள்ளும் பொருட்டு, செல்ல - போக, ஏங்கி - பயந்து அழுது, காத்திரம் நடுங்க-உடம்பு நடுங்கவும், கையும் கால்களும் நடுங்க - கையும் கால்களும் நடுங்கவும், மார்பில்-மார்பிலே, சேர்த்திய - சேர்த்திருக்கின்ற, யாழும் - யாழையும், போகட்டு-போட்டு விட்டு, திசை மயங்கி - திசை தெரியாமல் மயங்கி, இரிந்தனர் - அந்த இருபெண்களும் ஓடினார்கள். எ-று.

'பார்த்திவன்' - அரசன்; 'நூக்கல் - தள்ளல்; 'காத்திரம்,' உடல்; "திசை மயங்கி" - திசை அறியாது என்பது பொருளாம். (௩௯)

ஆறுகொண்டோடார்செல்லாவடவியிற்சென்றுமேனி
மாறுகொண்டுதிரஞ்சிந்தமஞ்சினைப்பழித்தகூந்தற்
றாறுகொண்டீர்க்கச்சேர்த்ததுகில்கிழிந்தகலச்சாப
வீறுகொண்டேவிவிட்டமுனிவன்முன் வீழ்ந்தார்வந்து.

[வழிதெரிந்து ஓடாமல், ஒருவரும் போகமுடியாத காட்டு வழியிலேபோய் உடம்பெலாம் மாறுகளினால் கிழிபட்டு ரெத்தம் சிந்த மேகத்தைப் பழித்த கூந்தலை மாத்தூறுகள் இழுக்க, உடுத்த வஸ்திரம் கிழிந்து போகவும், சாப வலிமைகொண்டு தங்களை அனுப்பிய விஸ்வாமித்திர முனிவரின் முன் வந்து வீழ்ந்தார்கள்; என்பதாம்.]

இ-ள். ஆறுகொண்டு - சரியான வழியைப் பற்றிக்கொண்டு, ஓடார்-ஓடாதவர்களாகி, செல்லா - எவரும் செல்ல முடியாத, அடவியில் சென்று - காட்டுக்குள்ளே சென்று, மேனி - உடம்பெல்லாம், மாறுகொண்டு - மாறுகளால் கிழிபெற்று, உதிரம் சிந்த - ரத்தங்கள் ஒழுகவும், மஞ்சினை - மேகத்தை, பழித்த கூந்தல் - பழிப்பதான கூந்தலை, தூறு-மாத்தூறுகள், கொண்டு ஈர்க்க-பற்றிக்கொண்டு இழுக்கவும், சேர்த்த துகில் - உடம்பிலே உடுத்தி யிருக்கின்ற வஸ்திரங்கள், கிழிந்து அகல - கிழிபட்டு நீங்கவும், சாபவீறுகொண்டு - சாப வலிமையைக்கொண்டு, ஏவிவிட்ட - தங்களை அனுப்பிவிட்ட, முனிவன் முன்-விஸ்வாமித்திர முனிவருக்கு முன்னாலே, வீழ்ந்தார் வந்து - வந்து வீழ்ந்தார்கள். எ-று.

"ஆறுகொண் டோடார்செல்ல வடவியிற் சென்று" என்பதற்கு, வழி பற்றி ஓடாதவர்களாகிச் சென்று காட்டுக்குள் புகுந்து, என்றும் பொருள் உரைப்பர். "மேனி மாறுகொண்டு" என்பதற்கு தேகமும் முட்களால் கிழி படுதலாகிய மாறுபாடை அடைந்து, என்றும் பொருள் கூறுவர். சாபவீறு' 'சாபானுக்ரக சக்தி' என்றும் கூறுவர். (௪0)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மண்டலங்கனிவிழுப்புண்டசெந்துகில்களுமாநடித்த
புண்டனிற்பொழிபசுங்குருதியுந்துவரிதழ்ப்பொருமலுந்தான்

கண்டனன்கௌசிகன்கடையுகக்கனலெனக்கடியகோபங்
கொண்டனன்வந்தவாறேதெனக்கோதைமார்கூறலுற்றார்

[விஸ்வாமித்திரர் பூமியிலே இழுபடுகின்ற செவந்த வஸ்திரங்களையும், மாறு
களினால் அடித்த புண்களிலே வழிகின்ற பசுமையான ரத்தங்களையும்,
செவந்த உதடுகள் பொருமுதலையும் பார்த்தார்; உகாந்தக் காலத்துத்
தீப்போல் கடுமையான கோபம் கொண்டார், நீங்கள் இப்படி
வந்ததற்குக் காரணம் என்னவென்று கேட்க, அந்தப்
பெண்கள் சொல்லத் தொடங்கினார்கள்
என்பதாம்.]

இ-ள். கௌசிகன் - விஸ்வாமித்திரர், மண் தலம் தனில் - பூமியிலே, இழுப்புண்ட - இழுபடுகின்ற, செந்துகில்களும் - செவந்த வஸ்திரங்களும், மாறு அடித்த - மாறுகள் அடித்ததனாலுண்டாகிய, புண்தனில் பொழி - புண்களிலே இருந்து சிந்துகின்ற; பசும் குருதியும் - பசுமையான இரத்தங்களையும், துவர் இதழ் - சிவந்த இதழ்கள், பொருமலும் - பொருமதலையும், தான் கண்டனன் - தன்னுடைய கண்களாலே பார்த்தார், கடையுகக் கனல் என - யுகமுடிவிலே தோன்றுகின்ற நெருப்பைப்போல, கடிய கோபம் கொண்டனன் - கடுமையான கோபங்கொண்டார். வந்தவாறு ஏதென - நீங்களிப்படி வந்ததற்குக் காரணம் என்னவென்று கேட்க, கோதைமார் - அந்தப்பெண்கள், கூறல் உற்றார் - சொல்லத் தொடங்கினார்கள் எ-று;

'மாறடித்த' என்பதற்கு 'மாறினால் அடித்த, எனப் பொருள் கொள்ளவும் செய்யலாம். 'துவர் இதழ்' பவளம்போன்ற வாய் என்றுமாம்; கோதையர் உவமை ஆகுபெயர். (சக)

ஐயகேணின்னருட்படியினாலரசன்மாட்டணுகிநின்றே
பையவேழிசைகளும்பாடிநீசொன்னவப்பரிசுரைத்தோந்தாங்
கையனெங்களையடித்துமனெனச்செய்தவக்கண்டனத்தா
லுய்யவும்போகுமோவுரையுமுண்டோவெமக்குயிருமுண்டோ.

[ஐயனே! கேளும் உம்முடைய உத்தரவினால் அரசனிடத்தில் சென்று நின்று
எழுவித இசைகளையும் பாடி நீர் கேட்கச்சொன்னபடியே கேட்டோம்,
அந்த வஞ்சகன் எங்களை அடித்து உம்முடைய அடிமைகள் என்ற
தனால் எங்களைத் தண்டித்த தண்டனைக்கு தப்பிப்பிழைக்கவுங்
கூடுமோ? சொல்லவும் முடியுமோ எங்களுக்கு உயிர்தான்
உண்டோ என்றார்கள்; என்பதாம்.]

இ-ள். ஐய - ஐயனே! கேள் - கேளும், நின் - உம்முடைய, அருள்படியினால் - கட்டளைப்படி, அரசன் மாட்டு - அரசன் இடத்திற்கு, அணுகி - கிட்டி, நின்று - நின்று, பையவே - மெள்ள, எழு இசைகளும் பாடி - எழுவித இசைகளையும்பாடி, நீ சொன்ன - நீர் கேட்கச்சொன்ன, அப்பரிசு உரைத்தோம்-அந்தத் தன்மையாகவே சொன்னோம், கையன் - அதற்கு அந்த வஞ்சகன், எங்

களை அடித்து - எங்களை அடித்து, உமர் எனச்செய்த அக்கண்டனத்தால் - உமது அடியார்கள் என்று (எங்களை) செய்த அந்தத் தண்டனையால், உய்யவும் போகுமோ - நாங்கள் பிழைக்கவும் கூடுமோ? உரையும் உண்டோ - அதன் கொடுமையைச் சொல்லுவதென்றால் வார்த்தைகள் தான் உண்டோ; எமக்கு உயிருமுண்டோ - எங்களுக்கு உயிர்தான் உண்டோ என்றார்கள். எ-று.

"பரிசு" தன்மை, கொடையும் ஆம்; 'உய்யவும் போகுமோ' தப்பிப் பிழைக்கவும் கூடுமோ என்றும் கூறலாம். (சஉ)

எனவுரைத்திடவெயர்த்திடியிடித்தெனநகைத்திருகணுலுங்
கனறெறித்திருபுடைக்கடமனைத்தும்புகைகடிதுமூடச்
சினமிகுத்திறைவனுக்கிடர்விளைத்திடுவதேசெயலெனத்தன்
மனநினைத்தருமறைத்தவமுனித்திரளுடன்வரநடந்தான்.

[என்று சொல்லவே உடம்பெல்லாம் வேர்வைகொண்டு இடி இடித்தாற்போல் சிரித்து, இரு கண்களினாலும் நெருப்புப்பொரி பறக்கச்செய்து இரு புறத்தி லும் உள்ள காடெல்லாம் புகைநெருங்கி மண்டகோப மதிகமாக, இனி அரசனுக்குத் துன்பத்தைச் செய்கிறதே காரியம் என்று தன் மன திலே எண்ணிக்கொண்டு, முனிவர்கள் தன்னைச்சூழ விஸ்வா மித்திரர் நடந்தார்; என்பதாம்.]

இ-ள். என உரைத்திட - என்று சொல்லவே, வெயர்த்து - உடம்பு எல்லாம் வியர்வைகொண்டு, இடி இடித்தென நகைத்து - இடி இடித்தாற்போல் சிரித்து, இருகணுலும் - இரண்டு கண்களினாலும், கனல்தெறித்து - நெருப்புப்பொரிகளைச் சிதறி, இருபுடைக்கடம் அனைத்தும் - இருபுறத்திலுமுள்ள காடெல்லாம், புகைகடிது மூட - புகைநெருங்கி மண்ட, சினமிகுத்து - அதிகமாகக் கோபித்து, இறைவனுக்கு - இனி அரசனுக்கு, இடர் விளைத்திடுவதே - துன்பத்தைச் செய்வதே, செயல் என - காரியமென்று, தன் மனநினைத்து - தன் மனதிலே ஆலோசித்துக்கொண்டு, அருமறைத் தவமுனித்திரள் - அருமையான வேதங்களை உணர்ந்த தவமுனிவர்களின் கூட்டங்கள், உடன்வர - தன்னோடு கூடவா, நடந்தான் - விஸ்வாமித்திரர் நடந்தார் எ-று.

'கண்ணாலும்' என்பது 'கணுலும்' என்று தொகுத்தல் விகாரம்பெற்று வந்தது. 'இடுவதே' என்பதில் உள்ள ஏகாரம் தேற்றம். (சங)

கரதலத்திடுமெழிற்குசைவிதிர்ப்புறவிணைக்கழல்வருந்தப்
பரவுபொற்றடமலர்ச்சடைவிரித்தகல்பெரும்படியினலச்
சுரர்மிகப்பாதவித்தபயமிட்டலறிடச்சுவணவெற்பாற்
புரமெரித்திடவரும்புனிதனைத்தணிமலர்ப்பொய்கைபுக்கான்.

[கையிலே கொண்ட தருப்பைப்புல் நடுங்கவும், இரண்டு கால்கள் வருந்தவும், பரவிய சடையை விரித்து அகன்ற பெரிய பூமியிலே தொங்கவும், தேவர்கள் பயந்து அபயமிட்டு அலற, மேருமலையால் திரிபுரத்தை எரித்த பரமசிவனைப்போல அழகிய மலர்ப்பொய்கைக்குள் புகுந்தார்கள் என்பதாம்.]

இ-ள். கரதலத்து இடும் - கையிலே கொண்ட, எழில் - அழகிய, குசை விதிர்ப்புற - தருப்பைப்புல் நடுங்க, இணைக்கழல் வருந்த - இரண்டு கால்களும் வருந்தவும், பரவு - பரவிய, பொற்றட மலர்ச்சடை விரித்து - அழகிய விசாலமான மலரணிந்த சடைகளை விரித்துக்கொண்டு, அகல் - விசாலமான, பெரும் படியில் நால - பெரிய பூமியிலே தொங்கவும், சுரர் - தேவர்கள், மிகப்பரதவித்து - மிகவும் பரிதபித்து, அபயம் இட்டு அலறிட - அபயஞ்சொல்லிக் கூக்குரலிடவும். சுவண வெற்பால் - பொன்மலையால், புரம் எரித்திட வரும் - திரிபுரத்தை எரிக்கவந்த, புனிதன் ஒத்து - பரமசிவனைப்போல, அணி - அழகிய, மலர்ப்பொய்கை புக்கான் - பூக்கள் நிறைந்த குளக்கரைக்கு வந்து சேர்ந்தார். எ-று. (சச)

பிணிமுகத்திரள்களுங் குருகினப்பகுதியும்பிரிவுறாத
வணிமலர்க்குளிர்தடத்ததிசினத்தொடுநடந்தணுகலோடும்
பணிமுடிச்சுமைதவிர்த்திருபுயத்தினின்மிசைப்படிதரித்த
மணிமுடிக்குரிசிலக்கொடுவினைக்கௌசிகன்வரவுகண்டான்.

[அந்தப் பொய்கைக்குச் சமீபத்தில் விஸ்வாமித்திரர் சினத்தோடு வரும்பொழுது, அரிச்சந்திரமகாராஜன் அம்முனிவர் வரவைக் கண்டார் என்பதாம்.]

இ-ள். பிணிமுகத்திரள்களும் - மயில் கூட்டங்களும், குருகினப் பகுதியும் - பட்சிசாதிகளின் கூட்டங்களும், பிரிவுறாத - அகலாத, அணி - அழகான, மலர் - மலர்கள்நிறைந்த, குளிர் - குளிர்ந்த, தடத்து - தடாகத்தின் அருகே, அதிசினத்தொடு - (முனிவர்) அதிக கோபத்துடனே, நடந்தணுகவோடும் - நடந்து வந்த உடனே, பணிமுடிச்சுமை தவிர்த்து - ஆதிசேஷனுகிய பாம்பின் தலைச்சுமையை நீக்கி, இருபுயத்தினின்மிசை - இரண்டு தோள்களின்மேலும், படிதரித்த - பூமி பாரத்தைக்கொண்ட, மணிமுடிக்குரிசில் - ரத்ந கிரீடத்தை உடைய அரிச்சந்திரமகாராஜன், அக்கொடுவினைக் கௌசிகன் - அந்தக் கொடிய செய்கையை உடைய விஸ்வாமித்திரரின், வரவு கண்டான் - வருகையைக் கண்டான். எ-று.

'பிணிமுகம்' மயில்; 'குருகு' அன்னம், நாரை, பட்சி இவைகளுக்குப் பொதுப்பெயர். 'பணி' - பாம்பு; 'குரிசில்' ஆண்பாற் பெயர். (சரு)

கடல்களென்படுநெடுந்திசைகளென்படுமகன்ககனமென்று
முடல்களெனபடுமவற்றுயிர்களெனபடுமிருந்துலகமென்னும்

விடலருந்தவமுடைப்பெருவலிக்கௌசிகன்வெகுளியாலென்
றடனெடுஞ்சிலையவன்கடிதெழுந்தெதிர்நடந்தடிபணிந்தான்.

[விஸ்வாமித்திரர் கோபத்தினால், கடல்கள், நெடுந்திசைகள், அகண்ட ஆகாயம், இவைகள் என்ன பாடுபடுமோ? இவைகளுக்குள்ளான உடல்களும் உயிர்களும் என்ன பாடுபடுமோ? இடிந்து அந்த உலகம் என்ன பாடுபடும்; என்று அரிச்சந்திரன் விரைந்து எழுந்து எதிர் நடந்து பாதங்களை வணங்கினான் என்பதாம்.]

இ-ள். விடல் அரும் - விடுதல் இல்லாத, தவம் உடை - தவத்தை உடைய, பெருவலி - பெரிதான சாமர்த்தியத்தைக் கொண்ட, கௌசிகன் வெகுளியால் - விஸ்வாமித்திரரின் கோபத்தினால், கடல்கள் என்படும் - கடல்கள் என்ன டாடுபடும்?, நெடும் திசைகள் - நீண்ட திக்குகள், என்படும்-என்ன பாடுபடும்; அதன் ககனம் என்னும் - அகன்ற ஆகாயம் என்ன பாடுபடும், (இவைகளுக்கு உள்ளே யிருக்கின்ற) உடல்கள் என்படும் - சரீரங்கள் எல்லாம் என்ன பாடுபடும், அவற்று உயிர்கள் என்படும் - அந்தச் சரீரத்துக்குள்ளே யிருக்கின்ற உயிர்கள் எல்லாம் என்ன பாடுபடும், இடிந்து உலகம் என்னும்- இடிவதாகி உலகந்தான் என்ன பாடுபடும், என்று - என்று நினைத்து, அடல் நெடுஞ்சிலையவன் - வலிமை பொருந்திய நீண்ட வில்லையுடைய அரிச்சந்திர மகாராஜன், கடிது எழுந்து - விரைவிலே எழுந்து, எதிர் நடந்து-எதிர்கொண்டு நடந்து, அடிபணிந்தான் - அம்முனிவர் பாதங்களை வணங்கினான் எ-று.

'இடிந்துலகம் என்னும்' என்றதில் உலகம் இடிதற்குத் தடையில்லை அதற்குமேல் என்னாகுமோ என்று கூறினார். (சுக)

உருமிடித்தனவெனச்சினமிகுத்திகல்செயற்குறுவதற்குக்
கருமிடற்றவனலேன்கடனிறத்தவனலேன்கமலனல்லேன்
இருமையிற்கடையனாமெளியனேவலனெனக்கெழுமியேகுற்
றிருமலர்க்கழல்களைக்கரமுறக்கழீஇநிலத்திடைகிடந்தான்.

[இடி இடித்ததுபோல் கோபம் மிகுதியாய் சண்டைசெய்ய வருதற்கு நான் நீலகண்டன் அல்லேன், கடல் வண்ணன் அல்லேன், தாமரை யாசனனாகிய பிரமன் அல்லேன். புழுவினும் கடைபட்ட எளியனே உம்மோடு எதிர்க்கச் சமர்த்தன் என்று சொல்லிப்போய் இரண்டு மலர்போலும் பாதங்களை இருகரங்களாலும் பற்றிக்கொண்டு பூமியிலே வணங்கிக்கொண்டு கிடந்தான் என்பதாம்.]

இ-ள். உருமிடித்தன என - தேவரீர் இடி இடித்தாற்போல், சினம் மிகுத்து - கோபமிகுதியாய், இகல்செயற் குறுவதற்கு - (என்னுடன்) சண்டைசெய்ய வருதற்கு, கருமிடற்றவனலேன் - நான் கருத்த கண்டத்தை உடைய பரமசிவன் அல்லேன், கடல் நிறத்தவனலேன் - கடல்போன்ற நிறத்தை உடைய மகாவிஷ்ணு அல்லேன், கமலனல்லேன் - உந்தியம் தாமரையில்

வந்த பிரமதேவனும் அல்லேன், கிருமியில் - புழுவினும், கடையனும் எளியனே - கடைபட்டவனான எளியேனாகிய நானே, அலனென - (தங்களால் சண்டை செய்யப்படற்கு) தகுதி உடையவன் அல்ல என்று, செழுமி எகுற்று - விளங்கச்சென்று, இருமலர்க்கழல்களை - இரண்டு மலர்போலும் பாதங்களை, காமுறத்தழீஇ - தனது இரண்டு கைகளினாலும் பொருந்தப்பற்றி, நிலத்திடை கிடந்தான் - பூமியிலே வணங்கிக்கொண்டு கிடந்தான். எ-று.

'அல்லேன்' என்பது அலேன் எனத்தொகுத்தல் விகாரம் பெற்றது; தேவரீர்க்கு எதிர் திருமூர்த்திகள். நான் அல்ல, என்மேல் கோபம் வேண்டாம் என்பதாம். (சஎ)

காமுறத்தழுவலுங்கௌசிகப்பெயரினன்கால்பறித்தே
சிரமிசைத்திருமுடிச்சுடர்மணித்தொகைகள்பஃறிசைதெறிக்க
வுரமிசைப்பணிதெறித்திடவுதைத்தனனுதைத்திடலுமுன்றன்
மருமலர்க்கழல்சிவப்புறுமெனக்கைகளால்வருடலுற்றான்.

[அரிச்சந்திரன் கால்களைப் பற்றிக்கொண்டு பூமியில் கிடக்கும்பொழுது விஸ்வாமித்திரர் காலை உதறிப் பிடுங்கி தலையில் அணிந்துள்ள கிரீடத்தின் ரத்தினங்கள் பல திசையிலும் தெறிக்கவும் மார்பில் அணிந்துள்ள ஆபரணங்கள் தெறித்து விழவும் உதைத்தார்; உதைத்தவுடனே வாசனை பொருந்திய தாமரைபோலும் பாதம் செவந்து போமே என்று கைகளினால் தடவினான்; என்பதாம்.]

இ-ள். காம் உற - தனது இரண்டு கைகளும் பொருந்த, தழுவலும் - விஸ்வாமித்திரர் பாதங்களைப் பற்றிக்கொண்டு கிடக்கும்பொழுது, கௌசிகப் பெயரினன் - விஸ்வாமித்திரமுனிவர், கால் பறித்தே - காலை உதறிப் பிடுங்கிக்கொண்டு, சிரமிசை - தலையின்மேலே அணிந்த, திருமுடி - அழகிய கிரீடத்தின், சுடர்மணித் தொகைகள் - காந்தியை உடைய ரத்நக்கூட்டங்கள், பல்திசை தெறிக்க - பல திக்குகளிலும் தெறித்து விழவும், உரமிசைப் பணிதெறித்திட - மார்பின்மே லணிந்திருக்கின்ற ஆபரணங்கள் தெறித்து விழவும், உதைத்திடலும் - உதைத்த உடனே, உன்றன் - (அரிச்சந்திர மகாராஜனானவன்) உம்முடைய, மருமலர்க்கழல் - மணங்கொண்ட செந்தாமரைபோன்ற பாதம், சிவப்புறும் என - செவந்து போமே என்று, கைகளால் - தன் கைகளாலே தடவினான். எ-று. (சஅ)

குடியினிற்பிழைபிழைத்திலமெனக்கடிமையிற்குறையுமில்லை
மிடியிடித்தனவெனச்சினமிகுத்திடைவிடாதெனையுதைத்த
வடிவடுப்படுமெனக்கவலுகிற்பதைபொழிக்கைபவென்றன்
முடிவடுப்படுமெனக்கவல்கிலேன் வெகுளியென்மொழுதிரென்று [ன்

[உமக்கு குடியாய் நிற்றலிலே நாங்கள் யாதொரு தவறும் செய்திலோம், உமக்கு அடிமையாய் இருத்தலிலும் யாதொரு குறைவும் இல்லாதிருக்கிறோம். இடி இடித்ததுபோல் கோபமிகுதியாய் இடைவிடாமல் என்னை உதைத்தபாதம் வடுப்படுமே என்று கவலைப்படுவதை ஒழி த்து ஐயனே! என்னுடைய தலையிலே காயமுண்டா கும் என்று கவலைப்படவில்லை கோபம் என்ன சொல்லியருளும் என்றான் என்பதாம்.]

இ-ள். குடியினில் பிழை இழைத்திலம் - உமக்குக் குடியாய் நிற்றலிலே நாங்கள் யாதொரு தவறும் செய்திலோம், உனக்கு அடிமையில் குறையும் இல் லேம் - உமக்கு அடிமையாய் இருத்தலிலும் யாதொரு குறையு மில்லாதிருக்கி றோம், இடி இடித்தன என - இடி இடித்தால்போல, சினமிகுத்து - கோபத் தை மிகுதியாகக்கொண்டு, இடைவிடாது எனை - இடைவிடாமல் என்னை, உதைத்த அடி - உதைத்ததிருப் பாதமானது, வடுப்படும் என - காயப்படும் என்று, கவலுகிற்பதை ஒழிந்து - கவலைப்படுவதை அல்லாமல், ஐய - ஐயனே! என்றன் - என்னுடைய, முடி வடுப்படும் என - என்னுடைய தலையானது காயப்படும் என்று, கவல்கிலேன் - கவலைப்படவில்லை, வெகுளி என் - (அப் படி யிருக்க) என்மேல் கோபத்திற்குக் காரணம் என்ன? மொழிதிர் என்றான்- சொல்லி யருளுங்கள் என்று சொன்னான். எ-று. (சகக)

மாவினைத்துணிசெய்தாய்கேழலுக்கிடர்செய்தாய்வானளாவுங்
காவினைப்பொடிசெய்தாய்நீதியாலீன்றவென்காதன்மக்கள்
பாவினைப்பழிசெய்தாய்தீவினைக்குரியதோர்பாவிநீதா
னாவினற்றோல்பொதிந்தடுபுலித்தொழில்செய்தாயழகிதென்றான்.

[நான் அனுப்பின மிருகங்களை எல்லாம் கொன்றாய், பன்றிக்கும் துன்ப முண்டாக்கினாய், வானத்தை அளாவியுள்ள இந்த சோலையையும் தூளாக்கினை, என் பெண்களின் பாட்டுகளையும் இகழ்ந்தாய், தீய காரியங்களையே செய்தற்கு உரிய பாவியாகிய நீ பசுவின்தோலைப் போர்த்துக்கொண்டு புலியி னது செய்கையைச் செய்தாய் நன்றா யிருக்கிறது என்று கூறினார்; என்பதாம்.]

இ-ள். மாவினைத் துணிசெய்தாய் - (அதற்கு விஸ்வாமித்திரர்) நான் அனுப்பின மிருகங்களை எல்லாம் கொன்றாய், கேழலுக்கு இடர் செய்தாய்- நான் அனுப்பின பன்றிக்கு துன்பம் உண்டாக்கினாய், வானளாவும் - ஆகாயத் தை அளாவியுள்ள, காவினைப் பொடிசெய்தாய் - (இந்த என்) சோலையை தூளாக்கினை, நீதியால் - முறையுடனே, ஈன்ற - நான் பெற்ற, என் - என்னு

டைய, காதன் மக்கள் - பிரியமான என் பெண்களினுடைய, பாவினைப் பழி செய்தாய் - பாடிய பாட்டுகளை இகழ்ந்தாய், தீவினைக்கு உரிய - பாவச் செய் கைக்கே தகுதியான, ஓர் பாவி நீதான் - ஒரு பாவியாகிய நீதான், ஆவின்-பசுவி னுடைய, நல்தோல் பொதிந்து - நல்ல தோலை மேலே போட்டு மூடிக்கொ கொண்டு, அடுபுலித் தொழில் செய்தாய் - கொல்லுகின்ற புலியினது செய்கை யைச் செய்தாய், அழகிது என்றான் - அழகாய் இருக்கிறது என்று விஸ்வாமித் திரர் கூறினர். எ-று. (௫௦)

நாடழித்திடினுநன்னகரழித்திடினுமென்னறுமலர்ப்பூங்
காடழித்திடினுநீள்காலறக்கிளையினைக்களையினுங்கொன்
றீடழித்திடினுநீதான்விடுத்தனையெனுயானறிந்தாற்
பாடிழைத்திடுவனேயென்றரிச்சந்திரன்பலமொழிந்தான்.

[அதற்கு அரிச்சந்திரன், என்னுடைய நாட்டை அழித்தாலும், என்னுடைய
நல்ல நகரத்தை அழித்தாலும் என்னுடைய நல்ல பரிமளமுள்ள பூஞ்சோ
லைகளை எல்லாம் அழித்தாலும் என்னுடைய நெடிதான வமிசம்
அற்றுப்போக என் உறவினரை எல்லாம் களைந்தாலும், இன்
னமும் கொன்று என் பெருமைகளை எல்லாம் கெடுத்
தாலும் நீர் அனுப்பினீர் என்று தெரிந்தால்
இப்படிச் செய்வேனோ என்று பல பல
சொன்னான் என்பதாம்.]

இ-ள். நாடழித்திடினும் - (அதற்கு அரிச்சந்திரமகாராஜன்) என்னுடைய நாட்டை எல்லாம் அழித்தாலும், நல் நகர் அழித்திடினும் - நல்ல நகரம் முழு தும் அழித்தாலும், என் - என்னுடைய, நறு - வாசனைபொருந்திய, மலர்ப்பூம் காடழித்திடினும் - பூஞ்சோலைகளை எல்லாம் அழித்தாலும், நீள் காலற - என் னுடைய நீண்ட வமிசங்கள் அற்றுப்போம்படி, கிளையினைக் களையினும் - உற வினரை எல்லாம் களைதல் செய்யினும், கொன்று - இன்னும் மற்றுள்ளவை களையும் கொன்று, ஈடு அழித்திடினும் - என் பெருமைகளை எல்லாம் அழித்தா லும், நீதான் விடுத்தனை எனு - நீர்தான் அனுப்பினீர் என்று, யான் அறிந் தால் - நான் தெரிந்திருப்பேனே யானால், பாடு இழைத்திடுவனோ - கேடு செய்திருப்பேனோ, என்று - என்று, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜன், பல மொழிந்தான் - பல பல சொல்லினான். எ-று. உம்முடைய கருத்துக்கு விரோதம் செய்யேன் என்பதாம். (௫௧)

சிறியரானவர்தமக்குரியவேயல்லாவோதீமைநன்னூ
லறிஞரானவர்தமக்கல்லவோபொறைபிறர்க்காகுமோதான்
நெறியிலாவினையினேனொருவனைப்பொருளதாநீமுனிந்தாற்[றூன்
பொறையுநின்னருளுமென்னளவிலேயிலவெனப்போனதென்

[தீமையான காரியங்களைச் செய்தல் சிறியர் ஆனவர்களுக்குத் தகுதியானவை
அல்லவோ? நல்ல சாஸ்திரங்களை அறிந்தவர்களுக்கல்லவோ அவ்வகைத்
தீமைகளைப் பொறுத்துக் கொள்வது இயல்பாகும். இப்படி அல்லா
மல் மற்றவர்களுக்கு உண்டாகுமோ, நீதிநெறி யறியாத தீவினை
யுடைய அற்பனுகிய என்னை ஒரு பொருளாகக்கொண்டு நீர்
கோபிப்பீராஞல் பொறுமையும் உம்முடைய இரக்கமும்,
என்மட்டிலோ இல்லை என்று போயிற்று
என்ருன் என்பதாம்.]

இ-ள். தீமை - (அரிச்சந்திரன் பின்னும் சொல்லுகின்ருன்) தீமையான காரியங்களைச்செய்தல், சிறியரானவர் தமக்கு - சிறியானவர்களுக்கு, உரியவே அல்லவோ - தகுதியுடையது அல்லவோ, நல்நூல் - நல்ல சாஸ்திரங்களை உணர்ந்த, அறிஞர் ஆனவர் தமக்கு - அறிவையுடையவர்கள் ஆனவர்களுக்கு, அல்லவோ பொறை - அல்லவே (சிறியோர்கள் செய்த) அவ்வகைத் தீமைகளைப் பொறுத்துக்கொள்ளுவது இயல்பாகும், பிறர்க்கு ஆகுமோதான் - (இவ்விரு காரியங்களும்) அவ் இருவகையாரைத் தவிர்த்து வேருனவர்களிடத்தில் உண்டாகுமோ?, நெறி இலா - நீதிநெறி யறியாத, வினையினேன் ஒருவனை-பாவியாகிய ஒரு அற்பனும் என்னை, பொருளதா நீ முனிந்தால் - ஒரு பொருளாகக்கொண்டு நீர் கோபித்தால், பொறையும் - உம்முடைய பொறுமையும், நின் அருளும் - உம்முடைய இரக்கமும், என் அளவிலோ - என் மட்டிலோ, இல வனப் போனதென்ருன் - இல்லை என்று சொல்லும்படிப் போயிற்று என்று அரிச்சந்திரன் கூறினன். எ-று. 'பிறர்க்காகுமோ தான்' என்றதில் 'தான்' அசை. (ரு௨)

மடித்தவாயினன்மிகக்கொதித்தநெஞ்சினனெதிர்மறுத்துநீதான்
படித்தவாசகமெலாமெனக்குநீபிதற்றிடற்பாலவோதான்
வடித்தவேழிசைநினக்கிசைக்கவேவந்தவென்மக்கடம்மை
யடித்தகாரணமெலாமெனக்குநீதக்கவாறறைதியென்ருன்.

[விஸ்வாமித்திரர், மடித்த வாயும் மிகவும் கொதிக்கின்ற நெஞ்சையும் உடையவ
ராகி, நீஎன் சொல்லைத்தடுத்து, நீ படித்த வாசகங்களை எல்லாம் பிதற்று
வது தகுதியோ, தெளிந்துணர்ந்த ஏழு இசைகளையும் உன்னிடத்
திலே பாடவந்த என் பெண்களை நீ அடித்த காரணங்களை
எல்லாம் தகுந்தபடி சொல் என்ருர், என்பதாம்.]

இ-ள். மடித்த வாயினன் - (அதற்கு) மடித்த் வாயை யுடையவராகியும், மிக - அதிகமாகக், கொதித்த நெஞ்சினன் - கொதிக்கின்ற நெஞ்சை உடையவராகியும் விஸ்வாமித்திரர், நீதான் - நீ, எதிர் மறுத்து - எனக்கு முன்னே என் சொல்லைத்தடுத்து, படித்த - நீ படித்த, வாசகமெலாம் - வசனங்களை எல்லாம், எனக்கு - எனக்கு, நீ பிதற்றிடற் பாலவோதான் - நீ பிதற்றும் தகுதி யுடையவனோ?, வடித்த ஏழிசை - தெளிந்து உணர்ந்த ஏழுஇசைகளையும், நினக்கு- உனக்கு, இசைக்கவே வந்த - பாடுதற்காக வந்த, என் மக்கள் தம்மை - என்

பெண் மக்கள் இருவரையும், அடித்த காரணமெலாம் - அடித்தற்கு ஏற்பட்ட காரணங்களை எல்லாம், எனக்கு - எனக்கு, நீ - நீ, தக்கவாறு - தக்கபடி, அறைதி என்றான் - சொல்வாயாக என்று கேட்டார். எ-று. 'பிதற்றிடல்' உள றுதல். (௩௩)

கலி விருத்தம்.

மீண்டுமன்னவன் வேதியன்றாள்காம்
பூண்டுவாயிற் புனல்வறந்தற்றிட
வாண்டநாயக விம்முனிவாற்றிடல்
வேண்டும்யானது விண்ணப்பஞ்செய்வனால்.

[திரும்பவும் அரிச்சந்திரமகாராஜன் முனிவரின் பாதத்தைக் கையால் பிடித்துக்கொண்டு வாயிலே நீர்காய்ந்து வறண்டுபோக, எம்மை அடிமையாகக்கொண்டு ஆண்ட நாயகனே இந்தக்கோபத் தைத் தணித்தருளவேண்டும் நான் அது சந்நிதியில் சொல்லுகின்றேன் என்றான், என்பதாம்.]

இ-ள். மீண்டும் - மறுபடியும், மன்னவன் - அரசனாகிய அரிச்சந்திரன், வேதியன் - அந்த விஸ்வாமித்திருடைய, தாள் - பாதங்களை, காம்பூண்டு- கைகளால் பிடித்துக்கொண்டு, வாயில் - வாயிலே, புனல்வறந்து அற்றிட - நீர் வற்றிக் காய்ந்துபோக, ஆண்ட நாயக - எம்மை அடிமையாகக்கொண்டு ஆண்ட சுவாமியே! இம்முனிவு - இந்தக்கோபத்தை, ஆற்றிடல் வேண்டும் - தணிவு செய்து அருளவேண்டும், யான் - நான், விண்ணப்பம் செய்வனால் - அந்தக் காரணத்தை தங்கள் சந்நிதியில் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். எ-று. 'ஆல்' - ஈற்றசை. (௩௪)

இக்கருங்குழலேழையர்தம்மைநின்
மக்களென்ப துணர்ந்திலமாதவ
தக்கவாறுரை யாமையிற்றள்ளினேம்
புக்கதீது பொறுத்தருணீயென்றான்.

[இந்தக் கரிய கூந்தலையுடைய பெண்கள் உம்முடைய பெண்கள் என்பது தெரியோம், ஓ முனிவரே, அப்பெண்கள் தகுந்த வார்த்தை சொல்லாத தினால் தள்ளினோம் இதுவே நடந்தது தேவரீர் பொறுத்தருள வேண்டும் என்று அரிச்சந்திரன் கூறினான் என்பதாம்.]

இ-ள். இக்கருங்குழல் - இந்தக் கரிய கூந்தலையுடைய, ஏழையர் தம்மை- பெண்களை, நின்மக்கள் என்பது - உம்முடைய பெண்கள் என்பது, உணர்ந் திலம் - நாங்கள் தெரியாதிருந்தோம், மாதவ - ஓ தவசிரேஷ்டரே! தக்கவாறு- அந்தப்பெண்கள் தகுந்த விதமாக, உரையாமையில் - சொல்லாமையினால், தள்ளினேம் - தள்ளிவிட்டோம், புக்கது ஈது - இதுவே நடந்த செய்தி, பொறுத்தருள் நீ என்றான் - (இந்தக் குற்றத்தை) தேவரீர் பொறுத்தருள வேண்டுமென்று அரசன் சொன்னான். எ-று. (௩௫)

கழுத்தரிந்திது கைபிழைவந்ததென்
றழுத்தமாக வுரைத்தனையாதலாற்
பழுத்தநல்லறிவுற்றுனைப்பற்றிய
வொழுங்கமற்றுள முட்கிடக்கூறினுய்.

[கழுத்தை அறுத்துவிட்டுக் கைப்பிழை என்று சொல்வதுபோல் திடமாகவே அஞ்சாமல் சொல்லுகிறுய், பழுத்த நல்லறிவு பொருந்தி உன்னைத் தொடர்ந்துள்ள, நல்லொழுக்க நீங்கி, அவர் மனம் அஞ்சும்படிக் கூறினுய் என்று முனிவர் கூறினுர் என்பதாம்.]

இ-ள். கழுத்து அரிந்து - கழுத்தை அறுத்துவிட்டு, இது கைப்பிழை வந்தது என்று - (ஏனென்று கேட்டால்) இது கைதவறுதலால் வந்தது என்று, அழுத்தமாக உரைத்தனை - திடமாக அஞ்சாமல் சொல்லுகிறுய், ஆதலால்- ஆகையினுல், பழுத்த நல் அறிவு உற்று - முதிர்ந்த நல் அறிவு பொருந்தி, உனைப்பற்றிய - உனைத்தொடர்ந்த, ஒழுக்கம் அற்று - நல் ஒழுக்கம் நீங்கி, உளம் - (அப்பெண்களின்) மனமானது, உட்கிட - அஞ்சும்படி, கூறினுய்- நீ பேசினுய் என்று விஸ்வாமித்திரர் கூறினுர். எ-று. (௫௬)

இரப்பவர்க்கொன் றிலையெனில்யாரையுங்
கரப்பவர்க்குறு கட்டுரைகூறுவர்
புரப்பவர்க்குப் பொறுத்தலல்லாலடித்
துரப்பலுந்தகு மோவென் றுருத்தனன்.

[யாசிக்கிறவர்களுக்குக் கொடுப்பதற்கு ஒன்று இல்லையானுல், எப்படிப்பட்டவர்களையும் உள்ளதை மறைத்து வைககிறவர்களுக்குச் சொல்லுகிற சொற்களை யாவரும் சொல்லுவார்கள்; அப்படி உண்டாகுமானுல் ரட்சிக்கும் அரசர்களுக்கு பொறுத்துக் கொள்ளுதலே அல்லாமல் அடித்து அதட்டித்துரத்துவதும் தக்கதோ என்று சொல்லினுர் என்பதாம்.]

இ-ள். இரப்பவர்க்கு - யாசிக்கிறவர்களுக்கு, ஒன்று இலை எனில் - அவர்கள் கேட்கும் ஒன்றை இல்லை என்றுல், யாரையும் - எப்படிப்பட்டவர்களையும், கரப்பவர்க்கு உறு - யாசிக்கின்றவர்களுக்கு வைத்துக்கொண்டு இல்லை என்று சொல்லுகிறவர்களுக்குச் சொல்லத் தகுந்த, கட்டுரை கூறுவர் - நித்தைச் சொல்லைச் சொல்லுவார்கள், புரப்பவர்க்கு - உலகத்தைக் காக்கின்றவர்களுக்கு, பொறுத்தல் அல்லால்-பொறுத்துக்கொள்ள வேண்டுமே அல்லாமல், அடித்து- அடித்து, உரப்பலும் - அதட்டுதலும், தகுமோ என்று - தகுவதாகுமோ என்று, உருத்தனன் - பின்னும் கோபம் கொண்டு பேசினுர். எ-று.'

'கட்டுரை' - பழிச்சொல். 'புரப்பவர்க்கு' ரட்சிக்கும் குணமுடையவர்களுக்கு என்றும் பொருளாம். 'கரப்பவர்' என்றது 'இயல்வது கரப்போரை'; ()

கட்டகில்லெனநின்றவக்கள்வர்பாற்
கெட்டவான்பொருள்காட்டக்கிலேசியா
விட்டமூச்சுடன்விம்மலினலைலை
பட்டுளாரிற்பையப்பையக்கூறினன்.

[கன்னம் வைத்துத் திருடவில்லை என்று சொல்லுகிற திருடர்களிடத்தில், களவுபோன பொருளை தலையாரி பிரத்தியட்சமாக எடுத்துக்காட்ட, அப்பொழுது துக்கித்து விடுகின்ற மூச்சுடன் விம்மலினால் அலைபடுகின்றவர்களைப்போல் மெள்ள மெள்ள அரிச்சந்திரன் கூறுகின்றான் என்பதாம்.]

இ-ள். கட்டகில் என் - கன்னம் வைத்து நாங்கள் அந்தப்பொருளைக் கவரவில்லை என்று, நின்ற - நேரிலே நின்ற, கள்வர்பால் - திருடரிடத்திலே, கெட்ட - களவுபோன, வான்பொருள் - உயர்ந்த பொருள்கள், காட்ட - தலையாரியானவன் அவர்கள் மடியிலிருந்து எடுத்துக்காட்ட, கிலேசியா - கிலேசித்து, விட்ட மூச்சுடன் - விட்ட மூச்சுடனே, விம்மலினால் அலைபட்டுளாரில் - விம்முதலோடு கூடி அலைச்சல் படுகிறவர்களைப்போல, பையப் பையக் கூறினன் - அரிச்சந்திரமகாராஜன் மெள்ள மெள்ள அச்சத்தோடு கூறுகின்றான். எ-று.

'கட்டல்' (கள் - தல்) கட்டல் என்றாயிற்று தோண்டுதல் என்பது பொருள். 'கிலேசித்தல்' - துக்கப்படல், இச்செய்யுள் கவிக்கூற்று. (௩அ)

மைகுலாவுகண்மாதரைமோதிய
கைகுறைக்கினுங்கண்ணிணைச்சூலினு
மெய்குறைக்கினும்வேண்டியவாறுநீ
செய்கவென்னமறைமுனிசெப்புவான்.

[மைகுலாவும் அந்தப்பெண்களை அடித்த அந்தக் கைகளை வெட்டினும் கண்ணைத் தோண்டினும் உடம்பைச் சேதித்தாலும் உம்முடைய இஷ்டப்படி செய்து கொண்டருளுக என்று அரிச்சந்திரன் சொல்ல விஸ்வாமித்திரர் சொல்லுகின்றார். என்பதாம்.]

இ-ள். மைகுலாவு - அஞ்சனம் விளங்குகின்ற, கண்மாதரை - கண்ணை உடைய அந்தப்பெண்களை, மோதிய - அடித்த, கை குறைக்கினும் - கையை வெட்டினாலும், கண்ணைச் சூலினாலும் - கண்ணைத் தோண்டினாலும், மெய் குறைக்கினும் - உடம்பை எல்லாம் சேதித்தாலும் (சம்மதமே), வேண்டியவாறு - உம்முடைய மனத்துக்கு வேண்டியபடி, நீ-நீர், செய்க - செய்து கொண்டருளுக, என்ன - என்று அரிச்சந்திரன்கூற, மறைமுனி - விஸ்வாமித்திரர், செப்புவான் - சொல்லுகிறார். எ-று. 'சூலுதல்' - தோண்டி எடுத்தல். ()

கொய்துமாக்களைக்கொன்றதும்பன்றியை
யெய்ததும்மிசைகேட்டடித்தினமாய்

வைததுமென்றன்மக்களைநீமணஞ்
செய்திடிற்பொறுப்பேனென்றுசெப்பினான்.

[மிருகங்களை அறுத்துக்கொன்றதும், பன்றியை அம்பால் எய்து துரத்தினதும், இசைப்பாட்டுகளைக் கேட்டு அந்தப்பெண்களை அடித்து உதாசினமாய், பேசினதும்; ஆகிய இவைகளை எல்லாம் நீ என் பெண்களை, கல்யாணம் செய்துகொண்டால் பொறுத்துக் கொள்வேனென்று விஸ்வாமித்திரர் கூறினர், என்பதாம்.]

இ-ள். மாக்களை - மிருகங்களை, கொய்து-அறுத்து, கொன்றதும்-கொன்ற செயலையும், பன்றியை - நான் அனுப்பிய பன்றியை, எய்தது - பாணத்தால் எய்து துரத்தியதையும், இசைகேட்டு - என்பெண்களின் இசைகளைக்கேட்டு, அடித்து - அடித்து, ஈனமாய் - இழிவாக, வைததும் - திட்டினதும், (ஆகிய இந்தக் குற்றங்களை) என்தன் மக்களை - என்னுடைய பெண்களை, நீ மணம் செய்திடில் - நீ கல்யாணம் செய்துகொண்டால், பொறுப்பன் - நான் பொறுத்துக்கொள்வேன், என்று - என்று, செப்பினான் - விஸ்வாமித்திரர் கூறினர். எ-று. (௬௦)

நிலத்தில்யாருநெறியலசெய்திடின்
விலக்குநீயிவையென்கண்விளம்பலென்
புலைக்குலத்தொடுமன்னர்பொருந்துத
லலத்ததோவென்றுநாயகன்கூறினான்.

[உலகத்தில் யாரும் நீதிக்கு விரோதமானவைகளைச் செய்தால் அவைகளை விலக்கத்தக்க தேவரீர் இந்தக் காரியத்தை என்னிடத்தில் சொல்வது என்னகாரணம், புலைக்குலத்துப் பெண்களோடு அரசர்கள் கூடுகிறது நல்ல நீதியோ என்று அரிச்சந்திரன் கூறினான் என்பதாம்.]

இ-ள். நிலத்தில் - உலகத்திலே, யாரும் - யாராலும், நெறி அல செய்திடின் - நீதிக்கு விரோதமானவைகளைச் செய்தால், விலக்கும் நீ - விலக்கத்தக்க தேவரீர், இவை - இந்த நீதியில்லாத வார்த்தைகளை, என்கண் விளம்பல்- என் இடத்திலே சொல்லுதல், என் - என்னகாரணம், புலைக்குலத்தொடு - நீச ஜாதியாருடனே, மன்னர் பொருந்துதல் - அரசர்கள் கூடுகிறது, நலத்ததோ- நல்ல நீதியாகுமோ, என்று - என்று, நாயகன் - அரிச்சந்திரமகாராஜன், கூறினான் - சொல்லினான். எ-று.

'மன்னர்' க்ஷத்திரிய குலத்தோர் என்னும் பொருளாம், 'நலம்' நல்ல நீதி, என்று ஈண்டுப்பொருள் தந்தது. (௬௧)

மலைபினவைகும்வசிட்டன்சபித்தலாற்
புலையனானவன்மைந்தவிப்பூவையர்

மூலையில்வைகன்முறைமையன்றேவெனுக்
கலையுணர்ந்திடுங்கௌசிகன்கூறினான்.

[மலைகளிலே சஞ்சரித்தலுக்கு உரிய வசிட்ட முனிவர் சபித்ததினாலே
நீசனான திரிசங்குவின் புத்திரனே! இந்தப்பெண்கள் தனங்களிலே
கூடுவது உனக்கு நீதியல்லவோ என்று கலைஞானங்களை
உணர்ந்த விஸ்வாமித்திரர் கூறினார்.]

இ-ள். மலையில் வைகும் - மலைகளிலே சஞ்சரித்தலுக்கு உரிய, வசிட்டன் - வசிட்டமுனிவர்' சபித்தலால் - சபித்ததனாலே, புலையன் ஆனவன்-நீசனாகிய திரிசங்குராஜனின், மைந்த - புத்திரனே, இப்பூவையர் - இந்த என் பெண்களின், முலையில் வைகல் - தனங்களிலே கூடி யிருத்தல், முறைமையன்றே - உனக்கு நீதி அல்லவோ?, எனா - என்று, கலை உணர்ந்திடும் - கலை ஞானங்களை எல்லாம் தெரிந்த, கௌசிகன் - விஸ்வாமித்திரர், கூறினான்-சொல்லினார். எ-று.

'மைந்தன்' வலிமையுடையவன் என்பது பொருள், இது புத்திரனைக் குறித்தது, தந்தைக்குப் பின் குலத்திற்கு வலிமையுற்று குலத்தைத் தாங்குதலினால். 'பூவையர்', பூவை போல்பவராகிய பெண்கள். (சஉ)

அற்றைஞான்றெமதையன்வசிட்டனாற்
பெற்றசாபப்பெரும்புலைதீர்த்தனை
யிற்றைஞான்றிங்கெனைப்புலையாக்கநீ
கற்றதேதெனக்கால்கரம்பூண்டனன்.

[முன்னாளிலே எமது குல குருவாகிய வசிட்டமுனிவரால் எனது தகப்ப
னுக்கு ஏற்பட்ட சாபத்தினால் உண்டாகிய நீசத்துவத்தை நீரே
தீர்த்தருளினீர் இந்த நாளிலே இங்கு என்னை புலையனாக்க
தேவரீர் கற்றது எதற்காக, என்று சொல்லி அவர்
பாதங்களைப் பிடித்து அரிச்சந்திரன்
வேண்டினான் என்பதாம்.]

இ-ள். அற்றை ஞான்று - முன்நாளிலே, எமது ஐயன் - எமது குல குருவாகிய, வசிட்டனால் - வசிட்ட முனிவரினால், பெற்ற சாபம் - கிடைத்த சாபத்தினால் உண்டாகிய, பெரும்புலை தீர்த்தனை-எனது தந்தையின் பெரிய நீசத்துவத்தை நீக்கியருளினீர், இற்றை ஞான்று - இந்த-நாளிலே, இங்கு- இந்த இடத்தில், எனை - என்னை, புலையாக்க - நீசனாக்க, நீ கற்றதேது - தேவரீர் கற்றுக்கொண்டது எதற்காக, என - என்றுசொல்லி, கால் - அந்த விஸ்வாமித்திருடைய கால்களை, கரம் பூண்டனன் - கைகளால் பிடித்துக்கொண்டான் அரிச்சந்திரன். எ-று. 'என்னை' எனற்பாலது 'எனை' எனத்தொகுத்தல் விகாரம்பெற்று நின்றது. அற்றை ஞான்று என்றது ,திரிசங்குவின் நீசத்துவத்தை நீக்கியருளின நாளை.

முன்னே காதிராஜன் புத்திராகிய விஸ்வாமித்திரர் தவம் செய்து இருக்கையில் இவர் தவத்திற்கு இரங்கி பிரமன் இவரை 'ராஜரிஷி' யாக அருளினர் திரும்பவும் தவஞ்செய்து கொண்டு இருக்கையில், அயோத்திக்கு அரசனாகிய திரிசங்கு தன் குலகுருவாகிய வசிட்டரை அடுத்து என்னை உடலோடு சுவர்க்கம் புகும்படி அருள்செய்ய வேண்டுமென்று வேண்ட நீ என்னை விட்டு முன்னே வேறு ஆசிரியனை அடைந்தமையால் சீசனாகுக என்று சாபம் இட்டார்; உடனே திரிசங்கும் சீசனாகினன். பின் விஸ்வாமித்திரரிடம் திரிசங்கு சென்று தன் கருத்தைக்கூறி வேண்டினன், அதற்கு விஸ்வாமித்திரரும் சம்மதித்துத் தன் தவமகிமையால் திரிசங்குவை மேல் ஏறச்செய்தார், இது கண்டு தேவர்கள் புலையன் பொன்னுலகு வருதல் பொருந்தாது "சீசீ புலையா இங்குவராதே" என்று கீழே தள்ளிவிட்டனர், அவர்கள் அவ்வாறு தள்ளவே தலைகீழாக வீழும் திரிசங்கு விஸ்வாமித்திரரைக்கூவி அபயமிட்டான். விஸ்வாமித்திரர் உடனே நில் நில் என்று தடுத்து வெகுண்டு வேறு பொன்னுலகம் நானே சிருட்டிக்கின்றேனென்று சிருட்டிக்கத் தொடங்கிச் சில பொருள்களைப் படைத்தார் உடனே தேவர்கள் பயந்து வேண்டி அவர் படைத்த பொருள்களையும் திரிசங்குவையும் நட்சத்திர மண்டலத்தில் இருக்க ஏற்பாடு செய்தனர் என்பது புராணகதை; இதனை,

"சென்னிகீழாகவீழுந்திரிசங்குவென்னும்வேந்தை
நின்னிலென்றுரைத்துவானினிறுவிவாசவன்றனோடும்
இன்னுமோருலகஞ்செய்வேனெனவுடக்கணங்கள்விண்ணோர்
பன்னருஞ்சராசரங்கள்சிற்சிலபடைத்தானன்றே.

படைத்தலும்விண்ணோரஞ்சிக்கோசிகன்பால்வந்தெய்தி
அடைக்கரும்புலத்தோய்நீயீண்டமைத்தவையமையுமுன்னந்
திடப்படப்படைத்தயாவுந்தார்திரிசங்குவோடும்
உடுத்தெரியுலகின்பாங்கர்வதிகவென்றுரைத்துப்போனர்"—என்ற கூர்ம புராண முடையார் வாக்கானு மறிக. (சுங)

முன்னமுந்தைமுழுப்புலைநீங்கின
மின்னநீக்கவெமக்கரிதன்றியாஞ்
சொன்னவாசகங்கேட்டுச்சுடர்முடி
மன்னர்மன்னவென்மக்களைச்சேர்கென்றான்.

[முன்னே உன் தகப்பன் முழுதும் புலையனானதைப் போக்கினேம், இனிமேல் உனக்கு வருமானல் அதை நீக்குவது எனக்கு அரிதான காரியம் அல்ல, நான் சொல்லிய வார்த்தையைக்கேட்டு, கிரீடாதிபதியே என் பெண்களை நீ கூடக்கடவை என்று விஸ்வாமித்திரர் கூறினர்.]

இ-ள். முன்னம் - முன் நாளிலே, உந்தை - உன் தந்தையின், முழுப்புலை - முழுதும் புலைபனானதை, நீக்கினம் - போக்கிவிட்டோம், இன்னம்

நீக்க - இனிமேலும் (உனக்கு உண்டாகுமேயானால்) அந்தப் புலைத்தன்மையை நீக்க, எமக்கு - எமக்கு, அரிது அன்று - அருமையான காரியம் அல்ல, யாம் சொன்ன - நாம் சொல்லுகிற, வாசகம் கேட்டு - வார்த்தையைக்கேட்டு, சுடர் முடி மன்னர் மன்ன - பிரகாசமான கிரீடத்தை அணிந்த ராஜாதி ராஜனே!, என்மக்களை - என்னுடைய பெண்களை, சேர்கென்றான் - நீ கூடக்கடவாயாக என்று விஸ்வாமித்திரர் கூறினர். எ-று.

'முழுப்புலை நீக்கினம்' என்றதில் உன் தந்தை புலையனானதையே நீக்கின நமக்கு நீ புலைச்சியைக் கூடியதனால் உண்டாகிய தோஷத்தை நீக்குவது அரிதான காரியம் அன்று என்னும் பொருள்படக் கூறினர். (சுச)

அடினுநின்விழியாரழலாலெனைச்
சுடினுமென்னுடறன்னைத்துறந்துயிர்
விடினுமேனியைவெட்டியரிந்துகூ
றிடினுமிச்சொற்கிசைகிலன்யானென்றான்

[அதற்கு அரிச்சந்திரன் நீர் என்னைக் கொன்றாலும், உம்முடைய விழி நெருப்பால் என்னைச் சுட்டாலும், என் உடம்பை விட்டு உயிர் நீங்கினாலும், என் உடம்பை வெட்டிக் கூறிட்டாலும் இந்தச் சொல்லுக்கு நான் சம்மதியேன் என்றான்; என்பதாம்.]

இ-ள். அடினும் - (அதற்கு அரிச்சந்திரன்) நீர் என்னைக் கொன்றாலும், நின் - உம்முடைய, விழி - கண்களின், ஆர் அழலால் - பொருந்தியுள்ள கோபாக்கினியினால், சுடினும் - தகித்தாலும், என் உடல் தன்னை - என் உடம்பை, துறந்து - விட்டு நீங்கி, உயிர் விடினும் - உயிர் போவதாயிருந்தாலும், மேனியை - என் உடம்பை, வெட்டி - வாள்கொண்டு வெட்டி, அரிந்து கூறு இடினும் - அறுத்துப் பல பல கூறுகள் செய்தாலும், இச்சொற்கு - இப்போது நீர் சொல்லுகிற சொல்லுக்கு, இசைகிலன் யான் என்றான் - நான் சம்மதிக்க மாட்டேன் என்றான். எ-று.

'அடினும்' என்பதற்கு என்னோடு போர் செய்தாலும், என்றும், என்னைத் தாழ்த்தினாலும் என்றும் பொருள் கூறுவர். மேனியை வெட்டி அரிந்து கூறிடினும்' என்றது சித்திரவதை செய்தாலும் என்பதாம். (சுரு)

யூபவேள்விக்கவுசிகனேய்விலாக்
கோபமெய்திக்கொடியிடைமங்கையர்
தீபமன்னவர்ச்சேர்கிலையாயினென்
சாபநீபெறுகென்றுரைசாற்றினான்.

[யாகத்தூண்கள் நிறுத்தி யாகம் செய்கின்ற விஸ்வாமித்திரர் தணியாத கோபம் கொண்டு, கொடிபோன்ற இடையை உடைய பெண்களாகிய விளக்குபோன்ற அவர்களைச் சேராதிருப்பையானால் என்சாபத்தைப் பெறுக என்று சொல்லினர் என்பதாம்.]

இ-ள். யூபவேள்விக் கௌசிகன் - யாகத்தூண்கள் நிறுத்தி யாகம் செய்வதில் வல்லவரான விசுவாமித்திரர், ஓய்விலா - தணியாத, கோபம் எய்தி-

கோபம்பூண்டு, கொடி இடை மங்கையர் - கொடிபோன்ற இடையை உடைய பெண்களாகிய, தீபம் அன்னவர் - விளக்குப்போன்ற அவ் இருவரையும், சேர் கிலை ஆயின் - சேராதிருப்பையே யானல், என்சாபம் - என்சாபத்தை, நீபெறு கென்று - நீ பெறக்கடவை என்று, சாற்றினன் - சொல்லினர். எ-று.

பெறுக என்று - பெறுகவென்று என்று புணரும் பெறுகவென்று என்றது பெறுகென்று ஆயது. (சுசு)

கூற்றமுண்ணக்கொடுத்தெமதாருயிர்
தோற்றனென்றிதினென்றுதுணிந்துநின்
சீற்றமாறிடச்செப்பிடுஞ்சாபமியா
னேற்றனன்னிடுகென்னவியம்பினன்.

[இதைக்காட்டிலும் எம்முடைய அரிய உயிரை யமன் உண்ணும்படிக்
கொடுத்துத் தொலைத்து விடுதல் நல்லது, என்று துணிந்து
உமது கோபம் நீங்க சொல்லுகின்ற சாபத்தை நானே
ஏற்றுக் கொள்ளுகின்றேன், நீர் சாபம் இடு என்று
சொல்லினன் என்பதாம்.]

இ-ள். இதின் - இந்த முனிவர் சொற்படி அப்பெண்களைக் கூடுவதைக் காட்டிலும், எமது - எம்முடைய, ஆருயிர் - அருமையான உயிரை, கூற்றம்- யமன், உண்ணக்கொடுத்து - உண்ணும்படிக் கொடுத்து, தோற்றல் நன்று- தோற்றுவிடுதல் நல்லது, என்று துணிந்து - என்று துணிவுகொண்டு, நின் சீற்றம் மாறிட - உம்முடைய கோபம் தீரும்படிக்கு, செப்பிடும் சாபம் - சொல்லப்போகிற சாபத்தை, யான் ஏற்றனன் - நானே ஏற்றுக்கொள்ளுகிறேன், இடுகென்ன - நீர் சாபம் இடும் என்று, இயம்பினன் - அரிச்சந்திரன் சொல்லினன். எ-று.

'கூற்றன்' உடலையும் உயிரையும் கூறுபடுத்திப் பிரிக்கின்றவன் என்னும் காரணம்பற்றி வந்தபெயர்; 'கூறு' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. (சுஎ)

அப்பெருந்தகையன்னதுரைத்திட
விப்பெருந்தகைக்கும்பொறைக்குமியா
னெப்பெடுத்துரைக்கத்தகுமோவெனச்
செப்பருந்தவன்சிந்தையிலெண்ணுவான்.

[அரிச்சந்திரமகாராஜன் அப்படிச்சொல்ல இந்தப்பெரிதான குணங்களுக்கும்,
பொறுமைக்கும் நான் ஒப்பெடுத்துச் சொல்லக் கூடுமோ என்று
ஆச்சரியப்பட்டு, தவத்தை உடைய விஸ்வாமித்திரர் மனத்
திலே ஆலோசிக்கலானர் என்பதாம்.]

இ-ள். அப்பெருந்தகை - அந்தப் பெருந்தன்மையை உடைய அரிச்சந்திரன், அன்னது - அப்படிப்பட்ட வார்த்தைகளை, உரைத்திட - சொல்லுமளவ

வில், இப்பெருந்தகைக்கும் - இந்தப் பெரிதான குணங்களுக்கும், பொறைக் கும் - பொறுமைக்கும், யான் - நான், ஒப்பு எடுத்து உரைக்க - ஒப்பை எடுத் துச் சொல்ல, தகுமோ என - தகுமோ என்று, செப்பு அரும் தவன் - சொல் லுதற்கு அரிதான தவத்தை உடைய விஸ்வாமித்திரர், சிந்தையில் - தன் மனத்திலே, எண்ணுவான் - ஆலோசிக்கலாயினர். எ-று. (சுஅ)

இரைத்தெழுந்தகதத்தையிறுத்திடின்
வரைத்தடம்புயவாசவன்முன்னர்யா
முரைத்தவாசகந்தோற்குமென்றுன்னுபு
நிரைத்தவேணிநெடுந்தவன்கூறுவான்.

[நமக்கு உண்டான கோபத்தை அழித்துவிட்டால், இந்திரனுக்கு முன்னே சொன்ன வார்த்தை தோற்றுப்போம் என்று நினைத்து விஸ்வாமித்திரர் கூறுகின்றார் என்பதாம்.]

இ-ள். இரைத்து எழுந்த - ஆரவாரித்து நமது உள்ளத்திலே தோன்றின, கதத்தை இறுத்திடின் - கோபத்தை ஒழித்துவிட்டால், வரை - மலைபோன்ற, புய - புயத்தை உடைய, வாசவன் முன்னர் - இந்திரனுக்கு முன்னாலே, யாம் உரைத்த - நாம் சொல்லிய, வாசகம் - சபத வார்த்தை, தோற்கும் என்றுதோற் றுப் போகும் என்று, உன்னுபு - நினைத்து, நிரைத்தவேணி - வரிசை வரி சையாய் நீண்டிருக்கின்ற சடைகளை உடைய, நெடும் தவன் - நெடிதான தவத் தை உடைய விஸ்வாமித்திரர், கூறுவான் - சொல்லுகின்றார். எ-று.

'கூறுவான்' என்றதில் 'வான்' எதிர்காலம் காட்டும் விகுதி. (சுகூ)

துடிமருங்குலத்தோகையர்தங்களைக்
கடிமணஞ்செயறீதென்றகள்வனே
குடிமைசெய்யுங்கொடும்புலையற்குநீ
யடிமையாவையறிதியென்றோதினன்.

[அந்த என் பெண்களைக் கல்யாணம் செய்துகொள்ளல் தீயது என்று சொல்லுகின்ற திருடனே! புலையனுக்கு நீ அடிமை ஆவாய் அறிவாயாக என்று கூறினன் என்பதாம்.]

இ-ள். துடி - உடுக்கைபோன்ற, மருங்குல் - இடையை உடைய, அத் தோகையர் தங்களை - அந்தத் தோகை மயில்போலும் சாயலை உடைய பெண் களை, கடிமணம் செயல் - கல்யாணம் செய்து கொள்ளுதல், தீது என்ற - தீய காரியம் என்ற, கள்வனே - திருடனே! குடிமைசெய்யும் - ஏவல் தொழிலைச் செய்யும், கொடும் புலையற்கு - கொடியனான புலையனுக்கு, நீ - நீ, அடிமை ஆவை - அடிமை ஆகப்போகின்றாய், அறிதி - அறிவாயாக, என்று ஓதினன்- என்று விஸ்வாமித்திரர் கூறினர். எ-று. 'குடிமை' இழிதொழில் என்றும் கூறுவர். (எ0)

கொஞ்சிப்பேசுங்குழவிசொற் குற்றந்தான்
வஞ்சித் தன்னை வன முலைப்பாலினி
னஞ்சிட்டாலதைநாடிவிலக்குநன்
னெஞ்சத்தாருளரோவிந்நிலத்திலே.

[கொஞ்சிப்பேசும் குழந்தை சொல்லிலே உள்ள சொல் குற்றத்தால்
வஞ்சனைசெய்து முலைப்பாலில் நஞ்சு கலந்து கொடுத்தால்
அதைத் தெரிந்து விலக்கும் நல்ல நெஞ்சத்தவர்கள்
இந்த உலகில் உண்டோ என்பதாம்.]

இ-ள். கொஞ்சிப் பேசும் - கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகின்ற, குழவி சொல் குற்றத்தால் - குழந்தைகளின் சொல்லிலே உள்ள குற்றத்தினாலே, அன்னை - தாயானவள், வஞ்சித்து - வஞ்சனைசெய்து, வனம்-அழகிய, முலைப் பாலினில் - முலைப்பாலில், நஞ்சிட்டால் - நஞ்சு கலந்து கொடுத்தால், அதை- அந்த அன்பில்லாத செய்கையை, நாடி - தேடி அறிந்து, விலக்கும் - விலக்கு கின்ற, நல் நெஞ்சத்தார் - தாயைக்காட்டிலும் அன்பு உடைய நல்ல நெஞ் சத்தை உடையவர்கள், இந்நிலத்திலே - இந்த உலகத்திலே, உளரோ - அந்தப் பிள்ளைக்கு வேறு ஒருவர் இருக்கின்றார்களோ. எ-று. இச்செய்யுள் குளகம் வருஞ்செய்யுளோடு பொருள் முடிகின்றது.

ஒரு பிள்ளைக்குத் தாயைக்காட்டிலும் அன்பு உடையவர் வேறு இந்த உல கத்தில் இல்லை, அந்தத்தாயே கொஞ்சிப்பேசும் சொற்குற்றத்தினால் முலைப்பா லில் நஞ்சிட்டுக்கொன்றால் யார் அவளிலும் அந்தப் பிள்ளையினிடத்து அன்பு கொண்டு தடுக்க இந்த உலகில் அன்பின் வல்லார் என்பதாம். 'முலைப்பாலில்' என்றும் 'கொஞ்சிப் பேசும் குழவி' என்றும் கூறியதால் மிக்க சிறு குழந்தை என்பது பெற்றாம். (௭௧)

வாரிகாய்ந்துகொதித்திடின்மாற்றத்தண்
ணீரியாவர்தருவரந்நீதியிற்
சீரியாயெனைநீமிகச்சிறிடின்
யாரியாரஞ்சலென்பவரென்றனன்

[கடல் வெப்பம் கொண்டு கொதிப்பதானால் அதை மாற்றுதற்குத்
தண்ணீர் யார் தருவார்கள். அந்த நீதித்தன்மைபோல் சிறந்த
முனீஸ்வரரே நீ என்னை மிகவும் கோபித்தால் என்னை
எவர்கள் பயப்படாதே என்று தேற்றுவார்
என்றனன், என்பதாம்.]

இ-ள். வாரி - கடலானது, காய்ந்து - வெப்பம்கொண்டு, கொதித்திடின்- கொதிப்புடையதானால், மாற்ற - அந்த வெப்பத்தைத்தணிக்க, தண்ணீர்- குளிர்ந்தநீரை, யாவர் தருவர் - யார் கொண்டுவந்து தருவார்கள், அந்நீதியில்- அந்த நீதித்தன்மைபோல், சீரியாய் - சிறந்த மகா முனீந்திரரே! எனை நீ மிகச் சீறிடின் - என்னை நீ மிகவும் கோபித்து (சபித்துத் தணித்து) கொண்டால்,

யாரியார் - எவர், அஞ்சல் - பயப்படாதே, என்பவர் - என்று சொல்லுகின்ற வர்கள், என்றனன் - என்று அரிச்சந்திரன் கூறினன். எ-று. (எ௨)

தாயுந்தந்தையுந்தஞ்சமுந்தெய்வமு
நீயுன்டென்றுநினைந்திருந்தோமெனுச்
சேயும்வேந்துந்திருவுமமைச்சனும்
போயுன்டாதம்புகலென்றுபூண்டனர்.

[தாயும், தகப்பனும், ஆதாரமும், தெய்வமும், ஆக நீரே எங்களுக்கு உண்டாயிருக்கிறீரென்று எண்ணி யிருந்தோமென்று பிள்ளை யும் தானும் சந்திரவதியும், மந்திரியும்போய் உன் பாதம் தஞ்சம் என்று பாதங்களைக் கைகளால் பிடித்துக் கொண்டார்கள் என்பதாம்.]

இ-ள். தாயும் - தாயும், தந்தையும் - தகப்பனும், தஞ்சமும் - ஆதாரமும், தெய்வமும் - தெய்வமும், (ஆக எல்லாம்) நீ உண்டென்று - நீரே எங்களுக்கு உண்டாய் இருக்கிறீரென்று, நினைத்து இருந்தோம் எனு - நாங்கள் எண்ணி யிருந்தோம் என்று, சேயும் - பிள்ளையாகிய தேவதாசனும், வேந்தும் - அரிச் சந்திர மகாராஜனும், திருவும் - லட்சுமிபோன்ற சந்திரவதியும், அமைச்சனும்- மந்திரியும், போய் - சென்று, உன்பாதம் புகல் என்று - உம்முடைய பாதங் களே கதி என்று, பூண்டனர்-கைளால் பாதங்களை பற்றிக்கொண்டனர். எ-று.

அன்னையென்பையருந்துணையென்பையுன்
முன்னைவாழ்வுமுதல்வனுமென்பைமற்
றென்னையிப்படிவெல்பவனிச்சமத்
துன்னையல்லதுகண்டிலமுண்மையே.

[அதற்கு விஸ்வாமித்திரர் நீ என்னைத் தாய் என்பாய், அருமையான துணை என்று சொல்லுவை உன் முன்னைவாழ்வு என்றும் தெய் வம் என்று சொல்லுவை, என்னை இப்படியெல்லாம் சொல்லி வெல்பவன் நீயோ இந்தச் சமத்து உன்னிடத்திலல்லது வேறு இடத்தில் கண்டதில்லை இது உண்மை என்றார்; என்பதாம்.]

இ-ள். அன்னை என் பை - (அதற்கு விஸ்வாமித்திரர்) நீ என்னைத் தாய் என்பாய், அரும் துணை என்பை - அருமையான சகோதரன் என்பாய், உன் முன்னை வாழ்வும் - உன்னுடைய முற்பட்ட வாழ்வும், முதல்வனும் - தெய்வ மும், என்பை - என்று கூறுவாய், மற்று என்னை - மற்றும் என்னை, இப்படி வெல்பவன் - இந்தவிதமாக வெல்கின்றவன், இச்சமத்து - இந்த சாமர்த்தி யத்தை உடைய, உன்னை அல்லது - உன்னை அல்லாமல், கண்டிலம் - வேறு ஒருவரையும் கண்டோம் இல்லை, உண்மையே - இது உண்மையாகும் என்று விஸ்வாமித்திரர் கூறினர். எ-று. ஈற்று 'ஏ' தேற்றப்பொருளில் வந்தது. (எச)

கண்ணைவேண்டினுமீகுவன்காக்கின்ற
மண்ணைவேண்டினும்வாழ்வுடனீகுவன்
பண்ணைவேண்டியசெஞ்சொற்பறைக்குலப்
பெண்ணைவேண்டிலன்யானென்றுபேசினன்

[கண்ணைக்கேட்டாலும் கொடுப்பேன்; நான் காக்கின்ற மண்ணைக்கேட்டாலும், என் செல்வத்தோடே கொடுப்பேன், இராகத்தை ஒப்புக்கூறத்தக்க செவ்விதான சொல்லை உடைய பறைக்குலப் பெண்களை நான் வேண்டேன் என்றான், என்பதாம்.]

இ-ள். கண்ணைவேண்டினும் ஈகுவன் - (அப்படி விஸ்வாமித்திரர் கூற அரிச்சந்திரன்) என் கண்களைக்கேட்டாலும்,கொடுக்கிறேன், காக்கின்ற மண்ணை வேண்டினும் - நான் ஆளுகின்ற நாட்டைக்கேட்டாலும், வாழ்வுடன் - என் செல்வத்தோடு, ஈகுவன் - கொடுக்கிறேன், பண்ணைவேண்டிய - இசையை ஒப்புக்கூறத்தக்க, செஞ்சொல் - செவ்விதான சொற்களை உடைய, பறைக் குலப்பெண்ணை - பறைச்சாதிப்பெண்களை, யான் - நான், வேண்டிலன்- வேண்டேன், என்று - என்று, பேசினன் - அரிச்சந்திரன் கூறினன். எ-று.

மன்னர்மன்னனுரைத்திடமாதவ
னன்னதேனமக்காமென்றவாவுறீஇச்
சொன்னதேயமையுங்கடல்சூழ்புவி
யென்னதேயென்றெழுந்தெழுந்தாடினன்.

[அரசர்களுக்கு அரசனான அரிச்சந்திரன் அப்படிச்சொல்ல விஸ்வாமித்திரன் அப்படியானல், நமக்குச் சம்மதமென்று, ஆசையை நீக்கி நீ நாடு கொடுக்கின்றேன் என்று சொன்னதே போதும், கடல் சூழ்ந்த உலகம் என்னுடையதே என்று எழுந்து எழுந்து கூத்தாடினன் என்பதாம்]

இ-ள். மன்னர் மன்னன் - அரசர்களுக்கு அரசனான அரிச்சந்திரன், உரைத்திட - அப்படிச்சொல்ல, மாதவன் - மகா தவமுனிவரான விஸ்வாமித்திரர், அன்னதேல் - நீ அப்படிச் சொல்வாய் ஆனல், நமக்கு ஆம் என்று - நமக்குச் சம்மதமென்று, அவாவொறீஇ - நீ ஆசையை நீக்கி, சொன்னதே அமையும் - உலகம் முழுதும் வேண்டினும் தருவேன் என்று சொன்னதே போதும், கடல் சூழ்புவி - இனி கடல் சூழ்ந்த உன் நாடெல்லாம், என்னதே- என்னுடையதே, என்று - என்று கூறி, எழுந்து ஆடினன் - எழுந்து எழுந்து கூத்தாடினர். எ-று.

"அன்னதேனமக் காமென்ற வாவுறீஇ" என்பது பாடமாயின், நமக்கு ஆகும் என்று கூறி விஸ்வாமித்திரர் ஆசைகொண்டு, என்று பொருள்க. (எசு)

மருவுகாடும்வளநகரும்பெருந்
திருவுமீதுவனென்றனைசெவ்வியோய்

தருவனென்றமொழிதவறுமனு
னரசளிக்கினமையுமெனச்சொனுன்.

[நல்ல குணத்தை உடைய அரசனே! பொருந்திய நாடும் வளப்பமுள்ள நகரும் பெரிய செவமும் தருவேன் என்று கூறினுய், அந்தத் தருகின் றேன் என்ற வார்த்தை தப்பாமல் உன் அரசை எனக்குக் கொடுத் தால் எனக்குப் போதும் என்று சொன்னுர்; என்பதாம்.]

இ-ள். செவ்வியோய் - நல்ல செவ்வைக்குணத்தை உடைய அரசனே! மருவும் நாடும் - பொருந்திய கோசல நாட்டையும், வளநகரும் - வளப்பம் பொருந்திய அயோத்தி நகரத்தையும், பெரும் திருவும் - பெரிய செல்வத்தையும், ஈகுவன் என்றனை - தருகிறேன் என்று சொன்னுய், தருவன் என்ற - தருகி றேன் என்ற, மொழி தவறுமல் - வாக்குத்தப்பாமல், உன் அரசு அளிக்கின்- உன்னுடைய அரசாட்சியை எனக்குக் கொடுத்தால், அமையும் எனச் சொன் னுன் - போதுமானதென்று விஸ்வாமித்திரர் கூறினுர். எ-று. 'அமையும்' (என்மனம்) பொருந்தும் என்றும் பொருள் கொள்ளலாம். (எஎ)

அந்தணாளனைநோக்கியவ்வண்ணனு
முந்தமக்களுறுநலன்வேண்டிலே
னெந்தநாடுமிருநிதிக்குப்பையுந்
தந்தனன்மொழிதப்புவதில்லென்றுன்.

[அரிச்சந்திரன் விஸ்வாமித்திரரை நோக்கி உம்முடைய பெண்களைக் கூடுவதான சுகத்தை வேண்டிலேன். எங்கள் நாட்டையும் பெரிதான எங்கள் செல்வக்குவியலையும் தந்தேன் நான் சொன்னசொல் தப்புவதில்லை என்று கூறினுன் என்பதாம்.]

இ-ள். அவ் அண்ணலும் - அப்படிப்பட்ட பெருமையை உடைய அரிச் சந்திர மகாராஜனும், அந்தணாளனை நோக்கி - அப்படிச்சொன்ன விஸ்வாமித்தி ரரை நோக்கி, உம் தம்மக்கள் - உம்முடைய பெண்களின், உறுநலன் வேண்டி லேன் - கூடுவதான சுகத்தை நான் வேண்டேன், எந்தம் நாடும்-எங்களுடைய நாட்டையும், இருநிதிக்குப்பையும் - பெரிதான எங்கள் செல்வத்திரட்சியையும், தந்தனன் - இப்போதே கொடுத்தேன், மொழி தப்புவதில் என்றுன் - நான் சொன்னசொல் தப்புவதில்லை என்று கூறினுன். எ-று.

'அந்தணாளன்' அழகிய கருணையை உடையவன், என்றும் வேதாந்தப் பொருளைக் கிட்டுகின்றவன் என்னும் காரணங்கள் பற்றி வந்த பெயர். 'அண் ணல்' - பெருமையை உடையவன். (எஅ)

பாரைவார்த்தையினுற்றரற்பாலதோ
தாரைவாரெனக்கௌசிகன்சாற்றிட
நாரைவாய்க்கயல்பாயுநறுந்தட
நீரைவார்த்தனனீள்புவியாள்கென.

[அதற்கு விஸ்வாமித்திரர் பூமியை வாய்ச்சொல்லாலே கொடுக்கத்தக்கதோ, தாரைவார்த்துக்கொடு என்று கூற, நாரைவாயில் கயில் மச்சங்கள் பாயும் அந்தக் குளத்துநீரைக் கொண்டுவந்து இனி நீரே என்னுடைய நீண்ட பூமியை ஆளுமென்று தாரை வார்த்துக் கொடுத்தான் என்பதாம்.]

இ-ள். கௌசிகன் - விஸ்வாமித்திரர், பாரை - பூமியை, வார்த்தையி ஞல் - வாய்ச்சொல்லாலே, தரல் பாலதோ - கொடுக்கத்தக்கதோ, தாரைவார் என - நீ தாரைவார்த்துக் கொடு என்று, சாற்றிட - சொல்ல, நாரைவாய்-நாரை களின் வாய்களுக்குள்ளே, கயல்பாயும் - கயல் மச்சங்கள் பாயும்படியான, நறும் தடநீரை - வாசனை பொருந்திய (அங்கிருந்த) வாவிநீரை, நீள்புவி - நீண்ட என் நாட்டை, ஆள்கென - ஆளுதல் செய்யக்கடவீரென்று, வார்த்தனன்- தாரைவார்த்துக் கொடுத்தான். எ-று.

'நாரைவாய்க் கயல்பாயும்' என்பதற்கு, நாரையிடத்திலே கயல் மச்சங் கள் பாயும்படியான; என்றும் பொருள் கொள்வர். (எக)

வையநின்னதுமாநகர்நின்னது
வெய்யவாசியும்வேழமுநின்னபொற்
செய்யதேர்களுஞ்செல்வமுஞ்சேவிக்குந்
தையலார்களுந்தானையுநின்னவே.

[என்னுடைய நாடும், பெரிய நகரமும், வேகமுள்ள குதிரைகளும், யானைகளும், பொன்மயமான தேர்களும் செல்வமும் என்னி டத்தில் பணிவிடைசெய்கிற பெண்களும், சேனையும் ஆகிய எல்லாம் உமக்குச் சொந்தமானவைகளே என்றான் என்பதாம்.]

இ-ள். வைய நின்னது - இனி என் கோசல நாடு முழுதும் உம்முடை யதே, மாநகர் நின்னது - பெரிய அயோத்திமாநகரம் முழுதும் உம்முடையது, வெய்ய வாசியும் - கடுவேகத்தை உடைய குதிரையும், வேழமும் - யானை களும், நின்ன - உன்னுடையன, பொற்செய்ய தேர்களும் - பொன்மயமான செவ்வையான தேர்களும், செல்வமும் - செல்வமும், சேவிக்குந் தையலார் களும் - என்னிடத்தில் பணிவிடை செய்கிற பெண்களும், தானையும் - சேனை களும், நின்னவே - உமக்குச் சொந்தமானவைகளே. எ-று. ஏ - ஈற்றசை.

'பொற்செய்ய தேர்களும் பொன்னால் செய்த செம்மையான தேர்களும், என்றலும் ஆம். (அ0)

என்றுமன்னனியம்பியிறைத்தநீ
ரன்றுகௌசிகனங்கையினேற்றபி
னின்றமாதவர்தங்களைநேர்குறித்
தின்றுநீரெழுந்தார்த்திடுமென்றனன்.

[என்று அரசன் சொல்லி தாரைவார்த்த நீரை அப்போது விஸ்வாமித்திரர் உள்ளங் கையினாலே வாங்கிக்கொண்ட பின்பு தம்முடனே கூடி நிற்கிற மகா தவமுனிவர்களை நேரே வரச்சொல்லி நீங்கள் இன்று சந்தோஷ ஆரவாரம் செய்யுங்கள் என்றார் என்பதாம்.]

இ-ள். என்று - என்று, மன்னன் இயம்பி - அரிச்சந்திரமகாராஜன் சொல்லி, இரைத்த நீர்-தாரைவார்த்த நீரை, அன்று - அப்பொழுது, கௌசிகன் - விஸ்வாமித்திரர், அங்கையின் ஏற்றபின் - உள்ளங்கையினாலே வாங்கிக் கொண்ட பின்பு, நின்ற மாதவர்களை - தம்முடனேகூட நிற்கிற மகா தவத்தை உடைய முனிவர்களை, நேர் குறித்து - நேராக வரச்சொல்லி, இன்று - இப் போது, நீர் - நீங்கள் எல்லோரும், எழுந்து - எழுந்து (எழுந்து), ஆர்த்திடும் என்றனன் - சந்தோஷ ஆரவாரங்களைச் செய்யுங்கள் என்றார். எ-று. (அக)

கலி நிலைத்துறை.

கோசிகனின்னே கூறியபின் கூகூவென்றே
வாசிகள்சொன்னாராடினரார்த்தாரணியாடை
வீசினர்நீயே மேன்மகனென்றுமென்மேலும்
பேசினர்பேசிமாசனர்நேசம்பெரிதுற்றார்.

[விஸ்வாமித்திரர் இப்படிச் சொன்னபின்பு கூ கூ என்று அரிச்சந்திரனுக்கு ஆசீர்வாதம் சொன்னார்கள். ஆடினார்கள், கர்ச்சனை செய்தார்கள், தாங்கள் உடுத்தி யிருக்கிற வஸ்திரங்களைக்கொண்டு வீசினார்கள் நீயே மேன் மக னானவனென்று மேன்மேலுங் கொண்டாடினார்கள், அந்த மகா ஜனங்கள் எல்லாம் அரிச்சந்திரனிடத்தில் மிகவும் பிரியம் கொண்டாடினார்கள் என்பதாம்.]

இ-ள். கோசிகன் - விஸ்வாமித்திரர், இன்னே - இந்தவிதமாக, கூறிய பின் - சொன்ன பின்பு, கூ கூ என்றே - கூ கூ என்று, ஆசிகள் சொன்னார்- ஆசீர்வாதங்கள் சொன்னார்கள், ஆடினார் - ஆடினார்கள், ஆர்த்தார் - கர்ச்சனை பண்ணினார்கள், அணி ஆடை - அழகிய வஸ்திரங்களை, வீசினர் - வீசினார்கள், நீயே மேன்மகனென்று - நீயே மேன்மகனானவன் என்று, மென்மேலும் பேசி னர் - மேன்மேலும் கொண்டாடினார்கள், பேசி - அப்படிக்கொண்டாடி, மாச னர் - அந்த மகா சனங்கள் எல்லாம், நேசம் பெரிதுற்றார் - அரிச்சந்திரனிடத் திலே மிகவும் பிரியம் கொண்டார்கள். எ-று. 'கூ கூ' ஒலிக்குறிப்பு.

'கூகூ' சந்தோஷ ஆரவாரம். இது விளச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் காய்ச்சீர் என ஐந்துசீர் அடிகொண்ட கலி நிலைத்துறை. (அஉ)

வாரணமுந்திண்டேர்பரிதேசம்வளனெல்லா
மாரணமோதுங்கௌசிகனுக்காயினவென்றே
பூரணகும்பம்வீதிகடோறும்பொலிவித்துத்
தோரணமிட்டார்தாரணியெங்குந்துறவோரே.

[யானைகளும், பலமான தேர்களும், குதிரைகளும், தேசமும் அதிலுள்ள
சம்பத்துகளும், வேதபாராயணம் செய்யும் கௌசிக முனிவருக்கு
ஆயிற்று என்று நிறைந்த நீர்க்குடங்களை வீதிகளெல்லாம்
நிறைய வைக்கச்சொல்லி அந்தத் துறவற முனிவர்கள்
உலக முழுதும் தோரணங்களும் கட்டினார்கள்
என்பதாம்.]

இ-ள். வாரணமும் - யானைகளும், திண்தேர் - பலமான தேர்களும், பரி-குதிரைகளும், தேசம் - தேசமும், வளன் எல்லாம் - அதிலுள்ள சம்பத்துகளும், ஆரணம் ஓதும் - வேதபாராயணம் செய்கிற, கௌசிகனுக்கு - விஸ்வாமித்திர முனிவருக்கு, ஆயின என்றே - வசமாயிற்று என்று, பூரண கும்பம்-நிறைந்த - நீர்க்குடங்களை, வீதிகள் தோறும் - வீதிகள் எல்லாம், பொலிவித்து-விளங்க வைக்கும்படிச்செய்து, துறவோர் - அந்தத் துறவறத்து முனிவர்கள், தாரணி எங்கும் - உலகமுழுதும், தோரணமிட்டார் - தோரணங்களும் கட்டினார்கள். எ-று. ஏ - ஈற்றசை. (அங)

மென்னடையன்னை நன்னடையாளைவிறலானை
முன்னடையாநின்றின்னவைபின்னுமுனிகூறு
மென்னகர்நின்றேயிவ்வுலகெல்லாம்யானாள
நின்னடையாளந்தந்திடுமாறுநெறியென்றான்.

[சந்திரமதிக்கும் அரிச்சந்திரனுக்கும் முன் நின்று இந்தவித வார்த்தைகளை
முனிவர் பின்னும் கூறுகின்றார்; எனக்குச் சொந்தமான அயோத்தியி
லிருந்து இந்த உலகத்தை எல்லாம் நான் ஆள்வதாக தப்பா மார்க்
கத்துடனே உன்னுடைய அடையாளத்தைக் கொடு என்று
சொன்னார் என்பதாம்.]

இ-ள். மெல் நடை - மிருதுவான நடையினாலே, அன்னம்-அன்னத்தை ஒத்த, நல் நடையாளை - நல்ல நடையை உடையவளாகிய சந்திரவதிக்கும், விறலானை - வெற்றிகொண்ட அரிச்சந்திரனுக்கும், முன் அடையா - முன்னாலே வந்து, நின்று - நின்றுகொண்டு, இன்னவை - இவ்வித வார்த்தைகளை பின்னும் - பிறகும், முனிகூறும் - விஸ்வாமித்திர முனிவர் கூறுகின்றார். என் நகர் நின்றே - நீதா எனக்குச் சொந்தமாகிய அயோத்தியிலிருந்தே, இவ் உலகெல்லாம் யானாள - இந்த உலகத்தை எல்லாம் நான் ஆளும்படி, மாறுநெறி-தப்பாத மார்க்கத்துடனே, நின் அடையாளம் - உன்னுடைய அடையாளத்தை, தந்திடு என்றான் - கொடு என்று சொன்னார் எ-று. 'நின் அடையாளம்' என்றது முத்திரை மோதிரத்தை. (அச)

வாழியநாடூர்செல்வமமைச்சன்மாசேனை
சூழிநெடுங்கைப்போர்மதவேழந்துரகந்தே
ரூழியின்மட்டோளுதிதந்தேனுனதென்றே
வாழியளித்தான்பாருளமட்டுமழியாதான்.

[உலகுள்ளமட்டும் அழியாத கீர்த்தியை உடைய அரிச்சந்திரன் முனிவருக்கு
கோசல நாட்டையும், ஊரையும், செல்வத்தையும், மந்திரியையும், பெரி
தான சேனைகளையும், நீண்ட துதிக்கைகளைக்கொண்ட போரில்
வல்ல மதயானைகளையும், குதிரைகளையும், இரதங்களையும்
ஊழிகாலத்து அளவும் நீரே ஆளக்கடவீர், உமதெ
ன்றே தந்துவிட்டேன் என்று சொல்லி தன்
கையில் உள்ள முத்திரை மோதிரத்தை
யும் கொடுத்தான் என்பதாம்.]

இ-ள். வாழிய - வாழ்வை யுடையதான, நாடு - கோசல நாட்டையும், ஊர் - ஊரையும், செல்வம் - செல்வத்தையும், அமைச்சன் - மந்திரியையும், மாசேனை - பெரிய சேனையையும், சூழி - முகபடாமணிந்த, நெடுங்கை-நீண்ட கையை உடைய, போர்மதவேழம் - போரில் வல்ல மதயானையையும், தூகம்-குதிரையையும், தேர் - இரதத்தையும், ஊழியின் மட்டும் - ஊழிக்கால வரையிலும், உனதென்றே - உன்னுடையதென்றே, தந்தேன் - கொடுத்தேன், ஆளுதி - ஆளக்கடவீர், (என்று கூறி) பாருளமட்டும் - உலகம் உள்ள அளவும், அழியாதான் - அழியாத கீர்த்தியைக்கொண்ட அரிச்சந்திரமகாராஜன், ஆழி அளித்தான் - தன் முத்திரை மோதிரத்தையும் கொடுத்தான். எ-று. 'வாழிய' என்ற முதற்சீரை அசையாகவும் கூறுவர்.

"ஊழிக்காலம் மட்டும் ஆளக்கடவாய், தந்துவிட்டேன் உன்னுடையதே, என்று கூறி உலகம் உள்ளமட்டும் அழியாத புகழை உடைய அரிச்சந்திரன் தன் ஆழி அளித்தான்," என்றும் பொருள் கூறலாம். (அ௰)

குடைதந்தேனீள்கொடிதந்தேனென்குழுவாய
படைதந்தேனற்கனகத்திண்டேர்பரிதந்தேன்
றடைதந்தேனின்றடியேனேகத்தவனேநீ
விடைதந்தேகென்றடிமேற்பரவிவீழ்வானை.

[என் குடையும், கொடியும், கூட்டமாகிய சேனையும், பொன்மயமான பலமான
தேரும், குதிரைகளும், ஆகிய இவைகளை எல்லாம் தந்தேன். இதற்கு
யாதொரு தடையும் சொல்வதில்லை, ஓ தவசிரேஷ்டரே நீர் இனி
அடியேன்போக, உத்தரவு அளித்து நீர் போமென்று அவர்
பாதங்களில் விழுந்து துதிக்கின்ற அரிச்சந்திரனை
என்பதாம்.]

இ-ள். குடை தந்தேன்-என் (கொற்றக்)குடையையும் கொடுத்தேன், நீள் கொடி தந்தேன்-நீண்ட கொடியையும் தந்தேன், என்-என்னுடைய, குழுவாய-கூட்டமாகிய, படை தந்தேன் - சேனைகளையும் தந்தேன், நல்கனக - நல்ல சுவர்ணத்தாலான, திண்தேர் - வலிய தேரையும், பரி - குதிரையையும், தந்தேன் - தந்தேன், தடை தந்தேன் இன்று - யாதொரு தடையும் தருவதே இல்லை, தவனே - தவத்தால் சிறந்த முனிவரே, நீ - நீர், அடியேன் ஏக - அடி

யேன் போகும்படி, விடை தந்து - உத்தரவு கொடுத்து, ஏகு என்று - போய் அருளும் என்று, அடிமேல் - பாதங்களின்மேல், பாவி வீழ்வானை - துதித்து வீழ்ந்து வணங்குகின்ற அரிச்சந்திரனை. எ-று. இச்செய்யுள் குளகம் - அடுத்த செய்யுளோடு பொருள் முடிவு பெறுகின்றது. (அசு)

துணியுந்தனிநெஞ்சுடையானினதுதோண்மாலை
மணியும்வளையும்வலயங்களுநின்வடிவாளு
மணியும்முடியுஞ்சேயுந்தாயுமணியும்பொற்
பணியுங்கழலுந்தந்தேகென்றுபலசொன்னான்.

[துணியும் தனிநெஞ்சுடைய விஸ்வாமித்திரமுனிவர், உன்னுடைய தோள் மாலையும், மணிமாலையும், கங்கணங்களும், கேயூரங்களும், கூரிய வாளா யுதமும், ஆபரணங்களும், கிரீடமும், பிள்ளையும் தாயும் அணிந் திருக்கின்ற பொன்னாபரணங்களும், வீரக்கழலும் தந்து விட்டுப் போவென்று பலவாகச் சொன்னான் என்பதாம்.]

இ-ள். துணியும் தனி நெஞ்சுடையான் - எந்தவிதக் கொடுமையையும் செய்தற்குத் துணியும் கடினத்தன்மையில் தனக்கு நிகரில்லாத மனதையுடைய விஸ்வாமித்திரமுனிவர், நினது தோள்மாலை மணியும் - உன்னுடைய தோள்களில் உள்ள மாணிக்க மாலைகளையும், வளையும் - கங்கணங்களையும், வலயங்களும் - கேயூரங்களையும், நின்வடிவாளும் - உன்னுடைய வடித்தெடுக்கப்பட்ட வாளாயுதமும், அணியும் - ஆபரணங்களும், முடியும் - கிரீடமும், சேயும் தாயும் - பிள்ளையும் தாயும், அணியும் பொற்பணியும் - அணிந்திருக்கின்ற பொன் ஆபரணங்களும், கழலும் - வீரக்கழலும், தந்து - கொடுத்துவிட்டு ஏகு என்று - போவாயாக என்று, பல சொன்னான் - பலவாகச் சொன்னார். எ-று.

'துணியும் தனி நெஞ்சு' என்பதற்கு எந்தக் கொடுமையையும் செய்யத் துணிவதில் ஒப்பற்ற நெஞ்சு, என்றும் பொருள் கொள்ளலாம். (அஎ)

எத்துக்கிவையென்றணிமாமுடியும்வடிவாளும்
புத்திப்புதல்வன்பூணும்பணியும்புனைமாதின்
பத்திக்கிரணப்பணியுங்கனகப்பணியும்வெண்
முத்திற்பணியுங்கழியாமுனிவன்முனமுய்த்தான்.

[அரிச்சந்திரன் என்னத்திற்கு இவைகள் எல்லாம் என்று, ரத்ந கிரீடத்தையும், வடித்தெடுக்கப்பட்ட வாளாயுதத்தையும், தன் புத்தியுள்ள புத்திரனின் ஆபரணங்களையும் சந்திரவதியின் வரிசையாக ஒளி வீசுகின்ற, ரத்நாபரணங்களையும், பொன்னாபரணங்களையும், முத்தா பரணங்களையும், கழற்றி விஸ்வாமித்திரர் முன்னே வைத்தார் என்பதாம்.]

இ-ள். எத்துக்கு இவை என்று - இவைகள் என்னத்திற்கு என்று, அணிமாமுடியும் - அணிந்திருக்கின்ற பெரிய முடியும், வடிவாளும் - வடித்தெ

டுக்கப்பட்ட வாளாயுதமும், புத்தி புதல்வன் பூணும் - புத்திசாலியான தன் புத்திரன் அணிந்திருக்கின்ற, பணியும் - ஆபரணங்களும், புனை - அலங்காரமான, மாதின்-மனைவியாகிய சந்திரவதியினுடைய, பத்திக் கிரணப்பணியும் - வரிசை வரிசையாக ஒளி வீசுகின்ற ரத்தினாபரணங்களையும், கனகப்பணியும் - பொன் ஆபரணங்களையும், வெண்முத்திற் பணியும் - வெண்மையான முத்தாபரணங்களையும், கழியா - கழற்றி, முனிவன் முனம் - விஸ்வாமித்திர முனிவரின் முன்னாலே, உய்த்தான் - கொண்டு வந்து வைத்தான். எ-று. (அஅ)

உனையும்மடமாதினையும்மரசேயுன்மைந்தன்
றனையும்விடுதற்கணியும்பணிநீதந்தாய்காண்
வனையுங்கழலாய்மகனும்நீயும்மடவாளும்
புனையுங்கிரணக்கலைதந்தகலப்போவென்றான்.

[உன்னையும் சந்திரவதியையும் பிள்ளையையும் விட்டு விடுதற்கு நீங்கள் அணிந்திருக்கின்ற ஆபரணங்களை எல்லாம் தந்துவிட்டீர்கள். வீரக் கழலை யுடையவனே! உன்பிள்ளையும் நீயும் மனைவியும் அணிந் திருக்கின்ற ஒளியை உடைய வஸ்திரங்களைக் கொடுத்து விட்டுத் தூரப்போங்களென்று சொன்னார் என்பதாம்.]

இ-ள். உனையும் - (அதற்குப் பிறகும் விஸ்வாமித்திரமுனிவர்) உன்னையும், மடமாதினையும் - இளமையையுடைய மனைவியையும், அரசே - ஓ அரசனே!, உன் மைந்தன் தனையும் - உன்னுடைய புத்திரனையும், விடுதற்கு-நான் விடும்படியாக, அணியும் - அணிந்திருக்கின்ற, பணி - ஆபரணங்களை எல்லாம், தந்தாய் - கொடுத்து விட்டாய், வனையும் கழலாய் - வீரக்கழலையுடையவனே!, மகனும் - (இனி உன்) மகனும், நீயும் - நீயும், மடவாளும் - மனைவியும், புனையும் - உடுத்தி யிருக்கின்ற, கிரணக்கலை தந்து - ஒளியையுடைய வஸ்திரங்களைக் கொடுத்துவிட்டு, அகலப்போ என்றான் - தூரப்போவென்று சொன்னார். எ-று. 'காண்' - அசை. (அகு)

ஆரையிரப்போமாடையளித்தாலரனேயென்
றாரையளித்தகாவலனின்றேயுயிர்சோருந்
தாரைநினைந்தேகௌசிகனுங்குத்தான்மூடுஞ்
சீரைகிழித்தேமூவகையிட்டுச்செலவுய்த்தான்.

[நாங்கள் உடுத்தியிருக்கும் வஸ்திரங்களைக் கொடுத்துவிட்டால் இனி யாரிடத்திலே போய் உடுத்துக்கொள்ள வஸ்திரம் கொடுங்கள் என்று கேட்போம், சிவனே! என்று முனிவருக்குத் தான் ஆளும் ஊரைத்தந்த அரிச்சந்திரன் நின்று உயிர்சோரும்படி தாரை தாரையாகக் கண்ணீர் விட்டு அழுகிறதை விஸ்வாமித்திரர் கண்டு ஆலோசித்து அப்போது தான் தன் உடம்பை மூடிக்கொண்டிருக்கிற காவி வஸ்திரத்தைக் கிழித்து மூன்று பங்குசெய்து கொடுத்து அவர்கள் உடுத்திக்கொண்டு போம்படி! அனுப்பினார் என்பதாம்.]

இ-ள். அரனே - சிவனே! ஆடையளித்தால் - விஸ்வாமித்திரருக்கு நாங்கள் உடுத்தியிருக்கும் வஸ்திரங்களைக் கொடுத்து விட்டால், ஆரை யிரப்போம்-

இனி எவரிடத்தில் போய் உடுத்திக்கொள்ள வஸ்திரம் யாசிப்போம், என்று-என்று, ஊலை அளித்த 'காவலன் - தனது ஊரை முனிவருக்குக் கொடுத்த அரிச்சந்திரமகாராஜன், நின்றே - (ஏங்கி) நின்றே, உயிர்சோரும் தாரை-உயிர் சோர்ந்து துக்கத்தால் அரிச்சந்திரன் விடும் கண்ணீர்த்தாரைகளை, நினைந்தே கௌசிகன் - விஸ்வாமித்திரர் கண்டு ஆலோசித்து, ஆங்கு - அவ்விடத்தே, தான் மூடும் சீரைகிழித்தே-தன் உடம்பை மூடும் காவிவஸ்திரத்தைக் கிழித்து, மூவகையிட்டு - மூன்றுபங்கு செய்து கொடுத்து, செல உய்த்தான் - போகும் படி அனுப்பினர், எ-று. சீரை - காவி வஸ்திரம். (௬0)

நாறற்பாழ்ந் துணிசிலைப்பேனொருநாண்மாறு
பீறற்சிலையிதாருக்கென் றுரைபேசாமே
மாறற்காலமிதாகிற்செய்வதென்மற்றென்னுக்
கூறற்காமிசைபூணக்கோனதுகொண்டானே.

[நாற்றம்பிடித்த பழயதுணி சிலைப்பேன் ஒருநாளும் மாறுமல் மொய்த்துக் கொண்டிருக்கிற கிழிந்த வஸ்திரம் இது யாருக்குவேண்டும் என்னும் சொல் சொல்லாமல், நமக்கு செல்வம் மாறிப்போகிற காலமானல் வேறு செய்வதென்ன இருக்கிறது என்று எண்ணி சொல்லு தற்குத் தகுந்த கீர்த்தியை அணிய அந்த அரிச்சந்திரன் அதை அணிந்துகொண்டான், என்பதாம்.]

இ-ள். நாறல்பழம் துணி - நாற்றம் பிடித்த பழயதுணி, சிலைப்பேன்-சிலைப்பேனனது, ஒருநாள் மாறு பீறல் சிலை - ஒருநாளும் போகாமல் மொய்த் துக்கொண்டிருக்கிற கிழிந்த வஸ்திரம், இது யாருக்கு என்று உரைபேசாமே-இது யாருக்குத் தகுமென்று சொல்லும் சொல்லைச் சொல்லாமலே, மாறல் காலம் இது ஆகில் - நமக்கு செல்வம் எல்லாம் மாறிப்போகிற காலம் இதுவா னல், செய்வதென் மற்று என்னு - நம்மாலே செய்யத்தக்கது வேறு யாது இருக்கிறது என்று, கூறற்கு அம் இசை - எல்லாராலும் கூறுதற்கு ஆகிய புகழை, பூண - மேற்கொள்ளும்படி, கோன் - அந்த அரிச்சந்திரமகாராஜன், அதுகொண்டான் - அந்தக் காவிவஸ்திரத்தை உடுத்திக்கொண்டான். எ-று. ஏ - ஈற்றசை.

'கோன்' 'கோ' என்றது னகரச்சாரியை பெற்று வந்தது. (௬௧)

காவிச்சிரையுடுத்துக்கூறைகழித்துச்சென்
றுவிக்காகுலமாகச்சேனையழுங்கப்போய்ப்
பாவிக்கோசிகனர்முன்னுலொருபால்வைத்துத்
தாவித்தாளிணைபூசித்தேவிடைதாவென்றுன்.

[காவி வஸ்திரத்தை உடுத்துத் தாம் உடுத்தியிருந்த ஆடைகளைக்களைந்து, தம் சேனைகள் வருத்தப்படுவதைப் பார்த்துக்கொண்டுபோய் பாவி யாகிய விஸ்வாமித்திரர் முன்னுலே வைத்து அவர் பாதங்களைப் பூசித்து உத்திரவு தந்தருளும் என்றுன் என்பதாம்.]

இ-ள். காவிச்சிரை உடுத்து - காவி வஸ்திரத்தை உடுத்துக்கொண்டு, கூறை கழித்து - தாம் முன் உடுத்தியிருந்த வஸ்திரங்களைக் களைந்து, சென்று-

போய், ஆவிக்கு - உயிருக்கு, ஆகுலமாக - துன்பமாக, சேனை - தன் சயினியங்கள், அழுங்க - துயரப்பட, போய் - கிட்டி, பாவி - பாவியான, கோசிகனார் முன்னால் - விஸ்வாமித்திரருக்கு முன்னாலே, ஒருபால் வைத்து - ஒரு பக்கத்திலே வஸ்திரங்களை எல்லாம் வைத்து, தாவி - விரைந்து, தாளிணை பூசித்தே - இரண்டு பாதங்களையும் வணங்கியே, விடைதா என்றான் - போவதற்கு விடை தந்து அருளும் என்றான். எ-று. (கூஉ)

தாவென்றான்விடைதந்தேனீயொருசார்பூடு
போவென்றானிதுவேநலனென்னப்போவானை
வாவென்றானதுகேளாமீளவும்வந்தெய்தி
யாவென்றானினியீகுவவெந்தாயானென்றான்.

[உத்தாவு தந்தருளும் என்று அரிச்சந்திரன் கேட்டான், விசுவாமித்திரர் இதோ உத்தாவு கொடுத்தேன் நீ ஒருபுறத்திலே போ என்றார், இதுவே நல்லது என்று போகின்ற அரசனை, திரும்பவும் வா என்று கூறினான், அதைக்கேட்டுத் திரும்பவும் வந்து சேர்ந்து எனது தந்தையே இனி நான் கொடுக்கவேண்டியது என்ன என்று கேட்டான், என்பதாம்.]

இ-ள். தா என்றான் விடை - அரிச்சந்திரன் உத்தாவு கொடுத்தருளும் என்றான், தந்தேன் - அதற்கு விஸ்வாமித்திரர் இதோ உத்தாவுகொடுத்தேன், நீ - நீ, ஒரு சார்பூடு போ என்றான் - ஒருபுறமாகப் போ என்றார், இதுவே நலன் என்ன - இதுவே நல்லது என்று, போவானை - போகின்ற அரிச்சந்திரனை, வா என்றான் - அரிச்சந்திரா! இங்கு வா என்றார், அதுகேளா - அரிச்சந்திரன் அதைக்கேட்டு, மீளவும் வந்து எய்தி - திரும்பவும் அருகிலே வந்து சேர்ந்து, எந்தாய் - எனதப்பனே! யா என்றான் - (இன்னும் நான் கொடுக்க வேண்டியது) என்ன என்று கேட்டான், இனி ஈகுவன் யான் என்றான் - (சொன்னால்) இனி அதையும் தருகின்றேன் என்றான். எ-று.

'எந்தாய் யான் இனி ஈகுவது யா' என்று கூட்டிப் பொருள் செய்யின், என்றான் என்றான் என்னும் இரண்டில் ஒரு என்றானுக்குப்பொருள் இல்லாது போம். (கூஙு)

செந்தேனோடுந்தண்பணைசூழுந்திருநாடா
வந்தேநானும்மாமுனிவே.யாரும்வளர்வேள்விக்
குந்தேநண்ணியிரந்தபசும்பொனுளவெல்லாந்
தந்தேபோவாயென்றிறையோனைத்தடைசெய்தான்.

[ஓ அரசனே! உன்னிடத்துக்கு நானும் முனிவர்களும் வந்து யாகத்துக்கு யாசகம் செய்து பெற்ற பசும்பொன் உள்ளது எல்லாம், தந்துவிட்டுப் போ என்று அரிச்சந்திரன் போவதைத் தடைசெய்தான் விஸ்வாமித்திரன் என்பதாம்.]

இ-ள். செந்தேன் - செவந்த தேனானது, ஓடும் - பாய்வதாகிய, தண்பணை சூழும் - குளிர்ந்த வயல்கள் சூழ்ந்துள்ள, திருநாடா - அழகிய நாட்டை

யுடைய அரசனே! வந்தே நானும் மாமுனிவோரும் - நானும் பெரிய முனிவர்களும், (உன்னிடத்தில்) வந்து, வளர்வேள்விக்கு - வளர்க்கின்ற யாகத்துக்கு, உம்தேம் நண்ணி - உன்னுடைய ஊருக்கு வந்து, இரந்த - யாசகம் கேட்டுப் பெற்று, பசும்பொன் உள எல்லாம் - (உன்னிடம் அடைக்கலமாக வைத்த) பசுமையான திரவியங்கள் உன்னிடத்தில் உள்ளவைகள் எல்லாம், தந்தே போவாய் என்று - தந்துவிட்டுப் போவாயாக என்று, இறையோனைத் தடைசெய்தான் - அரிச்சந்திரமகாராஜனைத் தடைசெய்தான். எ-று. 'உம்தேம்' உன்னிடத்து, என்றும் பொருளாம். (சுச)

முன்னமுனக்குச்சொன்னதிறத்தின்மொழிமாறி
யன்னதுகைக்கொண்டிந்நிதிதந்தேனல்லேன்யா
னந்நகரோடுபொன்னுளமுற்றுநனிதந்தே
னின்னமுனக்குப்பொன்றரவென்பாலிடமுண்டோ.

[முன்னாலே உமக்குச்சொன்ன வகையிலே சொல்மாறி அந்தப் பொருள்களை என்வச மாக்கிக்கொண்டு, இப்போது வேறே பொருள்கள் நான் தரவில்லை அந்தப் பொருளுடனே எனது நல்ல ஊரையும், உள்ள பொருள்கள் முழுதுமே உமக்கு அதிகமாகக் கொடுத்தேன். இன்னமும் உமக்குப் பொருள் கொடுக்க என்னிடத்தில் வேறே உள்ளதோ? என்றான் என்பதாம்.]

இ-ள். முன்னம் - முன்னே, உனக்குச் சொன்ன - உமக்குச் சொன்ன, திறத்தின் - வகையிலே, மொழிமாறி - சொல்மாறி, அன்னது கைக்கொண்டு- அந்தப் பொருள்களை என் கைவசமாக்கிக்கொண்டு, இந்நிதி - வேறே நிதிகளாக இந்த நிதியை, தந்தேன் அல்லேன் - தரவில்லை, யான் - நான், அந்நகரோடு- நான் தந்த அந்த நகரத்தோடு, பொன் உள முற்றும் - இருந்த பொன்கள் முழுமையும், நனி தந்தேன் - உமக்கே மிகுதியாகக் கொடுத்துவிட்டேன், இன்னம்- இனிமேலும், உனக்கு - உமக்கு, பொன்தர - பொருளைக்கொடுக்க, என்பால்- என் இடத்தில், இடம் உண்டோ - வகை யிருக்கின்றதோ. எ-று. ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. இனி உமக்குப் பொருள்தர என்னிடத்தில் இடமில்லை என்பது பொருள். (சுரு)

தாருடனேசெந்தாமரையாள்சேர்தடமார்பா
யாருடனேயிம்மோசமுரைப்பாயறிவில்லா
யூருடனேமுன்கூறியபொன்னுமுடனென்றே
நீருடனேநீபேசியளித்தநெறியுண்டோ.

[ஓ அரிச்சந்திரனே! ஓ புத்தியில்லாதவனே, யாரிடம் இந்த மோசம் உரைக்கின்றாய், ஊருடனே முன்னே நீசொன்ன பொருளும் உண்டு என்று நீ தாரைவார்த்துக் கொடுத்தது உண்டோ என்று விஸ்வாமித்திரர் கேட்டார் என்பதாம்.]

இ-ள். தாருடனே - மலர் மாலையுடனே, செந்தாமரையாள் - செவந்த தாமரையில் இருக்கின்ற லட்சுமியானவள், சேர் - சேர்ந்திருக்கப்பெற்ற, த-

மார்பா - விசாலமான மார்பை உடையவனே, யாருடனே இம்மோசம் உரைப்பாய் - யாரிடத்திலே இந்த மோசமான சங்கதியைச் சொல்லுகின்றாய், அறிவு இல்லாய் - அறிவு இல்லாதவனே!, ஊருடனே - நீ கொடுத்த ஊருடனே, முன் கூறிய பொன்னும் - முன் நான் சொல்லிய பொருளும், உடன் என்றே - சேர்ந்திருக்கிறது என்றே, நீருடனே பேசி - தாரைவார்த்துக் கொடுத்த அந்தச் சமயத்தில் சொல்லி, அளித்த நெறியுண்டோ - கொடுத்த ஒழுங்கு உண்டோ (என்று விஸ்வாமித்திரர் கேட்டார்) எ-று. ஈற்று ஓவினாப்பொருளில் வந்தது.

சொன்னதுமாறார்பானுகுலத்திற்றொல்வேந்த
ரன்னதுகாணேனின்னிடையென்றானதுகேளா
மன்னவனுள்ளநொந்தறநாணிமதிவல்லோ
யின்னமுமொன்றுண்டென்னவிரந்தேயிவைகூறும்.

[சூரியகுலத்துப் பழய அரசர்கள் சொன்னசொல் தப்பமாட்டார்கள், அது உன்னிடத்தில் காணேம் என்று விஸ்வாமித்திரர் கூறினார், அதைக் கேட்டு அரிச்சந்திரன் மனம் நொந்து முற்றும் வெட்கப்பட்டு, ஓ புத்திவல்லவரே! இன்னொரு வார்த்தை சொல்ல வேண்டிய திருக்கிறது என்று அவரைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். பானுகுலத்தில் - சூரியகுலத்தில், தொல்வேந்தர் - பழமையான அரசர்கள், சொன்னது - சொன்ன சொற்களை, மாறார் - தப்பமாட்டார்கள், அன்னது - அத்தன்மை, காணேம் நின்னிடை - உன்னிடத்தில் நான் காணவில்லை, என்றான் - என்றார் விஸ்வாமித்திரர், அதுகேளா - அதைக்கேட்டு, மன்னவன் உள்ளம் நொந்து - மன்னவன் மனமானது வேதனைப்பட்டு, அற நாணி - மிகவும் வெட்கமடைந்து, மதிவல்லோய் - ஓ புத்திவல்லவரே! இன்னமும் ஒன்று உண்டு என்ன - இன்னமும் ஒருவார்த்தை உண்டென்று, இரந்தே - அவரைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு, இவைகூறும் - இந்த வார்த்தைகளை அரிச்சந்திரன் கூறுகின்றான். எ-று. 'கேளா' செய்யா என்னும் வாய்பாட்டு வினை எச்சம். (கஎ)

கலிநிலைத்துறை (சந்தம்) வேறு.

நித்தனைப்பிரமனையனையாய்நினைவழிந்த
பித்தனைப்பொருள்வினாவினையெங்கியான்பெறுகோ
வித்தனைத்தினத்தீவதென்றியம்புவையெனின்யா
னத்தனைக்குணின்பொருடரவவதியீகென்றான்.

[சிவபெருமானையும் பிரம்மதேவனையும் ஒத்தவரே நினைவு தடுமாறிய
பித்தனாகிய என்னைப் பொருள் கேட்கின்றாய், எங்கே நான்
பெறுவேன் இத்தனை நாளில் கொடுக்கவேண்டுமென்று
ஒரு கெடு சொல்லி யருளுவையேயானால் நான்
அந்த நாளுக்குள் கொடுக்கும்படியாக ஒரு
கெடு தந்தருள் என்று அரிச்சந்தி
ரன் கேட்டான் என்பதாம்.]

இ-ள். நித்தனை - என்றும் உள்ளவனாகிய சிவனையும், பிரமனை - பிரம்ம தேவனையும், அனையாய் - ஒத்தவனே! நினைவு அழிந்த - (உமது கோபத்தால்) நினைவு தடுமாறின, பித்தனை - பயித்தியக்காரனை என்னை, பொருள் வினவினை - பொருள் கேட்கின்றீர், எங்கு - எவ்விடத்திலே, யான் பெறுகோ - யான் சம்பாதிப்பேன், இத்தனைத் தினத்து - இத்தனை நாளில், ஈவதென்று - (பொருளைக் கொடுப்பதென்று, இயம்புவை எனின் - ஒரு கெடு சொல்லுவை யேயானால், யான் - நான், அத்தினைக்குள் - நான் அந்தக் குறித்த காலத்துக்குள், நின் பொருள் தர - உம்பொருளைத் தரத்தக்கபடி, அவதி யீகென்றான் - ஒரு கெடுவை கொடுத்தருளும் என்று அரிச்சந்திரன் கேட்டான். எ-று. 'அவதி' கெடுவு, ஐந்து சீர்கள் ஒவ்வோரடிக்கும் வந்த கலி நிலைத்துறை முன்னையது சந்தக் கலி நிலைத்துறை இஃதவ்வாறன்று. (கூஅ)

ஊருநாடுநீண்மலைகளுங்கானமுமுழன்றே
யாருனோடிழுப்புண்பவரவதியாரிடுவார்
சோரமுள்ளநீகூறுமப்பொருடனைச்சொரிந்து
போடாவுனைத்தடுத்தனன்பேர்கலையென்றான்.

[உன்னோடு யார் ஊர்களும் நாடுகளும் மலைகளும் காடுகளும் இழுப்புண்பவர்
உனக்கு யார் கெடு கொடுக்கப் போகிறார்கள், திருட்டுத்தனமுள்ள
நீ கொடுப்பதாகச்சொன்ன பொருளைக் கொடுத்துவிட்டு இந்த
இடத்தைவிட்டுப் பேர் உன்னைத் தடுத்திருக்கிறேன்
இதைவிட்டு நகராதே என்றார் என்பதாம்.]

இ-ள். ஊரும் - ஊர்களும், நாடும் - நாடுகளும், நீள் - நீண்ட, மலைகளும் - மலைகளும், கானமும் - காடுகளும், உழன்று - அலைந்து, யார் உனோடு இழுப்புண்பவர் - யார் உன்னோடு இழுபடுகிறவர்கள்?, அவதியார் இடுவார் - உனக்கு யார் கெடுக்கொடுப்பார்கள், சோரமுள்ள நீ - திருட்டுத்தனமுள்ள நீ, கூறும் - நீ முன்னே கொடுப்பதாகச் சம்மதித்துச்சொன்ன, அப்பொருள்தனை - அந்தப் பொருளை, சொரிந்து - இங்கே கொண்டு வந்து குவித்துவிட்டு, போடா - இந்த இடத்தைவிட்டு நகரடா, உனைத்தடுத்தேன் - இப்பொழுது உன்னைத் தடுத்திருக்கின்றேன், பேர்கலை என்றான் - நகராதே என்று முனிவர் கூறினர். எ-று. மிகுந்த திரவியமாதலின் 'சொரிந்து' என்றார். (கக)

பக்கநோக்கிலன்பார்மிசைவிழுந்தடிபூண்டு
கக்கல்வந்திடமிடற்றினையொடுக்குமக்கதைபோல்
விக்கலும்பொருமலுமிசைமிசையெழவிரிநீ
ருக்ககண்ணன்வாயூறுநீர்வற்றிடவுரைப்பான்.

[அக்கம்பக்கம் பாராமல், பூமியின்மேலே விழுந்து பாதங்களை பிடித்துக்
கொண்டு கக்கல் வந்தபோது கழுத்தைப்பிடிக்கின்ற கதைபோல
விக்கலும் பொருமலும் மேன்மேலும் உண்டாக மிகக்கண்ணீர்
பெருக வாயில் நீர் வறண்டிட அரிச்சந்திரன்
சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். பக்கம் நோக்கிலன் - (முனிவர் அவ்வாறு சொல்லிய உடனே) அரிச்சந்திரன் முனிவர் தடைக்குள்ளே நின்று அக்கம் பக்கம் பார்க்கவில்லை, பார்மிசை விழுந்து - பூமியின்மேலே விழுந்து வணங்கி, அடிபூண்டு - அவர் பாதங்களைச் சிரமேல் சூடிக்கொண்டு, கக்கல் வந்திட - ஒருவனுக்குக் கக்கல் வந்தபோது, மிடற்றினை - கழுத்தை, ஒடுக்கும் அக்கதைபோல் - கழுத்தை நெருக்கிப்பிடித்த கதைபோல, விக்கலும் - விக்குதலும், பொருமலும் - பொருமலும், மிசை மிசை எழ - மேலும் மேலும் தோன்ற, விரிநீர் - விரிவான ஜலம், உக்க கண்ணன் - சிந்துகின்ற கண்களை உடையவனாய், வாய் ஊறுநீர் வற்றிட - வாயிலே ஊறுகிற ஜலமும் வற்றிப்போக, உரைப்பான் - முனிவரை நோக்கி அரிச்சந்திரமகாராஜன் சொல்லுகின்றான். எ-று. 'கதை' என்பது இங்கு தன்மையை, 'ஊறுநீர் வற்றிட' முரண்தொடை. (௪00)

இழைத்ததீவினைபொறுத்தனனரசுதாவென்னத்
தழைத்தவன்பொடுதந்தியானகன்றிடுங்காலை
யழைத்தநீயெனக்கவதியிட்டாள்விடிலைய
பிழைத்திலன்னிதோர்பெரும்புகழ்பெறுதியென்றிரந்தான்.

[நீர்செய்த தீங்குகளை எல்லாம் பொறுத்துக்கொண்டேன், உன்னுடைய
அரசாட்சியைக் கொடுத்துவிடு என்றுசொல்ல மிகுந்த பிரீதியுடனே
கொடுத்துச் செல்லும்பொழுது கூப்பிட்ட நீர் ஒரு கெடு
கொடுத்து ஒரு ஆளைக்கூட அனுப்பினால் ஐயா!
தவறாமல் தந்துவிடுவேன் இந்த ஒரு பெரிய
புகழை நீ ஏற்றுக்கொள்வாயாக என்று
கெஞ்சிக்கேட்டான் என்பதாம்.]

இ-ள். இழைத்த தீவினை பொறுத்தனன் - நீர்செய்த தீமைகளை எல்லாம் பொறுத்துக்கொண்டேன், அரசு தா என்ன - உன்னுடைய அரசாட்சியைக் கொடுத்துவிடு என்று சொல்ல, தழைத்த அன்பொடு - மிகுந்த பிரியத்தோடு, தந்து யான் அகன்றிடும் காலை - கொடுத்துவிட்டு நான் போகும்போது, அழைத்த நீ - கூப்பிட்ட நீர், எனக்கு அவதி இட்டு - எனக்கு ஒரு கெடு கொடுத்து, ஆள்விடில் - ஒரு ஆளைக்கூட அனுப்பினால், ஐய-ஐயனே!, பிழைத்

திலன் - நான் தவறமாட்டேன், இது ஓர் பெரும்புகழ் - இந்த ஒரு பெரிய புகழை, பெறுதி - பெறவீராக, என்று உரைத்தான் - என்று அரிச்சந்திர மகாராஜன் கூறினான். எ-று. 'பிழைத்திலன்' நீ கொடுத்த அந்தக் கெடு தப்பாமல் தருகின்றேன் என்பது பொருள். இதோர் பெரும்புகழ் பெறுதி' என்றதற்கு !இந்தக் கருணையையாகிலும் எனக்குச்செய்து இதனால் உனக்கு வருவதாகிய ஒரு பெரும்புகழையாகிலும் பெறுவாயாக என்று அரிச்சந்திரன் பொருள் பட மொழிந்தான். 'இரந்தான்' துதித்துக் கெஞ்சிக்கேட்டல், யாசித்தல் என்பதாம், (கOக)

சுற்றுண்டாகியமலைகளில்வனங்களிற்றொட்டுன்
பற்றுண்டாகியபதிகளிற்படுபொருளல்லா
லுற்றுண்டாகியநிதியமுன்திருவுளமுணர
மற்றுண்டாமெனின்விளம்பிடுவழங்கிடவென்றான்.

[சுற்றியுள்ள மலைகளிலும் வனங்களிலும் தொடர்தலாகிய உமது சம்பந்தம் உண்டாகிய ஊர்களிலே உண்டான பொருள்களே அல்லாமல், உன் திரு உளம் அறிய வேறு எங்கேனும் உண்டோ, உண்டானாற் சொல்லியருளும் கொடுத்து விடுகின்றேன் என்றான் என்பதாம்.]

இ-ள். சுற்றுண்டாகிய - (பின்னும் அரிச்சந்திரன் சொல்லுகின்றான்) சுற்றுண்டாகிய - சுற்றிலும் இருக்கின்ற, மலைகளில் - மலைகளிலும், வனங்களில் - காடுகளில், தொட்டு - தொடர்வுபெற்று, உன்பற்று உண்டாகிய-உமது சம்பந்தமாகிய, பதிகளில் - ஊர்களில், படு - பொருந்திய, பொருளல்லால்- பொருள்களே அல்லாமல், உற்று உண்டாகிய நிதியம் - பொருந்தி என்னிடத்தில் உண்டாகியுள்ள செல்வம், உன் திரு உளம் உணர - உமது அழகிய மனந் தெரிவதாய், மற்று உண்டாமெனில் - மற்று வேறு எங்கேனும் இருக்குமேயானால், விளம்பிடு வழங்கிட என்றான் - சொல்லியருள் நான் கொடுப்பதற்கு என்றான். எ-று. (கOஉ)

ஆமதேயெனினரசகேளவதியானுரைப்ப
னேமகூடமுங்காசியுமன்றியிலிப்பாற்
றாமமார்பநீதந்தநன்னடிதற்கப்பாற்
போமதுண்டெனிற்பொருளுமப்பொருளலாதளியேல்.

[உனக்குச் சம்மதமானால் நான் ஒரு அளவு சொல்லுகின்றேன், ஏமகூடமும் காசியும் அல்லாமல் அதற்கு இப்பால் உள்ள நாடுகளே மாலையணிந்த மார்பை உடையவனே நீ எனக்குத்தந்த நல்ல நாடுகள், இவற்றுக்கு அப்பால் நீ போவது உண்டானால் நீ கொடுக்க வேண்டிய பொருளும் அங்குள்ள பொருள்களே அல்லாது இங்குள்ள பொருள்களை நீ கொடாதே என்றான் என்பதாம்.]

இ-ள். அரசகேள் - ஓ அரசனே! கேட்பாயாக, ஆமதே எனின் - நான் இப்பொழுது சொல்லப்போவது உனக்குச் சம்மதமானால், அவதியான் உரைப்

பன் - ஓர் அளவு நான் சொல்லுகின்றேன், ஏமகூடமும் - ஏமகூட பருவதமும், காசியும் - காசியும், அன்றியில் - அல்லாமல், இப்பால் - அதற்கு இப்பாலுள்ள, நல்நாடு - நல்லநாடே, தாமமார்ப நீ தந்த - மாலையை யணிந்த மார்பை உடையவனே நீ எனக்குத் தந்தவைகளாகும், இதற்கு அப்பால் - நீ தந்த இந்த நாட்டிற்கு அப்புறம், போம் அது உண்டெனில் - போவது உண்டானல், பொருளும் - நீ எனக்குத் தரவேண்டிய பொருளும், அப்பொருளலாது - (என் நாட்டிற்கு அப்புறத்தே சம்பாதித்த) அந்தப் பொருளை அல்லாமல், அளியேல்- என் நாட்டிலிருந்து பொருளை வாங்கி கொடாதே என்று விஸ்வாமித்திரர் கூறினர். எ-று. (௪0௩)

இந்தவெல்லையிலிப்பொருளீதலில்லாம
லந்தவெல்லையிற்பொருடரவல்லையேயானல்
முந்துநீசொன்னமுறைமையாலவதியானீவேன்
றந்திடாயெனிற்சத்தியமேதெனச்சாற்றும்.

[இந்த எல்லைக்குள்ளே இந்தப்பொருளைத் தருவது இல்லாமல் நான் சொன்ன அந்த எல்லையிலே பொருள்தர வல்லவனானல் நீ முன்னே சொன்ன முறைப்படி நான் கெடுக்கொடுக்கிறேன். அப்படி நீ தராமல் போனல் அதற்குப் பிரமாணமென்ன சொல்லுகின்ருய் என்று விஸ்வாமித்திரர் அரிச்சந்திரனைக் கேட்டார் அதற்கு அரிச்சந்திரன் சொல்லுகின்ருன் என்பதாம்.]

இ-ள். இந்த எல்லையில் - இந்த என் எல்லைக்குள்ளே, இப்பொருள்- எனக்குத்தரவேண்டிய இப்பொருளை, ஈதல் இல்லாமல் - கொடுக்கிறது இல்லாமல், அந்த எல்லையில் - எந்நாட்டிற்கு அப்புறப்பட்ட அந்த எல்லையிலே, பொருள்தர - எனக்குக் கொடுக்கவேண்டிய பொருளைத் தருதற்கு, வல்லையேயானல் - நீ கொடுக்க வல்லவனானல், முந்து - முன்னலே, நீ சொன்ன- நீ சொன்ன, முறைமையால் - நியாயப்படி, அவதி யான் ஈவேன் - நான் உனக்குக் கெடு கொடுப்பேன், தந்திடாய் எனில்-(அந்தக் கெடுவுக்குள்ளே) நீ கொடாமல் போனல், சத்தியம் ஏது ,என - என்ன பிரமாணம் சொல்லுகின்ருய் என்று கேட்க, சாற்றும் - அரிச்சந்திரன் சொல்லுகின்ருன். எ-று. (௪0௪)

நிற்பிழைத்திடினக்கியானருனிதியளிக்குஞ்
சொற்பிழைத்திடிற்சூளுறவேதெனிற்சொல்வல்
கற்பிழைத்தநற்சொற்பரதாரத்தைக்கருதி
யிற்பிழைத்தவனுவனின்னிருநிதிகொடேனேல்.

[உம் விஷயத்தில் தப்பி விடுவேனானால், உமக்குத் தரும் நிதிவிஷயத்தில்
சொல் தவறினேனானால் உன்னுடைய மிக்க திரவியத்தைக்
கொடாது இருப்பேனானால் சபதவார்த்தை என்னவென்
றால் சொல்லுகின்றேன், பிறருடைய கற்புடைய
மனைவியைக் கருதி இல்லறம் வழுவி நடந்த
வன் ஆவேன் என்றான் என்பதாம்.]

இ-ள். நிற் பிழைத்திடின் - உம்முடைய விஷயத்தில் தப்பிதமுடைய வன் ஆனாலும், நினக்கு - உமக்கு, யான் - நான், அருநிதி - அருமையான திர வியத்தை, அளிக்கும் சொல் - கொடுப்பேன் என்ற சொல், பிழைத்திடில்-தவ றினாலும், நின் இருநிதி - உம்முடைய பெரும் திரவியத்தை, கொடேனேல்- கொடாது போவேனேயானாலும், சூளுறவு ஏதெனில் - சபதவார்த்தை யாது என்றால், சொல்வல் - சொல்லுகின்றேன், கற்பு இழைத்த - பதிவிரதா தர்மத் தையே நடத்திக்கொண்டு வந்த, நல் சொல் பாதாரத்தை - கணவனுக்கு நல்ல புகழை வரச்செய்கிற அந்நியருடைய மனைவியை, கருதி - இச்சித்து, இல் லிழைத்தவன் ஆவன்-இல்லறம் வழுவி நடந்தவன் ஆவேன் என்றான் அரிச்சந் திரன். எ-று.

'சூளுறவு' சபதம்; 'இழைத்தல்' - செய்தல்; 'இல்' என்பது இல்லற தரு மத்தைக் குறித்தது, இனி மனைவிக்கு தீங்கு செய்தவன் ஆவேன் என்றும் பொருள் விரிக்கலாம். (சுOரு)

காசிநாட்டினிற்சென்றவந்நாளினுங்கனக
மாசின்மாதவவளிப்பனவ்வவதியிலதுநீ
பேசிடாயெனவிருபதுநாளையிற்பின்பு
மூசிவண்டுறைதாரினேப்தருகெனமொழிந்தான்.

[குற்றமற்ற முனிவரே காசி நாட்டில் நான் போனவுடனே நீர் சொன்ன கெடுவில் உமது பொருளைக் கொடுப்பேன் அந்தக் கெடுநாளைக் கூறி யருள்வாய் என்று அரிச்சந்திரன் கேட்க இருபது நாளைக்குப் பிறகு மாலையை அணிந்த அரசனே தருவாயாக என்று விஸ்வாமித்திரர் கூறினர் என்பதாம்.]

இ-ள். மாசு இல் - குற்றம் அற்ற, மாதவ - பெரிய தவத்தை உடைய வரே, காசி நாட்டினில் - காசி தேசத்துக்கு, சென்ற அந்நாளில் - போய்ச் சேர்ந்த அந்த நாளிலே, உம் கனகம் - உமது பொன்னை, அவ் அவதியில்- சொல்லியருளும் அந்தக்கெடுவில், அளிப்பன் - கொடுப்பேன், அது - அந் தக்கெடுவை, நீ பேசிடாய் என - நீர் சொல்லியருள வேண்டுமென்று கேட்க, மூசி - மொய்த்து, வண்டு - தேன் வண்டுகள், உறைதாரினோய் - வசிக்கப் பெற்ற மாலையை அணிந்த அரிச்சந்திர மகாராஜனே!, இருபது நாளையிற் பின்பு இருபது நாளைக்குப் பின்பு, தருகென - தருவாயாகஎன்று, மொழிந் தான் - விஸ்வாமித்திரர் கூறினர். எ-று. (சுOசு)

அங்குற்றெய்தநாளம்முறைக்கிருமடங்கடங்கா
வெங்குற்றீட்டுவதிப்பொருளையவென்றியம்ப

நங்குற்றம்மிலைநாற்பதிற்றெட்டெனநவின்று
னுங்குற்றம்மிதற்குட்கொடாதொழிந்திடினென்றான்.

[அந்த நாட்டிற்குப் போய்ச்சேருதற்கே நீ சொல்லிய அந்த நாளைக்கு இரண்டு பங்கு நாட்களும் போதாது ஐயனே! அப்படி இருக்க இந்தப்பொருளை எங்கேபோய் சம்பாதிப்பது என்று அரிச்சந்திரன் சொல்ல, நாற்பத்தெட்டுநாள் தவணை கொடுத்திருக்கின்றேன், இனி நம்முடைய குற்றமல்ல, இதற்குள்ளே கொடாதிருந்தால் உன் குற்றமே என்று விஸ்வாமித்திரர் கூறினர், என்பதாம்.]

இ-ள். ஐய - ஐயனே! அங்கு உற்று எய்த - அந்தக் காசிதேசத்துக்குப் போய்ச்சேர, நாள் - நாட்கள், அம்முறைக்கு - நீர் சொல்லிய அந்த இருபது நாளைக்கு, இருமடங்கு அடங்கா - இரண்டு மடங்கான நாற்பது நாளுமே போதாது, எங்கு உற்று ஈட்டுவது இப்பொருள் - (அப்படி இருக்க) எங்கே போய் இவ்வளவு பொருளைச் சம்பாதிப்பது, என்று இயம்ப - என்று அரிச்சந்திரமகாராஜன் சொல்ல, நம் - இனி நம்முடைய, குற்றம் இலை - குற்றமல்ல, நாற்பதிற்று எட்டு என நவின்றான் - நாற்பத்து எட்டுநாள் கெடுக்கொடுத்தேன் என்று விஸ்வாமித்திரர் கூறினர், இதற்குள் - (மேலும்) இந்தத் தவணைநாளுக்குள், கொடாது ஒழிந்திடின் - கொடாது போவையே ஆனல், உம் குற்றம்- உன் குற்றமாகவே முடியும், என்றான் - என்று சொன்னர். எ-று. (௧0௭)

இப்புத்திக்கினிதொத்தனனாள்விடுகென்று
குப்புற்றேகலுங்கௌசிகன்மீளவுங்கூவித்
தப்புதீர்தாத்தந்தவப்பொருளெலாம்பதிவந்
தொப்புத்தந்துபின்போவெனுமன்னனுக்குரைத்தான்

[இதற்குச் சம்மதித்தவனாகி ஆள்விடுங்களென்று அவரை வணங்கிவிட்டுப் போகும் அளவில் விஸ்வாமித்திரர் மறுபடியும் கூப்பிட்டு, குறைவற நீ தந்த பொருள்களை எல்லாம் என்னிடத்தில் உன் நாட்டிற்கு என்னோடு வந்து ஒப்பித்துவிட்டு, பின்போ என்று அரிச்சந்திரனுக்குச் சொன்னர் என்பதாம்.]

இ-ள். இப்புத்திக்கு - இந்தக்கெடுவுக்கு, இனிது ஒத்தனன் - நன்றாய்ச் சம்மதியானவன் ஆகி, ஆள்விடுகென்று - ஆள்விட்டு அருளுங்கள் என்று, குப்புற்று ஏகலும் - குப்புற விழுந்து வணங்கிப் போகும் அளவில், கௌசிகன் மீளவும் கூவி - விஸ்வாமித்திரர் திரும்பவும் கூப்பிட்டு, தப்புத்தீர்தா-குறைவு நீங்க, தந்த அப்பொருள் - நீ எனக்குத்தந்த அந்தப் பொருள்களை எல்லாம், பதி வந்து - எங்களோடு உன் ஊருக்கு வந்து, ஒப்புத்தந்து - ஒப்பித்துக்கொடுத்து, பின் - அப்புறம், போ எனு - போகக்கடவை என்று, மன்னனுக்கு - அரிச்சந்திரமகாராஜனுக்கு, உரைத்தான்-விஸ்வாமித்திரர் கூறினர். எ-று.

'புத்தி' - அறிவினல் கூறிய தவணை; 'சொல்' என்றும் பொருளாம். ()

பாரளித்தனைபுரக்கநின்பதியிடைச்சென்றா
லாரளித்தனரென்பர்நின்னடியவரெல்லா
மூரளித்திடவுடன்வரத்துணிதியீதொழியி
னீரளித்ததேயெனக்குமண்ணினக்கெனாமொழிந்தான்.

[உன்னுடைய நாட்டை நான் ஆளும்படிக் கொடுத்தாய், உன் நாட்டுக்கு நான் போனால் உன் அடியார்கள் எல்லாம் உனக்கு இந்த நாட்டை யார் உனக்குக் கொடுத்தார் என்பார்கள். ஆகையினால் நீ ஊரை எனக்குக் கொடுக்க என்னோடு கூடவாச் சம்மதிப்படு, இது மாட்டேனென்பாயே யானால் நீ தாரைவார்த்தது தான் எனக்கு, நாடு உன்னுடைய தாகத்தான் முடிவுபெறுமென்று சொன்னார் என்பதாம்.]

இ-ள். பாரளித்தனை புரக்க - நான் ஆளும்படி உன்னுடைய நாட்டை எனக்குக் கொடுத்தாய், நின்பதியிடைச் சென்றால் - உன்னுடைய நாட்டுக்குள்ளே நான் போனால், நின் அடியவர் எல்லாம் - உன்னுடைய அடியார்கள் எல்லாம், ஆர் அளித்தனர் என்பர் - யார் இந்த நாட்டை உனக்குக் கொடுத்தார் என்று கேட்பார்கள். ஊர் அளித்திட - உன் ஊரை எனக்குக்கொடுக்க, உடன் வரத்துணிதி - என்னோடு கூட வருதற்குச் சம்மதிப்படு, ஈது ஒழியின்-இதற்கு நீ சம்மதியாமல் போனால், நீர் அளித்ததே எனக்கு - நீ தாரைவார்த்ததுதான் எனக்கு லாபம், மண் - நாடானது, நினக்கு எனா மொழிந்தான் - உன்னுடையதே யாகும் என்று விஸ்வாமித்திரர் கூறினார். எ-று. 'நின் அடியவர்' உன்னுடைய ஊழியக்காரர்கள், என்றும் பொருளாம். (௪௦௧)

நன்றுநன்றுநீநகரியிலெழுந்தருளாயே
நின்றுநின்பிறகெய்துவலென்றினிதியம்பச்
சென்றுகௌசிகன்றேர்மிசையேறினன்றிரண்டு
நின்றமாதவர்கரியினும்பரியினுநிறைந்தார்.

[நல்லது நல்லது நீர் பட்டணத்துக்கு எழுந்தருளும் நாயேன் இன்றைக்கே உன்பின் வருகின்றேன் என்றான் உடனே கௌசிகமுனிவர் தேர்மேல் எறினார். சூழ்ந்து நின்ற பெரிய முனிவர்கள் எல்லாம் யானை மேலும் குதிரைமேலும் எறினார்கள் என்பதாம்.]

இ-ள். நன்று நன்று - நல்லது நல்லது, நீ நகரியில் எழுந்தருள் - நீர் பட்டணத்துக்கு எழுந்தருளும், நாயேன்-நாயடியேன், இன்று - இப்பொழுது, நின் பிறகு - உமக்குப்பின்னே, எய்துவல் - வருவேன், என்ற - என்று, இனிது இயம்ப - சந்தோஷமாகச் சொல்ல, கௌசிகன் - விஸ்வாமித்திரமுனிவர், சென்று - போய், தேர்மிசை எறினன் - தேரின்மேல் எறினார், திரண்டு- கூடி, நின்ற மாதவர் - நின்றுகொண்டு இருந்த பெரிய தபோதனர்கள் எல்லாம், கரியினும் - யானையின் பேரிலும், பரியினும் - குதிரையின் பேரிலும், நிறைந்தார் - எறி நிறைந்தார்கள். எ-று. (௪௧௦)

தேரிலேறிமாமுனிசெலச்சேனைபின்செல்லப்
போரில்வீரனுந்தேவியும்புதல்வனுநடுவே
பாரின்மேனடந்தடிபொறாதுடல்பதைபதைக்க
வேரிவாவிட்டயோத்தியைநோக்கியேவிரைந்தார்.

[தேரில் ஏறிக்கொண்டு முனிவர் செல்ல சைனியம் பின்னே செல்ல இவர்களுக்கு நடுவே அரிச்சந்திரனும் சந்திரமதியும் லோகிதாசனும் பாதம் பொறுக்காமல் உடம்பு துடி துடிக்க பூமியில் நடந்து அந்த வாசனைபொருந்திய குளத்தைவிட்டு அயோத்தியா புரியை நோக்கிச் சென்றார்கள் என்பதாம்.]

இ-ள். தேரில் ஏறி மாமுனிசெல-அப்படித் தேரின்மேல் ஏறிக்கொண்டு மகாமுனிவரான விஸ்வாமித்திரர்போக, சேனை - சேனைகளும், பின்செல்ல-பின்னாலே செல்ல, போரில் வீரனும் - யுத்தகளத்திலே வீரத்துவத்தை உடையவனான அரிச்சந்திரமகாராஜனும், தேவியும் - அவன் மனைவியாகிய சந்திரவதியும், புதல்வனும் - புத்திரனாகிய லோகிதாசனும், நடுவே-அந்தச்சேனைகளுக்கு நடுவே, பாரின்மேல் நடந்து - பூமியின்மேல் நடந்து, அடிபொறாது - கால்கள் பொறுக்கமாட்டாமல், உடல் பதைபதைக்க - உடம்பு துடிதுடிக்க, வேரி-மலர்களின் வாசனையை உடைய, வாவிவிட்டு - குளத்தைவிட்டு, அயோத்தியை நோக்கியே - அயோத்தியாபுரியை நோக்கி, விரைந்தார் - விரைவாகப் போனார்கள். எ-று. (கஙக)

கன்னலம்பெருங்கழனியுஞ்சோலையுங்கடந்து
வன்னமாமணிப்புரிசையின்புறத்துவந்தணைந்தார்
நன்னகர்பெருஞ்சனமெலாமெதிர்கொடுநண்ணி
மன்னனைச்செழுந்தேர்மிசைக்கண்டிலர்மருண்டார்.

[கரும்புவிளையும் வயல்களையும் சோலையையும் தாண்டி ஒளியையுடைய பெரிய அழகிய அயோத்திமாநகரத்தின் மதிலுக்குப் புறத்தே வந்து சேர்ந்தார்கள். நல்ல நகரத்து மகாஜனங்களெல்லாம் எதிர்கொண்டு வந்து கிட்டி அரசனைச் செழுமையான தேர்மேல் காணாது மயங்கினார்கள்; என்பதாம்.]

இ-ள். கன்னல் அம்பெரும் கழனியும் - கரும்பு விளையும்படியான அழகிய பெரிய வயல்களையும், சோலையும் - சோலைகளையும், கடந்து - தாண்டி, வன்னம் - ஒளிபொருந்திய, மா - பெரிய, மணி-அழகிய, புரிசையின் புறத்து-அயோத்திமாநகரத்து மதிளின் பக்கத்தே, வந்து அணைந்தார் - வந்து கூடினார்கள், நல் நகர் பெரும் சனமெலாம் - அந்த நல்ல அயோத்திமாநகரின் பெரிய ஜனங்கள் எல்லாம், எதிர்கொடு நண்ணி - எதிர்கொண்டு கிட்டி வந்து, மன்னனை - அரிச்சந்திரமகாராஜனை, செழும் தேர்மிசை - செழுமையான தேரின் மேல், கண்டிலர் - காணாதவர்களாகி, மருண்டார் - மயங்கினார்கள். எ-று.

'வன்னமாமணிப் புரிசை' அழகிய பெரிய நவரத்தின கசிதமான அயோத்திமாநகரின் மதிள்; என்றும் கூறலாம். (கஙஉ)

இரதமேன்முனியேறியதகிதமோவிதமோ
சரதமோவெனுமையத்தார்வந்தவண்சார்ந்தார்
விரதமிவ்வகைவிளைந்தவாறேதெனமெலிந்து
கரதலங்களான்முகத்தறைந்தழுதனர்கதறி.

[இரதத்தின்மேல் இந்தமுனி ஏறி வருவது தக்கதோ தகாததோ?, அல்லது மெய்யோ, பொய்யோ என்னும் சந்தேகத்தை உடையவர்களாகி அவ்வி டத்திலே வந்து சேர்ந்தார்கள், நம் அரசனுக்கு இந்தத் துறவா விரதம் எவ்வாறு வந்து சேர்ந்ததென்று, மனம் மெலி வுற்று, கைகளால் முகத்தில் அடித்துக்கொண்டு கதறி அழுதார்கள், என்பதாம்.]

இ-ள். இரதமேல் - இரதத்தின்மேலே, முனி ஏறியது - முனிவர் ஏறி வருகிறது, அிதமோ - தகாதோ?, இதமோ - தக்கதோ?, சரதமோ - அல்லது மெய்யோ?, எனும் - என்னும்படியான, ஐயத்தார் - சந்தேகத்தை உடையவர்க ளாகி, வந்து அவண் சார்ந்தார் - வந்து அரசன் இருக்கும் அவ்விடத்தை வந்து சேர்ந்தார்கள், விரதம் இவ்வகை - (அரசனைக்கண்டு) அரசனின் விரதம் இவ்வி தமான துறவறமாக, விளைந்தவாறு ஏது என மெலிந்து - உண்டான விதம் என்னவென்று மனம் மெலிந்து, கரதலங்களால் - கைகளால், முகத்து அறை ந்து - முகத்திலே அறைந்துகொண்டு, அழுதனர் கதறி - கதறி அழுதார்கள். எ-று. 'சரதம்'=மெய். (கஙு)

எங்குவாரிளங்கொடியையுஞ்சேயையுமேந்தித்
தாங்குவார்செழுந்தாளிலேவீழ்ந்துவீழ்ந்தயர்வா
ரோங்கியோங்கியேயறைந்தறைந்தொளிமுகங்கன்றி
வீங்குவாரழுவார்விழுவாருளமெலிவார்.

[கண்ட ஜனங்கள் எல்லாம் ஏங்குவார்கள், சந்திரவதியையும் லோகிதாசனையும் ஏந்தித் தாங்குவார்கள், செழுமையான பாதங்களிலே விழுந்து விழுந்து சோர்வார்கள், கைகளால் ஓங்கி ஓங்கி அறைந்து ஒளியை உடைய முகங்கள் கன்றி வீங்கிப் போவார்கள், அழுவார்கள், விழுவார், கள், உள்ளம் மெலிவடைவார்கள், என்பதாம்.]

இ-ள். ஏங்குவார் - அப்படி அழுகின்றவர்கள், இளம் கொடியையும்-இள மையான கொடிபோன்ற சந்திரவதியையும், சேயையும் - புத்திரனாகிய லோகி தாசனையும், ஏந்தித்தாங்குவார் - தாங்கி எடுத்துக்கொள்வார்கள், செழும் தாளிலே - பின்னும் அவர்களுடைய செழுமையான பாதங்களிலே, வீழ்ந்து வீழ்ந்து - விழுந்து விழுந்து, அயர்வார் - சோர்வார்கள், ஓங்கி ஓங்கியே - கைக ளால் ஓங்கி ஓங்கியே, அறைந்து அறைந்து - முகங்களில் அறைந்து அறைந்து கொண்டு, ஒளி பிரகாசத்தை உடைய, முகம் கன்றி - முகங்கள் கன்றுதலாய், வீங்குவார் - முக வீக்கத்தை அடைவார்கள், அழுவார் - பின்னும் அழுவார்கள், விழுவார் - விழுவார்கள், உளம்மெலிவார் - உள்ளம் தளர்ச்சி அடைவார்கள்,

எ-று. இதனால் அந்நகர்க் குடிகள் எல்லாம் அதிகமாகத் துக்கப்பட்டது கூறப்பட்டது. (கககூ)

மன்னவற்குநம்மன்னைக்குமைந்தற்குமந்தோ
வென்னபாவம்தெய்தியவென்றிருந்தேங்கப்
பொன்னகர்ப்பெரும்புரிசையின் புறத்துவந்தணுகி
யின்னல்செய்தவக்கௌசிகனிரதம்விட்டிழிந்தான்.

[அரசனுக்கும் நமது தாயாகிய சந்திரவதிக்கும் பிள்ளைக்கும் ஐயோ! என் பாவம் வந்து சேர்ந்ததென்று இருந்து அழ இந்தவிதமான துன்பங்களை உண்டாக்கிய, முனிவர் அழகிய அயோத்திமாநகரின் மதில் வாயிலுக்குப் பக்கத்தே வந்து தேரைவிட்டு இறங்கினர்; என்பதாம்.]

இ-ள். மன்னவற்கும் - நமது அரிச்சந்திரமகாராஜற்கும், நம் அன்னைக்கும் - நமது தாயாகிய சந்திரவதிக்கும், மைந்தற்கும் - பிள்ளைக்கும், அந்தோ- ஐயோ, என்னபாவம் - என்ன பாவானுபவம், வந்து எய்திய என்று - வந்து கூடிற்று என்று, இருந்து எங்க - இருந்து அழ, இன்னல்செய்த அக்கௌசிகன் - இப்படித் துன்பத்தைச்செய்த அந்தக் கௌசிகமுனிவர், பொன்னகர்- அழகிய அயோத்திமாநகரத்தின், பெரும்புரிசையின்-பெரிய மதிலின், புறத்து வந்தணுகி - பக்கத்திலே வந்து சேர்ந்து, இரதம்விட்டு - தேரைவிட்டு, இழிந்தான் - இறங்கினன். எ-று. (ககரு)

கோசிகன்றனையுடன்கொடுகோநகர்புகுந்து
வாசியுள்ளவுமதகிரியுள்ளவும்வழங்கக்
காசினல்லறைபூசனையறையெலாங்காட்டித்
தூசினல்லறைதுயிலறைபாரெனச்சொன்னான்.

[அந்த விசுவாமித்திரரைக் கூடக் கூட்டிக்கொண்டு, அந்தப் பெரிய பட்டணத்துக்குள்ளே சென்று, உள்ள குதிரைகளையும், மதயானைகளையும், கொடுத்து, பொக்கிஷ அறையும், பூசைவீட்டையும், முதலான எல்லாங் காட்டிக் கொடுத்து வஸ்திரங்கள் உள்ள வீட்டையும் நித்திரைசெய்கிற வீட்டையும் பாரும் என்று அரிச்சந்திரன் சொன்னன் என்பதாம்.]

இ-ள். கோசிகன் தனை - அந்த விஸ்வாமித்திரரை, உடன்கொடு - கையோடு கூட்டிக்கொண்டு, கோநகர் புகுந்து-(அந்த அயோத்தி என்னும்) பெரிய பட்டணத்துக்குள்ளே புகுந்து, வாசி உள்ளவும் - தன்னிடத்து உள்ள குதிரைகளையும், மதகரியுள்ளவும் - பின்னுமுள்ள மதயானைகளையும், வழங்க - கொடுத்து, காசின் நல்லறை - பொக்கிஷ அறையையும், பூசனை அறை - பூசை அறையையும், எலாம் - மற்றுமுள்ள எல்லாவற்றையும், காட்டி-காண்பித்து, தூசின் நல்லறை-வஸ்திரங்கள் உள்ள நல்ல வீட்டையும், துயில் அறை-பள்ளி அறையையும், பார் என - பார்த்தருள்க என்று, சொன்னர் - அரிச்சந்திரன்

சொன்னான். எ-று. 'வழங்க' என்னும் வினை எச்சம் 'வழங்கி' எனும் பொருளைத்தந்தது. (கக௬)

என்னின்முன்னவரிருபதோடொருவருண்டந்த
மன்னர்வைத்தசெம்பொன்னறையீதெனவழங்கி
யன்னசத்திரமிவையிவையடியனேன்வைத்த [ன்
பொன்னறைத்தொகைகொள்கெனக்கொடுத்தனன்புகழோ

[எனக்கு முன்னுள்ள அரசர்கள் இருபத்தொரு பேர்களுண்டு அந்த அரசர்கள் வைத்த செம்பொன் உள்ள வீடு இது என்று சொல்லிக்கொடுத்து இவைகள் அன்னசத்திரங்கள், இவைகள் அடியேன் வைத்திருந்த பொன்னிருக்கிற வீடுகளின் கூட்டங்கள், எல்லாம் ஒப்புக்கொள்வாயாக என்று புகழ்மிக்க அரிச்சந்திரமகாராஜன் கொடுத்தான் என்பதாம்.]

இ-ள். என்னின் முன்னவர் - எனக்கு முன்உள்ள அரசர்கள், இருபதோடொருவர் உண்டு - இருபத்தொருபேர்கள் உண்டு, அந்த மன்னவர் வைத்த- அந்த அரசர்கள் வைத்த, செம்பொன் அறை - செவந்த பொன்னுள்ள அறைகள், ஈது என வழங்கி - இவைகள் என்று சொல்லிக்கொடுத்து, அன்னசத்திரம் இவை - இவைகள் அன்னசத்திரங்கள், இவை - இவைகள், அடியனேன் வைத்த - அடியேன் வைத்திருந்த, பொன்னறை - பொன்னிருக்கிற வீடுகள், தொகை - இவைகள் எல்லாவற்றையும், புகழோன் - புகழ் மிகுந்த அரிச்சந்திரமகாராஜன், கொள்கெனக் கொடுத்தனன் - ஒப்புக்கொள்ளுமென்று கொடுத்தான். எ-று.

அரிச்சந்திரமகாராஜனுக்கு முன் இருந்த சூரியகுலத்து அரசர்கள் பெயர் வருமாறு:— (கக௭)

ஆடரங்குகளம்பலமடமன்னசாலை
மாடமாளிகைமண்டபமஞ்சனச்சாலை
கூடகோபுரமடப்பள்ளிகோயில்செய்குன்றம்
பீடமாதனமிவையெனக்கொடுத்தனன்பின்னை.

[பின்னும் ஆடுகிற நாடகசாலைகள், பொதுச்சாவடிகள், மடங்கள், அன்னசத்திரங்கள், மாடங்கள், மாளிகைகள், மண்டபங்கள், திருமஞ்சனச்சாலைகள், கூடங்கள், கோபுரங்கள், சமையல் வீடுகள், கோயில்கள், செய்குன்றுகள், பீடங்கள், ஆசனங்கள், இவைகள் என்று பின்னும் காட்டிக்கொடுத்தான், என்பதாம்.]

இ-ள். ஆடு அரங்குகள் - ஆடுகின்ற நாடகசாலைகள், அம்பலம் - பொதுச்சாவடிகள், மடம் - மடங்கள், அன்னசாலை - அன்னசத்திரங்கள், மாடம்-மாடங்கள், மாளிகை - மாளிகைகள், மண்டபம் - மண்டபங்கள், மஞ்சனச்சாலை-திருமஞ்சனச்சாலைகள், கூடம் - கூடங்கள், கோபுரம் - கோபுரங்கள், மடப்பள்ளி-

மடப்பள்ளிகள், கோயில் - கோயில்கள், செய்குன்றம் - செய்குன்றுகள், பீடம்-பீடங்கள், ஆதனம் - ஆசனங்கள், இவை என - இவைகள் என்று, பின்னை-பிறகும், கொடுத்தனன் - கொடுத்தான். எ-று. (கக அ)

இந்தவாதனத்திருந்தருளென முனியிருந்தா
னந்தவெல்லையிலரசனுமவனடி பணிந்தான்
வந்தமன்னருமமைச்சருமங்கையர்குழாமுஞ்
சுந்தரற்கழற்சேனையுமவனடிதொழுதார்.

[இந்த ஆசனத்தின்மேலே எழுந்தருளும் என்றுசொல்ல அப்படியே விஸ்வாமித்திரர் அதில் இருந்தார், அப்பொழுது அரிச்சந்திரமகாராஜனும் அந்த விஸ்வாமித்திரர் பாதங்களை வணங்கினான். கூடவந்த அரசர்களும் மந்திரிகளும் பெண்களின் கூட்டங்களும், அழகிய வீரக்கழலைக் கட்டின சேனைகளும் வணங்கினார்கள் என்பதாம்.]

இ-ள். இந்த - இந்த, ஆதனத்து - ஆசனத்தின் மேலே, இருந்தருள் என - எழுந்தருளி இருமென்று அரிச்சந்திரமகாராஜன் சொல்ல, முனி இருந்தான் - அப்படியே விஸ்வாமித்திரமுனிவர் அதில் இருந்தார், அந்த எல்லையில்-அப்பொழுது, அரசனும் - அரிச்சந்திரமகாராஜனும், அவன் அடிபணிந்தான்-அந்த முனிவருடைய பாதங்களை வணங்கினான், வந்த மன்னரும் - வந்த அரசர்களும், அமைச்சரும் - மந்திரிகளும், மங்கையர் குழாமும் - பெண்களின் கூட்டமும், சுந்தரம் - அழகிய, கழல் - வீரக்கழலை அணிந்த, சேனையும்-சேனைகளும், அவன் அடிதொழுதார் - அந்த முனிவருடைய அடிகளை வணங்கினார்கள். எ-று.

'அவனடி தொழுதார்' என்பதற்கு அந்த அரிச்சந்திரமகாராஜனின் அடிகளை வணங்கினார்கள் என்றும் பொருள் உரைப்பர். (ககக)

தொழுதெழுந்துதஞ்சுடர்முடிமன்னனைநோக்கி
யழுதுநின்றவத்தலைவரையவன்கையாலமைத்துப்
பழுதிலாதுநீரெமக்குமுன்செய்தவப்பரிசே
முழுதுமிந்தமாமுனிவற்குமுறைசெயுமென்றான்.

[குடிகள் அப்படி முனிவரைத்தொழுது எழுந்து தம்முடைய ஒளிமிகுந்த கிரீடாதிபதியான அரசனைப்பார்த்து அழுது நிற்க, அந்தத் தலைவர்களை அரிச்சந்திரமகாராஜன் கையால் அமைத்து குற்றமற நீங்கள் எனக்கு நடந்துவந்த அதேபிரகாரம் உங்கள் காலமுழுதும் இந்த மகத்தான முனிவருக்கும் முறைசெய்யுங்கள் என்று அரிச்சந்திரன் சொன்னான் என்பதாம்.]

இ-ள். தொழுது எழுந்து - அப்படி அந்த முனிவரை வணங்கி எழுந்திருந்து, தம் சுடர்முடி மன்னனை நோக்கி - தம்முடைய ஒளியை உடைய

கிரீடத்தை அணிந்த அரிச்சந்திரனைப் பார்த்து, அழுது நின்ற - அழுது கொண்டு நிற்கின்ற, அத்தலைவரை - (அரசர்கள், மந்திரிகள், பிரதானிகள் முதலாகிய) தலைவர்களை, அவன் - அரிச்சந்திரமகாராஜன், கையாலமைத்து-தன் கையால் அடங்கச்செய்து, பழுது இலாது - குற்றமில்லாமல், நீர் - நீங்கள், எமக்கு - எனக்கு, முன் - முன்னாலே, செய்த அப்பரிசே - நடந்து வந்த அந்தப்பிரகாரமே, முழுதும் - உங்கள் காலமுழுதும், இந்த மாமுனிவற்கும்-இந்த மகத்தான முனிவருக்கும், முறைசெயும் என்றான் - நீதிசெயுங்கள் என்று சொன்னான். எ-று. 'செய்யும்' என்றது 'செயும்' என்றாயது தொகுத்தல் விகாரம்.

"முறைசெயும்" ராஜகாரியத்தில் உதவி செய்யுங்கள் என்றான் என்பதாம். (கஉ0)

எவர்க்குநல்லவர்திரிபுரமெரியெழச்சிரித்த
சிவற்குநல்லவர்செங்கண்மாலுக்குநான்முகத்த
னவற்குநல்லவரமரர்க்குநல்லவராவ
ரிவற்குநல்லவரெனக்குநல்லவரெனவிசைத்தார்.

[இந்த முனிவர் எல்லாருக்கும் நல்லவர், திரிபுரம் எரி எழும்படிச் சிரித்த பரமசிவனுக்கும் நல்லவர் செவந்த கண்ணையுடைய மகாவிஷ்ணுவுக்கும் நான்கு முகத்தையுடைய பிரம்மாவுக்கும் நல்லவர் தேவர்களுக்கும் நல்லவர் ஆவார், இவருக்கு நல்லவரானவர் எனக்கும் நல்லவராவர் என்று அரிச்சந்திரன் கூறினான் என்பதாம்.]

இ-ள். எவர்கும் - நல்லவர் - இந்த முனிவரோ எல்லோருக்கும் நல்லவர், திரிபுரம் - திரிபுரமானது, எரி எழச்சிரித்த - நெருப்பு எழும்படிச் சிரித்த, சிவற்கும் நல்லவர் - சிவபெருமானுக்கும் நல்லவர், செம்கண்-செவந்த கண்ணையுடைய, மாலுக்கும் - மகா விஷ்ணுவிற்கும், நான்முகத்தன் அவற்கும்-நான்கு முகங்களை உடைய பிரம்மனுக்கும், நல்லவர் - நல்லவர், அமரர்க்கும் - தேவர்களுக்கும், நல்லவர் ஆவர் - நல்லவர் ஆவார், இவற்கு நல்லவர் - (ஆகையால் உங்களில்) இவருக்கு நல்லவராய் இருப்போர்கள், எனக்கு - எனக்கு, நல்லவர் என - நல்லவர்கள் என்று, இசைத்தான் - அரிச்சந்திரமகாராஜன் கூறினான். எ-று. 'சிவற்கு நல்லவர்' என்பன முதலியவற்றிற்கு சிவபெருமானைக் காட்டிலும் என எல்லைப்பொருளிலும் பொருள் செய்வர். (கஉக)

வையமேழுடைமன்னவனவ்வுரைவழங்கச்
செய்யவாய்மலர்செங்கையாற்புதைத்தடிவணங்கி
யைன்மொழிமறுப்பவராரெனுமுகத்திற்
கையறைந்தழக்கண்டவக்கௌசிகன்கருதும்.

[ஏழு உலகத்தையும் உடைய அரிச்சந்திரமகாராஜன் அந்தவார்த்தைசொல்லவே கையால் வாயைப் பொத்திக்கொண்டு அரிச்சந்திரன் பாதங்களை வணங்கி, ஐயனே உமதுவார்த்தையைத் தடுப்பவர்கள் இங்கே யார் இருக்கிறார்கள் என்று தங்கையாலே முகத்தில் மோதி அடித்துக்கொண்டு, அழ அதைக்கண்டு விஸ்வாமித்திரர் ஆலோசிக்கின்றார். என்பதாம்.]

இ-ள். வையம் ஏழுடை மன்னவன் - ஏழு உலகத்தையும் உடைய அரிச்சந்திரமகாராஜன், அவ் உரை வழங்க - அந்த வார்த்தைகளைச் சொல்லவே, செய்யவாய் - (எல்லோரும்) தங்களுடைய செவந்த வாயை, மலர் செங்கையால் புதைத்து - செந்தாமரைபோன்ற செவந்த கையால் மூடிக்கொண்டு, அடிவணங்கி - அரிச்சந்திரமகாராஜனின் பாதங்களை வணங்கி, ஐயன் - ஐயனே!, மொழி மறுப்பவர் - உம்முடைய வார்த்தையைத் தட்டி நடப்பவர்கள், ஆர் என - யார் என்று, முகத்தில் - முகத்திலே, கையறைந்து-கையாலே அறைந்துகொண்டு, அழக்கண்ட - அழுவதைக்கண்ட, அக்கௌசிகன் - அந்த விஸ்வாமித்திரமுனிவர், கருதும் - ஆலோசிக்கின்றார். எ-று. (கஉஉ)

அறந்திரண்டுருவாகியவரசனையவமே
புறம்பறைந்தனம்புன்மையேம்புத்தியில்லாமற்
றிறந்தெரிந்தவர்செயலிதோவெனக்கவுசிகன்மெய்
மறந்திருந்துபின்மற்றுமோர்வாசகமுரைப்பான்.

[தருமமே திரண்டு உருவாயிருக்கிற அரசனை அற்பகுணத்தை உடைய நாம் புத்தி இல்லாமல் வீணாக இந்திரன் சபையிலே நிந்தித்துக்கூறினோம் நீதி தெரிந்தவர்கள் செய்கை இப்படியோ என்று விஸ்வாமித்திரர் உடம்பு மறந்திருந்து, பின்னும் ஓர்சொல் சொல்லுகின்றார் என்பதாம்.]

இ-ள். அறம் திரண்டு - தருமமே திரண்டு, உருவாகிய அரசனை - வடிவமாயிருக்கின்ற அரிச்சந்திரமகாராஜனை, புன்மையேம் - அற்பகுணத்தை உடைய நாம், புத்தி இல்லாமல் - புத்தி இல்லாமல், புறம்பு அறைந்தனம்- (இந்திரன் சபையிலே) நிந்தித்துக் கூறிவிட்டோம், திறம் தெரிந்தவர் - நீதி தெரிந்தவர்கள், செயல் இதோ என - செய்கை, இப்படியோ என்று, கௌசிகன் - விஸ்வாமித்திரமுனிவர், மெய்மறந்திருந்து - தம் உடம்பு மறந்திருந்து, பின் - பிறகு, மற்றும் ஓர் வாசகம் - மற்றும் ஒரு வார்த்தையை, உரைப்பான்- சொல்லுகின்றார். எ-று. (கஉங)

இந்தவையமுமிருநிதிக்குழுவுமிப்பொருளு
முந்துநீதரமொழிந்தவப்பொருளும்யானிழப்பே
னெந்தன்மக்களைமணம்புணர்ந்திந்நகரிருவென்
றந்தணன்மகிழ்ந்தரசனைக்கைபிடித்தமைத்தான்.

[இந்த நாடும் பெரிதான பொருட் குவியலும் இந்தப்பொருளும் முன்னே
நீ தருவதாகச்சொன்ன அந்தப்பொருளும் நான் விட்டு விடுகிறேன்,
என்னுடைய குமாரிகளைக் கல்யாணம் செய்துகொண்டு, இந்த
நகரத்திலேயே தானே இரு என்று விஸ்வாமித்திரமுனி
வர் சந்தோஷம்கொண்டு அரிச்சந்திரன் கையைப்
பிடித்து சமாதானம் செய்தார் என்பதாம்.]

இ-ள். இந்த வையமும் - இந்த உலகமும், இருநிதிக் குழுவும் - பெரிதான பொருட்குவியலும், இப்பொருளும் - இந்தப் பொருள்களும், முந்து-முன்னே, நீ - நீ, தாமொழிந்த - தருவதாகச்சொன்ன, அந்தப்பொருளும்-அந்தப்பொருளும், யான் இழப்பேன் - நான் விட்டுவிடுகிறேன், எம் தன் மக்களை-என்னுடைய குமாரிகளை, மணம் புணர்ந்து - கல்யாணம் செய்துகொண்டு, இந்நகர் இரு என்று - இந்த நகரத்திலேயே இரு என்று, அந்தணன் - விஸ்வாமித்திரமுனிவர், மகிழ்ந்து - சந்தோஷம் கொண்டு, அரசனை - அரிச்சந்திரமகாராஜனை, கைபிடித்து - கையைப்பிடித்து, அமைத்தார் - அவன் ஒப்புக்கொள்ளும்படிச் சமாதானம் செய்தார். எ-று. (கஉச)

கைபிடித்தலுமுனிவனைக்கால்பிடித்திறைவன்
மெய்பிடித்தலுமிக்கவைசெய்தலுமல்லால்
மைபிடித்தகட்பாத்தையர்ப்புணர்தலும்வழங்காப்
பொய்பிடித்தலுமறனலசெய்தலும்புகழோ.

[முனிவர் கையைப்பிடிக்கவே அரிச்சந்திரன் அவர் கால்களைப் பிடித்துக்
கொண்டு, சத்தியத்தை உறுதியாகக் கொள்ளுதலும், மேலான காரியங்
களை நடத்துகிறதும் அல்லால், மையிட்ட கண்களை உடைய பாத்
தையர்களைக் கூடுதலும், கொடுக்காதிருப்பதற்காகப் பொய்
சொல்லுதலும், தருமம் அல்லாதவைகளைச் செய்தலும்
கீர்த்திக்குக் காரணமாகுமோ என்றான் என்பதாம்.]

இ-ள். கைபிடித்தலும் - அப்படி அந்த விஸ்வாமித்திரமுனிவர் கையைப் பிடிக்கவே, இறைவன் - அரிச்சந்திரமகாராஜன், முனிவனை - விஸ்வாமித்திர முனிவரை, கால்பிடித்து - கால்களைப் பிடித்துக்கொண்டு, மெய்பிடித்தலும்-சத்தியத்தை உறுதியாகக்கொள்ளுதலும், மிக்கவை - மேலான காரியங்களை, செய்தலும் - நடத்துதலும், அல்லால் - அல்லாமல், மைபிடித்த - அஞ்சனம் பொருந்தியுள்ள, கண் பாத்தையர் - கண்களை உடைய தாசிகளை, புணர்தலும்-கூடுதலும், வழங்கா - கொடாதிருப்பதற்காக, பொய்பிடித்தலும் - பொய் பேசுதலும், அறன் அலா - தருமமல்லாதவைகளை, செய்தலும் - செய்தலும், புகழோ - கீர்த்திக்குக் காரணமாகுமோ. எ-று.

'மிக்கவை' மேலான தருமகாரியங்களை, என்பதாம்; 'வழங்கா' என்பதற்கு மேன்மையைத்தராத, என்றும் கீர்த்தியைத் தராத என்றும், வேதங்களில் சிறப்பாகக் கூறப்படாத, என்றும் இன்னோன்ன பல பொருளுங்கூறுவர். ()

உமக்கியான்சொலல்வேண்டுமோமனுவின்பினுதித்தே
யெமக்குமுன்னரசாண்டபார்வேந்தர்மூவெழுவர்
தமக்குமுன்னொருத்தருக்குந்தாங்கரும்பெரும்பாரம்
சுமக்கவல்லனோதவிர்கவிச்சொல்லெனத்தொழுதான்.

[உமக்கு நான் சொல்லவேண்டுமோ மனுவுக்குப் பின்னே பிறந்து எனக்கு முன்னே பூமியை அரசாண்ட இருபத்தொரு அரசர்கள், தங்களுக்கு முன்னே ஒருவராலும் தாங்குதற்கு அரிதான பெரிய பாரத்தை நான் தாங்க வல்லவன் ஆவேனோ ஆகையால் தாங்கள் இந்தப் பாவச்சொல்லை சொல்லுதலை இனி விட்டு விடுங்கள் என்று அரிச்சந்திரன் வணங்கினன் என்பதாம்.]

இ-ள். உமக்கு - உமக்கு, யான் சொலல் வேண்டுமோ - நான் சொல்லவும் வேண்டி யிருக்கிறதோ, மனுவின் பின் உதித்தே - மனுவிற்குப் பின்னாலே பிறந்து, எமக்கு முன் அரசாண்ட - எனக்கு முன்னாலே அரசாட்சி செய்த, பார்வேந்தர் - பூமியை ஆண்ட அரசர்கள், மூ எழுவர் - இருபத்தொருவர், தமக்கு முன் - தங்களுக்கு முன்னே, ஒருத்தருக்கும் - ஒருவருக்கும், தாங்கரும் - தாங்குதற்கரிய, பெரும்பாரம் - பெரிதாகிய (இந்தப் பாவமான) பாரத்தை, சுமக்கவல்லனோ - நான் தாங்க வல்லவன் ஆவேனோ, இச்சொல்-இந்த விதமான பாவச்சொல்லை, தவிர்க எனா - சொல்லுதலினின்றும் நீங்கி யருள்க என்று, தொழுதான் - முனிவரை வணங்கினன். எ-று.

'உமக்கு' என்றமையால் எங்கள் பாம்பரையும் அவர் சிறப்பும் தெரிந்த உமக்கு என்பது பொருள், தாங்கரும் பெரும்பாரம் தாங்குதற்கரிய பாவமாகிய பெரும்பாரம், என்பது பொருள் இதனை "நீதயான பெரும்பாரம்" என்றும் பொருள் விரிப்பர் அது பொருந்தாது. (சஉசு)

குளைக்கூட்டம்யான்பொருந்திலேன்சொன்னவிப்பொருளு
காளைக்கூட்டெனவரசனைநோக்கியேமுனிவ [க்
ஞளைக்கூட்டுவனின்றுநீநட்புறத்தென்னத்
தாளைக்கூட்டறவாக்கியதலையினுன்சாற்றும்.

[வேசைக்கூட்டத்திற்கு நான் சம்மதிக்கமாட்டேன், நான் கொடுப்பதாகச் சொன்ன இந்தப் பொருளுக்காக ஆளைக்கூட்டி அனுப்பு என்று சொல்ல, முனிவர் அரசனை நோக்கி நாளைக்குக் கூட்டி அனுப்புகின்றேன், இன்றே நீ வெளியே போய்விடு என்று சொல்ல அரசன் முனிவர் பாதங்களைத் தலைமேலே வைத்துக்கொண்டு சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். குளைக்கூட்டம் - வேசைகளைக் கூடுதற்கு, யான் பொருந்திலேன் - நான் சம்மதிக்கமாட்டேன், சொன்ன - நான் கொடுப்பதாகச்சொன்ன, இப்பொருளுக்கு - இந்தத் திரவியத்திற்கு, ஆளைக்கூட்டு என - ஒரு ஆளைக்

கூட்டி என் பின்னே வாவிடு என்று சொல்ல, அரசனை நோக்கியே - அந்தவித மாகச் சொல்லிய அரிச்சந்திரமகாராஜனைப் பார்த்து, முனிவன் - விஸ்வாமித் திரமுனிவர், நாளைக்கூட்டுவன் - நாளைக்குக்கூட்டி அனுப்புகின்றேன், இன்று- இன்றைக்கு, புறத்து - நாட்டுக்கு வெளியே, நீ நட - நீ போய்விடு, என்ன- என்று சொல்ல, தாளை - முனிவருடைய பாதங்களை, கூட்டுறவாக்கிய - கூட் டிப்பொருத்திய, தலையினன் - தலையை உடையவனாகி, சாற்றும் - சொல்லு கின்றான். எ-று.

'சூளை' - வேசை, 'தாளைக் கூட்டுறவாக்கிய தலையினன்' என்றதற்கு முனிவர் பாதங்களைத் தலைமேலே சூடிக்கொண்டு என்பது பொருள். (கஉஎ)

சிறுத்தநாயினேன்செய்தவிப்புன்மைகளெல்லாம்
பொறுத்தல்வேண்டுமென்றடியிணையிருகரம்பூண்டான்
கறுத்தசிந்தையன்கௌசிகன்பொறுத்தனனென்றான்
மறுத்துமின்னுமொன்றுரைத்திடக்கேளெனவள்ளல்.

[சிறிய நாய்போன்ற அடியேன் செய்த இந்தப் புல்லியவைகளை எல்லாம் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும் என்று அவர் இருபாதங்களை யும் கைகளால் பிடித்துக்கொண்டான். கோபத்தையுடைய மனத்தவராகிய விஸ்வாமித்திரர் பொறுத்தேன் என்று சொன்னார். மறுபடியும் இன்னொன்று சொல்லிக் கொள்வது இருக்கிறது கேட்டருளும் என் றான் அரிச்சந்திரன் என்பதாம்.]

இ-ள். சிறுத்த - சிறிதான, நாயினேன்-நாய்போன்ற அடியேன், செய்த- செய்த, இப்புன்மைகள் எல்லாம் - இந்தப் புல்லியவைகள் எல்லாம், பொறுத் தல் வேண்டும் என்று - பொறுத்துக்கொள்ள வேண்டுகின்றேன் என்று, அடி யிணை - அவர் இரண்டு கால்களையும், இருகரம் பூண்டான் - தன் இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டான், கறுத்த - (அதற்கு) கோபமுள்ள, சிந்தை யன் - மனத்தை உடையவரான, கௌசிகன் - விஸ்வாமித்திர முனிவர், பொறுத்தனன் என்றான் - பொறுத்தேன் என்று சொன்னார், மறுத்தும்-திரும் பவும், இன்னும் ஒன்று - இதற்கு மேலும் ஒன்று, உரைத்திடக்கேள் என- சொல்லிக் கொள்ளுவதுண்டு கேட்டருளும் என்று, வள்ளல் - பிரபுவான அரிச்சந்திரன். எ-று. இச்செய்யுள் குளகம். அடுத்த செய்யுளோடு பொருள் முடிவு பெறுகின்றது. (கஉஅ)

கையினாற்பிடித்தமைச்சரைக்காட்டிமற்றிவர்கள்
வையினுங்கினைமறுக்கினுமற்றுமோர்குற்றஞ்
செய்யினும்பொறுத்தருள்செய்வாய்செல்கதியளித்த
வையனேயுனதடைக்கலமிவரெனவளித்தான்.

[தன் கையினால் மந்திரிகளைப் பிடித்துக்காட்டி, செல்லவேண்டிய நற்கதி யைத் தந்தருளிய ஐயனே! இவர்கள் உம்மை வைதாலும், உமது சொல்லை மறுத்தாலும், வேறு ஒருகுற்றம் செய்து விட்டா லும், பொறுத்து அருள்செய்யவேண்டும், இவர்கள் உன்னுடைய அடைக்கலம் என்று அவரிடத்தில் ஒப்பித்தான் என்பதாம் ]

இ-ள். கையினால் - தன் கையினாலே, பிடித்து அமைச்சரை - மந்திரி களைப் பிடித்து, காட்டி - விஸ்வாமித்திரமுனிவரிடம் காட்டி, செல்கதி அளி த்த ஐயனே - இனிச் செல்லவேண்டியதாகிய நல்ல கதியைத்தந்தருளிய ஐயனே! மற்று இவர்கள் - மற்றும் இந்த மந்திரிகள், வையினும் - உம்மை வைதாலும், நினை மறுக்கினும் - உமது சொல்லைத் தட்டி நடந்தாலும், மற் றும் ஓர் குற்றம் செய்யினும் - வேறு ஒரு குற்றம் செய்தாலும், பொறுத் தருள் செய்வாய் - நீர் பொறுத்து அருள்செய்யவேண்டும், இவர் - இவர்கள், உனது அடைக்கலம் - உம்முடைய அடைக்கலம், என அளித்தான் - என்று சொல்லி முனிவரிடம் ஒப்பித்தான். எ-று. "நினை மறுக்கினும்" என்பதற்கு உம்மை வேண்டாமென்று சொன்னாலும், என்று பொருள் கூறுவர். அது பொருந்தாது.

"செல்கதி அளித்த ஐயனே" எமக்குப் போகும்படி விடை அளித்த ஐயனே, என்றும் பொருள் கூறுவர். (கஉகூ)

குடைநிழற்பொலிகௌசிகனடியின்மேற்கொடிநே
ரிடையினாளையுமகனையுமிறைஞ்சுவித்தேத்திப்
படையைநோக்கிநீர்நின்மினென்றங்கையாற்பணித்து
விடையிதேயெனப்பணிந்தனன்வேந்தர்க்குவேந்தன்.

[குடை நிழலின் கீழே விளங்குகின்ற விஸ்வாமித்திரர் பாதங்களில் சந்திர வதியையும் மகனையும் வணக்கச்செய்து தானும் துதித்து, சேனை களை நோக்கி நீங்கள் நில்லுங்கள் என்று தன் கைகளால் அமர்த்திவிட்டு விடை இதுதானே என்று ராஜாதி ராஜன் முனிவரை வணங்கினான் என்பதாம்.]

இ-ள். குடை நிழல் - (கொற்றக்) குடையின் நிழலிலே, பொலி-விளங்கு கின்ற, கௌசிகன் அடியின்மேல் - விஸ்வாமித்திருடைய பாதங்களிலே, கொடிநேர் இடையினாளையும் - வல்லிக்கொடிபோன்ற இடையை உடைய சந் திரவதியையும், மகனையும் - மகனாகிய லோகிதாசனையும், இறைஞ்சுவித்து- வணங்கும்படிச்செய்து, ஏத்தி - தானும் துதித்து, படையை நோக்கி-சேனை களை எல்லாம் பார்த்து, நீர் - நீங்கள், நின்மின் என்று - நில்லுங்கள் என்று, அம் கையால் பணித்து - தனது அழகிய கையால் அமைய நிறுத்தி, விடை இதே என - விடை இதுதான் என்று, வேந்தர்க்கு வேந்தன் - ராஜாதி ராஜ னாகிய அரிச்சந்திரன், பணிந்தனன் - விஸ்வாமித்திரரை வணங்கினான். எ-று. 'குடைநிழல்' சந்திரவட்டக்குடையின் நிழலில் என்றும் பொருள் கூறலாம். ()

பாமுனக்குளதென்றிறையகன்றனன்பரிந்து
புரமெரித்தவனனையமாமுனிபுவிபுரந்தான்
சிரமநீங்குவீரர்கள்செறிமன்றமுந்தெருவும்
பிரமசாரிகண்மலிந்தனர்பெருகுமுட்களிப்பால்.

[இனிப் பூமிபாரம் உமக்கே என்று சொல்லிவிட்டு அரிச்சந்திரன் போயினன் விரும்பி விஸ்வாமித்திரர் பூமியை ஆண்டார் ஆயாசந் தீர்ந்திருக்கின்ற வீரர்கள் கூடின சபைகளிலும் தெருக்களிலும் எங்கும் உள்ளக்களிப்புடனே பிரமசாரியப் பிராமணர்கள் கூடினார்கள் என்பதாம்.]

இ-ள். பாம் - இனிப்பூமிபாரம், உனக்கு உளது என்று - உமக்கே ஆய் இருக்கிறது என்று சொல்லிவிட்டு, இறை - அரிச்சந்திரமகாராஜன், அகன்றனன் - அவ்விடத்தைவிட்டுப் போயினான், புரம் எரித்தவன் அனையமாமுனி - திரிபுரத்தை எரித்த சிவபெருமானை ஒத்த பெரிய விஸ்வாமித்திரர், பரிந்து - விரும்பி, புவிபுரந்தான் - பூமியை ஆண்டுகொண்டிருந்தார், சிரமம் நீங்கு வீரர்கள் - ஆயாசந்தீர்ந்து இருக்கின்ற வீரர்கள், செறிமன்றமும் - கூடியுள்ள சபைகளிலும், தெருவும் - தெருக்களிலும், பெருகும் - பெருகுகின்ற, உள்களிப்பால் - உள்ளக்களிப்புடனே, பிரமசாரிகள் - பிரமசாரியப் பிராமணர்கள், மலிந்தனர் - பெருகிக்கூடினார்கள். எ-று. (௪௩௧)

காமத்தோகையர்கருங்குழல்விரித்தனர்பரவிச்
சேமத்தூமங்கள்காட்டுமெச்சிறப்பெலாந்தேய்ந்து
தாமத்தூமலர்த்தருப்பைகள்சமிதைகள்விரித்த
வோமத்தூமமேயோங்கினவுயர்மனையெல்லாம்

[அழகிய பெண்கள் தங்கள் கரிய கூந்தலை விரித்துப் பரவவிட்டு அவைகள் காய்வதற்காக இடும் அகிற்புகை முதலிய புகைகளின் சிறப்பெல்லாம் குறைந்து, மலர்களும் தருப்பைகளும் சமிதைகளும் விரித்துச்செய்யும் ஓமங்கள் செய்கிற புகையே உயர்ந்த வீடுகளின்மேல் எல்லாம் விளங்குவது ஆயின என்பதாம்.]

இ-ள். காமத்தோகையர் - அழகிய தோகை மயில்போலும் பெண்கள், கருங்குழல் விரித்தனர் - தங்கள் கரிய கூந்தலை விரித்தனராகிப், பரவி - பரவவிட்டு, சேமத்தூமங்கள் காட்டும் - அவைகள் உலர்வதற்காக அகில் முதலிய இன்ப வாசனைப் புகைகள் ஊட்டுகின்ற, சிறப்பு எலாம் - சிறப்புகள் எல்லாம், தேய்ந்து - குறைந்து, தாமத்தூமலர் - ஒளியை உடைய பரிசுத்தமான மலர்களும், தருப்பைகள் - தருப்பைகளும், சமிதைகள் - சமிதைகளும், விரித்த - விரித்திருப்பதான, ஓமத்தூமமே - ஓமங்கள் செய்கின்ற புகையே, உயர் மனை எல்லாம் - உயர்ந்த வீடுகளின் மேல் எல்லாம், ஓங்கின - உயர்ந்து கிளம்பின. எ-று.

'காமத்தோகையர், அரசனுக்குள்ள காமக்கிளத்தியர் எனப்பொருள் கூறுவர் அது பொருந்தாது. சேமத்தூமம் - இன்பப்புகை; தாமத்தூமலர்-ஒளியை உடைய பரிசுத்தமான மலர்கள், 'எலாம்' 'எல்லாம்' என்பதின் தொகுத்தல் விகாரம், (கஙஉ)

தோலினோர்களுந்துரகதத்தோர்களுஞ்சோதி
வேலினோர்களுமாதருமிடைந்தமைமாறி
நூலினோர்களுநுண்ணிடைகவுந்தியர்களுமுக்
கோலினோர்களுமலிந்தனர்கொடித்தெருவெல்லாம்.

[யானை வீரர்களும், குதிரை வீரர்களும், பிரகாசமுள்ள வேல் வீரர்களும் பெண்களும் நெருங்கி யிருந்த தன்மைபோய், பூண் நூலினோர்களும், நுண்ணிடைக் கவுந்தியர்களும். நுட்பமான இடுப்பை யுடைய கவுந்தியர்களும், திரிதண்டத்தை உடைய சந்நியாசிகளும், கொடி ஆடுகின்ற தெருவுகளிலெல்லாம் நிறைந்தார்கள் என்பதாம்.]

இ-ள். கொடித்தெரு எல்லாம் - கொடிகள் ஆடுகின்ற தெருவுகள் எல்லாம், தோலினோர்களும் - யானை வீரர்களும், துரகதத்தோர்களும் - குதிரை வீரர்களும், சோதி - பிரகாசமுள்ள, வேலினோர்களும் - வேல்வீரர்களும், மாதரும் - பெண்களும், மிடைந்தமை மாறி - நெருங்கி இருப்பவைபோய், நூலினோர்களும் - பூணூலை அணிந்தவர்களும், நுண் இடை - நுண்ணிதான இடையை உடைய, கவுந்தியர்களும் - கவுந்தியர்களும், முக்கோலினோர்களும்- திரிதண்ட சந்நியாசிகளும், மலிந்தனர் - பெருகினர். எ-று.

"தோல்" - யானை, 'நூலினோர்' என்பதற்கு சாஸ்திர ஆராய்ச்சி செய்கின்ற முனிவர்களும் என்றும் பொருள் கூறுவர். கவுந்தியர் - ஓர்வகைத் தவ ஒழுக்கமுடைய பெண்கள், இடையிலே அரைநாணும் கௌபீனமுமுள்ள முனிவர்கள் என்றும் பொருள் செய்வர். 'கொடித்தெரு' நீண்டதெரு என்றும் பொருள் செய்வர். (கஙங)

புனிதமாதவர்சூழ்ந்திடப்புரவலர்போற்றக்
கனிதிருந்தியசெய்யவாய்க்கன்னியர்காண
நனிதிருந்தியநவமணியாதனத்தேறி
யினிதிருந்துலகாண்டனன்கௌசிகனிப்பால்.

[பரிசுத்தமான முனிவர்கள் சூழவும், அரசர்கள் துதிக்கவும், பெண்கள் பார்க்கவும், ரத்தினகசிதமான சிம்மாதனத்தின்மேல் ஏறி விஸ்வாமித்திரர் சந்தோஷத்துடனே இப்பால் நாட்டை ஆண்டுகொண்டிருந்தான் என்பதாம்.]

இ-ள். இப்பால் - இந்த (அயோதியாகிய) இடத்தில், புனிதம் - பரிசுத்தமுடைய, மாதவர் - மகாமுனிவர்கள், சூழ்ந்திட - சூழவும், புரவலர் - அர

சர்கள், போற்ற - துதிக்கவும், கனி - கொவ்வைக்கனிபோல, திருந்திய-திருத்தமாகிய, செய்யவாய் - செவந்த வாயை உடைய, கன்னியர்காண - பெண்கள் பார்க்க, கௌசிகன் - விஸ்வாமித்திரர், கனி திருந்திய - மிகத் திருத்தமாகச் செய்யப்பட்ட, நவமணி ஆதனத்து ஏறி - நவரத்தினங்கள் இழைத்துச்செய்த சிம்மாதனத்தின் மேலே ஏறி, இனிது இருந்து - சந்தோஷத்துடனே வீற்றிருந்து, உலகு ஆண்டனன் - உலகம் எல்லாம் ஆண்டார். எ-று.

'கனி' - பழம், கனிவையுடையது என்னும் காரணம்பற்றி வந்த பெயர். ஈண்டு கொவ்வைக் கனியைக் குறித்தது, 'கனி' மிகுதிப்பொருள் காட்டும் உரிச்சொல், 'இப்பால்' என்றது அயோத்தியை. (கஙச)

சூழ்வினை காண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - எ௬உ.

---

௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஆருவது,

# நகர் நீங்கிய காண்டம்.

[இதில் அரிச்சந்திரனும் சந்திரவதியும் லோகிதாசனும் முனிவருக்குத் தம் நாட்டைக்கொடுத்து நகரத்தைவிட்டுப் புறப்பட்டு காட்டு மார்க்கம் சென்றமை இந்தக்காண்டத்தில் சொல்லப்படுகின்றது ]

அறுசீர்க்கழில் நெடிலடி யாசிரிய விருத்தம்.

தலமுழுதுந்தவமுனிவன் றனக்களித்தேமினியுறைதறகுதி யன்றென், றிலகுமணி மண்டபமு மெழின்மணிச்சிங் காதனமு மிழிந்துபோந்து, பலவரசருடனமைச்ச ரழுதுடன்போய்ப் பர தவிக்கப் பதாதிமொய்க்கக், குலமகனு மடமயிலு முன்னடக்கப் பின்னடந்தான் கொற்றவேந்தன்.

[நாடு முழுமையும் முனிவருக்குக் கொடுத்துவிட்டோம், இனி இங்கு வசித்தல் தகுதி உடையது அல்ல என்று, ரத்ந மண்டபங்களையும் ரத்ந சிங்காதனங்களையும் விட்டு இறங்கி பல அரசரும் பல மந்திரிகளும் அழுதுகொண்டு உடன்போகவும், சேனைகள் சூழவும், புத்திரனும் சந்திரவதியும் முன்னே நடக்க அரிச்சந்திரன் பின்னே சென்றான் என்பதாம்.]

இ-ள். தலம் முழுதும் - நாடு முழுமையும், தவமுனிவன் தனக்கு - தவ முனிவான விஸ்வாமித்திர முனிவருக்கு, அளித்தோம் - கொடுத்துவிட்டோம், இனி - இனிமேல், உறைதல் - இங்கு வசித்திருத்தல், தகுதி அன்று என்று - தகுதி உடையது அல்ல என்று, இலகு - விளங்குகின்ற, மணி மண்டபமும் - ரத்ந மண்டபங்களையும், எழில் - அழகுபொருந்திய, மணிச்சிங்காதநமும் - ரத்ந சிங்காதனமும், இழிந்து போந்து - விட்டு இறங்கி வந்து, பல அரசருடன் - பல ராஜாக்களுடனே, அமைச்சர் - மந்திரிகளும், அழுது-அழுதுகொண்டு, உடன்போய் - கூடப்போய், பரதவிக்க - துக்கிக்க, பதாதி - சேனைகள், மொய்க்க -சூழ, குலமகனும் - தன் குல புத்திரனாகிய லோகிதாசனும், மடமயிலும் - இளமைபொருந்திய மயில்போலும் சாயலை உடைய சந்திரவதியும், முன் நடக்க - முன்னாலே நடக்க, கொற்றவேந்தன் - வெற்றியை உடைய அரிச்சந்திரமகாராஜன், பின் நடந்தான் - பின்னாலே சென்றான். எ-று.

'பதாதி' - காலாட்படை; அரசன் பூமியில் நடந்து செல்லும்பொழுது ஏனைய தேர்ச்சேனை, யானைச்சேனை, குதிரைச்சேனைகள் முறையே தேர்மேலும் யானைமேலும் குதிரைமேலும் இருக்காது இழிறங்கியே பூமியில் நடப்பார்கள் ஆகையால் நால்வகைச் சேனையும் பதாதியாக இருக்கும் ஆதலின் பதாதி என்றார். இதுபற்றியே பதாதி என்பதற்கு பொதுப்பட சேனைகள் என்றும். "குலமகனும் மடமயிலும் முன் நடக்க" என்றதால் சந்திரவதிக்கும் லோகிதாசனுக்கும் அரிச்சந்திரன் நீதி தவறாமலும் சத்தியம் தவறாமலும் நடக்கவேண்டும் என்னும் எண்ணம் பூரணமாய் உண்டென்பது தெளிவாம். லோகிதாசன் சிறுவனாயிருந்தும் இத்தகைய சத்திய விருப்பினனாக இருப்பது வியக்கத்தக்க தொன்றாம். இதுபற்றித்தான் சூழ்வினைக்காண்டத்தில் 48-வது செய்யுளில் 'புத்திப் புதல்வன்' என்றார். (க)

தொடை துறந்துமுடி துறந்து பணிதுறந்துதுடிமுரசுந் துறந்துதாமக், குடைதுறந்து வெண்கவரிக் குழாந்துறந்து கரிபரி தேர்க்குலந்துறந்து, கடைதுறந்து மருகணைந்த காவலன்றன்திரு முகத்தைக் கண்டோரெல்லா,மடையமனமழிந்துருகி யவரவரே முகத்திலறைந் தழுவாரானார்.

[மாலை, கிரீடம், ஆபரணம், வாத்தியகோஷம், குடை கவரி, யானை, குதிரை, தேர், முதலியவைகள் இல்லாமல் அரண்மனை வாயிலை விட்டு வீதியிலே வந்த அரசனுடைய திருமுகத்தைப் பார்த்தவர்கள் எல்லாம், முற்றும் மனமடிந்து, உருகி தங்கள் தங்கள் முகத்தில் அறைந்துகொண்டு அழுதார்கள், என்பதாம்.]

இ-ள். தொடை துறந்து - மாலைகளை அகற்றி, முடி துறந்து-கிரீடத்தை அகற்றி, பணி துறந்து - ஆபரணங்களை அகற்றி, துடிமுரசும் துறந்து - உடுக்கையும் பேரிகையும் சப்தித்து வருவதை அகற்றி, தாமக்குடை துறந்து-மாலையை உடைய குடையை அகற்றி, வெண்கவரிக்குழாம் துறந்து - வெண்மையான சாமரைக் கூட்டங்களையும் அகற்றி, கரி பரி தேர்க்குலம் துறந்து-யானை குதிரை தேர் முதலியவற்றின் கூட்டங்களையும் அகற்றி, கடைதுறந்து-அரண்மனை வாயிலைவிட்டு, மருகு - வீதிக்கு, அணைந்த - வந்து சேர்ந்த, காவலன் தன் - அரிச்சந்திரமகாராஜனுடைய, திருமுகத்தை - அழகிய முகத்தை, கண்டோர் எல்லாம் - பார்த்தவர்கள் எல்லாம், அடைய - ஒருமிக்க, மனம் அழிந்து - மனத்தே துன்பமுற்று, உருகி - உருகுதலாகி, அவரவரே - அவரவர்களே, முகத்திலறைந்து - முகத்திலே அறைந்துகொண்டு, அழுவார் ஆனார் - அழத்தொடங்கினார்கள். (உ)

மயிரோடுஞ் சிறையிழந்த போகில்போல் வேலியொடு வரம்பிழந்த, பயிரேபோற்கரமிழந்தகரியேபோற்பொறியிழந்தபாவையேபோ, லுயிரேபோய்ப்பாதவிக்கு முடலேபோன்மதத்தாலுள்ளுடைந்தலம்புக், தயிரேபோற்றளர்ந்தலைந்து தத்தமக்குநிகழ்ந்த வெலாஞ் சாற்றலுற்றார்.

[உ.ரோமங்களுடனே சிறகுப்போன பட்சிபோலவும், வேலியும் வரம்பும் இழந்த பயிர்போலவும், கை இழந்த யானைபோலவும், சூத்திரமற்ற பிரதிமையைப் போலவும், உயிர்போய் பரதவிக்கின்ற உடம்பு போலவும், மத்தினால் உள்ளெல்லாம் உடைபட்டுச் சிதறுகின்ற தயிரைப்போலவும், தளர்ந்து அலைச்சல் கொண்டு தங்கள் தங்களுக் குத் தோற்றியவைகள் எல்லாம் சொல்லத் தொடங்கினார்கள்; என்பதாம்.]

இ-ள். மயிரோடும் - மயிருடனே கூட, சிறை இழந்த - இறகையும் இழந்த, போகில்போல் - பட்சியைப்போலவும்; வேலியொடு - வேலியோடு, வரம்பு இழந்த - வரம்பையும் இழந்த, பயிரேபோல் - பயிரைப்போலவும், கரம் இழந்த - கையை இழந்துவிட்ட, கரியேபோல் - யானையைப்போலவும், பொறி இழந்த - சூத்திரமற்ற, பாவையேபோல் - பிரதிமையைப்போலவும், உயிரே போய் - உயிரானது நீங்கி, பரதவிக்கும் உடலேபோல் - துடிக்கின்ற உடலைப் போலவும், மத்தால் - மத்தினாலே, உள் உடைந்து - உள் எல்லாம் உடைபட்டு, அலம்பும் தயிரேபோல் - சிதறுகின்ற தயிரைப்போலவும், தளர்ந்து அலைந்து- தளர்வுகொண்டு அலைந்து, தத்தமக்கு - தங்கள் தங்களுக்கு, நிகழ்ந்த எல்லாம்- தோற்றியவைகள் எல்லாம், சாற்றல் உற்றார்-சொல்லத்தொடங்கினார்கள். எ-று. ஏகாரங்கள் அனைத்தும் தேற்றப்பொருளில்வந்தன. போகில்-பட்சி. (௩)

கொடிமீதுசெறிதேருங்குஞ்சரமும்பொற்சிவிகைக்குழாமு மின்றிப், படிமீதுநடந்திடவும் படித்தனவோபார்வேந்தன் பாத மென்பா, ரடிமீதுதொழுமரசர் முடிமீதுமடிமீது மன்றிச்சுட்ட, பொடிமீது நடந்திடவும் பொறுத்தனவோ குலகுமரன்பொற்று ளென்பார்.

[தேர், யானை, பொற்பல்லக்கும் முதலான வாகனக் கூட்டங்களிலே ஏறிவருவது இல்லாமல், பூமிமேல் நடக்கவும் அரசன் பாதங்கள் கற்றிருக்கின்றனவோ என்பார். பாதத்திலே வந்து வண ங்குகின்ற அரசர்களின் முடியின் மேலும் மடியின் மேலும் அல்லாமல் வெயிலால் கொதிக்கின்ற தூளிகள்மேலேயும் நடக்கவும் பொறுப் பன ஆயினவோ குலபுத்திரனின் பொற்பாதங்கள் என்று சிலர் சொல்லுவார் என்பதாம்.]

இ-ள். கொடி - கொடிகள், மீது - மேலே, செறி - பொருந்தியிருக்கிற, தேரும் - தேரும், குஞ்சரமும் - யானையும், பொற்சிவிகை - பொற்பல்லக்கும், குழாமும் - இவைபோல்வனவாகிய வாகனக்கூட்டங்களிலே, இன்றி - இல்லா

மல், படிமீது - பூமியின்மேலே, நடந்திடவும் - நடக்கவும், பார்வேந்தன்பாதம்- இந்தப் பூமியை ஆள்கின்ற அரிச்சந்திர மகாராஜனுடைய பாதங்கள், படித்தனவோ - கற்றிருக்கின்றனவோ, என்பார் - என்றுசிலர் சொல்லுவார்கள், அடிமீது - பாதங்களின்மேலே, தொழும் - வந்து வணக்குகின்ற, அரசர் - மன்னர்களின், முடிமீதும் - தலைமேலும், மடிமீதும் - மடிமேலும், அன்றி - அல்லாமல், சுட்ட - வெயிலினால் சுடுகின்ற, பொடிமீதும் - தூளிகள்மேலேயும், குலகுமரன் பொற்றாள் - குலபுத்திரனுடைய பொன்மயமான கால்கள், நடந்திடவும் - நடக்கவும், பொறுத்தனவோ - பொறுப்பன ஆயினவோ, என்பார்- என்று சிலர் சொல்லுவார்கள். எ-று. (௪)

அஞ்சாயன் மடவன்னத் தணிதூவியதனுலு மனிச்சத்தாலும், பஞ்சாலும் பதைபதைக்கும் பதத்தாட்குக் கானடையோ பலித்ததென்பார், செஞ்சாலிக் கோசலமு மிராசகுலவளநாடுந் தேவர்நாடு, மஞ்சாமற் காத்தருளெம் பெருமானுக் கிதுவோவந் தடுத்ததென்பார்.

[அன்னத்தின் இறகுகளினுலும், அனிச்சமலர்களினுலும், பஞ்சினுலும், பட்டபோது துடிதுடிப்பதான பாதத்தையுடைய இந்தச் சந்திரமதிக்கு காலால் நடந்துசெல்லவோ பலித்ததென்பார். கோசலநாட்டையும், அரசர்களுடைய சிரேஷ்டமான நாடுகளையும் தேவர்களுடைய நாடுகளையும் பயப்படாமற் காத்தருளுகின்ற எங்கள் அரசனுக்கு இப்படியோவந்துகூடுதலாயிற்று என்று சிலர் சொல்லுவார்கள் என்பதாம்.]

இ-ள். அம்சாயல் - அழகிய சாயலை உடைய, மடம் - இளமையான, அன்னத்து - அன்னத்தினது, அணி - அழகிய, தூவி அதனுலும் - இறகுகளினுலும், அனிச்சத்தாலும் - அனிச்சமலர்களினுலும், பஞ்சாலும் - பஞ்சினுலும், பதைபதைக்கும் - பட்டபோது துடிதுடிப்பதான, பதத்தாட்கு - பாதங்களை உடைய சந்திரவதிக்கு, கால்நடையோ - காலால்நடக்கும் நடையோ, பலித்தது என்பார்-பலிதமாயிற்று என்று சிலர் சொல்லுவார்கள். செஞ்சாலி - செவந்த நெல் (விளைவதான), கோசலமும் - கோசலநாட்டையும், இராசகுல வளநாடும் - மற்ற அரசர்களுடைய வளப்பம்பொருந்திய நாடுகளையும், தேவர் நாடும்- தேவர்களுடைய நாடுகளையும், அஞ்சாமல் - பயப்படாமல், காத்து அருள்- காத்து அருளுகின்ற, எம்பெருமானுக்கு - எங்கள் அரசனுக்கு, இதுவோவந்து- இப்படியோவந்து, அடுத்தது என்பார் - கூடுதலாயிற்று என்று சிலர் சொல்லுவார்கள். எ-று.

'அனிச்சம்' ஓர்வகைமலர். மிகமேன்மையுடையது. "மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரும்பி நோக்கக் குழையும் விருந்து" என்றார் திருவள்ளுவநாயனரும். (௫)

கச்சைக்குத்திளமுலைச்சந் திரவதிதன்கணவனெடு கழுமி யேகக், கொச்சைக்குவலயமயில் கொற்றவனைவிட்டுமுனிக் கூட் டம்வேட்டாள், இச்சைக்கிதம்பேசி யீந்தாரைப்பாராட்டியீவார் தம்பாற், பிச்சைக்குவந்தவரோ பெண்ணுக்குமணவாளப்பிள்ளை யென்பார்.

[சந்திரவதி தன் நாயகனேடேசேர்ந்து இந்த வீதியிலே நடந்துவா கிழ்மைக்குணமுள்ள இந்தப் பட்டணமாகிய பெண். அரசனை விட்டு முனிவர்கூட்டத்தை விரும்பிச் சென்ருள். கொடுப் பவர்கள் மனது இரங்கப்பேசி கொடுத்தவர்களைப் புகழ் ந்து கொடுக்கிறவர்களைத்தேடி பிச்சைகேட்க வரு பவரோ அந்தப்பிச்சைகொடுக்கிறவர்களுடைய பெண்ணுக்கு மணவாளனுகின்றதென்று சிலர் சொல்லுவார்கள் என்பதாம்.]

இ-ள். கச்சை - இரவிக்கையை, குத்தும் - குத்திக் கிழிக்கும்படியான, இளமுலை - இளமையான முலையைக் கொண்ட, சந்திரவதி - சந்திரவதியான வள், தன்கணவனெடு - தன் நாயகனேடு, கழுமி ஏக - சேர்ந்து இந்தவீதியிலே நடக்க, கொச்சை - கிழ்மைக்குணமுள்ள, குவலயமயில் - இந்தப்பட்டணமாகிய பெண், கொற்றவனைவிட்டு - வெற்றிபொருந்திய அரிச்சந்திரமகாராஜனைவிட்டு, முனிக்கூட்டம் - முனிவர்களுடைய கூட்டத்தை, வேட்டாள் - விரும்பினுள், இச்சைக்கு - தான்விரும்பிய பொருளுக்கு, இதம்பேசி - அவர்களுக்கு இனிமை யான வார்த்தைகளைப்பேசி, ஈந்தாரை - கொடுத்தவர்களை, பாராட்டி - புகழ்ந்து, ஈவார்தம்பால் - கொடுக்கின்றவர்கள் இடத்தே, பிச்சைக்குவந்தவரோ - பிச்சை கேட்பதற்குவந்தவரோ, பெண்ணுக்கு - பிச்சைகொடுப்போரின் பெண்ணுக்கு, மணவாளப்பிள்ளை - மணவாளனுகிறது, என்பார் - என்று சிலர் சொல்லுவா ர்கள். எ-று.

'கழுமி' சேர்ந்து, 'கொச்சை' கிழ்மை, "பிச்சைக்கு வந்தவனே பெண் ணுக்கு மணவாளன் என்பது" பழமொழி. (சு)

முல்லைமுகை நகையாளு முடிவேந்த னும்மகனு முழுதும் போன, வெல்லையெலா மணவரையு மலரணையு முண்டோவென் றிரங்கிவிழ்வார், தொல்லைவிதிப் பயனுலே வந்திரந்த மாமுனி வன்சொன்னவெல்லா, மில்லையெனு தீந்தோருக் கித்தனையோ பெரும்பேறென் றேங்கிவிழ்வார்.

[சந்திரவதியும் அரசனும் புத்திரனும் போகிறவழிமுழுதும் மணவ
றையும் மலர் அணையும் உண்டோ என்று துக்கித்து சிலர் கீழே
விழுவார்கள். முன்னை விதிப்பயனாலே வந்து யாசகம்செ
ய்த பெரிய முனிவருக்கு கேட்ட எல்லாம், இல்லை
என்று சொல்லாமல் கொடுத்தவர்களுக்கு இப்
படித்தானோ அவர்கள் அடைவதான
பலன் என்று சிலர் அழுதுகொ
ண்டே கீழேவிழுந்தார்கள்
என்பதாம்.]

இ-ள். முல்லை முகை - முல்லையரும்பைப்போன்ற, நகையாளும் - பல்வ ரிசைகளுடையவளுமான சந்திரவதியும், முடிவேந்தனும் - கிரீடாதிபதியான அரசனும், மகனும் - லோகிதாசனும், முழுதும்போன - முற்றும் போவதான, எல்லை எலாம் - இடங்கள் எல்லாம், மண அறையும் - மணவறைவீடும், மலா ணையும் - புஷ்பமெத்தையும், உண்டோ - உண்டாயிருக்குமோ, !என்று இரங்கி வீழ்வார் - என்று துக்கித்துச் சிலர் கீழேவிழுவார்கள். தொல்லைவிதிப்பயனாலே- முன்னை ஊழின்பயனாலே, வந்து இரந்த - வந்து யாசகம் செய்த, மாமுனிவன் சொன்ன எல்லாம் - பெரிய முனிவர் கேட்ட எல்லாம், இல்லை எனாது-இல்லை என்று சொல்லாமல், ஈந்தோருக்கு - கொடுத்தவர்களுக்கு, இத்தனையோ - இவ் வளவு கஷ்டமோ, பெரும்பேறு - பெரிதாகியலாபம், என்று - என்றுசொல்லி, ஏங்கி வீழ்வார் - சிலர் அழுதுகொண்டே கீழேவிழுவார்கள். எ-று,

"பெரும்பேறு" என்பது பாடமாயின், பெறத்தகுந்த இலாபம் என்பது பொருளாம். (எ)

வல்லார்க்கு மாட்டார்க்கு மறமேநன்றென்றுரைப்பார் மற நன்றாமோ, வல்லார்க்குங் குழன்மடவீ ரறமேநன் றென்றுரை ப்பா ரதுநன்றாகி, னல்லார்க்குந் தீயார்க்கு மெல்லார்க்கு மொரு மையினடவாதென்னே, யெல்லார்க்குமுள தாகி லெங்கோ னுக் கிலையானதென்னோ வென்பார்.

[செய்யவல்லவர்க்கும் செய்யமாட்டாதவர்க்கும் வீரமேநல்லது, என்
பார்கள், வண்டுகள் சப்திக்கும்படியான கூந்தலை உடைய
பெண்களே! வீரம்நல்லதாமோ? தருமமே நல்லது என்று
சொல்லுவார்கள். அது நல்லதாகில் நல்லவர்களுக்கும்
கெட்டவர்களுக்கும் சமமாய் எல்லாருக்கும் ஒரு
விதமாகவே நடவாதிருப்பதற்கு என்னகார
ணம்; தருமம் செய்வோர்களுக்கெல்லாம்
அது நன்மைபயக்கிக்கொண்டு இரு
க்குமானால் எமது அரசனுக்கு
மாத்திரம் அந்தத்தருமம்
துணைசெய்யாமல் இப்படிப்போக
விட்டது யாதுகாரண
மென்பார்கள் சிலர்
என்பதாம்.]

இ-ள். வல்லார்க்கும் - செய்ய வல்லவர்களுக்கும், மாட்டார்க்கும் - செய்ய முடியாதவர்களுக்கும், மறமே - வீரமே, நன்று என்று உரைப்பார் - நல்லது

என்று சிலர் சொல்லுவார்கள். வல் ஆர்க்கும் - வண்டுகள் சப்திக்கும்படியான, குழல் மடவீர் - கூந்தலை உடைய பெண்களே! மறம் நன்றாமோ - வீரம் நல்லதாகுமோ, அறமே - தருமமே, நன்று என்று உரைப்பார் - நல்லது என்று சிலர் சொல்லுவார்கள், அது நன்றாகில் - அந்தத் தருமம் நல்லதாகில், நல்லார்க்கும்- நல்லவர்களுக்கும், தீயார்க்கும் - கெட்டவர்களுக்கும், எல்லார்க்கும் - (பொதுவாக) எல்லோருக்கும், ஒருமையினால் நடவாதென்னே - ஒரேவிதமாக நடவாதிருப்பது என்னகாரணம், எல்லார்க்கும் உளதாகில் - எல்லாருக்கும் தருமம் நன்மை செய்வது உண்டாகில், எங்கோனுக்கு - எமது சக்கரவர்த்திக்கு, இலையானது - இல்லாமல் போனது, என்னோ என்பார் - என்னகாரணம் என்று சொல்லுவார்கள். எ-று.

தருமம் எல்லாருக்கும் நன்மைபயப்பதாய் இருக்க எங்கள் அரசனுக்குமாத்திரம் நன்மை பயக்காததற்கு என்னகாரணம் என்றார்கள் என்பதாம். அரசர்களுக்கு மறமும் அறமும் வேண்டுவது அவசியம் பொதுவில் எல்லோருக்கும் அறமே வேண்டற்பாலது. (அ)

கொண்டிருந்த வளநாடுங்குறையாத பெருந்திருவுங்கொடித்திண்டேரும், பண்டிருந்த மாளிகையும் பரிசனமுந் தமக்களித்துப்பாலனோடும், வண்டிருந்ததாரானும் வாணுதலும் வறியோர்போல்வனத்தேபோகக், கண்டிருந்தும் விலக்காத கௌசிகனார் தம்மனமுங் கல்லோவென்பார்.

[தாங்கள் ஆண்டுகொண்டிருந்த வளநாடும், குறையாத மிக்க செல்வமும், கொடிபொருந்திய பெருந்தேரும் பண்டைக்காலம் தொட்டுத் தாங்கள் இருந்த மாளிகையையும் ஊழியக்காரர்களையும் உமக்கே என்று கொடுத்துவிட்டுப் பிள்ளையோடும், அரிச்சந்திரனும் சந்திரமதியும், தரித்திரர்களைப்போல் காட்டிற்குப்போகக்கண்டிருந்தும் தடுக்காதிருந்த விஸ்வாமித்திரரின் மனம் கல்லோ என்று சிலர் சொல்லுவார்கள் என்பதாம்.]

இ-ள். கொண்டிருந்த வளநாடும் - தாங்கள் ஆண்டுக்கொண்டிருந்த வளநாட்டையும், குறையாத - குறைவுபடாத, பெரும் திருவும் - பெரிதான செல்வத்தையும், கொடித்திண்டேரும் - கொடிகட்டின பலமான தேரையும், பண்டிருந்தமாளிகையையும் - பண்டைக்காலந் தொட்டு வாழ்ந்துக்கொண் டிருந்த மாளிகையையும், பரிசனமும் - ஊழியக்காரரையும், தமக்கு அளித்து - தமக்கே என்று கொடுத்துவிட்டு, பாலனோடும் - புத்திரனோடும், வண்டிருந்த - வண்டுகள் மொய்க்கப்பெற்ற, தாரானும் - மாலையை உடையவனாகிய அரிச்சந்திரமகாராஜனும், வாள் நுதலும் - ஒளிபொருந்திய நெற்றியை உடைய சந்திரவதியும்,

வறியோர்போல் - தரித்திரர்களைப்போல், வனத்தேபோக - காட்டுக்குச் செல்ல, கண்டிருந்தும் - பார்த்துக்கொண்டிருந்தும், விலக்காத - தடுக்காதிருக்கின்ற, கௌசிகனார்தம் மனமும் - விஸ்வாமித்திரருடைய மனமும், கல்லோ என்பார்-கல்லாயிருக்குமோ என்று சிலர் சொல்லுவார்கள். எ-று. (௯)

செம்மையினா லுலகமெலாந் தனக்களித்துச் செறிவனத்தே
தேம்பிச்செல்வோர், தம்மைவரவழைத்திருத்தியொருமனைக்குத்
தலமீயாத்தறுகட்பாவி, நம்மையெலாங்காத்தளிக்க வல்லவனோ
வெனக்கரங்கணடுக்கிமாறா, வெம்மையினால்வெய்துயிர்ப்பார்மின்
னாமலிடிவந்து வீழ்ந்ததென்பார்.

[ஒழுங்காகத் தன்நாடுமுழுதையும் தனக்குக்கொடுத்துவிட்டுத் தளர்ந்து காட்டுக்குப்போவோரை அழைத்து அவர்கள்இருப்பதற்கு ஒரு வீட்டுக்கு உள்ள இடமும் கொடாதிருக்கிற அஞ்சுதல் இல்லாத பாவியான விசுவாமித்திரன் நம்மைமுழுதும் காத்து ரட்சிக்க வல்லவனாவனோ என்று கைகள் நடுங்குதலாய்த் தீராத்துக்க வெப்பத்தினால் பெருமூச்சு விடுவார், நமக்கெல்லா மின்னாமல் இடிவந்து விழுந்தது என்பார் சிலர் என்பதாம்.]

இ-ள். செம்மையினால் - செவ்வைக்குணத்தினாலே, உலகமெலாம்-(தான் ஆண்டுவந்த) நாடுமுழுமையும், தனக்கு அளித்து - தமக்குக் கொடுத்து விட்டு, செறிவனத்தே-நெருங்கிய காட்டுக்குள்ளே, தேம்பிச்செல்வோர் தம்மை - தளர்ந்துபோகிறவர்களை, வரவழைத்து - கூப்பிட்டு, இருத்தி - இருக்கச்செய்து, ஒருமனைக்கு - ஒருவீட்டிற்கு, தலம் ஈயாத - இடம் கொடாத, தறுகண்பாவி- அஞ்சாத பாவியாகிய விஸ்வாமித்திர முனிவர், நம்மையெலாம் - நம்மை எல்லாம், காத்தளிக்க - காத்துரட்சிக்க, வல்லவனோ - வல்லவனாவானோ, என- என்று, கரங்கள்நடுக்கி - கைகள் நடுங்குதலாய், மாறா - தணியாத, வெம்மையினால் - வெப்பத்தினால், வெய்துயிர்ப்பார் - பெருமூச்சுவிடுவார்கள், மின்னாமல்- மின்னாதபடி, இடி - இடியானது, வந்து - வந்து, வீழ்ந்ததென்பார் - நமது நாட்டிலே விழுந்துவிட்டது என்பார்கள் சிலர். எ-று. (௧௦)

என்றலமந்தனைவோரும் வயிறலைத்துவிழுந்தேங்கி யிரங்குங்
காலை, கன்றினெடும்பிடியினெடுங் கிளையினெடும் வனம்புகுதுங்
களிறேபோல, வின்றளித்ததருண்முனிவர்க் கேற்றனவோ வேற்
றிலவோவென்றுவேங்கிக், குன்றனைய மதில்கடந்தே தனிநடந்து
சரையுவினைக்குறுகினனே.

[என்றிப்படிசொல்லித்துக்கித்து எல்லோரும் வயிற்றிலே அடித்துக்கொண்டு கீழேவிழுந்து அழுது துக்கிக்கிறபோது, கன்றோடும் பெட்டையோடும் சுற்றத்தோடும்காட்டிற்குச்செல்லுகிற ஆண்யானையைப்போல அரிச்சந்திரன் சென்றான், செல்லும்பொழுதே நான் இப்போது கொடுத்ததைக்குறித்து விஸ்வாமித்திரர்க்குசம்மதியாயிற்றோ சம்மதியாகவில்லையோ என்று துக்கித்துக்கொண்டே மலையை ஒத்த மதிலைக்கடந்து சாயுநதியைக்கிட்டினான் என்பதாம்.]

இ-ள். என்று - என்று இந்தவிதமாகசொல்லி, அலமந்து - துக்கித்து, அனைவோரும் - எல்லோரும், வயிறலைத்து - வயிற்றிலே அடித்துக்கொண்டு, விழுந்து ஏங்கி - கீழேவிழுந்து அழுது, இரங்குங்காலை - துக்கிக்கிறபொழுது, கன்றினொடும் - தன்னுடைய கன்றோடும், பிடியினொடும் - தன்னுடைய பெட்டையோடும், கிளையினொடும் - தன்னுடைய சுற்றத்துடனும், வனம்புகுதும் - காட்டிற்குச் செல்லுகின்ற, களிறேபோல - ஆண்யானையைப்போல. இன்று அளித்தது - இப்பொழுது கொடுத்தது; அருள்முனிவர்க்கு - கிருபையை உடைய விஸ்வாமித்திரருக்கு; ஏற்றனவோ - சம்மதி ஆயிற்றோ, ஏற்றிலவோ - சம்மதியாகவில்லையோ, என்னா - என்று நினைத்து, ஏங்கி - துக்கித்துக்கொண்டு, குன்றனைய - மலையை ஒத்த, மதில்கடந்தே - மதிலைக்கடந்து, தனிநடந்து - தனியே நடந்துபோய், சரயுவினை - சாயுநதியைக், குறுகினனே - கிட்டினான். எ-று.

"தனிநடந்து" குணத்தாலே தனக்கு ஒப்பில்லாதவனாகி நடந்து என்பதாம். விஸ்வாமித்திரமுனிவருக்கு நாடு கொடுத்தமைக்காக துக்கியாது அவருக்குத் திருப்தியாயிற்றோ இல்லையோ என்பதை நினைத்துத் துக்கித்தமையின் 'தனிநடந்து' என்றார். (கக)

உரைபெறுசீரிரவி குலத்தரசர்க்கு வழிவழியே யுரிமையாய,
சரையுவெனுந்தாதியரிச் சந்திரற்குவந்தவினை தானேதென்னா,
விரைமலர்த்தாள் பூண்டுகிடந்தாற்றிடவுமிழிந்தேகி விரைந்து
போய்மேற், கரையணுகிவரிமணலில்விரிமலர்களீசொரியுநறுங்கா
விற்புக்கான்.

[புகழ்பெற்ற சூரியகுலத்து அரசர்களுக்கு எல்லாம் வழி வழியே சொந்தமான, சரயு என்னும் தாதியானவள், அரிச்சந்திரனுக்கு வந்தவினை எப்படி வந்தது என்று வாசனைபொருந்திய மலர்போன்ற அவனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு கிடந்து அழவும், அரிச்சந்திரன் அவ் ஆற்றில் இறங்கி விரைவாகப்போய், மேற்குக்கரையைச் சேர்ந்து நீண்டு பரந்த மணலிலே விரிவாக மலர்கள் சொரியப் பெற்றிருக்கின்ற நல்ல சோலைக்குள்ளே புகுந்தான் என்பதாம்.]

இ-ள். உரைபெறு - புகழ்பெற்ற, சீர் - சிறந்த, இரவிகுலத்து - சூரியகுலத்து, அரசர்க்கு - அரசர்களுக்கு, வழி வழியே - வமிச பரம்பரையாக,

உரிமை ஆய - சொந்தமாயிருக்கின்ற, சரயு எனும் நதி - சரயுநதி என்கின்ற நதியானவள், அரிச்சந்திரற்கு - அரிச்சந்திரமகாராஜனுக்கு, வந்த வினைதான் ஏதென்னு - வந்த இந்தவினை எப்படி வந்ததென்று, விரைமலர்த்தாள் பூண்டு-வாசனைபொருந்திய தாமரை மலர்போன்ற பாதங்களைப் பிடித்துக்கொண்டு, கிடந்து - கிடந்து, ஆற்றிடவும் - அழுதுகொண்டிருக்கவும், இழிந்து - அந்த ஆற்றிலே இறங்கி, ஏகி - போய், மேற்கரை அணுகி - மேற்பக்கத்துள்ள கரையைக்கிட்டி, வரிமணலில் - நீண்ட மணல்களிலே, வீர் மலர்கள் சொரியும்-விரிவாக மலர்கள் சொரியப்பெற்ற, நறும்காவில் - பரிமளமுள்ள ஒரு சோலைக்குள்ளே, புக்கான் - புகுந்தான். எ-று.

'ஆற்றிடவும்' என்றதில் உள்ள உம்மை முன்னே குடிகள் முதலியவர்கள் அழுது ஆற்றினதல்லாமல் சரயுநதியும் அழுது ஆற்ற என்னும் பொருள் தருதலின் இறந்து தழீஇய எச்சவும்மை. (கஉ)

வரைக்கனகபுயத்தினனம் மலர்க்காவில்விரிமணன்மேல் வந்திருந்தான், விரைக்கரும்பூங்குழலாளுந் திருமகனு மிருபாலும் வீற்றிருந்தார், திரைக்கடலுட்பொருமெனப்போய்ச் செங்கதிரோன்சென்றனனச் சென்றகாலே, யுரைப்பனவும் விளைப்பனவு மறிதுமெனமுனிவனும்வந் தொளித்திருந்தான்.

[பொன்மலைபோன்ற புயத்தை உடைய அரிச்சந்திரன் அந்த மலர்ச்சோலைக்குள்ளே விரிந்த மணல்மேல் வந்து இருந்தான். சந்திரவதியும் லோகிதாசனும் இரண்டு புறத்திலும் இருந்தார்கள், சூரியனும் இக்கொடுமையைக் காணச் சகியாதவன்போல் மேலைக்கடலுக்குள் போய்ச் சென்றான். அப்பொழுது இவர்கள் பேசிக்கொள்ளுவதையும் செய்கின்றவைகளையும் காண்போமென்று விஸ்வாமித்திரமுனிவரும் வந்து ஒளித்திருந்தார் என்பதாம்.]

இ-ள். வரைக்கனக புயத்தினன் - பொன்மலைபோன்ற தோளை உடைய அரிச்சந்திரமகாராஜன், அம்மலர்க்காவில் - அந்தப் பூஞ்சோலைக்குள்ளே, விரிமணல்மேல் - பரவிக்கிடக்கின்ற மணலின்மேல், வந்து இருந்தான் - வந்து இருந்தான், விரை - வாசனையை உடைய, கரும் - கருமை நிறமாகிய, பூங்குழலாளும் - பூவை அணிந்த கூந்தலை உடைய சந்திரவதியும், திருமகனும் - அழகிய புத்திரனும், இருபாலும் - அரசனுக்கு இருபுறத்திலும், வீற்றிருந்தார் - உட்கார்ந்திருந்தார்கள், செங்கதிரோன் - செவந்த சூரியன், பொருமெனப் போய் - இந்தக் கொடுமையைப் பார்க்கச் சகியாதவனைப் போலப்போய், திரைக்கடலுள் - அலைகளைஉடைய கடலுக்குள்ளே, சென்றனன்-மறைந்தான், அச்சென்றகாலை - அப்படிச்சென்றபொழுது, உரைப்பனவும் - சொல்லுகின்றவைகளையும், விளைப்பனவும் - செய்கின்றவைகளையும், அறிதும் என - நாம் அறிவோம் என்று, முனிவனும் - விஸ்வாமித்திரமுனிவரும், வந்து ஒளித்திருந்தான் - அங்கு வந்து ஒருபுறத்திலே ஒளித்திருந்தான். எ-று.

'விரைக்கரும் பூங்குழலாளும்' என்பதற்கு இயற்கை மணத்தையுடைய தும் கருமை நிறமானதும் பூக்களை அணியப்பெற்றதுமான கூந்தலை உடைய சந்திரமதியும், என்றும் பொருள் கூறலாம். (கங)

அக்காலத்தமைச்சரெலா மடல்வேந்தனடிபோற்றி யரசே நீமீண், டெக்காலமெழுந்தருள்வ தென்றுரைக்க வாங்கவரை யிருகணோக்கி, முக்காலங்களுமுணரு முனிவனுக் கின்றியான் கொடுத்தமூதூர் தன்னி, லெக்காலமும்வருவதில்லையென்றானமை ச்சரெலா மேங்கிவீழ்ந்தார்.

[அந்தச்சமையத்தில் மந்திரிகள் எல்லாம் அரிச்சந்திரன் பாதங்களை வணங்கி அரசே! நீர் எப்பொழுது திரும்பி வந்தருள்வீர் என்று கேட்க, அவர்களைத் தன் இரண்டு கண்களாலும் பார்த்து, முக்காலத்தையும் தெரிந்த விஸ்வாமித்திர முனிவருக்கு இப்பொழுது நான் கொடுத்த இந்தப் பழமையான ஊருக்குள்ளே எந்தக்காலத்திலும் வரப்போகிறதில்லை என்றான் அதுகேட்டு மந்திரிகள் எல்லாம் துக்கித்து விழுந்தார்கள் என்பதாம்.]

இ-ள். அக்காலத்து - அப்போது, அமைசர் எலாம் - மந்திரிகள் எல்லாம், அடல் - வலிமைபொருந்திய, வேந்தன் - அரிச்சந்திரமகாராஜனுடைய, அடி போற்றி - பாதங்களை வணங்கி, அரசே - அரசனே!, நீ - நீர், மீண்டு-திரும்பி, எக்காலம் - எந்தக்காலத்தில், எழுந்தருள்வது - நம் நாட்டுக்கு வந்து சேர்வது, என்று உரைக்க - என்று கேட்க, ஆங்கு அவரை - அதற்கு அவர்களை, இரு கண் நோக்கி - தன் இரண்டு கண்களாலும் பார்த்து, முக்காலங்களும் - திரிகாலமும், உணரும் - தெரிந்த, முனிவனுக்கு - விஸ்வாமித்திரமுனிவருக்கு, இன்று - இன்று, நான் கொடுத்த - நான் கொடுத்ததான, மூதூர்தன்னில்-பழமையான ஊரில், எக்காலமும் - இனி எந்தக்காலத்திலும், வருவதில்லை என்றான் - நான் வருவதில்லை என்று அரிச்சந்திரமகாராஜன் கூறினான், அமைச்சர் எலாம் - அதற்கு மந்திரிகள் எல்லாம், ஏங்கி வீழ்ந்தார் - துக்கித்து கீழே விழுந்தார்கள். எ-று. (கச)

முன்செய்ததீவினையோ முனிசெய்தவுபகார முன்னுண்டாகப், பின்செய்தகைம்மாறோ பேரரசகொடுத்தகன்று பெருங்காடெய்த, மின்செய்தநெடுவேலாய்மெய்த்தவனையாந்துரந்து விட்டேமாகி, லென்செய்வா னெனவுரைப்பார் யாம்போதுமவன் போருக்கெதிர்க்கவென்பார்.

[அரிச்சந்திரமகாராஜனே நாட்டை முனிவருக்குக் கொடுத்து நீங்கள் காட்டில் வந்திருப்பது முன்செய்த தீவினைப்பயனோ அல்லது முன்னாலே முனிவர் செய்த உபகாரம் ஏதாகிலும் உண்டாகியிருக்க பின்னாலே செய்த பிரதிப் பிரயோஜனமோ, அந்த முனிவரை நாங்கள் துரத்திவிட்டோமானால் என்னசெய்வார் என்று சிலர் சொல்லுவார்கள். நாங்கள் அவரு டன் சண்டைக்குச் செல்லுகின்றோம் என்று சொல்லு வார்கள் என்பதாம்.]

இ-ள். மின்செய்த நெடுவேலாய் - மின்னல்போலப் பிரகாசத்தைச் செய் கின்ற நீண்ட வேலாயுதத்தை உடைய அரசனே! பேரரசு - பெரிய அரசாட் சியை, கொடுத்து - முனிவருக்குக் கொடுத்துவிட்டு, அகன்று - அதை விட்டு நீங்கி, பெரும் காடு எய்த - பெரிய காட்டிலேபோய் வாசஞ்செய்ய, முன் செய்த தீவினையோ - முன்னே செய்த பாவந்தானோ?, முனி - விஸ்வாமித் திரமுனிவர், செய்த உபகாரம் - செய்த உபகாரம், முன் உண்டாக - முன் னாலே யிருக்க, பின்செய்த - அதற்காகப் பின்னாலே செய்த, கைம்மாறோ- பிரதி உபகாரமோ?, (எங்களுக்கு ஒன்றும் விளங்கவில்லையே) மெய்த்தவனை- அந்த மெய்யான தவமுனிவரை, யாம் துரந்துவிட்டோமாகில் - நாங்கள் வேண் டாமென்று தள்ளிவிடுவோமேயானால், என்செய்வான் என உரைப்பார்-அவர் எங்களை என்னபண்ணுவாரென்று சொல்லுவார்கள் சிலர், அவன்-அந்த முனி வரின், போருக்கு - யுத்தத்திற்கு, எதிர்க்க - எதிர்ப்பதற்காக, யாம் - நாங்கள், போதும் - போகின்றோம் என்று சிலர் கூறுவார். எ-று. (கரு)

தோலேந்துமார்பின்மலர்த் தொடையேந்தத்தருப்பைமுடி ச்சுருக்கத்தோடே, கோலேந்துங்குறுங்கைகதிர் வேலேந்தக் கனகமுடிக்கோடீரத்தின், மேலேந்தியிருடியிருந்துலகாளவவன் குடைக்கீழ் வீணேயன்னான், காலேந்திவாழ்வதின்யாங் கனன் மூழ்க லமையுமெனக்கட்டுரைப்பார்.

[மான்றோல் ஏந்தும் மார்பில் பூமாலை பூணவும், தருப்பைகளைப் பிடிக்கின்ற கையிலே செங்கோல் ஏந்தவும், குறுகிய கையிலே ஒளிகொண்ட வேலா யுதத்தைத் தாங்கவும், பொன்மயமான கிரீடத்தை சடைமுடியின் மேற்கொள்ளவும், அந்த முனிவன் இருந்து உலகத்தை ஆள, அவன் குடைநிழலிலே, வீணாக அந்த முனிவனின் கால் களைச் சுமந்து வாழ்கிறதைப்பார்க்கிலும் நெருப்பிலே மூழ்குவது தகுமென்று உறுதியாகச் சொல்லு வார்கள் என்பதாம்.]

இ-ள். தோல் ஏந்தும் மார்பில் - (இந்த விஸ்வாமித்திரமுனிவர்) தன்னு டைய மான்றோல் பூணுவதான மார்பிலே, மலர்த்தொடை ஏந்த - பூமாலை பூணவும், தருப்பைமுடிச் சுருக்கத்தோடே - தருப்பைமுடிச் சுருக்கத்துடனே, கோல் ஏந்தும் - செங்கோல் கொள்ளும், குறுங்கை - குறுமையான கையிலே, கதிர் - பிரகாசமான, வேல் ஏந்த - வேலாயுதத்தை ஏந்தவும், கனகமுடி - தங்க

முடியை, கோடீரத்தின் மேலேந்தி - சடைமுடிமேலே சுமந்து, இருடி-அந்த விஸ்வாமித்திரமுனிவர், இருந்து உலகு ஆள - (சிம்மாசனத்தில்) இருந்து உலகத்தை ஆள, அவன் குடைக்கீழ் - அவன் குடைநிழலிலே, வீணே - வீணாக, அன்னான் கால் ஏந்தி - அவனுடைய கால்களைச்சுமந்து, வாழ்வதின் - வாழ்வதைக்காட்டிலும், யாம் - நாங்கள், கனல் மூழ்கல் - நெருப்பிலே முழுகுதல், அமையும் எனா - தகுவதாகும் என்று, கட்டு உரைப்பார் - உறுதியாகச் சொல்லுவார்கள். எ-று. 'கோடீரம்' - சடை. (கசு)

சடைபிடித்துங் காம்பிடித்துந் தாள்பிடித்து மாவுரியாற்ற
கைந்துடுத்த, வுடைபிடித்துமூர்த்தவனை யுயர்வனத்திலிப்பொ
ழுதேயோட்டுகின்றோம், மடைபிடித்தவயல்சூழும் வளநாடுநீ புர
க்கவருவாயென்று, படைபிடித்தமலர்க்கரத்தாற் பதம்பிடித்து
விறல்வேந்தர் பணிந்துவீழ்ந்தார்.

[சடையைப்பிடித்தும், கையைப்பிடித்தும், அவன் காலைப்பிடித்தும், மா
உரியை மூடி உடுத்தியிருக்கின்ற உடையைப் பிடித்தும் இழுத்து
அந்த முனிவனை இப்பொழுதே உயர்ந்த காட்டிற்கு ஓட்டி விடு
கின்றோம், நீர்பாயும் வழிகளையுடைய வயல் சூழ்ந்த வளப்
பம்பொருந்திய நாட்டை நீர் ஆளவரக் கடவீர் என்று
தங்களுடைய ஆயுதங்கள் பிடித்த மலர்போன்ற
கைகளால் அரிச்சந்திரனுடைய பாதங்களைப்
பிடித்துக்கொண்டு வலிமையுடைய
அரசர்கள், வணங்கி வீழ்ந்தார்
கள் என்பதாம்.]

இ-ள். சடை பிடித்தும் - அவன் சடையைப்பிடித்து இழுத்தும், காம் பிடித்தும் - அவன் கையைப்பற்றி இழுத்தும், தாள்பிடித்தும் - அவன் கால்களைப்பற்றி இழுத்தும், மாவுரியால் - மாவுரியினால், தகைந்து உடுத்த - கவசமிட்டு அதற்குமேல் உடுத்தியிருக்கின்ற, உடை பிடித்தும் - அவனுடைய உடையைப் பிடித்தும், ஈர்த்து - இழுத்து, அவனை - அந்த விஸ்வாமித்திர முனிவனை, உயர்வனத்தில் - உயர்ந்த காட்டுக்குள்ளே, இப்பொழுதே - இந்த க்ஷணத்திலேயே, ஓட்டுகின்றோம் - நாங்கள் ஓட்டிவிடுகின்றோம், மடை பிடித்த - நீர் பாய்கிற வழிகளைக்கொண்ட, வயல் - வயல்களானது, சூழும்-சூழ்ந்துள்ள, வளநாடு - வளப்பம்பொருந்திய நாட்டை, நீ - நீர், புரக்க - ஆள, வருவாய் என்று - வரக்கடவீர் என்று, விறல் வேந்தர் - வெற்றி வன்மையைக் கொண்ட அரசர்கள், படைபிடித்த - ஆயுதங்களைப் பிடித்திருக்கின்ற, மலர்க் கரத்தால் - மலர்போலும் கைகளால், பதம்பிடித்து - அரிச்சந்திரனுடைய கால்களைப்பிடித்து, பணிந்து வீழ்ந்தார் - வணங்கி விழுந்தார்கள் எ-று. (கஎ)

படிபுரக்குமன்னவன்கேட் டிருகரத்தாற் செவிபுதைத்துப்
பாவமந்தோ, குடிகெடினுமுயிர்கெடினுங் கொடுத்ததுவாங்கே
னென்றுகூறுமெல்லை, கடிபொழிற்காத்திருந்த கௌசிகனும்வந்

திர்த்தான் கண்டபோதே, யடியிணை தன்முடிசாத்தி யிருகரத்தா லுறப்பூண்டானரசர்கோமான்.

[அரிச்சந்திரன் இரண்டு கைகளாலும் காதை மூடிக்கொண்டு ஐயோ இது என்னபாவம், குடிகெட்டாலும் என் உயிர்போனாலும் கொடுத்து வாங்கமாட்டேன், என்று சொல்லுகின்றபொழுது அந்தச் சோலையில் மறைந்திருந்த முனிவரும் வந்து தோன்றினர், ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரன் கண்ட உடனே, இரண்டு பாதங்களையும் தன் முடியிலே சூடிக் கொண்டு, தன் இரண்டு கைகளாலும் கால்களைப் பிடித்துக்கொண்டான் என்பதாம்.]

இ-ள். படி புரக்கும் - பூமியைக் காக்கின்ற, மன்னவன் - அரிச்சந்திர மகாராஜன், கேட்டு-அவர்கள் சொல்லிய வார்த்தைகளைக்கேட்டு, இருகரத்தால்- இரண்டு கைகளினாலும், செவிபுதைத்து - காதைப் பொத்திக்கொண்டு, பாவம் அந்தோ - ஐயோ பாவம்! குடிகெடினும் - என் குடிகெட்டாலும், உயிர் கெடினும் - என் உயிர்கெட்டாலும், கொடுத்தது - தானம் கொடுத்ததை, வாங் கேன் என்று - வாங்கமாட்டேனென்று, கூறும் எல்லை - சொல்லிக்கொண்டிரு க்கும்பொழுது, கடிபொழிலில் - பரிமள மிகுந்த சோலையிலே, காத்து இருந்த- (மறைந்து) காத்துக்கொண்டிருந்த, கௌசிகனும் - விஸ்வாமித்திரமுனிவரும். வந்து எதிர்த்தான் - அரசன் முன்னே வந்து நின்றார், அரசர் கோமான்- ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரமகாராஜன், கண்டபோதே - விஸ்வாமித்திர முனிவரைக் கண்டபொழுதே, அடியிணை தன் முடிசாத்தி - அவர் இரண்டு பாதங்களையும் தன்னுடைய முடியின்மேலே சூடிக்கொண்டு, இருகரத்தால்- தன் இரண்டு கைகளினாலும், உறப்பூண்டான் - இறுகப் பிடித்துக்கொண் டான். எ-று. (கஅ)

வெய்தாநீவேடுவரால்விலங்கனைத்துங்கொல்வித்தாய் வெகு ண்டேனத்தை, பெய்தாயென்மக்களையு மிசைகேட்டுத்துரத்தடி த்தாயின் றுமென்னை, வைதாய்நீயெனக்களித்த மண்டலத்தை யான்றாநீவாங்காயாகிற், செய்தாயின்றிவருரைத்ததீமையெல்லா மென்னமுனிசெப்பினனே.

[விஸ்வாமித்திரர் அரிச்சந்திரனை நோக்கிக் கோபித்து வேடர்களைக்கொண்டு மிருகங்களை எல்லாம் கொல்லும்படிச்செய்தாய், பின்னும் கோபித்துப் பன்றியை எய்துவிட்டாய், என்பெண்களையும் பாட்டைக்கேட்டு ஒன்றும் கொடாது அடித்துத் துரத்தினாய் இப்பொழுதும் என்னைத்திட்டினாய், எனக்குக் கொடுத்த பூமியை நான் திருப்பிக்கொடுக்க நீ வாங்கிக்கொள்ளாமற் போவாயானால், இவர்கள் சொன்ன தீங்குகள் எல்லாம் நீ செய்தவன் ஆகின்றாய் என்று கூறினர் என்பதாம்.]

இ-ள். முனி-(அப்படி எதிரேவந்த) விஸ்வாமித்திரமுனிவர், நீவெய்தா- (அரிச்சந்திரனை நோக்கி) நீகோபமாகி, வேடுவரால் - வேடுவர்களாலே, விலங்கு

அனைத்தும் - மிருகங்கள் எல்லாவற்றையும், கொல்வித்தாய் - கொல்லும்படிச் செய்தாய், வெகுண்டு - பின்னும் கோபித்து, ஏனத்தை - பன்றியையும், எய்தாய் - பாணத்தால் எய்துவிட்டாய், என் மக்களையும் - என் பெண்களையும், இசைகேட்டு - அவர்கள் பாடலைக்கேட்டு, துரத்தடித்தாய் - ஒன்றும் கொடாமல் துரத்தி அடித்தாய், இன்றும் - இப்பொழுதும், என்னை வைதாய் - என்னைத்திட்டினாய், நீ - நீ, எனக்கு அளித்த - எனக்குக்கொடுத்த, மண்டலத்தை - பூமியை, யான்தர - நான் கொடுக்க, நீ வாங்காய் ஆகில் - நீ வாங்காமற் போவாயேயானால், இன்று - இப்பொழுது, இவர் உரைத்த தீமை எல்லாம் - இவர்கள் சொல்லிய தீங்குகள் எல்லாம், செய்தாய் - நீயே பண்ணினவனாவாய், என்ன - என்று, செப்பினனே - முனிவர் சொல்லினர். எ-று. ஏ - ஈற்றசை. (கக)

சிறுத்தவர்களறியாமற் செய்தபிழைபத்தனையுஞ் செவ்வியோய்நீ, பொருத்தருளயாமாகிற் பொறையென்னுமுறையென்னும்புலமையென்ன, மொறுத்திடினும்வெறுத்திடினு முனக்களித்த வரசுரிமையொருகாலத்து, மறுத்தினியான் வாங்கேனென்றெடுத்துரைத்தான் மன்னன்முனிவாட்டமுற்றான்

[செம்மைக்குணத்தை உடைய முனிவர் பெருமானே! சிறியோர்கள் தெரியாமல் செய்த குற்றங்கள் அத்தனையும் நீர் பொறுத்து அருள் செய்யாமல் போனால், உமது பொறுமை என்ன ஆகும் உம்முடைய நீதிதான் என்ன ஆகும், உம்முடைய அறிவுதான் என்ன ஆகும், இனி நீர் என்னைக் கொல்லுகிறதாய் இருந்தாலும் என்னை வெறுத்துவிடுகிறதாய் இருந்தாலும் உமக்குக்கொடுத்த என் அரசாட்சியை நான் ஒருகாலத்திலும் நான் திரும்ப வாங்கமாட்டேன் என்று அரிச்சந்திரன் எடுத்துச்சொன்னான், முனிவரும் மனவாட்டமடைந்தார் என்பதாம்.]

இ-ள். செவ்வியோய் - செம்மையான குணத்தையுடையவரே! சிறுத்தவர்கள் - சிறியோர்கள், அறியாமல் - அறியாமையினாலே, செய்தபிழை - செய்த தப்பிதங்கள், அத்தனையும் - எல்லாவற்றையும், நீ - நீ, பொறுத்தருளாயாமாகில் - பொறுத்து அருள் செய்யாது இருப்பாயேயானால், பொறை என்னும் - உம்முடைய பொறுமைதான் என்ன என்று சொல்லுவது?, முறை என்னும் - உம்முடைய நீதிதான் என்ன என்று சொல்லுவது, புலமை என்னும் - உம்முடைய அறிவுதான் 'என்ன என்று சொல்வது, ஒறுத்திடினும் - நீர் என்னைக் கொல்லுகிறதாய் இருந்தாலும், வெறுத்திடினும் - என்னை நீர் முழுதும் வெறுத்து விடுகிறதாய் இருந்தாலும், உனக்கு அளித்த - உமக்குக் கொடுத்த, அரசு உரிமை - அரசாட்சி உரிமையை, ஒருகாலத்தும் - ஒருபொழுதும், மறுத்து - திரும்பவும், இனி யான் வாங்கேன் - இனி நான் வாங்கமாட்டேன், என்று - என்று, மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், எடுத்து உரைத்தான்

எடுத்துக் கூறினான், முனி - விஸ்வாமித்திரமுனிவர், வாட்டமுற்ருர் - வாடுத லானூர். எ-று. (உ0)

பொன்கேட்கப் பொன்னளித்தான் புவிகேட்கப் புவியளித் தான்போதாதென்னு, வென்கேட்கினுந்தருவ தில்லையெனும்புன் மையிவனிடத்திலில்லை, முன்கேட்டபொருளாலே மொழிவழு வந்தெய்துமது முடக்கமானுற், பின்கேண்டாரிகழ்வார்கள் யாம் பொறுத்துமெனநினைந்துபேசலுற்ருன்.

[பொன்கேட்கப் பொன்கொடுத்தான், பூமியைக்கேட்கப் பூமியைக் கொடுத் தான், அதுபோதாமல், என்னகேட்டாலும் தருவது அல்லாமல் இல்லை என்று சொல்லும் ஹீனதன்மை இவன் இடத்து இல்லை முன் நாம் கேட்டுக்கொடுக்கின்றேன் என்று ஒப்புக்கொண்ட பொரு ளினுலே இவன் கொடுக்கமாட்டாமல் சொல் தவறுதல் உண்டாகுய், கொடுக்கமாட்டாமல் கெடுத்தவறினுல் பின் கேட்டவர்கள் எல்லாம் இவனை இகழ்ச்சி செய்வார்கள். ஆகையால் இப்போது நாம் பொறுத்துக்கொள்வோம் என்று ஆலோசித்துக்கொண்டு சொல்லல் உற்ருர் என்பதாம்.]

இ-ள். பொன்கேட்க - பொன்னைக்கேட்க, பொன் அளித்தான் - பொன் னைத்தந்தான், புவி - பூமியை, கேட்க - கேட்க, புவி அளித்தான் - கேட்ட படியே பூமியையும் கொடுத்தான், போதாது - இது போதாது, என் நா-எனது நாவானது, என்கேட்கினும் - என்னகேட்டாலும், தருவது இல்லை என்னும்- தருவது இல்லை என்று சொல்லும், புன்மை - அற்பகுணம், இவன் இடத்து இல்லை - இந்த அரிச்சந்திரன் இடத்து இல்லை, முன்கேட்ட பொருளாலே- முன்னே நான் கேட்ட பொருளாலே, மொழி வழுவந்து எய்தும் - கொடுக்க முடியாமையினுலே சொல் தவறுதல் வந்து சேரும், அது முடக்கமானுல்-அப் படி அவன் கொடுக்கமாட்டாமல் கெடுத்தவறினுல், பின் - பிறகு, கேட்டார்- கேட்டவர்கள், இகழ்வார்கள் - இகழ்ச்சி பண்ணுவார்கள், (ஆகையினுல்) யாம்- நாம், பொறுத்தும் என - பொறுத்துக் கொள்வோமென்று, நின்று - ஆலோ சித்துக்கொண்டு, பேசல் உற்ருன் - சொல்லல் உற்ருர். எ-று.

"தருவதில்லையெனும் புன்மை" இதனையே திருவள்ளுவ நாயனுரும் "இலனென்னும் எவ்வம்" என்ருர் திருவள்ளுவ நாயனுரும், 'முடங்கல்' தாம தித்தல். (உக)

ஒன்றுரைக்க நீகேளா யுண்மைக்கு வண்மைக்கு முரியோ யென்னை, யின்றுரைத்தபிழைபொறுத்தே னமல்வேள்வி முடித் திடுதல்கிவேனென்றங்,நன்றுரைத்தபொருளதனை யளிப்பாயோ

வளியாயோ வரசவென்ரு, னென் றுரைத்த கௌசிகனேயடிதொ ழூது வாய்புதைத்தங் கீதுரைப்பான்.

[மெய்மைக்கும் கொடைக்கும் தக்கவன் ஆனவனே, நான் சொல்லுகின்ற ஒன்றைக் கேட்பாயாக என்னே நீ இப்போது சொன்ன குற்றத்தைப் பொறுத்துக்கொண்டேன் அக்கினிமூட்டிச் செய்கிற யாகத்துக்குக் கொடுக்கிறேன் என்று அப்போது அங்கேசொன்ன பொருள் களைக் கொடுப்பாயோ கொடுக்கமாட்டாயோ அரசனே! என்று விஸ்வாமித்திரர் கேட்க அவருடைய பாதங் களை வணங்கி வாயைப் பொத்திக்கொண்டு அவ்விடத்தே இதைச் சொல்லுகின் ருன் என்பதாம்.]

இ-ள். உண்மைக்கும் - சத்தியத்திற்கும், வண்மைக்கும் - கொடைக்கும், உரியோய் - தக்கவன் ஆனவனே!, ஒன்று உரைக்க நீ கேளாய் - நான் ஒன்று சொல்ல நீ கேட்பாயாக, என்னை - என்னே, இன்று 'உரைத்த - இப்போது நீங்கள் எல்லாம் சொன்ன, பிழைபொறுத்தேன் - திட்டுதலாகிய பிழையைப் பொறுத்தேன், அழல்வேள்வி - நெருப்பு மூட்டிச் செய்கின்ற யாகத்தை, முடித்திடுதற்கு - செய்து முடிப்பதற்காக, ஈவேன் என்று - தருவேன் என்று, அன்று அங்கு உரைத்த - அப்போது நீ அங்கேசொன்ன, பொருளதனை - திர வியத்தை, அரச - அரசனே!, அளிப்பாயோ - கொடுப்பாயோ?, அளியாயோ- கொடுக்கமாட்டாயோ, என்ருன் - என்று முனிவர் கேட்டார், என்று உரைத்த கௌசிகனே-என்று அப்படிக்கேட்ட விஸ்வாமித்திரமுனிவரை, அடிதொழுது- (அரிச்சந்திரன்) பாதங்களை வணங்கி, வாய் புதைத்து-வாயை மூடிக்கொண்டு, அங்கு - அவ்விடத்தே, ஈது உரைப்பான் - இதைச் சொல்லுகின்ருன். எ-று.

உன்னுடனே யுரைத்தபொரு ளுனக்கடியே னுகந்தளித்த வுரிமைச்செல்வந், தன்னுடனேபோனதெனு வுணர்ந்தேனுயினு முனிவாற் றருவலென்றே, நின்னுடனே யானுரைத்த சபதமினி மாறுவனே நீயோள்விட்டாற், பொன்னுடனே தருவனென்ருன் புகரோனே யவனழைத்துப் பொருத்தினனே.

[உமக்குக் கொடுக்கிறேன் என்று சொன்னபொருள் உமக்கு நான் சந்தோ ஷத்துடனே கொடுத்த எனக்குச் சொந்தமான செல்வத்துடனே உன் னிடத்திற்கே வந்துவிட்டதென்று எண்ணினேனுனுலும், உம்மு டைய கோபத்திற்கு அஞ்சி கொடுக்கிறேன்என்று உம்முடனே நான் சொன்ன, சபதத்தை இனித்தப்புவேனே? இனி நீர் என்னுடனே கூட வரும்படி ஒரு ஆளை அனுப்புவீ ராஞல் பொருள் முழுதும் உடனே கொடுக்கின் றேனென்று அரிச்சந்திரன் சொன்னன், அத ற்கு விஸ்வாமித்திரமுனிவர் சுக்கிரபக வானைக் கூப்பிட்டு பொருள் வாங்கி வரும்படி சம்மதப் படுத்தினர் என்பதாம்.]

இ-ள். உன்னுடனே உரைத்தபொருள் - உம்முடனே நான் கொடுக்கி றேன் என்று சொன்னபொருள், உனக்கு - உமக்கு, அடியேன் - அடியேன்,

உகந்து அளித்த உரிமைச்செல்வம் தன்னுடனே - சந்தோஷப்பட்டுக் கொடுத்த எனக்குச் சொந்தமான செல்வத்துடனே, போனதென - உம்மிடமே சேர்ந்த தென்று, உணர்ந்தேன் ஆயினும் - தெரிந்தேன் ஆனாலும், முனிவால் - உம் முடைய சோபத்தினாலே (அஞ்சி), தருவல் என்றே - கொடுக்கின்றேன் என்று, நின்னுடனே - உன்னோடு, யான்உரைத்த - நான் சொல்லின, சபதம்-சபதத்தை, இனி மாறுவனோ - இனி தப்புவேனோ, நீ ஆள்விட்டால் - இனி நீர் என்னுடனே கூடவரும்படி ஒரு ஆளை அனுப்பினீரானால், பொன் உடனே தருவன் என்றான் - உமக்குத்தரவேண்டிய திரவியத்தை அவரிடத் திலே தருவேன் என்று அரிச்சந்திரன் சொன்னான், அவன் - அதற்கு அந்த விஸ்வாமித்திரர், புகரோனை அழைத்து - சுக்கிரபகவானைக் கூப்பிட்டு, பொரு த்தினனே - பொருள் வாங்கி வரும்படிச் சம்மந்தப்படுத்தினர். எ-று

'புகரோன்' - சுக்கிரன், 'மாறுவனோ' என்றது எதிர்மறைப் பொருள்தா வந்தவினா; 'பொருத்தினன்' கூட்டி அனுப்பினன் என்பதாம். (உரு)

உள்ளியதீ வினையனைத்துந் தனித்திருத்தி வகைவகையே யுரைத்து நீபோ, யள்ளியிடும் பொருள்கவரா தானையின்மேற் கவண்சிலைபோ மளவுதந்தாற், கொள்ளுதிநீபின்போன கூலியை யும் பெறுதியெனக் கூறித்தீய, வெள்ளிதனையுடன்கூட்டிமீண்டு மழைத் தொருவாய்மை விளம்பலுற்றான்.

[அந்தச் சுக்கிரனைத் தனியே ஒருபுறத்தில் இருக்கச்செய்து தான் எண்ணி யிருக்கின்ற தீய செய்கைகள் எல்லாம், வகை வகையாகச் சொல்லி, நீபோய் அவன் அள்ளிக்கொடுக்கிற பொருளை வாங்காமல், யானை மேலிருந்து கவண் கல் எறிந்தால் அதுசெல்லும் அளவுள்ள பொருள் கொடுத்தால் வாங்கிக்கொள்ளு நீ அவனோடு கூடச்சென்றதற்கு உள்ள கூலிப்பொருளும் வாங் கிக்கொள் என்று சொல்லி, பொல்லாத சுக்கிரனைக் கூடக் கூட்டிவிட்டு மறுபடி யும் அவனை அழைத்து ஒருவார்த்தை சொல்லுகின்றார் விஸ்வாமித்திரர் என்பதாம்.]

இ-ள். தீய வெள்ளிதனை - பொல்லாத வெள்ளி என்னும் பெயரை உடைய சுக்கிரனை, தனித்து இருத்தி-தனியே ஒருபுறத்தில் இருக்கச்செய்து, உள்ளிய - தான் எண்ணியுள்ள, தீவினை யனைத்தும் - தீய செய்கைகளை எல் லாம், வகை வகையே - வகை வகையாக, யுரைத்து - எடுத்துச்சொல்லி, நீ போய் - நீ கூடச்சென்று, அள்ளியிடும் பொருள் - அவன் அள்ளிக்கொடுக் கின்ற பொருளை, கவராது - பெறாமல், ஆனையின்மேல் - ஆனையின் மேலிரு ந்து, கவண் சிலை - (எறிந்த) கவண் கல்லானது, போமளவு - போகின்ற தூரம் அளவுள்ள பொருளை, தந்தால் - கொடுத்தால், கொள்ளுதி - வாங்கிக் கொள், நீ பின்போன - நீ பின்னோடு சென்றதற்குள்ள, கூலியையும் - கூலிப்

பொருளையும், பெறுதி என - வாங்கிக்கொள் என்று, கூறி - சொல்லி, உடன் கூட்டி - அரிச்சந்திரனுடனே கூட்டி அனுப்பி, மீண்டும் - திரும்பவும், அழைத்து - கூப்பிட்டு, ஒருவாய்மை விளம்பல் உற்ருன் - ஒருவார்த்தை சொல்லுகிருர் விஸ்வாமித்திரர். எ-று.

'தீய வெள்ளி என்றது' அசுர குருவாக இருப்பதனுலும், அரிச்சந்திரனுக்குத் துன்பம் செய்தற்கு விஸ்வாமித்திரருடன் உடன்பட்டு நின்றதனுலுமாம். (உச)

துன்றுபசிக் கடகுகனி தேடும்போ தெனக்கினிய சோறு வேண்டு, மென்றுமொழி தந்திடினுமேலாது வேண்டாவென்னி வனூண்பெற்ரு, லன்றுபொரு டருமுனுணற் ககலேலனில்லெனத் தடுநம்மவதிவந்தால், நின்றவரைக்கரிகுறித்து மறுதினத்தி னில் லாமனீவா வென்ருன்.

[உன் மிகுந்த பசிக்கு இலைகளும் பழங்களும் தேடும்போது எனக்கு இனிய சோறு வேண்டுமென்று சொல், அப்படியே தந்தாலும் இது போதாது வேண்டாம் என்று சொல், இவன் சோறு கிடைத்து உண்கிற அப்போது பொருள் தருவதற்குமுன் சாப்பிடப்போகாதே நில் எனத் தடு, நாம் கொடுத்த கெடுவந்தால், அங்கே இருக்கிறவர்களைச் சாட்சி வைத்துவிட்டு நீ சிறிதும் தாமதியாமல் மறுநாளே இங்கு வா என்று சுக்கிரனுக்கு விஸ்வாமித்திரர் கூறினர் என்பதாம்.]

இ-ள். துன்று பசிக்கு - உன்னுடைய மிகுந்த பசிக்கு, அடகு - இலைகளும், கனி - பழங்களும், தேடும்போது - இவ்வரிச்சந்திரன் (உனக்காகத்) தேடும்பொழுது, எனக்கு இனிய சோறுவேண்டும் என்று மொழி - எனக்கு நல்ல சோறுவேண்டும் என்று சொல், தந்திடினும் - அப்படியே கொண்டு வந்து தந்தாலும், ஏலாது வேண்டா என் - (இது எனக்குப் போதாது ஆகையால்) பொருந்தாது வேண்டாம் என்று சொல்லிவிடு, இவன் - இந்த அரிச்சந்திரன், ஊண்பெற்ருல் - உண்ணப் போவானேயானுல், அன்று - அப்பொழுது, பொருள் தருமுன் - பொருள் கொடுப்பதற்குமுன், உணற்கு - சாப்பிடுதற்கு, அகலேல் - போகாதே, நில் - நில்லு, எனத்தடு - என்று தடுத்துவிடு, நம் அவதி வந்தால் - நாம் கொடுத்த கெடுவந்தால், நின்றவரை - அங்கே இருக்கிறவர்களை, கரி குறித்து - சாட்சி வைத்துவிட்டு, மறுதினத்தில் - மறுநாளே, நில்லாமல் - தாமதித்துத் தங்காமல், நீ வா என்ருன் - நீ இங்கே வந்துவிடு என்று விஸ்வாமித்திரர் சுக்கிரனிடத்தில் சொல்லினர். எ-று.

'உண்ணற் ககலேல்' என்றது "உணற்ககலேல்" எனத் தொகுத்தல் விகாரம்பெற்று வந்தது. 'அவதி' - தவணை, 'கரி' - சாட்சி; 'துன்று பசி' - மிகுந்தபசி; 'ஏலாது' - ஏற்காது, பொருந்தாது, என்பன பொருள். (உரு)

அடுத்திருத்திமனங்கலக்கி முனிக்களித்தமொழிமாறி யளியேனென்ன, வெடுத்துரைக்கிலுன்னரசை யான்வாங்கித்தருவே னென் னிசைந்தானாகிற், றடுத்தழைத்து வருதிநமக் கதுபோது மெனப்பலவுஞ்சாற்றக்கூட்டி,விடுத்தனன்விட்டரசனுக்குவிடை கொடுத்து மாமுனிவன் மீண்டுபோனான்.

[அவனை உன்னோடு கூடவே இருக்கச்சொல்லி, அவன் மனத்தைக் கலக்கச் செய்து, விஸ்வாமித்திர முனிவருக்குக் கொடுக்கிறேமென்று நீசொன்ன சொல் தவறி நான் கொடுக்கமாட்டேன் என்று மனம் ஒப்பி நீ சொல்லுவையேயானால் உன் அரசாட்சியை நானே வாங்கித் தருகின்றேன் என்றுசொல், அதற்கு இவன் சம்மதப் படுவானேயானால் இவனைத் தடைசெய்து நம்மிடத்திற்குக் கூட்டிக் கொண்டுவா நமக்கு அதுபோதும், என்று பல பல சொல்லும்படி சுக்கிரபகவானை அரிச்சந்திரனுடனே கூட்டி அனுப்பிவிட்டு விஸ்வாமித்திரர் திரும்பினார் என்பதாம்.]

இ-ள். அடுத்திருத்தி - (பின்னும் விஸ்வாமித்திரர் சுக்கிரபகவானைப் பார்த்து) அவ்வரிச்சந்திரனை உன்னோடு கூடவே இருக்கச்செய்து, மனம் கலக்கி - மனதைக் கலங்கச்செய்து, முனிக்கு அளித்த மொழிமாறி - விஸ்வாமித்திருக்குக் கொடுக்கிறேமென்று சொல்லிய வாக்குமாறி, அளியேன் என்ன - நான் கொடுக்கமாட்டேன் என்று, எடுத்து உரைக்கில் - உன் மனங்கொண்டு எடுத்துச்சொன்னால், உன் அரசை - உனது அரசாட்சியை, யான் வாங்கித் தருவேன் என் - நானே உனக்கு வாங்கித் தருகின்றேன் என்று சொல், இசைந்தான் ஆகில் - அதற்கு அவ் அரிச்சந்திரன் சம்மதிப்பானேயானால், தடுத்து அழைத்து வருதி - அவன் போவதைத் தடுத்து இங்கே அழைத்துக்கொண்டுவா, நமக்கு அதுபோதும் - நமக்கு வெற்றிபெற அவ்வளவு அவன் சொன்னால் போதும், என - என்று, பலவும் சாற்ற - பல பலவற்றை அரிச்சந்திரனிடம் சொல்லும்படி, கூட்டி - அரிச்சந்திரனோடு கூட்டி, விடுத்தனன் - சுக்கிரபகவானை அனுப்பினான், விட்டு - சுக்கிரனை அனுப்பிவிட்டு, அரசனுக்கு - அரிச்சந்திரமகாராஜனுக்கும், விடைகொடுத்து - உத்தரவு கொடுத்து, மாமுனி வன் - பெரிய விஸ்வாமித்திரமுனிவர், மீண்டுபோனான்- திரும்பி அயோத்தி நகருக்குப் போனார். எ-று. (உசு)

முனியேகமன்னவனு முரிநெடுஞ் சேனைதனை முனிவன்றன்னோ, டினியேகுமவற்கினியாரெனக்கினியாரெனவழுதங்கியாரு மீண்டார், பனியேகு முனமெழுந்து பைங்தொடியு மன்னவனும் பாலன்றானுங், தனியேகக் கண்டமைச்சன் சத்தியகீர்த்தியுமவர் கடம்பிற் சென்றான்.

விஸ்வாமித்திரர் போகவே அரிச்சந்திரன் பெரிய சேனையை நோக்கி, இனி நீங்கள் முனிவருடனே செல்லுங்கள். அந்த முனிவருக்கு எவர்கள் நல்லவர்களோ அவர்களே எனக்கும் நல்லவர்கள் என்று சொல்ல, எல்லாரும் அழுதுகொண்டே எல்லோரும் திரும்பிப் போனார்கள், பனிகாய்ந்து போவதற்கு முன்னே எழுந்து சந்திரவதியும் அரிச்சந்திரனும் புத்திரனும் தனியே துணையின்றிப் போவதைக்கண்டு மந்திரியாகிய சத்தியகீர்த்தி என்பவனும் அவர்களுடனே கூடப் போனான் என்பதாம்.]

இ-ள். முனி ஏக - அவ்விதமாக விஸ்வாமித்திரமுனிவர் போகவே, மன்னவனும் - அரிச்சந்திரமகாராஜனும், மூரிநெடுஞ் சேனைதனை - பெரிதான நெடிய சேனைகளைப் (பார்த்து), முனிவன் தன்னோடு - விஸ்வாமித்திரமுனிவரோடு, இனி ஏகும் - இனி நடங்கள், அவற்கு இனியார் - அவருக்கு நல்லவர்களே, எனக்கினியார் - எனக்கு நல்லவர்கள், என - என்றுசொல்ல, அழுது அங்கு யாரும் மீண்டார் - அழுதுகொண்டு அங்கிருந்து எல்லோரும் திரும்பினார்கள், பனி ஏகுமுனம் - (உடனே) பனிகலைந்து போகிறதற்கு முன்னே, எழுந்து - அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டு, பைந்தொடியும் - பசுமையான வளையலை அணிந்த சந்திரவதியும், மன்னவனும் - அரிச்சந்திரமகாராஜனும், புதல்வன் தானும், புத்திரனாகிய லோகிதாசனும். தனி - வேறு துணையின்றி, ஏகக்கண்டு - போவதைப்பார்த்து, அமைச்சன் - மந்திரியாகிய, சத்தியகீர்த்தியும் - சத்தியகீர்த்தி என்பவனும், அவர்கள் தம்பின் - அவர்களுக்குப் பின்னாலே, சென்றான் - தொடர்ந்து போனான். எ-று.

"பனியேகுமுனம்" சூரியோதயத்துக்கு முன் என்பது பொருள்; "அவர் கடம்பிற் சென்றான்" அவர்களைப் பின் தொடர்ந்தான் என்பதாம். (உஎ)

வருகின்றமந்திரியை மன்னவனுங் கண்டுவிழி வழிநீர்வார, வுருகினிய வன்பினுட னீபோந்தான் மறைமுனிவற் குருநருண்டோ, வருகிருந்துபுவிநடத்தநின்போலங்கறிவுடையாராருமில்லை திருநகர்க்கே மீண்டேகென் றுரைத்திடலு மமைச்சர்பிரான் செப்பலுற்றான்.

[அப்படிக் கூட வருகின்ற மந்திரியை, அரசனும் பார்த்து, கண்ணீர்விட்டு, உருகுகின்ற இனிய அன்போடு, நீ என்னோடுகூட வந்துவிட்டால், விஸ்வாமித்திரருக்கு உற்றவர் உண்டோ, பக்கத்திலிருந்து பூபாரத்தை நடத்த உன்னைப்போல் அறிவு உடையவர்கள் அங்கு ஒருவரும் இல்லை ஆகையினால் அழகிய நகரத்திற்கே திரும்பிப் போ என்று அரிச்சந்திரன் சொல்ல மந்திரித்தலைவன் சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். வருகின்ற மந்திரியை - அப்படிக் கூடவருகின்ற மந்திரியை, மன்னவனும் கண்டு - அரிச்சந்திரமகாராஜனும் பார்த்து, விழிவழி-கண்களின்

வழியாய், நீர்வார - நீர் ஒழுக, உருகு இனிய அன்பினுடன் - உருகுகின்ற இனிதான அன்புடனே, நீ போந்தால் - நீ என்னேடு கூட வந்துவிட்டால், மறைமுனிவற்கு - வேதங்களையுணர்ந்த விஸ்வாமித்திரமுனிவருக்கு, உறு நருண்டோ - வேறு உற்றவர்கள் இருக்கிறார்களோ?, அருகு இருந்து - அவர் பக்கத்தில் இருந்து, புவி நடத்த - உலக அரசாட்சியை நடத்திவைக்க, நின் போல் - உன்னைப்போல், அங்கு - அவ்விடத்து, அறிவு உடையார் - அறிவை உடையவர்கள், ஆரும் இல்லை - எவரும் இல்லை, திருநகர்க்கே மீண்டு ஏகு- (ஆகையினால்) அழகிய அயோத்தி நகருக்கே திரும்பி நீபோ, என்று - என்று, உரைத்திடலும் - அரிச்சந்திரமகாராஜன் சொன்ன உடனே, அமைச்சர்பிரான்- மந்திரிகளுக்கெல்லாம் தலைவனான சத்தியகீர்த்தி, செப்பல் உற்றான் - சொல்லத் தொடங்கினான். எ-று. 'யாருமில்லை' எனற்பாலது 'ஆருமில்லை' என்றாயது போலி. (உஅ)

கோதிலாப்பெருங்குணத்தாய்குற்றேவ லிந்நெடுநாள்கொடியேன் செய்தே, னாதலா னீயேகு மருஞ்சுரத்திற் பணித்தபணி யார்தான் செய்வார், மாதாருடனேகமகனேக நின்னுடன்யான் வாரேனாகி, லேதிலா னானேனென் றிடியே றுண்டமர மென்ன வீழ்ந்தான்.

[குற்றமில்லாத பெரிய குணங்களை உடைய அரசனே! பாவியாகிய நான் இது நாள்வரை உமக்கு ஊழியம் செய்து வந்தேன், ஆகையினால் நீங்கள் போகும் கொடிய பாலைவனத்தில் ஏவிய ஏவல் யார் செய்வார்கள், என் தாயாகிய சந்திரவதியும் உமது வரபுத்திரனாகிய லோகிதாசனும் உம்மோடு கூடவர நான் மாத்திரம் வாதிருப்பேனே யானால், உமக்கு நான் அன்னியன் ஆவேன்என்று சத்தியகீர்த்தி சொல்லி இடிவிழுந்த மரம்போல் கீழே விழுந்தான் என்பதாம்.]

இ-ள். கோதிலா - குற்றமற்ற, பெருங்குணத்தாய் - பெரிய குணங்களை உடைய அரசனே!, கொடியேன் - பாவியாகிய நான், இந்நெடுநாள் - நீண்ட இவ்வளவு காலமாக, குற்றேவல் - சிறு ஊழியம், செய்தேன் - செய்து வந்தேன், ஆதலால் - ஆகையினால், நீ ஏகும் - நீ போகின்ற, அரும் சுரத்தில்-அருமையான பாலைவனத்தில், பணித்தபணி - நீர் ஏவிய ஏவலை, யார்தான் செய்வார் - அந்த இடத்தில் எவர்கள் செய்வார்கள், மாதார் உடன் ஏக - எமக்குத் தாயாகிய சந்திரவதி உம்மோடு கூடவர, மகனேக - உமது வரபுத்திரனும் உம்மோடு கூடவர, நின்னுடன் - உம்மோடுகூட, யான் வாரேனாகில் - நான் மாத்திரம் வாதிருப்பானேயானால், ஏதிலான் ஆனேனால் - உமக்கு அன்னியன் ஆனவனே ஆயினேன், என்ற - என்றுசொல்லி, இடி ஏறு உண்ட - பேரிடி விழுந்த, மரமென்ன - மரத்தைப்போல, வீழ்ந்தான் - சத்தியகீர்த்தி துக்கத்தால் விழுந்தான். எ-று. 'சுரம்' - காடு, பாலை - நிலம். (உக)

இடிவீழ்ந்த மரப்போல வீழ்ந்தாற்று மந்திரியை யெடுத்து மேனிப், பொடிதுடைத்து முடிதடவிப் பொழிவிழிநீர் தனைமாற்றிப் பொருமலாற்றிக், கடிநகரி லிவனைவிடி லுயிர்விடுவனெனக் கதறிக்கலங்கிக் காமர், வடிவழுங்கமனங்கருகவுயிர்நடுங்க வருந்தேனீ வருதியென்றான்.

[அந்தவிதமாக இடிவிழுந்த மரப்போலக் கீழே விழுந்து பிரலாபிக்கும் மந்திரியை அரிச்சந்திரன் வாரி எடுத்து உடம்பிலுள்ள தூசிகளைத் துடைத்து அவன் தலையைத் தடவிக்கொடுத்து, பொழிகின்ற கண்ணீரைப்போக்கி, அவன் பொருமுதலையும் தணித்து, பட்டணத்தில் நான் இருந்துகொண்டு அரசனைத் தனியே காட்டிற்கு விடுவேனானால் நான் உயிர் விட்டுவிடுவேன் என்று சொல்லிக் கதறிக் கலங்கி உனது அழகான உடம்பும் கெட மனமுந்திய உயிர் நடுங்க வருத்தப் படாதே கூட வா என்று சத்திய கீர்த்திக்கு அரிச்சந்திரன் கூறினான் என்பதாம்.]

இ-ள். இடி வீழ்ந்த - இடியானது விழுந்த, மாம்போல - மாத்தைப் போல, வீழ்ந்து - பூமியில் விழுந்து, அரற்றும் - பிரலாபிக்கின்ற, மந்திரியை எடுத்து - மந்திரியாகிய சத்தியகீர்த்தியை வாரி எடுத்து, மேனிப்பொடி துடைத்து - உடம்பிலுள்ள தூசியைத் துடைத்து, முடிதடவி - அவன் தலையைத் தடவி, பொழிவிழி நீர்தனை மாற்றி - சிந்துகின்ற கண்களின் நீரைப்போக்கி, பொருமல் ஆற்றி - துக்கித்துப் பொருமுதலையுந் தீர்த்து, கடிநகரில் இவனை விடில் - நான் இந்தக் காவலையுடைய நகரில் இருந்துகொண்டு அரசனைக் காட்டுக்குப் போகும்படி விட்டு நான் பிரிவேனேயானால், உயிர் விடுவன் எனக் கதறி - உயிரை விடுவேனென்று கதறி, கலங்கி-கலங்கி, காமர் வடிவு அழுங்க- உனது அழகான உடம்புங்கெட, மனமுங் கருக - மனமும் தீய, உயிர் நடுங்க- உயிரும் நடுங்க, வருந்தேல் நீ - நீ வருத்தம் கொள்ளாதே, வருதி என்றான்- நீயும் கூட வா என்று அரிச்சந்திரன் சொன்னான். எ-று.

'பொருமல்' - துக்கித்து அழுதல், என்றும் பொருளாம், 'உயிர் நடுங்க'- உயிர் அஞ்ச, என்பதாம். (௩௦)

கலி விருத்தம்.

வாழ்வினைவளர்ந்தபொழுதென்னின்மிகவாழ்ந்தாய்
தாழ்வினைநிகழ்ந்தபொழுதென்றனொடுதாழ்ந்தாய்
சூழ்வினைநமைக்கடிதுசுற்றினவையெல்லா
மூழ்வினையெனச்சொலியுடன்கொடுநடந்தான்.

[நான் வாழ்வை அடையும்படி நல்ல வினை வளர்ந்தபொழுது என்னிடத்தில் இருந்து மிகவும் வாழ்வையே அடைந்தாய், எனக்குத் தாழ்வாகிற தீவினை உண்டானபோது நீயும் என்னுடனே கூடித் தாழ்வையே அடைந்தாய், ஆகையால் ஒருவர் செய்கிற செய்கைகள் நம்மை வந்து விரைந்து சுற்றுமானால் அப்படிச் சுற்றுகின்றவைகள் எல்லாம் முன்னாலே உண்டாகிய ஊழேயல்லாது வேறல்ல என்று சொல்லி கூடக் கூட்டிக்கொண்டு அரிசசந்திரன் நடந்தான் என்பதாம்.]

இ-ள். வாழ்வினை - நான் வாழ்வதற்கான நல்லவினை, வளர்ந்த பொழுது-பெருகிய பொழுது, என்னின் - என்னோடு கூட இருந்து, மிக வாழ்ந்தாய்-மிகவும் சுகமோடு வாழ்ந்துகொண்டிருந்தாய், தாழ் வினை - தாழ்வாவதற்கு உரிய தீவினை, கிளர்ந்த பொழுது - உண்டாகிய பொழுது, என்றனொடு - என்னோடு கூடவே, தாழ்ந்தாய் - நீயும் கூடித் தாழ்வையே அடைகின்றாய், சூழ்வினை-பிறர் செய்கையால் சுற்றுகின்ற தீமைகள், நமைக்கடிது சுற்றின் - நம்மை வந்து தொடருமேயானால், அவை எல்லாம் - அவைகள் எல்லாம், ஊழ்வினை-ஊழ்வினையேயாகும், எனச்சொலி - என்று சொல்லி, உடன்கொடு நடந்தான்-சத்தியகீர்த்தியாகிய மந்திரியைத் தன்னோடு கூடவே கூட்டிக்கொண்டு நடந்தான். எ-று.

சத்தியகீர்த்தி அரசனின் வாழ்வுக்கும் தாழ்வுக்கும் அவனை விட்டு நீங்காமல் இருந்தான் என்று அரிச்சந்திரன் கூறினான், இன்னும் பிறர் நமக்குச்செய்யும் தீமையும் நமது ஊழ்வினையினாலேயே தொடரும் என்பதாம். அற்ற குளத்தில் அறுநீர்ப்பறவைபோலாது அக்குளத்துக் கொட்டியும் ஆம்பலும்போல ஒட்டியிருந்தான் சத்தியகீர்த்தி. (௩௧)

தொடர்ந்தமதிமந்திரிதொடர்ந்துபிறகேக
விடந்திகழ்கடுந்தொழிலின்வெள்ளிமுனடக்க
வடந்திகழ்செழுந்தனமடந்தையொடுமன்ன
னடந்தனனயோத்திவளநன்னகர்கடந்தே.

[தொடர்ந்த அறிவுடைய மந்திரி பின்பற்றி வரவும், விஷம்போன்ற தீய செய்கையை உடைய சுக்கிரன் முன்னாலே நடக்கவும், சந்திரமதியோடும் அரிச்சந்திரன் அயோத்தியை விட்டுக் கடந்தான் என்பதாம்.

இ-ள். தொடர்ந்த மதி மந்திரி - அப்படிப் பின் தொடர்ந்து வந்த அறிவு உடைய மந்திரியாகிய சத்தியகீர்த்தி, தொடர்ந்து பிறகேக - தொடர்ந்து பின்னாலேவர, விடம் திகழ் - விஷத்தைப்போல விளங்குகின்ற, கடும் தொழிலின் வெள்ளி - கடிய செய்கையை உடைய சுக்கிரன், முன் - முன்னாலே, நடக்க-நடக்கவும், மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், வடம் திகழ் - முத்துமாலைகள் விளங்குவதான, செழும் தன மடந்தையொடு - செழுமையான கொங்கைகளையுடைய சந்திரமதியுடனே, அயோத்திவள நல் நகர் - அயோத்தி என்கின்ற

வளப்பம்பொருந்திய நல்ல நகரத்தை, கடந்து - கடந்து, நடந்தனன் - போயி னன். எ-று. ஏ - ஈற்றசை. (௩௨)

நண்பினொடுமின்புரிசைநன்னகரைநோக்கி
விண்புலமெழுந்தமதில்வேலிதனைநோக்கித்
தண்புனல்வழங்கிடுதடங்களையுநோக்கிக்
கண்புனல்சொரிந்தழுதுகாரிகைநடந்தாள்

[பிரியத்தோடு விளங்குகின்ற மதிலையுடைய நல்ல பட்டணத்தைப் பார்த்துக் கொண்டும், ஆகாயம்வரை அளாவிய மதிலைப் பார்த்துக்கொண்டும், குளிர்ந்த நீரையுடைய தடாகங்களைப் பார்த்துக்கொண்டும், கண்ணீர் வடித்துக்கொண்டும் சந்திரமதி நடந்தாள் என்பதாம்.]

இ-ள். நண்பினொடு - பிரியத்துடனே, மின் - விளங்குகின்ற, புரிசை - மதிலையுடைய, நல் நகரை - நல்ல அயோத்தி நகரத்தை, நோக்கி - பார்த்துக் கொண்டும், விண்புலம் - ஆகாயத்து அளவும், எழுந்த - உயர்ந்துள்ள, மதில் - மதிலாகிய, வேலிதனை நோக்கி - வேலியைப் பார்த்துக்கொண்டும், தண்புனல் - குளிர்ந்த நீரை, வழங்கிடு - கொடுக்கின்ற, தடங்களையும் - குளங்களையும், நோக்கி - பார்த்துக்கொண்டே, கண்புனல் சொரிந்து - கண்களில் நீரை வடித்து, அழுது - அழுதுகொண்டே, காரிகை நடந்தாள் - சந்திரவதி நடந்தாள். எ-று.

'காரிகை' - பெண்; ஈங்கு சந்திரமதியைக் குறித்தது. கண்ணீர் சொரிதல் தன் நாயகனுக்குத் துன்பம் வந்த அவலம் பற்றியாம். (௩௩)

பாதகமலங்கள்பதறப்பதறவைத்துக்
காதலிநடந்தநடைகண்டரசர்கோமா
னாதனருளிப்படியிருந்ததெனநக்கா
னாதபனழன்றெழுமருஞ்சுரமடைந்தார்

[பாதமாகிய தாமரைகள் துடிக்கத் துடிக்க எடுத்தடிவைத்துத் தன் மனைவி நடந்த நடைகளைப்பார்த்து ராஜாதி ராஜனான அரிச்சந்திரன் ஈசுவரனுடைய கிருபை இப்படி இருந்தது என்று சிரித்தான், சூரியன் கொதித்து, எழுகின்ற நடத்தற்கு அரிய ஒரு பாலை வனத்துக்குள்ளே போனார்கள் என்பதாம்.]

இ-ள். பாத கமலங்கள் - பாததாமரைகள், பதறப்பதற - துடிக்கத் துடிக்க, வைத்து - அடி எடுத்து வைத்து, காதலி - தன் மனைவி, நடந்த நடை கண்டு - நடந்த நடையைப்பார்த்து, அரசர் கோமான் - ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரன், நாதன் அருள் - சிவபெருமானின் கிருபை, இப்படி இருந்ததென - இந்த விதமாகவோ இருந்தது என்று, நக்கான் - சிரித்தான், ஆதபன் - சூரியன், அழன்று எழும் - கொதித்து எழுகின்ற, அரும் - நடத்தற்கு அருமையான, சுரம் - பாலைவனத்தை, அடைந்தார் - போய்ச்சேர்ந்தார்கள். எ-று.

இடுக்கண் அடுக்கி வரும்பொழுது நகுதல் அறிவுடையார்செயல். (௩௪)

படிசுடவடிக்கணகல்பாரினெழுகாய்நுண்
பொடிசுடவுடற்கணழல்பொங்குவெயின்மீது
முடிசுடமிகத்துடிதுடித்துமுதிர்தீப்பூங்
கொடிசுடமெலிந்துபடுகொள்கையினராஞர்.

[பாதங்களில் பூமி சுடவும், உடம்பில் பூமியிலிருந்து கிளம்புகின்ற நுண்ணிய பொடிகள் சுடவும், மிகுந்த கொதிக்கின்ற வெயில் தலையிலே சுடவும், மிகவும் துடி துடித்து, மிகுந்த நெருப்பில் பூங்கொடியானது நெருப்புச் சுடுதலினுல் வாடுந் தன்மைபோல வாடினுர்கள் என்பதாம்.]

இ-ள். அடிக்கண் - பாதங்களிலே, படிசுட - பூமி சுடவும், அகல்-விசாலமான, பாரின் - பூமியிலிருந்து, எழு - கிளம்புகின்ற, காய் நுண்பொடி - சுடுகின்ற நுண்ணிய பொடிகள், உடல் கண் - உடம்பிலே, சுட - சுடவும், அழல் பொங்கு வெயில் - கொதிக்கின்ற மிகுந்த வெயிலானது, மீது - மேலேயிருந்து, முடிசுட - தலைமேல் சுடவும், மிகத் துடி துடித்து - மிகவும் பதை பதைத்து, முதிர்தீ - மிகுந்த நெருப்பானது, பூங்கொடி சுட - பூங்கொடியைச் சுட, மெலிந்துபடு - வாடிப்போகின்ற, கொள்கையினர் ஆஞர் - கொள்கையை ஒத்தவர்கள் ஆனுர்கள். எ-று.

காய் நுண்பொடி உடலிற் சுடுதல் சூறைக்காற்றினுலென்க, இவர்கள் நடத்தலினுல் கிளம்புகின்ற பொடிகள் என்றும் கூறுவர். (௩௫)

அந்தநெடுவெஞ்சுரமழன்றெழுதல்கண்டே
மைந்தனையெடுத்துமதிமந்திரிநடந்தான்
பைந்தொடிபடும்பரிசுகண்டுயிர்பதைத்தே
வந்தெனதுதோளினிவர்வாயெனவுரைத்தான்.

[அந்தப் பெரிய பாலைவனம் கொதிப்பதைக்கண்டு லோகிதாசனை எடுத்துக் கொண்டு அறிவுள்ள சத்தியகீர்த்தி நடந்தான், சந்திரவதி துடிக்கும் தன்மையைக்கண்டு அரிச்சந்திரன் உயிர் பதைத்து என் தோளில் ஏறிக்கொள் என்ருன் என்பதாம்.]

இ-ள். அந்த நெடு வெம்சுரம் - அந்த நீண்ட கொடிய பாலைவனம், அழன்று எழுதல் கண்டே - கொதித்துக் கிளருதலைப்பார்த்து, மதி மந்திரி - அறிவுள்ள மந்திரியாகிய சத்தியகீர்த்தி, மைந்தனை - புத்திரனுகிய லோகிதாசனை, எடுத்து - தூக்கிக்கொண்டு, நடந்தான் - நடந்து சென்ருன், பைந்தொடி - பசுமையான வளையலை அணிந்த சந்திரமதி, படும் பரிசு கண்டு - துன்பப்படுகின்ற தன்மையை அரிச்சந்திரன் பார்த்து, உயிர் பதைத்தே - உயிர் துடித்தே,

வந்து - வந்து, எனது தோளில் - என்னுடைய தோளின்மேல், இவர்வாய் - ஏறிக்கொள்வாயாக, என உரைத்தான் - என்று அரிச்சந்திரன் கூறினன். எ-று.

'இவர்தல்' - உயர்தல், ஏறுதல், இனி 'தோளின் - இவர்' எனவும் பிரித்துப் பொருள் கொள்வர். (௩௬)

பூமகளுமணமகளுமேறுதல்பொறாமல்
மாமுனிவனுக்குறவளித்தநின்மணித்தோ
ணாமநெடுவேலிறைவநாயினிகழ்பெண்பா
லாமெளியளேறினரகாழ்ந்தழிவனென்றாள்.

[அச்சத்தைத்தரும் நீண்ட வேலாயுதத்தை உடைய அரசே! லட்சுமிதேவியும் பூமாதேவியும் ஏறிக்கொள்ளுதல் தாங்கமாட்டாமல், பெரிய முனிவருக்குப் பொருந்தும்படியாகக் கொடுத்த தேவரீருடைய அழகிய தோளில், நாயைப்போல இகழத்தக்க பெண்பாலாகிய எளியாள் ஏறினல் நரகத்திலே விழுந்து ஆழ்ந்து அழிவேன் என்றாள் என்பதாம் ]

இ-ள். நாம நெடுவேல் இறைவ - சத்துருக்களுக்கு அச்சத்தைத் தருவதாகிய நீண்ட வேலாயுதத்தை உடைய அரசே!, பூமகளும் - செந்தாமரைப் பூவில் இருக்கும் லட்சுமிதேவியும், மண்மகளும் - பூமாதேவியும், ஏறுதல் பொறாமல் - ஏறிக்கொள்ளுவதையே விரும்பாமல், மாமுனிவனுக்கு - பெரிய தவமுனிவராகிய விஸ்வாமித்திர முனிவருக்கு, உற அளித்த - பொருந்தும் படிக்கொடுத்த, நின்மணித்தோள் - தேவரீருடைய அழகிய தோளில், நாயின் இகழ் பெண்பால் - நாயைப்போல இகழத்தக்க பெண்பாலாகிய, எளியள் - அபலையான நான், ஏறின் - ஏறினல், நரகு - நரகத்திலே, ஆழ்ந்து அழிவன் என்றாள் - அமிழ்ந்தி அழிந்து போவேன் என்று சந்திரமதி கூறினள். எ-று.

'பொறாமல்' என்பதற்கு தாங்கமாட்டாமல் என்று பொருள் கூறுவர். அது சிறந்த பொருள் ஆக எனெனின் சூரியகுலத்துப் பிறந்த பராக்கிரமமுள்ள அரிச்சந்திரனுக்கு பூமிபாரம் சுமக்க முடியாமல் போயிற்று என்று கூறல் சிறப்பாகாது. மனத்தே விருப்பங்கொள்ளாது தன் தோண்மேல் இருந்த லட்சுமிதேவியையும் பூமாதேவியையும் விருப்பங்கொண்டிருந்த முனிவருக்கு அளித்தானென்றபோது அரிச்சந்திரன் அசேதனமாகிய இவற்றில் விருப்பற்றிருந்தான் என்றும் தத்துவஞானந் தெளிந்தவன் என்றும் போதரும். லட்சுமியையும் பூமிதேவியையுமே வேண்டாமென்று நீக்கிய தோள்மேல் இழிந்த நான் ஏறின் நரகெய்துவேன் என்பதாம். (௩௭)

என்றுமயில்கூறிடவிரங்கிபெறும்மன்ன
னின்றுதளர்வெய்தவிழிநீருகவுயிர்த்து
மன்றல்சொரிகின்றகுழல்வல்லியனையாய்நிற்
கென்றுமுளதிந்தவறிவென்றழுதுசென்றான்.

[வலிமைபொருந்திய அரசனாகிய அரிச்சந்திரன், இந்தவிதமாகச் சந்திரமதி
சொல்ல, துக்கித்து நின்று தளர்ந்து கண்ணீர் சிந்திப் பெருமூச்சுவிட்
டுப் பரிமளம் வீசுகின்ற கூந்தலையுடைய வல்லிக்கொடிபோன்ற
பெண்ணே! உனக்கு எப்பொழுதும் இந்தப் பேறிவு
இருக்கின்றது என்று சொல்லி அழுதுகொண்டே
போனான் என்பதாம்.]

இ-ள். ஏறும் மன்னன் - மிகுந்த வலிமையை உடைய அரிச்சந்திரமகா ராஜன், என்று மயில் கூறிட-இந்தவிதமாகச் சந்திரமதி சொல்லவே, இரங்கி-துக்கித்து, நின்று - பிரமித்து நின்று, தளர்வெய்த - மனத்தளர்ச்சி யுண்டாக, விழிநீர் உக - கண்களிலிருந்து நீர்சோர - உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, மன்றல் - வாசனை, சொரிகின்ற - வீசுகின்ற, குழல் - கூந்தலையுடைய, வல்லி அனையாய் - வல்லிக்கொடிபோன்றவளே, நிற்கு - உனக்கு, என்றும் - எப்பொழுதும், இந்த அறிவு - இந்தப்பேறிவு, உளது - இருக்கின்றது, என்று-என்று சொல்லி, அழுதுசென்றான் - அழுதுகொண்டு போனான். எ-று.

"மன்றல் சொரிகின்ற குழல்" பரிமளம் சிந்துகின்ற கூந்தல் என்றலும் ஆம், 'சிந்துதல்' ஈண்டு கூந்தலில் இருந்து பரிமளம் எப்பொழுதும், வெளிப் படுதலாம். விழிநீர் சொரிதல் முதலியன சந்திரவதியின் மாட்டுள்ள அன்பின் பெருக்கால், "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்" என்குறள் ஈண்டு கருதற்பாலது. 'ஏறும்' - வலிமை; "என்றும் உளது இந்த அறிவு" இதில் என்றும் என்றது வாழ்விலும் தாழ்விலும் என்ற இரண்டு காலத்தும் என்பதாம். (௩-அ)

சுட்டடிகறுத்திடறுளக்கமுறநீணா
விட்டெரிகொழுந்தழலினெய்சொரிவிதம்போற்
கட்டுறவிதேள்பணிகருங்குளவிபூர
மட்டறவழைத்துமுனிவிட்டனன்வழிக்கே.

[கால்கள் சுட்டுக் கறுத்துப்போகவும், நடுக்கமுண்டாக நீண்ட நாக்குகளை
விட்டு எரிகின்ற கொழுமையான தழலில் நெய்சொரிந்த தன்மை
போல் கட்டெறும்பு, தேள், பாம்பு, கறுங்குளவி, பூரான் ஆகிய
இவைகளை, அளவில்லாதபடி வரவழைத்து அந்த வழி
யிலே தோன்ற விஸ்வாமித்திரர் அனுப்பினார்
என்பதாம்.]

இ-ள். சுட்டு அடி கறுத்திட - வெயில் சுடுதலினாலே கால்கள் கறுத்துப் போகவும், துளக்கமுற - அதற்குமேல் நடுக்கமுண்டாகும்படி, நீள் நாவிட்டு எரி கொழும் தழலில் - நீண்ட நாக்குகளைவிட்டு எரிகின்ற கொழுமையான நெருப்பில், நெய் சொரிவிதம்போல் - நெய்யைச்சொரிந்த தன்மைபோல், கட்டுறவி - கட்டெறும்பு, தேள் - தேள், பணி - பாம்பு, கரும் குளவி - கறுமையாகிய குளவி, பூரம் - பூரான், (ஆகிய இவைகளை) மட்டற அழைத்து - அள

வில்லாமல் வரவழைத்து, வழிக்கே - வழியிலேயே, முனி - விஸ்வாமித்திர முனிவர், விட்டனன் - அனுப்பினர். எ-று.

"சுட்டடி கறுத்திட" என்பதற்கு 'அடிகள் சுட்டு தேகமுழுமையும் கறுத்துப்போக" என்றும் பொருள் கூறலமையும். (௩௯)

பட்டமரமேடுசுழிபாறைவழியெல்லா
மட்டையொடுமுட்டைமிசையாடரவமொய்ப்பக்
கட்டரவுதேளரணைகண்டவிடமெங்கு
மட்டறநெருங்கியடிவைக்கவிடமில்லை

[பட்டுப்போன மரங்கள், மேடுகள், வட்டமாகிய பாறையின் வழிகள், ஆகிய இந்த இடங்களில் எல்லாம் அட்டையோடு முட்டைமேல் ஆடிக்கொண்டு அடைகாத்து இருக்கிற பாம்புகள், மொய்த்துக்கொள்ளவும், கட்டுவிரியன், தேள், அரணை ஆகிய இவைகள் பார்த்த இடங்கள் எல்லாம் அளவில்லாமல் நெருங்குதலாய் அடி வைக்கவும் இடமில்லாதிருந்தது என்பதாம்.]

இ-ள். பட்டமரம் - பட்டுப்போன மரங்களிலும், மேடு - மேடுகளிலும், சுழி - வட்டமாகிய, பாறை - பாறைகளிலேயும், வழி எல்லாம் - இன்னும் மற்றுமுள்ள வழிகளிலேயும், அட்டையொடு - அட்டைகளோடு, முட்டை மிசை - முட்டைகளின்மேலே, ஆடு - ஆடுகின்ற, அரவம் - பாம்புகளும், மொய்ப்ப - மொய்த்துக்கொள்ள, கட்டரவு-கட்டுவிரியன் பாம்புகளும், தேள்-தேள்களும், அரணையும் - அரணைகளும், (ஆகிய இவைகள் எல்லாம்) கண்ட இடம் எங்கும் - கண்ட இடமெல்லாம், மட்டற - அளவில்லாமல், நெருங்கி-நெருங்குதலாய், அடிவைக்க - அடிவைக்கவும், இடமில்லை - இடமில்லா திருந்தது. எ-று.

"மேடுசுழி பாறைவழி" என்பதற்கு மேடுகள் சூழ்ந்துள்ள பாறைவழி, என்றும் பொருள் கூறுவர். (௪0)

நடந்தவடியுட்புறநலிந்திடுமெறும்ப
ரடர்ந்தபலபூரமுடனட்டைகள்கடிக்குந்
தொடர்ந்துபலவாளரவுசுற்றியடிதீண்டுங்
கடந்தகலினும்பலகருங்குளவிகொட்டும்.

[இவர்கள் நடக்கிற காலின் உட்புறத்தே எறும்புகள் கடிக்கும், நெருங்கிய பல பூரான்களுடன் அட்டைகள் கடிக்கும், தொடர்ந்து வந்து நீண்ட பாம்புகள் கடிக்கும், அதைத்தாண்டி அப்புறம் போனாலும் பல கருங்குளவிகள் கொட்டும் என்பதாம்.]

இ-ள். நடந்த அடி - இவர்கள் நடக்கிற கால்களின், உள்புறம் - உள்பக்கத்திலே, நலிந்திடும் எறும்பர் - எறும்புகள் கடிக்கும், அடர்ந்த - நெருங்கிய, பல பூரமுடன் - பலவகைப் பூரான்களுடன், அட்டைகள் - அட்டைகளும்,

கடிக்கும் - கடிக்கும், தொடர்ந்து - கூடப்பற்றி வந்து, பல வாளரவு - பல கொடிய பாம்புகள், சுற்றி அடி திண்டும் - கால்களைச் சுற்றிக்கடிக்கும், கடந்து அகலினும் - அதைக்கடந்து அப்பால் போனாலும், பல கருங்குளவி - பல கருங் குளவிகள், கொட்டும் - வந்து கொட்டும். எ-று.

'எறும்பர்' என்பது எறும்பு என்பதின்போலி, வாளரவு - நீண்ட பாம்பு கள் என்றும் பொருளாம். (சக)

அறப்பழுதுபட்டுளமழுந்துவதிலாவி
யிறப்பதினிதென்றுமனமெண்ணினுயிர்போகா
வறப்பதினுலந்தொருமருந்துமிலையாகங்
கறுத்தழகுகெட்டுடறுடித்தனகறுத்தே.

[மிகக் காயங்கள் உண்டாகி மனம் வருந்துவதிலும் உயிர்போவது நல்லது என்று, எண்ணினால் உயிர்போகாது கொதிக்கும் அவ்விடங்களிலே அங்கே ஒரு மருந்தும் இல்லை, தேகம் கறுத்து அழகுகெட்டு, உடம்பு துடித்தது மேலும் மேலும் கறுத்தது என்பதாம்.]

இ-ள். அறப்பழுது பட்டு - மிகவும் காயங்கள் உண்டாகி, உளம் அழுந்து வதில் - மனம் வேதனைப்படுவதிலும், ஆவி இறப்பது-உயிர்போவது, இனிது என்று - நல்லது என்று, மனம் எண்ணின் - மனத்தில் நினைத்தால், உயிர் போகா - உயிர்போவது இல்லை, வறப்பதின் உலந்து ஒரு மருந்தும் இலை- அந்த இடத்தில் கொதிபடுவதைத் தவிர்த்து ஒரு மருந்தும் இல்லை, கறுத்து- அதனாலே உடம்பு கறுத்து, அழகுகெட்டு - அழகும் கெட்டு, உடல் துடித்தன கறுத்தே - பின்னும் உடல் கறுப்பாகித் துடி துடித்தது. எ-று. (சஉ)

மைநடுவிளங்குவிழிமங்கையெதிர்சிறிப்
பைநடுநடுங்கவருபல்லரவுகண்டே
மெய்நடுநடுங்கிடவரம்பையர்வெரீஇத்தங்
கைநடுநடுங்கவிருகண்மலர்புதைத்தார்.

[சந்திரவதிக்கு முன்னே சிறிக்கொண்டு படத்தை ஆட்டிக்கொண்டு வரும் நச்சுப் பல்லையுடைய பாம்பைக்கண்டு உடம்பு மிகவும் நடுங்கும்போது தேவலோகத்து தேவமாதர்கள் கண்டு பயந்து தம் கைகள் மிகவும் நடுங்க இரண்டு கண்ணையும் மூடிக்கொண்டார்கள் என்பதாம்.]

இ-ள். மை - கறுநிறமானது, நடு - நடுவிலே, விளங்கும்-விளங்குகின்ற, விழிமங்கை - விழியை உடைய சந்திரவதிக்கு, எதிர் - எதிரிலே, சிறி - சிறிக் கொண்டு, பைநடு நடுங்க - படங்கள் துடிதுடிக்க, வரு - வருகின்ற, பல் அரவு கண்டே - விஷப்பல்லையுடைய பாம்புகளைக்கண்டு, மெய் நடு நடுங்கிட-உடம்பு நடு நடுங்க, (அதைக்கண்டு) அரம்பையர் - தேவலோகத்திலுள்ள தெய்வப் பெண்கள், வெரீஇ - பயந்து, தம் கை நடு நடுங்க - தமது கைகள் நடு நடுங்க, இருகண் மலர் - தமது இரண்டு கண்களாகிய மலரை, புதைத்தார் - மூடினார்

கள். எ-று. படங்கள் துடிதுடிக்க வருகின்ற பல சர்ப்பங்களை என்றும் பொருள் கூறுவர்.

"மெய் நடு நடுங்கிட வரம்பையர்" என்பதை ஒரு தொடராக எடுத்து, சந்திரமதிக்கு முன்னே விஷப்பல்லையுடைய பாம்புகள் வருதலைக்கண்டு இந்த உத்தமிக்கும் இப்படிப்பட்ட துன்பங்கள் வாலாமோ என்று அரம்பையர் தேகமெல்லாம் நடுங்க அஞ்சி கைகள் நடுங்க இருகரங்களாலும் இருகண் மலர்களை மூடினர்கள் என்னும் பொருள் கூறலாம். (சங)

நீருமிலைநெட்டிலையினீழலிலைநீள்பேய்த்
தேரதனைநீரெனநடந்தடிசிவந்தார்
வேரினொடுவெந்தமரநீழலைவிரும்பிச்
சேரினுமடர்ந்தரவுசீறியெழுமன்றே.

[அந்தப் பாலைவனத்தில் தண்ணீருமில்லை, நீண்ட இலைகளையுடைய மரங்களின் நிழலும் இல்லை, பேய்த்தேரை நீரென்று நினைந்து நடந்து பாதங்கள் செவந்தார்கள். வேரோடு வெந்த கிடக்கின்ற மரத்து நிழலை வேண்டிப்போனாலும் அங்கே நெருங்கிப் பாம்புகள் சீறிக் கடிக்க வருகின்றன என்பதாம்]

இ-ள். நீரும் இலை - (அவர்கள் செல்லுகிற அந்தப் பாலைவனத்தில்) உண்பதற்கு நீரும் இல்லை, நெட்டிலையின் நீழல் இலை - நீண்ட இலைகளை உடைய மரங்களின் நிழலும் இல்லை, நீள்பேய்த்தேரதனை - நீண்ட பேய்த்தேராகிய கானலை, நீரென நடந்து - தண்ணீர் என்று நினைத்து நடந்து, அடி சிவந்தார் - கால்கள் செவந்தார்கள், வேரினொடு - வேரோடு, வெந்த மர நீழலை - வெந்திருக்கின்ற மரத்தின் நிழலை, விரும்பி - விரும்பி, சேரினும் - சேர்ந்தாலும், அடர்ந்து அரவு - அங்கே நெருங்கிப் பாம்புகள், சீறி - சீறிக்கொண்டு, எழும் அன்றே - கடிக்க வரும். எ-று. 'அன்று' ஏ - அசைகள். (சச)

காவலனவப்பரிசுகண்டுகையறைந்தே
யாவரெழுபாரினிதுபட்டவர்களென்று
மூவரையுநேரிலனமமுனிவனையுநோகான்
றேவரையுநோகிலன்முற்றீவினைபைநொந்தான்

[அரிச்சந்திரமகாராஜன் அந்தத் தன்மைகளைக்கண்டு, கையைத்தட்டி, இந்த எழுலோகத்திலும் எவர்கள் இந்தவிதமான துன்பப்பட்டவர்கள் என்று மும்மூர்த்திகளையும் குறித்து விசனப்பட்டிலன். அந்த விஸ்வாமித்திர முனிவரையும் நொந்து கொள்ளவில்லை தேவர்களையும் நொந்து கொள்ளவில்லை, முன்னே தான் செய்துள்ள தீவினைப்பயன் இது என்று அத்தீவினையை நொந்தான் என்பதாம்.]

இ-ள். காவலன் - நாட்டைக்காத்தலில் வல்ல அரசனாகிய அரிச்சந்திர மகாராஜன், அப்பரிசு கண்டு - அந்தத் தன்மையைப்பார்த்து, கை அறைந்தே-

கையைத்தட்டி, எழுபாரின் - எழு லோகத்திலுள்ளவர்களில், யாவர் - எவர் கள், இது பட்டவர்கள் - இந்தவிதமான துன்பம் அடைந்தவர்கள், என்னு- என்று, (நினைந்து) மூவரையும் நோகிலன் - திரிமூர்த்திகளையும் நொந்து கொள்ளவில்லை, அம்முனிவனையும் நோகான் - அந்த விஸ்வாமித்திரரையும் நொந்து கொள்ளவில்லை, தேவரையும் நோகிலன் - மற்றத்தேவர்களையும் நொந்து கொள்ளவில்லை, முற்றீவினையை நொந்தான் - முன்னே தான் செய்துள்ள தீவினையைக் குறித்துத் தன்னைத்தானே நொந்துகொண்டான். எ-று. எழு உலகங்களாவன:—அதலம், விதலம், சுதலம், தலாதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் என்பனவாம்.

இவைகள் கீழ் எழு உலகம் என்று கூறப்படும், இனிமேலேழுலகங்கள் என எழு உலகங்கள் உண்டு அவையாவன:—பூலோகம், சுவர்லோகம், சன லோகம், மகலோகம், தவலோகம், சத்தியலோகம் என்பனவாம். இனி உலகம் பதினாலாக எழு லோகத்தை மட்டும் கூறியது என்னை எனின் மேலேழுலகத் தவற்குத் துன்பமில்லைபோலும்; இனி அதுவும் பொருந்தாது எனெனிற் கூறுதும் புராணங்களில் அரிபிரமாதிகளும் ஒரோர்காலத்துத் துன்புற்றார்கள் என்று கேட்கின்றோமாதலின் என்க. இனி 'எழுபாரின்' என்பதற்கு உயிர் கள் தேற்றுதற்கு உரியதான இந்த உலகில், என்று பொருள் கொடவே சிறந்த தாகும். ஊழ் மிக வலியுடையது ஆதலின் 'முற்றீவினையை நொந்தான் என் றார்' இதனை 'ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று, சூழினுந் தாமுந்துறும்,' என்ற திருக்குறளாலும் உணரலாம். (சஈ)

சுடுந்தழலில்வெந்தெழிறொலைந்தரசர்கோமான்
கொடுஞ்சுரமகன்றுகுளிர்கோமதிபுகுந்தா
னடுங்கிடவிலங்கினநலிந்திடுமெனச்செங்
கடுங்கதிர்பயந்தலைகருங்கடல்புகுந்தான்.

[சுடுகிற நெருப்பிலே வெந்து தன் அழகெலாம் குலைந்து, அரிச்சந்திரன் அந்தக் கொடிதான பாலை வனத்தைவிட்டு நீங்கி, குளிர்ந்த கோமதி யாற்றின் அருகே புகுந்தான். மிருகங்கள் நடுங்கும்படித் துன்பம் உண்டாக்கி விடுமென்று செவந்த கடுஞ் சூரியன் பயந்து மறைகிறதுபோல் அலைகளை உடைய ருேங்கடலில் போய் மறைந் தான் என்பதாம்.]

இ-ள். சுடுந்தழலில் வெந்து - அப்படிச் சுடுகிற நெருப்பிலே வெந்து, எழில் தொலைந்து - தன் அழகு எல்லாம் கெட்டு, அரசர் கோமான் - ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரன், கொடும் சுரம் அகன்று - கொடிதான அந்தப் பாலை வனத்தைக்கடந்து, குளிர்கோமதி - குளிர்ந்த கோமதி ஆற்றை, புகுந்தான்- அடைந்தான், நடுங்கிட - நடுங்கும்படி, விலங்கினம் - மிருகக்கூட்டங்கள், நலிந்திடும் என - துன்பப்படுத்திடும் என்று, செம் - செவந்த, கடும் கதிர் - கடு

மையான கிரணங்களை உடைய சூரியன், பயந்து - பயந்து, அலை கருங்கடல்- அலையை உடைய கரிய கடலில், புகுந்தான் - போய் முழுகினான். எ-று.

இயல்பாய் சூரியன் அஸ்தமிப்பதை முல்லை நிலத்து மிருகங்கள் துன்பப் படுத்தும் என்று அஞ்சிக் கடலிற் புக்கதாகக் கூறியது தற்குறிப்பு ஏற்ற அணி.

மைதிகழ்குரும்பொறைவனத்திலிழிமால்யா
றெய்தியதன்வண்டுறையிழிந்துபுனலுண்டு
கைதவநினைத்துமிளிர்கண்கலுழிசிந்தப்
பெய்தவணல்வண்டலிடைபேதையொடிருந்தான்.

[மேகங்கள் தவழுவதான மலைச்சாரிலுள்ள முல்லை நிலத்திலே மலையி லிருந்து இறங்கி வருகிற அந்தப்பெரிய ஆற்றைக்கண்டு, நீரைக் குடித்து, விஸ்வாமித்திரரின் வஞ்சகத்தை நினைத்து, கண் களில் நீர் சிந்த அங்கே வண்டலிலே சந்திரமதியோடு அரிச்சந்திரன் இருந்தான் என்பதாம்.]

இ-ள். மைதிகழ் - மேகங்கள் விளங்குகின்ற, குரும்பொறை வனத்தி லிழி - அழகிய மலையிலிருந்து முல்லை நிலத்திலே இறங்கி வருகின்ற, மால்- பெரிய, யாறு எய்தி - ஆற்றைக்கிட்டி, அதன் - அதனுடைய, வண்டுறை யிழிந்து - வளப்பம்பொருந்திய துறையிலே இறங்கி, புனல் உண்டு - நீரை யுண்டு, கைதவ நினைத்து - விஸ்வாமித்திரமுனிவருடைய வஞ்சனையை நினை த்து, மிளிர் - விளங்குகின்ற, கண் - கண்களில், கலுழி சிந்த - நீர் ஒழுக, பெய்து - தங்கி, அவண் - அவ்விடத்திலே, நல் வண்டலிடை - நல்ல வண்ட லிலே, பேதையொடிருந்தான் - சந்திரமதியோடு அரிச்சந்திரன் இருந்தான். எ-று.

'குரும்பொறை' - அழகிய மலை; கலுழி - கண்ணீர், 'கண்கலுழி சிந்தப் பெய்து' என்றும் கூட்டுவர். 'பெய்த' - கோமதியாறனது பெய்துள்ள, என் றும் பொருளாம். (சஎ)

அந்தவமையத்தடவியும்பொழிலுநண்ணி
வந்தடிவருந்தியவருத்தமுணராமற்
கந்தமொடுகாய்கனிகவர்ந்தருகுவந்தே
மந்திரியுமன்னவன்முன்வைத்தடிபணிந்தான்.

[அந்தச் சமையத்தில் மந்திரி பாலைவனத்தில் தான் கஷ்டப்பட்டு நடந்து வந்த வருத்தத்தை கவனியாமல் காடுகளிலும் சோலைகளிடம் போய் கிழங்குகளுடனே காய்களையும் பழங்களையும் கொண்டு வந்து அரசனுக்கு முன் வைத்துப் பாதங்களை வணங்கினான் என்பதாம்.]

இ-ள். அந்த அமையத்து - அந்த வேளையிலே, மந்திரியும் - சத்தியகீர்த் தியும், வந்து - பாலைவனத்தின் வழியாய் நடந்து வந்து, அடிவருந்திய - கால்

கள் வருந்துகின்ற, வருத்தம் உணராமல் - வருத்தத்தை நினையாமல், கந்தமொடு - கிழங்குகளுடனே, காய் - காய்களையும், கனி - பழங்களையும், கவர்ந்து- பறித்து, அருகுவந்தே - சமீபத்தில் வந்து, மன்னவன் முன் வைத்து - அரசனுக்கு முன்னாலே வைத்து, அடிபணிந்தான் - பாதங்களை வணங்கினான். எ-று. (சஅ)

அக்கணமெடுத்திறைவனக்கனியுளெல்லா
மிக்கனதெரிந்துமறைவிப்பிரன்முன்வைத்தே
தக்கனவுரைத்தெனதுசஞ்சலமுணர்ந்தே
யிக்கனியெடுத்தினிதருந்தெனவிசைத்தான்.

[அரசன் அந்த க்ஷணத்திலே அவைகளை எடுத்து அவைகளில் எல்லாம் மிகுந்த ருசியுள்ள பழங்களைத்தெரிந்து வேதங்களை யுணர்ந்த சுக்கிரனாகிய பிராமணனுக்கு முன் வைத்து, தக்க உபசாரங்களைச் சொல்லி, என் சஞ்சலங்களை அறிந்து, இந்தக் கனிகளை எடுத்து சந்தோஷமாகச் சாப்பிடு என்று சொன்னான் என்பதாம்.]

இ-ள். இறைவன் - அரசனாகிய அரிச்சந்திரன், அக்கணம் எடுத்து - அக்கணத்திலேயே அவைகளை எடுத்து, அக்கனியுள் எல்லாம் - அந்தப் பழங்களில் எல்லாம், மிக்கனதெரிந்து - மிகுந்த ருசியுள்ளவைகளைத் தெரிந்து, மறைவிப்பிரன்முன் - வேதங்களையுணர்ந்த பிராமணனாகிய சுக்கிரன் முன்னாலே, வைத்தே - வைத்து, தக்கன உரைத்து - தகுந்த உபசாரங்களைச்சொல்லி, எனது சஞ்சலம் உணர்ந்தே - என்னுடைய சஞ்சலங்களை எல்லாம் தெரிந்துகொண்டே, இக்கனி எடுத்து - இந்தப் பழங்களை எடுத்து, இனிது - சந்தோஷத்தோடு, அருந்தென - சாப்பிட்டருள்க என்று, இசைத்தான் - சொல்லினான். எ-று.

தன் சஞ்சலமுணரச் சொல்லியது குறை கூறுதிருத்தற் பொருட்டு. ()

பரிந்துறவிரந்திறைபகர்ந்தமொழிகேளா
விரிந்தநெடுவாயினிதழ்வெண்பலினதுக்கி
யெரிந்திடுசினத்தழலிரண்டுகணினாலுஞ்
சொரிந்துளம்வெகுண்டுசுடுசொற்கள்சிலசொன்னான்.

[மிகவும் பரிந்து அரிச்சந்திரன் இரந்துகேட்ட மொழிகளைக்கேட்டு, அகன்ற வாயிலுள்ள உதடுகளை வெள்ளைப் பற்களினாலே கடித்து எரிகின்ற கோபாக்கினி இரண்டு கண்களினாலும் சிந்தி மனத்திற் கோபம் கொண்டு கடுஞ்சொற்கள் சிலவற்றை சுக்கிரன் சொல்லினான் என்பதாம்.]

இ-ள். பரிந்து - பரிவுகொண்டு, உற இரந்து இறை - அரிச்சந்திரமகாராஜன் மிகவும் இரந்து, பகர்ந்த - கேட்டுக்கொண்ட, மொழிகேளா - வார்த்தை

களைக்கேட்டு, விரிந்த நெடுவாயின் - அகன்ற பெரிய வாயில் உள்ள, இதழ்- உதடுகளை, வெண்பலின் அதுக்கி - வெள்ளைப் பற்களினால் கடித்து, எரிந்திடு சினத்தழல் - எரிகின்ற கோபாக்கினி, இரண்டு கணினாலும் - இரண்டு கண்களினாலும், சொரிந்து - சிந்தச்செய்து, உளம் வெகுண்டு - மனத்திலே கோபம் கொண்டு, சுடுசொற்கள் - கடுஞ்சொற்கள், சில சொன்னான் - அந்தச் சுக்கிரன் சில சொல்லினான். எ-று. (௫௰)

கோச்சகக்கலிப்பா.

நீயுமுனியுநிகழ்த்துநெறிமுன் னுணர்ந்து
தோயுந்தயிர்நெய்பால்சோற்றோடருந்தாமற்
காயுங்கிழங்குங்கனியுமிலையுந்தின்று
வாயும்வயிறும்வளர்க்கிலேன்மன்னவனே.

[அரசனே நீயும் முனிவரும் நடத்தும் ஒழுங்குகளை முன்னாலேயே
தெரிந்து தோய்ந்த தயிர், நெய், பால் ஆகிய இவைகளோடு
சோற்றைச் சாப்பிடாமல், காயும், கிழங்கும், கனியும்
இலையும் தின்று, வாயும் வயிறும் வளர்க்கவில்லை
யே இப்பொழுது இதை எப்படிச் சாப்பிட்
டுப் பசியாறுவேன் என்று சுக்கிரன்
சொல்லினான் என்பதாம்.]

இ-ள். மன்னவனே - ஓ அரசனே! நீயும் - நீயும், முனியும் - விஸ்வாமித்திரமுனிவரும், நிகழ்த்துநெறி - நடத்தப்போகின்ற ஒழுங்குகளை, முன் உணர்ந்து - முன்னாலே தெரிந்து, தோயும் தயிர் - தோய்ந்த தயிரும், நெய் - நெய்யும், பால் - பாலும், (ஆகிய இவைகளை) சோற்றோடருந்தாமல் - நல்ல சோற்றுடனே கூட்டிச் சாப்பிடாமல், காயும் - காய்களும், கிழங்கும் - கிழங்குகளும், கனியும் - பழங்களும், இலையும் - இலைகளையும், தின்று - சாப்பிட்டு, வாயும் - வாயையும், வயிறும் - வயிற்றையும், வளர்க்கிலேன் - வளர்த்துக் கொண்டிராது போனேன். எ-று.

இப்படி நீயும் முனிவரும் பேசிக்கொள்வீர்கள் நான் உன்னோடு காட்டிற்கு வருவேன் என்பது தெரிந்திருந்தால் காட்டில் காய், கனி, கிழங்கு முதலியவற்றை தின்று வயறு வளர்க்க வேண்டிவரும் என்று முன்னமேயே காய் கனி கிழங்கு இலை முதலியவைகளைத் தின்று வயிறும் வாயும் வளர்த்துப் பழக்கப்படுத்தி யிருப்பேன் என்று சுக்கிரன் சொல்லினான் என்பதாம். (௫௧)

என்றுபுகரியம்பவேங்கிக்குலைகுலைந்து
நின்றுமொழிகுழறிநெஞ்சடைத்துவாயுலர்ந்து
சென்றுபணிந்துதிருக்கரத்தாற்றாள்பூண்டு
குன்றுஞ்சிலைபுக்கரைந்துருகக்கூறலுற்றான்.

[என்று இந்தவிதமாகச் சுக்கிரன் சொல்ல, அரிச்சந்திரன் ஏக்கம்கொண்டு
நடு நடுங்குதலாகி நின்று வார்த்தைகள் குழறி மார்பு அடைப்புண்டு
வாய் காய்ந்துபோய்ச் சுக்கிரனைப் பணிந்து இரண்டு கைகளா
லும் அவன் கால்களைப் பிடித்துக்கொண்டு மலைகளும்
கல்லும் கரைந்து உருகும்படிச் சொல்லத்
தொடங்கினன் என்பதாம்.]

இ-ள். என்று புகர் இயம்ப - என்று சுக்கிரன் சொல்ல, வேந்தி - அரசன் ஏக்கம்கொண்டு, குலை குலைந்து - நடு நடுங்கி, நின்று - நின்று, மொழி குதறி- வார்த்தைகள் குழறி, நெஞ்சு அடைத்து - மார்படைப்புண்டாகி, வாய் உலர்ந்து - வாயும் காய்ந்து, சென்று - கிட்டப்போய், பணிந்து - வணங்கி, இரு காத்தால் - இரண்டு கைகளினாலும், தாள்பூண்டு - அவன் பாதங்களைப் பிடித்துக்கொண்டு, குன்றும் - மலைகளும், சிலையும் - கல்களும், கரைந்து உருக- கரைந்து உருகும்படி, கூறல் உற்றான் - சொல்லத் தொடங்கினன். எ-று. மனது இரங்கும் மொழிகளைக் கூறுகின்றான் அரிச்சந்திரன் என்பதாம். (௯௨)

நாடுநகருமுனைக்களித்துநானறியாக்
காடுதிசைநோக்கிவந்தமைநீகண்டிலையோ
வாடுந்தமியேன்வருந்திப்போய்ப்பாலடிசிற்
றேடும்பரிசுளதோசெப்பாய்தாவென்றான்.

[நாட்டையும் நகரத்தையும் விஸ்வாமித்திர முனிவருக்குக் கொடுத்துவிட்டு,
முன் நான் அறியாத காட்டுத்திசைநோக்கி வந்திருக்கின்றதை நீபார்க்க
வில்லையோ, வாடி யிருக்கின்ற நான் வருத்தத்தோடு போயா
னாலும் பாலும் சோறும் தேடிக்கொண்டு வரும் தன்மை
உண்டாயிருக்கிறதோ சொல்லும் நான் தருதற்கு
என்று அரிச்சந்திரன் சொல்லினன்
என்பதாம்.]

இ-ள். நாடும் - எனது நாட்டையும், நகரும் - என்னுடைய நகரத்தையும், முனிக்கு அளித்து - விஸ்வாமித்திர முனிவருக்குக்கொடுத்து, நான் அறியா - நான் இதற்குமுன் அறியாத, காடுதிசை - காட்டுத்திசையை, நோக்கி வந்தமை - குறித்து வந்திருக்கும் தன்மையை, நீ கண்டிலையோ - நீர் பார்த்திலிரோ, வாடும் தமியேன்-இந்தவிதமாகக் கஷ்டத்தினால் வாடியிருக்கும் தனியனான நான், வருந்திப்போய் - வருத்தம் கொண்டுபோய், பாலடிசில் - பாலும் சோறும், தேடும் - தேடும்படியான, பரிசு - தன்மை, உளதோ - இங்கு இருக்கின்றதோ, செப்பாய் தா என்றான் - சொல்லும் நான் கொண்டுவந்து தருதற்கு என்று அரிச்சந்திரன் கூறினன். எ-று. (௯௩)

கன்னெஞ்சராயகௌசிகனார்நெஞ்சம்போல்
வன்னெஞ்சாவுன்னெஞ்சயென்னமயினுரைத்தாள்

தன்னெஞ்சுருகியொருசற்றேதயையாகித்
தின்னுங்கனியருந்தித்தெண்ணீருந்தான்குடித்தான்.

[கல்நெஞ்சுடையவரான விஸ்வாமித்திரர் நெஞ்சைப்போல உன்னுடைய மனதும் வலிய நெஞ்சுதானோ என்று, மயில்போலும் சாயலை உடைய சந்திரவதி கூறினாள். சுக்கிரனும் தனது மனம் உருகி ஒரு வகையாகக் கொஞ்சம் தயவு உண்டாகி தின்னக்கூடிய பழங்களைத் தின்று, தெளிந்த நீரையும் குடித்தான் என்பதாம்.]

இ-ள். கல்நெஞ்சர் ஆய - கல் மனதை உடையவர் ஆகிய, கௌசிகனார் நெஞ்சம்போல் - விசுவாமித்திரருடைய மனதைப்போல், வல் நெஞ்சோ உன் நெஞ்சம் - உன்னுடைய மனதும் (இரங்காத) வலிய நெஞ்சுதானோ, என்ன-என்று, மயில் உரைத்தாள் - மயில்போலும் சாயலை உடைய சந்திரவதி கூறினாள், (அப்பொழுது) தன் நெஞ்சு உருகி - சுக்கிரன் தனது மனம் உருகி, ஒரு சற்றே தயையாகி - ஒருவகையாகக் கொஞ்சம் தயவு உண்டாகி, தின்னும்-தான் தின்னக்கூடிய, கனி அருந்தி - பழங்களைத்தின்று, தெள்நீரும் தான் குடித்தான் - தெளிந்த நீரையும் அந்தச் சுக்கிரன் குடித்தான். எ-று. (௫௪)

தாமந்திகழ்புயனுந்தையலாளும்மகனு
மாமந்திரியுமலர்க்காத்தாலேவாங்கித்
தேமென்கனியருந்திச்செவ்வாய்வெளுப்பேறத்
தாமும்புனலருந்தித்தாரணிமேற்கண்வளர்ந்தார்.

[அரிச்சந்திரனும் சந்திரவதியும், லோகிதாசனும், மந்திரியும் தன் கைகளால் பழங்களை எடுத்துத்தின்று செவந்த வாய்கள் வெளுப்பாகத் தாங்களும் தண்ணீரைக்குடித்து, மண்ணின்மேல் படுத்து நித்திரை செய்தார்கள் என்பதாம்.]

இ-ள். தாமம் - பூமாலைகள், திகழ் - விளங்குகின்ற, புயனும் - புஜங்களை உடைய அரிச்சந்திரமகாராஜனும், தையலாளும் - சந்திரவதியும், மகனும்-புத்திரனாகிய லோகிதாசனும், மா மந்திரியும் - பெரிய மந்திரியும், மலர்க்காத்தாலே வாங்கி - செந்தாமரை மலர்போன்ற கைகளினாலே எடுத்து, தேம் - இனிமையாகிய, மென்கனி - மெதுவாகிய பழங்களை, அருந்தி - சாப்பிட்டு, செவ்வாய்-செவந்த வாயானது, வெளுப்பு ஏற - வெளுப்பாக, தாமும்புனல் - தாங்களும் நீரை, அருந்தி - உண்டு, தாரணிமேல் - பூமிமேல், கண்வளர்ந்தார் - படுத்து நித்திரை செய்தார்கள். எ-று. (௫௫)

வேந்தன்மகனைவிழிமஞ்சனமாட்டக்
காந்தண்மலர்க்கைவழியேகாரிகைகண்ணீரோடச்
சாய்ந்தவிடம்பார்த்துத்தடித்துமிடித்துமழைகாள்
சேர்ந்தவழிப்பெய்யனீர்சென்மினென்றான்மாமுனிவன்.

[அப்போது அரசன் மகனைப்பார்த்துத் தன் கண்ணீராலே திருமஞ்சன
மாட்டவும், காந்தள் மலர்போன்ற கைவழியே சந்திரவதிக்குக் கண்
ணீர் ஒழுகவும், அவர்கள் படுத்துத் தூங்குகிற சமயம்பார்த்து
மேகங்களை நோக்கி விஸ்வாமித்திரர் மின்னியும் இடித்
தும் அவ்விடத்திலேயே மழையைப் பெய்வதற்கு
நீங்கள் செல்லுங்கள் என்று அனுப்பினர்
என்பதாம்.]

இ-ள். வேந்தன் - அரிச்சந்திரன், மகனை - மகனைப்பார்த்து, விழிமஞ்சனமாட்ட - (நமது மகனும் இந்தக் கஷ்டப்படும்படி நேர்ந்ததே என்று துக்கத்தால் வழிகின்ற) தன் கண்ணீரால் திருமஞ்சன மாட்டவும், காந்தண் மலர்க்கைவழியே - காந்தள் மலர்போன்ற கைவழியாக, காரிகை - தமயந்திக்கு, கண்ணீர் ஓட - கண் ணீர் ஓடவும், சாய்ந்த இடம்பார்த்து - அவர்கள் படுத்துத் தூங்குகிற இடத்தைப்பார்த்து, தடித்தும் - மின்னியும், இடித்தும் - இடி இடித்தும், மழைகள் - மேகங்கள், சேர்ந்து - ஒருமித்து, அவழிப்பெய்ய - அந்த இடத்திலே பெய்யும்படி, மாமுனி - பெரிய விஸ்வாமித்திரமுனிவர், நீர் சென்மினென்முன் - (மேகங்களை நோக்கி) நீங்கள் செல்லுங்கள் என்முன். எ-று.

(சேர்ந்து - அவ்வழி) 'சேர்ந்தவ்வழி' எனற்பாலது தொகுத்தல் விகாரம்பெற்று 'சேர்ந்தவழி' என்முயது. (ருசு)

மண்டலமுமந்தரமுமைபோலிருண்மூடி
யண்டபகிரண்டமதிரவெடித்திடித்துக்
கொண்டலடர்ந்துகொடுங்காலடித்துநவ
கண்டமதிரமழைக்கா லூன்றிவீழ்ந்தனவால்.

[அப்பொழுது பூமியும் ஆகாசமும், மையைப்போல் இருள் மூடிக்கொண்டு
அண்டபகிரண்டங்கள் அதிரும்படி சப்தித்து இடித்து மேகங்கள் எல்
லாம் ஒன்றுகூடிப் பெரும் காற்றுவீசி நவகண்டமும் அதிரும்
படி மழைக்கால் ஊன்றுதலாய் மழை சொரிதல் ஆயின
என்பதாம்.]

இ-ள். மண்டலமும் - அப்பொழுது பூமியும், அந்தரமும் - ஆகாசமும், மைபோல் - மையைப்போல, இருள்மூடி - இருட்டு மூடிக்கொண்டு, அண்டபகிரண்டம் - அண்டபகிரண்டங்கள் எல்லாம், அதிர - அதிரும்படி, வெடித்து - சப்தித்து, இடித்து - இடி இடித்து, கொண்டல் அடர்ந்து - மேகங்கள் எல்லாம் ஒன்றுய் நெருங்கி, கொடும் - கொடுமையாகிய, காலடித்து - காற்றடித்து, நவகண்டமும் - ஒன்பது கண்டங்களும், அதிர - அதிரும்படிக்கு, மழைக்கால் ஊன்றி - மழைக்கால்கள் ஊன்றுதலாய், வீழ்ந்தனவால் - மழைசொரிதலாயின. எ-று. 'ஆல்' ஈற்றசை.

நவகண்டங்களாவன:—கீழ் விதேகம், மேல் விதேகம், வட விதேகம், தென் விதேகம், வட விரேபதம், தென்னிரேபதம், வடபாதம், தென்பாதம், மத்திம கண்டம், என்பனவைகளாம். (ருஎ)

மங்கைநனைந்துமகனனைந்துமன்னனனைந்
தங்கைநடுங்கியடிநடுங்கிமெய்நடுங்கிப்
பங்கமதுபட்டுபற்கிடுகிடென்றடிப்பத்
துங்கமணிமுடியான்சுக்கிரனைப்பார்த்துரைப்பான்.

[அப்படி மழைபெய்ய சந்திரவதி, லோகிதாசன், அரிச்சந்திரன் முதலியவர்கள் எல்லாம் நனைந்து அழகிய கை நடுங்கி, கால் நடுங்கி, உடம்பு நடுங்கி உடம்பெல்லாம் சேறுபட்டு பல் கிடு கிடு என்று அடிபட்டு அரிச்சந்திரன் சுக்கிரனைப்பார்த்துச் சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். மங்கை நனைந்து - (அந்தமாரிரி மழைபெய்யவே) சந்திரவதி நனைந்து, மகன் நனைந்து - மகனாகிய லோகிதாசனும் நனைந்து, மன்னன்- அரிச்சந்திரமகாராஜனும், நனைந்து - நனைந்து, அங்கை நடுங்கி - அழகிய கைகளும் நடுங்கி, அடிநடுங்கி - கால்கள் நடுங்கி, மெய் நடுங்கி - உடம்பு நடுங்கி, பங்கமது பட்டு - (உடம்பெல்லாம்) சேறுபட்டு, பல் - பல்லானது, கிடுகிடென்றடிப்ப - கிடுகிடென்றடி மோத, துங்கம் - பரிசுத்தமாகிய, மணிமுடியான் - ரத்ந கிரீடத்தையுடைய அரிச்சந்திரமகாராஜன், சுக்கிரனைப் பார்த்து- சுக்கிரனைப்பார்த்து, உரைப்பான் - சொல்லுகின்றான். எ-று. (௩அ)

மாறுவதுமில்லைமழைதான்மறையோனே
வாறுபெருகிடுமுனப்பாற்படுதுமெனச்
சீறுமரவேபோற்சினந்துநீர்செல்லுமூர்
தோறும்வரவெனக்குக்காரணமென்சொல்லுமென்றான்.

[ஓ அந்தணரே! மழை ஓய்கிறதைக்காணோம், ஆறானது வெள்ளத்தால் பெருகுமுன்னே, தூரத்திலே போய் இருப்போம் என்று அரிச்சந்திரன் சொல்ல, சீறுகிற சர்ப்பத்தைப்போலச் சுக்கிரன் சினந்து நீங்கள் போகிற ஊருக்கெல்லாம், நானும் கூட வருகிறதற்குக் காரணமென்ன இருக்கிறது சொல்லுங்கள் என்றான் என்பதாம்.]

இ-ள். மறையோனே - ஓ வேதங்களை உணர்ந்த பிராமணரே! மழைதான் - மழையானது, மாறுவதும் இல்லை - ஓய்கிறதில்லை, ஆறு பெருகிடுமுன் - இந்த வெள்ளத்தினாலே ஆறு பெருகுவதற்கு முன்னாலே, அப்பால்- தூரத்திலே, படுதும் என - நாம் போவோம் என்று அரிச்சந்திரன் சொல்ல, சீறும் - சீறுகின்ற, அரவேபோல் - சர்ப்பத்தைப்போல, சினந்து - கோபித்து, நீர் - நீங்கள், செல்லும் - போகும்படியான, ஊர்தோறும் - ஊர் எல்லாம், வர - நானும் கூடவே வர, எனக்குக் காரணமென் - எனக்கு என்னகாரணமிருக்கின்றது?, சொல்லும் என்றான் - சொல்லுங்கள் என்று சுக்கிரன் கேட்டான். எ-று. (௩௯)

எந்நகரிற்புக்கேமிடர்வனத்தைவிட்டினியோர்
நன்னகரஞ்சேர்ந்தாலந்நாளேயுனக்கடியேன்
சொன்னபொருடருவேன் றூயோய்வருதியெனு
மன்னவனுமந்திரியுமாதுமவன்றாள் பூண்டார்.

[நாங்கள் எந்த ஊருக்குப்போனோம், துன்பத்தைத் தருகின்ற காட்டை
விட்டு இனி நாங்கள் ஓர் நல்ல நகரம் சேர்ந்தால் அந்த நாளிலேயே
உமக்கு அடியேன் முன்னே சொன்ன பொருள்களைத் தரு
வேன் பரிசுத்த குணத்தை யுடையவரே! கூட வந்தரு
ளும் என்று அரிச்சந்திரமகாராஜனும், மந்திரியும்,
சந்திரவதியும், சுக்கிரனின் காலைப்பிடித்துக்
கொண்டார்கள் என்பதாம் ]

இ-ள். எ நகரில் புக்கேம் - நாங்கள் எந்த நகரத்துக்குப்போனோம்?, இடர் வனத்தைவிட்டு - துன்பத்தைத் தருவதாகிய காட்டைவிட்டு, இனி - இனிமேல், ஓர் - ஒரு, நல் - நல்ல, நகரம் சேர்ந்தால் - நகரத்தைப் போய்ச் சேர்ந்தால், அந்நாளே - அந்த நாளிலேயே, உனக்கு - உமக்கு, அடியேன் - அடியேன், சொன்ன பொருள் - தருவதாகச் சொன்னபொருளை, தருவேன் - தந்து விடுவேன், (ஆகையினால்) தூயோய் - பரிசுத்தமான குணத்தை உடையவரே!, வருதி எனு - எம்மோடு வந்தருளும் என்று, மன்னவனும் - அரிச்சந்திர மகாராஜனும், மந்திரியும் - மந்திரியாகிய சத்தியகீர்த்தியும், மாதும் - சந்திரவதியும், அவன் தாள்பூண்டார் - அந்தச் சுக்கிரனுடைய கால்களைப் பிடித்துக் கொண்டார்கள். எ-று. (௬0)

வந்தடியிற்பூண்டவதற்கன்றுமறைமுனிவன்
முந்தமொழிந்ததற்காவெள்ளிமுயன்றெழுந்தான்
சிந்தைமகிழ்ந்திறைவன்தேவிகரங்கைப்பிடித்தான்
மைந்தன்றனையெடுத்துமந்திரிமுன்னேநடந்தான்.

[அவர்கள் அப்படிச் சொல்லிக் கால் பிடித்துக்கொண்ட அதற்காகவும்,
அன்று விஸ்வாமித்திரர் முன்னே சொல்லி யிருந்ததற்காகவும்
சுக்கிரன் முயன்று எழுந்தான், மனம் மகிழ்ந்து அரிச்சந்தி
ரன் மனைவியின் கையைப் பிடித்துக்கொண்டு சொல்
லத் தொடங்கினான் புத்திரனாகிய லோகிதாசனை
எடுத்துக்கொண்டு மந்திரி முன்னாலே நடந்
தான் என்பதாம்.]

இ-ள். வந்து - (அரிச்சந்திரன் முதலியவர்கள்) வந்து, அடியில் - பாதங்களை, பூண்ட அதற்கு - பிடித்துக்கொண்ட அதற்காகவும், அன்று - (விஸ்வாமித்திரமுனிவர் தன்னை அனுப்பிய) அன்றையத்தினம், மறைமுனிவன் - வேதங்களை உணர்ந்த விஸ்வாமித்திரமுனிவர், முந்தம் - முன்னாலே, மொழிந்த தற்கா - சொன்னதற்காகவும், வெள்ளி - சுக்கிரபகவான், முயன்று எழுந்தான் -

முயற்சி செய்தலைக்கொண்டு எழுந்தான், இறைவன் - அரிச்சந்திரமகாராஜன், சிந்தை மகிழ்ந்து - மனமகிழ்ந்து, தேவிகரம் கைப்பிடித்தான் - (நடப்பதற்காக இருட்டும் வெள்ளமும் அதிகம் ஆக இருந்தமையினால்) தன் மனைவியின் கையைப் பிடித்தான், மைந்தன் தனை எடுத்து - பிள்ளையாகிய லோகிதாசனை எடுத்துக்கொண்டு, மந்திரி - மந்திரியாகிய சத்தியகீர்த்தி, முன்னே நடந்தான்- முன்னாலே நடந்தான். எ-று.

"அடியில்" என்பது "அடியை" எனப் பொருள் தருதலின் வேற்றுமை மயக்கம், "முயன்று எழுந்தான்" சிரமப்பட்டு எழுபவன்போல் எழுந்தான் என்றும் பொருள் கூறுவர். ஈண்டு மனத்தாலே இன்னின்ன செய்வதென்று முயன்று கொண்டவனாய் எழுந்தான் என்பதாம். (சுக)

காலால்வழிதடவிக்கட்டைமுளைவேரிடறி
யாலாலங்காலுமரவின்றலைமிதித்து
மேலாறுங்கீழாறுமின்விளக்கத்தாலறிந்து
கோலான்முன்னூன்றிக்கொடுங்கானியாற்றழிந்தார்.

[தங்கள் காலால் வழிகளைத்தடவி அறிந்தும், கட்டைகளாலும், முளைகளாலும், வேருகளினாலும் இடறியும், நஞ்சைக் கக்குகின்ற பாம்புகளின் தலைகளை மிதித்தும் மேல்வழியையும் கீழேயுள்ள வழியையும், மின்னலின் வெளிச்சத்தால் அறிந்தும், கோலினாலே முன்னாலே ஊன்றிஊன்றி ஆழம் அறிந்துகொண்டும் கொடிய கான் யாற்றில் இறங்கினார்கள் என்பதாம்.]

இ-ள். காலால் - கால்களினால், வழிதடவி - வழிகளைத் தடவி அறிந்து கொண்டும், கட்டை - கட்டையாலும், முளை - முளையாலும், வேர் - வேரா லும், இடறி - இடறியும், ஆலாலம் - விஷத்தை, காலும் - கக்குகின்ற, அரவின் தலை - பாம்பின் தலைகளை, மிதித்து - மிதித்தும், மேலாறும் - மேல் வழிகளையும், கீழாறும் - கீழேயுள்ள வழிகளையும், மின் விளக்கத்தாலறிந்து - மின்னலின் வெளிச்சத்தால் அறிந்துகொண்டு, கோலான் முன்னூன்றி - தடியைக் கொண்டு முன்னாலே ஆழம் அறிதற்பொருட்டு ஊன்றி ஊன்றிப் பார்த்துக் கொண்டு, கொடும் - கொடுமையாகிய, கானியாற்றிழிந்தார் - காட்டாற்றிலே இறங்கினார்கள். எ-று.

'கீழாறு' தரையில் உள்ளவழி, 'மேலாறு' காட்டூடே செல்கின்றார்கள் ஆதலின் கிளைகள் முதலியன முகம் உடல்களின் மோதாதபடி தரைக்குமேலே யுள்ள வழிகளையும் மின்னலின் வெளிச்சத்தால் அறிந்து சென்றார் என்பதாம்.

சங்கந்தழுவத்தடவண்டலுங்கயமு
மங்கங்கேசோதித்தடிவைத்தடிவைத்துப்
பங்கமிகப்பட்டுப்பல்காலுநீர்குடித்துச்
சிங்கம்புலிதிரியுந்திண்கரையிலேறினார்.

[ஆற்றிலுள்ள சங்குகள் கால்களிலே பற்றவும், பெரிய மேடுகளையும் பள்ளங்களையும் அங்கங்கே சோதித்துக்கொண்டு அடிமேல் அடிவைத்து உடம்பெல்லாம் மிகவும் சேறுகிப் பலதாமும் ஜலத்தைக் குடித்துச் சிங்கங்களும் புலிகளும் திரியும்படியான கெட்டியான கரையை ஏறினர்கள் என்பதாம்.]

இ-ள். சங்கம் தழுவ - ஆற்றில் உள்ள சங்குகள் வந்து கால்களில் படியவும், தடவண்டறும் - பெரிய மேடுகளையும், கயமும் - பள்ளங்களையும், அங்கங்கே சோதித்து - அங்கங்கே கோலால் பரிசோதித்து அறிந்து, அடிவைத்தடி வைத்து - மெள்ள மெள்ள அடிமேல் அடிவைத்து, பங்கம் மிகப்பட்டு - உடம்பெல்லாம் மிகச் சேறுபட்டு, பல்காலும் நீர் குடித்து - (பள்ளத்தில் தவறி விழுவதினல்) பலதரம் நீரைக்குடித்து, சிங்கம் புலி திரியும் - சிங்கமும் புலியும் திரியும்படியாகிய, திண்கரையில் ஏறினர் - கெட்டியான கரைமேல் ,ஏறிப்போனர்கள். எ-று.

"பங்கம் மிகப்பட்டு" மிகவும் பழுதுபட்டு என்றும் மிகவும் பயப்பட்டு என்றும் பொருள் கூறுவர். (சுங)

நீந்திப்பயமகன்றுநெஞ்சிற்பயமகன்றவ்
வேந்தனினிநாம்விடிந்தேகதக்கதெனத்
தோய்ந்தகலையாற்குழலார்சொரிபடுநீர்
பாய்ந்தொழுகவாண்டோர்பழுவத்துறுகின்றார்.

[அந்த ஆற்றை நீந்திப்போய் மனப்பயமும் நீங்கி அரிச்சந்திரன் இனி விடிந்த பின்பே போகத்தக்கதென்று தண்ணீரில் நனைந்த வஸ்திரத்திலும், கூந்தலில் பொருந்தி ஒழுகுகின்ற நீரானது உடம்பெல்லாம் பாய்ந்து ஒழுக அங்கே ஒரு காட்டிலே வந்து தங்கினர்கள் என்பதாம்.]

இ-ள். அவ்வேந்தன் - அந்த அரிச்சந்திரமகாராஜன், நீந்தி - (இந்த விதமாக) அந்த ஆற்றை நீந்திக்கொண்டுபோய், பயம் அகன்று - நீரைவிட்டு நீங்கி, நெஞ்சில் - மனத்தில் உள்ள, பயமகன்று - அச்சமும் நீங்கி, இனி - இனிமேல், நாம் - நாம், விடிந்து ஏகத்தக்கதென - விடிந்தபின்பே போகத்தக்கதென்று,। தோய்ந்த கலையால் - நனைந்த வஸ்திரத்தாலும், குழலால் - கூந்தலினலும், சொரி படுநீர் - வழிகின்ற ஜலமானது, பாய்ந்து ஒழுக - உடம்பெல்லாம் பாய்ந்து வழிய, ஆண்டு - அவ்விடத்து, ஓர் பழுவத்து - ஒரு சோலையிலே, உறுகின்றார் - இருக்கின்றார்கள். எ-று.

"நீந்திப் பயமகன்று நெஞ்சிற்பயமகன்று" என்றதில் 'பயம்' என்ற சொல் வேறு வேறு பொருளால் இருமுறை ஒரே அடியில் வந்தமையினல் சொற்பிரிநிலையணி. (சுச)

கலி விருத்தம்.

பாதவமுற்றெழுபைம்பொழிறன்னி
லேதமிருத்தவரெய்தியநாளில்

மாதவனேவியவன்கணபேயும்
பூதமும்வந்துபுகுந்தனவன்றே.

[அந்த மரங்கள் மிகுந்த பசுமையான சோலையில் துன்ப மிகுந்து அவர்கள் போய்ச்சேர்ந்த அப்பொழுது, விஸ்வாமித்திர முனிவர் அனுப்பிய வலிதாகிய கூட்டம்கொண்ட பேய்களும் பூதங்களும் வந்து புகுந்தன என்பதாம்]

இ-ள். பாதவம் - மரங்கள், முற்று - முழுதும், எழு - வளர்ந்துள்ள, பைம்பொழில் தன்னில் - பசுமையான சோலையில், ஏதம்-துன்பம், மிகுத்து-அதிகமாகி, அவர்-அந்த அரிச்சந்திரன் முதலியவர்கள், எய்தியநாளில்-போய்ச்சேர்ந்த அந்தச்சமயத்தில், மாதவன் - பெரிய தவத்தை உடையவனாகிய விஸ்வாமித்திரர், ஏவிய - அனுப்பின, வன் - வலிமைபொருந்திய, கணபேயும்-கூட்டமான பேய்களும், பூதமும் - பூதங்களும், வந்து புகுந்தன அன்றே-வந்து அப்பொழுதே கூடின. எ-று. 'அன்று' ஏ - அசைகள் என்றும் கூறுவர். (சரு)

மண்ணிலெழுந்துவளர்ந்தகருங்கார்
விண்ணிலெழுந்தனமேனியவிண்ட
புண்ணிலிரண்டுபதங்கர்புரைந்த
கண்ணிலவெண்ணில்கணங்கண்மலிந்த.

[அவைகள் அந்தச் சோலையின் இடங்கள் எல்லாம் பூமியிலிருந்து எழுந்து வளர்ந்த, கரிய மேகங்கள் ஆகாய அளவும் எழுந்ததைப்போன்ற மேனியை உடையன, இரண்டு வெடித்த புண்ணில் இரண்டு சூரியர்கள் இருப்பதுபோன்ற கண்களை உடையன, கணக்கற்ற பூதக்கூட்டங்கள் மிகுந்தன என்பதாம்.]

இ-ள். மண்ணில் எழுந்து - பூமியிலிருந்து கால் ஊன்றி எழுந்து, வளர்ந்த - வளர்ந்ததாகிய, கரும்கார் - கரிய மேகங்கள், விண்ணில் எழுந்தன - ஆகாயம் வரை எழுந்ததை ஒத்துள்ள, மேனிய - தேகத்தை உடையன, விண்ட புண்ணில் - வெடித்த புண்ணில் உள்ள, இரண்டு பதங்கர் - இரண்டு சூரியர்களை, புரைந்த - ஒத்த, கண்ணின-கண்களை உடையன, எண்ணில் கணங்கள்-கணக்கற்ற கூட்டங்கள், மலிந்த - மிகுந்தன. எ-று. (சசு)

பின்றியெழும்பிறையொத்தவெயிற்றூற்
றின்றிதழ்வந்துதெரிக்கவதுக்கிக்
கொன்றுதிரங்கள்குடிக்குதுமென்றே
சென்றுபிடுங்கினதிண்கிரியெல்லாம்.

[அம்மாவாசைக்குப் பின்னாலே எழுகின்ற பிறைச்சந்திரனை ஒத்த பற்களி
னால் உதட்டைக் கடித்துக்கொண்டு வந்து உடம்பைத் தெரித்து
அதுக்கி உங்களைக்கொன்று உதிரங்களைக் குடிக்கின்றோம்
என்றே சொல்லி வலிய மலைகளை எல்லாம் சென்று
பிடுங்கின என்பதாம்.]

இ-ள். பின்றி - அம்மாவாசைக்குப் பிறகு, எழும் தோன்றுகின்ற, பிறை ஒத்த - சந்திரப்பிறையை ஒத்த, எயிற்றால் - பற்களினால், தின்று இதழ்-இதழை மென்று, வந்து - வந்து, தெரிக்க அதுக்கி - மாமிசங்கள் எல்லாம் பாகமாம்படி படிக்கசக்கி, கொன்று - உங்களைக்கொன்று, உதிரங்கள் குடிக்கும் என்றே - உங்கள் இரத்தங்களைக் குடிக்கின்றோம் என்று சொல்லி, சென்று-போய், பிடுங்கின திண்கிரி எல்லாம் - வலிய மலைகளை எல்லாம் பிடுங்கின. எ-று.

'தெரித்தல்' பங்கிடல், பிளவுபடல், 'தெரிக்க' என்பதற்குப் பல்லும் இத ளும் தெரியும்படிக்கு என்றும் பொருள் கூறுவர். (௬௭)

திண்டிறல்கொண்டுயர்செந்தலைமீதே
மண்டியெழுந்தவளர்ந்தசெழுந்தீக்
கொண்டலெழுந்துகொழுந்துசுருண்டே
வண்டமுகட்டையடைந்தனவன்றே,

[மிகுந்த பலம் கொண்டு உயர்ந்த செவந்த தலையின்மேலே மிகுதியாக
எழுந்து வளர்ந்திருக்கின்ற செவந்த நெருப்பானது மேகம் வரை
எழுந்து அதன் நுதிகள் சுருண்டு அண்ட முகட்டையும்
அடைந்தது என்பதாம்.]

இ-ள். திண்திறல் கொண்டு - மிகுந்த வலிமைகொண்டு, உயர் - உயர்ந் துள்ள, செந்தலைமீதே - செவந்த தலையின்மேலே, மண்டி - மிகுந்து, எழுந்து-தோன்றி, வளர்ந்த செழுந்தீ - வளர்ந்துள்ள செழுமையான நெருப்பானது, கொண்டல் எழுந்து - மேகமண்டல வரையிலும் எழுந்து, கொழுந்து - அதன் கொழுந்துகள், சுருண்டே - சுருண்டு, அண்ட முகட்டை - அண்ட முகட்டை, அடைந்தனவன்றே - தாவியது. எ-று. 'அன்று' 'எ' அசைகள்.

'செழுந்தீ' என்பதற்கு செழுமையான நெருப்பை ஒத்த செம்பட்டை மயிர் என்றும் பொருள் கூறுவர். கொழுந்து - முனை, நுதி. (௬௮)

ஐயனருந்தசையானயில்வேனிச்
செய்யனருந்தசைதின்குவன்யானித்
தையலருந்தசைதம்மினெனக்கிப்
பையலிளந்தசைபற்கெளிதென்னும்.

[இந்தப் பார்ப்பான் மாமிசத்தை நான் தின்பேன், இந்தச் செவந்த நிறத்தை உடையவன் மாமிசத்தை நான் தின்பேன், இந்தப்பெண்ணின் அருமையான மாமிசத்தை எனக்குக்கொடுங்கள், இந்தச் சிறுவனுடைய இள மாமிசங்கள் பல்லுக்கு மெதுவாயிருக்கும் என்று இப்படி அப்பிசாசுகள் கூறிடும் என்பதாம்.]

இ-ள். ஐயன் - இந்தப் பார்ப்பானின், அரும்தசை - அருமையான மாமிசத்தை, யான் - நான், அயில்வேன்-தின்பேன், இச்செய்யன்-இந்தச் செவந்த நிறத்தை யுடையவனின், அரும் தசை-அருமையான மாமிசத்தை, தின்குவன் யான் - தின்பேன் நான், இத்தையல் அரும் தசை - இந்தப் பெண்ணினுடைய அருமையான மாமிசத்தை, தம்மின் எனக்கு - எனக்குத் தாருங்கள், இப்பையல் இளந்தசை - இந்தப் பையனின் இளமையான மாமிசம், பற்கு எளிது என்னும் - என்னுடைய பல்லுக்கு இலேசாயிருக்கும் என்று சொல்லும் அப்பிசாசுகள். எ-று.

'ஐயன் அரும்தசை' என்பதற்கு அரசனது அருமையான தசை என்றும், செய்யன் அரும் தசை என்பதற்கு மந்திரியின் அருமையான தசை என்றும் கூறுவர். (௬௯)

சென்மினடந்துசெறுத்திவர்தம்மைக்
கொன்மினெடுந்தசைகூறுறமென்று
தின்மினினைத்தவைசெய்மினெனப்போய்ப்
பின்முநெருங்கினபேயொடுபூதம்.

[நடந்து செல்லுங்கள், கோபித்து இவர்களைக் கொல்லுங்கள், இவர்கள் நெடிதான மாமிசத்தை பங்கு பண்ணி மென்று தின்னுங்கள், நினைத்தபடி எல்லாம் செய்யுங்கள், என்றுபோய் பூதங்கள் பின்னும் முன்னும் நெருங்கின என்பதாம்.]

இ-ள். சென்மின் நடந்து - நடந்து கிட்டப்போங்கள், செறுத்து - கோபித்து, இவர் தம்மை - இவர்களை, கொன்மின் - கொல்லுங்கள், நெடும் தசை- நெடிதாகிய தசையை, கூறுற - பாகமாகச்செய்து, மென்று - மென்று, தின்மின் - தின்னுங்கள், நினைத்தவை - நீங்கள் நினைத்தபடியெல்லாம், செய்மின்- செய்யுங்கள், எனப்போய் - என்று சொல்லிக்கொண்டுபோய், பேயொடு பூதம்- பேயோடு பூதங்கள், பின்முன் நெருங்கின - அவர்களைப் பின்னும் முன்னும் நெருங்கின. எ-று. (௭௦)

சிறப்பமைசேயொடுதேவியுமன்னு
முறத்தழுவித்தமுணர்ச்சிவிடாம
லறத்தனைநற்றுணையாகநினைத்தே
விறத்தலெமக்கினிதென்னவிருந்தார்.

[சிறப்பு அமைந்த புத்திரனுடனே சந்திரமதியும் அரிச்சந்திரனும் நெருங்கத் தழுவிக்கொண்டு தங்கள் நினைவு தப்பாமல் தருமத்தையே நல்ல துணை யாக எண்ணி இனிச்சாகிறதே நமக்கு நல்லதென்று கூடிக்கொண் டிருந்தார்கள் என்பதாம்.]

இ-ள். சிறப்பு அமை - சிறப்புப் பொருந்தியுள்ள, சேயொடு - புத்திரனு டனே, தேவியும் - சந்திரவதியும், மன்னும் - அரிச்சந்திரமகாராஜனும், உறத் தழுவி - நெருங்கத் தழுவிக்கொண்டு, தம் உணர்ச்சி விடாமல் - தம் நினைவு தவறாமல், அறத்தனை - தருமத்தை, நல் துணையாக நினைத்தே - நல்ல துணை யாக எண்ணி, இறத்தல் - சாதல், எமக்கு - எங்களுக்கு, இனிது என்ன - நல் லது என்று, இருந்தார் - இருந்தார்கள். எ-று.

'அறத்தன்' என்பதற்குச் சிவபெருமானை, என்றும் பொருள் கூறலாம். தருமத்தை என்று பொருள் கொள்வதாயின் 'அறத்தனை' என்றது வலித்தல் விகாரம்பெற்றது என்று கொள்ளல் வேண்டும். (எக)

சொல்லுவிரம்முனிசொல்லியவண்ணங்
கொல்கலிரெம்முயிர்கொல்லுதிரேலெம்
மல்லலுமுங்களரும்பசியும்போம்
வில்லிலைவாளிலைவம்மெனவிண்டார்.

[நீங்கள் முனிவர் சொல்லி அனுப்பியபடியே சொல்லுவீர்கள், கொல்ல மாட்டீர்கள், எங்கள் உயிரைக் கொல்லுவீர்களேயானால் எங்கள் துன்பமும்போம் உங்கள் பசியும்போம் வில்லும் இல்லை வாளும் இல்லை வாருங்கள் என்று சொன்னார்கள் என்பதாம்.]

இ-ள். அம்முனி - அந்த விஸ்வாமித்திரமுனி, சொல்லிய வண்ணம்- உங்களுக்குச் சொல்லிக் கொடுத்தபடி, சொல்லுவிர் - நீங்கள் சொல்லுவீர்கள், கொல்கலிர் - கொல்ல மாட்டீர்கள், எம்முயிர் கொல்லுதிரேல் - எங்கள் உயி ரைக் கொன்று விடுவீர்களேயானல், எம் அல்லலும் - எங்களுடைய துன்ப மும், உங்கள் - உங்களுடைய, அரும்பசியும் - அரிய பசியும், போம் - போய் விடும், வில் இலை - எங்களிடத்தில் வில்லும் இல்லை, வாள் இலை - வாளாயுத மும் இல்லை, வம்மின் - வாருங்கள் என்று, விண்டார் - சொன்னார்கள். எ-று.

கொன்றிடமாமுனிகூறினனல்லன்
சென்றிடரித்தனைசெய்தமைபோது
மென்றுகணங்களுமெண்மிகுபேயு
நின்றனகட்புலநீங்கியவன்றே.

[பெரிய விஸ்வாமித்திரமுனி நமக்குக் கொல்லும்படிச் சொல்லவில்லை, வந்து இவ்வளவு துன்பம் உண்டாக்கினது போதும், என்று பூத கணங்களும் மிகுந்த பேயும் கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்தன என்பதாம்.]

இ-ள். கொன்றிட - (அரிச்சந்திரன் முதலியவர்களைக்) கொல்லும்படி, மாமுனி - பெரிய விஸ்வாமித்திரமுனி, கூறினனல்லன் - சொன்னான் அல்

லன், சென்று இடர் இத்தனை செய்தமைபோதும் - (அவர்கள் தங்கிய பழுவத்தில்) போய் இவ்வளவு துன்பம் பண்ணினதுபோதும், என்று - என்று, கணங்களும் - பூதக்கூட்டங்களும், எண்மிகு பேயும் - எண்ணிக்கையில் மிகுந்த பேயும், நின்றன - அங்கே நின்று கொண்டிருந்தவைகள், கண்புலம் நீங்கிய அன்றே - கண் பார்வையினின்றும் மறைந்து போயின. எ-று. 'அன்று' 'ஏ' அசைகள். (எங)

தங்குலவள்ளறளர்ச்சியுணர்ந்தே
செங்கதிரோனுயர்தேரினில்வந்தான்
மங்குனெடுந்துளிமாரியொழிந்த
கங்குல்விடிந்துகழிந்ததையன்றே

[தன்னுடைய குலத்தில் பிறந்த வள்ளலாகிய அரிச்சந்திரனின் சோர்வைத் தெரிந்து செவந்த சூரியன் உயர்ந்த தேரில் வந்தான் (சூரியன் உதயமாயினன்) மேகங்கள் பெய்த நீண்ட துளிகளாகிய மழைத் தாரையும் ஒய்ந்தன, இரவும் போகப் பொழுது விடிந்தது என்பதாம்.]

இ-ள். தம் குல வள்ளல் - தனது குலத்திலே பிறந்த வள்ளலாகிய அரிச்சந்திரமகாராஜனின், தளர்ச்சி உணர்ந்தே - சோர்வைக்கண்டு, செம் கதிரோன்- செவந்த கிரணங்களையுடைய சூரியன், உயிர் தேரினில் வந்தான் - உயர்ந்த தேரிலே வந்தான், மங்குல் - மேகங்களின். நெடும் துளிமாரி - நீண்ட துளிகளாகிய மழைத்தாரையும், ஒழிந்த - ஒய்ந்தன, விடிந்து - பொழுது விடிந்து, கங்குல் - இரவு, கழிந்ததை யன்றே - சென்றது. எ-று. 'அன்று' 'ஏ' அசைகள். (எச)

அன்றுவிடிந்தபினத்தலம்விட்டுச்
சென்றுசெழுங்கனிதின்றயனண்ணிக்
குன்றுகடந்துகுளிர்ந்தமலர்த்தாள்
கன்றநடந்தணிகங்கையணிந்தார்.

[அற்றைநாள் விடிந்த பின்பு அந்த இடத்தை விட்டுப்போய்ச் செழுமையான பழங்களைத் தின்று அப்பால்போய் மலைகளை எல்லாம் கடந்து குளிர்ந்த தாமரை மலர்போலும் பாதங்கள் கன்றிப்போக நடந்து அழகிய கங்கை ஆற்றைப்போய்ச் சேர்ந்தார்கள் என்பதாம்.]

இ-ள். அன்று விடிந்தபின் - அற்றைநாள் விடிந்த பின்பு, அத்தலம் விட்டு - அந்த இடத்தைவிட்டு, சென்று - போய், செழும் கனி தின்று-செழுமையான பழங்களைத்தின்று, அயல் நண்ணி - அப்பால்போய், குன்று கடந்து- மலைகளைக்கடந்து, குளிர்ந்த - குளிர்ச்சியான, மலர்த்தாள் கன்ற - மலர்போலும் பாதங்கள் கன்றுதலாக, நடந்து - நடந்து, அணி - அழகிய, கங்கை - கங்கை ஆற்றை, அணிந்தார் - போய்ச்சேர்ந்தார்கள். எ-று.

"பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்றமையின் மலர் என்பதற்குத் தாமரை மலர் என்றும். (எரு)

நிரைதொறுமுருள்வனசெம்மணியாரங்
கரைதொறுமுருள்வனகாரகிலார
நுரைதொறுமுருள்வனநுண்ணியவண்பூ
விரைதொறுமுருள்வனவெறிமதுகரமே.

[அந்த ஆற்றின் அலைகளில் எல்லாம் சிவந்தமணிகளும் முத்தும் புரளுகின்றன, அந்த ஆற்றின் கரையிலெல்லாம் கறுத்த அகில் கட்டையும் சந்தனக்கட்டையும் உருளும் அந்த ஆற்றின் நுரைகளில் எல்லாம் நுண்ணிய அழகிய பூக்கள் உருளும், அந்த மலர்வாசனை வீசுகின்ற இடங்களிலெல்லாம் தேனைக்குடிக்கிற வண்டுகள் மேலே வீசிக்கொண்டிருக்கும் என்பதாம்.]

இ-ள். நிரைதொறும் - அந்தக் கங்கையாற்றின் அலைகளில் எல்லாம், செம்மணி - சிவந்த மணிகளும், ஆரம் - முத்துக்களும், உருள்வன - புரளுகின்றன, கரைதொறும் - கரைகளில் எல்லாம், காரகில் - கறுத்த அகிற்கட்டையும், ஆரம் - சந்தனக்கட்டைகளும், உருள்வன - உருண்டுகொண்டிருக்கின்றன, நுரைதொறும் - அந்தக் கங்கை ஆற்றின் நுரைகளில் எல்லாம், நுண்ணியவண்பூ - மெல்லிதாகிய அழகிய பூக்கள், உருள்வன - உருண்டுகொண்டிருக்கும், விரைதொறும் - அந்தப் புஷ்பங்களின் வாசனை வீசுகின்ற இடங்களில் எல்லாம், வெறி - தேனைக்குடிக்கின்ற, மதுகரமே - வண்டுகளே, உருள்வன - புரண்டு கொண்டிருப்பன. எ-று. 'ஏ' தேற்றம், ஈற்றசை என்பாரும் உண்டு.

'கரைதொறும் உருள்வன காரகில் ஆரம்' என்பதற்கு அவ்வாற்றின் இரு கரைகளிலும் கார் அகில் மரமும் சந்தனமரமும் காற்றிற்கு அசைந்து கொண்டிருக்கும் என்று பொருள்கூறுவர். அகிலும் சந்தனமும் குறிஞ்சிக் கருப்பொருளாதலின் அகிற்கட்டையும் சந்தனக்கட்டையும் என்றும். அரிச்சந்திரன் செல்லுவது முல்லை நிலம் என்பது ஈண்டு கவனிக்கத்தக்கது. (எசு)

துளைமணிவெண்பலராமணிதுத்தி
விளைமணிவெயில்விடவெண்புனலூடே
களைமணியொடுமதகரிமணியோடும்
வளைமணிநிலவெழும்வாலுலகமெல்லாம்.

[வயிரமணி நாகமணி புஷ்பராகமணி ஆகிய இவைகள் வெயில்போல ஒளிவீசவும், அந்த வெள்ளிய கங்காசலத்தினுள்ளே, பலவகை ரத்னமணிகளோடு மதயானைகளின் கொம்பில் விளையும் முத்தும், சங்குகள் ஈன்ற முத்தும் மணற் குன்றுகளில் எல்லாம் நிலவைப்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கும் என்பதாம்.]

இ-ள். துளைமணி - எதையும் துளையிடத்தக்கதாகிய வயிரமணியும், வெண் - வெண்மையாகிய பல் - பல்லை உடைய, அராமணி - சர்ப்பங்களின்

மணியும் (நாகரத்தினமும்) துத்தி - தேமல்போல, விளை - தோற்றுகின்ற மணி - புஷ்பராகமணியும், வெண்புனல் ஊடே - வெள்ளிய கங்காஜலத்தின் உள்ளே, வெயில்விட - வெயிலைப்போலப் பிரகாசத்தைச் செய்யவும், களைமணியொடு - பலவகையாகிய காந்தியுள்ள ரத்தினங்களுடனே, மதகரி மணியோடும் - மதயானைகளின் கொம்பிலே விளைகின்ற முத்துக்களோடும், வளைமணி- சங்குகள் ஈன்ற முத்தும், வாலுலகம் எல்லாம் - மணற்குப்பல்கள் எல்லாம், நில வெழும் - நிலவைப்போல் பிரகாசிக்கும். எ-று.

'கழைமணி' என்று பாடம் கொண்டு மலைகளில் உள்ள மூங்கில் முத்துக்களும் என்று பொருள் தரும், 'களை' காந்தி. (எஎ)

நளினமரத்தநறுங்கனிநாகத்
தளிநரல்வப்புனலரவமடக்கத்
தெளிநதிபுக்கணிசிறைகள்புலர்த்தும்
புளினமுயர்ந்தெழுபுளினமறைப்ப.

[தாமரைப்பூக்களிலும் புன்னை விருக்ஷங்களிலும் உள்ள வண்டுகள் சப்திப்பது தண்ணீரில் அலையால் உண்டாகும் சப்தத்தை அடக்கும், அந்தத்தெளிவான ஆற்றிலேமுழுகி அழகியசிறகுகளை உலர்த்தும் பறவைக் கூட்டங்கள் உயர்ந்தெழுந்த மணல்குவியல்களை மறைக்கும் என்பதாம்.]

இ-ள். நளினம் - தாமரை மலர்களிலும், அரத்த நறும்கனி நாகத்து- நல்ல வாசனைபொருந்திய இளமையாகிய புன்னைவிருக்ஷங்களில் உள்ள, அளி- வண்டுகள், நரல்வ - ஒளிப்பது, புனல் - அந்தக் கங்காநதியின், அரவம் அடக்க - அலை ஒலியை அடக்கவும், தெளி - தெளிந்த, நதிபுக்கு - கங்காநதிக்குள்ளே முழுகி, அணி - அழகிய, சிறைகள் - சிறகுகளை, புலர்த்தும் - காய வைக்கும், புளினம் - பறவைக்கூட்டங்கள், உயர்ந்து எழு - உயர்ந்து வளர்ந்துள்ள, புளிமை மறைப்ப - மணற்குன்றுகளை மறைக்கும் எ-று.

'அரத்தநறுங்கனி நாகம்' என்றதில் 'கன்னி' என்றது 'கனி' என்று தொகுத்தல் விகாரம் பெற்றது. 'கன்னி' இளமையாகிய என்பது பொருள், "புள்ளினமெழுந்து" என்பது தொகுத்தல்விகாரம்பெற்று "புளினமெழுந்து" என்பது. (எஅ)

வெங்கயமாமதமேமிகநாறுங்
கங்கைவளம்பலகண்டுமெகிழ்ந்தே
செங்கைகொடண்ணல்சிறப்புளவெல்லா
மங்கைதனக்குவகுத்துரைசெய்வான்.

[யானைமதங்களே மிகவும் வீசுவதான கங்கையாற்றின் பலவளங்களேயும் கண்டு சந்தோஷித்து தன் செவந்தகைகளால் அரிச்சந்திரமகாராஜன் அங்குள்ள சிறப்புகளை எல்லாம் சந்திரவதிக்கு வகை வகை யாகச் சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். வெம் - வெவ்விதான, கயம் - யானைகளின், மாமதமே - பெரிய மதமே, மிகநாறும் - மிகவும் வாசனை வீசுகின்ற, கங்கை - கங்கையாற்றின், வளப்பலகண்டு - வளங்கள் பலவற்றையும் கண்டு, மகிழ்ந்து - சந்தோஷித்து, அண்ணல்-பெருமைமிக்க அரிச்சந்திரமகாராஜன், சிறப்புளவெல்லாம் - அங்குள்ள சிறப்புகளை எல்லாம், மங்கை தனக்கு - சந்திரவதிக்கு, செங்கைகொண்டு- தன்னுடைய செவந்த கைகளாலே சுட்டிக் காட்டி, வகுத்து உரைசெய்வான்- வகைவகையாகச் சொல்லுகின்றான். எ-று. (எக)

இந்திரசாபமிரண்டுபடைத்த
செந்திருவாணுதலாய்தெளிநன்னீர்ச்
சுந்திரமேவுசுழித்திரளோர்நி
னுந்தியையொப்பனவுற்றிடல்காணாய்.

[இந்திரவில் இரண்டுபெற்றுள்ள செம்மையான அழகிய ஒளி பொருந்திய நெற்றியை உடையவளே! தெளிந்த நல்ல ஜலத்திலே அழகு பொருந்திய சுழிகளின் கூட்டம் ஒப்பற்ற உன்னுடைய உந்தியை ஒப்பாகச் சுழிக்கின்றதைப் பார் என்று அரிச்சந்திரன் கூறினன் என்பதாம்.]

இ-ள். இந்திரசாபம் - இந்திரவிற்கள், இரண்டுபடைத்த - இரண்டைக் கொண்டுள்ள, செம் - செம்மையான, திரு - அழகிய, வான் - ஒளியை உடைய, நுதலாய் - நெற்றியை உடைய தமயந்தியே, தெளி - தெளிந்துள்ள, நல் நீர் - நல்லநீரில், சுந்தரமேவு - அழகோடு விளங்குகின்ற, சுழித்திரள் - சுழிக ளின்கூட்டம், ஓர் - ஒப்பற்ற, நின்-உன்னுடைய, உந்தியை - உந்தியை, ஒப்பன - ஒப்பாகும்படி, உற்றிடல்-சுழித்திடுதலை, காணாய் - காண்பாயாக. எ-று.

"இந்திரசாப மிரண்டு படைத்த செந்திருவாணுதலாய்" என்பதற்கு, இந்திரவிற்கள் இரண்டைக்கொண்ட செவந்த இலட்சுமிபோலும் ஒளிபொருந்தின நெற்றியை உடையவளே! எனவும் பொருள் கூறுவர். (அ0)

புள்ளியெழுங்கரிபோய்ப்புனலூடே
வள்ளியெறிந்தவராமணியெல்லாந்
துள்ளியெழுந்தவிர்சோதிவிசும்பின்
வெள்ளிவிழுந்தெனவீழ்வனபாராய்.

[புள்ளியை உடைய யானைகள்போய் தண்ணீரிலிருந்து அள்ளி
எறிந்த நாகரத்தினங்களெல்லாம் தாவி எழுந்து விளங்கு
கின்ற பிரகாசமுள்ள ஆகாயத்திலிருந்து வெள்ளி
விழுவதுபோல் விழுவதைப்பாராய்
என்பதாம்.]

இ-ள். புள்ளிஎழும் கரி - புள்ளியை உடைய யானைகள், போய் - கங்கை யாற்றில் சென்று, புனலூடே - தண்ணீருக்குள்ளே இருந்து, அள்ளி எறிந்த - வாரிவீசின, அராமணி எல்லாம் - நாகமணிகள் எல்லாம், துள்ளி எழுந்து - தாவி எழுந்து, அவிர் - விளங்குகின்ற, சோதி விசும்பின் - பிரகாசத்தையுடைய ஆகாயத்திலிருந்து, வெள்ளிவிழுந்தென - வெள்ளி விழுவதைப்போல, வீழ்வன - வீழ்வனவற்றை, பாராய் - ஓ சந்திரமதியே பார்ப்பாயாக என்றான் அரிச்சந்திரன். எ-று.

"புள்ளி எழும் கரி" புகர்முகக்களிறு. (அக)

விரிதிரையுந்தியவெண்மலர்காலால்
வரிமணலுந்தியவண்டலினூடே
பிரிவுறுசேவல்கள்பெடையெனவோடித்
தெரிவுறநின்றுதிகைப்பனகாணாய்.

[விரிவான அலைகள் அசைக்கின்ற வெள்ளைத்தாமரை மலரை தமது
காலால் வரிவரியாகக் கீறுதலைக்கொண்டே மணல்சேற்றினிட
த்திலே பிரிந்த ஆண்பட்சிகளானவை தமது பெட்டை
என்று நினைத்து ஓடி அது பூவாயிருக்கத்தெரிந்து
நின்று தன் பெட்டையைக்காணாமல்
மயங்குகின்றனவற்றைப் பார்
என்பதாம்.]

இ-ள். விரி - விரிவான, திரை - அலைகள், உந்திய - அசைக்கின்ற, வெண்மலர் - வெள்ளைத்தாமரைமலரை, காலால் - தம்முடைய கால்களினாலே, வரி - வரியாகக் கீறப்பெற்ற, மணல் உந்திய - மணலினால் ஒதுக்கிய, வண்டலின் ஊடே - மணல் சேற்றினிடத்தே, பிரிவுறு சேவல்கள் - பிரிந்த ஆண் பட்சிகளானவை, பெடை எனவோடி - அந்த வெண்மலர்களைத் தம் பெட்டை என நினைந்து ஓடி, தெரிவுற - அது மலராய் இருத்தல்தெரிந்து, நின்று திகைப்பன - நின்று தன் பெட்டையைக் காணாமல் மயங்குகின்றனவற்றைப் பாராய். எ-று.

மலரைப் பெட்டை என்று சேவல் மயங்கியது மயக்க அணி. (அஉ)

புண்ணியநீருறைபுள்ளினநம்மைக்
கண்ணிடைகண்டுகலைந்துபறப்ப
மண்ணிடமின்றகல்வானிடமுண்டென்
றெண்ணிவிசும்பிலெழுந்தனபாராய்.

[அந்தப் புண்ணியநீர்த்தத்தில் உள்ள பறவைக்கூட்டங்கள் நம்மைக்
கண்ணாலே பார்த்து, கலைந்துபறக்கின்றதானது, பூமியில்
இனி நமக்கு இடமில்லை உயர்ந்த ஆகாசமே நமக்கு
இடமாக இருக்கின்றது என்று எண்ணி ஆகா
யத்தில் எழுந்தன பார்ப்பாயாக
என்பதாம்.]

இ-ள். புண்ணிய நீர் உறை புள்ளினம் - அந்தப்புண்ணியத்தைத்தரும் ஜலத்தில் வசிக்கின்ற பறவைக்கூட்டங்கள், நம்மை - நம்மை, கண் இடை கண்டு - கண்ணிலேகண்டு, கலைந்து பறப்ப - கலைந்து பறப்பதானது, மண் இடமின்று - இனி நமக்கு மண்ணில் இடமில்லை, அகல் - விசாலமான, வாள் இடம் உண்டு - ஆகாசமாகிய இடமுண்டு, என்று - என்று, எண்ணி-நினைத்து, விசும்பில் - ஆகாயத்தில், எழுந்தன-எழுந்து செல்வதை, பாராய் - பெண்ணே, நீ பார்ப்பாயாக. எ-று.

'புண்ணியநீர்' தோய்ந்தார்க்கும், கண்டார்க்கும் நினைந்தார்க்கும் பெயர் சொன்னார்க்கும் முறையே அளவாய்ப் பாவங்களைப் போக்கி புண்ணியத்தைத் தருதலின் கங்கையை புண்ணியநீர் என்றார். "கங்கை என்றுலகேத்திய கடவுண்மாநதி" என்றார் பிறரும். (அரு)

கங்கையொருத்திசிலம்பணிகாலுஞ்
சங்கணிகந்தாமுந்துவர்வாயுஞ்
செங்கயலுங்கணும்வெண்புளினத்தண்
கொங்கைகளுஞ்சதகோடிகள்பாராய்.

[கங்கை என்னும் ஒருபெண்ணுக்கு சிலம்பை அணிந்த கால்களும்,
சங்காகிய அழகிய கழுத்தும், பவளமாகிய வாயும், செவந்த
கயல் மச்சங்களாகிய கண்ணும், வெண்மையான மணற்
குவியல்களாகிய குளிர்ந்துள்ள கொங்கைகளும் நூறு
கோடி யிருக்கின்றன பார்
என்பதாம்.]

இ-ள். கங்கை ஒருத்தி - கங்கையாகிய ஒருபெண்ணுக்கு, சிலம்பணி காலும் - சிலம்பை அணிந்துள்ளகால்களும், சங்கணிகந்தாமும் - சங்காகிய அழகிய கழுத்துகளும், துவர்வாயும் - பவளங்களாகிய வாய்களும், செங்கயலுங் கண்ணும் - செவந்தகயல் மச்சங்களாகிய மையுண்டகண்களும், வெண் புளினத்தண் கொங்கைகளும் - வெண்மையான மணற்குவியல்களான குளிர்ந்த கொங்கைகளும், சதகோடிகள்பாராய் - நூறுகோடிகள் இருக்கின்றன நீ காண்பாயாக. எ-று.

'சிலம்பணிகாலும்' என்றது சப்திக்கின்ற கால்வாய்களை: இனி வண்டுகள் சப்திக்கின்ற தாமரையாகிய பாதங்களை என்றும் கூறுவர். தாமரையை முகமாகக் கூற இருத்தலின் சப்தித்துப்பாய்கின்ற வாய்க்கால்கள் என்பதே பொருத்தமுடைத்தாம். (அச

முத்தணிகொங்கையிரண்டுமுளைக்க
நித்தனையம்பிகைநேயம்விளைத்தா
ளித்தனைகொங்கைபடைத்தருளென்று
யத்தனையெத்தனையாசைவிளைக்காள்.

[முத்துமாலைகளினால் அலங்கரிக்கப்பெற்றுள்ள தனங்கள் இரண்டு முளைக்க சிவபெருமானை உமாதேவி மிகவும் அன்பு கொள்ளச் செய்தாள். இத்தனை முலைகளையுடைய எனதுதாயாகிய கங்காதேவி அந்தச் சிவபெருமானை எவ்வளவு ஆசையை உண்டாக்கமாட்டாள், (அதிக ஆசையையே ஊட்டுவாள்) என்பதாம்.]

இ-ள். முத்து அணி - முத்துமாலைகளை அணிந்துள்ள, கொங்கை இரண்டு முளைக்க - தனங்கள் இரண்டு தோன்ற, அம்பிகை - பார்வதிதேவியானவள், நித்தனை - என்றும் அழியாது உள்ளவனாய சிவபெருமானை, நேயம் விளைத்தாள் - தன்மேல் அதிகமாக ஆசைப்படும்படிச் செய்து விட்டாள், இத்தனை கொங்கை - (இவண்மணற்குன்றுகளாகிய) இத்தனை கொங்கைகளை, படைத்தருள் - பெற்றிருக்கின்ற, என் தாய் - எனதுதாயாகிய இந்தக்கங்காதேவி, அத்தனை - சிவபெருமானை, எத்தனை - எவ்வளவு, ஆசைவிளைக்காள் - ஆசையை உண்டாகச் செய்யாள். எ-று.

அதிகம் செய்வாள் என்பது கருத்து. (அரு)

மண்ணிலருந்தவமன்னனுரைக்க
வொண்ணிலவொத்தொளிரொண்ணுதன்மேனாட்
பெண்ணில்விதித்தபெருந்தனமல்லா
லெண்ணிலகொங்கைகளென்செயவென்றாள்.

[இந்த உலகத்திலே அருமையான தவத்தைச் செய்த அரிச்சந்திரமகாராஜன் சொல்ல வெள்ளியபிறைச்சந்திரனை ஒத்து ஒளிசெய்கின்ற விளங்குகின்ற நெற்றியை உடைய சந்திரமதி முற்காலத்தில் பெண்களுக்கு வேண்டுமென்று அமைத்த இரண்டு பெரியதனங்களல்லாமல் கணக்கில்லாத தனங்களைப் படைத்ததனால் என்னபயன் என்றாள் என்பதாம்.]

இ-ள். மண்ணில் - உலகில், அருந்தவமன்னன் - செய்தற்கரிய தவத்தைச்செய்த அரிச்சந்திரன், உரைக்க - அந்தவிதமாகச்சொல்ல, வெண் நிலவு ஒத்து ஒளிர் - வெள்ளியபிறைச் சந்திரனைப் போலப் பிரகாசிக்கின்ற, ஒண் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியை உடைய சந்திரமதியானவள், மேனாள் - முன்னாளில், பெண்ணில் விதித்த - பெண்களிடத்தில் உண்டாக்கிய, பெருந்

தனமல்லால் - பெரிய இரண்டுமுலைகள் அல்லாமல், எண்ணில - கணக்கற்ற, கொங்கைகள் என்செய - முலைகளைக் கொண்டதனுல் என்னபயன், என்றாள்- என்று சந்திரமதி கூறினள். எ-று.

'மண்ணில் அருந்தவமன்னன்' என்பது உலகிலுள்ளோர் செய்த அரும் தவத்தால்பிறந்த மன்னன் என்றும் பொருள் விரிப்பர்; செய்தற்குரிய பலதவங் களிலும் 'பொய்யாமை' மிகச்சிறந்ததாம் அதை இவ் அரிச்சந்திரன் செய்தமை யால் அருந்தவமன்னன் என்றார். "பெண்ணில் விதித்த பெருந்தனம்" என்ப தற்கு பெண்களினிடத்தில் இருக்கற்பாதென்று படைத்த பெருமையான தன்மை (குணம்) களாகிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்பவைகள், என்று பொருள்கொண்டு அந்த நான்கு பெருமையுள்ள குணங்கள் இல்லாதபோது எவ்வளவு கொங்கைகள் படைத்திருந்தும் பயனில்லை. அந்தக் கொங்கைகளால் கணவனை அன்புண்டாகும்படிச் செய்ய முடியாது என்னும், பொருளும். அமைத்துக் கிடத்தல் காண்க. (அசு)

ஒருமகவுய்யவளர்க்குமொருத்திக்
கிருமுலையுள்ளனவின்னமுதேகேள்
வருமுயிர்யாவும்வளர்த்திடுமன்னைக்
கிருமுலைபோதுவதோவிசையென்றான்.

[இனிய அமிர்தத்தை ஒத்தவளே! ஒருபிள்ளைபிழைக்கும்படி வளர்க்கிற ஒருத்திக்கு இரண்டு முலைகளிருக்கின்றன. உலகத்திலே தோன்றுகின்ற உயிர்கள் அத்தனையும் வளர்க்கின்ற தாய்க்கு இரண்டுமுலைபோதுமோ சொல்வாயாக என்றான் என்பதாம்.]

இ-ள். இன் அமுதே - இனிய அமிர்தத்தை ஒத்தவளே! கேள் - கேட்பாயாக, ஒரு மகவு - ஒருபிள்ளையை, உய்ய - பிழைக்கும்படி, வளர்க்கும் - வளர்க்கின்ற, ஒருத்திக்கு - ஒருத்திக்கு, இருமுலை உள்ளன - இரண்டு முலைகள் இருக்கின்றன, வரும்உயிர்யாவும் - உலகத்திலேதோன்றுகின்ற உயிர்கள் எல்லாவற்றையும், வளர்த்திடும் அன்னைக்கு - வளர்க்கின்றதாய்க்கு, இருமுலைபோதுவதோ - இரண்டு முலைகள் போதுமானதோ, இசை என்றான் - சொல்வாயாக என்று கூறினன். எ-று. (அஎ)

மங்கையுமன்னனுமற்றுமுளோருங்
கங்கைவளம்பலகண்டுநடந்தே
பெங்கடவப்பயனெய்திபதென்ன
வங்கனெடும்புனலாடினரன்றே.

[இந்தவிதமாக அரிச்சந்திரனும் சந்திரவதியும் மற்றுமுள்ள மூன்று பேரும் கங்கையாற்றின் வளப்பம் பலவற்றையும் கண்டு நட-ந்துபோய், எங்கள் தவப்பயன் எங்களுக்கு பிராப்தியாயிற்று என்றுசொல்லி அந்தப்பெரிய புண்ணியதீர்த்தத்தில் நீராடினார்கள் என்பதாம்.]

இ-ள். மங்கையும் - சந்திரவதியும், மன்னனும் - அரிச்சந்திரமகாராஜனும், மற்றுமுளோரும் - இன்னுமுள்ள மற்ற மூவரும், கங்கை - கங்கையாற்றின், வளம்பலகண்டு - வளப்பங்கள் பலவற்றைக்கண்டு, நடந்தே - சென்று, எங்கள் தவப்பயன் எய்தியது என்னு - எங்களுடைய தவப்பயன் இன்று கைகூடிற்று என்று, அங்கு - அந்த இடத்திலே, அந்நெடும்புனல் - அந்த நீண்ட நதியிலே, ஆடினர் அன்றே - ஸ்நானம் செய்தார்கள். எ-று.

அன்று ஏ, அசைகள். (அஅ)

அருமறைநூல்வழியாடியபின்னர்
மருவியவண்டுறைமன்னவனேக
விரிபுனறன்னிலிழிந்துவிரைந்தே
கரைமிசைவந்தொருகாவிலணைந்தார்.

[வேதசாஸ்திரங்களில் சொல்லிய முறைப்படியே அரிச்சந்திரன் ஸ்நானம் செய்தபிறகு, அந்தத்துறையைவிட்டு அரசன் செல்ல, அந்தவிரிவான நீரிலே யிறங்கி விரைவாக அரசனைத் தொடர்ந்து கரையில்வந்து ஒருசோலையை வந்து அடைந்தார்கள் என்பதாம்.]

இ-ள். மன்னவன் - அரிச்சந்திரமகாராஜன், அருமறை நூல்வழி - அருமையான வேத நூல்களில் சொல்லிய நெறியின்படியே, ஆடிய பின்னர் - ஸ்நானம் செய்த பிறகு, மருவிய - பொருந்திய, வண்துறை - வளப்பம்பொருந்திய ஸ்நான கட்டத்தை (விட்டு), ஏக - செல்ல, விரிபுனல் தன்னில் - அந்தக் கங்கையின் மிகுந்த நீரிலே, இழிந்து - மற்றவர்களும் இறங்கி ஸ்நானம் செய்து, விரைந்தே - விரைவாக, கரைமிசைவந்து - (அரிச்சந்திரமகாராஜனைத் தொடர்ந்து) கரைக்குவந்து, ஒருகாவில் அணைந்தார் - ஒருசோலையிற்போய்ச் சேர்ந்தார்கள். எ-று.

'விரிபுனல்' வினைத்தொகை. (அக)

சோலையிலன்னவர்சோர்வொடுபுக்கார்
வேலைபுகுந்தனன்வெங்கதிரோனுங்
காலையிலேகுதுமென்றுகணித்தம்
மாலையிலவ்விடைவைகினரன்றே.

[அந்தச் சோலையில் அவர்கள் சோர்வுடன்போய்ச் சேர்ந்தார்கள். சூரியனும் கடலிலேபோய்மறைந்தான் விடிந்தபின் போவோ மென்று அந்தராத்திரி அங்கேதானே தங்கினார்கள் என்பதாம்.]

இ-ள். சோலையில் - அந்தச் சோலைக்குள்ளே, அன்னவர் - அவர்கள், சோர்வோடு புக்கார் - சோர்வோடுபோய்ச் சேர்ந்தார்கள், வெங்கதிரோனும்- கொடுமையான கிரணங்களையுடைய சூரியனும், வேலைபுகுந்தனன் - மேலைக் கடலுக்குள் புகுந்தான். (அஸ்தமனமாயிற்று), காலையில் ஏகுதும் - இந்த இரவு கழிந்து காலை விடிந்தபின்பு காலையில் போவோம், என்று - என்று, கணித்து- ஆலோசித்து, அம்மாலையில் - அந்த ராத்திரிக்காலத்தில், அவ்விடை - அந்த சோலையின் இடத்தில், வைகினர் அன்றே-தங்கினார்கள். எ-று.

'அன்று' 'ஏ' அசைகள். (கூ0)

அன்றிரவப்பொழிலவ்விடம்வைக
வன்றிறன்மாமுனிவஞ்சனையாலே
வென்றிமடங்கல்வியன்புலிவேழம்
பன்றியொடெண்குபடர்ந்தனவன்றே.

[அன்று இராத்திரி அவர்கள் அந்தச் சோலையில் தங்கியிருக்கும்பொ ழுது மிகுந்த சாமர்த்தியத்தை உடைய முனிவரின் கபடத் தினாலே சிங்கம், பெரியபுலி, யானை, பன்றி, காடி ஆகிய இவைகள்வந்து சூழ்ந்தன என்பதாம்.]

இ-ள். அன்று இரவு - அன்று இராத்திரி, அப்பொழிலவ்விடம் - அந் தச் சோலையினிடத்திலே, வைக - தங்கியிருக்க, வன்திறல் - மிகுந்த வலிமையை உடைய, மாமுனி - பெரிய விஸ்வாமித்திரமுனிவரின், வஞ்சனை யாலே - கபடத்தினாலே, வென்றிமடங்கல் - வெற்றியை உடைய சிங்கம், வியன்புலி - பெரியபுலி, வேழம் - யானை, பன்றியொடு-பன்றியோடு, எண்கு- காடி (ஆகிய இவைகள்) படர்ந்தனவன்றே - வந்து சூழ்ந்தன. எ-று.

'அன்று' 'ஏ' அசைகள். 'வன்றிறல்' ஒருபொருட்பன்மொழி மீமிசைச் சொல் என்பர் இலக்கண நூலோர். (கூக)

பொருப்பதிரப்பிளிறிக்கைபுடைத்தே
மருப்பைவிதிர்த்துமலைந்தகயங்கள்
செருப்புலிகோளரிசெங்கணும்வாயு
நெருப்புகவந்துநெருங்கினவன்றே.

[யானைகள் மலைகளும் அதிரும்படி முழங்கி துதிக்கையை அடித்து, கொம்பை அசைத்துக்கொண்டு சண்டைசெய்தன, சண்டை செய்கிற புலிகளும் சிங்கங்களும் செவந்த கண்ணும் வாயும் நெருப்புச் சிந்த வந்து நெருங்கின என்பதாம்.]

இ-ள். கயங்கள் - யானைகள், பொருப்பு அதிர - மலைகள் அதிரும்படி, பிளிறி - சப்தித்து, கைபுடைத்தே - கையை அடித்து, மருப்பை விதிர்த்து-கொம்பை அசைத்து, மலைந்த - போர்செய்தன, செருப்புலி - சண்டைசெய்கிற புலிகளும், கோளரி - சிங்கங்களும், செங்கணும் - செவந்த கண்ணும், வாயும் - வாயும், நெருப்பு உக - நெருப்புச்சிந்த, வந்து - வந்து, நெருங்கின வன்றே - நெருங்கின. எ-று. 'அன்று' 'ஏ' அசைகள்.

'கைபுடைத்து' என்பதற்கு கையை வீசி என்றும் 'மருப்பை விதிர்த்து' என்பதற்கு கொம்பை நீட்டி என்றும் பொருள் செய்வர். (கஉ)

அன்றெமினத்தையறுத்தபழிக்குக்
கொன்றுநினைக்குருதிப்புனலுண்டு
தின்றுபெரும்பசிதீருதுமென்றே
நின்றுமொழிந்துநிறைந்தசெறிந்து.

[முன்னே எங்களுடைய கூட்டங்களை எல்லாம் நீ கொன்ற பழிக்காக இப்போது உன்னைக்கொன்று உனது ரத்தத்தைக்குடித்து உன் உடலைத் தின்று பெரிய பசியைத் தீர்த்துக்கொள்ளுகிறோம் என்று நின்று சொல்லி எங்கும் நெருங்கி நிறைந்தன என்பதாம்.]

இ-ள். அன்று - முன்னே, எம் இனத்தை - எங்களுடைய கூட்டங்களை, அறுத்த - பாணங்களால் அறுத்துக்கொன்ற, பழிக்கு - பழிக்கு, கொன்று நினை - உன்னை இப்போது கொன்று, குருதிப்புனலுண்டு - இரத்தமாகிய நீரை உண்டு, தின்று - உன் உடலைத்தின்று, பெரும்பசி - எம்முடைய பெரிய பசியை, தீருது மென்றே-தீர்த்துக் கொள்ளுகிறோமென்று, நின்றுமொழிந்து-நின்று சொல்லி, நிறைந்த செறிந்து - நெருங்கி நிறைந்தன. எ-று. 'அன்று' என்றது வேட்டையாடி மிருகங்களை வதைத்த நாளைக் குறிக்கின்றது. (கங)

அன்னதுகண்டவரஞ்சிலர்தம்மைத்
தின்னுவதேயினிதென்றுதெளிந்தா
ருன்னியவெண்ணமுணர்ந்தவையெல்லா
மன்னியகானின்மறைந்தனவன்றே.

[அப்படி மிருகங்கள் வந்து கூடினதைப் பார்த்து அவர்கள் பயப்படவில்லை, தங்களை அந்த மிருகங்கள் சாப்பிட்டு விடுவதே நல்லது என்று தெளிவு கொண்டிருந்தார்கள், இவர்கள் எண்ணிய எண்ணத்தைத்தெரிந்து அந்த மிருகங்கள் எல்லாம் தாங்கள் இருக்கிற காட்டிலேபோய் மறைந்தன என்பதாம்.]

இ-ள். அன்னது கண்டு - அப்படி மிருகங்கள் வந்து கூடினதைக்கண்டு, அவர் - அரிச்சந்திரன் முதலியவர்கள், அஞ்சிலர் - பயப்படவில்லை, தம்மை-

தங்களை, தின்னுவதே - அந்த மிருகங்கள் தின்று விடுவதே, இனிது என்று- நல்லது என்று, தெளிந்தார் - தெளிவாக அறிந்தார்கள், உன்னிய எண்ணம்- இவர்கள் எண்ணிய எண்ணத்தை, உணர்ந்து - அந்த மிருகங்கள் அறிந்து, அவை எல்லாம் - அந்த மிருகங்கள் எல்லாம், மன்னியகானில் - தாங்கள் பொருந்தியிருந்த காட்டில், மறைந்தனவன்றே - போய் மறைந்தன. எ-று. 'அன்று' 'ஏ' அசைகள். (கச)

நீதிவழாதவர்நீர்மையுணர்ந்தே
சாதிவிலங்குகள்சார்விடநண்ண
வோதியவேதனுரைத்தகுறிப்பால்
வேதியன்மற்றோர்விசாரமுரைப்பான்

[நீதிவழுவாத இவர்களுடைய தன்மையை எல்லாம் தெரிந்து பல சாதி மிருகங்களும் தங்கள் தங்கள் சஞ்சரிக்கும் இடங்களுக்குப் போகவே தனக்கு விஸ்வாமித்திரர் சொன்ன குறிப்பினாலே, சுக்கிரன் இவர்களைப்பார்த்து வேறே ஒரு ஆலோசனை சொல்கின்றான் என்பதாம்.]

இ-ள். நீதி வழாதவர் - நீதி தவறாத இவர்களுடைய, நீர்மை யுணர்ந்தே- குணத்தை எல்லாம் தெரிந்து, சாதி விலங்குகள் - பல சாதியாகிய மிருகங்கள், சார்விடம் நண்ண - தாங்கள் சஞ்சரிக்கும் இடங்களுக்குப்போகவே, வோதிய- தன்னிடத்தே சொல்லிய, வேதன் - வேதங்களையுணர்ந்த விஸ்வாமித்திரமுனிவன், உரைத்த குறிப்பால் - சொல்லிய குறிப்பின்படி, வேதியன் - அவர்களோடு வந்த சுக்கிரன், மற்று ஓர் - வேறு ஒரு, விசாரமுரைப்பான் - ஆலோசனையைச் சொல்லுகின்றான். எ-று. 'நீர்மை' தன்மை, குணம், 'விசாரம்'- ஆலோசனை. (கரு)

மன்னவகேள்வினைவந்ததுசற்றே
யின்னம்வரும்வினையெல்லையிலாத
முன்னமுணர்ந்துமுனிந்தளியேனென்
றுன்னரசெய்துதலுத்தமமென்றான்

[அரசனே கேட்பாயாக இப்பொழுது உனக்கு வந்த தீய வினைகளை நினைக்கில் கொஞ்சமே, இன்னும் வரப்போகின்ற தீய வினைகளோ கணக்கில்லாதன, இவைகளை முன்னாலேயே நன்றாய்த் தெரிந்து கொண்டு முனிவருக்கு உன் அரசாட்சியைக் கொடுக்க மாட்டேன் என்று சொல்லி உன் அரசாட்சியை நீயே அடைதல் உத்தமமான காரியம் என்று சுக்கிரன் சொன்னான், என்பதாம்.]

இ-ள். மன்னவ - அரசனே!, கேள் - கேட்பாயாக, வினைவந்தது - உனக்குத் துன்பம் உண்டாகும்படி வந்த வினைகள்,' சற்றே - கொஞ்சமே, இன்னம்-

இனிமேலும், வரும் வினை - வரப்போகின்ற தீவினைகள், எல்லை இலாத-அள வில்லாதவைகள், (ஆகையால்) முன்னம் உணர்ந்து - இப்படித் தீவினைகள் வருவதை முன்னாலே அறிந்து, முனிக்கு அளியேன் என்று - முனிவருக்கு நாடு கொடேன் என்று சொல்லி, உன்னரசு எய்துதல் - உன் அரசாட்சியைப் பெற்றுக்கொள்ளுதல், உத்தமம் என்றான் - உத்தமமான காரியமென்று சுக்கி ரன் சொன்னான். எ-று. (கசு)

நின்பரமீந்திலன்யானெனநிற்ற
லென்பரநின்னரசெய்தவளித்தற்
றுன்பமுணர்ந்திவைசொல்லறுணிந்தேன்
மின்பயில்வேலவமீளுதியென்றான்.

[இன்னும் நீ கொடுக்கிறேன் என்று சொன்ன பொருளைக் கொடுக்கமாட்டேன் என்று சொல்லுகின்றதே உனது பாரம், அப்படிச் சொன்னால் உன் அர சாட்சி உனக்குக் கிடைக்கும்படிச் செய்வது எனது சுமை, மின்ன லைப்போலப் பிரகாசிக்கின்ற வேலாயுதத்தை உடையவனே! நீங்கள் படுகிற துன்பங்களை அறிந்து இவைகளைச்சொல் லத் துணிந்தேன், நான் சொன்னபடி கேட்டுத் திரும்புவாயாக என்று சுக்கிரன் சொன்னான் என்பதாம்.]

இ-ள். மின்பயில் வேலவ - மின்னலைப்போல ஒளி வீசுகின்ற வேலை உடைய அரசனே!, ஈந்திலன் யான் என நிற்றல் - மேலும் கொடுப்பேன் என்று சொன்னபொருளைக் கொடுக்கமாட்டேன் என்று சொல்லி நிற்றலே, நின் பரம் - உனது பாரம், நின் அரசு - உனது அரசாட்சியை, எய்த அளித்தல்- நீ அடையும்படிக் கொடுத்தல், என்பரம் - எனது பாரம், (ஆகையினால்) துன் பம் உணர்ந்து - இனி வரப்போவதாகிய துன்பங்களை அறிந்து, இவை சொல் லல் துணிந்தேன் - இவைகளை உனக்குச் சொல்லத் துணிந்தேன், மீளுதி என் றான் - நான் சொன்னபடியே கேட்டுத் திரும்புவாயாக என்று சுக்கிரன் கூறி னான். எ-று. (கஎ)

அந்தணனவ்வுரைகூறிடவண்ணல்
மைந்தனுமங்கையுமற்றுமுளோரு
நைந்தெனுடன்றொலைவெய்தினுநான்முன்
தந்ததுமாறிலனென்றுதணித்தான்.

[சுக்கிரன் அந்த வார்த்தை சொல்லவே அரிச்சந்திரன் என் பிள்ளையும் என் மனைவியும் இன்னம் உள்ளவர்களும் வருந்தி என்னுடனே கூடி யழிகிற தானாலும் நான் முன்னே தந்ததை இல்லை என்று சொல்லமாட் டேன் என்று சுக்கிரனுக்குக் கூறி அவன் சொல்லை அடக்கி னான் என்பதாம்]

இ-ள். அந்தணன் - அந்த வேதியனாகிய சுக்கிரன், அவ் உரை கூறிட- அந்த வார்த்தையைச் சொல்லவே, அண்ணல் - பெருமை பொருந்திய அரிச்சந்

திரமகாராஜன், மைந்தனும் - பிள்ளையும், மங்கையும் - மனைவியாகிய சந்திரவதியும், மற்றுமுளோரும் - இன்னும் உள்ளவர்களும், நைந்து - வருந்தி, எனுடன் தொலைவு எய்தினும் - என்னோடுகூடி அழிவதாயிருந்தாலும், நான்-நான், முன் தந்தது - முன்னாலே தந்ததை, மாறிலன் என்று - மாற்றமாட்டேன் என்று சொல்லி, தணித்தான் - சுக்கிரனுடைய வார்த்தையை அரிச்சந்திரன் அடக்கினன். எ-று. "நைந் என்னுடன்," எனற்பாலது "நைந்தெனுடன்" என்றாயது தொகுத்தல் விகாரம். (கஅ)

சொன்னவைகொள்கிலைசூழ்வினையெய்தி
னன்னவைபட்டறியாகுலமன்னா
வென்னவிடிந்திருளேகலுமேகி
மன்னனடைந்தனன்மற்றவரோடும்.

[அரசனே! நான் சொன்னவற்றைச் சிறிதும் நீ ஏற்றுக் கொள்ளவில்லை, ஒருவர் உண்டுபண்ண வந்து சூழ்கின்ற வினை வந்தால் அவைகளைப் பட்டுத் துன்பத்தை அறி, என்று சுக்கிரன் சொல்லக்கேட்டுச் சும்மா இருந்து விடிந்து இருள் நீங்கின உடனே, அரிச் சந்திரமகாராஜன் மற்றவர்களோடும் அவ்விடம் விட்டுப்போனான் என்பதாம்.]

இ-ள். மன்னா - ஓ அரசனே! சொன்னவை - நான் சொல்லிய ஆலோசனையை, கொள்கிலை - நீ ஏற்றுக்கொள்ளவில்லை, சூழ்வினை எய்தின் - ஒருவர் உண்டுபண்ண வந்து சூழ்கின்ற தீவினையானது வந்து சேருமானால், அவை-அவைகளை, பட்டு - அனுபவித்து, அறி ஆகுலம் - அதனால் வருகின்ற துன்பத்தை அறி, என்ன - என்று கூற, விடிந்து - பொழுது விடிந்து, இருள் ஏகலும் - இருட்டானது போன உடனே, ஏகி - போய், மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், மற்றவரோடும் - மற்றவர்களோடும், அடைந்தனன் - வேறோர் இடத்தைப் போய்ச்சேர்ந்தான். எ-று.

'ஆகுல மன்னா' சூழ்வினை எய்தின், அன்னவை பட்டு அறி என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம், 'ஆகுலம்' - துன்பம். (கக)

வல்லையிலேகிமறித்திரள்பொங்கு
முல்லைநிலத்தினைமுற்றுமகன்று
புல்லைமிகக்கொள்குறிஞ்சிபுகுந்தாங்
கெல்லையிலாமலையேறியிழிந்தார்.

[விரைவிலே சென்று ஆட்டுக்கூட்டங்கள் மிகுந்துள்ள முல்லை நில முழுதும் கடந்து, புலிகளை மிகுதியாகவுடைய குறிஞ்சி நிலத்துக்குள் புகுந்து அங்கே உள்ள கணக்கற்ற மலைகளை எல்லாம் ஏறி இறங்கினார்கள் என்பதாம்.]

இ-ள். வல்லையில் - விரைவிலே, ஏகி - சென்று, மறிதிரள் பொங்கும் - ஆட்டுக்கூட்டங்கள் மிகுந்துள்ள, முல்லை நிலத்தினை - முல்லை நிலத்தை, முற்

றும் அகன்று - முழுதும் கடந்து, புல்லை - புலியை, மிகக்கொள் - மிகுதியாகக் கொண்டிருக்கின்ற, குறிஞ்சி புகுந்து - குறிஞ்சி நிலத்துக்குப்போய், ஆங்கு - அவ்விடத்திலே, எல்லையிலா - கணக்கில்லாத, மலை ஏறி - மலைகள் எல்லாம் ஏறி, இழிந்தார் - இறங்கினார்கள். எ-று.

'காடாகு முல்லை' என்றமையால் காடும் காடு சார்ந்த இடமும் முல்லை ஆம், 'கல்லாங் குறிஞ்சி' என்றமையால் மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியால். 'புல்' - புலி. (௪00)

மேற்படி கலி விருத்தம் சந்தம் வேறு.

அரிகளுமரிகளால்வீழ்ந்தழிந்தவெங்
கரிகளுங்கரிகளான்மடிந்தகாலெறி
வரிநெடுபுலிகளும்புலிகளான்மறிந்
திரிதருமுழைகளுஞ்செறிவைப்பெய்தினர்.

[சிங்கங்களும், சிங்கங்களால் விழுந்து செத்துக்கிடக்கின்ற யானைகளும், யானைகளால் மடிந்த காலால் அறைகின்ற நீண்ட கோடுகளையுடைய புலிகளும், புலிகளினால் அறையப்பட்டு ஓடுகின்ற மான்களும் நெருங்கிய காட்டுக்குள்ளே போனார்கள் என்பதாம்.]

இ-ள். அரிகளும் - சிங்கங்களும், அரிகளால் - சிங்கங்களால், வீழ்ந்து அழிந்த - விழுந்து செத்துக்கிடக்கின்ற, வெம் கரிகளும் - வெவ்விய யானைகளும், கரிகளால் மடிந்த - யானைகளால் இறந்த, கால் எறி - காலால் அறைகின்ற, வரிநெடும் புலிகளும் - கோட்டை உடைய நீண்ட புலிகளும், புலிகளால் - புலிகளினாலே, மறிந்து திரிதரும் - மடங்கித் திரியும்படியான, உழைகளும் - மான்களும், செறி - நெருங்கிய, வைப்பு எய்தினர் - காட்டுக்குள்ளே போனார்கள். எ-று. விளச்சீர் விளச்சீர் மாச்சீர் விளச்சீர்களால் வந்த அடியையுடைய கலி விருத்தம். (௪0௧)

நானமுநாரந்தமுநாறுநாண்மலர்க்
கானமுமாரமுங்காகதுண்டமும்
பானமும்பார்தளின்முடங்கும்பாய்கரித்
தானமுந்தெரிகிலதலைமயக்கமே.

[சவ்வாதும் கஸ்தூரியும் பரிமளிக்கின்ற அன்று அலர்ந்த புஷ்பங்களையுடைய சோலையும் சந்தன விருக்ஷங்களும் அகில் விருக்ஷங்களும் பாம்புகளின் மண்டலமும் பாய்கின்ற யானை மத நாற்றமும் எல்லாம் கலந்து வாசனை வீசுவதால் வேறுபாடு தெரியவில்லை என்பதாம்.]

இ-ள். நானமும் - சவ்வாதும், நாரந்தமும் - கஸ்தூரியும், நாறும் - பரிமளிக்கின்ற, நாண்மலர்க்கானமும் - அன்று அலர்ந்த புஷ்பங்களையுடைய சோலையும், ஆரமும் - சந்தன விருக்ஷமும், காகதுண்டமும் - அகில் விருக்ஷங்களும்,

பானமும் - கள்ளும், பாந்தளின் மூடங்கும் - பாம்புகளின் மண்டலங்களும், பாய் - பாய்ந்து பெருகுகின்ற, கரித்தானமும் - யானைமதமும், தெரிகில-வேற்றுமை தெரியவில்லை, தலைமயக்கமே - எல்லாங்கலந்து நாறுதலையே உடையன அவ் இடங்கள் எல்லாம். எ-று. ஏ - ஈற்றசை.

காகதுண்டம் - அகில்விசேஷம், 'பாம்பு' அடை கிடைத்தற்காக மண்டலித்துக் கிடக்குங்கால் ஒருவித நாற்றம் வீசும், 'பானம்' என்றது கள்ளையும், தேனையும் தலை மயங்குதலினால் தெரிதாற்கில்லை என்பதாம். (கO௨)

நல்லணியரம்பையர்விஞ்சைநங்கையர்
மல்லணிநெடும்புயமணாளர்தம்முடன்
புல்லலினுதிர்ந்தசெந்தருவின்பூக்களும்
பல்லவசயனமும்பார்த்துப்போயினர்.

[நல்ல ஆபரணங்களை அணிந்த அரம்பையர்களும் வித்தியாதரப் பெண்களும், நீண்ட வலிய தோளையுடைய தங்கள் நாயகருடனே அணைதலினால் உதிர்ந்த செவந்த கற்பகத்தருவின் மலர்களும் அவர்கள்படுத்திருந்த தளிர்கள் பரப்பின படுக்கைகளும் கிடக்க அவைகளைக் கண்டுகொண்டே போனார்கள் என்பதாம்.]

இ-ள். நல் அணி அரம்பையர் - நல்ல ஆபரணங்களை யணிந்த ரம்பாஸ்திரிகளும், விஞ்சை நங்கையர் - வித்தியாதரப்பெண்களும், மல்லணி - மல் யுத்தத்தில் தேர்ந்த அழகிய, நெடும்புய மணாளர் - நீண்ட தோள்களையுடைய தங்கள் நாயகர்கள், தம்முடன் - தம்மோடு, புல்லலின்-அணைகிறதினாலே, உதிர்ந்த-உதிர்ந்து கிடக்கின்ற, செந்தருவின் பூக்களும் - செவந்த கற்பகத்தருவின் மலர்களும், பல்லவசயனமும் - அவர்கள் தளிர்கள் பரப்பின படுக்கையும், பார்த்துப் போயினர் - அங்கு கிடப்பதைப் பார்த்துக்கொண்டே போனார்கள். எ-று. ()

அழிதருமிறாலுகுநறவுமாய்மலர்ப்
பொழிதருபிரசமும்பெருகிப்பொங்கியே
வழிதருமருவிகள்சிவணிமாமணி
யிழிதருசோணமாநதியையெய்தினர்.

[தேன் கூட்டினின்றும் உடைந்து சிந்துகின்ற தேனும், வண்டாராயும் மலர்களிலிருந்து வழியும் தேனும், மிகுந்து பெருகி வழிகின்ற ஆறுகளோடு கலந்து, பெரிய முத்துக்களுடனே, ஓடிவரும் சோணமாநதியைப் போய்ச் சேர்ந்தார்கள் என்பதாம்.]

இ-ள். அழிதரும் இறால் - சிதைந்துபோன தேன்கூடானது, உகு-சிந்துகின்ற, நறவும் - தேனும், ஆய் - வண்டுகள் ஆராய்கின்ற, மலர் - மலர்கள், பொழிதரு - சிந்துகின்ற, பிரசமும் - தேனும், பெருகிப் பொங்கியே - பெருகிப்பொங்கியே, வழிதரும் அருவிகள் - வழிகின்ற தேனருவிகளோடு, சிவணி-கலந்து, மாமணி இழிதரும் - பெரிய முத்துக்களோடு இறங்கி ஓடி வருகின்ற, சோணமாநதியை - சோண மாநதியை, எய்தினர் - போய்ச்சேர்ந்தார்கள். எ-று.

'நறவு,' 'பிரசம்' தேன் என்னும் ஒருபொருளைக் குறித்த திரிசொற்கள் 'மாமணி இழிதரும்' மாமணியோடு இழிதரும் எனவிரியும், மூன்றும் வேற்றுமைத்தொகை. (௪0௪)

கடகரியிழிதுறைக்கஞ்சமுத்தமுந்
தடவரியிழிதுறைச்சரிந்தசெம்பொனும்
படவரியிழிதுறைப்பதுமராகமு
மிடமறமிளிர்வனவிரண்டுபாலுமே.

[மதயானைகளிறங்கும் துறைகளிலேயுள்ள தாமரை மலர்களின் முத்துகளும், பெரிய சிங்கங்கள் இறங்கும் துறைகளில் உள்ள செவந்த பொன்னும், படங்களையுடைய பாம்புகள் இறங்கும் துறைகளில் உள்ள பதும ராகமணியும், இருபுறத்திலும் இடந்தோன்றாமல் விளங்கு கின்றன என்பதாம்.]

இ-ள். கடகரி - மதயானைகள், இழி - இறங்குகின்ற, துறை - துறைகளில் உள்ள, கஞ்சமுத்தமும் - தாமரை மலர்களின் முத்துக்களும், தடம்-பெரிய, அரி - சிங்கங்கள், இழி - இறங்குகின்ற, துறை - துறைகளிலே, சரிந்த - சரிந்து கிடக்கின்ற, செம்பொன்னும் - செவந்த பொன்னும், படவரி- படங்களையுடைய பாம்புகள், இழி - இறங்குகின்ற, துறை-துறைகளில் உள்ள, பதுமராகமும் - பதுமராகமும், இரண்டு பாலுமே - இரண்டு பக்கங்களிலும், இடமற - இடமில்லாமல், மிளிர்வன - விளங்கிக் கொண்டிருக்கின்றன. எ-று. முத்துக்கள் பிறக்கும் இடங்களில் தாமரையும் ஒன்றாம். (௪0௫)

பருமணல்வண்டலும்பரந்தசங்கமுங்
கருமணற்புளினமுங்கடிகொள்சந்தனத்
திருமணமருவுநீர்ச்சுழியுந்தெண்புனல்
வருமணிவரன்றியவாலுகங்களும்.

[பருத்த மணலையுடைய சேரும், மிகுந்த சங்குகளும், கரிய மணல் மேடுகளும், வாசனைகொண்ட சந்தன விருக்ஷங்களினுடைய நல்ல வாசனை பரிமளிக்கின்ற நீர்ச்சுழிகளும், தெளிந்த நீரோலோதுங்குகின்ற மணிகளை வாரிக்கொண்டு வந்து எக்கலிட்ட மணற் குன்று வெள்ளைகளும் அடுத்த பாட்டோடு பொருள் முடிகின்றது.]

இ-ள். பருமணல் வண்டலும் - பருத்த மணலையுடைய சேரும், பரந்த சங்கமும் - பரவியுள்ள சங்கங்களும், கருமணல் - கரிய மணல்களாலாகிய, புளினமும் - மேடுகளும், கடிகொள் - வாசனை மிகுந்த, சந்தனத்திருமணம் மருவும் - சந்தனத்தினுடைய அழகிய வாசனை பொருந்தியுள்ள, நீர்ச்சுழியும்- நீர்ச்சுழிகளும், தெண்புனல் வரும் - தெளிந்த நீரால் ஒதுங்குகின்ற, மணி வரன்றிய - மணிகளை வாரிக்கொண்டு வந்து எக்கலிட்ட, வாலுகங்களும்- வெள்ளைமணற் குன்றுகளும். எ-று.

இச்செய்யுள் குளகம். அடுத்த செய்யுளோடு பொருள் முடிவுபெறும். 'பரந்த' ஊருகின்ற, என்றும் பொருள் உரைப்பர், (௪0௬)

குராண்டமுமன்னமுங்குருகுநாரையுந்
திரண்டபோதாக்களுந்திகிரிபுட்களு
முரண்டநீர்முடுவலுமுதலையீட்டமுங்
காண்டமுங்கம்புளுங்கண்டகண்ணெலாம்

[கொக்குகளும் அன்னங்களும் குறுகுகளும் நாரையும் திரண்டிருக்கின்ற புருக்களும் சக்கரவாகப் பட்சிகளும் மாறுபாடுள்ள நீர்நாயும் முதலைக் கூட்டங்களும் நீர்க்காக்கைகளும் சம்பங்கோழிகளும் ஆகிய இவைகளே கண்ட யிடங்களிலெல்லாம் மிகுந் திருந்தன என்பதாம்.]

இ-ள். குராண்டமும் - கொக்குகளும், அன்னமும் - அன்னப்பட்சிகளும், குருகும் - குறுகுகளும், நாரையும் - நாரைகளும், திரண்ட-திரண்டிருக்கின்ற, போதாக்களும் - புருக்களும், திகிரிப்புட்களும் - சக்கரவாகப் பட்சிகளும், முரண்ட - மாறுபட்டிருக்கின்ற, நீர் முடுவலும் - நீர் நாய்களும், முதலை யீட்டமும் - முதலைக்கூட்டங்களும், காண்டமும் - நீர்க்காக்கைகளும், கம்புளும்- சம்பங்கோழியும், (ஆகிய இவைகள் எல்லாம்) கண்ணெலாம் - இடங்களிலெல் லாம், கண்ட - காணப்பட்டன. எ-று.

'கண்ட கண்ணெலாம்' என்பதற்கு பார்க்கும் பொழுதெல்லாம் கண்களில் காணப்பட்டன. என்றும் பொருள் கூறுவர். (கOஎ)

கால்கரைமேய்கின்றகானமேதியின்
பால்கரைந்திழிபுனற்பாப்பைநீந்திப்போய்
மேல்கரைவெண்மணற்பாப்பில்வேதநன்
னூல்கரைகண்டவனெய்தினெய்தினன்.

[வாய்க்கால் கரைகளிலே மேய்கிற காட்டு எருமையின் பாலோடு கரைந்து வருகின்ற தண்ணீர் பரப்பை நீந்திப்போய் மேலே இருக்கின்ற கரை யாகிய வெள்ளை மணற்பரப்பிலே நல்ல வேதசாஸ்திரங்களின் கரையைக் கண்டவனான அரிச்சந்திரமகாராஜன் விரை வில் போனான் என்பதாம்.]

இ-ள். கால்கரை - வாய்க்கால்களின் கரைகளிலே, மேய்கின்ற - மேய் கின்ற, கானமேதியின் - காட்டெருமைகளின், பால் - பாலோடு, கரைந்து- கரைந்து, இழிபுனல் - ஓடி வருகின்ற, பாப்பை - பரப்பை, நீந்தி - கடந்து, போய் - போய், மேல்கரை - மேல் கரையிலுள்ள, வெண்மணல் பரப்பில்- வெள்ளிய மணற் பரப்பிலே, வேத நன்னூல் கரைகண்டவன்-வேத நன்னூற் களின் கரையைக் கண்டவனாகிய அரிச்சந்திரன், நொய்தின் - விரைவாக, எய் தினன் - சென்றான். எ-று.

'பால்கரைந் திழிபுனற் பாப்பை நீந்தி' என்பதற்கு பால்கரைந்து வழியப் பெற்ற புனலின் பரப்பை நீந்திப்போய் என்றும் அன்வயித்துப் பொருள் கொள்ளலாம். (கOஅ)

அடர்ந்தபூஞ்சோலையினன்றுதங்கியே
விடிந்தபின்னவ்விடம்விட்டகன்றுபோய்ப்
படர்ந்தவெங்கானமும்பருப்பதங்களும்
கடந்துபோயமுனையின்கரையைமேவினர்.

[நெருங்கி யிருக்கின்ற அந்தப் பூஞ்சோலையில் அன்று தங்கியிருந்து பொழுது விடிந்த பிற்பாடு அந்த இடத்தை விட்டு நீங்கிப்போய், பாவுதலான கொடிய காடுகளையும் பெரிய மலைகளையும் கடந்து சென்று யமுனையாற்றின் கரையைச்சேர்ந்தார் என்பதாம்.]

இ-ள். அடர்ந்த - நெருங்கிய, பூஞ்சோலையின் - பூஞ்சோலையிலே, அன்று - அன்றுராத்திரி, தங்கியே - தங்கியிருந்து, விடிந்தபின் - பொழுது விடிந்த பிற்பாடு, அவ்விடம் விட்டு அகன்று - அந்த இடம் விட்டு நீங்கி, போய் - போய், படர்ந்த - பாவிய, வெம் - கொடிய, கானமும் - காடுகளையும், பருப்பதங்களும் - பெரிய மலைகளையும், கடந்துபோய் - கடந்து சென்று, யமுனையின் கரையை - யமுனை யாற்றங்கரையை, மேவினர் - போய்ச்சேர்ந்தார்கள். எ-று. (கOக)

எடுத்தமன்னனைத்துறந்திருடிதன்னுட
னடுத்தகற்பழகிதென்றவனிமங்கையைக்
கடுத்திடித்திறைவனைக்கடிதுமீள்கெனத்
தடுத்தவாறொத்துளதியமுனைதானுமே.

[தன்னைத் தாங்கியிருந்த அரசனை விட்டு விட்டு ஒரு ரிஷியுடனே இப்பொழுது நீ கூடுவதான உன் கற்பு அழகாய் இருக்கிறதென்று பூமிதேவியாகிய பெண்ணை, கோபித்து இடித்துவிட்டு அரசனைச் சீக்கிரம் திரும்பு என்று தடுத்ததுபோல் இருந்தது அந்த யமுனையாறு என்பதாம்.]

இ-ள். எடுத்த - தன்னை இதுவரையிலும் தாங்கியிருந்த, மன்னனை - அரிச்சந்திரமகாராஜனை, துறந்து - நீங்கி, இருடி தன்னுடன் - விஸ்வாமித்திர முனிவருடன், அடுத்த - நீ கூடியிருப்பதாகிய, கற்பு - கற்பின் தன்மை, அழகிது என்று - அழகாய் இருக்கிறது என்று, அவனி மங்கையை - பூமியாகிய பெண்ணை, கடுத்து இடித்து - கோபித்து இடித்துவிட்டு, இறைவனை - அரிச்சந்திரமகாராஜனை, கடிது - சீக்கிரம், மீள்கென - திரும்பு என்று, தடுத்தவாறு - தடுத்த தன்மையை, ஒத்துளது யமுனை தானுமே - ஒத்திருக்கின்றது அந்த யமுனையாறு. எ-று. 'தான்' உம், 'ஏ' அசைகள்.

'அலைபூமியில் மோதுவது பூமியில் இடிப்பதுபோலும் ஆறு குறுக்கே ஓடுவது தடுப்பது போலவும் இருக்கிறது என்பதாம். (கக0)

கட்டநினன்பொருள்கௌசிகன்கொளப்
பட்டனவதற்கிதுபகுதிகொள்கென

விட்டெனயமுனையாறியாணர்ச்சந்தகில்
மட்டறக்குவித்ததுமணியும்பொன்னுமே.

[அடக்கம் செய்து வைத்திருந்த உனது நல்ல பொருள்கள் விஸ்வாமித்திரனால் கொள்ளப்பட்டன, அதற்காக இது உனக்குக் கொடுக்கவேண்டிய பகுதி யாகக் கொள்க என்று பொருள்களைக் குவித்ததுபோல, யமுனை யாறானது அழகான சந்தனக் கட்டைகளையும் அகில் கட்டை களையும் மணிகளையும் பொன்களையும் அளவில்லாதபடி குவித்தது என்பதாம்.]

இ-ள். கட்டகின் நன்பொருள் - அடக்கம் செய்து வைத்திருந்த உன்னு டைய நல்ல பொருள்கள், கௌசிகன் கொளப்பட்டன - விஸ்வாமித்திரரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது, அதற்கு - அதற்காக, இது - இதனை, பகுதி கொள் கென - பகுதிப் பொருளாகக் கொள்க என்று, விட்டென - குவித்து விட்ட டதைப்போல, யமுனையாறு - அந்த யமுனை யாறானது, யாணர் - அழகிய, சந்து - சந்தனக் கட்டையையும், அகில் - அகில் கட்டையையும், மணி யும் - ரத்தினங்களையும், பொன்னும் ஏ - பொன்களையுமே, மட்டற - அளவற்ற படி, குவித்தது - குவியல் செய்தது, எ-று. 'ஏ' ஈற்றசை என்பாரும் உண்டு.

கொழித்தசெம்மணிகளும்பொன்னுங்கோசிகற்
கழித்திடற்கெண்மடங்கானதாயினு
மெழிற்றவமுனிவனுக்கீந்தவெல்லையி
னுழிப்பொருள்கொள்ளுதற்காதென்றுன்னினன்

[அந்த நதி அலைகளால் ஒதுக்கின செவந்த ரத்தினங்களும் பொன்னும் விஸ் வாமித்திர முனிவருக்கு கொடுக்கவேண்டிய கடனை தீர்த்துவிடற்கு வேண்டிய பொருளைக் காட்டிலும் எட்டுமடங்கு அதிகமாக இருந்தாலும், அழகிய தவமுனிவருக்கு கொடுத்த பூமி யின் எல்லைக்குள்ளே இருக்கின்ற பொருளாத லினால் அதை எடுத்து நமது கடனைத் தீர்த்தல் தகாதென்று நினைத் தான் என்பதாம்.]

இ-ள். கொழித்த - (அந்த யமுனை நதியானது) அலைகளால் ஒதுக்கின, செம்மணிகளும் - செவந்த ரத்தினங்களும், பொன்னும் - பொன்களும், கோசி கற்கு அழித்திடற்கு - விஸ்வாமித்திருக்குச் சேரவேண்டிய கடன் தொகை யைத் தீர்ப்பதற்கு, எண்மடங்கு - எட்டு மடங்கு, ஆனது ஆயினும் - அதிக மானதா யிருந்தாலும், எழில் - அழகுபொருந்திய, தவமுனிவனுக்கு-தவமுனி வாகிய விஸ்வாமித்திர முனிவருக்கு, ஈந்த - கொடுத்த, எல்லையின் உழி-நாட் டின் எல்லைக்குள்ளேயுள்ள, பொருள் கொள்ளுதல் - (கடனைத் தீர்த்தற்பொரு ட்டு) அந்தப்பொருளை எடுத்தல், தகாது என்று - தகுந்ததான காரியமல்ல என்று, உன்னினன் - நினைத்தான். எ-று.

'அழித்திடல்' விஸ்வாமித்திரரின் கடனை அழித்திடல், 'அளித்திடல்' என்பது பாடமாயின் கொடுப்பதற்கு, என்பது பொருளாம். (கக௨)

இன்னதுநிகழ்வுழியிறைவன்காளிந்தி
நன்னதிக்கரையினைநண்ணிவைகினு
னன்னதித்துறைபடிந்தாடிவைகுமம்
மன்னெதிர்கௌசிகன்வந்துதோன்றினான்.

[இப்படிக் காரியங்கள் நடந்து கொண்டிருக்கின்றபொழுது, அரிச்சந்திர மகாராஜன் அந்தக் காளிந்தி நதிக்கரையை அடைந்து தங்கினான். அந்த நதியிலே முழுகி ஸ்நானம் செய்து அங்கு தங்கியிருந்த அரிச்சந்திரன் முன் விஸ்வாமித்திரமுனிவர் வந்து தோன்றினார் என்பதாம்.]

இ-ள். இன்னது நிகழ் புழி - இப்படியான காரியங்கள் நடந்துகொண்டிருக்கின்றபொழுது, இறைவன் - அரிச்சந்திரமகாராஜன், காளிந்தி நன்னதிக் கரையினை - அந்தக் காளிந்தி என்னும் நல்ல நதியின் கரையை, நண்ணி- கிட்டி, வைகினான் - அங்கே தங்கியிருந்தான், அன்னதித்துறை - அந்த நதியின் துறையிலே, படிந்து ஆடி - முழுகி ஸ்நானம் செய்து, வைகும் - அங்கு தங்கி யிருக்கும், மன் எதிர் - அந்த அரிச்சந்திரமகாராஜனுக்கு முன்னே, கௌசிகன் - விஸ்வாமித்திரமுனிவர், வந்து தோன்றினான் - வந்து தோன்றலாயினர். எ-று.

'அன்னதி' என்றது 'அந்நதி' என்று தந்நகரம் பெற்றிருத்தல் வேண்டும் ஈண்டு எதுகை நயம்பற்றி றன்னகரமாக எழுதினார்போலும், தந்நகரமாயே எழுதி யிருப்பினும் எதுகைக்குற்றம் ஏற்பட்டிராது. என்றாலும் அழகு கெடாதிருத்தல் கருதி இப்படிச் செய்துள்ளார் எனக் காண்கின்றது. (ககங)

அறுசீர்க்கழில் நெடிலடி ஆசிரிய விருத்தம்.

அரவுயிர்த்தமணிதுற்றுதரபந்தனமழுத்தியதன்மேல்
மரவுரித்தொகைவிசிப்புறநெருங்கியமருங்குறவிடீஇக்
கரதலப்பிரணவத்தொழில்செவிப்புடைகலக்கமுடிமேல்
குரவுநொச்சிவெள்ளெருக்கலரிகொத்திதழியுற்றலையவே.

[நாகரத்தினங்கள் பதித்துள்ள உதர பந்தனங்கள் அணியப்பெற்றும், அதற்கு மேல் மரவுரியினது தொகுப்பு கட்டப்பெற்றிருக்கவும், மிகவும் நெருங்கிய இடை தோன்றவும் கையைத் தொங்கவிட்டு எண்ணிச்சொல்லும் பிரணவத்தின் உச்சரிப்பு காதிலே கூடவும், தலையின்மேலே குரவ மலரும், நொச்சி மலரும், வெள்ளெருக்க மலரும் அலரி மலரும் கொத்துக்களாகிய கொன்றைப்பூவும் அசைவதாகவும் என்பதாம்.]

இ-ள். அரவுயிர்த்த - பாம்புகள் பெற்ற, மணி - ரத்தினங்கள், துற்று- பதித்த, உதரபந்தனம் - உதர பந்தனத்தை, அழுத்தி - இடையிலே வரித்து

கட்டி, அதன்மேல் - அதற்குமேலே, மாவுரித்தொகை - மாவுரிகளின் கூட்டங்கள், விசிப்புற - கட்டப்பட்டிருக்கவும், நெருங்கிய மருங்கு உற - நெருங்கிய இடுப்புத்தோன்றவும், விடை இசாதலம் - கைவிரல்களை விட்டு எண்ணிச் செபிக்கும், பிரணவத்தொழில் - பிரணவ உச்சரிப்பானது, செவிப்புடை கலக்க-காதுகளிலே சேரவும், முடிமேல் - தலைமேல், குரவு-குரவமலரும், நொச்சி-நொச்சிமலரும், வெள் எருக்கு - வெள்ளெருக்க மலரும், அலரி - அலரிப்பூவும். கொத்து இதழி - கொத்துக் கொத்தாயுள்ள கொன்றைப்பூவும், உற்று அலையவே - பொருந்தி அசையவும். எ-று.

இச்செய்யுள் குழகம், இது முதல் மூன்று செய்யுள்கள் குழகங்கள். 'உதரபந்தம்' ஒட்டியாணம் போன்றதோர் ஒரு ஆபரணம்போலும் இவை பெரும்பாலும் விளச்சீர், விளச்சீர், விளச்சீர், மாச்சீர், மாச்சீர், மாச்சீர் என ஆறுசீர் வந்த விருத்தம். (கக௪)

இடைநுடங்கியுமடங்கியுமெழுந்துறவலைந்திடுசெழுஞ்
சடைகுலைந்துறவரிந்தணிதலந்தனில்விழுந்துபுரள
வடநெடுங்கனலும்விண்டலமுமண்டலமும்வெந்துகருகக்
கடைநெடுங்கொடுவிழித்தொறுகடுங்கனல்கனன்றெரியவே.

[இடையானது துவண்டும், சுருண்டும் நீண்டும், மிகவும் அலைதலையுடைய செழுமையான சடைகள் குலைந்துபோகவும், நீண்டு அழகிய பூமியில் விழுந்து புரளவும், நெடிதான வடவாமுகாக்கினியும் விண்ணுலகும் மண்ணுலகும் வெந்து தீயவும், கடைக்கண்களிலே நீண்ட கொடுமை கொண்ட கண்களைத் திறந்து பார்க்குந்தோறும் கொல்லுவதான நெருப்பு கொதிப்புக் கொண்டெரியவும், என்பதாம்.]

இ-ள். இடை - இடுப்பானது, நுடங்கியும் - துவண்டும், மடங்கியும்- மடங்கியும், எழுந்து உற அலைந்திடும் - எழுந்து மிக அலையும், செழும் சடை- செழுமையான சடைகள், குலைந்து - கலைந்து, உற - மிகவும், வரிந்து-நீண்டு, அணி - அழகிய, தலந்தனில் - பூமியில், விழுந்து புரள - விழுந்து புரளவும்; வடநெடுங்கனலும் - நீண்ட வடவாமுகாக்கினியும், விண்டலமும் - விண்ணுலகும், மண்டலமும் - மண்ணுலகும், வெந்து கருக - வெந்து தீயவும், நெடும்- நீண்ட, கொடுவிழி - கொடுமையான விழிகளின், கடைதொறும் - கடைக்கண்களில் எல்லாம், கடும் கனல் - கடுமையான நெருப்பானது, கனன்று எரியவே - கொதிப்புக் கொண்டெரியவும். எ-று. ஏ - ஈற்றசை. தேற்றப் பொருளது என்பாருமுண்டு.

'இடை நுடங்கியும் மடங்கியும்.' இடுப்புத் துவண்டும் மடங்கியும், என்றும் இயைப்பர். எழுந்து உற அலைந்திடு செழுஞ்சடை-மேலே கிளம்பி மிக அலையும் செழுமையாகிய சடை, குலைந்து - கலைந்து, உற வரிந்து - மிகக் கட்டியும், அணிதலந்தனில் இழுப்புற - அழகிய பூமியில் இழுப்புறவும், எனவும் பொருள் கூறலாம். (ககடு)

படைபிடித்தணிசெறித்தகைபவித்திரதருப்பைநிறுவிக்
குடைபிடித்துவரமற்றொருகைகுண்டிகைபிடித்துவரவே
மடைபிடித்தவயன்மண்டலமுமாநகரும்வண்பொருளுமுன்
கொடைகொடுத்தகருணைத்திருமுகக்குரிசிலைக்குறுகினான்.

[விஸ்வாமித்திரர் ஆயுதங்களைப் பிடித்து ஆபரணங்களைப் பூண்ட கையிலே பவுத்திரமும் தருப்பையும் கொண்டு ஒரு கை குடை பிடித்து வரவும் மற்றொரு கை கமண்டலம் பிடித்து வரவும், வருகின்றவராய் மடைகளைக்கொண்ட வயல்நிறம்பிய நாட்டையும் பெரிய நகரத்தையும் வளப்பம்பொருந்திய பொருளையும் முன்னாலே தனக்குக் கொடையாகக் கொடுத்த கிருபைபொருந்திய அரிச்சந்திரமகாராஜனைக் கிட்டினான் என்பதாம்.]

இ-ள். படை பிடித்து - ஆயுதங்களைப் பிடித்து, அணி செறித்த கை- ஆபரணங்களை அணிந்திருந்த கையிலே, பவித்திர தருப்பை நிறுவி - பவித்திரமும் தருப்பையும் கொண்டு, குடை பிடித்துவர - (ஒரு கையானது) குடை பிடித்து வரவும், மற்றொரு கை - மற்றொரு கையானது, குண்டிகை பிடித்து வரவே - கமண்டலத்தைப் பிடித்துக்கொண்டு வரவும், மடைபிடித்த வயல் மண்டலமும் - நீர்பாயும் மடைகளை மிகுதியாகக் கொண்ட வயல்களையுடைய நாட்டையும், மாநகரும் - பெரிய நகரத்தையும், வண்பொருளும் - வளமை மிகுந்த திரவியத்தையும், முன் - முன்னாலே, கொடை கொடுத்த - கொடையாகக்கொடுத்த, கருணை - கிருபையை உடைய, திருமுகக் குரிசிலை - அழகிய முகத்தை உடைய அரிச்சந்திரமகாராஜனை, குறுகினான் - கிட்டினான். எ-று.

படையும் அணியும் கையிற் கொண்டிருந்தது முன் அரசனாயிருந்த போது. (கககூ)

கண்டனன்கருணையங்கடல்கடுங்கௌசிகன்வரவினை
மண்டலத்தலைவர்மந்திரிகடன்பணிமறுத்தனர்கொலோ
தண்டமென்றன்மிசையுண்டெனமேலிந்திருசரண்டழுவியே
கொண்டனன்புனலிரண்டுகணுநின்றுகுதிகொண்டொழுகவே.

[கிருபைக் கடலான அரிச்சந்திரன் கடுமையான விஸ்வாமித்திர முனிவர் வருவதைக்கண்டான், கண்டவுடனே! மண்டலீகராகிய அரசர்களும், மந்திரிகளும் தங்கள் உத்தரவைத் தடுத்துப் பேசினார்களோ? அப்படி அவர்கள் மறுத்திருந்தால் அதற்குத் தண்டனை எனக்கு வந்து சேருமே, என்று மனமெலிவு கொண்டு, அவர் பாதங்களில் இரண்டு கண்களின் நீரும் நிலைத்துக் குதிகொண்டு ஒழுகப் போய் பிடித்துக்கொண்டான் என்பதாம்.]

இ-ள். கடும் - கடுமையாகிய, கௌசிகன் வரவினை - விஸ்வாமித்திரமுனிவரின் வருகையை, கருணையம் கடல் - கிருபா சமுத்திரனாகிய அரிச்சந்திரமகா

ராஜன், கண்டனன் - பார்த்தான், மண்டலத்தலைவர் - மண்டலிகர்களாகிய அரசர்களும், மந்திரிகள் - மந்திரிமார்களும், தன்பணி - தமதுஉத்தரவை, மறுத்தனர் கொலோ - தடுத்தும் பேசினார்களோ? தண்டம் - அந்தத் தப்பிதத்திற்குத் தண்டனை, என்றன்மிசை - என்னிடத்தே, உண்டெனு - உண்டாகும் என்றுசொல்லி, மெலிந்து - மனம் மெலிவடைந்து, இரண்டு கணும்-இரண்டு கண்ணும், புனல் - நீரானது, நின்று - நிலைத்து, குதிகொண்டு ஒழுகவே-குதிகொண்டு பாயும்படி, இருதாள் - அந்த முனிவரின் இரு பாதங்களையும், தழுவியே கொண்டனன் - போய்ப் பிடித்துக்கொண்டான். எ-று. ஏ - ஈற்றசை.

எந்தநாயகவுனக்கெமர்நெடும்பிழையிழைத்தனர்கொலோ
தந்தமாநிதியினிற்சிலகரந்துசிலதந்தவுளவோ
வுந்தமேவறவறிச்சிலர்பிழைத்தெதிருரைத்தனர்கொலோ
வந்தகாரணமெடுத்தினிதுரைத்தருள்வருத்தமறவே.

[எங்கள் நாயகனே! உனக்கு என்னைச்சேர்ந்த மந்திரி முதலானவர்கள், பெரும் பிழை செய்து விட்டார்களோ? நான் கொடுத்த மிகுந்த திரவியங்களிலே சிலவற்றை மறைத்துக்கொண்டு கொடுத்தவையுண்டோ, உம்முடைய ஏவலுக்குத் தவறி சிலர் குற்றமுடையவர்களாகி எதிர்த்துப் பேசினவர்கள் உண்டோ? தேவரீர் இங்கு எழுந்தருளிய காரணத்தை வருத்தம் தீரும்படி இன்னதென்று தெரிய நன்றாய்ச் சொல்லியருளும் என்று அரிச்சந்திரன் கேட்டான் என்பதாம்.]

இ-ள். எம் தம் நாயக - எங்களுடைய நாயகனே!, உனக்கு - உமக்கு, எமர் - என்னைச்சேர்ந்த மந்திரி முதலானவர்கள், நெடும்பிழை - பெரிய குற்றத்தை, இழைத்தனர் கொலோ - செய்தார்களோ?, தந்தமாநிதியினில் - நான் உமக்குக் கொடையாகத்தந்த பெரிய திரவியத்தில், சில கரந்து - சிலவற்றை மறைத்துக்கொண்டு, சில தந்த உளவோ - சில தான் கொடுத்தது உண்டோ?, உம் தம் ஏவல் தவறி - உமது கட்டளையைத் தவறி, சிலர் பிழைத்து - சிலர் குற்றமுடையவர்களாகி, எதிர் உரைத்தனர் கொலோ - எதிர்த்துப் பேசினார்களோ?, வந்தகாரணம் - நீர் இங்கு இப்பொழுது வந்த காரணத்தை, வருத்தமறவே - வருத்தங்கள் தீரும்படி, எடுத்து இனிது உரைத்தருள் - இன்னதென்று தெரியும்படி நன்றாகச் சொல்லி யருளவேண்டும் என்று அரிச்சந்திரன் முனிவனைக் கேட்டான். எ-று. ஏ - ஈற்றசை. (கக அ)

இந்தவெங்கடமணைந்துடறளர்ந்துயிரிடைந்தனையெனு
நொந்தனன்மனதுநொந்துபடர்சிந்தனைதணிந்திடமுனி
தந்தநாடுநகர்தந்ததிலையென்றுமொழிதந்
தந்தநாடுதனில்வந்தரசுகொண்டுறைகவென்றருள்செய்தான்.

[இந்தக் கொடிய காட்டில் வந்து உன் உடம்பு தளர்ந்து உயிர் வருந்தினை என்று நான் மனம் வருந்தினேன், நொந்து வருந்துகின்ற என் மனம் தணிவடையும்படி, முன்னாலே நீ எனக்குத்தந்த நாட்டையும் நகரையும் கொடுக்கவில்லை என்று ஒருவார்த்தை சொல்லிவிட்டு, நீ கொடுத்த நாட்டில் வந்து உன்னுடைய அரசாட்சியைக் கைக்கொண்டு வாழக்கடவை என்று கூறினார் என்பதாம்.]

இ-ள். இந்த வெம் கடம் அணைந்து-இந்தக் கொடிய காட்டை அடைந்து, உடல் தளர்ந்து - உடம்பு தளர்ந்து, உயிர் இடைந்தனை என - உயிர் வருந்தினாய் என்று, நொந்தனன் மனது - மனது நொந்தேன், நொந்து படர் சிந்தனை தணிந்திட - நொந்து வருந்துகின்ற என்மனம் சாந்தமாகும்படி, முன் - முன்னாலே, நீ தந்தநாடு - நீ கொடுத்த நாட்டையும், நகர் - நகரையும், தந்திலை என்று மொழிதந்து - நான் தரவில்லை என்று ஒரு சொல்லைச்சொல்லி விட்டு, அந்த நாடுதனில் - நீ கொடுத்த அந்த நாட்டில், வந்து - வந்து, அரசுகொண்டு- உன் அரசாட்சியை நீயே மேற்கொண்டு, உரைக என்று - வாழக்கடவை என்று அருள் செய்தார். எ-று.

"நொந்து படர் சிந்தனை, தணிந்திட முனி" என்பதற்கு 'நொந்து படர் சிந்தனை தணிந்திடாமுனி' என்று பொருள் கொள்வர். 'தணிந்திடா' என்றது 'தணிந்திட' எனக்குறுக்கல் விகாரம் பெற்றது என்பர். (கககூ)

எந்தநல்லுயிருமென்கிளைஞரின் னுயிருமன் னுயிர்களு
நந்தினும்முடல்பதைக்கநரகத்தினிலிருத்திவிடினு
முந்தவந்தணரறிந்திடமொழிப்படியளித்தபொருளைத்
தந்ததில்லையெனவுன்றனெதிர்நின் றுரைசெயத்தகுவதோ.

[எங்கள் நல்ல உயிரும் என்னுடைய சுற்றத்தார்களின் இனிய உயிரும், இன்னும் மற்றுமுள்ள உயிர்களும் கெட்டாலும் உடம்பு துடிக்க நரகத்தில் என்னைக் கிடக்கும்படிச் செய்தாலும், முன்னாலும் வேதியர்கள் அரிய உம்முடைய சொல்லின்படி கொடுத்த பொருளை வாங்கிக்கொண்ட உனக்கு முன்னாலேயே இருந்து நான் கொடுக்கவில்லை என்று சொல்லத்தக்கதோ என்பதாம்.]

இ-ள். எம் தம் நல் உயிரும் - எங்களுடைய நல்ல உயிரும், எம் - எங்களுடைய, கிளைஞர் - சுற்றத்தார்களுடைய, இன் - இனிய, உயிரும் - உயிரும், மன் உயிர்களும் - இன்னும் மற்றுள்ள நிலைபெற்ற உயிர்களும், நந்தினும்- கெடுவதாயிருந்தாலும், உடல் - உடம்பானது, பதைக்க - துடிக்க, நரகத்தில்- நரகத்திலே, இருத்தி விடினும் - இருக்கும்படிச் செய்துவிட்டாலும், முந்த- முன்னாலே, அந்தணர் அறிந்திட - வேதியர்கள் அறியும்படி, மொழிப்படி-உம்முடைய சொல்படி, அளித்த - கொடுத்த, பொருளை - பொருள்களை, தந்ததில்லை என - நான் கொடுத்ததில்லை என்று, உன்றன் எதிர் நின்று - பெற்றுக் கொண்ட உனக்கு எதிரிலேயே இருந்து, உரைசெயத் தகுவதோ - நான் சொல்லத்தக்கதோ, என்றான் அரிச்சந்திரன். எ-று. ஓகாரம் வினாப்பொருளது. ()

கடிஞையிட்டபலியைக்கையிலெடுத்தடுபசிக்குநுகரு
மிடியரிப்புவியிடத்திலையெனக்கிதுவிதித்ததலவென்
றடிகளிற்காமிறுக்கினனிறுக்கிடமறுத்தரசன்முன்
கடியசொற்கொடுவினைக்கௌசிகப்பெயரினன்கழறுவான்.

[பாத்திரத்திலே இட்ட பிச்சையை திரும்ப பிச்சை யிட்டதாமே பசிக்கு அதைக் கையில் எடுத்துச் சாப்பிடும் தரித்திரரை நான் இந்த உலகில் கண்டதில்லை எனக்கு இப்படிக் கட்டளையிடுவது தகாதது என்று முனிவர் பாதங்களை பலமாய்ப் பிடித்துக் கொண்டான், அவனை விலக்கி அரிச்சந்திரன் முன்னாலே கடுமையான சொற்களைக் கொண்டு கொடுமையுள்ள விஸ்வாமித்திரர் கூறுகின்றார் என்பதாம் ]

இ-ள். கடியையிட்ட - பிச்சைப் பாத்திரத்திலே யிட்ட, பலியை - பிச்சையை, கையிலெடுத்து - பிச்சையிட்டவர்களே அதைத்திரும்பவும் கையில் எடுத்து, அடுபசிக்கு - தம்முடைய வருத்துகின்ற பசிக்கு, நுகரும் - சாப்பிடும்படியான, மிடியர் - தரித்திரர்களை, இப்புவியிடத்திலை - இந்தப் பூமியில் நான் கண்டதில்லை, எனக்கு - எனக்கு, இது விதித்தது - இந்தவிதமாக உத்தரவு செய்தது, அலவென்று - தருமம் அல்லாததென்று, அடிகளில் - விஸ்வாமித்திருடைய பாதங்களில், காம் இறுக்கினன் - தன் கைகளால் இறுகப் பிடித்துக்கொண்டான், இறுக்கிட - அப்படி அரிச்சந்திரன் பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளவே, மறுத்து - அதனை உதறிவிட்டு, அரசன்முன் - அரிச்சந்திர மகாராஜனுக்கு முன், கடியசொல் - கடுமையான சொற்களை, கொடுவினைக் கௌசிகப்பேர் - கொடிய வினைகளைச்செய்கின்ற கௌசிகன் என்னும் பெயரை உடைய முனிவர், கழறுவான் - சொல்லுகின்றார். எ-று. 'கழறுவான்' இதில் 'வான்' வினை எச்சவிகுதி. (௩௨௧)

தொக்கபற்பலவிலங்குகடொடர்ந்துடல்பிளந்துகலியும்
புங்கவிக்குடிஞையிற்குடிஞைபற்பலயொருப்புமஃதா
லிங்கடத்தினிலவத்திலெளிதிற்புகுதரக்கதலவென்
மக்களைத்திருமணஞ்செய்துபுணர்ந்துநின்வளம்பெறுதியால்.

[கூடியுள்ள பற்பல மிருகங்கள் உங்களைப் பின்பற்றி வந்து உங்கள் உடம்பைப் பிளந்து துன்பப்படுத்தும், நீங்கள் வந்து இறங்கின இந்த ஆற்றிலே பல பட்சி ஜாதிகளைக் கொண்டதாய் இங்குள்ள மலைகளும் அவ்வகை மிருகங்களை யுடையனவே ஆகையால், இப்படிப்பட்ட காட்டிலே வீணாக வந்து அலட்சியமாக எண்ணிச்செல்லுதல், தக்கதல்ல, என் பெண்களைக் கல்யாணம் செய்துகொண்டு அவர்களோடு கூடி உன் வளங்களை எல்லாம் நான் தர நீயே பெறுவாயாக என்று அரிச்சந்திரன் கூறினான் என்பதாம்.]

இ-ள். தொக்க - கூடியுள்ள, பற்பல விலங்குகள் - பல பல வகையான மிருகங்கள், தொடர்ந்து - பின்பற்றி வந்து, உடல் - உங்கள் உடம்புகளை,

பிளந்து - பிளந்து, நலியும் - துன்பம் செய்யும், புக்க - நீங்கள் இப்பொழுது வந்து புகுந்துள்ள, இக்குடிஞைபில் - இந்த ஆற்றில், குடிஞை பற்பல - பட்சி சாதிகளைக் கொண்டதாய் இங்கு உள்ள, பொருப்பும் - மலைகளும், அஃதே- அதே தன்மையை உடையன, இக்கடத்தில் - இந்தக் காட்டினிடத்தே, அவத்தில் - வீணே, எளிதில் புகுதல் - அலட்சியமாக எண்ணிச்செல்லுதல், தக்கது அல - தகுதியான காரியமன்று, என் மக்களை - என்னுடைய பெண்களை, திருமணம் செய்து - கல்யாணம் செய்துகொண்டு, புணர்ந்து - கூடி, நின்வளம் பெறுதியால் - நீ என்னிடத்தில் கொடுத்த உன் வளங்களை எல்லாம் அடையக் கடவை. எ-று. ஆல் - ஈற்றசை. (கஉஉ)

கண்ணிலாதமதனப்பிணிகருத்திடைபெருத்திடின்மனத்
தெண்ணிலாதுயிரிறுத்திடுமிடத்தினுமிடுக்கணுறுவார்
மண்ணிலாசையும்நிதிப்பெருவளத்தினிடைவைத்தமனமும்
பெண்ணிலாசையுமொருத்தர்கைபிடித்துவிடுதற்குரியதோ

[கண் இல்லாத காமநோய் மனதில் பெருகுமேயானல் மனதில் வேறு ஒன்றையும் நினைக்கவொட்டாது செய்து உயிரையும் அழிக்கும் எந்த இடத்தும் துன்பப்படுவார்கள் மண்ணில் ஆசையும் திரவியமாகிய பெரிய செல்வத்தில் ஆசையும் பெண்களின்மேல் ஆசையும் ஒருவர் கை பிடித்து திருப்பி விடுவதற்கு உரியது ஆகுமோ என்பதாம்.]

இ-ள். கண் இலாத - கண் இல்லாத, மதனப்பிணி - காமநோய், கருத்திடை - மனத்தில், பெருத்திடின் - பெருகினுல், மனத்து - மனதிலே, எண்ணிலாது - வேறு ஒன்றையும் எண்ணச்செய்யாது, உயிர் - உயிரை, இறுத்திடும் - அழித்து விடும், இடத்தினும் - எந்த இடத்தினும், இடுக்கண் உறுவர்- துன்பப்படுவார்கள், மண்ணில் ஆசையும் - மண்ணின் மேல் உள்ள ஆசையும், நிதி - செல்வமாகிய, பெருவளத்தினிடை - பெரிய வளத்தில், ஆசையும்- ஆசையும், ஒருத்தர் - ஒருத்தர், கை பிடித்து - கையைப்பிடித்து, விடுவதற்கு- விடுவதற்கு, உரியதோ - உரிய தாகுமோ (ஆகாது) எ-று. 'ஓ' வினப்பொருளில் வந்தது. 'இடத்தினு மிடுக்கண்டறுவர்' மறைத்து வைக்கினும் துன்பப் படுவார்கள் என்றும் பொருள் கூறுவர். 'காமத்துக்குக் கண்ணில்லை' என்பதுவே பழமொழி, பெண்ணுசை மண்ணுசை பொன்னுசை ஆகிய இந்த மூன்று ஆசையும் ஒருவருக்குத் தானே உண்டாகி தானே தன் வழி இழுத்துப்போவதே அல்லாமல் ஒருவர் உண்டாக்க உண்டாகி அவர்கள் சொல்லுகிறபடி நடப்பதல்ல, அந்தப் பெண்களின் மேலும் மற்ற நாடு பொன் ஆகிய இவைகளில் எனக்கே ஆசை தோன்றவேண்டுமே அல்லது நீர் உண்டாக்க உண்டாகுமோ, அப்படி எனக்கு உண்டாயின் நான் மறைத்துவைக்க முடியுமோ? மறைத்து வைப்பினும் என்னை அழித்துவிடுமே என்று அரிச்சந்திரன் விஸ்வாமித்திரர்க்குக் கூறினன் என்பதாம். (கஉங)

குக்கிபுக்கதுசெருக்கொடுகுடற்கருவருப்புவரவே
கக்கிவிட்டதுபுசிப்பவர்கடற்புவியிடத்திலுளரோ

தக்கசொற்றிறமுரைத்திலைசழக்கினனெனப்பெயரிடு
மிக்கருத்தையினிவிட்டுவிடுவிட்டுவிடெனக்கழறினன்.

[வயிற்றுக்குள்ளே போனது மயக்கத்துடனே குடலுக்கு அருவெறுப்புத் தோன்ற வாந்தி செய்ததைப் பிறகும் எடுத்து உண்பவர்கள் இந்த கடல் சூழ்ந்த உலகத்தில் யாராகிலும் இருக்கிறார்களோ? இல்லை ஆகையால், நீர் தகுதியான சொற்களைச் சொல்லவில்லை, என்னை அறியாமையை யுடையவன் என்று பெய ரிடுகின்ற இந்த நிந்தனையை இனியாகிலும் விட்டு விடு விட்டு விடு என்று சொல்லி னன் என்பதாம்]

இ-ள். குக்ஷி - வயிற்றுக்குள்ளே, புக்கது - போனது, செருக்கொடு-மயக்கத்தோடு, குடற்கு - குடலுக்கு, அருவருப்பு வரவே - அருவருப்புத் தோன்றவே, கக்கிவிட்டது - வாந்தி செய்து விட்டதை, புசிப்பவர் - திரும்பவும் வாந் செய்த அதை எடுத்துச் சாப்பிடுகின்றவர்கள், கடல் புவியிடத்தில் - கடலால் சூழப்பட்ட இந்த உலகத்தில், உளரோ - இருக்கின்றார்களோ?, தக்க சொற்றிறம் - தகுதியான சொற்களை, உரைத்திலை - நீ சொல்லவில்லை, சழக்கினன்- அறியாமையை உடையவன், என - என்று, பெயர்இடும் - பெயர் வைக்கின்ற, இக்கருத்தை - இந்த நினைவை, விட்டு விடு விட்டு விடு - விட்டு விடுவாயாக விட்டு விடுவாயாக என்று, கழறினன் - அரிச்சந்திரன் கூறினன். எ-று.

சழக்கினன் - குற்றமுடையவன், என்றும் கர்வமாகிய குற்றமுடையவன் என்றும் பொருள் கூறுவர். (கஉச)

இடுதலுந்தவிர்தலும்மிடமறிந்தியல்பறிந்தொருதரம்
விடுதலுந்தொடுதலும்வினையறிந்துவிளையும்விளைவறிந்
தடுதலும்படுதலும்மளவறிந்தடைவறிந்துசெயலாற்
கெடுதலுண்டிறுதலுண்டவையறிந்துணர்தரிற்கெடுவரோ.

[பிச்சை இடுதலும், பிச்சை இடாதிருப்பதும், இடத்தை அறிந்தும் தன்மையை அறிந்தும் செய்யவேண்டும், ஒருதரம் விட்டு விடுவதும் பிறகு அதனை மேற் கொள்ளுதலும், வினையை அறிந்தும் அதனால் உண்டாகும் பலாபலன்களை அறிந்தும் ஆம் ஆக்கலும் அல்லது அழித்தலும் அளவை அறிந்து இனி வரப்போவதை அறிந்தும் செய்தவினால் கெடுதல் வருகிறதுமுண்டு வந்த கெடுதல் தீருகிறதும் உண்டு, ஆகையினால் அக்காரியங்களை எல்லாம் தெரிந்துஉணர்வார்களே யானல் அவர்கள் கெடுதல் அடைவார்களோ, அடைய மாட்டார்கள் என்று விஸ்வாமித்திரர் கூறினர் என்பதாம்.]

இ-ள். இடுதலும் - ஒருதரம் பிச்சை இடுவதும், தவிர்தலும் - பிச்சை இடாது இருத்தலும், இடம் அறிந்து - கொடுக்கும் இடத்தை அறிந்தும்,

இயல்பு அறிந்தும் - பெறுகின்றவன் தன்மையை அறிந்தும் ஆகும், ஒருதரம் விடுதலும் - ஒருதரம் ஒரு காரியத்தை விட்டுவிடுதலும், தொடுதலும் - பின் ஒருசமையம் அந்தக் காரியத்தைப் பற்றிக்கொள்ளுதலும், வினையறிந்து - தான் செய்யும் காரியத்தைத் தெரிந்தும், விளைவறிந்து - அதனால் உண்டாகும் பிரயோஜனத்தை அறிந்துமாம், அடுதலும் - ஆக்குதலும், படுதலும் - அழித்தலையும், அளவறிந்தும் - அளவறிந்தும், அடைவு அறிந்தும் - வரும்பயனை அறிந்தும், செயலால் - செய்வதனாலும், கெடுதல் உண்டு - கெடுதல் வருதலும் உண்டு, இறுதல் உண்டு - கெடுதல் தீர்தலும் உண்டு, அவைதெரிந்து - ஆகையால் அவைகளைத்தெரிந்து, உணர்தரில் - உணர்வார்களே யானால், கெடுவரோ - அவர்கள் கெடுதலை அடைவர்களோ? (அடையார்கள்) என்று விஸ்வாமித்திரர் கூறினார். எ-று. ஈற்று ஓகாரம் வினாப்பொருளது. (கஉரு)

இந்தவுத்தரமுனக்கினியெனக்குரைசெயத்தகுவதோ
வெந்தழற்குளெனைவிட்டிடினும்வெட்டிவகிரிட்டுவிடினு
முந்தவன்பினுடனென்வயின்முனிந்தமுனிவிற்கடியனேன்
றந்துவிட்டபொருள்கொள்வதில்விருப்பமொருசற்றுமிலையே.

[இந்த மறுமொழி இனிமேல் எனக்கு நீர் சொல்லத்தக்கதோ, வெப்பம் பொருந்திய நெருப்புக்குள்ளே என்னை விட்டுவிட்டாலும், என்னை வெட்டிப் பிளந்தாலும் முன்னால் விருப்பத்தோடு என்னிடத்தில் கோபித்த கோபத்திற்குப் பயந்து அடியேன் கொடுத்த பொருளை இனி வாங்குவதில் எனக்குக் கொஞ்சமும் ஆசை இல்லை என்று கூறினான் அரிச்சந்திரன், என்பதாம்.]

இ-ள். இந்த உத்தரம் - இந்த மறுமொழி, இனி - இனியும், எனக்கு - எனக்கு, உரைசெயத் தகுவதோ - சொல்லத் தக்கதோ, வெம்தழற்குள் - வெப்பமான நெருப்புக்குள்ளே, எனை - என்னை, விட்டிடினும் - விட்டு வருத்தினாலும், வெட்டி - என் உடம்பை வெட்டி, வகிரிட்டு விடினும் - பிளந்தாலும், முந்த - முன்னால், அன்பினுடன் - பிரியத்துடனே, என் வயின் - என்னிடத்தில், முனிந்த முனிவிற்கு - கோபித்த கோபத்திற்கு, அடியனேன் - அடியேன், தந்துவிட்ட பொருள் - கொடுத்து விட்ட பொருளை, கொள்வதில் - திரும்ப வாங்கிக்கொள்வதில், விருப்பம் - ஆசை, ஒரு சற்றுமிலையே - ஒரு கொஞ்சமும் இல்லை என்று அரிச்சந்திரமகாராஜன் கூறினான். எ-று. ஏ - ஈற்றசை. (கஉசு)

புனிதனின்சொலைமறுத்தலில்வெறுத்திடல்பொறுத்தருளெனப்
பனிதவழ்ந்தபொழிலிற்படிவிழுந்தடிபணிந்துதொழவு
முனிவெகுண்டிருவிழிக்கடைசிவப்புறநெருப்பெழமுனிந்
தினிவருப்பரிசுநண்டிடுடவென்றவனைநன்றென்னரோ.

[பின்னும் அரிச்சந்திரன் முனிவரை நோக்கி, பரிசுத்தமானவரே! உன்
சொல்லை மறுத்துவிட்டதினால் என்னை வெறுத்துவிடாமல் பொ
றுத்துக்கொள் என்று அந்தக் குளிர்ந்த சோலையில் பாதங்களில்
விழுந்து வணங்கி கும்பிட, முனிவர் கோபித்து இரு
கடைக் கண்ணிலும் செவந்த நெருப்புத்தோன்றக்
கோபித்து, இனி நடக்கப்போகிற காரியங்
களைப் பார்ப்பாயாக என்று அந்த இடத்
தைவிட்டு முனிவர் நீங்கினர்
என்பதாம்.]

இ-ள். புனித - (பின்னும் அரிச்சந்திரன் முனிவரை நோக்கி) பரிசுத்தமானவரே! நின் - உம்முடைய, சொலை - சொல்லை, மறுத்தலில் - தடுத்துப் பேசுகிறதினாலே, வெறுத்திடல் - வெறுத்துவிடாதே, பொறுத்தருள் - பொறுத்து அருளுக, என - என்று, பனி - பனியானது, தவழ் - மொய்த்த, பொழிலில் - சோலையில், படிவிழுந்து - பூமியில் விழுந்து, அடிபணிந்து - பாதங்களை வணங்கி, தொழுறும் - கும்பிட்டவுடனே, முனி - விஸ்வாமித்திரமுனிவர், வெகுண்டு - கோபித்து, இருவிழிக்கடை - இரு கண்களின் கடைகளில், சிவப்புறு நெருப்பு எழ - செவந்த நெருப்புகள் தோன்ற, முனிந்து - கோபித்து, இனி வரும் பரிசு - இனிமேல் உனக்கு நடக்கப்போகின்ற துன்பங்களை, கண்டிடுக - காணக்கடவாயாக, என்று - எனக்கூறி, அவண் - அவ் இடத்தை விட்டு, அகன்றனன் - போயினன். எ-று. 'அரோ' அசை.

"சொலை" 'சொல்லை' என்பதின் தொகுத்தல் விகாரம். 'பனி தவழ்ந்த' குளிர்ச்சி மிகுந்த எனினும் ஆம். (கஉஎ)

மாதவன்கடிதகன்றிடவருங்கொடுமையைக்கருதியே
சீதபங்கயமுகங்கருகியெண்மடிதெளிந்தவுடனே
பூதலம்பெறுவதும்புலைமடந்தையர்புணர்ச்சியுமலா
லேதுவந்திடினுநன்றெனவிருந்தனனிருந்தபொழுதே.

[அந்தவிதமாக மகா தவத்தை உடைய விஸ்வாமித்திரமுனிவர் விரைந்து
அவ் இடம்விட்டுப் போகவே அரிச்சந்திரமகாராஜன் இனிமேல் முனி
வர் சொல்லியபடி வரப்போகும் கொடுமைகளை நினைந்து குளிர்ந்த
தாமரைபோன்ற முகங்கள் கறுகி, பிறகு முன்னிலும் எட்டுப்
பங்கு தெளிந்து, உடனே, தானமாக முனிவருக்குக்
கொடுத்த பூமியைத் திரும்பப் பெற்றுக்கொள்ளு
வதும் புலைப்பெண்களைக் கூடுதலும் ஆகிய
இந்த இரண்டும் அல்லாமல் இனி எது
வந்தாலும் நல்லதே என்று அரிச்சந்
திரன் எண்ணிக்கொண்டு இருந்
தான் அப்படி இருக்கும்
பொழுது என்பதாம்.]

இ-ள். மாதவன் - அந்தப் பெரிய தவத்தை உடைய விஸ்வாமித்திரமுனிவர், கடிது - விரைவாக, அகன்றிட - அவ்விடம் விட்டுப்போகவே, வரும்-

(முனிவன் சொல்லியபடி) இனிமேல் வரப்போகும், கொடுமையை - கொடுமைகளை, கருதியே - நினைத்து, சீதபங்கயமுகம் - குளிர்ந்த தாமரைபோன்ற முகமானது, கருகி - கருதலாகி, உடனே - அப்பொழுதே, எண்மடி தெளிந்து - எட்டுப்பங்கு தெளிவு அடைந்து, பூதலம் பெறுவதும் - முனிவருக்குத் தானமாகக்கொடுத்த பூமியைத் திரும்பப்பெறுவதும், புலை மடந்தையர் - சண்டாளப்பெண்களின், புணர்ச்சியும் அலால் - புணர்ச்சியுமாகிய இந்த இரண்டு மல்லாமல், எதுவந்திடினும் - வேறு எது வந்தாலும், நன்றுஎன - நமக்கு நல்லதே என்று, இருந்தனன் - அரிச்சந்திரமகாராஜன் எண்ணிக்கொண்டு இருந்தான், இருந்தபொழுதே - அப்படி அரசன் இருக்கிறபொழுது. எ-று. ஏ - ஈற்றசை.

'மடி' மடங்கு. (கஉஅ)

கலி விருத்தம்.

இறையவனின்னணமெய்துமெல்லையி
னிறைமலர்ச்சோலையின்மறைந்துநின்றுழி
யறைகழற்கௌசிகனரசன்பானின்ற
மறையவன்வரும்படிமனதினெண்ணினன்.

[அரிச்சந்திரன் இந்தவிதமாக இருக்கும் சமையத்தில் நிரைந்த மலர்களை உடைய அந்தச் சோலையிலே விஸ்வாமித்திரமுனிவர் மறைந்து நின்று, அந்த இடத்திலே அரசனோடு இருந்த சுக்கிரனை வரும்படி மனத்தில் நினைத்தார் என்பதாம்.]

இ-ள். இறையவன் - அரிச்சந்திரமகாராஜன், இன்னணம் - இந்தவிதமாக, எய்தும் எல்லையில் - இருக்கும் சமையத்தில், நிறை - நிறைந்த, மலர்ச்சோலையில் - மலர்களை உடைய அந்தச் சோலையிலே, மறைந்து நின்று - விஸ்வாமித்திரர் மறைந்து நின்று, உழி - அந்த இடத்திற்கு, அரசன்பால் நின்ற - அரசனோடு கூட இருந்த, மறையவன் - வேதியனாகிய சுக்கிரன், வரும்படி - வருமாறு, அறைகழல் - சப்திக்கின்ற கழலை அணிந்த, கௌசிகன் - விஸ்வாமித்திரமுனிவர், மனத்தின் - மனத்திலே, எண்ணினன் - நினைத்தான். எ-று.

'மறைந்து நின்றுழி' என்பதற்கு மறைந்து நிற்கிறபொழுது, என்றும் பொருள் கொள்வர், விஸ்வாமித்திரமுனிவர் முன் அரசராயிருந்து பின் முனிவர் ஆனவர் ஆதலின் 'அறைகழற் கௌசிகன்' என்றார். (கஉகூ)

மாதவனினைத்திடமறையவன்விரைந்
தாதரின்மபங்குறுமரசைநீங்கியே
யேதமும்வஞ்சமுமிழைக்கவெண்ணியே
பாதகனின்றபூம்பழுவத்தெய்தினன்.

[பெரிய தவத்தை உடைய விஸ்வாமித்திரர் நினைக்கவே குருடனைப்போல மயங்கிக் கொண்டிருக்கின்ற அரிச்சந்திரமகாராஜனை நீங்கி, துன்பமும் வஞ்சனைகளும் செய்ய எண்ணிக்கொண்டே சுக்கிரன் பாதகனான விஸ்வாமித்திரர் நின்றுகொண்டிருந்த பூஞ்சோலைக்குள்ளே போனான் என்பதாம்.]

இ-ள். மாதவன் - பெரிய தவத்தை உடைய விஸ்வாமித்திரமுனிவர், நினைத்திட - அப்படி நினைக்க, மறையவன் - வேதியனாகிய சுக்கிரன், விரைந்து - விரைவிலே, ஆதரின் - குருடர்களைப்போல, மயங்குறும் - மயங்குகின்ற, அரசை - அரிச்சந்திரமகாராஜனை, நீங்கியே - விட்டு அகன்று, ஏதமும் - இன்னும் பல துன்பங்களையும், வஞ்சமும் - வஞ்சனைகளையும், இழைக்க - செய்வதற்காக, எண்ணியே - நினைத்துக்கொண்டே, பாதகன் நின்ற - பாதகனான விஸ்வாமித்திரமுனிவர் நின்றுகொண்டிருந்த, பூம்பழுவத்து - பூஞ்சோலைக்குள்ளே, எய்தினான் - போய்ச்சேர்ந்தான். எ-று. "ஆதரின்" குருடர்களைப்போல, அறிவில்லாதவர்களைப்போல. (கங0)

வெஞ்சினக்கௌசிகன்வேதியன்றனை
வஞ்சினத்தழைத்தடல்வல்லநாவியை
நஞ்சினிற்றோய்த்ததேபோலநன்கிலா
நெஞ்சினுக்குறவினைநிகழ்த்தியேகினான்.

[கொடிய கோபத்தை உடைய விஸ்வாமித்திரமுனிவர், தான் செய்த சாபத்தை நிறைவேற்றுதற் பொருட்டு சுக்கிரனை அழைத்து, கொல்லுகிறதில் வல்லதான பச்சை நாவியை, நஞ்சிலே கலந்ததுபோல, அவனுடைய நன்மையில்லாத நெஞ்சுக்கு இனிச்செய்யவேண்டிய தீய காரியங்களைச் செய்யவேண்டிய வழிகளோடு சொல்லிக் கொடுத்து விட்டுப் போனார் என்பதாம்.]

இ-ள். வெம் சினக் கௌசிகன் - கொடிய கோபத்தையுடைய விஸ்வாமித்திரமுனிவர், வேதியன்றனை - பிராமணனாகிய சுக்கிரனை, வஞ்சினத்து - முன்னே தான் இட்ட சபதத்தினாலே, (அதை முடிக்கும் கருத்தினால்) அழைத்து - கூப்பிட்டு, அடல் வல்ல - கொல்லுவதில் வல்ல, நாவியை - பச்சை நாபியை, நஞ்சினில் தோய்ந்ததேபோல - விஷத்திலே கலந்ததைப்போல, நன்கிலா நெஞ்சினுக்கு - சுக்கிரனின் நன்மையில்லா மனத்திற்கு, உறவினை - இனிச்செய்யவேண்டிய துன்பங்களை, நிகழ்த்தி - செய்யவேண்டிய வழிகளைச் சொல்லிக்கொடுத்து, ஏகினான் - விஸ்வாமித்திரன் அவ்விடம் விட்டு நீங்கினார். எ-று. 'நாவி' ஓர்வகைப் பாஷாணம். (கஙக)

இன்னதுகௌசிகனியம்பிப்போனபின்
மன்னனைமறையவன்வந்துநண்ணினு

னன்னதுபெருக்குநீரற்றநாளிலே
வந்நதிதன்னைவிட்டகன்றுபோயினர்.

[இந்தக் காரியங்களை விஸ்வாமித்திரர் சொல்லிவிட்டுப் போனபின்பு, சுக்கிரன் அரசனை வந்து அடைந்தான். அந்த நல்ல நதியிலே நீர்ப்பெருக்கு அற்றி இருக்கிற சமையத்திலே அந்த நதியைக்கடந்து அப்புறத்தே சென்றார்கள் என்பதாம்]

இ-ள். இன்னது - இப்படிப்பட்ட செய்கைகளை, கௌசிகன் - விஸ்வாமித்திரமுனிவர், இயம்பிப் போனபின் - சொல்லிவிட்டுப் போனபிறகு, மன்னனை - அரிச்சந்திரமகாராஜனை, மறையவன் - வேதியனாகிய சுக்கிரன், வந்து நண்ணினான் - வந்து கூடினான், அன்னது - அப்படிப்பட்ட சிறப்புகளைக் கொண்ட காளிந்தி நதியில், பெருக்கி நீர் - பெருகி வருகின்ற நீரானது, அற்ற நாளிலே - நீங்கின நாளிலே, வந்து - வந்து, அந்நதி தன்னை விட்டு அகன்று- அந்தக் காளிந்தி நதியை விட்டு நீங்கி, போனார் - அப்பாலே போனார்கள். எ-று.

'பெருக்கி நீர்' பெருகி வருகின்ற ஜலம். (கூஉ)

கன்னியுமன்னனுங்காதன்மைந்தனு
நன்னதியமுனைவிட்டேகுநாளிலே
சென்னியைத்துளக்கிக்கண்சிவந்துகௌசிகன்
வன்னியைவருகெனமனத்திலுன்னினான்.

[சந்திரவதியும் அரிச்சந்திரமகாராஜனும் பிரியமுள்ள புத்திரனும் அந்த நல்ல யமுனை நதியைவிட்டுக் கடந்து போகும்போது, விஸ்வாமித்திரர் தலையை ஆட்டிக்கொண்டு கண் சிவந்து அக்கினியை வரும்படி நினைத்தார் என்பதாம்.]

இ-ள். கன்னியும் - சந்திரவதியும், மன்னனும்-அரிச்சந்திரமகாராஜனும், காதல் மைந்தனும் - பிரியமுள்ள புத்திரனும், நல் நதி - நல்ல நதியாகிய, யமுனைவிட்டு - யமுனை ஆற்றைக்கடந்து, ஏகுநாளிலே - போகும்போது, கௌசிகன் - விஸ்வாமித்திரர், சென்னியைத்துளக்கி - தலையை அசைத்து, கண் சிவந்து - கண்கள் சிவந்து, வன்னியை - அக்கினிதேவனை, வருகென- வரவேண்டுமென்று, மனத்தில் உன்னினான் - மனத்திலே நினைத்தார். எ-று.

வருகெனநினைத்தலுமலர்த்தண்குழலி
விருபிறப்பாளனைவிரைவினெய்தியே
யருமறைமாதவவெனையழைத்தவக்
கருமமேதுரையெனக்கனல்விளம்பினான்.

[வாவேணுமென்று விஸ்வாமித்திரர் நினைத்த உடனே, ஒரு பிரா
மணன் வடிவமாய், அந்தக் குளிர்ந்த பூஞ்சோலையில் விரை
வாக வந்து அரிய வேதங்களை யுணர்ந்த பெரிய முனி
வரே என்னை அழைத்த காரியம் என்னவென்று
அவ்வக்கினிபகவான் கேட்டார் என்பதாம்.]

இ-ள். வருகென - ஓ அக்கினியே வருவாயாக என்று, நினைத்தலும்-விஸ்வாமித்திரர் நினைத்த உடனே, மலர்த்தண் குழலில் - மலர்கள் நிறைந்த குளிர்ந்த அந்தச் சோலையிலே, கனல் - அக்கினிபகவான், இருபிறப்பாளனாய் - பிராமண ரூபத்தை உடையவன் ஆகி, விரைவின் எய்தியே - விரைவாக வந்து, அருமறை மாதவ - அருமையான வேதங்களை யறிந்த பெரிய விஸ்வாமித்திர முனிவரே!, எனை அழைத்த - என்னை வரும்படி அழைத்த, கருமம் எது-அந்தக்காரியம் என்ன?, உரை என - சொல்லுவாயாக என்று, விளம்பினன்-கேட்டார். எ-று. (கங-ச)

கடுநெருப்பின்னணம்பகரக்கௌசிகன்
நெடுவனம்பொடிபடவெறித்துநீமறித்
தடுதிறன்மன்னனையடர்ந்துகோளொடுஞ்
சுடுகெனவுரைத்தனனவனுஞ்சொல்லுவான்.

[கடுமையான அக்கினிதேவன் இந்தவிதமாகக் கேட்கவே, விஸ்வாமித்திரர்
இந்த நெடிதாகிய காடுகளை எல்லாம், நீருகும்படிச் சுட்டுத் தடுத்து
பகைவரைக்கொல்ல வல்லவனாகிய அரிச்சந்திரமகாராஜனை
நெருங்கிக் கொள்வதுடனே சுடுவாயாக என்று சொல்ல
அக்கினிக்கடவுள் சொல்லுகின்றார் என்பதாம்.]

இ-ள். கடு நெருப்பு - கடுமையான அக்கினிதேவன், இன்னணம் - இந்த விதமாக, பகர - சொல்ல, கௌசிகன் - விசுவாமித்திரர், நீ - நீ, நெடுவனம்- இந்த நெடிதாகிய காடுகளை எல்லாம், பொடிபட - சாம்பலாகும்படி, எரித்து- தகித்து, அடுதிறல் மன்னவனை - சத்துருக்களைக் கொல்ல வல்லவனான அரிச்சந்திரமகாராஜனை, மறித்து - தடுத்து, அடர்ந்து - நெருங்கி, கோள் ஒடும்- இடையூறு உண்டாகும்படி, சுடுகென - சுடுவாயாக என்று, உரைத்தனன்-விஸ்வாமித்திரர் கூறினர், அவனும் சொல்லுவான் - அதற்கு அந்த அக்கினிக்கடவுளும் சொல்லுகின்றார். எ-று.

'அடர்ந்து கோளொடும்' அடர்ந்த கொள்ளுதலுடனே, என்றும் பொருள் கூறலாம், 'கோளொடும்' கிரகங்களில் ஒருவராகிய சுக்கிரனுடனே, என்று பொருள் கொள்ளலாகாதோ எனின் சுக்கிரனை அக்கினி சுடுதலும் கூடாது, சுடும்படி முனிவர் சொல்லுதலுங் கூடாது, 'கோளொடு' பொய்யாக, அதாவது அஞ்சுதல் மாத்திரம் செய்யும்படிச் செய்வதே அன்றி அரிச்சந்திரனைக்கொன்றுவிடாதபடி என்றும் பொருள் கொள்ளலாம். அவன் என்றது ஈண்டு அக்கினிக் கடவுளை. (கங-டு)

கற்பினின் மிக்கவள் கன்னிநன்னெறிப்
பொற்பினன் மன்னன் யான் சுடவும் போதிலேன்
வெற்பினின் றருந்தவ வெளியடக்கிநின்
சொற்படி மறுக்கிலேன் சுடுவன் யானென்றான்.

[சந்திரவதி கற்பிலே சிறந்தவள், அரிச்சந்திரனோ தருமநெறியிலே நடத்தலைத் தனக்கு அழகாகக்கொண்டவன், நான் அவர்களைச் சுடுகிறதற்கு தகுதி இல்லாதவன் மகா மேருவிலே யிருந்து தவம் செய்த முனிவரே நான் இந்த வெளிகள் எல்லாம் அடங்கக்கொண்டு உம்முடைய சொல்லின் படியே மறுக்காதவனாகிச் சென்று சுடுகின்றேன் என்று அக்கினி தேவன் கூறினார் என்பதாம்.]

இ-ள், வெற்பினின்றருந்தவ - மகா மேருமலையில் இருந்து அரிய தவத்தைச்செய்த விஸ்வாமித்திரமுனிவரே!, கன்னி - சந்திரவதியோ, கற்பினின் மிக்கவள் - பதிவிரதாதர்மத்திலே சிறந்தவள், மன்னவன் - அரிச்சந்திரமகாராஜனோ! நல்நெறிப் பொற்பினன் - நன்மார்க்கத்திலே செல்லுதலாகிய அழகைக்கொண்டவன், யான் - நான், சுடவும் - சுடுதற்கும், போதிலன் - தகுதியில்லாதவன், வெளியடக்கி - நான் இந்த வெளி இடங்கள் எல்லாம் எனக்குள்ளே அடங்கக்கொண்டு, நின் சொற்படி - உம்முடைய சொல்லின்படி, மறுக்கிலேன் - மறுக்காதவனாகி, யான் - நான், சுடுவன் என்றான் - சுடுகின்றேன் என்றான். எ-று.

'சுடவும்' என்ற உம்மையால் சுடுதற்கே என்னிடத்தில் சாமர்த்திய மில்லாதபோது வேறு இடையூறு நான் என்னசெய்யக்கூடும் என்பதாம். (௩௬௬)

இவ்வகைகேட்டபின் முனிவனேகினா
னவ்வழிநீங்கியேயகலவெய்திட
வெவ்வழன் மறித்தினிதிருந்தவேந்தனு
நவ்வியன்னாளுடனடந்துபோயினான்.

[இந்தவிதமாக அக்கினிதேவன் கேட்ட பின்பு விஸ்வாமித்திரர் போய் விட்டார், அக்கினிதேவன் அந்த இடத்தைவிட்டுத் தூரப்போய், கொடுமையான அக்கினிதேவன் வழியை மறித்துக்கொண்டு சந்தோஷத்துடன் இருக்க அரசனும் மான்போன்ற சந்திரவதியுடனே நடந்து போனான் என்பதாம்.]

இ-ள். இவ்வகை - இந்தவிதமாக, கேட்டபின் - அக்கினிதேவன் கேட்ட பின்பு, முனிவன் ஏகினான் - விஸ்வாமித்திரர் அவ்விடம் விட்டுத் தன்னிடம் சென்றார், வெவ் அழல் - கொடிய அக்கினிதேவன், அவ்வழி நீங்கியே-அங்கே

அந்த இடத்தைவிட்டு, அகல எய்திட - தூரத்தில்போய், மறித்து இனி திருக்கவே - (வழியை) மறித்துக்கொண்டு சந்தோஷத்துடனே இருக்க, வேந்தனும்- அரிச்சந்திரமகாராஜன், நவ்வி அன்னாளுடன் - மான்போன்ற சாயலை உடையவளான சந்திரவதியுடனே, நடந்து போயினான் - நடந்து அவ் இடத்திற்குப் போனான். எ-று.

'நவ்வி அன்னாளுடன்' மான்போன்ற கண்ணை உடையவளுடன் என்றும் கூறலாம். 'எய்திட' என்பது எய்தி என்னும் பொருளில் வந்தது. (கஙஎ)

வெறிகமல்சோலையும்வெற்பும்வெண்டிரை
யெறிபுனற்பொய்கையுநீங்கியேகியே
செறிகழைவனத்திடைச்செல்லச்சேணிடைப்
பொறிகளுங்கரும்பெரும்புகையுந்தோன்றின.

[வாசனை பரிமளிக்கின்ற சோலைகளும் மலைகளும் வெள்ளிய அலைகளை வீசுகின்ற நீர்க்குளங்களும் கடந்து சென்று ஒரு மூங்கில் வனத்திற் செல்லும்பொழுது தூரத்திலே நெருப்புப்பொறிகளும் கரிய பெரிய புகைகளும் தோன்றின என்பதாம்.]

இ-ள். வெறி - வாசனை, கமழ் - பரிமளிக்கின்ற, சோலையும் - சோலைகளையும், வெற்பும் - மலைகளையும், வெண்திரை எறி - வெண்மையான அலைகளை வீசுகின்ற, புனல் - நீரையுடைய, பொய்கையும் நீங்கியே - குளங்களையும் கடந்து சென்று, செறி - நெருங்கின, கழை வனத்திடை - ஒரு மூங்கில் வனத்தினிடத்திலே, செல்ல - போம்போது, சேணிடை - தூரத்திலே, பொறிகளும் - நெருப்புப் பொறிகளும், கரும் பெரும் புகையும் - கரிய மிகுந்த புகையும், தோன்றின - தோன்றுதல் ஆயின. எ-று.

'வெறி' - தேன், 'கமழ்' - மணக்கின்ற என்னும் பொருள் கூறலாம். ()

கண்டனர்புகைவதேதென்னுங்காலையில்
மண்டலம்வளர்ந்துயர்வானைத்தாவியே
யண்டாண்டங்களும்வெடிக்கவார்த்தழன்
மண்டலமெங்கணும்வளைந்துகொண்டதே.

[அதைக்கண்டார்கள், அங்கே புகைவது என்ன காரணத்தினால் என்று நினைக்கிறபொழுது, பூமியெல்லாம் வளர்ந்து உயர்ந்த ஆகாயத்தையும் அளாவி அண்டாண்டங்கள் எல்லாம் வெடிக்கும்படி ஆரவாரித்து அக்கினியானது அவர்கள் இருந்த அந்தப் பூமி எல்லாம் சூழ்ந்துகொண்டது என்பதாம்.]

இ-ள். கண்டனர் - புகை கிளம்புவதைக் கண்டார்கள், புகைவது ஏது என்னும் காலையில் - அங்கே புகைவது என்னகாரணத்தினால் என்று நினைக்கும்பொழுது, மண்டலம் வளர்ந்து - அந்தப் பூமியிலிருந்து வளர்ந்து, உயர் வானைத்தாவியே - உயர்ந்த ஆகாயத்தையும் அளாவி, அண்டாண்டங்களும்

வெடிக்க - அண்டாண்டங்களுமே வெடித்துப் போம்படி, ஆர்த்து - முழங்கி, அழல் - அந்த அக்கினியானது, மண்தலம் எங்கணும் - அந்த பூமியில் எல்லா இடங்களிலும், வளைந்து கொண்டதே - சூழ்ந்து கொண்டது. எ-று. ஏ - ஈற்றசை. "என்னும் காலையில்" என்று நினைப்பதற்குள்ளே, என்றும் பொருளாம். (கங௬)

இடஞ்சிறிதிலையெனவெண்டிசாமுகம்
படர்ந்தனவிலங்கெலாமிரிந்துபாறிடக்
கடந்தவத்தொகுதியைக்கடிதுநாடியே
தொடர்ந்தனவெனவழற்சுடரெழுந்ததே.

[கொஞ்சமும் இடம் இல்லை என்று சொல்லும்படி எட்டுத்திக்குகளிலும் நெருப்புப் பாவிற்று, மிருகங்கள் எல்லாம் ஓடி ஒளிக்க அப்படி ஓடுகிற அந்தக் கூட்டங்களை விரைந்து தேடித் தொடர்ந்ததைப்போல அக்கினிக் கொழுந்துகள் வீசியது என்பதாம்.]

இ-ள். இடம் சிறிது இலை என - இடம் கொஞ்சங்கூட இல்லை என்று சொல்லும்படி, எண்டிசாமுகம் - எட்டுத்திக்கின் இடங்களிலும், படர்ந்த - பாவின, விலங்கு எலாம் - மிருகங்கள் எல்லாம், இரிந்து - ஓடி, பாறிட - ஒளித்துக்கொள்ள, கடந்த - அப்படி ஓடின, அத்தொகுதியை - அந்த மிருகக்கூட்டங்களை, கடிது - விரைவாக, நாடியே - தேடியே, தொடர்ந்தனவென - தொடர்ந்து வருகிறதைப்போல, அழற் சுடர் - அக்கினிக்கொழுந்து, எழுந்ததே - கிளம்பியது. எ-று.

'பாறிடல்' - ஒதுங்கல்; ஈண்டு மறைவில் ஒதுங்க என்பதாம், 'இரிதல்' ஓடுதல். (கசO)

அவ்வழல்வளைந்திடவரசர்கோமக
னிவ்வழவெவ்வழலென்றுகூறலுஞ்
செவ்வழலயிற்படைச்செல்வகேளென
வெவ்வழலனையநீர்வெள்ளிகூறுவான்.

[அந்த அக்கினி அப்படிச் சூழ்ந்து கொள்ளும்பொழுது அரிச்சந்திர மகாராஜன் இந்த நெருப்பு எந்த நெருப்பு என்று கேட்டும் அளவில் செவந்த நெருப்பைப்போலப் பிரகாசிக்கின்ற வேலாயுதத்தை உடைய அரசனே! கேட்பாயாக என்று கொடிய நெருப்பை ஒத்த குணத்தை உடைய சுக்கிரன் சொல்லுகின்முன் என்பதாம்.]

இ-ள். அவ் அழல் - அந்த நெருப்பானது, வளைந்திட - சூழ்ந்து கொள்ளவே, அரசர் கோமகன் - (அப்பொழுது) ராஜாதி ராஜனுகிய அரிச்சந்திரமகா

ராஜன், இவ் அழல் - எந்த நெருப்பு என்று, கூறலும் - கேட்டவுடனே, செவ் வழல் அயில்படை - செவந்த நெருப்பைப்போலப் பிரகாசிக்கின்ற வேலாயுதத் தையுடைய, செல்வ - அரசனே!, கேளென - கேட்பாயாக என்று, வெவ் அழல் அனையரீர் - கொடிய நெருப்பை ஒத்த குணத்தை உடைய, வெள்ளி-சுக்கிரன், கூறுவான் - சொல்லுகின்றான். எ-று. 'அயில் படை' அயிலாகிய படை என விரியும். (கசக)

சண்டவெம்பசியினாலழன்றுதாவியே
யண்டகோளத்தினையடர்ந்தசெந்தழல்
மண்டலத்தரசர்தம்மரபிலோருயி
ருண்டலதேகிலதென்றுணர்த்தினன்.

[வேகமான வெவ்விய பசியினாலே கொதித்துத் தாவி அண்டகோளத்தை யும் நெருங்கின செவந்த நெருப்பானது இந்த உலகத்தில் உள்ள அரசர் குலத்திலே ஒரு உயிரையாவது சுட்டுத்தின்றாலல்லது வீணே போகாதென்று சொன்னான் என்பதாம்.]

இ-ள். சண்ட வெம்பசியினால் - வேகமான கொடிய பசியினாலே, அழன்று - கொதித்து, தாவியே - தாவி, அண்ட கோளத்தினை - அண்ட கோளத் தையும், அடர்ந்த - நெருங்கின, செந்தழல் - செவந்த நெருப்பானது, மண்ட லத்து - உலகத்து, அரசர் தம் - அரசர்களுடைய, மரபில் - குலத் திலே, ஒருயிர் - ஒரு உயிரையாகிலும், உண்டலது - சுட்டுத்தின்றாலல்லது, ஏகிலது என்று - (வீணாகச் சும்மா) போகாது என்று, உணர்த்தினன் - சுக்கி ரன் சொல்லினான், அண்டகோளம் - அண்ட உருண்டை. (கசஉ)

ஒருவரையாருயிருண்டுபோகில்யா
னொருவனேயிறப்பனீருய்ந்துபோமெனத்
திருவையுமகனையுநோக்கிச்செங்கணீர்
வரவரவனலெதிர்மன்னனேகினன்.

[ஒருவருடைய அருமையான உயிரை உண்டு இந்த நெருப்புத் தணியுமே யானால், நான் ஒருவனே சாகிறேன் நீங்கள் தப்பிப்போங்கள் என்று சந்திரமதியையும் லோகிதாசனையும் நோக்கிக் கண்களிலே நீர் ஒழுக ஒழுக நெருப்புக்கு எதிரே அரிச்சந்திரன் சென் றான் என்பதாம்.]

இ-ள். ஒருவரை - அரசகுலத்து ஒருவரை, ஆர் உயிர் உண்டு - அருமை யான உயிரைப் புசித்து, போகில் - இந்த நெருப்பு போவதாயிருந்தால், யான்-நான், ஒருவனே - ஒருவனே, யிறப்பன் - சாவேன், நீர் - நீங்கள், உய்ந்து போம் என - நீங்கள் தப்பிப்போங்கள் என்று, திருவையும் - லக்ஷுமிதேவியை ஒத்த சந்திரவதியையும், மகனையும் - புத்திரனாகிய லோகிதாசனையும், நோக்கி-பார்த்து, செங்கண் - செவந்த கண்களிலே, நீர் வர வர - நீர் ஒழுக ஒழுக,

அனல் எதிர் - அந்த நெருப்புக்கு எதிரே, மன்னன் ஏகினன் - அரிச்சந்திர மகாராஜன் சென்றான். எ-று.

'ஒருவனே' என்றதில் ஏகாரம் தேற்றப்பொருளது; 'வரவர' ஏகினன் என ஒரு அடியிலே எதிர்நிலைப் பொருள்கள் அமையத் தொடுத்தமையால் இது முரண்தொடை ஆயிற்று. (கசங)

புரவலனடிகளைப்பூண்டமைச்சனே
ருரையிதுகேட்டியானொருவனிற்கவே
வரசழிவதுநலனன்றுநிற்றிநீ
விரைவொடுகனலிடைவீழ்வன்யானென்றான்.

[அப்போது மந்திரியாகிய சத்தியகீர்த்தி அரசனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு அரசே! இந்த ஒருவார்த்தையை மாத்திரம் கேளுங்கள் நான் ஒருவன் இருக்கும்போது அரசன் இருக்கிறது நீதியல்ல, நீர் நில்லும், நான் ஒருவனே விரைந்துபோய் அந்த நெருப்பிலே விழுகின்றேன் என்றான் என்பதாம்.]

இ-ள். அமைச்சன் - அப்பொழுது மந்திரி, புரவலன்-அரசனுடைய, அடிகளை - பாதங்களை, பூண்டு - பிடித்துக்கொண்டு, ஓர் உரையிது கேட்டி - (அரசனே!) இந்த ஒருவார்த்தை மாத்திரம் கேட்டருளும், யான் ஒருவன் நிற்கவே- (ஊழியனாகிய) நான் ஒருவன் உயிருடன் நின்றுகொண்டிருக்க, அரசு அழிவது - அரசன் இறக்கிறது, நலன் அன்று - நீதியல்ல, நிற்றி நீ-நீர் நின்றருளும், யான் - நான், விரைவொடு - விரைவாக, கனலிடை - நெருப்பில், வீழ்வன்- விழுகின்றேன், என்றான் - என்று மந்திரியாகிய சத்தியகீர்த்தி கூறினான். எ-று. (கசச)

அறுசீர்க்கழில் நெடிலடி ஆசிரிய விருத்தம்.

அன்னவையுரைக்கவண்ணலவனைமார்பிறுகப்புல்லி
மன்னவர்தம்மையன்றிமற்றவருயிரையுண்ணா
தென்னவுங்கேட்டேன்யானீயிறக்கினுமிறக்கவேண்டு
முன்னுயிர்விடாமலென்றனொருயிர்விடுதனன்றே.

[அந்தவிதமான வார்த்தைகளை மந்திரி சொல்ல அவனை அரிச்சந்திரன் மார்போடு இறுகக் கட்டிக்கொண்டு, அரசர்கள் உயிரை அல்லாமல் மற்றவர்கள் உயிரை இந்த நெருப்பானது தின்னாது என்று சொல்லக்கேட்டேன் ஆகையினால், நான் நீ இறந்தாலும் இறக்கவேண்டும் உன் உயிர்விடாது என் ஒரு உயிர் விடுதல் நல்லது என்றான் என்பதாம்.]

இ-ள். அன்னவை - அப்படிப்பட்ட வார்த்தைகளை, உரைக்க - மந்திரி சொல்ல, அண்ணல் - பெருமை பொருந்திய அரிச்சந்திரமகாராஜன், அவனை-

அந்த மந்திரியை, மார்பு இறுகப் புல்லி - மார்புடனே இறுகக் கட்டித் தழுவிக் கொண்டு, மன்னவர் தம்மை அன்றி - அரசர்கள் தம்மை அல்லாமல், மற்றவர் உயிரை - மற்றவர்களின் உயிரை, உண்ணாது என்னவும் கேட்டேன் - உண்ணாது என்று அந்தணர் சொல்லவும் கேட்டிருக்கின்றேன், நீ இறக்கினும்- நீ (இந்த நெருப்பில் விழுந்து) இறந்தாலும், யான் - அரசனாகிய நான், இறக்க வேண்டும் - இறக்கவேண்டும், உன் உயிர் விடாமல் - உன் உயிரை விட்டு விடாமல், என்றன் - என்னுடைய, ஓர் உயிர் விடுதல் - ஒரு உயிரை மட்டும் விட்டு விடுதல், நன்றே - நல்லது (என்றான்); எ-று. ஏ - ஈற்றசை.

இரண்டு உயிரை அனாவசியமாக விடுதற்கு ஒரு உயிரை விடுதல் நல்ல தல்லவா என்பதாம். (கசரு)

இருவருமிறந்தோமாகிலிவரையோர்பதியிற்சேர்க்க
வொருதுணையுண்டோசொல்லா யுறபொருளுணர்ந்தோயென்னு
மருமலர்நறுந்தார்மன்னன்மறுதலைத்துரைக்குமெல்லைத்
திருவெழில்வடமீன்கற்பிற்றிருந்திழைசெப்பலுற்றாள்.

[இனிவருங் காரியங்களை அறிந்த மந்திரியே நாம் இரண்டுபேரும் இறந்து போவேமேயானால் இவர்களை ஒரு ஊரிலே கொண்டுபோய்ச் சேர்க்க ஒரு துணையிருக்கின்றதோ? சொல்லுக, என்று வாசனை பொருந்திய மலர்மாலையை அணிந்த அரசனாகிய அரிச்சந்திரன் மறுத்துச் சொன்ன உடனே, லட்சுமிபோன்ற அழகும் அருந்ததிபோலும் கற்புள்ள திருத்தமான ஆபரணங்களையுடைய சந்திரவதி சொல்லலானாள் என்பதாம்.]

இ-ள். உறுபொருள் - இனி வரப்போகிற காரியங்களை, உணர்ந்தோய்- தெரிந்த மந்திரியே, இருவரும் - நாம் இரண்டுபேரும், இறந்தோமாகில் - இறந்து போவோமேயானால், இவரை - சந்திரவதியும் லோகிதாசனுமாகிய இவர்களை, ஓர் பதியில் சேர்க்க - ஒரு ஊரிலே கொண்டுபோய்ச்சேர்க்க, ஒரு துணையுண்டோ - ஒரு உதவி யிருக்கின்றதோ?, சொல்லாய் - சொல்லுவாயாக, என்னு - என்று, மருமலர் - வாசனை பொருந்திய மலர்களால் ஆக்கப்பட்ட, நறும் - அழகிய, தார் - மாலையை அணிந்த, மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், மறுதலைத்து - தடுத்து, உரைக்கும் எல்லை - சொல்லும்போது, திரு - லட்சுமி போன்ற, எழில் - அழகும், வடமீன் - அருந்ததிபோலும், கற்பின் - கற்புமுள்ள, திருந்திழை - திருத்தமாகிய கல்லாபரணங்களையுடைய சந்திரமதி, செப்பல் உற்றாள் - சொல்லல் ஆனாள். எ-று.

'உறு பொருள்' பொருந்திய ஞானப்பொருள்களை என்னும், இனி வருதற்கு உள்ளதாகிய பொருள்கள் என்றும் கூறுவர். "வடமீன்" அருந்ததி, வசிட்டரின் மனைவி, வடக்கே நட்சத்திர வடிவமாய் இருத்தலினால் வடமீன் என்று பேராயது. (கசசு)

மாந்தராலிறத்தல்வாழ்தன்மாதரார்க்கென்றுமேனு
ளாய்ந்தநூலறிந்தோர்கூறக்கேட்டனனுதலாலே
வேந்தனைவிடாதுகாத்தியண்ணனீயானிவ்வெந்தீப்
பாய்ந்துயிர்விடுவனென்னுப்பைந்தொடிமுந்திச்சென்றாள்.

[ஆடவர்களாலே தான் பெண்களுக்கு சாவும் வாழ்வும் என்று முன் நாளிலே சாஸ்திரங்களை ஆராய்ந்து அறிந்தவர்கள் சொல்லக் கேட்டிருக்கின்றேன் ஆகையினாலே பெருமை பொருந்திய சத்தியகீர்த்தியே அரசனை விடாது நீ காத்துக்கொள் நான் இந்த வெப்பமான நெருப்பிலே விழுந்து உயிரை விடுகின்றேன் என்று சந்திரவதி முன்னாலே நடந்தாள் என்பதாம்.]

இ-ள். மாந்தரால் - ஆடவர்களினாலேயே, மாதரார்க்கு - பெண்களுக்கு, இறத்தல் - சாதலும், வாழ்தல் - வாழ்தலும், என்று - என்று, மேல் நாள்-முன் நாளிலே, ஆய்ந்த நூல் அறிந்தோர் - சிறந்ததென்று அறிந்து கொள்ளப்பட்ட வேதநூல்களை அறிந்தவர்கள், கூற - சொல்ல, கேட்டனன் - கேட்டிருக்கின்றேன், ஆதலாலே - ஆகையினாலே, அண்ணல் - பெருமை பொருந்திய மந்திரியே!, நீ - நீ, வேந்தனை - அரசனை, விடாது காத்தி - விட்டு விடாமல் காத்துக்கொள், யான் - நான், இவ் - இந்த, வெந்தீப் பாய்ந்து - கொடுமையான நெருப்பிலே பாய்ந்து, உயிர் விடுவன் என்னு - உயிரை விட்டு விடுகின்றேனென்று, பைந்தொடி - பசுமையான வளையலை அணிந்த சந்திரவதியானவள், முந்திச்சென்றாள் - (நெருப்பிலே விழுதற்கு) அரசனுக்கு முன்னாலே போயினாள். எ-று.

மாந்தரால் இறத்தல் வாழ்தல் மாதரார்க்கு. (கசஎ)

அன்னைதானேகமைந்தனலரிச்சென்றடிவீழ்ந்தன்னு
யென்னைநீர்பயந்திருங்களிடுக்கணுக்குதவவன்றோ
முன்னையூழ்விதியினாலேமுந்தயான்றழலில்வீழ்வேன்
பின்னைநீர்பிழைமினென்றான்பெருகுநீரருவிக்கண்ணான்.

[அப்படித் தாயானவள் போகும்போது மகன் அலறிக்கொண்டுபோய் பாதங்களில் வீழ்ந்து தாயே நீங்கள் என்னைப் பெற்றது உங்களுக்கு வரும் துன்பங்களுக்கு உதவுதற் பொருட்டு அல்லவோ முன்னை நாளின் ஊழ்வினையினாலே முன்னதாக நானே நெருப்பில் விழுவேன் பிறகு நீங்கள் பிழைத்துக் கொள்ளுங்கள் என்று பெருகிய அருவிபோலும் கண்ணீரையுடைய லோகிதாசன் சொல்லினான், என்பதாம்.]

இ-ள். அன்னைதான் - அப்படித் தாயானவள், ஏக - செல்ல, மைந்தன்-புத்திரனாகிய லோகிதாசன், அலறிச்சென்று - அலறிக்கொண்டுபோய், அடி

வீழ்ந்து - பாதங்களில் வீழ்ந்து, அன்னாய் - தாயே!, உங்கள் - உங்களுடைய, இடுக்கணுக்கு - துன்பங்களுக்கு, உதவ அன்றோ - உதவும்படிக்கு அல்லவோ, என்னை - புத்திரனாகிய என்னை, நீர் - நீங்கள், பயந்தீர்-பெற்றீர்கள், முன்னை-முற்பிறப்பிலே செய்த, ஊழ்விதியினாலே - ஊழ்விதியினாலே, முந்த - முன்னாலே, யான் - நானே, தழலில் வீழ்வேன் - நெருப்பிலே வீழ்வேன், பின்னை-பிறகு, நீர் - நீங்கள், பிழைமின் - தப்பித்துப் பிழைத்துக்கொள்ளுங்கள், என்றான் - என்று கூறினான், பெருகு நீ அருவிக்கண்ணான் - பெருகுகின்ற கண்ணீரானது அருவிபோலப் பாயப்பெற்ற கண்ணையுடையவனாகிய லோகிதாசன். எ-று. (கசஅ)

தையலாளச்சொற்கேட்டுத்தனையனைத்தழுவிமோந்து
செய்யவாய்ப்பல்வீழ்ந்தில்லாய்செழுமுலைமறந்தாயல்லை
யையவித்துணிவுமிந்தமறிவுமெங்கடுத்ததென்னாக்
கையினான்முகத்தின்மோதிக்கண்ணினீரருவிசோர்ந்தாள்.

[சந்திரவதியானவள் அந்த வார்த்தைகளைக்கேட்டு தன் பிள்ளையைத் தழுவி உச்சி மோந்து செவந்த வாயிலிருந்து பல்லும் விழப்பெற்றிலை, செழுமையான முலைப்பாலுண்பதும் இன்னும் மறந்தாய் இல்லை அப்படியிருக்க அப்பனே உனக்கு இந்தத்துணிவும் அறிவும் எப்படி உனக்கு உண்டாயிற்று என்று கைகளினாலே முகத்தில் மோதிக்கொண்டு கண்களின் நீரை அருவிபோல ஒழுகவிட்டாள் என்பதாம்.]

இ-ள். தையலாள் - சந்திரவதியானவள், அச்சொற்கேட்டு - லோகிதாசன் சொன்ன அந்தச் சொற்களைக்கேட்டு, தனையனை - தன் புத்திரனாகிய லோகிதாசனை, தழுவிமோந்து - அணைத்துக்கொண்டு உச்சிமோந்து, செய்ய-செவந்த, வாய்ப்பல் வீழ்ந்திலாய் - வாயிலுள்ள பல்லும் விழப்பெற்றாய் இல்லை, செழுமுலை மறந்தாயல்லை - செழுமையான முலைப்பால் உண்ணுதலை மறந்தாய் அல்லை, (அப்படி இருக்க) இத்துணிவும் - இந்தவிதமான துணிச்சலும், இந்த அறிவும் - இப்படிப்பட்ட அறிவும், எங்கு - எங்கிருந்து, அடுத்தது என்னா - வந்து சேர்ந்ததென்று, கையினால் - கைகளினாலே, முகத்தில் மோதி - முகத்திலே மோதிக்கொண்டு, கண்ணீர் - கண்களில் நீரை, அருவி சோர்ந்தாள் - அருவிபோலச் சொரிய விட்டாள். எ-று.

"எங்கடுத்தது" எப்படி உண்டாயிற்று, என்றும் உரைக்கலாம். "மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றவர், சொற்கேட்டல் இன்பஞ்செவிக்கு" என்ற திருவாக்கின்படி சொற்கேட்டு இன்புற்றுத்தழுவி அந்த ஆனந்தத்தையும் கொண்டாள், முகத்தில் அறைந்து கண்ணீர் வடித்தது இவ்வளவு துணிவும் அறிவும் உள்ள பிள்ளைக்கு இவ்வளவு துன்பம் உண்டாயிற்றே என்றும். ()

செய்தவப்பயத்தினுலேதோன்றியசெல்வசெய்த
கைதவமுண்டேனம்மைக்கடுங்கனல்கொல்லுமல்லா
லுய்தகவுதவுமுள்ளம்வருந்தலையொழிநீயென்னு
மொய்தழறன்னைச்சென்றுமுடுகிநின்றினையசொல்வாள்.

[நாங்கள் செய்த தவப்பயனினுலே பிறந்த புத்திரனே! நாங்கள் செய்த வஞ்சனைகள் ஏதேனும் இருக்குமானுல் நம்மை இந்தக் கடிய நெருப்புக் கொல்லுமே யல்லாமல் வேறு வகையால் கொல்லாது நம்மைப் பிழைக்கும் படிச்செய்யும், ஆகையால் நீமனம் வருந்தாதே எட்டிப்போ என்று நெருங்கிய நெருப்பினிடத்தில் கிட்டி விரைந்து நின்று இவ் வார்த்தைகளைச் சந்திரவதி சொல்கின்ருள் என்பதாம்.]

இ-ள். செய்தவப் பயத்தினுலே - நாங்கள் செய்த தவத்தின் பயனினுலே, தோன்றிய - பிறந்த, செல்வ - புத்திரனே!, செய்த - நாங்கள் செய்துள்ள, கைதவம் - வஞ்சனைகள், உண்டேல் - இருக்குமானுல், நம்மை- நம்மை, கடுங்கனல் - கடுமையாகிய நெருப்பு, கொல்லுமல்லால் - கொன்று விடுமே அல்லாமல் (வேறு வகையால் கொல்லாது), உய்தகவு உதவும் - நாம் பிழைக்கும் தன்மையை நமக்குத்தரும், முள்ளம் வந்தலை - மனம் வருந்தாதே, ஒழி நீ என்னு - நீ எட்டிப்போ என்று, மொய்தழல் தன்னை - நெருங்கிய நெருப்பை, சென்று - சமீபித்து, விரைந்து நின்று இனைய சொல்வாள் - இந்த வார்த்தைகளைச் சந்திரவதி சொல்கின்ருள். எ-று.

'உள்ளம் வருந்தலை யொழிநீ, உன் மனம் வருந்துதலை நீ நீக்கு என்று பொருள் கொள்ளலு முண்டு. (கஙு௦)

மறைவழிகடந்தேமாகில்வரும்விருந்திகழ்ந்தேமாகில்
முறைவழிசெய்யேமாகில்மூப்பரையிகழ்ந்தேமாகிற்
பிறர்மனைநயந்தேமாகிற்பிறர்மனம்வைத்தேமாகிற்
குறைசிலசெய்தேமாகிற்கொல்லெனக்கனலிற்பாய்ந்தாள்.

[வேதநெறியைக் கடந்து நாங்கள் நடந்திருப்போமேயானுல், வந்த விருந்தினரை இகழ்ந்திருப்போமே யானுல், நீதி வழியே அரசாட்சி செய்யா திருந்திருப் போமேயானுல் பெரியோரை இகழ்ந்திருப்போமே யானுல், அயலான் மனைவியை இச்சித்திருந்தாலும், பிற புருஷனிடத்தே அன்பு கொண்டிருந்தோமானுலும் இன்னும் வேருன சில குறைகள் செய்திருந்தோமானுலும் நீ கொல்லக்கடவை என்று சொல்லி சந்திரவதி அந்த நெருப்பிலே விழுந்தாள் என்பதாம்.]

இ-ள். மறைவழி - வேதநெறியை, கடந்தேம் ஆகில் - நாங்கள் கடந்து நடந்தோமானுலும், வரும் விருந்து - வருவதான விருந்தினரை, இகழ்ந்தோமாகில் - இகழ்ந்தோமானுலும், முறைவழி செய்யேமாகில் - நீதிவழியே அர

சாட்சி நடத்தாதிருந்தோமானாலும், மூப்பரை - பெரியோர்களை, இகழ்ந்தேமாகில் - இகழ்ந்தோம் ஆனாலும், பிறர் மனை-அயலானின் மனையாளை, நயந்தேமாகில் - இச்சித்தோம் ஆனாலும், பிறர் - அன்னிய புருஷரை, மனம் - மனத்திலே, வைத்தேமாகில்-அன்போடு வைத்தேமானாலும், குறை - குறைகள், சில - வேறு சில, செய்தேமாகில் - செய்திருந்தோ மானாலும், கொல்லெனநீ கொல்லக்கடவை என்று, கனலிற் பாய்ந்தாள் - நெருப்பிலே பாய்ந்தாள். எ-று.

பிறர் மனை நயந்த தோஷம் நாயகனுடையதாக இருக்கவும், பொதுவிலே ஒற்றுமை பற்றிக் கூறுகின்றாள் இதுபோலவே 'பிறர் மனம் வைத்தேமாகில்' என்பது இதனால் இவ்விருவரும் மாசற்ற குணத்தினர் ஒழுக்கத்தினர் என்பது வெளியாம். (கருக)

மதுரமென்மொழியாள்கற்புவளர்நெடுவடவைத்தீயின்
முதிர்தழலதுதானென்னைச்சுடுமெனுமுழங்குசெந்தீ
யதிர்குரலார்ப்புமாறியடங்கிநாவொடுங்கிக்காலைக்
கதிரவன்வரவுகண்டவிருளெனக்கழிந்ததன்றே.

[மதுரமான மிருது பாஷியாகிய சந்திரவதியினுடைய கற்பென்று சொல்லும் நீண்ட வடவைத் தீயினும் முதிர்ந்த நெருப்பானது என்னைச் சுட்டுவிடுமென்று முழங்கி எரிகிற அந்தச் செவந்த நெருப்பானது, தன் அதிர்கின்ற குரள் சத்தமாறி அடங்கி சுவாலைகளும் அடங்கி காலைச் சூரியனின் வரவைக்கண்ட இருளைப்போல நீங்கிற்று என்பதாம்.]

இ-ள். மதுரம் - இனிமையான, மென் - மிருதுவாகிய, மொழியாள்-சொற்களை உடைய சந்திரவதியின், கற்பு - கற்பு என்கின்ற, வளர் - வளருகிற, நெடு - நீண்ட, வடவைத்தீயின் - வடவா முகாக்கினியினும், முதிர்-முதிர்ந்த, தழலதுதான் - அக்கினியானது தானே, என்னைச் சுடும் எனு - என்னைச் சுட்டுவிடும் என்று, முழங்கு செந்தீ - முழங்கி எரிகிற அந்தச் செவந்த நெருப்பானது, அதிர் குரல் ஆர்ப்பு மாறி - அதிருகின்ற குரற் சப்தம் மாறி, அடங்கி-தணிந்து, நாவொடுங்கி - சுவாலைகள் எல்லாம் ஒடுங்கி, காலை - காலையில், கதிரவன் வரவு கண்ட - சூரியனின் வரவைக்கண்ட, இருள் என - இருளைப் போல, கழிந்தது அன்றே - போயிற்று. அன்று, ஏ - அசைகள்.

'வடவைத்தீயின்' என்றதில் உள்ள 'இன்' உருபு எல்லைப்பொருளில் வந்தது வடவைத் தீயைக்காட்டிலும் என்பது பொருள். "காலைக்கதிரவன் வரவுகண்ட இருள்என" ஒடிற்று என்பது எழுத்துக்காட்டுவமை அணி.(கருஉ)

மண்டமறணிந்துமூங்கில்வனமெலாம்வாவியாகி
முண்டகங்குமுதநீலமுளரிகணிறையப்பூப்பக்
கண்டகங்குளிர்ந்துகற்பிற்கரசியைப்புகழ்ந்துபோற்றி
வண்டலின்மணிகொழிக்கும்வாரணவாசிசேர்ந்தார்.

[மிகுந்த நெருப்புத்தணிந்து அந்த மூங்கிற் காடெல்லாம் குளமாகி, வெள்ளைத்தாமரை, குமுதம், நீலம், செந்தாமரை ஆகிய இவைகள் நிறைய மலர்ந்து தோன்றக்கண்டு, மனம் குளிர்ந்து, கற்புக்கு அரசியாகிய சந்திரவதியைப் புகழ்ந்து துதித்து சேற்று நிலமெல்லாம் முத்துக்களை ஒதுக்குவதான வாரண வாசியைப் போய்ச் சேர்ந்தார்கள் என்பதாம்.]

இ-ள். மண்டு - மிகுந்து நெருங்கின, அழல் - நெருப்பானது, தணிந்து - ஆறி, மூங்கில் வனமெலாம் - மூங்கிற் காடுகள் எல்லாம், வாவியாகி - குளமாகி, முண்டகம் - வெள்ளைத் தாமரையும், குமுதம் - அல்லியும், நீலம் - நீலோத்பலமும், முளரிகள் - செந்தாமரைகளும், நிறையப்பூப்ப - நிறைந்து மலர்ந்து தோன்ற, கண்டு - பார்த்து, அகம் குளிர்ந்து - மனம் குளிர்ந்து, கற்பிற்கு அரசியை - கற்பிற்கு அரசியாக இருக்கின்ற சந்திரவதியை, புகழ்ந்து போற்றி - துதித்துக் கொண்டாடி, வண்டலில் - சேற்று நிலங்களில், மணி கொழிக்கும் - முத்துக்களை ஒதுக்குவதான, வாரணவாசி சேர்ந்தார் - வாரண வாசியைச் சேர்ந்தார்கள். எ-று.

'மண்டு அழல்' மிகுந்த நெருப்பு, அல்லது நெருங்கி எரிகின்ற நெருப்பு, வாரணவாசி என்பது காசியின் மறுபெயர். (கஙு)

வாரணவாசிநண்ணிவண்டுறையதனின்மேவி
யாரணநெறிநீராடியந்நதியகன்றுபோகிப்
பூரணக்கொங்கைமாதும்புதல்வனும்பின்னேபோகக்
காரணத்தமைச்சனோடுங்காசிநன்னாட்டைச்சேர்ந்தான்.

[அரிச்சந்திரன் அந்த வாரண வாசிக்குப்போய், அங்குள்ள அழகியதான தீர்த்தத்துறையை அடுத்து, வேதநெறிப்படி அதில் நீராடி அந்த நதியையும் கடந்து சென்று பூரண கும்பம்போன்ற கொங்கைகளையுடைய சந்திரவதியும், புத்திரனும் பின்னே வர மந்திரியோடும் நல்ல காசிநாட்டைச் சேர்ந்தான் என்பதாம்.]

இ-ள். வாரணவாசி நண்ணி - அரிச்சந்திரன் (நால்வரும்) தொடா வாரணவாசிக்குப்போய், வண்துறை அதனில் மேவி - அங்குள்ளதான அழகிய தீர்த்தத்துறையை அடைந்து, ஆரணநெறி - வேதசாஸ்திரங்களின் மார்க்கப்படி, நீராடி - ஸ்நானம் செய்து, அந்நதி அகன்றுபோகி - அந்த நதியை விட்டு நீங்கிப்போய், பூரணக் கொங்கைமாதும் - முற்றிய தனங்களையுடைய சந்திரவதியும், புதல்வனும் - புத்திரனாகிய லோகிதாசனும், பின்னே போக - பின் தொடர்ந்து வர, காரணத்தமைச்சனோடும் - நாடாததற்குக் காரணனாயிருக்கின்ற மந்திரியோடும், காசி நன் நாட்டை - காசியாகிய நல்ல நாட்டை, சேர்ந்தான் - அரிச்சந்திரன் போய்ச் சேர்ந்தான். எ-று.

'பூரணக்கொங்கை என்பதற்குப் பூரண கும்பம்போன்ற கொங்கை என்றும் பொருள் கூறுவம், 'பூரணக்கொங்கை' யாம் முற்றிய கொங்கை என்றோம். வளர்ச்சி வளப்பு முதலியன முற்றியுள்ள என்றும் ஆபரணாதி அலங்காரங்களால் முற்றி யிருந்த கொங்கை என்றும் பூரண வளர்ச்சியையுடைய என்றும் பொருளாம். "காரணத்தமைச்சன்" தன்னிமித்தமாகத் தன் கூட வருகிற என்றும் பொருள் கூறுவர். நாடு ஆள்தற்கு மந்திரி ஒரு பெரும் துணையாயிருத்தலின் காரணத்தமைச்சன் என்றார், இனி வேதகாரணங்களை அறிந்த அமைச்சன் என்றும் பொருள் விரிப்பர். (கருச)

நகர்நீங்கியகாண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - கூ0சு.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஏ ழா வ து,

# கா சி கா ண் ட ம்.

[இதில் அரிச்சந்திரன் முதலியவர் காசியில் செய்தமை கூறப்படுவதிஞலே காசிகாண்டம் என்றும் பெயராயது. இங்குதான் சந்திரமதியையும் லோகிதாசனையும் விற்கிருன். சுக்கிரனிடம் பணம் விஸ்வாமித்திரர்க்குச் சேர்க்கின்ருன் சுக்கிரனுக்குக் கூடவந்ததற்குக் கூலியாக மந்திரியைக்கொண்டு தன்னை புலையனுகிய வீரபாகுக்கு விற்பித்துப் பணம் செலுத்துகின்ருன்.]

அறுசீர்க்கழில் நெடிலடி ஆசிரிய விருத்தம்.

மாவெலாமரிகள்பாடமகிழ்ந்துநல்வாசமன்னும்
பூவெலாஞ்செழுந்தேனல்கப்பூவையுங்கிளியுமோதும்
பாவெலாமுருகக்கேட்டுப்பலகனிப்பரிசினல்கிக்
காவெலாந்தலையசைக்குங்காசிநாட்டியல்புசொல்வாம்.

[வயல்கள் எல்லாம் வண்டுகள் பாடிக்கொண்டிருக்க, மகிழ்ச்சியோடு நல்ல வாசனை பொருந்தியுள்ள பூக்கள் எல்லாம் செழுமையான தேனைத்தரவும், நாகணவாய்ப் பறவைகளும் கிளிகளும் பாடுகின்ற பாடல்களை எல்லாம் மனம் உருகக்கேட்டு பலவித பழங்களை வெகுமதியாகக் கொடுத்துச் சோலை முழுதும் தலையசைக்கும் காசி நாட்டினது வளமையைச் சொல்லுகின்றேன் என்பதாம்.]

இ-ள். மா எலாம் - வயல்கள் எல்லாம், அரிகள் - வண்டுகள், பாட- பாடிக்கொண்டிருக்க, மகிழ்ந்து - சந்தோஷப்பட்டு, நல்வாசமன்னும் - நல்ல மணம்பொருந்தின, பூ எலாம் - மலர்கள் எல்லாம், செழுந்தேன் - செழுமையான தேனை, நல்க - தரவும், பூவையும் - நாகணவாய்ப்புள்ளும், கிளியும்-கிளிகளும், ஓதும் - பாடுகின்ற, பா எலாம் - பாட்டுகளை எல்லாம், உருகக்கேட்டு- மனம் உருகும்படிக்கேட்டு, பலகனி - பலவகைப் பழங்களாகிய, பரிசில் நல்கி- வெகுமதிகளைக் கொடுத்து, கா எலாம் - சோலைமுழுதும், தலையசைக்கும்-தலைகளை அசைக்கும்படியான, காசி நாட்டு இயல்பு - காசி நாட்டினது தன்மையை, சொல்லுவாம் - சொல்லுவோம். எ-று.

இது 'நுதலிப்புகுதல்' விளச்சீர், மாச்சீர், மாச்சீர், விளச்சீர், மாச்சீர், மாச்சீர் என அறுசீர் ஓரடிக்கு அமைந்த கலி விருத்தம். (க)

தேனவியுங்கோவுமெய்தத்திகழ்செழுங்கமலப்போதுங்
காவியுங்குமுதப்போதுங்காமர்செங்கிடையுந்தண்ணீர்

வாவியுங்காட்டமாதர்வதனமுங்காட்டவண்டாம்
பாவியுமீதேதென்றுபாதவித்துழலுமன்னே.

[சந்திரவதியும் அரசனும் வந்துசேர தண்ணீர்க்குளங்கள் விளங்குகின்ற செழுமையான தாமரைப்பூவையும் நீலோற்பல மலரையும், செவ்வல்லி மலரையும், அழகிய சிவந்த நெட்டியையும் காட்ட சந்திரவதியினுடைய முகமும் அவைகளைத் தோன்றச்செய்ய வண்டாகிய பாவியும் இது எது புதுமையாக இருக்கின்றது என்று பாதவித்து அலைவதாயிற்று என்பதாம்.]

இ-ள். தேவியும் - சந்திரவதியும், கோவும் - அரிச்சந்திரமகாராஜனும், எய்த - வந்துசேர, தண்ணீர் வாவியும் - குளிர்ந்த நீரை உடைய குளமும், (தன்னிடத்துள்ளனவாகிய), திகழ் - விளங்குகின்ற, செழும் - செழுமையான, கமலம் போதும் - தாமரை மலர்களையும், காவியும் - நீலோற்பல மலர்களையும், குமுதப்போதும் - செவ்வல்லி மலரும், காமர் - அழகிய, செங்கிடையும்- செவந்த நெட்டியும், காட்ட - தோன்றச்செய்ய, மாதர் - சந்திரமதியின், வதனமும் - முகமும், காட்ட - (முகமாகிய தாமரையையும், கண்ணாகிய நீலோற்பலத்தையும், வாயாகிய குமுதத்தையும், இதழாகிய செங்கிடையையும்) தோன்றச்செய்ய, வண்டாம் பாவியும் - வண்டாகிய பாவியும், ஈது எது என்று - இது எது புதுமையாக இருக்கிறது என்று, பாதவித்து - பரிதபித்து, உழலும்-அலைவதாகும். எ-று. 'மன்' 'ஓ' அசைகள்.

'பாவி' சமமாக நினைப்பது; என்பது பொருள். குளத்தில் உள்ள மலர்கள் போல சந்திரமதியின் முகம், கண், வாய் முதலியன விளங்க வண்டுகள் ஈது எது புதிதாக இருக்கின்றதென்று கண்டு மருண்டது என்பதாம். இதில் வண்டுகள் சந்திரமதியின் முகம், கண், வாய் முதலியவற்றை மலரென மருண்டு அலைந்ததாகக் கூறலின் இது மருட்சி அணியாம். (உ)

வயலெலாஞ்செந்நெல்செந்நென்மருங்கெலாங்கயல்கள்வாவுங்
கயலெலாங்கலவைவாசங்காவெலாம்புயல்கள்காவிற்
புயலெலாம்புகையேயந்தப்புகையெலாம்பூழில்பூழி
லயலெலாமாரமாரத்தருகெலாந்தேவதாரம்.

[வயல் எலாம் செவந்த நெற்கள், செந்நெல் பக்கங்கள் எல்லாம் கயல் கெண்டை மீன்கள் அந்தத் துள்ளுகின்ற கயற்கெண்டைகள் மேல் எல்லாம் கலவைக்கூட்டு மணம், சோலைகள் எல்லாம் மேகங்களும், அந்தச் சோலையில் படிகிற மேகங்கள் எல்லாம் ஓமப்புகைகள், அந்த ஓமப்புகைகள் எல்லாம் அகில் விருட்சங்களின் பக்கத்திலேயாம் அகில் விருட்சங்களின் பக்கமெல்லாம் சந்தன விருட்சங்களே. சந்தன விருட்சங்களின் பக்கமெல்லாம் தேவதாரு விருட்சமே என்பதாம்.]

இ-ள். வயல் எலாம் - வயல்கள் எல்லாம், செந்நெல் - செவந்த நெற்கள், செந்நென் மருங்கு எலாம் - செவந்த நெற்களின் பக்கங்களில் எல்லாம், கயல்

கள் - கயல் மச்சங்கள், வாவும் - துள்ளுகிற, கயல் எலாம் - கயல் மச்சங்களின் மேல் எல்லாம், கலவை வாசம் - கலவைகளின் வாசங்கள், கா எலாம் - சோலைகள் எல்லாம், புயல்கள் - மேகங்கள், காவில் புயல்எலாம் - சோலைகளில் மேகங்கள் எல்லாம், புகையே - ஓமப்புகைகளே, அந்தப் புகை எலாம் - அந்த ஓமப் புகைகள் எல்லாம், பூழில் - அகில் விருக்ஷத்தின் பக்கத்திலேயே, பூழில் அயல் எலாம் - அந்த அகில் விருக்ஷங்களின் பக்கமெல்லாம், ஆரம் - சந்தன விருக்ஷங்களே, ஆரத்து அருகு எல்லாம் - அந்த சந்தன விருக்ஷத்துக்கு சமீபத்தில் எல்லாம், தேவதாரம் - தேவதார விருக்ஷங்கள். எ-று. (ங)

நுரைமணநாறுஞ்சீதநுண்டுளித்திரள்கள்சிந்துந்
திரைமணநாறுமீனத்திரண்மணநாறுஞ்செந்தா
மரைமணநாறும்வெள்ளைவளைமணநாறும்வாவிக்
கரைமணநாறுமாதர்கனதனக்கலவையம்மா.

[நீராடுகின்ற பெண்களின் கனமான தனங்களிலே பூசின கலவைச் சந்தன வாசனையாகவே குளத்து நீர் நுரைகளும் வாசம் வீசும், குளிர்ந்த சிறிய துளிக்கூட்டங்களைச் சிதறுகின்ற அலைகளும் வாசம் வீசும், மீனினங்களும் வாசனை வீசும், செந்தாமரை மலர்களும் வாசனை வீசும், வெள்ளைச் சங்குகளும் வாசனை வீசும், அந்தக் குளக் கரையும் வாசனை வீசும், என்பதாம்]

இ-ள். மாதர் - நீராடுகிற பெண்களின், கனதனக்கலவை - கனமான கொங்கைகளிலே பூசின கலவைச்சந்தனமே, நுரைமண நாறும் - குளத்து நீர் நுரைகளும் வாசனைவீசும், சீதம் - குளிர்ச்சி பொருந்திய, நுண் துளித்திரள்கள் - நுண்ணிதாகிய துளிக்கூட்டங்களை, சிந்தும் - சிதறுகின்ற, திரை - அலைகளும், மணநாறும் - வாசனை வீசும், மீனத்திரள் - மீன் இனங்களும், மணம் நாறும் - வாசனை வீசும், செந்தாமரை - செவந்த தாமரை மலர்களும், மண நாறும் - வாசனை வீசும், வெள்வளை - வெள்ளைச் சங்குகளும், மணநாறும்- வாசனை வீசும், வாவிக்கரை - அந்த குளக்கரையும், மணநாறும் - வாசனை வீசும். எ-று. அம்மா அசை. இது உயர்வு நவிற்சி அணியாம். (ச)

கரும்பினையொடித்துமள்ளர்கடாவினையடிக்கச்சிந்தி
நிரம்பினமுத்துமெங்குநிலாக்கதிர்பரப்பித்
திரும்பினதிசைகடோறுந்திகழ்தலாற்செறிந்துபன்மீ
னரும்பியவானுமங்காட்டசனியுமொத்தவன்றே.

[உழவர்கள் கரும்பை ஒடித்து எருமைக் கடாக்களை அடிக்க, அந்தக் கரும்பிலிருந்தும் சிதறி நிரம்பிய முத்துக்கள் எங்கும் நிலாவைப் போலப் பிரகாசித்து திரும்பிப் பார்க்கிற திசைகளில் எல்லாம் விளங்குகிறதினாலே நெருங்கிப் பல நட்சத்திரங்கள் பூத்த ஆகாயமும் அவ் ஆகாய நாட்டில் உள்ள இடியையும் ஒப்பாய் இருந்தது என்பதாம்.]

இ-ள். மள்ளர் கரும்பினை ஒடித்து - உழவர்கள் கரும்பை ஒடித்து, கடாவினை அடிக்க - எருமைக்கடாக்களை அடிக்க, சிந்தி - சிதறி, நிரம்பின முத்தும்-

நிரம்பிக் கிடக்கின்ற முத்துகளும், எங்கும் - எவ்விடத்தும், நீள் நிலாக்கதிர் பரப்பி - நீண்ட சந்திரிகையின் கிரணங்களைப்போலப் பிரகாசித்து, திரும்பின திசைகள் தோறும் - திரும்பிப் பார்க்கிற திசைகள் எல்லாம், திகழ்தலால்- விளங்குகிறதினாலே, செறிந்து - நெருங்கி, பன்மீன் - பல நட்சத்திரங்கள், அரும்பிய - பூத்த, வானும் - ஆகாயமும், அங்காட்டு அசனியும் - அந்த ஆகாய நாட்டில் உள்ள இடியையும், ஒத்த - ஒப்பாயிருந்தது. எ-று. அன்று, 'ஏ' அசைகள்.

முத்துக்களை நட்சத்திரங்களாகவும் கடாவினை அடிக்கும் ஓசையை இடி ஓசைக்கும் ஒப்பிட்டார். (ரு)

காய்ந்தவெஞ்சினக்கடாக்கள்கமலங்கள்சிதைத்தழுந்திச்
சாய்ந்தவக்கழிகளெல்லாஞ்சங்கினஞ்சரிவமேதி
தோய்ந்தபூந்தடங்களெல்லாந்துள்ளுவவாளைக்காளை
பாய்ந்தவக்கழிகளெல்லாம்பறிவனபலவினூறல்.

[வேடர்களாலே கோபித்து அடிக்கப்பட்ட வெவ்விய கோபத்தை உடைய எருமைக்கடாக்கள், தாமரை மலர்களைக்கெடுத்து அழுந்துத லாகிச் சாய்ந்து கிடக்கிற கழிகளிலே எல்லாம் சங்குக்கூட்டங்கள் சரிந்து கிடக்கின்றன, எருமைகள் படிந்த பூக்குளங்கள் எல்லாம் இளவாளை மீன்கள் துள்ளிப் பாய்ந்த, வாளைபாய்ந்த அந்தக் கழிகள் எல்லாம் பலவின் தேன் வந்து நின்றவனவாகும் என்பதாம்.]

இ-ள். காய்ந்த - உழவராலே கோபிக்கப்பட்ட, வெஞ்சினக் கடாக்கள்- வெவ்விய சினத்தை உடைய எருமைக்கடாக்கள், கமலங்கள் - தாமரை மலர் களை, சிதைத்து - கெடுத்து, அழுந்தி - அழுந்துதலாகி, சாய்ந்த - சாய்ந்து கிடக்கின்ற, கழிகள் எல்லாம் - கழிகளிலே யெல்லாம், சங்கினம் சரிவ - சங் குக் கூட்டங்கள் சரிந்து கிடக்கின்றன, மேதி - எருமைகள், தோய்ந்த-படிந்த, பூந்தடங்கள் எல்லாம் - பூக்குளங்கள் எல்லாம், துள்ளுவ வாளைக்காளை - இள வாளை மீன்கள் துள்ளுவனவாகும், பாய்ந்த அக்கழிகள் எல்லாம் - அந்த வாளை கள் பாய்ந்த கழிகளில் எல்லாம், பறிவன பலவின் ஊறல் - பலாப்பழத்தின் தேன்கள் வந்து நிறையும். எ-று. (சு)

கடைசியர்குரவைகேட்டுக்கலங்கியேமயங்கிக்காவி
னிடையிடைமறைவதேபோலிரிவனகிளிகளெல்லா
மடையிடைசரியுமுத்தம்வளரிளநகைகண்டஞ்சி
வுடைபெரும்புனலிலோடியொளிப்பனபோன்றவன்றே.

[அந்த நாட்டில் உள்ள உழத்திகளின் குறவைப்பாட்டைக்கேட்டு, கலக்கம் கொண்டு மயங்கி சோலையின் இடை இடைகளில் மறைந்து கொள்ளுகின்றவைகளைப்போல் கிளிகள் எல்லாம் ஓடல் ஆயின. நீர் மடைகளிலே ஒதுங்குகின்ற முத்துக்கள் அந்த உழத்திகளுடைய ஒளி வளருகின்ற இளமையான பல் வரிசைகளைக்கண்டு பயந்து கரையை உடைக்கிற பிரவாக ஜலத்துக்குள்ளே ஓடி ஒளிந்து கொள்ளுகின்றவற்றைப் போன்றன என்பதாம்.]

இ-ள். கடைசியர் - அந்த நாட்டில் உள்ள உழத்தியர்களுடைய குரவை கேட்டு - குரவைப் பாட்டைக்கேட்டு, கலங்கியே மயங்கி - கலக்கம் கொண்டு மயங்கி, காவின் இடை இடை - சோலைகளின் மத்தியிடங்களில் எல்லாம், மறைவதேபோல் - மறைந்து கொள்ளுகிறதைப்போல, இரிவன கிளிகள் எல்லாம் - கிளிகள் எல்லாம் ஓடும், மடையிடை சரியும் முத்தம் - நீர் மடைகளிலே ஒதுங்குகின்ற முத்துக்கள், வளர் இளநகை கண்டு அஞ்சி - ஒளி வளர்கின்ற புன் சிரிப்பைக்கண்டு பயந்து, உடைபெரும் புனலில் ஓடி - கரைகளை உடைக்கின்ற பெரிய நீரில் ஓடி, ஒளிப்பன போன்ற அன்றே - ஒளித்துக் கொள்ளுவதை ஒத்திருக்கின்றன. எ-று. 'அன்று' 'ஏ' அசைகள்.

உழத்தியரின் குரவைப்பாட்டைக் கேட்டு கிளிகள் அஞ்சிச் சோலைக்குள் ஒளித்தன. அவர்கள் போலப்பேசும் இனிமை தனக்கு இல்லாமையினால் முத்துக்கள் உழத்தியர் பல் வரிசைகளுக்கு தாம் ஒப்பில்லாமை கண்டு அஞ்சி நீருள் ஒளித்தன என்பதாம். இயல்பாகவே பறக்கும் கிளிகளையும் தண்ணீரில் மறையும் முத்துக்களையும் ஈண்டு பாட்டைக்கேட்டும் பல்லைக்கண்டும் பயந்து பதுங்கியதாகப் பகர்ந்தது தற்குறிப்பு ஏற்ற அணி. (எ)

இன்விளைமதுவுண்மள்ளரிருந்துநாள்கொண்டுவித்தி
முன்விளைசெந்நெல்கொய்துவருமுதன்முதிர்ந்துகாய்ந்த
பின்விளைகதிர்களாலைப்பெருக்கினின்முளைப்பவெல்லாம்
பொன்விளைகுரலிற்றேன்றும்வெள்ளிவால்போன்றவன்றே.

[தித்தித்த கள்ளைக் குடித்துக்கொண்டிருக்கிற உழவர்கள் ஆலோசித்து இருந்து நல்லநாள் கேட்டு விதைத்து முதலிலே விளைந்த செவந்த நெற்களை அறுத்துக்கொண்டு போனபின்பு தோன்றுகின்ற அந்த நெல்லின் அடிமுற்றி உலர்ந்த பின்பு விளைகிற கதிர்கள் ஆலையிலிருந்து வரும் கரும்புச் சாற்றினால் விளைவதாகும். அவைகள் எல்லாம் பொன்னிறமாக விளைகின்ற கதிர்களுக்கு வெள்ளி வால் முளைத்தாற்போல் இருந்தன என்பதாம்.]

இ-ள். இன்விளை - தித்திப்பு உண்டாகும், மது உண் மள்ளர் - கள்ளைக் குடிக்கின்ற உழவர்கள், இருந்து - ஆலோசித்து இருந்து, நாள்கொண்டு - நல்ல நாளைக் கேட்டுக்கொண்டு, வித்தி - அந்தநாளில் விதைத்து, முன்விளை செந்நெல் - முன்னே விளைந்த செவந்த நெற்களை, கொய்து - கொய்த பிற்பாடு, வருமுதன் முதிர்ந்து காய்ந்த - தோன்றுகின்ற அந்த நெல்லின் அடிமுற்றிக்

காய்ந்து போயின, பின் - அதற்குப் பின்பு, விளை கதிர்கள் - காய்ந்த அந்த நெல்லின் அடியிலிருந்து விளைகின்ற கதிர்கள், ஆலை - ஆலைகளிலிருந்து வழியும், பெருக்கினின் - கருப்பஞ்சாற்றின் பெருக்கினாலே, முளைப்ப எல்லாம்- அவைகள் எல்லாம் முளைக்கும், பொன் விளை குாலில் - (அவைகள்) பொன் நிறமாக விளைகின்ற கதிர்களுக்கு, தோன்றும் - தோன்றுகின்ற, வெள்ளி வால் போன்ற - வெள்ளிவால் முளைத்தால்போல் இருந்தன. எ-று. அன்று, 'ஏ' அசைகள். (அ)

இயலறிபுலவோர்தம்மாட்டுள்ளனவிரவோர்க்கீந்த
செயலறிந்துளநாள்கைம்மாறளித்திடச்செல்வோர்போல
வயல்வளஞ்சுரக்கமேனுண்மழைவளஞ்சுரந்தசீர்சால்
புயல்வளர்விசும்பிற்செந்நெல்போய்ப்புகவளர்ந்தவன்றே.

[ஈகைத்தன்மையின் இலக்கணத்தை அறிந்த தாதாக்கள் தங்களிடத்தில் உள்ள பொருள்களை எல்லாம் இரப்போர்க்குக் கொடுத்த செய்கையை அறிந்து தங்களுக்குச் செல்வம் உண்டான நாளில் முன்னம் செய்த உபகாரத்திற்குப் பிரதி உபகாரம் செய்யப் போவோர் போல வயிலிலே வளம் உண்டாகும்படி மழைபெய்கிற காலத்திலே மழையை மிகுதியாகப் பெய்த மேகங்கள் சஞ்சரிக்கின்ற ஆகாயத்தில் செந்நெல் போய்ப் புகும்படி வளர்ந்தது என்பதாம்.]

இ-ள். இயல் அறி - ஈகையின் இலக்கணங்களைத்தெரிந்த, புலவோர்- தாதாக்கள், தம் மாட்டு உள்ளன - தம்மிடத்திலே உள்ள பொருள்களை, இரவோர்க்கு - இரப்போர்க்கு, ஈந்த - கொடுத்த, செயல் அறிந்து - செய்கையைத் தெரிந்து, உளநாள் - தமக்குச் செல்வம் உண்டான காலத்தில், கைம்மாறு- பிரதியுபகாரமாக, அளித்திடச் செல்வோர்போல - கொடுப்பதற்குச் செல்லும் நல்லோர்களைப்போல, வயல் வளம் சுரக்க - வயலிலே விளைவு உண்டாக, மேனாள் - முன்னாளில், மழைவளம் சுரந்த - மழையைப் பெய்கிற காலங்களில் மிகுதியாகப்பெய்த, சீர்சால் - சிறப்பு மிக்க, புயல்வளர் - அந்த மேகங்கள் உலாவுகின்ற, விசும்பில் - ஆகாயத்திலே, செந்நெல் போய்புக - செவந்த நெல்கள்போய் முட்டுவதாக, வளர்ந்தவன்றே - வளர்ந்திருக்கின்றன. எ-று. 'அன்று' 'ஏ' அசைகள்.

மழைபெய்து உதவிசெய்த விசும்பிற்கு உதவி செய்வதுபோல் நெற் பயிர்கள் ஆகாயவரை நீண்டு வளர்ந்திருந்தன என்றதாம். (க)

இத்தகையாயநன்னாட்டெல்லைகண்டொல்லையேகி
மைத்தழைகபாடவாயின்மணிநிழல்வந்துநண்ணிக்
கொத்தலர்குழலியோடுங்கோளொடுங்குமரனோடு
மெய்த்திறலமைச்சனோடும்வித்தகன்காசிபுக்கான்.

[இப்படிப்பட்ட பெருமையை உடையதான அந்த நல்ல நாட்டின் எல்லையைக்கண்டு விரைவாகப்போய், மேகங்கள் சஞ்சரிப்பதான கதவுபூண்ட கோட்டை வாயிலின் அழகிதான நிழலில் வந்து கூடி பூங்கொத்துகள் விரிந்த கூந்தலையுடைய சந்திரவதியுடனேயும் சுக்கிரனோடும் புத்திரனாகிய லோகிதாசனோடும் சத்தியமாகிய வன்மையையுடைய மந்திரியோடும் அரிச்சந்திரன் காசிப்பட்டணத்துக்குள் புகுந்தான் என்பதாம்.]

இ-ள். இத்தகையாய - இப்படிப்பட்ட பெருமையை உடைய, நல் நாட்டு எல்லை கண்டு - நல்ல நாட்டின் எல்லையைப்பார்த்து, ஒல்லை எகி - விரைவிலே சென்று, மைதழை - மேகங்கள் மிகுதியாகச் சஞ்சரிக்கப்பெற்ற, கபாடவாயில்- கதவுபூண்ட கோட்டை வாசலின், மணி நிழல் வந்து - அழகிதான நிழலிலே வந்து, நண்ணி - கூடி, கொத்து - பூங்கொத்துகள், அலர்-விரிந்துள்ள, குழலியோடும் - கூந்தலையுடைய சந்திரவதியோடும், கோளொடும் - சுக்கிரனோடும், குமானோடும் - புத்திரனாகிய லோகிதாசனுடனும், மொய்ச்சிறல் - சத்தியத்தின் வலியைக்கொண்ட, அமைச்சனோடும் - மந்திரியோடும், விரித்தகன் - அரிச்சந்திரமகாராஜன், காசிபுக்கான் - காசிமாநகரத்துக்குள்ளே போனான். எ-று. 'வித்தகன்' அறிவுடையோன், சமர்த்தன். (கo)

ஆரணசாலைகோடியாவணவீதிகோடி
தோரணவாயில்கோடிசுடர்மணிமாடங்கோடி
பூரணகும்பமின்னிப்பொலியுமண்டபங்கள்கோடி
வாரணபந்திகோடிவயப்பரிபந்திகோடி.

[வேதாத்தியயன சாலைகள் கோடி, கடைவீதிகள் கோடி, தோரணங்கட்டின வாயில்கள்கோடி, ஒளிபொருந்தின ரத்தினக்கல்லால் செய்திருக்கிற வீடுகள் கோடிநிறை குடங்கள் விளங்கப் பொலிவுகொண்ட மண்டபங்கள் கோடி, யானைச்சாலைகள் கோடி குதிரை லாயங்கள் கோடியாக அந்த நகரில் இருந்தன என்பதாம்.]

இ-ள். ஆரணசாலை - வேதாத்தியயன சாலைகள், கோடி - கோடிக்கணக்கின, ஆவண வீதிகோடி - கடைவீதிகள் கோடிக்கணக்கின, தோரணவாயில்- தோரணங்கட்டிய வாயில்கள், கோடி - கோடிக்கணக்கின, சுடர் - பிரகாசம் பொருந்திய, மணிமாடங்கோடி - ரத்நமாளிகைகள் கோடிக்கணக்கின, பூரண கும்பம் - நிறை குடங்கள், மின்னிப்பொலிவும் - விளங்கிப் பொலிவுகொண்ட, மண்டபங்கள் கோடி - மண்டபங்கள் கோடிக்கணக்கின, வாரண பந்திகோடி- யானைச்சாலைகள் கோடிக்கணக்கின, வயப்பரி பந்திகோடி - வெற்றி பொருந்திய குதிரைச்சாலைகள் கோடிக்கணக்கின. எ-று.

"சுடர்மணி மாடம் கோடி" என்பதற்கு ஒளிபொருந்தின சூரிய காந்தக் கல்லால் செய்திருக்கிற வீடுகள் கோடி, எனவும் கூறுவர். (கக)

ஆடுமங்கையரனந்தராடுவாராடல்காண
வோடுமங்கையரனந்தருலவுமங்கையரனந்தர்
பாடுமங்கையரனந்தர்பயிறருவீதியெல்லாம்
வாடுமங்கையுமயோத்திமன்னனுங்கண்டுபோனார்.

[ஆடுகின்ற பெண்கள் அநேகர் ஆடுகிறார்கள். அவர்கள் ஆடலைக்காண ஓடும்பெண்கள் அநேகர். உலாவிக்கொண்டிருக்கும் பெண்கள் அநேகர், பாடுகிற பெண்கள் அநேகர், இப்படிப்பட்ட தன்மை பொருந்தியுள்ள வீதிகளை எல்லாம் வாடியிருக்கின்ற சந்திரவதியும் அயோத்திக்கு அரசனாகிய அரிச்சந்திரமகாராஜனும் பார்த்துக்கொண்டே போனார்கள். என்பதாம்.]

இ-ள். ஆடும் - நிர்த்தனம் செய்கின்ற, மங்கையர் - பெண்கள், அனந்தர்- அநேகர்கள், ஆடுவார் - ஆடுவார்கள், அவர் - அந்த ஆடுகிற பெண்களின், ஆடல் காண - ஆட்டத்தைக் காண்பதற்காக, ஓடும் - ஓடுகின்ற, மங்கையர் - பெண்கள், அநந்தர் - அநேகர், உலாவும் மங்கையர் அநந்தர் - உலாவுகின்ற பெண்கள் அநேகர், பாடும் மங்கையர் அநந்தர் - பாடுகின்ற பெண்கள் அநேகர், பயில் தரு - இப்படியாகப் பழகுதலையுடைய, வீதி எல்லாம் - வீதிகளை எல்லாம், வாடு மங்கையும் - வாட்டத்தோடிருக்கின்ற சந்திரவதியும், அயோத்தி மன்னனும் - அயோத்திமாநகரத்திற்கு அரசனாகிய அரிச்சந்திரனும், கண்டு - பார்த்துக்கொண்டே, போனார் - போனார்கள். எ-று. (சஉ)

தொலைவிலாமுதல்வனார்க்குஞ்சுக்கிரன்றனக்குமாய
வலைவின்மாநகரிபுக்காரரிவையரளகக்காடுங்
கலைவிழிக்கடலுமின்பக்கடிகடவரவும்பார
முலையெனுமலையும்வந்துமுடுகினமறுகுதோறும்.

[அழிவில்லாத கீர்த்தியைக்கொண்ட அரசனாகிய அரிச்சந்திரனுக்கும், சுக்கிரனுக்கும் பொருந்திய அலைச்சல் இல்லாத பெரிய காசிநகரத்துக்குள்ளே புகுந்தார்கள், பெண்களின் கூந்தற்காடும், மான்களை ஒத்த கண்கள் என்கிற கடலும் சுகத்தைத் தருவதான நிதம்பமாகிய பாம்பும் பெரிய முலை என்கிற மலைகளும் வீதிகளிலெல்லாம் வந்து விரைந்து தோன்றின, என்பதாம்]

இ-ள். தொலைவு இலா - அழிவு இல்லாத கீர்த்தியைக்கொண்ட, முதல்வனார்க்கும் - தலைவனாகிய அரிச்சந்திர மகாராஜனுக்கும், சுக்கிரன் தனக்கும்-சுக்கிரனுக்கும், ஆய - அப்படிப்பட்ட, அலைவு இல்மாநகரி - அலைச்சல் இல்லா பெரிய நகரத்துக்குள்ளே, புக்கார் - புகுந்து செல்லும்போது, அரிவையர்- பெண்களின், அளகக்காடும் - கூந்தற்காடும், கலை - மான்போன்ற, விழி-கண்களாகிய, கடலும் - கடல்களும், இன்பக்கடி தட அரவும் - சுகத்தைத் தருவதான நிதம்பமாகிய பாம்பும், பாரம் - கனத்த, முலையெனும் - முலைகள் என்று

சொல்லும்படியான, மலையும் - மலைகளும், மறுகுதோறும் - வீதிகளில் எல்லாம், வந்து முடுகின - வந்து விரைந்து தென்பட்டன. எ-று. (கரு)

உத்திரபத்திமீதிலுயர்ந்தமாளிகைநெற்றிச்
சித்திரச்சாளரங்கடிறந்துசெந்திருவையன்னார்
வத்திரச்சிலைகள்கோடுமன்னனையிலக்காவெய்த
வத்திரமனந்தகோடியணைந்திலவறிவுக்கஞ்சி.

[உத்திர வரிசைகளின் மேலே. உயர்ந்ததாகிய பெரிய வீடுகளின் உச்சியிலே உள்ள அழகிய ஜன்னல்களைத் திறந்துகொண்டு, லட்சுமியை ஒத்த பெண்கள், பாணங்களைக்கொண்ட வில்லை வளைக்கும் அரிச்சந்திரனை இலக்காக எய்த கண்ணாகிய பாணங்கள் அனந்த கோடியாகும் அவைகள் எல்லாம் இவனுடைய திடஞான அறிவுக்கு அஞ்சிக் கிட்டத்தில் கூட வாவில்லை என்பதாம்.]

இ-ள். உத்திர பத்தி மீதில் - உத்திர வரிசைகளின் மேலே, உயர்ந்த மாளிகையின் - உயர்ந்துள்ள வீடுகளின், நெற்றி - உச்சியில், சித்திரம் - அழகிய, சாளரங்கள் திறந்து - சன்னல்களைத் திறந்துகொண்டு, செந்திருவை அன்னார் - அழகிய லட்சுமியை ஒத்த பெண்கள், வத்திரச்சிலைகள் கோடும் மன்னனை - பாணங்களைக்கொண்ட வில்களை வளைக்கும்படியான அரிச்சந்திர மகாராஜனை, இலக்கா - குறிப்பாக, எய்த - எய்த, அத்திரம் அனந்தகோடி - (கண்களாகிய) அநேககோடி பாணங்கள், அறிவுக்கு அஞ்சி - அரிச்சந்திரனின் திடஞானத்துக்குப் பயந்து, அணைந்தில - அருகில் நெருங்கவில்லை. எ-று. "வத்திரச்சிலைகள் கோடும்" காவிக்கலில் தோய்ந்த முனிவர் தந்த வஸ்திரத்தை உடுத்தியுள்ள, என்றும் பொருள் விரிப்பர். (கச)

அன்னவைபலகண்டேகியணிமணிக்கோயினண்ணி
நன்னதிபுனைந்தசென்னிநாயகன்விசுவநாதன்
சன்னிதிதன்னிற்சென்னிதலையுறவணங்கிப்போந்து
மன்னவர்பெருமானங்கோர்மணிமுடிப்பொதியில்சேர்ந்தான்.

[அப்படிப்பட்டவைகள் பலவற்றைக் கண்டு, சென்று ரத்தின கசிதமாகிய கோயிலுக்குள்ளே போய், கங்கையைச்சூடிய தலையை உடைய சிவபெருமானாகிய விசுவநாதேஸ்வரர் சன்னிதியிற்போய் தலையுற வணங்கி வந்து ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரன், அங்கே ஒரு அழகிய சிகரத்தைக்கொண்ட அம்பலச்சாவடியை வந்து சேர்ந்தான். என்பதாம்.]

இ-ள். அன்னவை - அப்படிப்பட்டவைகள், பல கண்டு ஏகி - பல அதிசயங்களைக் கண்டுகொண்டே சென்று, அணிமணிக் கோயில் நண்ணி - அழகிய ரத்தகசிதமான கோயிலுக்குள்ளே சென்று, நல்-நல்ல, நதிபுனைந்த-கங்காநதியைச் சூடியுள்ள, சென்னி - தலையை உடைய, நாயகன் - கடவுளாகிய, விசுவநாதன்-

விசுவநாதரின், சன்னிதி தன்னிற்சென்று - சன்னிதியிலே போய், தலையுற - தலையானது பூமியிலே பொருந்தும்படி, வணங்கி - வணங்கிக்கொண்டு, போந்து - வந்து, மன்னவர் பெருமான் - ராஜாதி ராஜனாகிய அரிச்சந்திரன், அங்கு - அங்கே, ஓர் - ஒரு, மணிமுடிப்பொதியில்-அழகிய சிகரத்தை உடைய அம்பலச்சாவடியில், சேர்ந்தான் - போய்ச்சேர்ந்தான். எ-று.

காசியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் திருநாமம் விசுவநாத ரென்பது, அம்மன்பெயர் விசாலாட்சி அம்மன். (கரு)

அப்பெரும்பொதியில்புக்காரமைச்சனங்காடிநண்ணி
யெப்பெரும்பண்டமுங்கொண்டெய்தினனிமைப்பினட்டுச்
செப்பருந்திருவினல்லாடிருக்கையாற்படைத்தவன்னந்
துய்ப்பனசெய்திருந்தாரிருந்தபினிகழ்ந்தசொல்வாம்.

[அந்தப் பெரிய பொதுச்சாவடிக்குள்ளே போனவர்களில் மந்திரியான வன் கடைக்குப்போய் சமயலுக்கு வேண்டும் எல்லாப் பெரிதான சாமான்களும் வாங்கி வந்தான். லட்சுமியை ஒத்த சந்திரவதியான வள் அதைக்கொண்டு ஒரு க்ஷணநேரத்தில் தன் கையால் சமைத் துப் படைத்தாள், அந்த அன்னத்தை உண்டு அங்கே யிருந்தார்கள் பிறகு நடந்ததைச் சொல்லுகிறோம் என்பதாம்.]

இ-ள். அப்பெரும் பொதியில் - அந்தப் பெரிதான பொதுச்சாவடிக் குள்ளே, புக்கார் - புகுந்தவர்களில், அமைச்சன் - மந்திரியானவன், அங்காடி நண்ணி - கடைவீதிக்குப்போய், எப்பெரும் பண்டமும் - சமையலுக்கு வேண் டிய எல்லாப் பெரிய பொருள்களையும், கொண்டு எய்தினன் - வாங்கிக்கொண்டு வந்து சேர்ந்தனன், செப்பரும் திருவின் நல்லாள் - சிறப்பித்துக் கூறும்படி யான லட்சுமிதேவியை ஒத்த சந்திரவதியானவள், இமைப்பின் அட்டு-அந்தச் சாமான்களை வாங்கி ஒரு இமைப்பொழுதில் சமைத்து, திருக்கையாற் படைத்த அன்னம் - அழகிய கரங்களினால் இட்ட சோற்றை, துய்ப்பன செய்திருந்தார்- புசித்துக் கொண்டிருந்தார்கள், இருந்த பின் - அப்படி இருந்த பின்பு, நிகழ்ந்த சொல்வாம் - நடந்தவைகளைச் சொல்லுகிறோம். எ-று.

"அங்காடி நண்ணி இமைப்பின் எப்பெரும் பண்டமும் கொண்டு எய்தி னன்" என்று அந்வயித்துப் பொருள் செய்வர். 'அங்காடி' - கடைவீதி, 'துய்ப்பன செய்தல்' உண்ணல். (கசு)

சந்தக் கலி விருத்தம்.

ஒருநாள்செலமறுநாளையிலுறுதீவினைநினையாப்
பொருமால்களிறுடையானெடுபுகரோன்மிகவெகுளா
முருகார்தொடைமுடியாய்மறைமுனிகூறியபொருணீ
தருமாறுளதெனிலின்றதுதருகென்றுதடுத்தான்.

[ஒருநாள் போக அடுத்த நாளையிலே, மிகவும் கொடுமைசெய்ய நினைத்து, போர்செய்ய வல்ல பெரிய பட்டத்து யானையை உடையவனாகிய அரிச்சந்திரமகாராஜனோடு சுக்கிரன் மிகவும் கோபங்கொண்டு, வாசனை பொருந்திய மாலையை அணிந்த முடியை உடையவனே. விஸ்வாமித்திரர் கூறிய பொருள் தருவது உண்டானால் இன்றைக்கே கொடுத்து விடு என்று தடுத்தான் என்பதாம்]

இ-ள். ஒருநாள் செல - ஒருநாள் போக, மறுநாளையில் - அடுத்த தினத்தில், உறுதீவினை நினையா - மிக்க கொடுமைசெய்ய நினைத்து, பொருமால் களிறு உடையானொடு - போரில் வல்ல பெரிய பட்டத்து யானையை உடையவனாகிய அரிச்சந்திர மகாராஜனொடு, புகரோன் - சுக்கிரன், மிக வெகுளா - மிகவும் கோபித்து, முருகார் தொடைமுடியாய்-வாசனை பொருந்திய மாலையை அணிய முடியை உடைய அரசனே!, மறைமுனி கூறிய - வேதங்களை உணர்ந்த விஸ்வாமித்திரர் சொல்லிய, பொருள் - திரவியம், நீ தருமாறு உளதெனில்- நீ கொடுப்பது உண்டானால், இன்று - இப்போதே, தருகென்று தடுத்தான்- தருவாயாக என்ற தடுத்து நின்றான். எ-று.

இவை பெரும்பாலும் கனிச்சீர் கனிச்சீர் கனிச்சீர் மாச்சீர் நான்கு கொண்ட அடிகளாலாய சந்தக் கலிவிருத்தம். "தனதானன தனதானன தனதானன தனனா" என்ற குறிப்பில் வந்தது. (கள)

அதிரப்பெருகரவத்தொடுமழல்கட்புகர்பலகால்
முதிரச்சிலசுடுகட்டுரைமொழியப்பொருடருமச்
சதுரெப்படியெனவெய்த்துடறளரத்துணைவிழிமுத்
துதிரச்சிலவெதிருத்தரமுரையாமலிருந்தான்.

[அதிரும்படி மிகுகின்ற சப்தத்தோடு கொதிக்கின்ற கண்களை உடைய சுக்கிரன் பலதரமும் முதிர்ச்சியாக சில கடுஞ்சொற்களைச் சொல்லும்போது இனி பொருள் தரும்படியான யுக்தி எந்தவிதமென்று இளைத்து உடம்பு சோர்வாக இரண்டு கண்களிலும் முத்துப்போல் நீர் உதிர கொஞ்சமேனும் மறுமொழி சொல்லாமல் இருந்தான் அரிச்சந்திரமகாராஜன் என்பதாம்.]

இ-ள். அதிர - அதிர்ச்சி உண்டாக, பெருகு அரவத்தொடும் - மிகுகின்ற சப்தத்துடனே, அழல் கண் புகர் - கொதிக்கின்ற கண்ணையுடைய சுக்கிரன், பலகால் - பலதரம், முதிர் - முதிர்ச்சியாக, சில சுடுகட்டுரை மொழிய - சில கொதிக்கின்ற கடுஞ்சொற்களைச் சொல்ல, பொருள் தரும் - இனி முனிவருக்குத் தருவதாகச்சொன்ன பொருளைத்தரும், அச்சதுர் எப்படி என - அந்த யுக்தி எப்படி என்று, எய்த்து - இளைத்து, உடல் தளர - உடம்பு தளர, துணை விழி- இரண்டு கண்களிலும், முத்து உதிர - கண்ணீரானது முத்துப்போல் வடிய, சில எதிர் உத்தரம் - கொஞ்சமேனும் மறுமொழி, உரையாமல் இருந்தான்- சொல்லாமல் இருந்தான் அரசன். எ-று.

'சதுர்' சாமர்த்தியமும் ஆம்; தனதத்தன, தனதத்தன, தனதத்தன தனனு என்ற குறிப்பில் இயைந்தது இது. (கஉ)

மொழியும்பழியுணராமுகிழ்முலையாண்முதிர்கடனீர்
பொழியுங்கயல்விழியாண்முனிபொருணல்குதறுணியா
தெழுகின்றதோர்பசியானலிவெருகஞ்சியவெலிபோ
லழுகின்றதெனரசேயெனவவனுஞ்சிலமொழிவான்.

[அப்படிச் சுக்கிரன் சொல்லுகின்ற பழிவார்த்தைகளைக்கேட்டு தாமரை அரும்புபோன்ற முலையும், கடல் நீரைப்போல மிகுதியாக கண்ணீர் சிந்துகின்ற கயல் மச்சம்போன்ற கண்ணையும் உடைய சந்திரவதி அரசனை நோக்கி, விஸ்வாமித்திரருக்குக் கொடுக்கவேண்டிய பொருளைக் கொடுக்கத் துணிவு கொள்ளாமல், அரசனே! பசியால் வருந்துகின்ற ஒரு பூனைக்குப்பயந்த எலியைப்போலக் கண்ணீர் விடுவது என்ன, என்று கேட்க, அரசனும் மனைவியை நோக்கிச் சில சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். மொழியும் - அப்படி சுக்கிரன் சொல்லும், பழி உணரா - பழிப்பு வார்த்தைகளை அறிந்து, முகிழ் முலையாள் - தாமரை அரும்பை யொத்த தனங்களையுடையவளும், முதிர் கடல் நீர் - முதிர்ந்த கடல் நீரைப்போல, பொழியும்- கண்ணீரைச் சிந்துகின்ற, கயல் விழியாள் - கயல் மச்சம்போலும் கண்களையும் உடைய சந்திரவதியானவள், அரசே - (அரிச்சந்திரனை நோக்கி) அரசே!, முனி பொருள் - முனிவருக்குக் கொடுப்பதாகச்சொல்லிய பொருளை, நல்குதல் துணியா - கொடுக்கிறதற்குத் துணிவுகொள்ளாமல், எழுகின்றதோர் பசியால்- மேல் மேலும் எழுகின்றதொரு பசியினாலே, நலிவெருகு - வருந்துகின்ற ஒரு பூனைக்கு, அஞ்சிய எலிபோல் - பயந்து கொண்டிருக்கின்ற எலியைப் போல, அழுகின்றதென் என - கண்ணீர்விடக் காரணமென்னவென்று கேட்க, அவனும் சில மொழிவான் - அரிச்சந்திரமகாராஜனும் தன் மனைவியை நோக்கிச் சில சொல்கின்றான். எ-று.

'வெரு கஞ்சிய எலி' என்றது உவமை, 'முகிழ் முலை' கோங்கு அரும்பை ஒத்தமுலை என்றலுமாம். இதில் தந்தச்சந்தமும் விரவி வந்தது. (கங)

மின்னஞ்சியவிடையாய்கதிர்வேலஞ்சியவிழியாய்
வன்னெஞ்சுடைமுனிநம்முடைவளமுள்ளதுகொண்டா
னென்னெஞ்சமுமுன்னெஞ்சமுமொன்றன்றியிரண்டோ
வுன்னெஞ்சறியாதென்வயினுளதோபொருளென்றான்.

[மின்னல் அஞ்சும் இடையும் பிரகாசமான வேல் அஞ்சும்படியான விழியும் உடையவளே கடின நெஞ்சுடைய விஸ்வாமித்திரர் நம்முடைய செல்வமாக உள்ள எல்லாம் கவர்ந்துகொண்டார், என் மனமும் உன் மனமும் ஒன்றேயல்லது இரண்டாகுவது உண்டோ? இனி உன் மனதிற்குத் தெரியாத பொருள்கள் என்னிடத்தில் உண்டோ என்று அரசன் சொன்னான். என்பதாம்.]

இ-ள். மின் - மின்னலானது, அஞ்சிய - (ஒப்பாகாமையினால்) பயந்த, இடையாய் - இடுப்பை உடையவளே!, கதிர் - பிரகாசம் பொருந்திய, வேல்- வேலாயுதமானது, அஞ்சிய - (ஒப்பாகாமையினால்) பயந்த, விழியாய் - கண்களை உடையவளே!, வன் நெஞ்சுடைமுனி - கடின நெஞ்சை உடைய விஸ்வாமித்திரமுனிவர், நம்முடை - நம்முடைய, வளமுள்ளது கொண்டான்- செல்வமாக உள்ளன எல்லாம் கவர்ந்துகொண்டார், என்னெஞ்சமும் உன்னெஞ்சமும் - என்னுடைய மனதும் உன்னுடைய மனதும், ஒன்றன்றி - ஒன்றல்லாமல், இரண்டோ - இரண்டாகுவது உண்டோ?, உன் நெஞ்சறியாது - உன்னுடைய மனத்துக்குத் தெரியாமல், என்வயின் - என்னிடத்தில், பொருள்- பொருள்கள், உளதோ என்றான் - உண்டோ என்று அரிச்சந்திரன் கேட்டான். எ-று. (௨0)

கல்லென் றுயர்தோளாய்கவுசிகனெண்ணுதலல்லா
லில்லென் பதுமுளதென் பதும்யாமெண்ணுதறகுமோ
வெல்லொன் றினியவதித்தினமெனையும்மகனையுநீ
வில்லென் றனள்கற்புக்கொருவித்தாகியுதித்தாள்.

[மலை என்று சொல்லும்படி உயர்ந்து உள்ள தோள்களை உடைய அரசே!, நம்மிடத்தில் பொருள் உண்டு என்பதையும் இல்லை என்பதையும் விஸ்வாமித்திரர் ஆலோசிக்கவேண்டிய[illegible] அல்லாமல், நாம் எண்ணுதல் தக்கது ஆகுமோ. நாள்கள் பொருந்திய இனி அவதித்தினம் முடியு முன்னே என்னையும் மகனையும் நீ விற்றுவிடு என்று பதிவிரதா தருமத்திற்கு வித்தாகிய சந்திரவதி கூறினாள் என்பதாம்.]

இ-ள். கல் என்று - மலை என்று சொல்லும்படி, உயர்தோளாய் - உயர்ந்திருக்கின்ற தோள்களை உடைய அரசே!, இல் என்பதும் - நம்மிடத்தில் பொருள் இல்லை என்பதும், உளதென்பதும் - நம்மிடத்தில் பொருள் உண்டு என்பதும், கௌசிகன் எண்ணுதலல்லால் - விஸ்வாமித்திரமுனிவர் எண்ணுதலல்லாமல், யாமெண்ணுதல் தகுமோ - நாமெண்ணுதலினால் பிரயோசனமுண்டோ?, எல் ஒன்று - நாள்கள் பொருந்தும், அவதித்தினம் - கெடுத்தினம், இனி - இனி வந்துவிடும், (ஆகையினால்) எனையும் மகனையும் - என்னையும் புத்திரனையும், கற்புக்கு - பதிவிரதா தருமத்துக்கு, ஒருவித்தாகி யுதித்தாள்- ஒரு விதையாகித் தோன்றிய சந்திரவதியானவள், நீ வில் என்றாள் - (அரசனை நோக்கி) நீர் விற்றுவிடும் என்று சொன்னாள். எ-று.

'கல்' மலை, 'எல்லொன்றினி யவதித்தினம்' என்றதில் எல் ஒன்றும் என்று பிரித்து நெடுநாள் முடிந்துவிடும், இனி அவதித்தினம் முடியு முன்னே, எனவும் பொருள் கூறுவர். 'எல்' - நாள். (உக)

அவ்வா றுரைசெயமன் னவனலையுங்குறையுயிர்கொண்
டெவ்வா றுமைவிலைகூ றுவலென வெண்ணியிடைந்தான்
வெவ்வாய்வடிவேலோயெமைவிலைகூ றுதலரிதென்
றொவ்வாயெனின்விடுமோநமதூழின்வலியென்றாள்.

[அப்படிச் சந்திரவதி சொல்லவே அரிச்சந்திரன் அலையும்படியான குறை உயிரைக்கொண்டு உங்களை எப்படி விலை கூறுவேன் என்று நினைந்து வருந்திப் பின்னிடும்போது, வெம்மைகொண்ட கூர்மை யான வேலாயுதத்தை உடைய அரசனே! எங்களை விலைக்கு விற்கி றது அருமையான காரியமென்று நீ சம்மதியாமல் போனால் நம்மு டைய முன்னை வினைப்பயன் விட்டு விடுமோ என்று சந்திரவதி கூறினாள் என்பதாம்]

இ-ள். அவ்வாறு - அந்தவிதமாக, உரைசெய - (சந்திரமதி) சொல்லவே, மன்னவன் - அரிச்சந்திரமகாராஜன், அலையும் குறை உயிர்கொண்டு - அலைவதான குறை உயிரைக்கொண்டு, எவ்வாறு - எப்படி, உமை - உங்களை, விலை கூறுவல் என - விலை கூறுவேன் என்று, எண்ணி - நினைத்து, இடைந்தான்- பின் வாங்கினான், (அப்பொழுது சந்திரவதியானவள் அரசனை நோக்கி) வெவ் வாய் - வெம்மை வாய்ந்த, வடி - வடித்து எடுக்கப்பட்ட, வேலோய் - வேலா யுதத்தை உடைய அரசே!, எமை - எங்களை, விலை கூறுதல் - விலைக்கு விற் றல், அரிது என்று - அருமையானது என்று, ஒவ்வாய் எனின் - நீர் சம்மதி யாமல் போனால், நமது ஊழின் வலி - நமது பழவினைப்பயன், விடுமோ என் றாள் - விட்டு விடுமோ என்று சந்திரவதி கேட்டாள். எ-று.

ஈண்டு "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தாமுந் துறும்" என்ற திருக்குறள் கவனிக்கற் பாலது. (உஉ)

தேமென்கனிவாயாளிதுசெப்பச்செயலிதுவே
யாமென்றெழவேவெள்ளியுமதுவேநலனென்றான்
மாமன்னவன்மைந்தன்றலைமிசையுங்குலமடவாள்
பூமென்குழன்மிசையுஞ்சிறுபுல்வைத்துநடந்தான்.

[தித்திப்பு அமைந்த வாயையுடைய சந்திரவதி இப்படிச்சொல்ல இனி மேல் செய்யத்தக்கது இதுவே என்று எழுந்தபோது சுக்கிரனும் அப்படி விற்கிறதே நல்லது என்று கூறினான். அரிச்சந்திரனும் தன் மகன் தலைமேலும் சந்திரவதியின் பூவையணிந்த மிருதுவான கூந்தல் மேலும் சிறுபுல்லை வைத்துக் கூட்டிக்கொண்டு சென்றான் என்பதாம்]

இ-ள். தேம் - இனிமையாகிய, மென் - மிருதுவான, கனிவாயாள்- கொவ்வைக்கனிபோன்ற வாயை உடைய சந்திரவதியானவள், இது செப்ப-

இதைச்சொல்ல, செயல் - செய்யவேண்டிய காரியமும், இதுவே யாம் என்று - இதுவே தக்க காரியமென்று, எழவே - எழுந்தபோது, வெள்ளியும் - சுக்கிரனும், அதுவே நலன் என்றான் - அப்படிச் செய்வதே நல்ல காரியம் என்று சொன்னான், மா மன்னவன் - அந்தப் பெரிய அரசனாகிய அரிச்சந்திரன், மைந்தன் தலைமிசையும் - புத்திரன் தலையின் மேலும், குல மடவாள் - குலக்கொடியாகிய சந்திரவதியினுடைய, பூமென்குழல் மிசையும் - பூவை அணிந்த மிருதுவான கூந்தலின்மேலும், புல் வைத்து - புல்லை வைத்து, நடந்தான் - கூட்டிக்கொண்டு சென்றான். எ-று.

விற்கிறபொழுது அவர்கள் தலைமேல் புல் வைத்து விற்பது பண்டைக் கால வழக்கு. (உங)

மெள்ளச்செலநாணஞ்செலவிரையச்செலவாய்மை
தள்ளப்புதல்வனையும்மயிறனையும்முனடத்தி
வுள்ளத்துயரறிவாகியவூனாலுகுவிழிநீர்
வெள்ளத்தினையடையாவிறைவிலைகூறிநடந்தான்.

[அப்படி நடக்கும்போது வெட்கமானது உள்ளத்தின் கண்ணே புக மெதுவாகச்செல்லவும், விரையச்செல - விரைவாகச் செல்லும்படி, வாய்மைதள்ள - சத்தியமானது தள்ளவும், புத்திரனையும் மயில் போன்ற சாயையை உடைய மனைவியையும், முன்னுக்கு நடத்திக் கொண்டு மனத்திலே தோன்றி யுயர்ந்த அறிவு என்கின்ற பலத்தினால் வழிகின்ற கண்ணீர் வெள்ளத்தை அடைத்து, அரசன் விலை கூறிக்கொண்டு காசி வீதியில் நடந்தான் என்பதாம்.]

இ-ள். நாணம் செல் - (அப்படி நடக்கும்போது) மனதிலே வெட்கமானது வந்து புகுதலினாலே, மெள்ளச்செல - மெதுவாகப்போக, விரையச் செல - விரைவாகப் போம்படி, வாய்மை தள்ள - சத்தியமானது தள்ளவும், புதல்வனையும் - புத்திரனையும், மயில்தனையும் - மயில்போன்ற சாயலை உடைய சந்திரவதியையும் முன்னாலே நடத்திக்கொண்டு, உள்ளத்து - மனத்திலுள்ள, உயர் அற்ற ஆகிய ஊனால் - உயர்ந்த அறிவு என்கின்ற பலத்தினால், உகுவிழி நீர் வெள்ளத்தினை - வழிகின்ற கண்ணீர் வெள்ளத்தை, அடையா-அடைத்து, இறை - அரிச்சந்திரமகாராஜன், விலைகூறி - (காசிமாநகரத்தின் வீதியிலே) விலை கூறிக்கொண்டு, நடந்தான் - சென்றான். எ-று.

'மெள்ளச்.................வாய்மை தள்ள' என்பதற்கு மெதுவாகச் செல்லும்போது வெட்கம் விட்டு நீங்கவும், விரைந்து செல்லும்போது வாய்ப்பேச்சுகள் தமொறவும், எனவும் பொருள் கூறுவர். 'வெள்ளத்தினை யடையா' என்பதற்கு கண்ணீர் வெள்ளத்துக்குள் முழுகாமல் என்றும் கூறுவர். (உச)

தாலத்தறமுணராதுயிர்தளரும்படிபலசெய்
மேலைப்பழவினைபற்றிடவிற்கின்றனன்வினையேன்
வாலச்சிறுபுருவத்தெனன்மரபிற்புதல்வனையு
நீலக்கயல்விழியாளையுநிதியுள்ளவர்கொண்மின்.

[உலக தருமத்தைத் தெரியாமல் உயிரானது தளரும்படி முன் பிறப்புகளிலே செய்த பழவினையின் பயன் இப்பொழுது பற்றிக்கொள்ள, அதனாலே தீவினையேன் விற்கின்றேன், இளமையான சிறு பருவத்து என் நல்ல மரபிற் பிறந்த புத்திரனையும் நீல நிறங்கொண்ட கயல் மச்சம்போன்ற கண்ணை உடைய என் மனைவியையும் விற்கின்றேன் பொருள் உள்ளவர்கள் வாங்கிக்கொள்ளுங்கள் என்றான் என்பதாம்.]

இ-ள். ஞாலத்து அறம் உணராது - உலகத்திலே தருமத்தை அறியாமல், உயிர் தளரும்படி - உயிர்கள் தளர்வு அடையும்படி, பலசெய் - பலவிதமாகச் செய்த, மேலை - முன்னாளின், பழவினை பற்றிட - பழவினைப்பயன் வந்து தொடர, வாலச் சிறு பருவத்து - இளமையை உடைய சிறிய பருவத்து, என் நன்மரபிற் புதல்வனையும் - என்னுடைய நல்ல சூரிய குலத்திலே பிறந்த புத்திரனையும், நீலம் - நீல நிறம் பொருந்திய, கயல் விழியாளையும் - கயல் மச்சம் போலும் கண்களை யுடையவளாகிய என் மனைவியையும், வினையேன் விற்கின்றேன் - தீவினையை உடைய நான் விற்று விடுகின்றேன், நிதியுள்ளவர் கொண்மின் - பொருள் உள்ளவர் வாங்கிக் கொள்ளுங்கள். எ-று.

பூர்வ கன்மத் தொடர்பினாலே விற்கின்றேன் என்றதாம். (உரு)

சோதித்திருமுடியானிவைசொல்லச்சுடர்மாட
வீதித்தலைநின்றோர்சிலமிகவும்மனமழலாப்
போதிற்றிருவனையாளிவடனையும்புதல்வனையு
மேதிப்படிவிலைகூறிடவெய்துந்திறமென்பார்.

[ஒளி பொருந்தின திருமுடியை உடைய அரசன் இப்படிச் சொல்லவே பிரகாசம் பொருந்தின மாடங்களை உடைய வீதிகளிலே நின்றவர்களில் சிலர் இதைக்கண்டு மிகவும் மனம்கொதித்து செந்தாமரையில் இருக்கிற லட்சுமியை ஒத்த இவளையும் பிள்ளையையும் விலைக்கு விற்க என்ன நேரிட்டது என்றார்கள் என்பதாம்.]

இ-ள். சோதி - பிரகாசம் பொருந்திய, திருமுடியான் - அழகிய முடியை உடைய அரிச்சந்திரமகாராஜன், இவை சொல்ல - இப்படிச் சொல்லவே, சுடர் - காந்தியை உடைய, மாடவீதித் தலை நின்றோர் - மாடங்கள் நிறைந்த வீதியிலே நின்றுக்கொண்டிருந்தோர், சிலர் - சிலர்கள், மிகவும் மனம் அழலா - மிகவும் மனம் கொதித்து, போதில் திருவனையாள் இவள் தனையும் - செந்தாமரையில் வீற்றிருக்கின்ற லட்சுமியை ஒத்த இவளையும், புதல்வனையும் - புத்திரனையும், ஏது - என்ன காரணத்தினால், இப்படி விலை கூறிட - இந்தவிதமாக விலைகூற, எய்தும் திறம் என்பார் - வந்ததென்று சொல்லுவார்கள். எ-று. ()

செருவுற்றகணையிலைப்பொருதிருவொப்பவளிவளு
மருவுற்றனிதெரியற்புயமதனெப்பவன்மகனு

மொருவற் குறுவிலையிற்பொருளுடையார்களுமுளரோ
விருவர்க்குறுவிலையிப்பதியெவர்நல்குவரென்பார்.

[யுத்தத்தைச்செய்யும் கண் வேலை ஒத்திருக்கும் லட்சுமியை ஒத்தவள் இந்த மாதும், மகனும், வாசனை பொருந்திய அழகிய மாலையை அணிந்த புயத்தை உடைய மன்மதனை ஒத்தவன். இவர்களில் ஒருவருக்குப் பொருந்திய விலைப்பொருளாகிய சொத்தை உடையவர்களாகிலும் இருக்கின்றார்களோ, இந்த இரண்டுபேருக்கும் உரிய விலையாகும் பொருளை இந்த ஊரில் எவர் கொடுப்பார் என்று சொல்லுவார்கள் கண்டோர் என்பதாம்.]

இ-ள். செருவுற்ற - யுத்தம் செய்தலைக் கொண்டுள்ள, கண் - கண்களானவை, அயிலைப்பொரு - வேலாயுதத்திற்கு இணைகொண்ட, திரு ஒப்பவள் இவளும் - லட்சுமிதேவியை ஒத்தவள் இவள், மருவுற்று - வாசனையைப் பொருந்தி, அணி - அலங்காரமாகிய, தெரியல் புயமதன் ஒப்பவன் மகனும்- மாலையை அணிந்த மன்மதனை ஒத்தவன் குமாரனும், ஒருவற்கு - இவர்களில் ஒருவற்கு, உறுவிலையில் பொருள் - உரியதாகிய விலையின் அளவாகிய செல்வமாகிலும், உடையார்களு முளரோ - உடையவர்களும் இருக்கின்றார்களோ?, இருவர்க்குறுவிலை - (அப்படி யிருக்க) இந்த இரண்டுபேருக்கும் பொருந்திய விலையை, இப்பதி - இந்தக் காசிப்பதியிலே, எவர் நல்குவர் என்பார் - யார் கொடுக்கத்தக்கவர்களா யிருக்கிறார்கள் என்று (கண்டோர்கள் எல்லாம் பரிதாபத்தோடு) கூறுவார்கள். எ-று.

"செருவுற்ற கணயிலைப்பொரு" என்பதற்கு 'செருவுற்ற அயிலைப்பொரு கண்' எனக்கொண்டு கூட்டி, யுத்தத்திற்குரிய வேலையொத்த கண் எனவும் பொருள் கூறுவர். "பொரு" என்பதற்கு, வேலைப்பொருகின்ற என்றும் கூறலாம், உம்மைகள் இரண்டும் எண்ணுப் பொருளென; ஓகாரம் வினாப்பொருளது, இல்லை என்னும் பொருள் தந்து நிற்றலின் விடை தழுவிய வினாவாம். (உஎ)

தவருக்கலதயிராவதமெனுநீள்கரசைலத்
தவருக்கலதளகாபுரியரசுக்கலதலைசே
ருவரிக்கடல்புடைசூழ்வியனுலகத்திடையுறுவா
ரெவருக்கெளிதிவருக்குறுவிலைநல்குவதென்பார்.

[இவர்களை விலைக்கு வாங்குவது தவமுனிவர்களால் முடியும் அல்லாமற் போனால் ஐராவதமென்கின்ற நீண்ட கைம்மலையை உடைய இந்திரனால் முடியும் அல்லாமற்போனால் அளகாபுரியை ஆள்கின்ற குபேரனால் முடியும், இவர்களையன்றி அலைகள் கூடின உப்புக்கடல் பக்கங்களிலே சூழ்ந்துள்ள இந்தப் பெரிய உலகத்திலே உள்ளவர்களில் எவர்களுக்கு இவ்விருவர்களுக்கும் உரிய விலையாகிய பொருளைக் கொடுப்பது இலேசான காரியமாக இருக்கும் என்று சொல்லுவார்கள் என்பதாம்.]

இ-ள். தவருக்கு அலது - (இவ் இருவரையும் விலைக்கு, வாங்குந்தன்மை) தவமுனிவர்களுக்கு உண்டு அல்லாமற்போனால், ஐராவதமெனும் - ஐராவத

மென்று சொல்லும்படியான, நீள்கா சைலத்தவருக்கு அலது - நீண்டகை மலையை உடைய இந்திரனுக்கு உண்டு அல்லாமற்போனல், அளகாபுரி-அளகாபுரியை ஆள்கிற, அரசுக்கலது - அரசனுகிய குபேரனுக்கு உண்டு அல்லாமற் போனல், அலைசேர் - அலைகள் கூடியுள்ள, உவரிக்கடல் - உப்பையுடைய கடல், புடைசூழ் - பக்கத்தே சூழ்ந்துள்ள, வியன் - பெரிய, உலகத்திடை-(இந்த) உலகத்தினிடத்திலே, உறுவார் - இருக்கின்றவர்களில், எவருக்கு-எவர்களுக்கு, இவருக்கு உறுவிலை-இவ்விருவருக்கும் பொருந்திய விலைப்பொருளை, நல்குவது - கொடுப்பது, எளிது - இலேசானது, என்பார் - என்று சொல்லுவார்கள். எ-று.

'தவர்' தவத்தைச்செய்யும் முனிவர்கள்; 'கரசைலம்' கைம்மலை அதாவது யானை; அளகாபுரிக்கரசன் நிதிக்கோனுகிய குபேரனும்; முனிவர்கள் அல்லது இந்திரன் அல்லது குபேரன் இவர்களைத் தவிர்த்து கடல் சூழ்ந்த உலகில் இவ்விருவரையும் தக்க விலைகொடுத்து வாங்குதற்கு எப்படிப்பட்டவர்களுக்கும் இலேசான காரியமன்று என்பது கருத்து. (உஅ)

மண்மின்னெனவருமென்மனைவியையும்மகனையுநீர்
கொண்மின்னெனவிலைகூறியகோமானுரைகேளா
விண்மின்னெனவலையும்பரிவெண்ணூலணிமார்பன்
கண்முன்னொருமறையோனதிகளவோடெதிர்வந்தான்.

[பூமியிலே தோன்றிய ஒரு மின்னலைப்போலே வருகின்ற என் மனைவியையும், என் பிள்ளையையும் நீங்கள் பொருள் கொடுத்து வாங்கிக் கொள்ளுங்களென்று விலை கூறிக்கொண்டு வருகின்ற அரிச்சந்திர மகாராஜனின் சொல்லைக்கேட்டு ஆகாயத்துள்ள மின்னலைப்போல விளங்கி மார்பிலே புரளுகின்ற அலங்காரயான வெள்ளியதாகிய பூணூலணிந்த மார்பை உடையவனுகி அரிச்சந்திரன் கண்ணுக்கு முன்னே ஒரு பிராமணன் மிகத் திருட்டுத்தனத்தோடே எதிரிலே வந்தான் என்பதாம்.]

இ-ள். மண்மின் என - பூமியிலே தோன்றிய மின்னலென்று சொல்லும்படி, வரும் - என்னேடு நடந்து வருகின்ற, என் மனைவியையும் - என்னுடைய மனைவியையும், மகனையும் - என்னுடைய புத்திரனையும், நீர் - பொருள் உள்ள நீங்கள், கொண்மின் என - விலைகொடுத்து வாங்கிக்கொள்ளுங்கள் என்று, விலை கூறிய - விலை கூறிக்கொண்டு வருகின்ற, கோமான் உரை கேளா - அரிச்சந்திரமகாராஜனின் சொல்லைக்கேட்டு, விண்மின் என - ஆகாயத்திலுள்ள மின்னலைப்போல விளங்கி, அலையும் - புரளுகின்ற, பரி - அலங்காரமாகிய, வெண் - வெண்மையான, நூலணி - பூணூலணிந்த, மார்பன்-மார்பை உடையவனுகி, கண்முன் - அரிச்சந்திரமகாராஜனின் கண்ணுக்கு முன்னே, ஒரு மறையோன் - ஒரு பிராமணன், அதிகளவோடு - அதிக திருட்டுத்தனத்துடனே, எதிர் வந்தான் - எதிரிலே வந்தான். எ-று.

'மண்மின் என' பூமாதேவியைப்போல, என்றும் பொருளாம். 'கேளா' செய்யா என்னும் வாய்பாட்டு வினை எச்சம்; 'வெண்ணூலணி மார்பன் கண் முன்' என்பதனை ஒரு தொடராகக்கொண்டு "வெள்ளிய பூநூலை யணிந்த அரிச்சந்திரமகாராஜனின் கண்ணுக்கு முன் என்றும் பொருள் கூறலாம். சூத்திரரொழிந்த ஏனைய வைசியர், க்ஷத்திரியர், பிராமணர் என்னும் மூவரே பூணூல் தரித்தற்கு உரியவர்: ஆதலின் சூரிய குலத்து உதித்த க்ஷத்திரிய அரசனாகிய அரிச்சந்திரமகாராஜன் பூணூல் தரித்திருப்பதாகக் கூறுவதும் முறை பிறழ்ந்ததாகாது. அக்கினிதேவனே மறையோன் வடிவாக வந்தானாத லினும், விசுவாமித்திரரின் வஞ்சகச் சூழ்ச்சிக்கு இசைந்து வந்தானாதலினும் "அதிகளவோ டெதிர் வந்தான்" என்றார். (உகூ)

என்சொல்லினைமுன்சொன்னவையின்னம்பகரெனவே
மென்சொல்லியைவிளமைந்தனை விலைகூறினனெனவே
மென்சொல்லலுநின்சேயையுமடமானையும்விற்கும்
பொன்சொல்லெனவிறல்வேலினன்மறையோனொடுபுகல்வான்.

[என்ன சொன்னாய்! முன்னே சொன்னவைகளை இன்னொருதரம் சொல் என்று கேட்கவே, அரிச்சந்திரன் இந்த மிருது பாஷியான என் மனைவியையும், இளமையான புத்திரனையும் விலை கூறினே னென்று சொல்லவே உன் பிள்ளையையும் உன் மனைவியையும் விற்கும் பொருள் எவ்வளவு சொல்லென்று கேட்க வெற்றி வேலைக் கொண்ட அரிச்சந்திரமகாராஜன் அந்தப் பிராமணனுடன் சொல்லு கின்றான் என்பதாம்.]

இ-ள். என் சொல்லினை - (ஓ விலைகூறினவனே!) யாது சொல்லினாய், முன் சொன்னவை - முன்னே சொன்னவைகளை, இன்னம் - இன்னும் ஒரு தரம், பகர் எனவே - சொல் என்று (வந்த) மறையோன் கேட்கவே, மென் சொல்லியை - மிருது பாஷியாகிய இந்த என் மனைவியையும், இளமைந்தனை- இளமையாகிய இந்த என் புத்திரனையும், விலைகூறினன் எனவே - விலை கூறி னேன் என்று அரசன் சொல்லவே, மென் சொல்லலும் - (அரிச்சந்திரன் அந்த விதமாக) மெதுவாகச் சொன்ன உடனே, நின்சேயையும் - உன்னுடைய பிள் ளையையும், மடமானையும் - இளமைபொருந்திய மானை ஒத்த உன்னுடைய மனைவியையும், விற்கும் - விற்கும்படியான, பொன் சொல் என - பொருள் எவ்வளவு சொல் என்று கேட்க, விறல் - வெற்றியைக்கொண்ட, வேலினன்- வேலாயுதத்தைக்கொண்ட அரிச்சந்திரமகாராஜன், மறையோனொடு - அந்தப் பிராமணனுடன், புகல்வான் - சொல்லுகின்றான். எ-று.

'மென் சொல்லலும்' என்றது நாணத்தாலும் துயரத்தாலும் மெதுவாகக் கூறிய படியினாலென்க. (௩௦)

களபப்பிடர்மிசைநின்றெறிகவணிற்படுசிலைபோ
மளவுக்கிருநிதிநல்கிடின துவேவிலையென்று

ளப்பொருண்முழு தம்முன துரையின்படி தருவேன்
தளவத்திருநகைபாளொடுமகனைத்தரினென்றான்.

[யானைமுதுகிலே நின்றுகொண்டு எறிகின்ற கவணிலுள்ள கல்லானது போமளவுக்குச் சரியாக மிகுந்த திரவியங்கொடுத்தால், அதுவே இவ் இருவர்களுக்கும் விலை என்று கூறினான்; அதற்கு மறையோன் அவ்வளவு பொருள் முழுதும் என்னிடத்திலிருக்கிறது, நீ முல்லை யரும்பை ஒத்த பல் வரிசைகளையுடைய இவளுடனே மகனையும் கொடுப்பாயே யானால் உன் வார்த்தையின்படி நான் தருவேன் என்று கூறினான் என்பதாம்.]

இ-ள். களபப் பிடர்மிசை - யானையின் பிடரியின் மேலே, நின்று-நின்று கொண்டு, எறி - எறிகின்ற, கவணில் படு - கவணிலுள்ள, சிலைபோம் அளவுக்கு - கல்லானது போகும் அளவுக்கு(ச் சரியாய்), இருநிதி நல்கிடின் - பெரிதாகிய திரவியம் கொடுத்தால், அதுவே - அந்தத் திரவியமே, விலை என்றான்- இவ்விருவருக்கும் விலைப்பொருளாகும் என்று அரிச்சந்திரமகாராஜன் கூறினான், உளதப் பொருள் முழுதும் - (நீ சொல்லி அளவுள்ள) அவ்வளவு பொருள் முழுதும் என்னிடத்திலிருக்கின்றது, தளவத்திருநகையாளொடு - முல்லை யரும்புகளை ஒத்த அழகிய பல்வரிசைகளை யுடைய இவளோடு, மகனைத்தரின்- மகனையும் நீ கொடுப்பாயேயானால், உனது உரையின்படி - உன் சொல்லின் படியே, தருவேன் - அவ்வளவு பொருளும் தருவேன், என்றான் - என்று அந்த பிராமணன் கூறினான். எ-று.

உனது உரையின்படி தவளத் திருநகையாளொடு மகனைத்தரின் நீ சொல்லிய அளவு அப்பொருள் முழுதும் என்னிடத்தில் இருக்கின்றது அதனை நான் தருவேன் என்று மறையோன் கூறினன் என்று இயைத்துப் பொருள் கொள்க. 'களபம்' யானை; 'தளவம்' முல்லையரும்பு (௩௧)

கலி விருத்தம்.

இருவருக்குமிதுவிலையாமெனிற்
பொருளளிப்பனின்றென்றுபுகன்றிடத்
தருகவப்பொருடானெனச்சாற்றலும்
வெருவிலந்தணன்மீளவுங்கூறுவான்.

[இந்த இரண்டுபேருக்கும் இது விலையாகுமானால் இப்பொழுதே அந்த பொருளைத் தருவேனென்று அந்த மறையோன் கூற, அவ்வளவு பொருளும் தாரும் என்று அரிச்சந்திரமகாராஜன் சொல்லவே, அஞ்சுதல் இல்லாத அந்தப் பிராமணன் மீளவுங் கூறுகின்றான் என்பதாம்.]

இ-ள். இருவருக்கும் - இந்த இரண்டுபேருக்கும், இது விலையாம் எனில்- இதுவே விலை நிச்சயமானால், பொருள் - நீ சொல்லிய இவ்வளவு பொருளை யும், அளிப்பன் இன்று என்று புகன்றிட - இப்பொழுதே நான் கொடுப்பேன்

என்று மறையோன் சொல்ல, அப்பொருள்தான் - அந்த அளவுள்ள பொருளை, தருக - கொடுப்பாயாக, என - என்று, சாற்றலும் - அரிச்சந்திரன், சாற்றலும் - சொல்லுமளவில், வெருவில் - அஞ்சுதல் இல்லாத, அந்தணன் - அந்தப் பிரா மணன், மீளவும் - மறுபடியும், கூறுவான் - சொல்லுகின்றான். எ-று.

'உம், முற்றும்மை; வெருவில் அந்தணன்'' என்றது அவ்வளவு பொருள் தரவேண்டுமே என்று அஞ்சிப் பின் வாங்காத காரணத்தால் என்க. (ரு௨)

உண்மகிழ்ந்தின்றளிக்குமுறுபொருள்
கொண்மர்தம்மையழையெனக்கூறினன்
வெண்மனத்தனென்வெள்ளியைக்கூவியந்
நுண்மறைக்குலத்தோன்முகநோக்கியே.

[உள்ளங்களித்து இன்றைக்கு நான் கொடுக்கப்போகும் விலைப்பொருளை வாங்கிக் கொள்ளப்போகின்றவர்களை இங்கு கூப்பிடுக என்று மறையோன் கூறினன், உடனே அரிச்சந்திரன் வெள்ளை மனத்தை உடையவனென்று சொல்லும்படியான அந்தச் சுக்கிரனைக் கூப்பிட்டு அந்தச் சூட்சமமான பிராமண குலத்தவனின் முகத்தை நோக்கி அரிச்சந்திரன் சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். உள் மகிழ்ந்து - மனம் களித்து, இன்று - இப்பொழுது, அளிக்கும் - நான் கொடுக்கப்போகும், உறுபொருள் - இவ் இருவர்க்கும் விலையாகிய பொருளை, கொண்மர் தம்மை - வாங்கிக் கொள்ளுகின்றவர்களை, அழையென- இங்கே கூப்பிடுவாயாக என்று வந்த அந்தப்பிராமணன், கூறினன் - சொல்லினன், வெண் மனத்தனென் - (உடனே அரிச்சந்திரமகாராஜன்) வெள்ளை மனத்தனென்று சொல்லும்படியான, வெள்ளியை - சுக்கிரனை, கூவி - அழைத்து, அந்நுண் மறைக்குலத்தோன் - அந்த சூட்சமமான வேதகுலப் பிராமணனின், முகநோக்கியே - முகத்தைப் பார்த்து, எ-று.

இச்செய்யுள் குள்கம், வரும் செய்யுளோடு பொருள் முடிவு பெறுகின்றது. உண்மகிழ்ந்தென்றதனால் அவ்விருவருக்கு மாகிய விலைப்பொருள் அதிகமல்ல தனக்கு லாபந்தருவதே என்று அந்தண உருவாகவந்த அக்கினி பகவான் நினைத்தனனென்பது போதரும். ''அந்நுண் மறைக்குலத்தோன்'' என்பதற்கு அந்த சூட்சமமான பொருளுடைய வேதகுலப் பிராமணனை என்றும் பொருள் கூறுவர். (ருரு)

இவர்தமக்களியென்றதுமீவனென்
றவர்தமக்கவனங்கயறைந்தன
னுவரிசூழ்புவிமன்னவனுற்றுநேர்
கவருமாநிதிபுக்கதோவென்றான்.

[இந்தப் பிராமணருக்கு நீர்கொடும் என்றவுடனே, கொடுக்கின்றே னென்று அந்தச் சுக்கிரனுக்கு வந்த அக்கினி பகவானாகிய பிரா மணன் உள்ளங்கையில் அடித்துக் கொடுத்தனன்; கடல் சூழ்ந்த உல கத்தை ஆளும் அரிச்சந்திரமகாராஜன் நீர் என்னோடு கூட வந்து வாங்கிக் கொள்ளவேண்டிய பெரும் திரவியம் உம்முடைய கைவசம் ஆயிற்றோ என்று கேட்டான் என்பதாம்.]

இ-ள். இவர் தமக்கு - இந்தப் பிராமணருக்கு, அளி என்றலும் - நீர் கொடும் என்று சொல்லவே, ஈவன் என்று - (அப்படியே) தருவேன் என்று, அவர் தமக்கு - அரிச்சந்திரன் கூறிய சுக்கிரனுக்கு, அவன் - அந்த அக்கினி யாகிய பிராமணன், அங்கை அறைந்தனன் - உள்ளங்கையில் அடித்துக் கொடுத்தான், உவரிசூழ் புவி மன்னவன் - கடல் சூழ்ந்த உலகத்தை ஆளுகின்ற அரிச்சந்திரமகாராஜன், உற்றுநீர் கவரும் மாநிதி - (சுக்கிரனை நோக்கி) நீர் என் னோடு கூட வந்து (விசுவாமித்திரர் கட்டளையின்படி) என்னிடத்திலிருந்து வாங்கவேண்டிய பெரும்பொருள், கை புக்கதோ என்றான் - உம்முடைய கைவசமாயிற்றோ என்று கேட்டான். எ-று.

'அங்கை' அகம் - கை, அங்கை என்று ஆயிற்று, உள்ளங்கையில் அடித் துக்கொடுப்பது பண்டைக்காலந்தொட்டுப் பயின்று வரும் வழக்கு, இது உறுதி மொழிகூறிச் சத்தியம் செய்தலாம், 'கைபுகல்' கைவசப்படுதல். (நுச)

வந்ததென்பொருண்மாதையுஞ்சேயையு
மந்தணற்களித்தாவணநல்கென
முந்தவாவணந்தீட்டிமுடிந்தபின்
மைந்தனோடுமயிலைவழங்கினான்.

[அதற்கு சுக்கிரன் அரிச்சந்திரனை நோக்கி எனக்கு வரவேண்டிய பொ ருள் வந்தது. உன் மனைவியையும் மகனையும் இந்தப் பிராமணருக் குக்கொடுத்து விலைச்சீட்டு எழுதிக்கொடு என்று சொல்ல முன் னாலே விலைச்சீட்டு எழுதிக்கொடுத்த பின்பு தன் புத்திரனோடு மயில்போன்ற சாயலை உடைய தன் மனைவியையும் அந்தப் பிரா மணருக்குக் கொடுத்தான் என்பதாம்.]

இ-ள். வந்தது என்பொருள் - (அதற்குச் சுக்கிரன் அரிச்சந்திரனை நோக்கி முனிவர் கட்டளைப்படி) உன்னிடமிருந்து என்னிடத்தில் சேரவேண் டிய பொருள் வந்து சேர்ந்தது, மாதையும் - உன் மனைவியையும், சேயையும்- உன்மகனையும், அந்தணற்கு அளித்து - இந்தப் பிராமணருக்குக் கொடுத்து, ஆவணம் நல்கு என - விலைச்சீட்டு எழுதிக்கொடு என்று சொல்ல, முந்த - முத லில், ஆவணம் - விலைச்சீட்டு, தீட்டி முடிந்தபின் - எழுதி முடிந்த பிற்பாடு, மைந்தனோடு - தன் புத்திரனோடு, மயிலை - மயில்போன்ற சாயலையுடைய மனைவியையும், வழங்கினான் - அந்தப் பிராமணனிடத்தில் கொடுத்தான். எ-று.

முனிவர் பொருளை சுக்கிரன் என்பொருள் என்றது சேவக உரிமையால் என்க, 'ஆவணம்' விலைச்சீட்டு. (௯௫)

வல்லிபோற்றிவருந்தலெமக்கெனச்
சொல்லிவேற்கட்டுளிபலசிந்திட
வல்லிமாமரைத்தாள்களையன்புடன்
புல்லிவீழ்ந்துகிடந்துபுலம்பினள்.

[அப்போது சந்திரவதி தன் கணவனாகிய அரிச்சந்திரமகாராஜனைத் துதித்து எங்களுக்காக நீர் வருத்தம் கொள்ளவேண்டாமெனச் சொல்லி வேல்போன்ற கண்களில் நீர்த்துளிகள் சிந்த தனது நாயகனின் அக இதழ்களைக்கொண்ட சிறந்த தாமரைபோன்ற பாதங்களை அன்போடு பிடித்துக்கொண்டு கீழே வீழ்ந்து கிடந்து புலம்பினள் என்பதாம்]

இ-ள். வல்லி - அப்பொழுது சந்திரவதி, போற்றி - தன் கணவனைத் துதித்து, வருந்தல் எமக்கு எனச்சொல்லி - எங்களுக்காக நீர் வருந்தாதீர் என்று சொல்லி, வேல்கண் - வேலாயுதம்போன்ற கண்களிலிருந்து, துளி பல சிந்திட - நீர்த்துளிகள் பல சிந்த, அல்லி - அக இதழ்களையுடைய, மாமறைத்தாள் - சிறந்த தாமரைபோன்ற பாதங்களை, வீழ்ந்து - பூமியில் வீழ்ந்து, அன்புடன் புல்லி - அன்போடு பிடித்து, கிடந்து - அந்தப் பூமியிலே கிடந்து, புலம்பினள் - புலம்பலானள். எ-று.

'வல்லி' உவமை ஆகுபெயர்; வல்லிக்கொடி போன்றவள் என்பது பொருள், 'வேற்கண்' உவமைத்தொகை, வேல்போலுங் கண் என விரியும். ()

நின்றுகாணுநிருபரும்யானுமன்
றன்றுகாணவவாவுறுசெம்முக
மின்றுகாணுகவெய்தியதன்றிமற்
றென்றுகாண்பனினியெனவேங்கினள்.

[காத்துக்கொண்டு நின்று இருந்து அரசர்களும் நானும் தினந்தினம் காண விரும்புகின்ற செம்மையான நினது திருமுகத்தை இன்று காணக்கிடைத்தது இனிமேல் என்றைக்குக் காண்பேனோ என்று சொல்லி ஏங்கினள் என்பதாம்.]

இ-ள். நின்று - காத்துக்கொண்டு நின்று, காணும் - (பிறகு) காண்கின்ற, நிருபரும் - அரசர்களும், யானும் - நானும், அன்றன்று - தினந்தினம், காண - பார்க்க, அவாவுறும் - ஆசைப்படும்படியான, செம்முகம் - செம்மையான திருமுகம், இன்று - இன்றையத்தினம், காணுக எய்தியது அன்றி - காணக்கிடைத்ததே யல்லாமல், மற்று - மற்றும், இனி - இனிமேல், என்று - எப்பொழுது, காண்பன் - காணுவேன், என - என்றுகூறி, ஏங்கினள் - பிரலாபித்தாள். எ-று.

'செம்முகம்' அழகிய முகமும் ஆம், 'காணுக' காணுமாறு, எனப் பொருள் தந்தது, 'மற்று' அசை என்பாருமுண்டு, 'ஏங்குதல்' பிரலாபித்து அழுதல். (ருஎ)

ஏங்கிமன்னனிடைவனென்றேபடர்
தாங்கிநாயகதாவிடையென்றயல்
நீங்கினுளிறைநீள்கழுத்தைத்தழீஇத்
தூங்கிவாய்விட்டுத்தோன்றலரற்றினுன்.

[நம்மை நினைத்து அரசன் ஏங்கி வருந்துவானென்று உள்ளே துன்பங் கொண்டு நாயகா! உத்தரவு கொடென்று சொல்லித் தூரப்போனுள், அப்போது மகன் அரசன் கழுத்தைக் கட்டிப் பிடித்துக்கொண்டு தொங்கி வாய்விட்டுக் கதறி அழுதான் என்பதாம்.]

இ-ள். மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், ஏங்கி - நம்மை நினைத்து ஏங்கி, இடைவன் என்றே - வருந்துவான் என்றே, படர் தாங்கி - உள்ளே துயரங்கொண்டு, நாயக - ஓ நாயகனே! தாவிடை - உத்தரவு கொடுத்தருள், என்று - என்றுசொல்லி, அயல் நீங்கினுள் - தூரத்தே சென்று நீங்கினுள், நீள் கழுத்தை - அரிச்சந்திரமகாராஜனின் நீண்ட கழுத்தை, தழீஇ - கட்டிப் பிடித்துக்கொண்டு, தூங்கி - தொங்கி, தோன்றல் - மகனுகிய லோகிதாசன், வாய்விட்டு - வாய்விட்டு, அரற்றினுன் - கதறி அழுதான். எ-று.

'நாயக' அண்மை விளி; 'தழீஇ' உயிர் அளபெடை; தோன்றல் - ராஜ புத்திரன், 'அரற்றுதல்' பிரலாபித்தலுமாம். (ருஅ)

எமையவென்னையுமியாயையுந்தாங்கிய
சுமையிறக்கினையோசுகமுற்றதோ
வுமையணைந்திங்குறவென்றிருந்தவா
றமையுமோவையனேயென்றரற்றினுன்.

[எங்கள் ஐயனே! என்னையும் என்தாயையும் ரட்சித்துக்கொண்டு வந்த சுமையை இறக்கிக்கொண்டீரோ? இப்போழ்து உமக்குச் சுகமாயிற்றே? நாங்கள் உம்மைச்சேர்ந்து இங்கே உறவென்று இருந்தபடி போதுமோ? என் ஐயனே! என்று லோகிதாசன் கூறி அழுதான் என்பதாம்.]

இ-ள். எம் ஐய - எங்கள் ஐயனே!, என்னையும் - என்னையும், யாயையும் - என்தாயையும், தாங்கிய சுமை - இரட்சித்துக்கொண்டு வந்த சுமையை, இறக்கினையோ - இறக்கிக் கொண்டீரோ?, சுகமுற்றதோ - இப்போது உமக்குச் சுகமாயிற்றே?, உமையணைந்து - நாங்கள் உம்மைச்சேர்ந்து, இங்கு உறவென்று - இங்கே உறவென்று, இருந்தவாறு - இருந்தபடி, அமையுமோ - பொருந்தியதாகுமோ?, ஐயனே - என் ஐயனே!, என்று - என்று கூறி, அரற்றினுன் - லோகிதாசன் பிரலாபித்து அழுதான். எ-று.

"எம்மைய" எனற்பாலது "எமைய" எனத்தொகுத்தல் விகாரம்பெற்றது; 'யாய்' - தாய், என்னையும் - யாயையும் என்ற இருசொல்லும் புணருங்கால "என்னையு மியாயையும்" என்ருயது; "தன்னெழி மெய்முன் யவ்வரினிகரம், துன்னுமென்ற துணிநரு முளரே" என்பது சூத்திரம். 'தாங்குதல்' ஈண்டு ரட்சித்தல் என்னும் பொருளது. (௩௯)

கழுத்தைப்பூண்டழுங்காவலன்கைகளை
யழுத்தமாம்பற்றறவிடுவித்தனன்
விழித்தகட்பொறிசிந்திடவேதிய
னிழுத்துப்போய்த்தனதில்லிடமெய்தினன்.

[கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுகின்ற ராஜபுத்திரனின் கைகளை அழுத்தமான பிடிப்பு நீங்கும்படிப் பிரித்து விழித்துப் பார்க்கின்ற கண்களிலே தீப்பொறிகள் சிந்த அந்தப்பிராமணன் இழுத்துக்கொண்டு, போய்த் தன் வீட்டினிடம் போய்ச்சேர்ந்தான் என்பதாம்.]

இ-ள். கழுத்தைப்பூண்டு - (தந்தையாகிய அரிச்சந்திர மகாராஜனின்) கழுத்தைக் கட்டிக்கொண்டு, அழும் - அழுகின்ற, காவலன் கைகளை - இராஜபுத்திரனுகிய லோகிதாசனின் கைகளை, அழுத்தமாம் பற்று அற - அழுத்தமாகிய பிடிப்பு விட்டு விலகும்படி, விடுவித்தனன் - பிரித்தான், விழித்த கண் - விழித்துப் பார்க்கிற கண்களில், பொறி சிந்திட - தீப்பொறிகள் சிந்த, வேதியன் இழுத்துப்போய் - அந்தப் பிராமணன் இழுத்துக் கொண்டுபோய், தனது - தன்னுடைய, இல்லிட மெய்தினன் - தன் வீட்டினிடம் போய்ச் சேர்ந்தான். எ-று.

"இல்லிடம்" இல்லாகிய இடம் என்று பொருள் விரியும்; இடம் ஏழாம் வேற்றுமை உருபாகவும் பொருள் கூறுவர். (௪0)

கடியவேதியன்கைதொட்டிழுத்தவக்
கொடுமைகண்டுகுலைகுலைந்தேங்கியே
யிடிவிழுந்தமராமரமீதெனும்
படிவிழுந்தனன்சற்றும்பதைத்திலன்.

[கடிய மனதை உடைய பிராமணன் தன் புத்திரன் கையைப்பற்றி இழுத்துக்கொண்டு போன அந்தக் கொடுஞ் செய்கையைப் பார்த்து அரசன் நடு நடுக்கமாய் அழுது இடிவிழுந்த மராமரம் ஈது என்று சொல்லும்படி கீழே விழுந்தான், சற்றேனும் உடம்பு அசைதலில்லாது அப்படியே கிடந்தான் என்பதாம்.]

இ-ள். கடிய வேதியன் - கடுமையான மனத்தை உடைய அந்தப் பிராமணன், கைதொட்டு இழுத்த - தன் புத்திரனுகிய லோகிதாசனின் கையைத் தொட்டு இழுத்த, அக்கொடுமை கண்டு - அந்தக் கொடுஞ்செய்கையைப் பார்த்து, குலை குலைந்து ஏங்கியே - நடு நடுங்கி அழுது, இடி விழுந்த - இடி விழுதலான, மராமரம் - மராமரம், ஈது எனும்படி - இது என்று சொல்லும்

படி, விழுந்தனன் - (பூமியில்) விழுந்தான், சற்றும் பதைத்திலன் - கொஞ்ச மேனும் உடம்பு அசைதல் இன்றிக் கிடந்தான். எ-று.

'மாமரம்' ஓர்வகை மரம், இனிப் பெரிய மரம் என்றும் பொருள் கூறுவர். (சக)

வந்துமந்திரிமன்னனைத்தாங்கிநீ
புந்தியில்லவர்போலப்புலம்புவ
தெந்துகாரணமென்றடிபோற்றலுஞ்
சிந்தைவாட்டமுங்கோட்டமுந்தேறினான்.

[அப்பொழுது மந்திரி சமீபத்திலே வந்து அரசனை எடுத்து அரசே! நீர் புத்தி இல்லாதவரைப்போலப் புலம்புவது என்னகாரணம்? என்று சொல்லிப் பாதங்களை வணங்கும்பொழுது அரசன் மனத்தி லுள்ளவாட்டமும் மனக்கோணலும் தீர்ந்து தெளிந்தான் என்பதாம்.]

இ-ள். வந்து மந்திரி - அப்போது மந்திரியானவன் அரிச்சந்திரமகாரா ஜன் சமீபத்தில் வந்து, மன்னனைத் தாங்கி - அரசனை எடுத்து, நீ - அரசே! நீர், புந்தி இல்லவர்போல - புத்தி இல்லாதவரைப்போல, புலம்புவது - பிரலா பிப்பது, எந்து காரணமென்று - என்ன காரணமென்று கூறி, அடிபோற்ற லும் - அரிச்சந்திரமகாராஜனின் பாதங்களை வணங்கினவுடனே, சிந்தை-அரிச் சந்திரமகாராஜன் தன் மனத்திலுள்ள, வாட்டமும் - வாட்டமும், கோட்டமும்- மனக்கோணலும், தேறினான் - (தீர்ந்து) தெளிவடைந்தான். எ-று.

'புந்தி' - அறிவு; "எந்து" திசைச்சொல்; என்ன, என்றபொருளில் வந் தது; 'கோட்டம்' மனவருத்தம், என்பது பொருள். "சிந்தை வாட்டமும் சிந் தைக் கோட்டமும், தேறினான்" என்பதாம். (சஉ)

அந்தணன்முகநோக்கியரும்பொருள்
வந்ததோவென்றுமன்னன்விளம்பயா
னிந்தமாநிதிபெற்றனனின்னமுஞ்
சிந்தையோடுரைசெய்வதொன்றுண்டென்றான்.

[அப்பொழுது அரிச்சந்திரன் சுக்கிரனாகிய பிராமணனை நோக்கி நான் தாவேண்டிய அரும்பொருள் வந்ததோ என்று கேட்க இந்தப் பெரி தான பொருளைப் பெற்றுக்கொண்டேன் இன்னமும் என் மனதா ரச் சொல்ல வேண்டுவதொன்று உண்டு என்று பிராமணன் கூறி னான் என்பதாம்.]

இ-ள். மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், அந்தணன் முகநோக்கி - சுக் கிரனாகிய பிராமணனின் முகத்தைப்பார்த்து, அரும்பொருள் - விஸ்வாமித்திர முனிவருக்குத் தரவேண்டியதான அருமையான பொருள், வந்ததோ என்று- உன்னிடம் வந்து சேர்ந்ததோ என்று, விளம்ப - கேட்க, யான் இந்த மாநிதி பெற்றனன் - (அதற்கு சுக்கிரன்) நான் இந்தப் பெரிதான பொருள் பெற்றுக்

கொண்டேன், இன்னமும் - இதற்கு மேலும், சிந்தையோடு - என் மனதார, உரைசெய்வது - சொல்லவேண்டுவது, ஒன்று உண்டு என்றான் - ஒரு சங்கதி யிருக்கிறது என்று கூறினான். எ-று. 'சிந்தையோடு' மன விருப்பத்தோடு என்றும் பொருளாம். (சுச)

முனிக்குமுன்னமொழிந்தபொனீந்தனை
யெனக்குக்கூலிநீயீகுவதென்னென
வுனக்குமீகுவன்வாவெனவுத்தமன்
றனக்குப்பின்னடந்தான்வினைச்சல்லியன்.

[நீ விஸ்வாமித்திர முனிவருக்குக் கொடுக்கிறேன் என்று சொன்ன பொருளைக் கொடுத்தாய், கூடவந்த எனக்குக் கூலி கொடுக்கிற தென்னவென்று கேட்க, அதற்கு அரிச்சந்திரன் உமக்கும் கொடுக் கின்றேன் வாருமென்று சொல்ல, கொடுஞ் செய்கையையுடைய சுக்கிரன் உத்தமனாகிய அரிச்சந்திரன் பின்னே சென்றான் என்ப தாம்.]

இ-ள். முனிக்கு - நீ விஸ்வாமித்திர முனிவருக்கு, முன்னமொழிந்த- கொடுக்கிறேனென்று முன்னே சொன்ன. பொன் ஈந்தனை - பொருளைக் கொடுத்தாய், எனக்குக் கூலி - (உன்னோடு கூடவந்த) எனக்குக் கூலி, நீ ஈகு வது என் என - நீ கொடுக்கப்போகிறது என்ன என்று சுக்கிரன் கேட்க, உனக் கும் - (ஓ வேதியரே!) உனக்கும், ஈகுவன் - நான் கூலி கொடுக்கின்றேன், வா என - வாரும் என்று அரிச்சந்திரன் சொல்லவே, உத்தமன் றனக்குப்பின்- உத்தமனாகிய அரிச்சந்திர மகாராஜனுக்குப் பின்னாலே, வினைச்சல்லியன்- கொடுஞ்செய்கையையுடைய சுக்கிரன், நடந்தான் - தொடர்ந்து சென்றான். எ-று.

வினைச்சல்லியன் என்றது சுக்கிரனை, மேன்மேலும் துன்பந்தரும் வினை களை முனிவரின் ஏவுதலினாற் செய்தமையால். (சுசு)

அன்னகாலையமைச்சனைநோக்கியே
யென்னைநீவிற்றிவற்குப்பொனீகெனச்
சொன்னபோதிற்றளுக்கெனவேங்கியெம்
மன்னகேளெனமந்திரிகூறுவான்.

[அந்தவேளையில் அரிச்சந்திரன் மந்திரியை நோக்கி என்னை நீவிலைக்கு விற்று இந்தச் சுக்கிரனுக்குக் கூலிப்பொருளைக் கொடு என்று சொன்ன உடனே, மந்திரி திடுக்கிட்டு அழுது எமது அரசனே! கேளென்று சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். அன்னகாலை - அந்த வேளையிலே, அமைச்சனை நோக்கியே-அரிச் சந்திரன் மந்திரியைப்பார்த்து, என்னை நீ விற்று - என்னை நீ விலைசெய்து, இவற்கு - இந்தப் பிராமணற்கு, பொன் ஈகென - கூலிப்பொருள் கொடு

என்று சொல்ல, சொன்னபோதில் - அப்படி அரிச்சந்திரன் சொன்ன உடனே, மந்திரி துணுக்கென வெங்கி - மந்திரி மனந்திடுக்கிட்டு அழுது, எம்மன்ன-எமது அரசனே!, கேளென - கேட்டருளுமென்று, கூறுவான் - சொல்லுகின்றான். எ-று.

ஈக என - ஈகவென எனற்பாலது ஈகென நின்றது இது மரூஉ வின் பாற்படும். (சடு)

அன்னையெமதாண்டகையாகிய
நின்னையான்விலைகூறுதனீதியோ
வென்னைநீவிற்றிவர்க்குச்செலத்தகும்
பொன்னைநல்கெனவீழ்ந்தடிபூண்டனன்.

[எங்களுக்குத் தாயாகி எமக்கு அரசனுமாகிய உம்மை நான் விலை கூறுவது நியாயமாகுமோ? என்னை நீர் விற்று இந்தப் பிராமணருக்குச் செலுத்தத் தகுந்த பொருளைக் கொடுமென்று கீழே விழுந்து வணங்கிப் பாதங்களைப் பிடித்துக்கொண்டான் என்பதாம்.]

இ-ள். அன்னையாய் எமது ஆண்டகையாகிய நின்னை - எங்களுக்கு தாயாகி அரசனும் ஆன உம்மை, யான் விலைகூறுதல் - நான் விலைகூறுவது, நீதியோ - நியாயமாகுமோ?, (நீதியாகாது, ஆதலால்) என்னை நீ விற்று-என்னை நீர் விலைசெய்து, இவர்க்கு - இந்தப் பிராமணருக்கு, செலத்தகும் - செலுத்தத் தக்க, பொன்னை - கூலிப்பொருளை, நல்கென - கொடும் என்று, வீழ்ந்து-கீழே விழுந்து வணங்கி, அடிபூண்டனன் - பாதங்களைப் பிடித்துக்கொண்டான். எ-று.

'எமது அன்னையாய் எமது ஆண்டகையாய்' என்று கொண்டு பொருள் செய்தாம், இது மத்திமதீபம். (சசு)

மண்ணில்வீழ்ந்தவமைச்சனைமார்பணைத்
தொண்ணிலாவதனத்தொளிமாழ்கவே
கண்ணினிற்புனலாட்டிக்கவுசிக
னெண்ணுநீர்மைக்குமேதற்குமதோவென்றான்.

[அப்படி மண்ணில் விழுந்து வணங்கிய மந்திரியை அரிச்சந்திரன் தன் மார்போடு அணைத்துக்கொண்டு சந்திரனை ஒத்த முகத்தில் ஒளி மழுங்க தன் கண்களின் நீரினாலே மந்திரியை முழுகச்செய்து விஸ்வாமித்திரர் ஆலோசித்திருக்கிற தன்மைக்கு இது தக்கதாகுமோ என்று கூறினான் என்பதாம்.]

இ-ள். மண்ணில் - அந்தவிதமாக மண்ணிலே, வீழ்ந்த அமைச்சனை- விழுந்து கிடக்கிற மந்திரியை, மார்பு அணைத்து - அரிச்சந்திரன் தன் மார்போடு அணைத்து, ஒண் நிலாவதனத்து - ஒளி பொருந்திய சந்திரனை ஒத்த முகத்தில், ஒளி மாழ்கவே - ஒளி மழுங்கவே, கண்ணினிற் புனலாட்டி-தனது கண்ணினின்று வழிகின்ற நீரால் மந்திரியை முழுகச்செய்து, கவுசிகன் - விஸ்

வாமித்திரமுனிவர், என்னும் நீர்மைக்கு - ஆலோசித்திருக்கும் தன்மைக்கு இது - இப்படி உன்னை விற்பது, ஏற்குமதோ என்றான் - தக்கதாகுமோ என்று (அரிச்சந்திரன்) கூறினான். எ-று.

'மார்பணைத்து' மார்பில் அணைத்து - அல்லது மார்போடணைத்து என விரியும், இது வேற்றுமைத்தொகை. (சஎ)

ஏற்குமோபொருட்குன்னை விற்றீகுவ
தார்க்குமாதவனெண்ணமறியலாந்
தார்க்குலாவுவெள்வேலவதாழ்க்கிலா
தூர்க்குளென்னை விற்றொண்ணிதிநல்கென்றான்.

[நான் கொடுக்கவேண்டிய பொருளுக்கு உன்னை விற்றுக்கொடுப்பது தக்கதாகுமோ? விளங்குகின்ற விஸ்வாமித்திர முனிவரின் நினைவு எப்படி என்று அறியலாம் வெற்றிமாலை விளங்கும்படியான வெள்ளிய வேலாயுதத்தையுடைய மந்திரியே! இனி நீ தாமதம் செய்யாமல் இந்த ஊருக்குள்ளே கொண்டுபோய் விலைசெய்து ஒளிபொருந்திய அந்தத் திரவியத்தை சுக்கிரனாகிய இந்தப் பிராமணருக்குக் கொடுப்பாயாக என்று அரிச்சந்திரன் கூறினான் என்பதாம்.]

இ-ள். பொருட்கு - நான் விஸ்வாமித்திரருக்குக் கொடுக்கவேண்டிய பொருளுக்காக, உன்னை விற்று ஈகுவது - உன்னை விற்றுக்கொடுப்பது, ஏற்குமோ - தக்கதாகுமோ?, ஆர்க்கும் - ஆரவாரித்து முழங்குகின்ற, மாதவன் எண்ணம் - இந்த பெரிய தவத்தைச் செய்துள்ள விஸ்வாமித்திரரின் எண்ணத்தை, அறியலாம் - நாம் அறிவோம், தார் - வெற்றிமாலை, குலாவு - (பொருந்தி) விளங்குகின்ற, வெள் - வெள்ளிய, வேலவ - வேலாயுதத்தையுடைய மந்திரியே!, தாழ்க்கிலாது - இனித்தாமதம் செய்யாமல், ஊர்க்குள் - இந்த ஊருக்குள்ளே, என்னைவிற்று - என்னைக் (கொண்டுபோய்) விலைசெய்து, ஒண்ணிதி - ஒளிபொருந்திய அந்தத்திரவியத்தை, நல்கு என்றான் - (சுக்கிரனாகிய) இந்தப் பிராமணருக்குக் கொடு என்று அரிச்சந்திரன் கூறினான். எ-று.

'ஆர்க்கும்' வேத முழக்கத்தையுடைய என்றும், என்னிடத்திலே கோபங்கொண்டு ஆரவாரித்து வருகின்ற என்றும் பொருள் செய்யலாம்; 'தார்' என்றது ஈண்டு வெற்றிமாலையை 'வாகை சூடிய சிலை' எனக் கம்பரும் 'மாலைவேல்' எனப் பிறரும் கூறியதானுமுணர்க வெள்வேல் - ஒளிபொருந்திய வேல் என்றுமாம். 'ஒண் நிதி' சிறந்த பொருள், நல்வழியாலீட்டிய பொருள் எனவும் பொருளாம். (சஅ)

என்னபாவமெனக்குப்பலித்தரெதன்
றந்நகர்ப்பலவாவணவீதிவாய்ப்
பொன்னின்மாமுடிமீதிற்புற்சூடியே
மன்னனை விலைமந்திரிகூறுவான்.

[இது என்ன பாவம் எனக்குப் பிராப்தமாயிற்று என்று அந்தக் காசி நகரத்திலே பல கடைவீதிகளினிடத்தும் சென்று அரிச்சந்திரமகாராஜனின் பொன்முடி சூடுகின்ற தலையில் மேலே புல்லைச்சூட்டி அரசனை மந்திரி விலைகூறுவானானான்; என்பதாம்.]

இ-ள். எனக்கு - (ஐயோ!) எனக்கு, என்னபாவம் - இது என்ன பாவம், பலித்தது என்று - பிராப்தமாயிற்று என்று, பொன்னின் மாமுடி மீதில் - பொன்முடி சூடுகின்ற அரிச்சந்திரமகாராஜனின் பெருமை பொருந்திய தலைமேல், புல் சூடியே - ஒரு புல்லைச்சூட்டியே, அந்நகர் - அந்தக் காசி நகரத்தின், பல ஆவணவீதிவாய் - பல கடைவீதிகளினிடத்திலும் (சென்று), மந்திரி - சத்தியகீர்த்தி என்னும் மந்திரியானவன், மன்னனை - அரிச்சந்திரமகாராஜனை, விலை கூறுவான் - விலை கூறுவானானான். எ-று. 'ஆவண வீதி' கடைவீதி, (ஆவணம் - கடை.) (சக)

ஆதிநூலினராயினுமல்லது
சாதியீனர்களாயினுஞ்சால்புடைக்
கோதிலான்றனைக்கொண்மினெனப்பல
வீதிதோறும்விலைபதுகூறினான்.

[பழமையாகிய வேதசாஸ்திரங்களுக்கு உரிய பிராமணராயிருந்தாலும் அல்லது ஈன ஜாதியர்களாயிருந்தாலும் சிறப்புடையவனும் குற்றமில்லாதவனுமாகிய இந்த அரசனை விலைக்கு வாங்கிக் கொள்ளுங்களென்று பல வீதிகள் தோறும் விலை கூறிக்கொண்டு மந்திரி சென்றான் என்பதாம்.]

இ-ள். ஆதி - பழமையாகிய, நூலினர் ஆயினும் - வேத சாஸ்திரங்களுக்குரிய பிராமணர்கள் ஆனாலும், அல்லது - அல்லாமற்போனால், சாதி - ஜாதியிலே, ஈனர்கள் ஆயினும் - குறைந்தவர் ஆனாலும், சால்பு உடை - மேன்மையை உடைய, கோது இலான்தனை - குற்றம் இல்லாத இந்த அரசனை, கொண்மின் என - (விலைகொடுத்து) வாங்கிக் கொள்ளுங்கள் என்று, பல வீதி தோறும் - பலவாகிய வீதிகளில் எல்லாம், விலையது கூறினான் - மந்திரி விலை கூறிக்கொண்டு சென்றான். எ-று.

'ஆதிநூல்' வேதம், வேதத்திற்கு உரியர் அந்தணர் ஆதலின் பிராமணர் என்றோம்; இனி வேதநூலைக்கற்கும் உரிமையுடையார் முதன் முக்குலத்தாராகிய பிராமண, க்ஷத்திரிய, வைசியராதலின் 'ஆதி நூலினர்' என்பதற்கு உயர் குலத்தாராகிய பிர்மண க்ஷத்திரிய வைசியர் என்ற மூன்று குலத்தாரானாலும் சரி அல்லது சாதியீனர்கள் ஆயினும் - மேற்பால் நாற்குலத்தாரன்றிச் சாதியிற் குறைந்த கீழ்ப்பால் நாற்குலங்களில் எவரேயாயினும் சரி, 'கொண்மின்' - விலை கொடுத்து வாங்கிக்கொள்ளுங்கள் என்று மந்திரி கூறினன் எனவும் உரைப்பர்; 'சாதியினர்' சண்டாளர் எனவும் பொருள் கூறினரும் உண்டு. (ருo)

வாரமேதகுமந்திரிமன்னனைத்
தூரமேவிலைகூறியசொற்களா
வீரவாகுவெனும்பெயர்மேவினோன்
சூரநீர்மைப்புலைமகன்றோன்றினான்.

[உரிமையிலே சிறந்த மந்திரியானவன் அரசனைத் தூரத்திலே விலை கூறி வருகிற சொற்களைக்கேட்டு வீரவாகு என்னும் பெயரைக் கொண்டவனாகிய சூரத்தன்மையை உடைய ஒரு பறையன் வந்தான் என்பதாம்.]

இ-ள். வாரமே தகு மந்திரி - உரிமைத் தனத்திலே சிறந்த மந்திரியானவன், மன்னனை - அரிச்சந்திரமகாராஜனை, தூரமே - தூரத்திலேயே, விலை கூறிய - விலை கூறிக்கொண்டு வருகின்ற, சொல்கேளா - சொல்லைக்கேட்டு, வீரவாகு எனும் - வீரவாகு என்று சொல்லும்படியான, பெயர் - பெயரை, மேவினோன் - கொண்டவனாகி, சூர நீர்மை - சூரத்தன்மையை உடைய, புலைமகன் - ஒரு பறையன், தோன்றினான் - வந்து எதிர்ப்பட்டான். எ-று.

'வாரம்' அன்பும் ஆம்; 'நீர்மை' - தன்மை; புலைமகன் - புலைக்குலத்தில் பிறந்த மகன் என்பது பொருள். (ருக)

குடக்கணுங்கிமயங்கியகொள்கையாற்
றடக்கைகால்விதிர்ப்புற்றதளர்ச்சியான்
விடக்கின்றோறுதசைவிண்டுவின்றண்டினிற்
றொடக்கிக்காவியதிண்பெருந்தோளினான்.

[அவன் ஒருகுடங் கள்ளும் குடித்து மயங்கி யிருக்கின்ற தன்மையினாலே, நீண்ட கைகளும் கால்களும் நடுங்கச் சோர்வு உடையவனாகி மாமிசத்தை மூடி யிருக்கின்ற தோல் மாமிசம் ஆகிய இவைகளை மூங்கிற்றடியிலே கோத்துக் கட்டிக் காவடியாகப் போட்டுக்கொண்டுள்ள வலிய பெருந்தோளை உடையவன் என்பதாம்.]

இ-ள். குடக்கள் நுங்கி - (அந்த வீரவாகு என்போன்) ஒரு குடம் கள்ளும் குடித்து, மயங்கிய கொள்கையால் - மயங்கி யிருக்கிற தன்மையினாலே, தடக்கை கால் - நீண்ட கைகளும் கால்களும், விதிர்ப்பு உற்ற தளர்ச்சியான் - நடுங்குகின்ற சோர்வை உடையவனாகி, விடக்கின்றோல் - மாமிசத்தை மூடி யிருக்கின்ற மாட்டுத்தோலும், தசை - மாமிசத்தையும், விண்டுவின் தண்டினில் - மூங்கித்தடியில், தொடக்கிக் காவிய - தொடுத்துக்கட்டிய காவடியை உடைய, திண் - வலிமைபொருந்திய, பெருந்தோளினான் - பெரிய தோள்களை யுடையவனாய். எ-று. இச்செய்யுள் குளகம், வருஞ் செய்யுளோடு பொருள் முடிவு பெறுகின்றது.

'நுங்கல்' - பருகல், ஈண்டு புலைமகன் சுமந்தமையினாூல் தோல் என்பதற்கு மாட்டுத்தோல் என்றாம்; 'விண்டு' - மூங்கில்; கா - காவடி. (ருஉ)

சமக்குங்காவைத்துத்துசொடுவாய்புதைத்
துமக்குவேண்டுமுறுபொருணல்கிடி
னமைக்கும்புன்ரெழிலாளரெம்போல்பவர்
தமக்கும்விற்கத்தகுதியுண்டோவென்றான்.

[தான் சுமந்து வரும் காவடியை கீழே இறக்கி வைத்து, ஆடையை ஒதுக்கி வாயைப் பொத்திக்கொண்டு உங்களுக்கு வேண்டிய மிகுந்த பொருளைக் கொடுத்தால் ஒருவர் சொல்லும் இழிதொழிலாளராகிய எங்களைப் போன்றவர்களுக்கும் விலைசெய்யுந் தன்மை யுண்டோ என்று வீரவாகு கேட்டான் என்பதாம்.]

இ-ள். சுமக்கும் - தான் சுமக்கும்படியான, கா - காவடியை, வைத்து- கீழே இறக்கிவைத்து, துசொடு - வஸ்திரத்தோடு, வாய் புதைத்து - வாயையும் புதைத்துக்கொண்டு, உமக்கு - உங்களுக்கு, வேண்டும் - விலையாகித் தரவேண்டிய, உறுபொருள் - மிகுந்த அந்தப்பொருளை, நல்கிடின் - கொடுத்தால், அமைக்கும் - பிறர் ஏவுகின்ற, புன்தொழில் ஆளர் - இழிதொழிலைச் செய்கின்றவர்களாகிய, எம்போல்பவர் தமக்கும் - எம்மை ஒத்தவர்களுக்கும், விற்க- விற்பதற்கு, தகுதி உண்டோ என்றான் - தக்கதாகுமோ என்று வீரவாகு கேட்டான். எ-று.

"துசொடு வாய் புதைத்து" 'துசு புதைத்தலோடு வாய் புதைத்து' எனக்கொண்டு வஸ்திரத்தை ஒடுக்கி வாயைப் புதைத்து என்று பொருள் செய்தாம்; இனி இதனை வஸ்திரத்தால் வாயைப் பொத்திக்கொண்டு என்றும் பொருள் செய்யலாம்; அப்பொழுது 'துசொடு' என்பது துசினால் எனப் பொருள் தரலின் வேற்றுமை மயக்கமாம். (கூ)

அன்னதன்மையரசன்மனங்கொளா
வின்நகர்க்குளிவனலதெம்விலைப்
பொன்னளிப்பவனில்லெனப்புந்திவைத்
தென்னைவில்லெனறமைச்சற்கியம்பினான்.

[அந்தத் தன்மையை அரிச்சந்திரமகாராஜன் மனத்துள்ளே கொண்டு, இந்த ஊருக்குள்ளே இவனை அல்லாமல் எனக்கு நீ சொல்லும் விலையாகிய பொருளைக் கொடுக்கின்றவன் இல்லை என்று மனதிலே தீர்மானித்து என்னை இப்புலையனுக்கு விலைசெய்து விடு என்று மந்திரியிடம் கூறினான் என்பதாம்.]

இ-ள். அன்னதன்மை - (வீரவாகுவாகிய புலையன் சொல்லிய) அந்தத் தன்மையை, அரசன் - அரிச்சந்திரமகாராஜன், மனங்கொளா - மனதிலே கொண்டு, இந்நகர்க்குள் - இந்த நகரத்துக்குள்ளே, இவன் அலது - இவனை அல்லாமல், எம் விலைப்பொன் - எனக்குச் சொல்லப்படுகின்ற விலையாகிய பொருளை, அளிப்பவன் - தருபவன், இல் என - இல்லை என்று, புந்தி வைத்து - மனதிலே உறுதியாகக்கொண்டு, என்னை வில் என்று - என்னை இச்

தப் புலையனுக்கு விலைசெய் என்று, அமைச்சற்கு - மந்திரிக்கு, இயம்பினன்- சொல்லினன். எ-று.

காசியம்பதியில் பல வீதிகளிலும் விலை கூறிக்கொண்டு சென்றும் ஒருவரும் கருதிப் பாராமையினாலும், எவரும் நாடி வாராமையினாலும், ஒருவரும் விலை கேளாமையினாலும், வீரவாகுவே வந்து கேட்டமையினாலும் முன்னரே முனிவர் சண்டாளப்பெண்களை கல்யாணம் செய்துகொள்ளக் கட்டாயப் படுத்தியபோது மறுத்தமையினால் புலையனுக்கு அடிமையாகச் சபித்திருந்தமையினாலும், முனிவர் மொழிந்த சாபம் தப்பாது கிட்டுமென்று அறிந்துளா னாதலினாலும் அரிச்சந்திரன் "இந்நகர்க்குள் இவனலது எம்மை விலைப்பொன் அளிப்பவன் இல் எனப் புந்தி வைத்து என்னை வில் என்று அமைச்சற்கு இயம்பினன்" என்பது அறிக. (௫௪)

ஆயினன்றென் றமைச்சனுமவ்வயின்
மேயினனனிவிற்பனுனக்கென்று
வீயுநல்விலையேதெனப்பொன்பதி
னாயிரம்மென்றமைச்சனியம்பினன்.

[அவ்வாறாயின் நல்லதென்று மந்திரியும் அவ்விடத்திலே வந்த வீரவாகுவைப் பார்த்து நான் உனக்கு விலைசெய்கிறேனென்று கூறினான். அதற்கு வீரவாகு நான் இந்த அரசனுக்குக் கொடுக்கத்தகுந்த விலைப் பொருள் என்னவென்று கேட்க மந்திரி பதினாயிரம் பொன் விலை என்றான் என்பதாம்.]

இ-ள். ஆயின் - அவ்வாறானால், நன்று என்று - நல்லது என்று, அமைச்சனும் - சத்தியகீர்த்தியாகிய மந்திரியும், அவ்வயின் மேயினன் - அவ்விடத்திலே வந்தவனாகிய வீரவாகுவிற்கு, இனி - இனிமேல், விற்பன் உனக்கு என்றான் - நான் உனக்கு விலைசெய்கிறேன் என்று கூறினான், ஈயும் விலை ஏது என - (அதற்கு வீரவாகு) நான் இவ் அரசனுக்காகக் கொடுக்கத்தகுந்த விலைப் பொருள் எவ்வளவு என்று கேட்க, அமைச்சன் - மந்திரியானவன், பொன் பதினாயிரம் என்று - (விலைப்பொருள்) பதினாயிரம் பொன் என்று, இயம்பினன்- கூறினான். எ-று.

'வயின்' - இடம், அவ்வயின் - அந்த இடம்; "இனி விற்பன்" என்றது, இதுவரை வேறு எவரும் இவ் அரசனை விலைக்கு வாங்க ஒருவரும் வாராமையால் இனி இவ் அரசனை உனக்கு விற்பேன் என்பதாம். (௫௫)

தருகுவேனெனத்தன்பெயராற்பொறித்
தருளினன்புலைபற்கமைச்சாவணம்
பொருளைவாங்கிப்புகர்க்களித்தையபோய்
வருகவென்னமகிழ்ந்தவனேகினன்.

[அந்த விதமாக ஆயிரம்பொன்னைத் தருகின்றேனென்று வீரவாகு சொல்ல, உடனே மந்திரியானவன் தன் பெயராலே விலைச்சீட்டு எழுதி அந்தப் புலையனுக்குக் கொடுத்தான். அதன் பிறகு வீரவாகு கொடுத்த அந்தப்பொருளை வாங்கிச் சுக்கிரனுக்குக் கொடுத்து, ஐயா சுக்கிரரே போய் வருக என்றுகூறச் சுக்கிரன் சந்தோஷமாகச் சென்றான் என்பதாம்.]

இ-ள். தருகுவேன் என (அதே விதமாக) ஆயிரம் பொன்னும் தருவேன் என்று வீரவாகு சொல்ல, புலையற்கு - வீரவாகு என்னும் புலையனுக்கு, அமைச்சு - மந்திரியானவன், ஆவணம் - விலைச்சீட்டை, தன் பெயரால் பொறித்து - தன் பெயராலே எழுதி, அருளினன் - கொடுத்தான், பொருளை - (வீரவாகு விலையாகக்கொடுத்த) பொருளை, வாங்கி - வாங்கி, புகர்க்கு - சுக்கிரனுக்கு, அளித்து - கொடுத்து, ஐய - ஐயா!, போய் வருக என்ன-போய் வாருமென்று கூற, அவன் - அந்தச்சுக்கிரனும், மகிழ்ந்து - சந்தோஷங்கொண்டு, ஏகினன்- சென்றான். எ-று.

'செல்க' எனல் அமங்கல வழக்கென்று 'செல்லுக' என்னும் பொருளிலேயே "போய் வருக" என்று மங்கல வழக்காற் கூறுவர்; பொறித்தல்'- தீட்டுதல். (௬௬)

மீளிவேந்தும்விடக்கின்றசைச்சுமை
தோளிலேற்றிப்புலையற்றொடர்ந்தன
னாளிமொய்ம்பினமைச்சனுமன்னவன்
றாளில்வீழ்ந்துதளர்ந்துவருந்தினன்

[அப்போது உடனே வீரனான அரிச்சந்திரமகாராஜனும் தோலில் பொதிந்துள்ள மாமிசச் சுமையாகிய காவடியைத் தோளிலே:சுமந்து கொண்டு வீரவாகுவாகிய புலையனைத் தொடர்ந்து செல்லலாயினான், அப்பொழுது சிங்கம்போலும் வலிமையுடைய மந்திரியும் அரசன் காலில் விழுந்து தளர்ச்சியுடனே வருந்தலாயினான் என்பதாம்.]

இ-ள். மீளி வேந்தும் - அப்போது வீரனாகிய அரிச்சந்திரமகாராஜனும், விடக்கின் தசைச்சுமை - தோலினால் பொதிந்து கட்டிய மாமிச மூட்டையாகிய காவடியை, தோளிலேற்றி - தனது தோளின்மேல் ஏற்றிக்கொண்டு, புலையற் றொடர்ந்தனன் - வீரவாகுவாகிய புலையனைத் தொடர்ந்து செல்லல் ஆயினான், ஆளி மொய்ம்பினன் - அப்பொழுது சிங்கத்தை ஒத்த வலிமையுடையவனாகிய, அமைச்சனும் - மந்திரியும், மன்னவன் தாளில் வீழ்ந்து-அரிச்சந்திரமகாராஜனின் காலில் விழுந்து, தளர்ந்து வருந்தினன் - (மனந்) தளர்ந்து வருந்தலாயினான். எ-று.

'மீளி வேந்து' - வலிமையுடைய அரசன், 'மொய்ம்பு' - வலிமை. (௬௭)

கொற்றவாநின்குளிர்மலர்த்தாளிணை
யுற்றநாடொட்டுமுன்பணியேசெயப்

பெற்றமாதவப்பேறெனக்கின்றொடு
மற்றதோவென்றயலழுதேகினான்.

[அரசனே! உம்முடைய குளிர்ந்த தாமரை மலர்போலும் பாதங்களிரண்டையும் நான் வந்தடைந்த நாள்முதல் உம்முடைய ஊழியமே செய்யப்பெற்ற பெரிய தவப்பயன் இன்றோடே எனக்கு முடிவாகிப் போயிற்றோ என்று கூறி அழுது தூரத்தே அழுதுகொண்டு சென்றான் என்பதாம்.]

இ-ள். கொற்றவா - அரசனே! நின் - உன்னுடைய, குளிர் - குளிர்ந்த, மலர்த்தாளிணை - செந்தாமரை மலர்போன்ற பாதங்களிரண்டையும், உற்றநாள் தொட்டும் - நான் வந்து சேர்ந்தநாள் தொடங்கியும், உன் பணியே - உன்னுடைய ஊழியமே, செயப்பெற்ற - செய்யப்பெற்ற, மாதவப்பேறு - என்னுடைய பெரிய தவப்பயன், எனக்கு - எனக்கு, இன்றொடும் - இன்றோடேயே, அற்றதோ - எனக்கு முடிவாகிப்போயிற்றோ, என்று - என்றுகூறி, அயல் - தூரத்தே, அழுது - அழுதுகொண்டு, ஏகினான் - சென்றான். எ-று.

அன்பும் அருளும் வாய்மையும் உடைய அரசன் பணி செய்தமையின் 'மாதவப்பேறு' என்றனன். (ருஅ)

வலயநீத்தபுயத்திடைவைத்தகா
வலயவேபின்றொடர்ந்தரிச்சந்திரன்
றொலைவிலாமுடைநாறியதொன்னெறிப்
புலையன்மேவும்புலைக்குடிநண்ணினான்.

[அரிச்சந்திரமகாராஜன் கேயூரங்களை நீக்கின தோளிலே வைத்ததோற்காவடி அசைய வீரவாகுவின் பின்னே தொடர்ந்து சென்று நீங்காது புலால் நாறிக்கொண்டிருக்கின்ற பழய வழியையுடைய அந்தப் புலையன் இருக்கிற புலைக்குடிசைக்குப் போனான் என்பதாம்.]

இ-ள். வலயம் நீத்த - கேயூரத்தை நீக்கின, புயத்திடை - தோளிலே, வைத்த - தாங்கிய, கா - காவடியானது, அலையவே - அசையவே, பின் தொடர்ந்து - வீரவாகுவைப் பின் தொடர்ந்து, அரிச்சந்திரன் - அரிச்சந்திரமகாராஜாவானவன், தொலைவு இலா - நீங்காத, முடை நாறிய - புலால் நாறுகின்ற, தொல்நெறி - பழமையாகிய வழியையுடைய, புலையன் மேவும் - அந்த வீரவாகுவாகிய புலையன் வசிக்கின்ற, புலைக்குடில் - புலைக்குடிசையை, நண்ணினான் - போய்ச்சேர்ந்தான். எ-று.

'வலயம்' - தோளணி; இதனை வாகுவலயம் என்றும் கேயூரம் என்றும் கூறுவர்; "முடை" தீய நாற்றம், புலாலினால் உண்டாய தீய நாற்றமாதலின்; புலால் நாற்றம் என்றாம், இனி 'முடை' என்பதே புலால் என்று பொருளாம் அவ்வாறு கொள்ளில் மாட்டிரச்சிகள் நாறிக்கொண்டிருக்கும்படியான, என்று பொருளாம். 'தொல் நெறி' பழமையாகிய வழி அதாவது பழய வாசற்படி என்பது பொருளாம்; 'தொல்நெறி' என்பதைப் புலையனுக்கு அடையாகக்

கொண்டு பழய வழிகளிலே செல்லுகின்ற, என்று பொருள் விரிப்பாரும் உண்டு. (௬௧)

பார்த்தவர்க்குப்பசுந்தசையாய்மறை
யோத்தகாலவையிறக்கிக்கொடுத்தபி
னூத்தைக்கொட்டிலினுள்ளிருந்தேபுவி
காத்தகோவுடன்காலனியம்புவான்.

[கண்ணாலே காண்கின்றவர்களுக்குப் பசிய தசையாகிக் காணவேதங்களைக் கோத்த காவடியை இறக்கிக் கொடுத்த பின்பு அழுக்கடைந்த கொட்டிலுக்குள் இருந்துகொண்டு உலகத்தை ஆண்ட அரசனுடன் யமதேவனாகிய வீரவாகு சொல்லுகின்றான் என்பதாம்.]

இ-ள். பார்த்தவருக்கு - கண்ணாலே கண்டவர்களுக்கு, பசும் - பசுமையாகிய, தசையாய் - மாமிசமாகிக் காண்கின்ற, மறைகோத்த - வேதத்தைக் கோத்திருக்கிற, காலவை - காவடியை, இறக்கி - தோளிலிருந்து இறக்கி, கொடுத்தபின் - வீரபாகுவினிடம் கொடுத்த பின்பு, ஊத்தைக் கொட்டிலின் உள் இருந்தே - அழுக்கடைந்த தன் கொட்டிலுக்குள்ளே இருந்துகொண்டே, புவி - பூமியை, காத்த - ஆண்ட, கோவுடன் - அரிச்சந்திரமகாராஜனுடன், காலன் - யமதேவனாகிய வீரபாகு, இயம்புவான் - சொல்லுவான். எ-று.

'பசுந்தசையாய் மறைகோத்த' என்பதற்கு பசுந்தசையாய் மறைந்து தோன்றக் கோத்த, என்றும் பொருள் கூறுவர்; 'ஊத்தை' - அழுக்கு; 'கொட்டில்' - கொட்டகை; 'காலன்' ஜீவப்பிராணிகளின் வாழ்நாட் காலத்தைக் கொள்பவனாதலின் யமனுக்குக் காலன் என்னும் பெயர் உண்டாயிற்று; 'இயம்புவான்' இதில் 'வான்' எதிர்காலம் உணர்த்த வந்த விகுதி.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

தூங்கிருள்கடியுஞ்செந்தீச்சுடலையிற்சுடும்பிணத்துக்
கோங்கியபுலைப்பேறுடையொன்றுண்டுபணங்காலுண்டு
வாங்கியீதெனக்குவைத்துவாய்க்கரிசியைநீயிட்டுண்
டாங்கிருவென்றுபின்னுமன்னனுக்கவனுரைப்பான்.

[மிகுந்த இருட்டை நீக்குவதான செவந்த நெருப்பு மூண்டு எரியும்படியான சுடுகாட்டிலே தினம் சுடுவதாகிய பிணங்களுக்கு, ஒவ்வொரு பிணத்துக்கும் மிக்கதான புலையன் பெறுவதான வஸ்திரம் ஒன்று உண்டு, கால்பணமும் உண்டு; இவைகளை வாங்கி எனக்கு வைத்துவிட்டு வாய்க்கரிசியை மாத்திரம் நீ வாங்கி வைத்துக்கொண்டு சாப்பிட்டு அங்கே தானே இரு என்று சொல்லிப் பிறகும் அரசனுக்கு அவன் சொல்லுகின்றான் என்பதாம்]

இ-ள். தூங்கு - தங்கிய, இருள் கடியும் - இருளை ஓட்டுவதான, செந்தீச் சுடலையில் - செவந்த நெருப்பு எரியும்படியான சுடுகாட்டில், சுடும் பிணத்து

க்கு - தினம் சுடும்பிணங்கள் ஒவ்வொன்றிற்கும், ஓங்கிய-உயர்ந்ததாகிய, புலைப் பேறுடை ஒன்று உண்டு - புலையன் பெறுவதாகிய வஸ்திரம் ஒன்று உண்டு, பணம் காலும் உண்டு - காற்பணமும் உண்டு, வாங்கி - அவைகளை நீ வாங்கி, ஈது எனக்கு வைத்து - இவைகளை எனக்கு வைத்துவிட்டு, வாய்க்கரிசியை-பிணங்களுக்கு இடும் வாய்க்கரிசியை, நீ இட்டு உண்டு - நீ உனக்காக எடுத்து வைத்து உண்டு, ஆங்கு இரு - அங்கே தானே இரு, என்று - என்று கூறி, பின்னும் - பிறகும், அண்ணலுக்கு - அரசனுக்கு, அவன் உரைப்பான் - அந்த வீரவாகு சொல்லுவான். எ-று.

'நீ இட்டு உண்டு,' நீ கொடுக்கவேண்டிய உன் யாசகர்களுக்கும் கொடுத்து உண்டு, என்ற பொருளுமாம். "ஆங்கு" என்றது 'சுடலையை' 'அண்ணல்' பெருமையுடையோன் ஈண்டு பெருமையுடைய அரசனைக் குறித்தது. இவை பெரும்பாலும் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் என ஆறு சீர்க ளால் வந்த ஆசிரிய விருத்தம். (கூக)

எனக்குநீபணமுங்கொள்ளியாடையுமினிதுநல்கி
உனக்குவாய்க்கரிசிதந்தேனுண்டிருபசியைநீக்கி
மனத்துளேவஞ்சமின்றிமயானத்திலுறைவாயென்னத்
தனக்குநேரில்லான்றானுநன்றெனச்சுடலைசார்ந்தான்.

[எனக்கு நீ பிணஞ்சுடுகிற பணமும் கொள்ளி வஸ்திரமும் இனிதாகக் கொடுத்து உனக்கு நான் தந்ததாகிய வாய்க்கரிசியை நீ உண்டு பசியை நீக்கி இரு, மனத்திலே வஞ்சகமில்லாமல் அந்தச் சுடுகாட்டில் தானே வசித்துக்கொண்டிருப்பாயாக என்று வீரபாகுகூற தனக்குச் சமான மில்லாதவனாகிய அரிச்சந்திரனும் அதற்குச் சம்மதித்து நல் லது என்று சுடுகாட்டுக்குப் போனான், என்பதாம்.]

இ-ள். எனக்கு - எனக்கு, நீ - நீ, பணமும் - பிணஞ்சுடுதற்குக் கூலியா கத்தருகிற பணமும், கொள்ளி ஆடையும் - கொள்ளி வஸ்திரமும், இனிது நல்கி - இனிதாகக்கொடுத்து, உனக்கு - உனக்கு, வாய்க்கரிசி தந்தேன் - வாய்க் கரிசி கொடுத்தேனே (அதனைக்கொண்டு), உண்டிரு பசியை நீக்கி - பசியை நீக்கி உண்டுகொண்டிரு, மனத்துளே - உன் மனத்தின் கண்ணே, வஞ்சம் இன்றி - வஞ்சனை இல்லாமல், மயானத்தில் - சுடுகாட்டிலே, உறைவாய் என்ன - வசித்துக் கொண்டிருப்பாயாக என்று கூற, தனக்கு நேர் இல்லான் தானும் - தனக்கு ஒப்பு வேறு ஒருவரும் இல்லாதவனாகிய அரிச்சந்திரமகாராஜ னும், நன்று என - அப்படியே நல்லது என்று, சுடலை சார்ந்தான் - சுடுகாட் டுக்குப் போனான். எ-று.

'மயானத்தில் உறை' சுடுகாட்டைக் காத்துக்கொண்டு அங்கேதானே வசித் திரு, என்பதாம். 'தனக்கு நேரில்லான்' - தன் சிறந்தகுணஞ் செயல்களுக்கு வேறு யாரையும் ஒப்புக்கூறுதற்கு இல்லாத சிறப்புடையோன் என்பதாம். ()

சுட்டவெம்பிணத்தேரடொக்கத்தொலைந்துவெந்தெரிந்தகொள்
கட்டையும்பாடைசேர்ந்தசுழிகளுமெடுத்துக்கூட்டிக் [ளிக்

கொட்டிலொன்றெடுத்துமேனுள்கொடுஞ்சவங்கொணர்ந்துபோட்
கட்டிலொன்றேறிச்செங்கோற்காவலன்வீற்றிருந்தான். [ட

[அங்கே சுட்டதான வெவ்விய பிணத்தோடே கூட அழிந்து வெந்து எரிந்துபோன கொள்ளிக் கட்டைகளையும் பாடையோடு சேர்ந்து வந்த கழிகளையும் எடுத்துச் சேர்த்து ஒரு கொட்டில் கட்டிக் கொண்டு முன்னே கொடிதான பிணத்தைத் தூக்கிக்கொண்டுவந்து போட்டிருக்கிற கட்டில் ஒன்றைக் கொண்டுவந்து போட்டுக்கொண்டு அதில் ஏறி செங்கோலையுடைய அரிச்சந்திரமகாராஜன் இருந்தான் என்பதாம்.]

இ-ள். சுட்ட - (அந்தச் சுடுகாட்டிலே) சுட்ட, வெம்பிணத்தோடு - வெவ்விதாகிய பிணங்களோடு, ஒக்க - ஒருமிக்க, தொலைந்து - அழிந்து, வெந்து எரிந்த - (நெருப்பினால்) வெந்து எரிந்துபோன, கொள்ளிக்கட்டையும் - கொள்ளிக்கட்டைகளையும், பாடைசேர்ந்த - பாடையிலே சேர்ந்ததாகிய, கழிகளும் எடுத்து - கழிகளையும் எடுத்து, கூட்டி - சேர்த்து, கொட்டில் ஒன்று எடுத்து- ஒரு கொட்டில் ஒன்று கட்டிக்கொண்டு, மேனுள் - முன்னே, கொடும் சவம்- கொடிதான பிணத்தை, கொணர்ந்துபோட்ட - தூக்கிக்கொண்டு வந்து போட்டுக் கிடக்கின்ற, கட்டில் ஒன்று ஏறி - கட்டில் ஒன்றை (கொண்டுவந்து போட்டுக்கொண்டு) அதில் ஏறி, செங்கோற் காவலன் - செங்கோலைத் தாங்கிய அரிச்சந்திரமகாராஜன், வீற்றிருந்தான் - இருந்தான். எ-று.

'வெம்பிணம்' 'கொடும்பிணம்' என்பன முறையே நெருப்பினால் வெந்து வெப்பங்கொண்ட பிணமென்றும், காண்பதற்குப் பயங்கரமான பிணமென்றும் பொருளாம். 'கழி' மரத்திலிருந்து கழித்து எடுக்கப்பட்டது என்னும் காரணப்பெயர், 'மேனுள்' - முந்திய நாட்கள், வீற்றிருத்தல் என்பது பெருமிதத்தோடிருத்தல் என்பதாம். (சுஙு)

பாடையிற்கொணர்ந்துவைத்தபிணஞ்சுடுபணமுங்கொள்ளி
யாடையும்வாங்கியீட்டியாண்டகைக்களித்தங்குற்றுக்
கூடையினிறைத்துநாளுங்கொடுத்தவாய்க்கரிசிவைத்தாங்
கோடைமார்க்களிற்றின்மன்னனுறைந்தனனுறைந்தபின்னர்.

[பாடைமேலே தூக்கிக்கொண்டு வந்து வைத்த பிணங்களைச் சுடுகிறதற்குக் கூலியான பணமும் கொள்ளி வஸ்திரமும் வாங்கிச் சேர்த்துத் தன் எஜமானனுக்குச் சேர்த்துவிட்டும் அங்கே இருந்து தினமும் கொடுக்கின்ற வாய்க்கரிசிகளைக் கூடையிலே நிறைத்து வைத்துக் கொண்டும் இந்தவிதமாக முகபடாமணிந்த பெரிய யானையை உடைய அரிச்சந்திரமகாராஜன் இருந்தான், இப்படி இருந்த பின்பு, என்பதாம்.]

இ-ள். பாடையில் - பாடையின்மேலே, கொணர்ந்து வைத்த - கொண்டு வந்து வைத்த, பிணம் - பிணத்தை, சுடுபணமும் - சுடுவதற்குக் கூலியாகிய

பணத்தையும், கொள்ளி ஆடையும் - கொள்ளி வஸ்திரத்தையும், வாங்கி- வாங்கி, ஈட்டி - சேர்த்து, ஆண்டகைக்கு அளித்து - தன் எஜமானனுக்குக் கொடுத்துவிட்டு, அங்கு உற்று - அங்கே இருந்து, நாளும் - தினமும், கொடுத்த - தனக்காகக் கொடுத்த, வாய்க்கரிசி - வாய்க்கரிசியை, கூடையில் - கூடையிலே, நிறைத்து - நிறைத்து, வைத்து - வைத்து, ஆங்கு - இதேவிதமாக, ஓடை - முகபடாத்தையுடைய, மா - பெரிய, களிற்று - ஆண் யானையை உடைய, மன்னன் - அரிச்சந்திரமகாராஜன், உறைந்தனன் - அங்கு தங்கி இருந்தான்; உறைந்த பின்னர் - அப்படித் தங்கி யிருந்ததற்குப் பிறகு. எ-று.

ஆண்டகை, ஆண்தன்மையைப் பூரணமாக உடையவன் என்றும்; ஆளுந் தகைமையை உடையவன் என்றும் பொருள்தரும்; ஈங்கு ஆளுந்தகைமையை உடைய எஜமான் என்னும் பொருளில் வந்தது. (௬௪)

அத்திருநகரின்மற்றோரம்பலத்திரவுதங்கிச்
சத்தியகீர்த்தியென்பான்றங்கணாயகனைத்தேடிப்
புத்தியில்வருத்தநண்ணிப்புலைக்குடிலருகுதேடி
உத்தமனீமங்காக்குமாறுகேட்டோடிச்சென்றான்.

[சத்தியகீர்த்தி அந்த அழகிய நகரத்தின் ஒரு அம்பலத்திலே அன்று இராத்திரி தங்கி யிருந்து விடிந்த பின்பு தங்கள் எஜமானைத் தேடிக் கொண்டு தன் மனத்தகத்தே வருத்தம் கொண்டு வந்து புலையர் களின் குடிசைகளிலெல்லாம் தேடி உத்தமகுணத்தை உடையவனாகிய அரிச்சந்திரன் சுடுகாடு காக்கும் சேதிதெரிந்து ஓடி சுடுகாடு இருக்கும் இடம் சென்றான் என்பதாம்.]

இ-ள். அத்திருநகரில் - அந்த அழகிய நகரத்தில், சத்தியகீர்த்தி என்பான் - சத்தியகீர்த்தி என்னும் பெயரை உடைய மந்திரி, ஓர் அம்பலத்து-ஒரு அம்பலத்திலே, இரவு தங்கி - இராத்திரிக்குத் தங்கியிருந்து, தங்கள் நாயகனைத் தேடி - (விடிந்த பின்பு) தங்கள் எஜமானனைத் தேடிக்கொண்டு, புந்தியில்- மனத்திலே, வருத்தம் நண்ணி - வருத்தத்தைக் கொண்டவனாய், புலைக்குடில் அருகு - புலையர்களின் குடிசையின் சமீபங்களில் எல்லாம், தேடி - தேடிப் பார்த்து, உத்தமன் - உத்தமகுணங்களையுடைய அரிச்சந்திரமகாராஜனானவன், ஈமம் - சுடுகாட்டை, காக்கும் - காவல் செய்யும், ஆறுகேட்டு - விதத்தைக் கேட்டு, ஓடிச்சென்றான் - சுடுகாட்டிற்கு ஓடிச்சென்றான். எ-று.

"மற்றோரம்பலம்" என்றதில் உள்ள 'மற்று' என்பது பொருளின்றி நிற்றலின் அசையாம். (௬௫)

நெருப்பெழுந்தெரியுஞ்செந்திச்சுடுகரைநீந்தியேகி
மருப்பயிலலங்கன்மன்னமந்திரித்தலைவினண்மிச்
செருப்பயில்வீரவேலான்சிறுகுடிறனிலேபுக்கங்
கிருப்பதுகண்டான்காணாவேங்கியேயலறிவீழ்ந்தான.

[நெருப்பு மூண்டு எரிவதாகி அந்தச் செவந்த நெருப்பினாலே சூடு கொண்டிருப்பதாகிய சுடுகாட்டின் கரையை கடந்துபோய் வாசனை பொருந்திய மாலையை அணிபவனாகிய அரிச்சந்திரமகாராஜனை முதல் மந்திரியாகிய, சத்தியகீர்த்தி வந்து கூடி, யுத்தத்திலே உப யோகிக்கப் படுகின்ற வீரவேலைத்தாங்கிய அரிச்சந்திரமகாராஜன் அந்த இடத்திலே ஒரு சிறிய குடிசைக்குள்ளே புகுந்துகொண்டு அங்கே இருப்பதைக் கண்டான், கண்ட உடனே அழுது பிரலாபித் துக் கீழே விழுந்தான் என்பதாம்.]

இ-ள். நெருப்பு எழுந்து எரியும் - (பிணங்களைச் சுடுவதற்காக இடப் பட்ட) நெருப்பானது (பிணங்களின் கிணங்களினாலே) மூண்டெரியும்படி யான, செம்தீ - செவந்த நெருப்பினாலே, சுடு - சுடப்பெற்றிருக்கின்ற, கரை நீந்தி - சுடுகாட்டின் கரையைக் கடந்து, ஏகி - போய், மருபயில் - வாசனை கம ழும்படியான, அலங்கல் மன்னை - மாலையை அணிபவனாகிய அரசனை, மந்தி ரித்தலைவன் அண்மி - மந்திரிகளுக்கெல்லாம் தலைவனாகிய சத்தியகீர்த்தி சமீ பித்து, செருபயில் - யுத்தஞ்செய்ய வல்லதாகிய, வீரவேலான் - வெற்றி வேலைக்கொண்ட அரிச்சந்திரமகாராஜனானவன், சிறுகுடில் தனிலே - (அந்தச் சுடுகாட்டிலே) ஒரு சிறு குடிசையிலே, புக்கு - புகுந்து, அங்கு - அவ்விடத் திலே, இருப்பது கண்டான் - இருப்பதைக்கண்டான், காணு - கண்டவுடனே, ஏங்கியே அலறி வீழ்ந்தான் - அழுது கதறிக் கீழே விழுந்தான். எ-று.

'மந்திரித்தலைவன்' முதல் மந்திரி, 'அண்முதல்' கிட்டுதல், சமீபித்தல்; 'செருபயில்' யுத்தத்தில் உபயோகிப்பதாகிய, என்று உரை உரைக்கலாம். தன் தலைவன் இவ்வளவு தாழ்ந்த நிலையில் இருப்பது காணச்சகியாது முதல் மந் திரியாகிய சத்தியகீர்த்தி அழுது கதறி வீழ்ந்தான், என்று கருத்தாம். (சுசு)

மன்னவரிடம்பொருதுவந்துசூழ்ந்திறைஞ்சிப்போற்ற
வன்னமென்னடையாராடவரம்பையர்பாடவைகும்
பொன்னெடுங்கோயினீங்கிப்பூதமும்பிசாசுமாடு
மிந்நெடுங்கோயிலோவந்தெய்தியவையவென்றான்.

[அரசர்கள் தமக்கு இடம் போதாமல் வந்து மொய்த்து வணங்கித் துதிக்கவும், அன்னம்போன்ற மெதுவான நடையை உடைய பெண் கள் ஆடவும் ரம்பாஸ்திரீகள் பாடவும் சிறப்புடன் வசிக்கும்படியான பொன்மயமான நெடிய அரண்மனையை விட்டுப் பூதங்களும் பசாசு களும் கூத்தாடுகின்ற இந்தப் பெரிய கோயிலோ ஐயா உமக்கு வந்து கிடைத்தது என்றான்; என்பதாம்.]

இ-ள். மன்னவர் - (தரிசனம் பெறும்பொருட்டு வந்துள்ள) அரசர்கள், இடம்பொருது - தாங்கள் தங்கி இருப்பதற்கு இடம் போதாமல், வந்து-வந்து, சூழ்ந்து - மொய்த்து, இறைஞ்சிப்போற்ற - வணங்கித் துதிக்கவும், அன்னம் மென் நடையார் - அன்னத்தை ஒத்த மெதுவான நடையை உடைய பெண்

கள், ஆட - நிர்த்தனஞ்செய்யவும், அரம்பையர் - ரம்பாஸ்திரீகள், பாட - பாடவும், வைகும் - (சிறப்புடனே) வீற்றிருக்கும், பொன் நெடும் கோயில்-பொன்மயமான நெடிய அரண்மனையை, நீக்கி - விட்டு, பூதமும் - பூதங்களும், பிசாசும் - பசாசுகளும், ஆடும் - ஆடும்படியான, இந்நெடும் கோயிலோ - இந்த நெடிய கோயிலோ, ஐய - ஐயா, வந்து எய்தியது - உமக்கு வந்து கிடைத்தது, என்றான் - என்று கூறினன். எ-று.

'பொன் நெடும் கோயில்' அழகிய பெரிய அரண்மனை, என்றலுமாம். ()

கதிதருமயனுமாலுங்கடக்கருங்கொடியநீர்மை
விதியினையெளியநம்மால்வெல்லலாந்தகைமைத்துண்டோ
வதிகம்வந்தெய்தாமேனுளமைத்தவேயடுக்குமல்லால்
மதிவலோயிதற்குவாடிவருந்தலையென்றுசொன்னான்.

[மோட்சத்தைத் தரும் பிரம்மாவும் விஷ்ணுவும் கூடக்கடத்தற்கு அரிதாகிய கொடுந்தன்மையை உடைய விதியை எளியவர்களாகிய நம்மாலே, வெல்லும்படியான தகுதி உள்ளதாமோ? முன்னாளிலே இறைவனாலே விதிக்கப்பட்டதே வந்து சேருமேயல்லாமல் அதற்கு அதிகமாக ஒன்றும் வந்து சேராது, ஆகையினால் அறிவில் வல்லவனாகிய சத்தியகீர்த்தியே இதற்காக நீ வாடி வருந்தாதே என்று அரிச்சந்திரன் மந்திரிக்குக் கூறினன் என்பதாம்.]



இ-ள். கதிதரும் - மோட்சத்தைத் தரும்படியான, அயனும் - பிரம்மாவும், மாலும் - விஷ்ணுவும், கடக்கரும் - கடத்தற்கு அரிதான, கொடிய நீர்மை- கொடுந்தன்மையை உடைய, விதியினை - விதியை, எளிய நம்மால் - எளியவர்களாகிய நம்மாலே, வெல்லலாம் தகைமைத்து உண்டோ - வெல்லலாகிய தகுதி உள்ளதாமோ?, மேனாள் - முன் நாளிலே, அமைத்தவே - இறைவனால் அமைத்தபடியே, அடுக்கும் அல்லால் - வந்து சேருமேயல்லாமல், அதிகம்- விதித்ததற்கு அதிகமாக, வந்து எய்தா - ஒன்றும் வந்து கூடாது, மதிவலோய்- அறிவில் வல்லவனான சத்தியகீர்த்தியே!, இதற்கு - (நான் இந்நிலையில் இருக்கும்) இதற்காக, வாடி - வாட்டமடைந்து, வருந்தலை - வருந்தாதே, என்று- என்று, சொன்னான் - அரிச்சந்திரமகாராஜன் மந்திரிக்குக் கூறினன். எ-று.

'கதிதரும் அயனும் மாலும்' என்பதற்கு தம்பால் அன்புசெய்யும் அடியார்களுக்கு முறையே சத்தியலோக வாழ்வைத்தரும் பிரமனும் வைகுந்த பதவியைத்தரும் விஷ்ணுவும், என்றும் பொருள் கூறலாம். 'எளிய' என்றது தேவர்கள் போலாது சிற்றறிவும் சின்னாளும் சிறுவலியும் உடைமையால் என்றறிக. "அளந்தன போகம் அவர் அவர் ஆற்றல்" என்பது ஈண்டு கருதத்தக்கது. (சுஅ)

என்னவேயமைச்சன்றேறியிருந்தனனிருக்கவேந்தன்
முன்னமேயுய்த்துவைத்தவரிசியைமுறையினீந்தா

னின்னமுதடுவதற்கென்றெண்ணியேயமைச்சன்வீழ்ந்து
பொன்னடிவணங்கிவாங்கிப்புல்லினிற்பொதிந்துகொண்டான்.

[இந்தவிதமாக அரசன் சொல்லவே மந்திரி தேறியிருந்தான். அப்படி இருக்கும்பொழுது அரசன் முன்னேதான் சேர்த்து வைத்திருந்த வாய்க்கரிசிகளை முறைப்படி கொடுத்தான்; இனிய உணவு சமைத்தற்கே தந்தான் என்று நினைத்து மந்திரி அரசன் பொன்னடிகளை விழுந்து வணங்கி அவ் அரிசிகளை வாங்கி சில புல்லுக்கற்றைக்குள்ளே வைத்து மூடி முடிந்து கொண்டான் என்பதாம்.]

இ-ள். என்னவே - இந்தவிதமாக அரசன் சொல்லவே, அமைச்சன்-மந்திரியானவன், தேறி இருந்தனன் - தேறுதல் கொண்டு இருந்தான், இருக்க-(அந்தவிதமாக) மந்திரி இருக்கவே, வேந்தன் - அரிச்சந்திரமகாராஜன், முன்னமே - முன்னமேயே, உய்த்து வைத்த - சேர்த்து வைத்திருந்த, அரிசியை-வாய்க்கரிசியை, முறையின் - முறைப்படி, ஈந்தான் - கொடுத்தான், அமைச்சன் - மந்திரியாகிய சத்தியகீர்த்தியானவன், இன் அமுது அடுவதற்கு என்று-இனியசோறு சமைத்தற்காகவே அரசன் கொடுத்தான் என்று, எண்ணியே-நினைத்தே, வீழ்ந்து - பூமியிலே விழுந்து, பொன் அடி - அரசனின் அழகிய பாதங்களை, வணங்கி - வணங்கி, வாங்கி - அந்த அரிசிகளை வாங்கி, புல்லினில்-புல்லுகளின் உள்ளே, பொதிந்து கொண்டான் - மூடிக் கட்டிக்கொண்டான். எ-று.

'உய்த்து வைத்த' சேர்த்து வைத்த, முறையின் ஈந்தான்' அளவுப்படி கொடுத்தான் என்றும் பொருளாம், (உணவுக்கு வேண்டிய அளவுப்படி, என்பதாம்.) (சுக)

மண்டலத்திறைவனுய்த்துவைத்தவாய்க்கரிசிதன்னைக்
கொண்டுபோய்சுரபிக்கீந்துகோமயத்துடனேவீழ்ந்த
தண்டுலமெடுத்துக்குத்திச்சமைத்தினிதுதவவச்சோ
றுண்டவனுறைந்தார்பின்னையுற்றவாறெடுத்துரைப்பாம்.

[பூமண்டலாதிபதியான அரசன் சேர்த்துக்கொடுத்த வாய்க்கரிசிகளைக் கொண்டுபோய் பசுவுக்குக் கொடுத்து அது உண்டு அதன் சாணியிலே வீழ்வதான அரிசியை எடுத்துக் குத்திச் சமைத்து இனிமையாகக் கொடுக்க அச்சோற்றை உண்டுகொண்டு அரசனும் மந்திரியும் அங்கு இருந்தனர். பின்பு நடந்த செய்கையை இனி எடுத்துச் சொல்வோம், என்பதாம்.]

இ-ள். மண்டலத்து இறைவன் - பூமண்டலாதிபதியாகிய அரிச்சந்திர மகாராஜன், உய்த்து வைத்த - சேர்த்து வைத்துக்(கொடுத்த), வாய்க்கரிசி தன்னை - வாய்க்கரிசிகளை, கொண்டுபோய் - (புல்லில் பொதிந்து) கொண்டு போய், சுரபிக்கு ஈந்து - பசுவுக்குக்கொடுத்து, கோமயத்துடனே வீழ்ந்த-(அந்தப் பசுவுண்டு) சாணியோடு வீழ்ந்த, தண்டுலம் எடுத்து-அரிசியை எடுத்து,

குத்தி - குத்தி, சமைத்து - சமையல்செய்து, இனிது உதவ - (பரிசுத்தமாக்கி) இனிமையாகத்தர, அச்சோறு உண்டு - மந்திரி சமைத்துத்தந்த அந்தச்சோற்றைச் சாப்பிட்டு, அவண் உறைந்தார் - அந்தச் சுடுகாட்டிலேயே அரசனும் மந்திரியும் வசித்துக்கொண்டு இருந்தனர். பின்னை - பிறகு, உற்ற ஆறு - நடந்த சங்கதிகளை, எடுத்து உரைப்பாம் - எடுத்துச் சொல்லுவோம். எ-று.

'மண்டலம்' (மண் - தலம்) பூமியாகிய இடம் என்பது பொருள்; 'மண்டலம்' வட்டம், உருண்டை; பூமி என்பதை வருவித்து பூமண்டலம் என்றும்; 'சுரபி' - பசு; 'தண்டுலம்' - அரிசி, இவை வடசொற்கள். 'இனிது உதவ' இனிமை உடையதாகத்தர, என்றும் பரிசுத்தமாகித்தர, என்றும் பொருள் செய்வர். 'உண்டவன் உறைந்தான்' என்பது பாடமாயின் உண்டு - சாப்பிட்டு, அவன் - அந்த அரிச்சந்திரமகாராஜன் உறைந்தான் - அந்தச் சுடுகாட்டில் இருந்தான்; எனப் பொருள் செய்து கொள்க. (எO)

காசிகாண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - ௬௪௧.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது,

# மயானகாண்டம்.

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

வல்லியுமகனுமந்தமறையவன்மனையிற்சேர்ந்து
சொல்லியபணிகளெல்லாஞ்சோர்வறச்செய்தபின்னு
மெல்லியோர்சாமமென்னவெழுந்திருந்தேவன்முற்றி
யல்லிருசாமஞ்சென்றாலளித்தகூழுண்டுறங்கி.

இ-ள். சந்திரவதியும் மகனும் அந்த விலைக்கு வாங்கின பிராமணன் வீட்டிலேபோய், அந்தப்பிராமணன் சொன்ன வேலைகளெல்லாம் குறைவில்லாமல் பொழுதளவுஞ்செய்து, மறுபடியும் அர்த்தராத்திரி விடிய ஒருசாமமிருக்கும் போதே விழித்தெழுந்திருந்து அவன் ஏவின வேலைகளெல்லா முடியச்செய்து பின்பு அந்தப்பகல் இரண்டு சாமமானால் அவனூற்றின கூழையுண்டு தூங்கி. எ-று. (க)

கையினிலுலக்கைபற்றிக்காந்தளினுதிரம்பாய
மெய்யினில்வெயர்நீர்சிந்தவிழியினிலருவிபாய
நெய்யினின்முடித்தகூந்தனெற்குத்துங்கொடுமைகாணு
மையினிற்றிகழ்வேற்கண்ணாரரம்பையர்மறுகிச்சோர்ந்தார்.

இ-ள். கையிலே உலக்கையைக்கொண்டு காந்தள் மலர்போன்ற அந்தக் கைகளிலே ரத்தங்கட்டிச் சிவப்பாகவும், உடம்பெல்லாம் வேர்வை நீரொழுகவும் கண்களிலே அருவிபோல் நீரொழுகவும், முன்னே சம்பங்கி யெண்ணெயிட்டுச்சீவி முடித்த கூந்தலையுடைய சந்திரவதியானவள் நெல்லுக்குத்துகிற கொடுமையைக்கண்டு மையிட்டதுடனே விளங்குகின்ற வேல்போலுங் கண்களை யுடையவர்களாகிய தெய்வரம்பைக ளெல்லாரும் (இச்சந்திரவதிக்கு) இப்படி வரக்கூடுமோவென்று மயங்கிச் சோர்வதானார்கள். எ-று. (உ)

புன்கணுற்றரம்பைமாதர்வருந்தவும்புந்திசெய்யா
வன்கணிரக்கமில்லான்மடித்தவாய்வெடித்தசொல்லான்
றன்கணன்பில்லான்பொல்லான்றறுகணன்விலைகொண்டாள்வோ
னின்கணில்லாதாள்பாரியிவனினுங்கொடியபாவி.

இ-ள். தெய்வரம்பைகள் அப்படித் துன்பப்பட்டு வருத்த மடையவும், விலைக்கு வாங்கி ஆளுகிற பிராமணன் அதை ஆலோசியாத கொடுஞ் செய்கையையுடையவனாய் கொஞ்சமேனு மிரக்க மில்லாதவனாய் மடித்த வாயுடனே அதிர்த்த சொல்லை யுடையவனாய்த் தன்னிடத்தி லெவ்வளவும்

அன்பில்லாதவனுய் அஞ்சாதவனுமிருந்தான். அந்த இனிதான முகதாக்ஷண்ணியமில்லாத பிராமணனுடைய பெண்டாட்டியோ அவனைப் பார்க்கிலு மிகவுங் கொடுமையான பாவியாயிருந்தாள். எ-று. (௩)

அடியினலஞ்சிமைந்தனனந்தலைப்பயமுணர்த்த
விடியுமுன்னெழுந்திருந்துவிளைபுலங்களைபறித்துக்
கடிவனத்தடகுமொய்துகாட்டமுஞ்சமிதையும்பொன்
முடிபுனைதலையில்வைத்துமுறைமுறைவருமந்நாளில்.

இ-ள். அந்தப் பிராமணனடிக்கிற அடியினுலே புத்திரனுன தேவதாசன் பயந்து, அப்பயமானது தூக்கத்தை விழித்தெழும்படிச் செய்ய விடிகிறதற்கு முன்னே எழுந்திருந்து அந்தப்பிராமணனுக்கு விளைகிற நிலத்திலுள்ள களைகள் பிடுங்கி அவனுடைய காவலுக்குள்ளான வனத்திலே அலைந்து திரிந்து இலைக்கறிகள் பறித்துக்கொண்டு விறகும் சமித்தும் கட்டி பொற்கிரீடமணியத்தக்க தலைமேலே வைத்துச் சுமந்து இப்படித் தினந்தோறும் வருவதாகிய அந்த நாளிலே. எ-று. (௪)

மைந்தனுஞ்சிறுரோடேகிவனந்தனில்விறகுகட்டித்
தந்திடுவழியினேர்பாற்றருப்பைகண்டிதுவிட்டேகி
லந்தணன்முனிவனென்னுவஞ்சியோர்வடத்தினீழ
லிந்தனமிறக்கியப்புலிருந்திடுபுகற்கட்சென்றுன்.

இ-ள். ஒருநாள் அந்தப்புத்திரன் ஊரிலுள்ள பிள்ளைகளோடு கூடிச் சென்று காட்டிலே விறகுதேடிச் சுமைகட்டிச் சுமந்துகொண்டு வருகிற வழியிலே ஓரிடத்தில் தர்ப்பைப்புல் அதிகமாயிருக்கக்கண்டு இந்தத் தர்ப்பையைக் கண்டும் பறித்துக்கொண்டு போகாமற்போனுல் பிராமணன் கோபஞ்செய்தடிப்பானென்று பயந்து ஒரு ஆலமாத்தினிழலிலே அந்த விறகு சுமையை யிறக்கி வைத்துவிட்டு அந்தத் தர்ப்பைப்புல் முளைத்திருக்கிற தூறினிடமாகப் போனுன். எ-று. (௫)

பறித்தனன்குசையைப்பற்றிப்பறித்தலுமுனிவனேவக்
குறித்துவந்ததனுட்டங்குங்கோளராச்சீறியோங்கித்
தெறித்தழல்விழியாற்சிந்தத்தீண்டிற்றுத்தீண்டலோடும்
வெறித்தெழுந்தலறியோடிவெருவியேதரையில்வீழ்ந்தான்.

இ-ள். அங்கேபோய்த் தர்ப்பையைப் பிடுங்கினுன்; அப்படித் தர்ப்பையைப்பிடித்துப் பறிக்கும்போது விசுவாமித்திரமுனிவ ரேவுதலினுலே கடிக்கவெண்ணி அந்தத் தர்ப்பைக்குள் ளடங்கியிருக்கிற பெரிய பாம்பானது சீறியெழுந்து நெருப்புப்பொறி தெறித்துக் "கண்களினின்று முதிரக்கடித்தது; அப்படிக் கடித்தவுடனே மயங்கித் துள்ளி" அலறிக்கொண்டோடிவந்து பயத்துடனே ஓரிடத்தில் வீழ்ந்தான். எ-று. (௬)

வடத்தின்கீழிருந்ததோழர்மறுகிப்போய்வள்ளல்வீழ்ந்த
விடத்தினையணுகியையயோவென்னுற்றதுரையாயென்னப்
படத்தினாற்பெரியநாகங்கடித்ததுபாருமென்று
விடத்தினாலறிவுசோர்ந்தான்விட்டுயிரடங்கிற்றன்றே

இ-ள். அப்போது அந்த ஆலமரத்தினிழலிலே இளைப்பாறிக்கொண் டிருந்த தோழப்பிள்ளைகள் பயந்தோடிவந்து அந்தப்பிள்ளை விழுந்து கிடக்கிற இடத்தையடுத்து ஐயோ பிள்ளாய்! உனக்கு என்னதுன்பம் வந்தது சொல் லென்றுகேட்க, படத்தையுடைய பெரிய பாம்பு என்னைக் கடித்தது; நீங்கள் அதைப்பாருங்களென்று சொல்லிக்கொண்டே அந்தப்பாம்பு விடத்தினாலே புத்திமயங்கினான். உயிரும் அவனுடம்பை விட்டு நீங்கிச் சுவாசமும் அடங்குத லாயிற்று. எ-று. (எ)

ஆவிபோயகன்றபின்னையனை வரும்புரட்டிப்பார்த்துப்
பாவியூழென்னேயிந்தப்பாலகனிறந்தானென்னு
மேவியவ்வடத்தின்கீழ்வந்தவரவர்விறகுகொண்டு
காவியங்கழனிசூழுங்காசியம்பதியிற்புக்கார்.

இ-ள். அப்படி உயிர்போய் இறந்தபின்பு எல்லாப் பிள்ளைகளும் அந்த உடம்பைப்புரட்டி அலசத்துப்பார்த்துப் பாவியான விதியினாலே என்ன ஆச் சரியம்! இந்தப்பிள்ளை இறந்துபோனானென்று திரும்பி அந்த ஆலமரத்தின் கீழே வந்து அவரவர்கள் கொண்டுவந்த விறகு சுமையை யெடுத்துக்கொண்டு நீலோற்பலங்கள் மலர்ந்துள்ள அழகிதான வயல் சூழ்ந்த காசிப்பட்டணத்துக் குள்ளேபோனார்கள். எ-று. (அ)

பாலர்வந்தூரிற்புக்கார்பானுவுங்கடலிற்புக்கான்
மாலைவந்திறுத்தபின்னர்வழியினைநோக்கியன்னை
பாலன்வந்திலனென்றேங்கிப்பரதவித்திருகண்டாரை
காலநொந்துருகிவாயிற்கடைத்தலைவந்துபார்த்தாள்.

இ-ள். அப்படிஅந்தப்பிள்ளைகளெல்லாரும் ஊருக்குள்ளே வந்துசேர்ந்தார்கள். சூரியனு மேலைக்கடலுக்குள்ளேபோய்ச் சேர்ந்தான். அப்படி ராத்திரிகாலமான பின்பு பிள்ளை வருகிறவழியைப் பார்த்துப் பார்த்துத் தாயான சந்திரவதி தன் பிள்ளை யின்னமும் வாராதிருக்கிறானேயென்று துக்கித்துப் பிரலாபித்துத் தன திரண்டு கண்களினு நீர்த்தாரை சிந்தும்படிநொந்து மனமுருகிக் கடைத்தலை வாயிலிலே வந்துபார்த்தாள். எ-று.

வணங்கியகரத்தாள்சாலவாடியமனத்தாண்மக்கா
ளிணங்கியும்முடனேவந்தவென்மகனெங்கேயென்றாள்
மணங்கமழ்குழலாயுன்றன்மைந்தனையரவுதீண்டி
யுணங்கியேயிறந்தானென்றாருயிர்த்திலண்மறுகிவீழ்ந்தாள்.

இ-ள். சோர்ந்த கைகளையுடையவளாய் மிகவும் வாடின மனத்தை யுடையவளாகி வருகிற பிள்ளைகளைப்பார்த்து பிள்ளைகளே! உங்களுடனே கூடிவந்த என்மகனெங்கே? வாக்காணேனென்றாள். அதற்கு அந்தப்பிள்ளைகள் வாசனை பரிமளிக்கின்ற கூந்தலையுடைய அம்மே! உன்னுடைய புத்திரனைப் பாம்புகடித்து அதனாலே சோர்ந்து மடிந்துபோனானென்று சொன்னார்கள். அதுகேட்டு மூச்சுமில்லாதவளாய் மயங்கிக் கீழேவிழுந்தாள் சந்திரவதி. எ-று.

மடத்தகைவல்லிபின்னுமைந்தரைநோக்கியெந்த
விடத்திலேயிறந்தானென்னயாம்வருவழியினிற்கும்
வடத்தினுக்கயலேசற்றேவடக்கினிற்குசைபடர்ந்த
தடத்தினிற்றெங்நேயென்றுசாற்றியேபவர்கள்போனார்.

இ-ள். அப்படி மயங்கிவிழுந்து பின்னும் அந்த யௌவனத் தகுதியை யுடைய சந்திரவதியானவள் அந்தப் பிள்ளைகளைப் பார்த்து பிள்ளைகளே! என் பிள்ளை எந்தவிடத்திலே இறந்து கிடக்கிறானென்று கேட்கப் பிள்ளைகள் நாங் கள் வருகிற வழியிலே நிற்கின்ற ஆலமரத்திற்குப் பக்கத்தே கொஞ்சம் வடக் குத்திசையிலே தர்ப்பைபடர்ந்து முளைத்திருக்கிற மேட்டுக்குத் தென்புறத் திலே இறந்து கிடக்கிறானென்று சொல்லி அந்தப்பிள்ளைகள் போய்விட் டார்கள். எ-று. (கக)

அறுதியீதென்றுசாலவறிவழிந்துருகிவீழ்ந்து
மறுகினானுடையோர்க்கஞ்சிவாய்திறந்தரற்றாண்மாழ்கிச்
சிறுதொழின்முழுதுஞ்செய்துதீர்ந்தபின்றேடிச்சேற
லுறுதியென்றுளத்தினுள்ளேயொடுக்கிவந்தகத்திற்புக்காள்.

இ-ள். முடிவு இப்படியாயிற்றென்று மிகவும் புத்திமயங்கி மனமுருகிக் கீழேவிழுந்து மயங்கினவளாகித் தன்னை விலைக்கு வாங்கின பிராமணனுக்கும் பிராமணத்திக்கும் பயந்து வாயைத்திறந்து கூவியழாதவளாய்ப் பின்னுஞ்சோர் வுடனே தான் செய்வதான சிறிய பணிவிடைகள் முழுதுஞ்செய்து முடிந்த பின்பு இறந்துகிடக்கிற பிள்ளையைத் தேடிக்கொண்டு போகிறதே இனித் தகுந்த காரியமென்று தன் மனத்துக்குள்ளே அப்படிப்பட்ட துன்பத்தை ஒடுங்கக் கொண்டுவந்து வீட்டுக்குள்ளே போயினாள். எ-று. (கஉ)

முறைமுறைப்பணிகளெல்லாஞ்செய்தறமுடித்துப்பின்னர்
மறையவன்றன்னையேத்திவாய்புதைத்தழுதுவிம்மி
யிறைவகேளரவந்தீண்டியென்மகனிறந்தான்யானச்
சிறையிலேசேறற்குன்றன்றிருவுள்மறியேனென்றாள்.

இ-ள். அப்படி வீட்டுக்குள்ளே வந்து கிரமக்கிரமமாகத்தான் செய்வதான ஊழியங்களெல்லாஞ்செய்து முடியமுடித்துப் பின்பு அந்தப் பிராமணனைத் தோத்திரஞ்செய்து வாயை ஒருகையால் மூடிக்கொண்டு அழுது துக்கித்து சுவாமி எஜமானே! கேட்பீராக: என்பிள்ளை பாம்பு கடித்திறந்துபோனான்;

ஆகையாலினிஞன் அந்த இடத்துப்போக உம்முடைய திருவுள்ளமெப்படியோ தெரிகிலேன் சொல்லுமென்றுள் சந்திரவதி. எ-று. (கங)

சினக்கடுஞ்சொல்லாற்சீறித்திடுக்கிடவுரப்பிவீணி
யெனக்குறுகுறையேயன்றியென்பொருட்கழிவுவந்தா
லுனக்குறுகுறைதானுண்டோவுறுவிலைப்பட்டபையல்
தனக்கொருதாயுமுண்டோதவிர்கநீபோவதென்றான்.

இ-ள். அதுகேட்டு கோபங்கொண்ட கடுஞ்சொற்களுடனே சீறி சந்திரவதி திடுக்கிடும்படி அதட்டி அட பயன்படாதவளே! என்பொருளுக்குக் கெடுதி நேரிட்டால் எனக்கு மிகுந்த குறைவேயல்லது உனக்கு வருவதான குறைவு ஏதேனுமுண்டோ? எனக்காக விலையான அந்தப் பையனுக்கு ஒரு தாயானவளு முண்டோ? (இல்லை.) நீ போகவேண்டாமென்று சொன்னன். எ-று. (கச)

அடிமையேயெனினுமையாவந்தரத்திறந்தானென்றாற்
கொடியனேன்றனக்குப்பெற்றவயிறுதான்கொதித்திடாதோ
படியின்மேலிறந்தான்றன்னைப்பார்த்தெடுத்தடக்கிக்கங்குல்
விடியுமுன்வருவேனல்குவிடையெனத்தொழுதுவீழ்ந்தாள்.

இ-ள். (அதற்கு) ஐயரே! உமக்கு அடிமைதான் ஆனாலும் என் கண் காணாத வனாந்தரத்திலே அந்தப்பைய னிறந்துபோனானென்று சொல்லக்கேட் டால் பாவியான எனக்குப் பெற்ற வயிறுதான் கொதிப்புக் கொள்ளாதா? ஆகையால் எங்கேயோ ஓரிடத்திலே இறந்து கிடக்கிறவனைத் தேடிக் கண்டு பிடித்து எடுத்தடக்கஞ்செய்து பின்பு இந்தராத்திரி விடிவதற்குமுன்னே வந்து விடுகிறேன்; நீர் தயவுசெய்து உத்தரவு கொடுத்தருளுமென்று வணங்கிக் கீழே விழுந்தழுதாள். எ-று. (கரு)

மாலையங்குழலாள்கூறமறையவன்மனம்பொருந்தி
வேலைகண்மிகவுமுண்டுவிடியுமுன்வருவாயாகி
னீலவேல்விழியாயேகுநீயெனவொருகாற்சொன்ன
காலையேயெழுந்திருந்துகடிநகர்கடந்துபோனாள்.

இ-ள். பூமாலையணிந் தழகுகொண்ட கூந்தலையுடைய சந்திரவதி இவ் வாறுசொல்ல, அந்தப்பிராமணன் மனஞ்சம்மதித்து நீலமலர்போலவும் வேல் போலவுங் கண்களையுடையவளே! நாளையத்தினம் என் வீட்டிலே அதிகமாக வேலைகளிருக்கின்றன; அவைகளெல்லாஞ் செய்வதற்காக நீ விடிகிறதற்கு முன்னே வருவாயேயானல் போவென் றொருதாஞ் சொன்ன அப்பொழுதே யெழுந்திருந்து அந்தக் காவல்கொண்ட பட்டணத்தைக் கடந்துபோனாள். எ-று.

பாவியேன்மகனேயென்பள்பதைப்பண்மென்முகத்தின்மோதித்
தாவியேவிழுவணின்றுதயங்கியேமயங்கிவீழ்வாள்
காவியங்கண்ணீர்பாயக்கதறுவள்பதறியேங்கி
யாவியைத்தேடித்தேடியலமருமுடலமொய்த்தாள்.

இ-ள். பாவியான யெனது புதல்வனே யென்று கூவுவாள்; போகும் போதே பதைபதைத்துக் கீழேவிழுவாள்; மிருதுவான தன் முகத்திலே அடித்துக்கொண்டு தாவிப்போய் அப்புறத்தே விழுவாள்; அங்கே கிடந்து தயங்கியு மயங்கியும் விழுவாள்; நீலமலர்போன்ற கண்களிலே நீர்சிந்தக் கதறுவாள்; அப்படிக் கதறியும் பதறியும் ஏங்குதலாகி உயிரைத்தேடி யலைகிற உடம்புபோலானாள். எ-று. (கஎ)

ஆறெலாமடிகள்வைத்தவடியெலாம்விழிநீர்நின்ற
தூறெலாமரிவைசென்றசுவடெலாங்குருதிதொட்ட
மாறெலாங்கூந்தறுன்றுவனமெலாந்துணிகள்யார்க்குந்
தேறலாந்தகைமைத்தன்றிச்செடியெலாந்தேடிச்சென்றாள்.

இ-ள். அவ்வாறு அவள் போகிறவழிகள் முழுதும் அவள் கால்கள் பதிந்திருக்கின்றன; அந்தக்கால்கள் பதிவாகிக் கிடக்கிற விடமுழுதும் கண்ணீரொழுகிவனவாயின. அங்குள்ள முள்ளுச்செடிகள் உடம்பைக் கிழிப்பதனாலே அந்தச் சந்திரவதிபோகின்ற காற்சுவடுகள் முழுதும் இரத்தம் சிந்துதலாயின. பின்னுமச்செடிகளின் மாறுகள் கூந்தலைப்பற்றி யிழுக்கவும், அந்த நெருங்கின காடெல்லாம் இடையிலுள்ள கந்தைச் சீலைத்துணிகள் கிழிந்து கிடக்கவும் இன்னபடியென்று எப்படிப்பட்டவர்களுந் தெளிந்து சொல்லொணாதபடி அந்தச் செடிகளுள்ள காடுகளிலே தேடிக்கொண்டுபோனான். எ-று. (கஅ)

ஓடினாளுள்ளமெல்லாமுருகினாள்கருகிமேனி
வாடினாள்விறகுவைத்தவடத்தினுக்கருகேவந்தா
ணாடினாள்கழுகும்பேயுநரிகளுங்குறளுந்துன்றிக்
கூடியகுழுவினுப்பண்குமரனைச்சென்றுகண்டாள்.

இ-ள். அப்படி தேடிக்கொண்டோடினாள்; மனமெல்லா முருகிக்கரைந்தாள்; உடம்பெல்லாங் கருகி வாடினாள்; விறகுச்சுமை வைத்துக் கிடக்கிற அந்த ஆலமரத்தினருகே வந்தாள்; அங்கேவந்து தேடினாள்; கழுகுகளும் பேய்களும் நரிகளும் பூதங்களும் நெருங்கிக் கூடியிருக்கிற கூட்டத்தினடுவே தன் பிள்ளையைப்போய்க் கண்டாள். எ-று. (கக)

கண்டனள்கதறிவீழ்ந்தாள்கழுகெலாமிரியல்போகக்
கொண்டதோர்மகவினுசையாவியைக்கொள்ளைகொள்ள
முண்டகக்கரத்தாலேந்திமுருகனைமடிமேல்வைத்தே
யண்டருமறுகியேங்கவாய்திறந்தரற்றலுற்றாள்.

இ-ள். அப்படிக் கண்டவுடனே, அங்குள்ள கழுகு முதலியனவெல்லாம் பயந்தோடிப்போக ஓவென்று கதறிக்கொண்டு கீழே விழுந்தாள். தான் கொண்டதான ஒரு புத்திரனென்கிற வாஞ்சை அவளுயிரைக் கொள்ளைகொண்டு போவதாகத் தனது தாமரை மலர்போன்ற கைகளிலே பிள்ளையையெடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு தேவர்களு மயங்கிப் பிரலாபிக்கும்படி வாயைத் திறந்து அழலாயினாள். எ-று. (உ0)

எழுசீர்க்கழிநெடிலடிச் சந்த விருத்தம்.

பனியானனைந்துவெயிலானுலர்ந்துபசியாலலைந்துமுலவா
வனியாயவெங்கணரவாலிறந்தவதிபாவமென்கொலறியேன்
றனியேகிடந்துவிடநோய்செறிந்துதரைமீதுருண்டமகனே
யினியாரைநம்பியுயிர்வாழ்றமென்றனிறையோனும்யானுமவமே.

இ-ள். (மகனே!) பனியினாலெ உன்னுடம்பு நனைதலாகியும், 'பின்பு வெயிலினாலே காய்தலாகியும், பசியினாலே வருந்துதலாகியும் நீ சாவாமல் (யாவரையுங் கடிப்பதான) அநியாயச் செய்கையையுடைய வெவ்விய கண்களோடு கூடின ஒரு பாம்பினாலே நீ யிறந்துபோகலான அதிகபாவம் யாதுசெய்தாயோ நான் தெரிகிலேன். இங்கே நீ ஒருவனாகக் கிடந்து விடமாகிய வியாதி பிடித்து மண்மேற் புரண்டு கிடக்கிற புத்திரனே! இனி யாரைவேண்டி உயிர் வாழக்கடவோம்? எனது தலைவனும் நானும் உயிர்வாழ்தல் வீணான காரியமே. எ-று. (உக)

நிறையோசைபெற்றபறையோசையற்றுநிரையாய்நிறைந்தகழுகி
சிறையோசையுற்றசெடியூடிறக்கவிதியாரிழைத்தசெயலோ [ன்
மறையோனிரக்கவளநாடனைத்தும்வழுவாதளித்தவடிவே
லிறையோனளித்தமகனேயுனக்குமிதுவோவிதித்தவிதியே.

இ-ள். நிறைந்த ஒலியைக்கொண்ட வாத்தியங்களின் முழக்கங்களில்லாமல் வரிசையாய் நிறைந்திருக்கிற கழுகுகளினுடைய சிறகடித்துக் கொள்ளுகிற சத்தத்தினைக்கொண்ட செடிகளுக்குள்ளே நீ யிறந்துபோகப் பிரமதேவரானவர் செய்த செய்கைதானோ? ஒரு பிராமணன் யாசிக்க தனது வளப்பங்கொண்ட நாடுமுழுதுங் கொடுத்த கூரிய வேலாயுதத்தையுடைய அரசன்பெற்ற புத்திரனே! உனக்குங்கூட இப்படித்தானோ லபிதமான லபி வாய்ந்தது. எ-று. ()

வானின்றிழிந்துசொரிகின்றதாரைமழைபோலவீழவிழிநீ
ரூனின்றிமேனியுதிரங்கள்சிந்தவுயிரின்றிவெம்புதழலின்
மேனின்றுவெந்ததளிர்போல்மயங்கிவிதியாரைநொந்துதனியே
யானின்றிரங்கவேனென்பதில்லையிதுவோவுனீதிமகனே

இ-ள். எனது புத்திரனே! ஆகாயத்திலிருந் திறங்கிப் பொழிகின்ற மழைத்தாரையைப்போற் கண்ணீரொழுகவும், என்னுடம்பிலே மாமிச மென்பதில்லாமல் ரத்தங்களொழுகவும், பிராணபலமுமில்லாமல் வெப்பமாகிய நெருப்பின்மேலே விழுந்து வெந்த தளிரைப்போல் வாடிப் பிரமதேவனை நொந்துகொள்ளுகிறதாய் நான் ஒருத்தியாக நின்று பிரலாபிக்க ஏன் பிரலாபிக்கிறு யென்பதில்லாமல் நீ கிடக்கிறதான இதுதானோ உனக்கு நியாயமாக முடிந்தது. எ-று. (உரு)

செங்கோலறத்தின் முறையேசெலுத்துதிறலோனெவர்க்கு
முரவோன், வெங்கோபபானு விறன்மன்னனம்மைவிடுவிக்கவெ

ண்ணிவருநாள், பங்கேருகத்துமலர்போல்விளங்கு வதனுமகிழ்ந்தபரிவா,லெங்கேயெனுசை மகனென்றுரைக்கி லெதிரேதுசொல்வன்மகனே.

இ-ள். தாமரை மலர்போலு முகத்தையுடைய மகனே! தருமமார்க்கப்படியே செங்கோல் செலுத்துகின்ற சாமர்த்தியனுகியும் எப்படிப்பட்டவர்களுக்கும் அறிவாற் சிறந்தவனுகியும் வெவ்விய கோபத்தைக்கொண்ட யானையையுடைய வெற்றியான்மிக்க நமதரசன் நாமிருவரையும் (தான் வாங்கின பொருளைக்கொடுத்து) மீட்டுக்கொள்ள வரும்போது தான் மீட்கவந்த சந்தோஷத்தினுலே என்னுடைய பிரியமுள்ள புத்திர னெங்கேயென் றென்னைக்கேட்டால் அப்போது யான் மறுமொழி யாதுசொல்லக் கடவேன்? எ-று. (உச)

நீராளவாவிசெறிநாடனைத்துமிறைமாதவற்குதவினும்
பாராளுநீர்மைதொடர்பற்றதன்றுபடியாளுமெந்தைமுடியில்
காராளரேர்கள்கடவோசையோய்வில்கன்னேசிநாடதனைமே
லாராளவல்லரவமேவனத்திலரவாலிறந்தமகனே.

இ-ள். ஐயோ வீணுக இந்தக்காட்டிலே ஒரு பாம்பினுலே யிறந்துபோன குமாரா! நீர் நிரம்பக் குளங்கள் நெருங்கின கோசலநாடு முழுதும் நிறையான பெரிய தவமுனிவனுக்குக் கொடுத்துவிட்டாலும், உலகத்தை ஆளுவதான சம்பத்துத்தன்மை உனக்கில்லாமற் போனதல்ல. உன்பிதாவைப்போலவே ஒரு நாட்டையாளுகிற என்பிதா காலமுடிவுபெற்றுல், வேளாளர்கள் எவர்களை வோட்டுகிற ஓசை ஓயாதிருந்துள்ள கன்னேசிநாட்டைப் பின்பு நீ யல்லது இனியார் ஆள்வார்கள்? எ-று. (உரு)

நல்லோர்வகுத்தமுறையாமறங்களுலெட்டிலொன்றுகுறையே
யில்லோரையற்பமிகழோமிறுக்குமிறையன்றியேறவுநவேஞ் [வே
சொல்லோமறுத்துமுரையோமுரைத்ததுறவோர்கள்புத்திகட
மெல்லோர்தமக்குமினிதேவிளைப்பமேதாகவந்ததிதுவே.

இ-ள். நன்னூலுணர்ந்த பெரியோர்கள் சொன்ன தருமங்கள் முப்பத்திரண்டிலே ஒரு தருமமாயினுங் குறையாது செய்தோம். எளியவர்களைக் கொஞ்சமேனு மிகழ்ச்சி செய்திலோம். (நாங்க ளரசராகையாள்) கொடுத்துத் தீர்ப்பதான பகுதிப்பொருளான ஆறிலொரு பங்கையல்லது அதிகமாக விரும்பினே மல்லோம். பொய்சொல்லி யறியோம். கேட்டவர்களுக்கு இல்லையென்று மறுத்துச் சொல்லிலோம். துறவறத்தார்கள் சொன்னபுத்தியைக் கடந்து சென்றிலோம். யாவருக்கும் நன்மையையே செய்து வந்தோம். இப்படிக்கிருக்கச் செய்தே எந்தக் காரணத்தினுலே யெங்கள் பிள்ளை இப்படிப் பாம்புகடித்துச் சாகலாயின? எ-று. (உகு)

மறைநீதியுற்றபுறநாடழித்துவருசேனையாள்வதறியே
மறைநீதிமுற்றுமுணராவமைச்சையணிவாயில்வைத்துமறியேங்

குறையையிழைத் துவினையேவிளைத்தகுடிவைத்திருந்துமறியே
மிறையேதவத்தின்விளைவேயெமக்குமிதுவோவிதித்தவிதியே.

இ-ள். வேதநீதிப்படியே நடக்கிற அந்நியர் நாட்டைக்கெடுத்து அங்கிருந்து வந்து கூடுவனவான சேனைகளை ஆளுஞ்செய்கையைத் தெரிந்தோமல்லோம். பெரியோர்கள் சொன்ன நீதிமுழுதுந்தெரியாத மந்திரியை யெங்களழகிதான அரண்மனைவாயிலிலே வைத்தாளவுந் தெரிந்திலோம். குறைவானவைகளையே செய்து பாவச்செய்கைகளையே மேன்மேலும் வளர்க்கிற குடிகளை எங்கள் நாட்டிலே குடிவைக்கவுந் தெரிந்திலோம். (இப்படிக்கிருக்கச்செய்ததே) எங்களுக்கும் ஓ ஓ தெய்வமே! எங்கள் தவப்பயனே! நீங்கள் அமைத்த அமைப்பு இப்படி பாம்புகடித்திறப்பதோ சொல்வீர்கள். எ-று. (உஎ)

கனமுந்தருக்கள்குலமுந்தரித்தகரமும்பெருத்தவுரமுந்
தினமுஞ்சிறக்குமுகமுந்தரித்தசிகையுங்கிடக்குமுறைகண்
டினமுந்தரித்தவுயிரானபாவியிறவாமலென்றன்மகனே
மனமுந்தரிப்பதிலைநொந்துபெற்றவயிறுந்தரிப்பதிலையே.

இ-ள். (கைம்மாறு வேண்டாது கொடுக்கிற) மேகச் செய்கையையும்; கற்பகமுதலான தெய்வ விருக்ஷங்களினுடைய செய்கையையும் கொண்டகையும், பெரிதான சாமர்த்தியமும், எப்போதும் சிறந்துள்ள முகமும், தலையிலேகொண்ட குடுமியும், மண்மேற்கிடக்கிற வகைகளைக் கண்டும் இன்னமும் என்னுயிரான பாவி சாகாமலிருக்கிறதாயிற்று. என்மகனே! நீ யிறந்ததாலான துன்பத்தை இனியென்மனமும் தாங்குகிறதா யில்லை. வருந்திப்பெற்ற என் வயிறுந் தாங்குகிறதாயில்லை. எ-று. (உஅ)

பரவாதிகட்குமிகவேவிளைத்தபடிபோலுளத்திலறமே
விரவாததுட்டமுனிகௌசிகற்குவினையேயிழைத்தகுறைபோற்
காவேபிடித்துவறியேனளித்தகளிறுவிசெற்றகடுவா
யரவேயுனக்குமுளதோபகைக்கவளியேனிழைத்தவினையே.

இ-ள். ஒரு சமயவாதிகள் மற்றொரு சமயவாதிகளுக்கு மிகவும் இடர் செய்கிறதுபோல், எங்கள் விஷயமாகத் தமது சிந்தையிலே தருமகுணங்களையெவ்வளவுங்கொள்ளாத கொடுஞ் செய்கையையுடைய கௌசிகமுனிவருக்கு நாங்கள் பண்ணின குறைவைப்போல, எளியவளான நான்பெற்ற இளையானைபோன்ற புத்திரனுயிரை மறைந்திருந்து வந்து போக்கின விஷவாயையுடைய பாம்பே! இப்படி விரோதஞ்செய்வதான உனக்கும் பிறரால் ஐயோவென்றிரங்கத்தக்க நான்செய்த குறைவுண்டோ? எ-று. (உகூ)

என்னுயகன்றன்மணிமார்பிலேறிவிளையாடுகின்றவெழிலோய்
முன்னுப்பிளிந்தகனன்மூழ்கவெம்மின்முதலேநடந்தமபலாய்
செந்நாய்திரண்டுசெறிகானிருந்துதெளியாதிரங்குமெனைநீ
யன்னுப்வருந்தலையெனுததுன்றனறிவுக்கடாதுமகனே.

இ-ள். எனது நாயகனுடைய அழகிதான மார்பிலேறி விளையாடத் தக்க செல்வக்குமாரா? முன்னேமூண்ட நெருப்பிலே எங்களுக்கு முன்னே போய் விழப்போன குழந்தாய்! செந்நாய்கள்கூடி நெருங்கின இந்தக் காட்டிலேயிருந்து மனந்தெரியாம லழுகின்ற என்னைப்பார்த்து தாயே வருந்தியழாதேயென்று சொல்லாமற் கிடக்கிறது உன்புத்திக்குத் தக்கதல்லவே ஓ புத்திரா. எ-று. (௯0)

மறவாளெயிற் றுமணிமாசுணத் நின்வலியாலிறந் துளவெனோ
டிறவா திருக்குமதிபாவிதன்னொடுறவேதெனக்கருதியோ
திறவாய்சிவந்தகனிவாயுரைத்தல்செய்கிலாய்முகத்துவிழியாய்
பிறவா தஙித்தனடியேவழுத்துபெருமானளித்தமகனே.

இ-ள். பிறத்தலில்லாத கடவுள் திருவடிகளையே துதிக்கின்ற பெருமையையுடைய அரசன் பெற்றகுமார! கோபத்தையுடைய வாள்போலும் பற்களைக் கொண்டதாய் ரத்நத்தையுந் தலையிலே கொள்வதான ஒரு பாம்பினது விஷபலத்தினாலே இறந்துகிடக்கிற என்னுடனே கூடச் சாவாதிருக்கிற அதிக பாவியானவளுடனே உறவுகொள்ளுகிறதினாலே என்ன பிரயோசனமென்று நினைத்தோ உனது சிவந்த கனிபோன்ற வாயாலொருசொற் சொல்லாதிருக்கிறாய்; என்முகத்திலும் விழியாதிருக்கிறாய். எ-று. (௯௧)

வடியேறுவெற்றிநெடுவேன்மலர்க்கைமகனோடிறந்துமடியாக்
கொடியேன்முகத்தில்விழியார்முனிக்குவளநாடளித்தகொடை
ரிடியேறடர்த்தமரமாகிமண்ணினிடையேயுழைத்தலழகோ [யா
வடியேனையொக்கமுடியா திருத்தலநியாயமிக்கயமனே.

இ-ள். கூர்மையேறின வெற்றிகொண்ட நீண்ட வேலைப்பிடிக்கிற மலர்போலுங் கையையுடைய மகனுடனேகூடச் செத்துப்போகாதிருக்கிற பாவியான என்முகத்திலே இனி விழிக்கமாட்டார். (அவரியாரென்றால்,) ஒரு முனிவருக்குத் தனது வளநாடுமுழுதுங் கொடுத்த பிரபுவானவர். இடியேற்றினாலே பட்டுப்போன மரம்போலாகி மண்ணிலே கிடந்து நான் வருந்துதல் ஓ யமனே! உனக்கு அழகாயிருக்கின்றதோ? என்னையுங்கூட நீ கொல்லாதிருக்கிறது மிகவும் அநியாயம். எ-று. (௯௨)

எண்சீர்க்கழில் நெடிலடி ஆசிரிய விருத்தம்.

எனமறுகியிவனுடனுமிறந்தேமாகி
　இவனையெடுத்தெரித்தடக்கவுரியாரில்லை
மனமுருகாநம்மைவிலைகொண்டோன்சால
　வன்கண்ணன்மனைவியவன்றனின்மாபாவி
சினமுடையார்விடியுமுதற்செல்லேனாகிற்
　செறுவரிவன்றனைக்கருக்கிச்செல்வனென்று
தனதுதிருமகனையெடுத்தணிதோள்வைத்துத்
　தள்ளாடிமதிதயனூர்தனையைமீண்டாள்.

இ-ள். என்று பிரலாபித்து இந்த மகனுடனேகூட நானும் செத்தேனே யானால் இந்தப்பிள்ளையை யெடுத்துக்கொண்டுபோய் தகனஞ்செய்து அடக்கஞ் செய்யத்தக்கவர்க ளொருவருமில்லை. நம்மை விலைக்கு வாங்கினவன் இது கண்டு மனமிரங்கான்; மிகவும் பொல்லாதவன். அவன் பெண்டாட்டியோ அவனிலும் பெரும்பாவி. அவ்விருவரும் மிகவும் கோபமுள்ளவர்கள். விடிவதற்கு முன்னே நான் அங்குப்போகாதிருந்தால் அதிக தண்டனை செய்வார்கள். ஆகையால் இந்தப் பிள்ளையை விரைவிலே போய்த் தகனஞ்செய்வித்துப் பின்பு போகக்கடவேனென்று தனது புத்திரனையெடுத்து அழகான தோளின் மேலே சாய்த்துக்கொண்டு (திருக்குமாரனைத் தூக்கமாட்டாமல் தடுமாறித்) தளர்ந்தவளாகச் சந்திரதயராஜனுடைய குமாரியான சந்திரவதியானவள் மயான நோக்கிச் சென்றாள். எ-று. (௩௩)

காடுமேடுஞ்செறிந்தசெந்நாய்முன்னே
  கௌவியிழுத்திடப்பறந்துகழுகுமோதப்
போடுபோடெனப்பலபேய்தொடரக்கொண்டு
  போகேனியெனக்கொடியபூதஞ்சூழ
மாடுதோறும்பறிக்கநரிகடாவ
  வார்குழலுஞ்சோர்துகிலும்வனந்தொட்டீர்க்க
வீடுபாடித்தனையும்பட்டுநீண்முள்
  ளிடுகாடுநேர்ந்திநெடுஞ்சுடுகாடுற்றாள்.

இ-ள். காட்டிலும் மேட்டிலும் திரண்டு நிற்கின்ற செந்நாய்களுக்கு முன்னே வாயாற்குத்தி யிழுப்பதற்காகப் பறந்துவந்து கழுகுகள் மோதவும், நீழே போட்டுவிடு, போட்டுவிடென்று பலவிதமானபசாசுகள் தொடரவும் நீகொண்டு போகாதேயென்று கொடுமையான பூதங்கள் சூழவும், பக்கங்களெல்லாம் வந்து பிள்ளையைப் பிடுங்கிக்கொண்டு போகுதற்கு நரிகள் தாண்டி விழவும், நீண்ட கூந்தலையும், அவிழ்ந்து தொங்குகிற வஸ்திரத்தையும் காட்டிலுள்ள முள்ளுகளு மாறுகளும் சிக்கியிழுக்கவும் இப்படித் தடைபடுகிற இவ்வளவும்பட்டு நீண்டமுட்கள் தைப்பதான காடுமுழுதுங் கடந்து நெடிதான சுடுகாட்டைப் போய்ச் சேர்ந்தார்கள். எ-று. (௩௪)

பிணங்கள்சுடுங்கடும்புலைபாரவத்தாலும்
  பிளந்துதலைவெடித்திடுபேரமலையாலு
நிணங்கருகிச்சுறுநாறுமுடையினாலு
  நெடுங்கனலின்கொழுந்தெழுந்தநிவப்பினாலுங்
கணங்கண்மிகக்களித்தாடுந்துழனியாலுங்
  கனற்பொரியின்மலிவாலும்புகையினாலுஞ்
சுணங்குபலபிணங்குபெருங்குரைப்பினாலுந்
  தோகையறிந்துணர்ந்துகொடுஞ்சுடலைசார்ந்தாள்.

இ-ள். அங்கே பிணங்களைச்சுடுகிற கடுமையான பறையர்களுடைய சத்தத்தினாலும், அந்தப் பிணங்களின் தலைகள் பிளந்து வெடிக்கிற பெரியதான சத்தத்தினாலும், பிணங்களினுடைய கொழுப்புகள் கருகிச் சுறுசுறவென்று நாறுகிற புலால்நாற்றத்தினாலும், நீண்டநெருப்பின் கொழுந்து எழுகிற உயர்ச்சியினாலும், பூதமுதலான கூட்டங்கள் மிகவுஞ் சந்தோஷித்துக் கூத்தாடுகிற சத்தத்தினாலும், நெருப்புப் பொறிகளின் மிகுதியினாலும், புகையினாலும், பலநாய்கள் ஒன்றோடொன்று விரோதித்துக்கொள்ளுகிற பெரிய சத்தத்தினாலும் சந்திரவதி சுடுகாடென்று தெரிந்து நிதானித்து அந்தக் கொடிதான சுடுகாட்டைப்போய் நெருங்கினாள். எ-று. (௩௫)

கண்டனளீதீமமெனக்கருத்திலுன்னிக்
கடவுளர்தங்காவலிற்றன்மகனைவைத்துப்
பண்டுவெந்தகரிந்தகுறைக்கட்டையெல்லாம்
பலதிசையும்விரைந்தோடிப்பார்த்தெடுத்துக்
கொண்டுவந்தபிணங்கள்சுடுஞ்சுடலைகண்ணிக்
கொள்ளியெடுத்தோடியனல்கூட்டிமூட்டி
மண்டுதழற்கட்டையின்மேன்மகனைவைத்தாள்
வளர்ந்தெரியுங்கனல்விளக்கமன்னன்கண்டான்.

இ-ள். அப்படி நெருங்கப்போய்க்கண்டாள். இதுதான் சுடுகாடென்று மனதிலேயெண்ணி அங்கே தெய்வங்களினுடைய காவலுக்குள்ளாகத் தன் பிள்ளையை வைத்துவிட்டு, முன்னேவெந்து தீய்ந்து கிடக்கிற குறைக்கொள்ளிக் கட்டைகளையெல்லாம் பல திக்குகளிலும் அதிசீக்கிரத்திலோடியோடிப் பார்த்தெடுத்துக் கொண்டுவந்து பின்பு பிணங்களைச் சுடுகிற சுடலையினிடத்திலே போய் அந்தச் சுடலையில் ஒரு கொள்ளிக்கட்டையை யெடுத்துக்கொண் டோடி வந்து நெருப்பைச் சேர்த்து மூளப்பண்ணி அப்படிப் பற்றியெரிவதான நெருப்புக்கட்டையின்மேலே மகனை வைத்தாள். அப்போது மூண்டெரிகிற நெருப்பு வெளிச்சத்தினாலே அதை அரிச்சந்திரனாகிய அரசன் பார்த்தான். எ-று. (௩௬)

அரவுகடித்தரசிளங்கோவிறந்தானென்ப
தறியாமல்வெகுண்டிறைவனாரேயிந்த
விரவுதனிற்பிணஞ்சுடுவாரறிவோமென்னா
வெழுந்திருந்துவிரைந்தோடியேடிமூடி
தரவுரியபொருளெனக்குத்தாராதேநீ
தனியேயிப்பனியிருளிற்சவங்கொணர்ந்து
கரவினழற்சுடுவதுனக்கடைவோவென்னாக்
கால்வீசிக்கான்முளையையெடுத்தெறிந்தான்.

இ-ள். பாம்புகடித்துத் தனதரசுக்குரிய இளங்குமாரன் மடிந்து போனானென்பதைத் தெரியாமல் அரசனவன் கோபங்கொண்டு இந்த ராத்திரியிலே

வந்து பிணஞ்சுடுகிறவர்கள் யார்? அவர்களை இன்னாரென்று தெரிவோமென்று எழுந்திருந்து அதிசீக்கிரமாக விரைந்து ஓடிவந்து என்னடி மூடத்தன்மையான வளே! நீ தருதற்குரிய பொருளை எனக்கு முன்னே கொடுக்காமல் நீ ஒருத்தியாகவந்து இந்தப் பனிக் கம்முதலையுடைய இராத்திரியிலே ஒரு பிணத்தைக் கொண்டு வைத்து எங்களுக்குத் தெரியாமல் திருட்டுத்தனமாக நெருப்பை மூட்டிச் சுடுகிறது உனக்குத் தக்கதோ வென்று தன் பிள்ளையைக் காலாலேதூக்கித் தூரத்தே யெறிந்தான். எ-று. (ரு.எ)

எறிந்திடலுமுயிரேங்கவேங்கிவேனி
விடிவிழுந்தாற்படிமிசையேயடிசாய்ந்தாடி
முறிந்துவிழுமரம்போற்சென்றடிமேல்வீழ்ந்து
மொழிகுழறிவிழியருவிசொரியவல்லி
யறிந்துமிலனிவ்வூரில்வழங்குநீதி
யருவினையேனருமிலியறவும்பாவி
மறிந்தமகன்றனைச்சுடநான்வந்தேனையா
வறியேற்குப்பொருளுளவோவழங்கவென்றாள்.

இ-ள். அப்படி எறிந்தவுடனே சந்திரவதியானவள் உயிர் சோர்வதாக அழுது, கோடையிடிவிழுந்து அதனாலே பூமியிலே அடிவேரற்று அசைதலாகி முறிந்துவிழுகிற மரத்தைப்போற்போய் அவன் கால்மேல் விழுந்து வார்த்தைகள் குழறுதலாய் கண்களிலே அருவிபோல் நீரொழுக ஐயா! இந்த வூரிலே வழங்குவதான நியாயக் கிரமத்தை எவ்வளவும் நான் தெரிந்தேனல்லேன். தீராத பாவஞ்செய்துள்ள நானே ஆருமற்றவள். மிகவும்பாவி, இறந்துபோன என்பிள்ளையைச் சுடுதற்கு நானொருத்தியாகவே வந்தேன். ஆதலால், ஐயனே! எளியவளான உமக்குக்கொடுக்க என்னிடத்திலே எப்படிப் பொருளுண்டாயிருக்கும் என்று சொன்னாள். எ-று. (ரு.அ)

பொருளுடையேன்றமருடையேனானலிந்தப்
புத்திரனைத்தோண்மீதுவைத்துப்போந்தில்
விருளிடையிற்சுடலையில்வந்தெய்துவேனோ
வெறிந்தகுறைக்கட்டையினிலேற்றுவேனோ
தெருளுடையாயறமுடையாய்வினையேனீன்ற
சிறுவனையான்சுடக்கருணைசெய்யாய்தேயா
வருளுடையாயாதாரமற்றேற்குன்ற
னடியிணையேதஞ்சமெனவலறிவீழ்ந்தாள்.

இ-ள். பொருளுள்ளவளாய் உறவினரையு முடையவளானால் நான் இத்தப்பிள்ளையை என்தோளின்மேலே சாத்தித் தூக்கிக்கொண்டு வந்து இந்த இருட்டிலே சுடுகாடு வந்து சேருவேனோ? இன்னமும் எரிந்தவிந்து கிடக்கிற குறைக்கொள்ளிக்கட்டைகளை அடுக்கி அதன்மேல் பிள்ளையை வைப்பேனோ?

இதெல்லாந் தெறிந்துகொண்டவரே! தருமந் தெரிந்தவரே! பாவியான நான் பெற்றபிள்ளையைத் தகனஞ்செய்வதாக நீர் கிருபை செய்யவேணும் குறை யாத இரக்கமுள்ளவரே! யாதொரு ஆதாரமுமில்லாத எனக்கு உம்முடைய பாதங்களிரண்டுமே ஆதாரமென்றுசொல்லி அரசன் கால்மேலே அலறிக் கொண்டு போய்விழுந்தாள். எ-று. (௩௯)

பொன்னனையாய்விடுவிடுயான் புலையனென்னிற்
  புலையனுமல்லேன் புலையற்கடிமைகண்டா
யென்னடிநீதீண்டுவதுதகாதுநீதா
  னிப்பொருட்கியானுரியனலேனென்னையாள்வோன்
சொன்னபணங்காலுண்டுகொள்ளியாடைத்
  துண்டமுமொன்றுண்டுதந்துசுடுதியன்பா
லன்னவன்றான்படியாகவெனக்குத்தந்த
  வாய்க்கரிசியானளிப்பேனறியென்றான.

இ-ள். (அப்படி விழுந்து காலைப் பிடிக்கிறதைக்கண்டு) ஓ லட்சுமிக் கொப்பானவளே! என்காலைவிட்டுவிடு; நான் சுடுகாட்டுக்குச் சொந்தமான பறை யன் என்று நீ கொள்வாயானல், அந்த எஜமானனான பறையன் நானல்லேன்; நானே அந்தப்பறையனுக் கடிமையானவன்; நீ என்காலைத் தொடுகிற துனக் குத் தகாது. இந்த பொருளுக்கு நான் சொந்தக்காரனல்லன்; என்னை அடிமை யாகக் கொண்டவன் சொல்லி யிருக்கிற காற்பணமுண்டு; கொள்ளித்துண்டு வஸ்திரமொன்றுண்டு; ஆக இவ்விரண்டையு நீ கொடுத்துவிட்டுப் பிரியத் துடனே சுட்டுக்கொள். அந்த எஜமானனுகிய பறையன் எனக்கிப்படிச் செல வாகக் கொடுத்த வாய்க்கரிசியை (வேணுமானு லுனக்குப் பிரியத்துடனே) நான் கொடுக்கிறேன். (இந்தப்படிதான் இவ்வூர்ச் சுடுகாட்டிலே நடக்கிற வழக் கம்) தெரிந்துகொள்ளென் றரசன்சொன்னான். எ-று. (௪0)

துஞ்சியமைந்தனையெடுத்துச்சுமந்துபோந்து
  சுடுவாரற்றிடுகாட்டிற்றோண்மேலேற்றிப்
பஞ்சிபடும்பாடுபடும்பாவியேற்குப்
  பணமேதுகொள்ளிமுறிப்பாதியேது
நெஞ்சுதளர்ந்தருவினையேன்வருந்தக்கண்டு
  நீயிரங்காயெனவிரந்துநிற்குங்காலை
வஞ்சிதிருமணிமிடற்றில்வயங்காநின்ற
  மங்கலநாண்கண்டிறைவன்மறித்துஞ்சொல்வான்.

இ-ள். இறந்துபோன புத்திரனைத் தூக்கிச் சுமந்துகொண்டு வந்து சுடுகிற வர்களில்லாமல் சுடுகாடுவரையிலும் தோள்மேலே தாங்கி பஞ்சுபடுகிற பாடெல் லாம்பட்டு இன்னமும் அப்படியே படுவதான பாவியான என்னிடத்தில் எப்ப டிப் பணமுண்டாகும்? கொள்ளி வஸ்திரத்துண்டு எப்படிக் கிடைப்பதாகும்? மனந்தளர்ந்து தீர்வதில்லாத பாவியான நான் வருந்தப் படுகிறதைக்கண்டு

நீரே தயவுசெய்ய வேணுமென்று நல்ல வார்த்தை சொல்லிக்கொண்டு நிற்கிற போது, அந்தச் சந்திரவதியினுடைய திருக்கழுத்திலே விளங்குகின்ற திருமங்கிலிய சூஸ்திரத்தைக் கண்டு அரசன் பின்னுஞ் சொல்லுகிறான் எ-று. (சுக)

நல்லநல்லையறச்சமர்த்திநீயேகண்டே
னன்னுதலாரனைவரினுமிந்த்ரசாலம்
வல்லைவல்லைவிறகுகளுங்களவேசெம்பொன்
மங்கலநாணுன்கழுத்திலிருக்கவேது
மில்லையெனச்சொல்லுவதுசற்றுமேலா
திதனையெனக்கீவாயென்றியம்பவேடர்
பல்லமுயர்விலைவாயிற்பட்டமான்போற்
பதைபதைத்துப்பைந்தொடியாள்பதறிவீழ்ந்தாள்.

இ-ள். நீ நல்லவளே: நல்லவளே: மிகவுஞ் சமர்த்துள்ளவள் நீயே! நான் பார்த்தேன்! நல்ல நெற்றியையுடைய பெண்கள் எல்லாரிலும் இந்திரசால வித்தையில் வல்லவளா யிருக்கிறாயென்று (புகழ்வதுபோ லிகழ்ந்து) நீ அடுக்கின விறகுகள்கூட திருடியே கொண்டுவந்திருக்கிறாய். சிவந்த பொன்னாற்செய்த திருமங்கிலியம் கயிற்றுனே உன்கழுத்திலிருக்கச்செய்தே ஒன்றுமில்லையென்று சொல்லுகிறது சிறிதும் பொருந்தாது. இந்தத்தாலியை எனக்குக் கொடுக்க வேண்டிய பொருளாகக் கொடுவென்று சொல்லவே, வேடர்களுடைய அம்புகள் மிக்க குறிச்சிவாசலிலே அகப்பட்ட மானைப்போல் துடிதுடித்துச் சந்திரவதியானவள் பதறி விழுந்தாள். எ-று. (சுஉ)

கலி விருத்தம்.

வாடினடளர்ந்தாண்மலர்மாமுகங்
கோடினள்குலைந்தாளலைந்தாள்கொடுங்
கேடினள்வந்ததென்றுகிலேசமெய்
மூடினணெடுமூச்செறிந்தாளரோ.

இ-ள். உடம்பெல்லாம் வாடினாள்; தளர்ச்சியாயினாள்; தாமரை மலர்போலும் பெருமைபொருந்திய தனது முகங் கோணுதலானாள்; பயந்தாள்; வருந்தினாள்; கொடிதான கெடுதலிப்போது வந்து சேர்ந்ததென்று துன்பத்தையே உடம்பு நிரம்ப மூடுதலானாள்; பெருமூச்சும் விட்டாள். எ-று. (சங)

அலைவிலாவரிச்சந்திரற்கல்லது
தொலைவில்யாவர்க்குந்தோற்றருமங்கலம்
புலையன்காணவும்போதுவதோவெனா
வுலையின்மீதுமெழுகொத்துருகினாள்.

இ-ள். எக்காலத்தும் வருந்துதல் கொள்ளாத அரிச்சந்திரமகாராஜனுக்கே யல்லாமல் வருந்துதலையுடைய எல்லாருக்கும் காணப்படாத எனது திருமங்கி

லியமானது ஒரு பறையன் காணவு மாயிற்றேயென்று சொல்ல னுலையின் மேலிட்ட மெழுகையொப்பா யுருகினாள். எ-று. (சச)

இருளருங்குணத்தெந்தைக்குநல்வர
மருளுங்காலத்தரவணிவேணியான்
றிருவுளஞ்செய்ததிவ்வியமென்மொழிப்
பொருளுமித்தலப்புக்கபின்பொய்த்ததோ.

இ-ள். அஞ்ஞான நீங்கின குணத்தையுடைய எனது தந்தைக்கு நல்ல வரத்தைக் கொடுக்கிற காலத்திலே பாம்பையணிந்த சடையையுடைய கடவுள் திருவுளங்கொண்டருளின திவ்வியமான ரகசிய வார்த்தையிலுள்ள அர்த்தமும் இந்த ஊருக்கு நான் வந்தபின்பு பொய்யாய்ப் போயிற்றோ? எ-று. (சரு)

பனிமதிச்சடைப்பாவைபங்காளனு
றினியவாசகமின்றுடுடங்தீர்ந்ததாற்
புனிதனரினும்பூவளந்தோனினு
முனிவனேமுதியோனெனவேங்கினள்.

இ-ள். குளிர்ந்த சந்திரனைச் சடையிலேகொண்ட பார்வதி சமேதரான கடவுள்சொன்ன நல்ல வார்த்தையானது இன்றுடே முடிதலாயிற்று. ஆகை யால் அந்த பரிசுத்தரான சிவனிலும் உலகமெல்லா மளந்த விஷ்ணுவினும் விசுவாமித்திர முனிவரோ சிறந்தவரானரென் றழுதாள். எ-று. (சசு)

அற்புக்காழியனரிச்சந்திரன்
விற்பப்போயினமேன்மைக்குலத்தொடும்
பொற்புப்போம்பொறைபோமிறைபோமென்றன்
கற்புப்போவதென்னென்றுகலங்கினள்.

இ-ள். இரக்கத்துக்குக் கடல் போன்றவராகிய அரிச்சந்திர மகாராசன் விற்க, அதனாலேபோன மேன்மையுள்ள குலத்துடனே என் அழகுதான் போகும்; எனது பொறுமையும் போகும்; எனதுயர்வும் போகும்; இவையெல் லாம் போனாலும் என்னுடைய பதிவிரதாசிலை போவதற்குக் காரணமென்ன வென்று மனங்கலங்கினாள். எ-று. (சஎ)

அனைய நாலையரிச்சந்திரனுந்தன்
மனைவியாமிவளென்றுமனங்கொளாத்
தனையன்மாண்டதுதன்னையுட்கொண்டுள
நினைவைநீக்கிமறப்பையுநீக்கினன்.

இ-ள். அந்தவேளையில் அரிச்சந்திரமகாராசனும் இவள் நமது மனைவியே யாமென்று மனத்திலேகொண்டு தன்புத்திர னிறந்து போனதையு மனத்துள் ளேகொண்டு தனதுள்ளத்துள்ளே நினைவுபோய்ப் பின்பு அந்த நினைவு தப்பி னதையுந் தேற்றிக்கொண்டான். எ-று. (சஅ)

கள்ளவேகத்தரவுகடிக்கநம
வள்ளலோவிறந்தானென்றுமன்னவ
னுள்ளுளேநொந்துயிர்த்துயிர்த்துப்புறம்
விள்ளலானுரைவிம்மிமயங்கினன்.

இ-ள். திருட்டுத்தனத்தால் வந்த வேகத்தையுடைய பாம்பு கடிக்க நமது புத்திரனான பிரபுவோ செத்தானென்று தெரிந்து அரசனானவன் மனம் வருந்திப் பெருமூச்சு விட்டு விட்டு வெளியே ஒரு வார்த்தையுஞ் சொல்லாதவனாகித் துக்கித்து மயக்கத்தைக் கொண்டான். எ-று. (சுக)

அன்னையின்றியருங்கானிலெய்திய
வுன்னையோடியரவங்கடித்தலின்
மின்னையும்முனையும்விற்றவெவ்வினை
யென்னையெவ்வணநொந்தனையேந்தலே.

இ-ள். ஓ புத்திரா! உனதுதாய் உன் கூடவராமல் அரிதான காட்டுக்குள்ளேபோன உன்னை ஓடிவந்து பாம்பு கடித்ததனாலே அப்போது உன்தாயையும் உன்னையும் ஒருவருக்கு விலையாகவிற்ற என்னை எவ்விதமாக எண்ணி நொந்து கொண்டாய். எ-று. (ரு0)

நந்தநாடுநலமுமிழந்துநீ
யெந்தமோடுவந்திவ்வணம்பட்டனை
மைந்தனேயென்றனாற்பெற்றவாழ்வுனக்
கிந்தவாழ்வளவோவென்றிரங்கினன்.

இ-ள். ஓ மகனே! நம்முடைய நாட்டையும் நம்முடைய சுகத்தையும் விட்டு நீயும் எங்களுடனே கூடவந்து இவ்விதமானாய்; என்னாலே நீ பெற்ற சுகம் உனக்கு இந்தச் சுகத்தளவு தானோவென்றழுதான். எ-று. (ருக)

ஒன்றிலாதவுயிரினையோம்பியே
பொன்றிலாதுபுலையனுக்காட்பட்டான்
வென்றிவேந்தினிமீட்கத்தருவனோ
வென்றிறந்தனையோவென்றியம்பினன்.

இ-ள். நிலைபேறில்லாத உயிரை வளர்த்துக்கொண்டு சாவமாட்டாமல் ஒரு பறையனுக் கடிமையானான்; அப்படி அடிமையான ஜயத்தையுடைய அரசன் இனி நம்மை மீட்டுக்கொள்ள மாட்டுவானோ மாட்டானென்றெண்ணித் தானோ நீ இறந்துபோனாயென்று சொன்னான். எ-று. (ருஉ)

விற்றநாளிலென்மேனிதழீஇயகிற்
பற்றியந்தணனீர்த்ததும்பார்த்திருந்
திற்றைநாண்மட்டிரங்காதவென்வயி
னுற்றபாவமொழித்தனையோவென்றான்.

இ-ள். நான் விலைக்கு விற்றபோது என்னுடம்பை அணைத்துக்கொண் டிருந்த வுன்னைப்பற்றி அந்தப் பிராமண னிழுத்துக்கொண்டு போனதையும் பார்த்துக்கொண்டிருந்தும், இன்றையத்தினம் வரையிலும் உன்னிடத்தி லிரக்கமில்லாதிருந்த என்னிடத்திலே நீ பிறந்த பாவத்தை இன்று தீர்த்துக் கொண்டாயோ வென்றான். எ-று. (ருங)

விலைபட்டாய்பட்டும்வெவ்வாவாய்ப்பட்டுத்
தொலைபட்டாயன்னைதோளிற்கொணர்ந்திடத்
தலைபட்டாய்தமியேனெறியத்தகர்ந்
தலைபட்டாயிதுவோவிதியையனே.

இ-ள். நீயோ விலையானாய்; அப்படி விலையாகியும் ஒரு வெவ்விதான பாம்பின் வாய்க்குள்ளா யிறந்தாய்; பின்பு உனது தாயானவள் சார்த்திக் கொண்டுவா அவள் தோளுக்குள்ளானாய்; இப்போது நான் தூக்கியெறிய அதனாலே சிதைதலாய் அலைச்சற்பட்டாய். என் அப்பனே! உனக்கிப்படியா விதியிருந்தது? எ-று. (ருச)

காதலாலுனைக்காணுததாயையு
மீதெலாம்விளைத்தெற்றியவென்னையு
மீதெலாமரவின்விடமேயநா
ளேதெலாமுரைத்தாயுரையேந்தலே.

இ-ள். அன்பினாலே உன்னைக் கூடவேவந்து கண்டுகொள்ளாத உன் மாதாவையும், இதெல்லாஞ்செய்து இப்போ தெடுத்தெறிந்த என்னையும் உன்னுடம்பெல்லாம் பாம்பின்விட மேறுகிறபோது புத்திரா! (நீ அப்போது) என்னென்ன சொற்களெல்லாஞ் சொன்னாய்? அவற்றை இப்போது சொல்வாயாக. எ-று. (ருரு)

பிறப்புணர்ந்தவன்றேபிறிதன்றியு
மிறப்புணர்ந்தனமென்னினுமெம்முனோர்
சிறப்புஞ்செல்வமுஞ்சேர்தலிற்றீர்ந்தவா
றறப்பெரும்பிழையென்றென்றழுங்கினான்.

இ-ள். உன் சன்ம மிப்படிப்பட்டதென்று தெரிந்த அப்போதே வேறுபாடில்லாமல் உனது சாவுந்தெரிந்தோமானாலும் எங்களுக்கு முன்னோர்கள் பெற்றிருந்த சிறப்புஞ் செல்வமுஞ் சேர்ந்திருப்பதினின்றும் நீ நீங்கினபடி மிகவும் பெரிதான பாவம் பாவமென்று வருந்தினான். எ-று. (ருசு)

வாளின்மிக்கவயமன்னர்வந்துநின்
றாளில்வீழ்ந்தழலின்றிநின்றாய்திருந்த்
தோளிலேற்றிச்சுடலையிலேவர
வேளின்மிக்கவவெவ்வினையோவென்றான்.

இ-ள். வாள்வலியாலுயர்ந்த வெற்றிகொண்ட அரசர்கள் வந்து உன் காலிலேவிழுந் தழுகிறதில்லாமல் உன் தாயானவள் தன் திருத்தோளின் மேலேற்றிக்கொண்டு சுடுகாட்டுக்குவர மன்மதனிலும் அழகாற் சிறந்த குமாரா! எந்த வெவ்விதான பாவஞ் செய்தாயோவென் றழுதான். எ-று. (ருஎ)

இன்னவாறுரைத்தேங்கிடவேந்திழை
தன்னகத்திலுணர்ச்சிதழைத்திட
மன்னனேயிவனென்றுமதித்தவள்
பொன்னடித்துணைபூண்டழுதோதுவாள்.

இ-ள். இந்தப்படி சொல்லி அரசனழும்போது சந்திரவதியானவள் தன் மனத்திலே தெளிவுதோன்ற நமதாசனே இவனென்று துணிந்து அவ்வாசனுடைய அழகிய பாதங்களிரண்டையும் பிடித்துக்கொண்டழுது சொல்லுகிறாள். எ-று. (ருஅ)

கொதித்தெழுந்துபடர்குடிகொண்டுளங்
கதித்ததுன்வயிற்கண்டனனுத்தம
விதித்ததல்லதுவேறணுகாதென
மதித்திருநுதல்வல்லிவிளம்பினள்.

இ-ள். பொங்குதலாய்த் துன்பமே குடிகொண்டு உமது மனத்திலே அதிகமானபடியை உம்மிடத்திலே தான்கண்டேன். ஓ புருஷோத்தமரே! யார்க்கானாலும் லபித்தபடியேயல்லாமல் வேறே ஒன்றும் வாராதென்று பாதிச் சந்திரன்போலும் திருநெற்றியையுடைய சந்திரவதி சொன்னாள். எ-று. (ருகூ)

தீமைசெய்ததுனக்குஞ்சிறுவற்கும்
வாய்மைதானதுமண்ணுக்கும்விண்ணுக்குந்
தூய்மையேயினியென்றுதுணிந்தன
னீமயங்கலறத்தைநினையென்றாள்.

இ-ள். பாவங்களைச் செய்திருந்தது உமக்கும் பிள்ளைக்கும் மெய்யானதே; அந்தப்பாவம் இந்த மண்ணுலகத்துக்கும் விண்ணுலகத்துக்கும் இனி நன்மையாகவே முடியுமென்று நான் துணிவுகொண்டேன். நீர் இனி மயங்க வேண்டாம். உமது சுதர்மத்தை யெண்ணிக்கொள்ளுமென்று சொன்னாள். எ-று. (சூ0)

தோகைகேள்புலையற்குத்தொழும்பனு
னுகையான்மற்றவன்பணிநீத்தவ
னீகையானிழந்தாற்றவரெய்திடும்
போகைநன்றுபொருடருதற்கென்றான்.

இ-ள். பெண்ணே! கேட்பாயாக: இந்தச் சுடுகாட்டுக்குரிய பறையனுக்கு நான் அடிமையாதலாலே அவன் உத்தாவைக்கடந்து அவன் பொருளை நான்

வாங்காமல்விட்டால் நீதிக்கு வழுவுதலாகும் நீ பொருள் கொடுப்பதற்காக இவ்விடம் விட்டுப்போகிறதே நல்ல காரியமென்று சொன்னான். எ-று. (சுக)

உன்னையாளுமறையவற்குற்றிது
சொன்னகாலந்தரினந்தத்துசொடு
பொன்னைவாங்கியளித்துநின்புத்திரன்
றன்னைநீசுடத்தக்கதுனக்கென்றான்.

இ-ள். உன்னை அடிமையாகக் கொண்டாளுகிற பிராமணனிடத்திற்குப் போய் இந்தப்பொருள் கொடுக்கவேண்டியபடியை நீ சொன்னபோது அந்தப் பிராமணன் கொடுத்தால் அந்தக் கொள்ளி வஸ்திரத்துடனே பணமும் வாங்கி வந்து கொடுத்து உன்புத்திரனை நீ தகனஞ்செய்து கொள்ளத்தகு முனக்கென்று பின்னுஞ் சொன்னான். எ-று. (சுஉ)

அரக்கெனச்சிவப்புற்றவழற்கண
னிறக்கமற்பமுமில்லவனிப்பொரு
டரக்கருத்திலன்றந்திடிற்காண்பனென்
றுரைத்தவல்லிமகனை வைத்தோடினாள்.

இ-ள். அரக்கைப்போற் சிவப்புப்பொருந்திய நெருப்புக் கண்களை யுடையவன்; கொஞ்சமேனு மிரக்கமில்லாதவன்; இந்தப் பணங்கொடுக்கச் சம்மதியான்; ஒருவேளை தருவானோ எப்படியோ கண்டறிகிறேனென்று சந்திரவதியானவள் மகனை அங்கு வைத்துவிட்டோடினாள். எ-று. (சுங)

மேற்படி வேறு.

மங்கைகடிதேகிடலுமைந்தன்முகநோக்கி
யங்கைதொடநாணிமனமஞ்சியயனின்றே
கங்கைவளநாடனிருகண்கலுழிசிந்த
வெங்கையநுகர்ந்தவிளவின்கனியையொத்தான்.

இ-ள். அப்படிச் சந்திரவதி விரைந்தோடும்போது மகன் முகத்தைப் பார்த்து தனதழகிய கையாலே தொடுதற்குக்கூசி மனத்திலே பயங்கொண்டு பக்கத்திலே நின்றுகொண்டு கங்கைவள நாட்டையுடைய அரசன் தனதிரண்டு கண்களிலும் கான்யாறுபோல் நீரொழுக வெவ்விதான யானையுண்ட விளாங்கனியை யொப்பாயினான். எ-று. (ருச)

மன்னவன்வருந்தியுறமாமயிலையன்னா
டுன்னவரிதாயசுடுகாடதுகடந்தே
யென்னவினையின்னம்வருமென்பதுகருத்தாய்
மின்னுமணிநீள்புரிசைவீதியிடைபுக்காள்.

இ-ள். அப்படி அரசன் வருந்திக்கொண்டிருக்க, பெரிய மயிலை யொப்பான சந்திரவதியானவள் நெருங்குதற் கரிதான சுடுகாட்டைக் கடந்துபோய்

இன்னம் என்ன பாவச்செய்கைகள் வாக்கூடுமோவென்று கருத்துள்ளவளாகி மின்னுகின்ற ரத்னங்கள் பதித்துள்ள மதில்சூழ்ந்த வீதிக்குள்ளே போயினள். எ-று. (சுரு)

கிள்ளைமொழியும்மருகுகிட்டுவதன்முன்னே
வள்ளையொலிமாடகிரைகாசிநகர்மன்னன்
பிள்ளையையெடுத்தயல்பெயர்த்துயிர்செகுத்தே
கள்ளர்சிலர்நல்லணிகவர்ந்துகொடுபோனார்.

இ-ள். கிளிபோலும் வசனத்தையுடைய சந்திரவதி போகுதற்கு முன்னே மங்கலவள்ளை ஒலிப்பதான காசிப்பட்டணததுக்கு அரசனானவனுடைய பிள்ளையை யெடுத்துக்கொண்டு தூரத்தே வந்து அந்தப் பிள்ளையுயிரை வதை செய்து சில கள்ளர்கள் அப்பிள்ளைமேலுள்ள நல்ல ஆபரணங்களையெல்லாந் திருடிக்கொண்டு போயினார்கள். எ-று. (சுசு)

அம்மதலையைத்தெருவகத்தினிடைநாணு
விம்மதலையார்மதலையென்னவலமந்தா
ளெம்மதலையைக்கணமெறிந்ததுகொலென்னுத்
தம்மதலைமெய்க்குறிதனைத்தெறிதலுற்றாள்.

இ-ள். இவ்வாறுசெல்கிற சந்திரவதியானவள் அந்த அரசன் பிள்ளையை அவ்வீதியிலே கண்டு இந்தப் பிள்ளையாருடைய பிள்ளையென்று துக்கித்தவளாய் எங்கள் பிள்ளையை அங்குள்ள பூதகணங்கள் கொண்டு வந்து இங்கே போட்டுவிட்டனவோவென்று தங்கள் பிள்ளையினுடம்பிலுள்ள அடையாளங் களைப் பார்க்கலாயினள். எ-று. (சுஎ)

விடிந்திடுமுனந்நகரிகாவலர்விரைந்தே
யிடிந்தமதிலேறியுமிழிந்துமறுகுற்று
மடிந்தகுழவிக்கருகுகண்டமடமாதைக்
கடிந்தனர்கொணர்ந்துயிர்கவர்ந்ததிவளென்றே.

இ-ள். அப்போது விடிகிறதற்கு முன்னே அந்தப் பட்டணத்தைக் காக்கிற தலையாரிகள் அதிக விரைவிலே வந்து கள்ளாலே யிடிந்துபோன மதில் வழியே யேறிவந்தும் பின்பிறங்கியும் பின்பு வீதியிலே வந்து செத்துக்கிடக்கிற பிள்ளைக்குச் சமீபமாக வந்து கண்டு (அங்கு நின்று யாதுந்தெரியாமல் மயங்குகிற) சந்திரவதியை, இந்தப் பிள்ளையைக் கொண்டு வந்து இதனுயிரை வதைத்தவளிவள்தானென்று அடித்தார்கள். எ-று. (சுஅ)

பதைத்திடுசினத்தொடுபசுங்குழவிதன்னை
வதைத்ததிவளாமெனமலர்க்குழல்பிடித்தே
விதைத்தலின்விழுந்தனவிழிக்கனறெரிக்க
வுதைத்தனரடித்தனரொடித்தனர்களென்பை.

இ-ள். அப்படித் துடிதுடிப்பாகிற கோபத்துடனே அந்தப் பச்சிளம் பிள்ளையைக் கொன்றது இவளேதானென்று அவளுடைய பூவையணிகிற கூந்தலைப் பிடித்துக்கொண்டு விதைக்கிறபோது சிந்துகிற விதைகளைப்போல் கண்களிலே நெருப்புப்பொறிகள் சிந்த உதைத்தார்கள்; அடித்தார்கள்; அவளெலும்பையு மொடித்தார்கள். எ-று. (சுக)

சென்றவர்கள்சென்றவர்கள்சேரவடாரக்கண்
டன்றவர்களிற்சிலர்விலக்கியகலப்போ
மென்றுதலமேதுகுலமேதுசிறுசேயைக்
கொன்றபரிசேதரிவைகூறெனவுரைத்தார்.

இ-ள். வீதியிலே பார்த்துக்கொண்டு போகிறவர்களும், பார்க்க வருகிறவர்களும் கூட வருத்தப்படுகிறதைக்கண்டு அப்போது அவர்களிலே சிலர் சிலரை விலக்கி, நீங்கள் தூரப்போங்களென்று சொல்லிச் சந்திரவதியைப் பார்த்து உன் ஊரேது? உன் குலம் யாது? இந்தச் சிறுபிள்ளையைக் கொன்றதென்ன காரணம்? பெண்ணே! நீ உள்ளது சொல்லென்று கேட்டார்கள். எ-று. (எ0)

தேவருணமக்கிலைசெகுத்திலனெனிற்று
ணுவதிலைநம்மொழியையாருறுதிகொள்வார்
நோவதினுநம்மகவிறேதகவினாலுஞ்
சாவதினிதென்பதுமனத்திடைதரித்தாள்.

இ-ள். நான் கொன்றிலேனென்று சொன்னால் தெய்வகடாக்ஷம் இப்போது நமக்கில்லாதிருக்கிறது. ஆகையால் நாம் சொல்லுகிற மெய் வார்த்தையை யார்தான் நம்புகிறவர்கள்? இப்போ திவர்களாலே வருத்தப்படுகிறதிலும் நமது புத்திரனிறந்துபோன துன்பத்தை யனுபவிக்கிறதைக் காட்டிலும் இனி இறந்துபோகிறதே நல்லதென்று தன் மனத்திலே திடப்படுத்திக் கொண்டாள். எ-று. (எக)

மெய்யுரைசெயிற்பொயெனமேவியதுவீணு
மையமிதினில்லையதனாற்புரையிலாத
பொய்யுரையுமெய்யொடுபொருந்துமெனநாடித்
தையலவரோடிதுதனைப்பகரலுற்றாள்.

இ-ள். மெய்வார்த்தையை நாம் சொன்னோமானால் அது பொய்யென்று தோற்றி அந்த மெய் பயனில்லாதுபோம். இதிலெவ்வளவுஞ் சந்தேகமில்லை. அதனாலே குற்றமில்லாத பொய்வார்த்தையு மெய்யுடனே சேர்வதாகுமென்றாலோசித்துச் சந்திரவதியானவள் தன்னை வினவின அவர்களுடனே இந்த வார்த்தையைச் சொல்லத் துணிந்தாள். எ-று. (எஉ)

ஒன்றினிதுகேண்மினுலகத்தினிலிரங்கத்
தன்றியுயிர்கொன்றழுலரக்கியறியிரோ

வின்றுயிரிழந்தமகவென்கையிலிருக்கக்
கொன்றதிலையென்னதலைனேகொடியளென்றாள்.

இ-ள். நான் ஒருவார்த்தை சொல்லுகிறேன்; எல்லோரும் நன்றாய்க் கேளுங்கள். நான் பூவுலகில் இரக்கமென்பதில்லாதவளாய் உயிர்களைக் கொன்று திரிகிற ராக்ஷசியென்பதை நீங்கள் தெரிந்துகொண்டிலீர்களோ? இப்போதுயிர்போனபின்ளை என்கையின்மேலிருக்கச்செய்தே நான் கொன்றிலேனென்று சொல்லமாட்டுவேனோ? நானே கொடுந்தொழிற் செய்கிறவளென்று சொன்னாள். எ-று. (எங)

ஆயின்விடன்மின்னெவடித்தணிகயிற்றாற்
சாயுமிருகைத்துணைபிணித்தவிசவத்தை
வேயும்விழைமதோளின்மிசையேற்றிவிறன்மன்னன்
வாயிறனைநாடிமயிலைக்கொடுநடந்தார்.

இ-ள். அப்படியானால் இவளை விட்டுவிடாதீர்களென்று அடித்து அழகிதான கயிற்றினாலே நீண்டு தொங்குகின்ற இரண்டு கைகளையுங் கட்டிச் செத்த பிணத்தை மூங்கிலும் வேண்டுவதான தோளின்மேலேற்றி வெற்றிகொண்ட காசிராஜனுடைய அரண்மனை வாசலைத்தேடிச் சந்திரவதியை யிழுத்துக் கொண்டு போனார்கள். எ-று. (எச)

கைகொடுசவத்தினிருகால்களையணைத்து
மெய்கொடுசுமந்தடிவிதிர்ப்புறமிதித்துப்
பெய்கொடுநிணங்குருதிபின்னுமுனுமொய்க்க
மொய்கழல்வணங்கிடைமுறிந்திடநடந்தாள்.

இ-ள். தனது கையிலேகொண்டு பிணத்தினுடைய இரண்டு கால்களையும் அணைத்துத் தனதுடம்பினாலே சுமந்துகொண்டு கால்களுநசுங்க மிதித்தூன்றி ஒழுகுகின்ற கொடுமையான நிணமும் ரத்தமும் பின்புறத்திலும் முன்புறத்திலும் வழிந்தொழுகும்படியாய் நெருங்கின கூந்தலையுடைய சந்திரவதி தனதிடை ஒடிவதாக அந்தத் தலையாரிகள் பின்னே சென்றாள். எ-று. (எடு)

குறித்ததிசினத்தொடுகொதித்தவரடிக்கத்
தெறித்தகுருதித்துளிதிசைத்திசையின்மொய்க்கப்
பிறித்திருகயிற்றிடைபிடித்துவரநாய்மேல்
வெறித்தடரமானெனவெருண்டுமுனடந்தாள்.

இ-ள். அவள் கொன்றதைக் கருதி அதிக கோபத்துடனே பொங்குதலாகி அந்தத் தலையாரிகள் அடிக்கிறதினாலே தெறிக்கிற ரத்த பிந்துக்கள் எந்த இடங்களிலு நிரம்புதலாகப் பிரிவுசெய்து இருபக்கத்திலுங் கட்டின கயிற்றைப் பற்றிக்கொண்டு வரும்போது, நாய்கள் வெறிகொண்டு சீறி மேலேவிழ, அஞ்சுகிற மானைப்போற் பயந்து நடந்தாள். எ-று. (எசு)

வேலைநகர்காவலரும்வேதமுனிவற்கன்
ருலைவயல்சூழ்பதியளித்தமடமாதுங்
காலைமுரசங்குளிறுவாயில்கள்கடந்தே
மாலைமுடிமன்னனுறைமண்டபமணைந்தார்.

இ-ள். கடல்போற் சிறந்த அந்தப் பட்டணத்தைக் காக்கிற தலையாரிகளும், ஒரு வேதப்பிராமணனுக்கு கரும்பாலைகளும் வயல்களுஞ் சூழ்வதான தமதாரைக்கொடுத்த யௌவனமுள்ள சந்திரவதியும் விடியற்காலத்து முரசு சத்திப்பதான கோட்டை வாயில்களெல்லாங் கடந்துபோய் மாலையணிந்த கிரீடாதிபதியான அரசனிருக்கிற சபாமண்டபத்துக்குள்ளே போனார்கள். எ-று. ()

அத்தலமணைந்தவருளக்கொடியர்மன்னைக்
கைத்தலமெடுத்திருகழற்றொழுதுநின்றார்
மெய்த்தவமுபன்றமணிவேயனையதோண்மேல்
வைத்துபிணமுங்கொடுமடக்கொடியுநின்றாள்.

இ-ள். அந்தச் சபாமண்டபத்தினருகே போனவரிலே அப்பொல்லாத தலையாரிகள் அரசனைநோக்கி இரண்டு கைகளையுங் கொண்டு அவனிரண்டு கால்களையும் வணங்கி நின்றார்கள். மெய்யான தவங்களைவேண்டிச் செய்வதான அழகிய மூங்கிலையொத்த தோளின்மேலே வைத்த பிள்ளைப்பிணத்தையுந் தாங்கிக்கொண்டு சந்திரவதியு நின்றாள். எ-று. (எஅ)

நின்றளவின்மன்னனுநிகழ்ந்தபிழையென்கொ
லென்றதிசயித்திஃதிறக்கெனவுரைக்க
மன்றல்கமழ்கோதைபிணம்வைத்தனனிலத்திற்
கொன்றபரிசெந்தநெறிகூறிடுமினென்றான்.

இ-ள். அப்படி நின்றபோது அரசனனவன் இவளாலே உண்டான குற்றம் யாதென்றதிசயித்து இந்தப் பிணத்தை யிறக்கிவை யென்று சொல்லவே, மணம் பரிமளிக்கின்ற கூந்தலையுடைய சந்திரவதி பிணத்தைக் கீழே இறக்கிவைத்தாள்; வைத்தபின்பு, காசிராஜன் இவளிந்தப் பிள்ளையைக்கொன்ற தெவ்விதம் சொல்லுங்களென்று கேட்டான். எ-று. (எகூ)

என்றிறையுரைத்திடவிறைஞ்சியவர்மன்னு
யின்றிரவுநின்மகவைவந்திவளெடுத்து
மன்றணிநெடுந்தெருவில்வைத்துடல்பிளந்து
கொன்றபடிகண்டுகொடுவந்தனமுனென்றார்.

இ-ள். என்று காசிராசன் கேட்டபோது, அந்தத் தலையாரிகள் வணங்கி அரசனே! இன்றிராத்திரி உம்முடைய பிள்ளையை இந்த ராக்ஷசி வந்தெடுத்துக்கொண்டுபோய் நிரம்பின அலங்காரத்தையுடைய ராஜவீதியில் வைத்து உடம்பைப் பிளந்து கொன்றபடியைக் கண்டு பிடித்துக்கொண்டு உமக்கு முன்னே வந்தோமென்று சொன்னார்கள். எ-று. (அ0)

அந்தமொழிசொன்னவரையங்கையினமைத்து
வந்தபடியாவுமிவண்வல்லியுரையென்னச்
சந்திரவதித்தெரிவைதன்னடியைநோக்கிச்
செந்துவர்மலர்க்குமுதவாய்மலர்திறந்தாள்.

இ-ள். அந்த வார்த்தைசொன்ன தலையாரிகளைத் தன் கையாலே அடங்கச் சொல்லி ஓ அம்மே! நீ வந்த காரியமெல்லாம் இவ்விடத்திலே சொல்லென்று கேட்க, சந்திரவதியானவள் தன் பாதத்தைப் பார்த்துக்கொண்டு சிவந்த பவளம் போலவுங் குமுத மலர்போலவும் உள்ள தன் வாயைத்திறந்து சொல்லலானாள். எ-று. (அக)

செய்யமகவின்னுயிர்செகுத்தபடி கண்டாய்
கையினிலெடுத்ததொர்சவத்தையெதிர்கண்டாய்
மெய்யிடைபுலால்வெறிவிரிந்தமுடைகண்டா
யையமிலையானுமொராக்கியறியென்றாள்.

இ-ள். ஓ அரசனே! இந்தச்செவ்விதான பிள்ளையினுயிரைக் கொன்ற படியையும் நீரேகண்டீர். என்கையி லெடுத்துக்கொண்டு வந்ததான ஒரு பிணத்தையும் உமக்கு முன்னே கண்டீர். என்னுடம்பிலே புலால் நாற்றம் விரிந்திருக்கிற படியையுங்கண்டீர். இனிச் சந்தேகிக்கத் தக்கதில்லை. நானும் ராக்ஷசிகளிளொருத்தியென்று தெரிந்து கொள்ளுமென்று சொன்னாள்; எ-று. (அஉ)

என்றுநரவன்றசைகளுண்டுடலெடுத்தேன்
வென்றிவடிவேலிறைவநின்னகரின்மேவி
யின்றிரவினின்மகவிளந்தசைவிரும்பித்
தின்றிடநினைத்துயிர்செகுத்ததுளதென்றாள்.

இ-ள். எப்போதும் நான் மனிதருடைய வலிய மாமிசங்களையே சாப்பிட்டு என் சரீரத்தை வளர்த்தேன். வெற்றிபொருந்தின கூரிய வேலையுடைய அரசனே! இன்று உம்முடைய ஊர்க்குள்ளே வந்து இராத்திரியிலே உமது பிள்ளையினிளமையான மாமிசத்தைத்தின்ன ஆசைகொண்டு இந்தப் பிள்ளையினுயிரைக்கொன்றேன். இதுவே மெய்யானதென்று பின்னுஞ் சொன்னாள். எ-று. (அங)

மடக்கொடியுரைக்கவிதுமன்னவனுரைப்பா
னடக்கமுமொடுக்கமுமரக்கியலளென்னு
மிடர்ப்பலவிவட்கிவரிழைத்தமைநமக்குச்
சுடச்சுடவுரைக்குமிவள்சொன்னமொழியென்றான்.

இ-ள். இவ்வாறு சந்திரவதி சொல்லக்கேட்டு அரசன் சொல்லுகிறான். இந்த அம்மையினுடைய மன அடக்கமும் கைகால்களி னொடுக்கமும் ராக்ஷசியல்லவென்று சொல்லுகின்றன. இந்தப் பெண்ணணங்குக்குப் பலரும் பல

துன்பங்கள் செய்தவைகளுண்டு, அவைகளெல்லா நமக்குத் தெரிவதாக சுடச் சுடச் சொல்லுகின்றது; இந்த அம்மைசொன்ன வார்த்தையென்றான். எ-று.

உயிர்க்கொலைபுரிந்தவர்முகக் குறியுரைக்கும்
கையிற்குறியுரைக்குமிருகட்குறையுரைக்குங்
குயிற்குரன்மடந்தையிவள்கொன்றகுறியுண்டென்
றயிர்ப்பிலையெனக்கெனவமைச்சரொடுரைத்தான்.

இ-ள். சீவவதை செய்தவர்கள் முகக்குறியே (வதை செய்ததைத்) தெரியச்சொல்லும். இன்னும் வதை செய்தவர்களுடைய கையிலுள்ள குறியுஞ் சொல்லும். இரண்டு கண்களிலுள்ள குறியுஞ்சொல்லும். குயில்போலுந் தொனியையுடைய பெண்ணாகிய இந்த அம்மைகொன்ற குறியுண்டென்று எனக்குச் சந்தேகித்தற் கிடமில்லையென்று மந்திரிகளுடனே பின்னுஞ் சொன்னான். எ-று. (அரு)

வள்ளலிவைகூறிடலும்வந்தவர்கண்மன்னா
பிள்ளையையெடுத்துவடியின்பிறகுசென்று
கள்ளியிவள்கொன்றைபடிகண்டுகொடுவந்தே
முள்ளதலதில்லதையுரைக்கவிதியுண்டோ.

இ-ள். அப்படி அரசனானவன் சொல்லும்போது, அவளைக்கொண்டு வந்தவர்கள் அரசனே! பிள்ளையை யெடுத்துக்கொண்டு வந்து காற்சுவட்டின் பின்னேபோய் திருடியான இவள் கொன்றபடியையுங்கண்டு இவளைப் பற்றிக் கொண்டு வந்தோம். இது உள்ளபடியே அல்லாம லில்லாததைச்சொல்ல நியாயமுண்டோ? எ-று. (அசு)

உன்னுரைதனக்கொரெதிருத்தரமுமுண்டோ
வென்னுரைசெயத்தகுவதெம்பெருமவென்றே
மன்னுரைகடற்புவிவளாகமிசைவாழு
மின்னுயிரிறக்குமிவடன்னைவிடினென்றார்.

இ-ள். உம்முடைய சொல்லுக்கு மறுமொழியுங்கூட நாங்கள் சொல்லத்தக்கதுண்டோ? எமதரசனே! இனிச் சொல்லத்தக்கது யாதிருக்கின்றதென்று பின்னும், நிலைபெற்ற இவளை விட்டுவிடில், நுரைகள் பொருந்தின கடல்சூழ்ந்த பூமண்டலத்திலே வாழுகின்ற இனிய உயிர்களெல்லாம் அழிந்து போகும் என்றுஞ் சொன்னார்கள். எ-று. (அஎ)

அன்னவையுரைத்தவரைமன்னவனமைத்தே
யென்னைபலபேசுவதிவேழையடிதானே
பின்னையடிசென்றதுளதோபிறிதெனக்கண்
டிந்நொடியில்வந்திடுமெனச்சிலரைவிட்டான்.

இ-ள். அவ்வார்த்தைகள் சொன்ன தலையாரிகளை அரசன் அமரச்சொல்லி இனிப்பலவுஞ் சொன்னதிலே பயனொன்றுமில்லை. (பிள்ளையைக் கொண்டு

போன வழியில்) இந்தப்பெண் கால்கள் சென்றிருக்கின்றனவோ? பின்னும் வேற்றோர் கால்கள் சென்றன வுண்டோவென்று தெரிந்து இந்தக் கணப்போதிலே வாருங்களென்று சிலரை அனுப்பினான். எ-று.

சிறிது பின்னையடி சென்றதுளதோ வெனக்கூட்டுக. (அஅ)

போற்றடிபணிந்தவர்கள்போய்மறுகினூடே
காற்றடிசிதைக்குமுனர்கண்டிடுதுமென்றே
மாற்றடியிலாற்றரியவல்லியடிவைப்பின்
வேற்றடிகள்பார்த்தவர்விரைந்துநெறிசென்றார்.

இ-ள். எல்லாரும் வணங்கத்தக்க அரசனடியை வணங்கிக்கொண்டு அந்தச் சிலர்கள் வீதிவழியே சென்று காற்றினாலே காற்சுவடு கலையுமுன்னே தெரிவோமென்று, தலையாரிகளுடைய மாறுலடித்த அடிபட்டுத் தாங்கமாட்டாதிருக்கின்ற சந்திரவதியினுடைய கால்கள் சென்ற நிலத்திலே வேறான சில காற்சுவடுண்டோவென்று அவர்கள் பார்த்துக்கொண்டு விரைவிலே சந்திரவதி வந்தவழியைக் குறித்துப் போயினார்கள். எ-று. (அகூ)

அங்கவர்கள்வந்திடுமுனத்தெருவகத்துக்
கங்கருகுகன்னல்விளைகன்னபுரிமன்னன்
மங்கையடியேயெழுதிமற்றையடியெல்லா
மங்கைகொடுநீவிமுனிகௌசிகனழித்தான்.

இ-ள். அங்கே அந்தச்சிலர்கள் வருவதற்குமுன்னே அந்தத் தெருவிலே தினைப்புனத்தருகே கரும்புகள் விளைவதான கன்னோசி நாட்டரசன்பெற்ற சந்திரவதி கால்களையே விசுவாமித்திரமுனிவர் பதியச்செய்து மற்றைக் காற்சுவடுகளையெல்லாம் தமதழகிய கையாலே தடவிக்கலைத்து அழித்துவிட்டார். எ-று.

எந்தவடிவந்ததெனவெண்ணியவனண்ணி
யந்தவடியின்சுவடமைப்பனைவருங்கண்
டிந்தவடியேமுழுதுமியாவர்களுமிங்கே
வந்தவடியில்லையெனமன்னனுழைவந்தார்.

இ-ள். எந்தக்கால்கள் இங்கே நடந்து வந்தவையென்று ஆலோசித்துக்கொண் டங்கேவந்து அந்தச் சந்திரவதியினுடைய கால்கள் அழுந்தியிருக்கிற வடிகளை எல்லாருங்கண்டு, எல்லாம் இந்தப் பெண்ணடிச் சுவடுகளேயல்லாமல் ஒருவரு மிவ்விடத்தே நடந்துவந்த சுவடுகளில்லையென்று சொல்ல அரசனிடத்திற்கு வந்தார்கள். எ-று. (கூக)

உற்றடிவணங்கியவர்முற்கலையொதுங்கச்
சுற்றடிகள்பற்பலதொடர்ந்துதனிசென்றே
மற்றடியினிக்கொடியகள்ளியடியல்லால்
மற்றடிகளில்லையெனமன்னனொடுரைத்தார்.

இ-ள். அப்படி வந்து அரசன் கால்களை வணங்கி அந்தச்சிலர்கள் தாமு டுத்தியிருக்கிற முன்வஸ்திரத்தை ஒதுங்க அமைவதாகச் சூழ்ந்துகொண்டு பல பல காலடிகளை மிகவுந்தொடர்ந்து பிடித்துப் போயினோம்; அவ்வகைக் காத் சுவடுகளில் இந்தத்திருடி காத்சுவடுகளேயல்லாமல் வேறு காத்சுவடு களில்லை யென்று அரசனுடனே சொன்னார்கள். எ-று. (கஉ)

வள்ளலும்வருந்திமிகமங்கைமுகநோக்கி
புள்ளதுரைசெய்கெனவுரைத்திடமறித்தும்
கள்ளியெனையல்லதிலையென்றுகழறக்கேட்
டள்ளல்வயனாட்டரசனுந்தகம்வியந்தான்.

இ-ள். அப்போது அந்த அரசனானவன் மிகவு நொந்துகொண்டு சந்திர வதி முகத்தைப்பார்த்து உள்ளதை நீ சொல்லக்கடவையென்று கூறப் பின்னும் என்னையல்லாமல் வேறே திருடி யொருவரு மில்லையென்று சந்திரவதி சொல் லக்கேட்டு, சேருள்ள வயல் சூழ்ந்த நாட்டையுடைய காசிராஜன் மனநொந்து அதிசயங்கொண்டான். எ-று. (கங)

கொல்லவிவள்வல்லவளுமல்லள்கொலைசெய்தா
ளல்லளெனிலங்கொருவர்வந்தவடியில்லை
தொல்லைவினையெவ்வகைதொடர்ந்ததறிதக்க
தில்லையெனமைந்தனிலிவட்குருகினின்றான்.

இ-ள். இந்த அம்மை கொல்லவல்லவளல்லள்; கொலைசெய்தவ ளிவளல் லவென்று கொள்வோமானால் அங்கே வேறே யொருவர் நடந்து சென்ற காத் சுவடுகளில்லை. பழைய பாபசம்பந்தம் எவ்விதமாகவோ வந்து நேரிட்டிருக் கிறது. நம்மாலறியத்தக்கதா யில்லையென்று தன் பிள்ளைக்கிறங்குகிறதிலு மதிகமாகச் சந்திரவதிக்கே மிகவு மனமுருகினான். எ-று. (கச)

முன்னைவிதியாலும்வினைமுற்றுமதனாலு
மென்னையிவடன்னைவிடலென்பதுநினைந்தே
கன்னல்செறிகாசிபதிகன்னபுரிமன்னன்
மின்னைவதைசெய்வதுவிரும்பியொருமித்தான்.

இ-ள். பூர்வ கருமம் தான் முடியும்வகை முடியும்; அதனாலே இந்தப் பெண்ணை எப்படி விட்டு விடுகிறதென்று நினைத்து கரும்புகள் விளைவதான காசிராஜன், கன்னோசிநாட்டரசன் மகளைக் கொலைசெய்வதற்கு வேண்டி மனது சம்மதமானான். எ-று. (கரு)

அவ்வணநினைந்திடலுமவ்வளவுதன்னிற்
செவ்வணவயிற்குரிசிறீவினைகளெல்லா
மிவ்வணமகன்றிடுமெனுங்குறிவிளங்க
மைவ்வணவயங்கிருண்மறைந்ததுவிடிந்தே.

இ-ள். அப்படி அவன் ஆலோசிக்கும்போது அந்தச் சமையத்திலே சிவந்த நிறத்தையுடைய வேலாயுதத்தைக் கொண்ட அரிச்சந்திர மகாராஜனுடைய பாபகருமங்களெல்லாம் இப்படியே கழிந்துபோகு மென்னுங் குறிதோன்றமைபோலுவதா யிருக்கிற இருள் கழிந்து விடிதலாயிற்று. எ-று. (கசு)

தங்குலமடந்தைபடுசஞ்சலமுணர்ந்தே
மங்குலெழுவெண்சசிமழுங்கியொளிமாயக்
கங்குன்மகளிந்தவினைகண்டகலவோட
வெங்குலநெடுங்கதிர்வெகுண்டெனவெழுந்தான்.

இ-ள். தனது குலத்துப்பெண் படுகிற சஞ்சலங்களெல்லாந் தெரிந்து மேகத்திலே தோன்றுகிற வெள்ளிய சந்திரனவன் ஒளி மழுங்கி மறையவும். அந்தாாத்திரியான பெண் இந்தப் பாபகருமத்தைக் கண்டு தூரவோடிப்போகவும், வெப்பமான அரிச்சந்திரன் குலத்துச் சூரியன் கோபங்கொண்டதுபோலுதயமாயினான். எ-று. (கஎ)

காதலிபிடித்தநெறிகண்டெமதுகற்பின்
போதமிதுவென்றுபுருடர்க்கெதிர்குலாவு
மாதர்முகமென்னவயலுந்தடமுமற்று
மாதபன்முகத்தெதிரலர்ந்தவரவிந்தம்.

இ-ள். எல்லாரும் விரும்பத்தக்க (நன்மார்க்கத்தையுடை சந்திரவதிகொண்ட) கொள்கையைப் பார்த்து எங்களுடைய கற்பினுக்குள்ள ஞானமித்தன்மையதென்று புருஷர்களுக்கு முன்னே கொண்டாடத்தக்க பெண்கள் முகங்கள்போல வயல்களிலும் குளங்களிலும் மற்ற இடங்களிலும் சூரியோதயத்துக்கு முன்னே தாமரை மலர்கள் விகசிதமாயின. எ-று. (கஅ)

கலி நிலைத்துறை.

விடிந்தகாலையில்வேறொருதிறம்புறங்காணான்
மடிந்தமைந்தனையெடுமெனமனையிடைப்போக்கி
முடிந்ததீவினைப்பயத்தினுமுதிர்வினையானுங்
கடந்திடும்படிகருதினன்காசியர்கோமான்.

இ-ள். அப்படி விடிந்தபோது வேறொரு வகையும் பிரசித்தமாகக் காணாதவனாகி இறந்த பிள்ளையைக் கொண்டு போங்களென்று தனது அரண்மனைக்குள்ளே போகவிட்டு, அப்போது முடிவான கொலைப்பாவ பலத்தினாலும், மேன்மேலாக விசுவாமித்திரர் செய்கிற செய்கைகளினாலும் சந்திரவதியை வதைசெய்யும்படி காசிநகரத்தாருக்கரசன் ஆலோசித்தான். எ-று. (கக)

சோரார்மற்றயலுண்டெனிற்சோதித்துவந்திந்
நேரம்யாவருமறைத்திலரவரவர்வினைவை
யாரறிந்தவரிவடனைவதைப்பதற்கழைத்து
வீரவாகுவைக்கொணர்கெனத்தூதரைவிடுத்தான்.

இ-ள். கள்ளர்கள் வேறே இன்னமுண்டென்றால் பரிசோதனை செய்து வந்து இந்தச்சமையத்தில் ஒருவரும் வந்து சொல்லுகின்றிலர். ஆனாலும் அவ் வவர் நினைவை யாராலே அறிந்துகொள்ளலாகும்? ஆகையால் இந்தப்பெண் ணைக் கொலைசெய்வதற்கு வீரவாகுவைக் கூவிக் கூட்டி வாருங்களென்று தூதரை அனுப்பினான். எ-று. (௪00)

விரைவினோடிச்சென்றவன்புலைச்சேரியின்மேவி
யரசர்கோனுனையருளிப்பாடெனவுரைத்தழைக்கச்
சுரைகொள்வெள்ளைவாய்ச்சிவந்தகட்கருநிறச்சுடர்வாட்
கரதலத்தொடுங்கடிதுவந்தரசனைக்கண்டான்.

இ-ள். உடனே தூதர்கள் அதிசீக்கிரத்திலே ஓடிப்போய் அந்த வீரவாகு இருக்கிற பறைச்சேரிக்குள்ளே நுழைந்து, நமதிராஜாதி ராஜன் உன்னை வரும் படி உத்தரவு செய்தருளலாயிற்றென்று சொல்லிக் கூப்பிடச்செய்தே, சுரை விதைபோல் வெள்ளைப் பற்களைக்கொண்டு வாயும் சிவந்த கண்களும் கறுத்த வுடம்பும் ஒளிபொருந்தின வாளாயுதத்தைக்கொண்ட கையுமாக விரைவிலே வந்து அரசனைக் கண்டு கொண்டான். எ-று. (௪0௧)

தூரநின்றுவாய்புதைத்துளமலைந்துதூசொடுக்கிப்
பாரமேனியைச்சுருக்கிவீழ்ந்தரசனைப்பணிந்திந்
நேரநாயினேன்றன்னையென்னினைந்தவாறென்றான்
வீரவாகுவைநோக்கியவ்வேந்தர்கோனுரைப்பான்.

இ-ள். தூரத்தே நின்றுகொண்டு வாயைமூடி மனநடுங்கி வஸ்திரத்தை ஒடுங்கிப் பெரியவுடம்பைச் சுருக்கமாகக்கொண்டு கீழே விழுந்து அரசனை வணங்கின பின்பு சுவாமி! இந்த வேளையிலே நாயேனை நினைத்தழைத்தது யாது காரணமென்று கேட்டான். அப்படிக்கேட்ட வீரவாகுவைப்பார்த்து அந்த ராசாதிராசன் சொல்லுகிறான். எ-று. (௪0௨)

துட்டியாமிவள்குழவியைத்துணித்தனளென்னுத்
திட்டியாற்கண்டேமெனச்சிலரரிவையைப்பிடித்துக்
கட்டிவந்தனர்கட்டொடுங்கொண்டுபோய்க்களத்தில்
வெட்டுவித்திடென்றீந்தனன்காசியர்வேந்தன்.

இ-ள். கெட்ட செய்கையை யுடையவளாகிய இந்தப்பெண் என்பிள் ளையை வதைசெய்தாளென்று கண்ணால் கண்டதாகச் சிலர் இவளைப்பிடித்துக் கட்டிக்கொண்டு வந்தார்கள். ஆகையால் அந்தக்கட்டுடனே நீ கொலைசெய்யு மிடத்துக்குக் கொண்டுபோய் வெட்டிவிடும்படி செய்யென்று அவன்வசத்தி லொப்புவித்தான். காசிப்பட்டணத்தாருக் கரசனானவன். எ-று. (௪0௩)

மின்னைக்கைக்கொண்டுகட்டினையிறுகுறவிசித்து
மன்னைக்கைதொழுதேத்தித்தன்சேரியில்வந்து

பின்னைத்தன்வயினவிலைபட்டவயோத்தியர்பெருமான்
றன்னைக்கூவியேயவன்கையிற்றையலைக்கொடுத்தான்.

இ-ள். சந்திரவதியைப்பிடித்து முன்கட்டினதைப் பின்னு மிறுக்கமாகக் கட்டி அரசனைக்கையாற் கும்பிட்டுக்கொண்டு துதித்துத் தனது பறைச்சேரிக்குள்ளே வந்து பின்பு தன்னிடமாக விலையாயிருக்கிற அயோத்தியாபுரிக்கரசனான அரிச்சந்திரனைக் கூப்பிட்டு அவன் வசமாகச் சந்திரவதியை வதைசெய்யும்படி ஒப்புவித்தான். எ-று. (கOச)

பிள்ளையைக்கொடுபோயுடல்பிளந்துயிர்தொலைத்த
கள்ளியைக்கொலைக்களத்திடைக்கொண்டுபோய்க்கவந்தந்
துள்ளியோடநீவெட்டெனத்தோகையைக்கொடுத்து
வள்ளியோன்கையிற்றன்கையில்வாளையுங்கொடுத்தான்.

இ-ள். இந்தவூராசன் பிள்ளையைக் கொண்டுபோய் உடலைப் பிளந்துயிரைப்போக்கின திருடியை நீ கொலைசெய்யு மிடத்துக்குக் கொண்டுபோய் இவளுடைய தலையில்லாத முண்டம் பதைத்து ஓடிப்போம்படி தலையை வெட்டென்று சந்திரவதியை யொப்புவித்து இந்த மகப்பிரபுவான அரிச்சந்திரனிடத்தில் வீரவாகு தன் கையிலிருக்கிற கத்தியையுங் கொடுத்தான். எ-று. (கOரு)

வாளைவாங்கித்தன்மாதையும்வாங்கினன்வந்தான்
பாளையோதியையறிந்தனன்பாவையுமறிந்தாள்
வேளைவென்றவற்கேற்றதோவெனவிறைமெலிந்தான்
காளைவாட்டமுங்கோட்டமுங்கன்னிகண்டுரைப்பாள்.

இ-ள். அப்படியே கத்தியையும் வாங்கிக்கொண்டு தன் மனைவியையுங் கூட்டிக்கொண்டு வந்த அரிச்சந்திரமகாராஜன் கூந்தற்பனைபோன்ற குழலினையுடைய அப்பெண்ணைத் தன் மனைவியாகிய சந்திரவதிதானென்று தெரிந்தான். சந்திரவதியும் அந்தச் சுடுகாட்டிலிருந்த நாயகனே இப்போது தன்னை வெட்ட வந்தவனென்று தெரிந்தாள். அப்போது மன்மதனையெரித்த கடவுளுக்கிது சம்மதிதானோவென்று அரசன் மெலிவதானான். அப்போது தனக்கதிசுந்தரனான நாயகனுடைய மனவாட்டத்தையும் மனக்கோணுதலையும் சந்திரவதி தெரிந்து சொல்லுகிறாள். எ-று. (கOசு)

முன்னைநாளரசாண்டணிமுடிபுனைந்திருந்த
மன்னர்செய்கையுமறங்களுந்திறங்களும்வளர்ந்த
வின்னமுங்குறைந்துயிர்தரித்திருந்தவரில்லை
யன்னமேதுணிபடியனேற்கிரங்கலைபென்றாள்.

இ-ள். முற்காலத்திலே அரசாட்சிசெய்து அழகிதான கிரீடத்தைக் கொண்டிருந்த அரசர்கள் செய்கையும், அவர்கள் தருமங்களும், சாமர்த்தியங்களும் இன்னமும் வளர்ந்துகொண்டே யிருக்கின்றன. அவைகளிற் குறைவாகித் தங்களுயிரை வைத்திருந்த அரசர்கள் உமது குலத்திலே ஒருவருமில்லை. ஆகை

யால் உமக்கும் அவ்வரசர்கள் செய்கைப்படி நடக்கிறதே துணிவான காரியம். அடியேனைப்பற்றி நீ ரெவ்வளவும் இரக்கஞ்செய்ய வேண்டாமென்று சொன்னாள். எ-று. (௧0எ)

அக்கணத்தினிலமைச்சனும்விரையவந்தணுகிப்
புக்கவாறெலாம்புரவலன்புகன்றிடக்கேட்டுப்
பக்கநோக்கியேமன்னனைப்பணிந்துயிர்பதைக்க
வொக்கவேகியேசுடர்மணித்தெருவில்வந்துற்றான்.

இ-ள். அந்த க்ஷணப்பொழுதுக்குள்ளே மந்திரியான சத்தியகீர்த்தியும் விரைவிலே வந்து கூடி நடந்த செய்கைகளெல்லாம் அரசன் சொல்லக்கேட்டுப் பக்கம்பார்த்து அரசனை வணங்கித் தனக்குயிர் பதைப்பதாகக் கூடவே சென்று காந்தியுள்ள ரத்தினங்கள் மின்னுகின்ற தெருவிலே வந்து சேர்ந்தான். எ-று. (௧0அ)

இடக்கைபாசமுமேதியும்பிடித்திடவலத்துத்
தடக்கைபற்றியசவஞ்சுடுகோலினூற்றள்ளிச்
சுடர்த்தெருத்தனிற்றோன்றிடத்துணுக்கமுற்றேங்கி
மடங்கொடித்திருமாதருமைந்தருமுரைப்பார்.

இ-ள். இடது கையானது கட்டின கயிற்றையும் கத்தியையும் பிடிக்க; வலது தடக்கையிலேகொண்ட பிணஞ்சுடுகிற தடியினாலே சந்திரவதியைத் தள்ளிக்கொண்டு வந்து பிரகாசமான தெருவிலே வரச்செய்தே கண்டோர் திடுக்கிட்டிரங்கி இளங்கொடிபோன்ற பெண்களும் புருஷர்களும் சொல்கிறார்கள். எ-று. (௧0௯)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கையோ செழுங்கமல முகமோ நிறைந்தமதி காலோவிளஞ் சினவரால், மெய்யோ கலாபமயி லிடையோ நுடங்குகொடிவிழியோ கடைந்த வடிவேல், மையோ சுருண்டகுழன் மலையோ திரண்டமுலை வனிதைக்கெனப் புகலுவா, ரையோ விவட்குவிதி கொலையோ வெனக்கதறி யழுவா ரறைந்து விழுவார்.

இ-ள். இந்தப் பெண்ணுக்குக் கைகளோ செழுமையான தாமரை மலர்கள்போ விருக்கின்றன. முகமோ பூரணச்சந்திரன்போ விருக்கின்றது. கணைக்கால்களோ இளமையான சினைவரால் மீன்கள்போ விருக்கின்றன. உடம்போ வாலையுடைய மயிற்சாயலை யொத்திருக்கின்றது. இடையோ துவளுகிற கொடிபோ விருக்கின்றது. கண்களோ கடைந்துகொண்ட கூரிய வேல்கள்போ விருக்கின்றன. சுருண்ட கூந்தலோ மேகமோ வென்னலாயிருக்கின்றது திரண்ட கொங்கைகளோ மலைகளோ வென்னும்படி யிருக்கின்றனவென்று சொல்லுவார்கள். ஐயோ! இப்படிப்பட்ட பெண்ணுக்குக் கொலையினாலோ

சாவவிதியென்று கதறி யழுவார்கள் சிலர். முகத்திலே அடித்துக்கொண்டு கீழே விழுவார்கள் சிலர். எ-று. (கக0)

தவளத் திருத்தாள நகையுஞ் சிறந்தவிரு தனுவைப்பழித் தருதனும், பவளத்தை யொத்தகனி யிதழும் படைத்தவிதி பத றிப் படைத்ததுளதோ, கவளக் களிற்றரச னுலகத்துயிர்க்குதவு கபடற்றிரக்க முடையோ, னிவனைக் கொலக்கருதி யிவர்கைக் கொடுத்ததிற மேதென் றிரங்கி யழுவார்,

இ-ள். வெண்மையான அழகிய முத்துகள்போன்ற பல்வரிசைகளும், சிறப்பான இரண்டு விற்களைப் பழிப்பனவான புருவங்களும், பவளத்தை யொப்பாய்க் கனிபோன்ற இதழும் உண்டாகச்செய்த பிரமதேவன் பதறுதலாக அமைத்ததுண்டோ? கவளமுண்கிற யானைமேலேறுகிற அரசன் உலகத்தி லுள்ள உயிர்களுக் குதவுதல் செய்பவனாய்க் கபடமில்லாமல் இரக்கமுமுடைய யவன் இப்படிப்பட்ட பெண்ணைக் கொல்ல எண்ணி இந்தப் புலையர்வசமாகக் கொடுத்தவிதம் யாதுகாரணத்தினாலே யென்று அழுது துக்கிப்பார்கள். எ-று.

வேலைப் பழித்தவிழி யாளைச் சினத்தரசன் வெட்டென் றுரைத்த பொழுதே, சாலச் சவங்கள்சுடு கோலிற் கடிந்துநனி தள்ளிக் கொணர்ந்த புலையன், சீலத்தை யுங்கனக மார்பத்தை யுங்குலவு திண்டோளை யுங்கண்டிடின், மாலொப்ப னன்றிமயி லோனொப்ப னல்லதொரு மதனொப்ப னென்று மருள்வார்.

இ-ள். வேலாயுதத்தைப் பழிப்பதான கண்களையுடைய இந்தப்பெண்ணை அரசன் கோபித்து வெட்டென்றுசொன்ன அப்பொழுதே, மிகவும் பிணங்க ளைச் சுடுகின்ற தடியினாலே அடித்துத் தள்ளிக்கொண்டு வந்த இந்தப் புலைய னுடைய நல்ல குணத்தையும் பொன்மயமான மார்பையும் விளங்குகின்ற திண் ணிய தோள்களையும் பார்க்குமிடத்தில் திருமாலை யொப்பாவான். அல்லது மயில்வாகனக் கடவுளை யொப்பாவான். அல்லது ஒப்பற்ற மன்மதனை யொப் பாவானென்று மயங்குவார்கள். எ-று. (ககஉ)

மறையோ னிடத்திவளை விலைகூறி மிக்கவொரு மகனோடும் விற்றவ னிவன், குறையோ பொருட்செலவு தெரியாது மற்று மொரு கோடியோ னலக்க ணுறவே, பறையோ னிடத்திவனை வி லைகூறி விற்றுமுன் பலநாள் கழித்ததறிவே, மிறையோன்மகற் கிறுதி செயலாலிவர்க்குவரு மிடையூறி தென்றுரைசெய்வார்.

இ-ள். பிராமணனிடத்திலே இந்தப்பெண்ணை விலைகூறி மேன்மை யுள்ள ஒருபுத்திரனையும் விற்றவனேயிவன். இப்படிப்பட்ட இவனுக்குப் பொருட்செலவு வந்தது என்னகுறைவினாலோ தெரியாது. மறுபடியும் ஒரு பொல்லாதவன் துன்பப்படுதற்காகப் பறையனிடத்திலே இவனை விலைகூறி விற்றவனுங் கூடவிருக்கிறான் இப்படியாகப் பலகாலமும் போக்கினதை

நாமெல்லோருந் தெரிந்திருக்கிறோம். இப்போது இந்தக் காசிராஜன் மகனுடைய உயிருக்கு முடிவுசெய்ததனாலே இவர்களுக்கு வந்த துன்ப மிப்படியென்று சொல்லிக்கொள்ளுவார்கள். எ-று. (கக௩)

எங்கோமகன்கதற வுயிருண்டகொலைகாரி யிவளோவெனத் தொடருவார், வெங்கோபவன்கரியின் முன்போடு மென்றுசிலர் வெகுள்வார் நெருங்கியடர்வார், பங்கோ பறைக்கிவளை வதைசெய்தனம்படைபடாதோவெனப்பதறுவார், செங்கோன்முறைக்குவழு நீர்கொல்வதென்றுசிலர்செயலால் விலக்கிவருவார்.

இ-ள். எமதரசனழப் பிள்ளையி னுயிரையுண்ட கொலைகாரி யிவள்தானோவென்று சிலர் கூடத்தொடர்வார்கள். வெவ்விதான கோபத்தையுடைய வலிய யானைமுன்னே கொண்டுபோ யிவளைப் போடுங்களென்று சிலர் கோபங்கொள்ளுவார்கள். சிலர் நெருங்கி வந்து வருத்தஞ்செய்வார்கள். பறையனுக்கு இவளை வதைசெய்யும்படி பங்குண்டோ? நம்முடைய ஆயுதங்க ளிவளைக் கொல்லாதோவென்று பதறுவார்கள் சிலர். நீங்கள் கொல்லத்துணிவது அரசனுடைய நீதி முறைக்குத் தப்புதலுண்டாகும் என்று சிலர் தங்கள் செய்கைகளாலே அவர்களை யிலக்கிக்கொண்டு வருவார்கள். எ-று. (ககச)

அழியாதகாசிபதி மகனுயிகொண்டவிவ ளனியாயகாரியசடி, பழிபூணி யிங்ககலி னெளிதாய் விடாது மாபலாவியும்பருகுவாள், விழியா லெறிந்து முயிர் கவர்வாண் முகத்திலெதிர்விழியாது நில்லு மெனவே, மொழிவார் வதைத்திடுகை பொருளாக வற்பமன முசியா ளெனப் பகருவார்.

இ-ள். அழிவில்லாத காசிராஜன் மகனுயிரை வதைத்து இவள் அநியாயமே செய்கிறவள்; கெட்டவள்; பழியே செய்யத்தக்கவள்; இவ்விடம் விட்டு நீங்கினால் இலேசாய்விடாமல் நம்மெல்லாருடைய உயிரையு முண்ணத்தக்கவள்; இவள் கண்ணால் வெருட்டியும் நம்முயிரை வாங்குவாள்; இவள் முகத்துக்கு முன்னே தோன்றாமல் நில்லுங்களென்று சொல்லுவார்கள். இப்போதிவளைக் கொல்லுகிறதே முடிவுபொருளா யிருக்கச்செய்தே இவள் கொஞ்சமேனு மனம் வருந்தாதிருக்கிறாளென்று சொல்லுகிறார்கள் சிலர். எ-று. (ககரு)

தப்பாது மன்மகனை யுயிர்கொண்டு திரமுண்ட தறுகண்ணரக்கிநமர்தங், கைப்பாச முற்றுவரவலளோ விசும்பினிடைகரவாதிருத்தலிலளே, னப்பா லனைக்கருவி யிவள்கொன்றதோவலதியார்கொன்றதோ தெய்வமே, யிப்பாவி தன்றலையில்வைத்தாயுனக்குநடு விலையோ வெனப்புகலுவார்.

இ-ள். தப்பாமல் நமதரசன்மகனை உயிரை வதைத்து ரத்தங்குடித்த அஞ்சாத ராக்ஷசியானால் நம்போல்வாருடைய கையிற் கயிற்றாற் கட்டுண்டு வரு

வாளோ? ஆகாசத்திலேபோய் மறையாதிருக்கிறாள்! (ஆகையால் இப்படி இவளடங்கியிருக்கக் காரணமென்ன!) அந்த அரசன் மகனைச் சினங்கொண்டு இவள் கொன்றது மெய்யோ அல்லது வேறே யாவர் கொன்றதோ ஓ ஓ தெய்வமே! இந்தப் பாபாத்மா தலைமேற் சுமையாகப் பழிசுமத்தினாய். உனக்குப் பொதுவான நீதியில்லையோவென்று சிலர் சொல்லுவார்கள். எ-று. (கக௬)

கொலைகாரி யைத்தெருவில் விலைகூறி விற்றபடு கொலைநாரதுட்ட னிவனும், புலைபா வினைக்கொலைசெ யிவளாவி கொல்வதொரு பொருளோவெனக் கதறுவார், விலைகூறி விற்றவனு மிவனுகில் விட்டிடுவன் விடலீரெனத்தொ டருவார், கலைபாலிறுக்கிமட லுறவே பிணித்தகயி றுடனேபிடித்து வருவார்.

இ-ள். இப்படிப்பட்ட கொலைசெய்கிற இவளை இந்தத் தெருவிலே விலைகூறி விற்றவனான கொலைசெய்கிற துஷ்டனாகிய இவன் பறையனாய் கொலைத்தொழில்செய்த இவளுயிரை வதைசெய்கிற திவனுக்கு ஒரு பெரியதோவென்று கத்தியழுவார்கள் சிலர். இப்படி விலைகூறி விற்றவனே இவனானால் இவளைக்கொல்லாமல் விட்டுவிடுவான். நீங்களெல்லாரும் இவர்களை விடாமற் றொடருங்களென்று சிலர் பின்னே தொடர்வார்கள். முன்னே சீலைத்துணியா லிறுகக்கட்டித் தோள்மடல்கள் சேரக்கட்டின கயிற்றைத் தாங்களுங் கூடப்பற்றிக்கொண்டு வருவார்கள் சிலர். எ-று. (ககஎ)

தனியாய பாவிகுறை யெவர்போ யுரைத்திடுவர்தருமாலயப் புரவல, னனியாயமென்றுசிறி துணராதொர் பெண்பழியை யவமேகொளக்கருதினு, னினியா ரிரங்குபவ ரெனவேயலைந்துவயி றெறியா வுலைந்து சுழல்வார், கனிவாய் புலர்ந்துநிலை தளர்வார் கலங்கியுடல் கரைவார் புலம்பி யழுவார்.

இ-ள். இவளோ வேறொரு ஆதாரவில்லாத பாவி. இவள் குறையை யாவர்போய் மெய்விளங்கச் சொல்லுவார்கள்? தருமக்கோயிலான அரசன் இது அநியாயமென்று கொஞ்சமேனும் ஆலோசியாமல் ஒரு பெண்பழியை வீணே கொள்ளவெண்ணினான். இனிமேல் யாவர் இந்த அநியாயத்துக்கு வியசனப்படுகிறவர்கள்? ஒருவரையுங் காணோமென்று வருந்தி வயிறெறிந்து உலைவாகிச் சுழலுவார்கள் சிலர். கனிபோன்ற வாய் காய்ந்து தமது சுவபாவந் தப்புவார்கள் சிலர். மனங்கலங்கி உடல் கரைவார்கள் சிலர். பிரலாபித்தழுவார்கள் சிலர். எ-று. (கக அ)

வல்லோர்கள்வல்லபடிசொல்வார்கண்மன்னுமிறைமருமானையிவள்கொன்றவா,றில்லாதபோதிவளை வறிதேவதைத்தபழி யார்பாலதென்று பகர்வார், கொல்லாது வன்சிறையில் வைத்தேவிளங்கினிவள் கொலைதான் வதைத்திடுதலா, மல்லாது விட்டிடலுமறமாகு மென்னவவ ரவரோ டுரைத்து ழலுவார்.

இ-ள். இப்படி வல்லவர்கள் தமக்குத் தோற்றினபடி யெல்லாம் சொல்ல லானார்கள். நிலைகொண்ட அரசகுமாரனை இவள் கொன்றபடி யில்லாதபோது இவளைக் கொல்வதானபாவம் யார்வசமாகக் கூடுமென்று சொல்வார்கள் சிலர். இவளைக்கொல்லாமல் வலியதான காவற்கூடத்திலே வைத்தால் இவள்செய்த கொலைதானே இவளைக் கொல்லும்படியாம் அதையல்லாமல் இவளை விட்டு விட்டாலும் அக்கொலைவிடாது சூழும். அல்லாமல் இவளை விட்டு விடுகிறதி னாலே புண்ணியமு முண்டாகுமென் றொருவர்க்கொருவர் சொல்லுகிறவர்க ளாகி வருந்துகிறார்கள். எ-று. (கககூ)

பதியேது பாவியிவண் வரவேதுவந்துபெறு பலனேது பாவ நிகழ்பெண், மதியேது வித்தனையும் விளைவித்த தேதென்று மறு காமருண்டு விழுவார், விதியே யறக்கொடியை யெளியா டனைக் கருவி விலைகூறி விற்றதுமலாற், சதியே விளைத்தனையி தறமோ வெனச்சிலர்க டளர்வார் முகத்தி லறைவார்.

இ-ள். இவள் ஊரேது? பாவியான இவள் இவ்விடம் வருதற்குக் காரண மென்ன? இங்கே வந்து பெற்ற பலனென்ன? இந்தப் பாவமுண்டாகப் பெண்புத்தி யுண்டானதெப்படி? இவ்வளவும் உண்டாகச்செய்ததென்ன கரும மென்று மயங்கித் திகைத்து விழுவார்கள் சிலர். ஓ தெய்வமே! நீயோ மிகவுங் கொடுமையையுடையாய். இந்த எளியவளை விரோதித்து விலைகூறி விற்கச் செய்ததுமல்லாமல் முழுதுங் கெடுதியையே உண்டாக்கினை. இது உனக்கு நியாயமோவென்று சிலர் தளர்ச்சியை யடைவார்கள். சிலர் தமது முகத்திலடித் துக் கொள்ளுவார்கள். எ-று. (கஉ0)

அங்கே யடித்தவடி யிங்கே யலைக்குமலை வல்லாம லெய்து கொலையும், பங்கே ருகத்தின று மலர்போல் விளங்குமுகமறியாத பாவையனையா, ளெங்கேபிறந்தனள்கொ லெங்கே வளர்ந்தனள் கொலெங்கே யிருந்த னள்கொலோ, லிங்கே யிறந்தவிய வந்தா ளெனப்பலரு மிடைகின்ற வெல்லைதனிலே.

இ-ள். அங்கே அவளை யடித்த அடி இங்கே நம்மை வருந்தச்செய்கிறது அந்த வருந்துதலையல்லாமல் நடந்தகொலையும் தாமரையினது நல்ல மலர்போ ன்ற முகத்தினாலே தெரிந்திலாத பிரதிமைபோன்ற இந்தப்பெண் எவ்விடத்தே பிறந்தாளோ! எங்கே வளர்ந்தவளோ! எங்கே யிருந்தவளோ! இங்கே வந்து செத்துப்போக வாலானாளென்று பலரு மிப்படி வருந்துகிறபோது. எ-று.

முகமானது தாமரை மலர்போல் விளங்குகிறதினாலே இவள் கொலை செய்யத் தெரியாதவளென்றுகொண் டவ்வாறு சொல்லுகிறார்களென்க. (கஉக)

கலி நிலைத்துறை.

என்னபாதகஞ்செய்தனமெனவிறைநகைத்துக்
கன்னிகைகளைக்கட்டியகயிறுதான்பிடித்துத்

துன்னுமாமணித்தோரணவாயிலைக்கடந்து
பொன்னின்மாநகர்ப்புரிசையின்புறத்துவந்திறுத்தான.

இ-ள். நாமென்ன பாவத்தைச் செய்தோமோவென்று அரிச்சந்திரமகாராஜன் சிரித்துச் சந்திரவதியினுடைய கைகளைக் கட்டியிருக்கிறகயிற்றைத் தன் கையிலேகொண்டு நெருங்கின பெரிதானரத்நகசிதமுள்ளதோரணங் கட்டியிருக்கிற வாயிலைக்கடந்து அந்தப் பொன்மயமானபட்டணத்து மதிலுக்கு வெளியே வந்து சேர்ந்தான். எ-று. (கஉஉ)

உற்றநாளையில்வகிட்டனவ்வும்பர்கோன்றனக்குக்
கொற்றவாினக்கியான்புகல்கோதிலானிடத்தே
யற்றைநாண்முதிற்கௌசிகனமைக்குமூறனைத்து
மிற்றைநாள்விடுங்காண்பநீயெழுகவென்றிசைத்தான்.

இ-ள். அப்படி மதிலுக்கு வெளியேவந்தபோதில் வசிஷ்டமகாமுனிவர் தேவேந்திரனைப்பார்த்து அரசனே! உனக்கு நான்சொன்ன யாதொருகுற்றமுமில்லாத அரிச்சந்திரனிடத்திலே அன்றைத்தினந் தொடக்கமாக விசுவாமித்திரன் குற்றமுள்ளவனாகச் செய்யவேண்டி உண்டாக்கின இடையூறுகள் முழுதும் இன்றையத்தினம் விட்டுப்போம். அதை நீயுகாணுங் காணக்கடவோம். நீ யெழுந்திடுகவென்று சொன்னர். எ-று. (கஉங)

தாழும்வார்சடைமாமுனியவ்வுரைசாற்றச்
சூழுமாதருந்தும்புருநாரதர்தாமும்
வாழும்வச்சிரபாணியும்வசிட்டனுமியாரு
மேழுபாலருங்காணவந்தந்தரத்திருந்தார்.

இ-ள், தொங்குவதான நீண்டசடையையுடைய பெருமை பொருந்தின வசிஷ்டமுனிவர் அந்தவார்த்தைசொல்லவே எப்போதுஞ் சூழ்ந்திருக்கிற தெய்வப்பெண்களும், தும்புரு நாரதர்களும், இவர்களோடு கூடிவாழ்கின்ற வச்சிராயுதபாணியான இந்திரனும், மற்ற எல்லாரும் திக்குப்பாலகரேழுபேரும் அரிச்சந்திரன் செய்கையைப்பார்க்க ஆகாயத்திலேவந்துதோன்றிருந்தார்கள். எ-று.

அந்தவேளையிற்கௌசிகன்விரைந்துவந்தரசே
யிந்தநோதகவெய்தலென்னெனக்குநீமுன்னந்
தந்தநாடியான்றந்திலேனெனுமொழிசாற்றி
யுந்தநாடுமிவ்வுயிர்களும்பெறுகெனவுரைத்தான்.

இ-ள். அந்தச்சமையத்திலே விசுவாமித்திரர் அதிவிரைவாக வந்து அரிச்சந்திரமகாராஜனே! இந்தத் துன்பத்தை யடையவேண்டியதென்ன எனக்கு நீ முன்னே கொடுத்தநாட்டை நான் கொடுத்திலேனென்று ஒருபொய்வார்த்தை சொல்லித் தப்பித்துக்கொண்டு உன்னுட்டையும் இந்த இறந்தவுயிர்களும் பிழைக்கப்பெருதியென்று சொன்னர். எ-று. (கஉடு)

சேரநின் றவன்செப்பிய தாங்கவரன்றி
யாருங்கேட்டிலர்வசிட்டனுமமரருமறிந்தார்
வீரவேந்தனுமங்கையுமவனடிவீழ்ந்துங்
கையாரைநீயிந்தவேழைமையுரைசெய்தியென்றார்.

இ-ள். அப்படிக் கிட்டிநின்று அந்த விசுவாமித்திரர் சொன்னதை மந்திரி முதலிய மூவரும் கேட்டதே யல்லாமல் மற்றை யெவர்களும் கேட்டிலர்கள். வசிஷ்டமகாமுனிவருந் தேவர்களுமே தெரிந்தவர்கள். அப்போது மகாவீரனான அரிச்சந்திரமகாராஜனும் சந்திரவதியும் அந்த விசுவாமித்திரர் காலிலே விழுந்து ஐயா! இவ்விடத்திலே யாரைப்பார்த்து இந்த மூடத்தனத்துக்கு இசைவதாகச் சொன்னீரென்று பின்னுஞ் சொல்லுகிறார்கள். எ-று. (கஉகூ)

சேய்மையண்மையிலுயிர்க்கொருதுணையெனச்சிறந்த
வாய்மையாலகந்தூய்மையாமற்றிலைபுறத்தைத்
தூய்மைசெய்வதுநீரலாற்சொல்லின்வேறுளதோ
நோய்மைசெய்யினும்வாய்மையேநோன்பெனக்கருதி.

இ-ள். தூரத்திலுஞ் சமீபத்திலும் உயிருக்கு ஒப்பற்ற துணையென்னும் படி சிறந்துள்ள சத்தியத்தினால் மனது பரிசுத்தமாம்; வேறொன்று பரிசுத்தஞ் செய்வதில்லை. தாமரை மலரைப் பரிசுத்தஞ்செய்வது அதுபிறந்த நீரேயல்லது சொல்லுமிடத்தில் வேறொன்றுண்டோ? அதுபோல் துன்பஞ் செய்வதானாலும் சத்தியமே விரதமென்று கொண்டு. எ-று. (கஉஎ)

புலையனும்விரும்பாதவிப்புன்புலால்யாக்கை
நிலையெனுமருண்டுயிரினுநெடிதுறச்சிறந்தே
தலைமைசேர்தருசத்தியம்பிறழ்வதுதரியேங்
கலையுணர்ந்தநீயெமக்கிதுகழறுவதழகோ.

இ-ள். நீசனுங் கூடவேண்டாத இந்தப் புல்லிதான புலால் நாறுகின்ற தேகத்தை நிலையுள்ளதென்று மயங்கி உயிரைப்பார்க்கிலும் அதிகமாகச் சிறந்து முதன்மைகொண்ட சத்தியந்தவறி நடக்கப்போமோ? கலைஞானங்களெல்லாந் தெரிந்த நீர் எங்களுக்கு இந்தச் சத்தியந்தவறி நடப்பதைச் சொல்லுவது உமக் கழகாமோ? எ-று. (கஉஅ)

இம்மையம்மைவீடெனமறைபுலங்கொளவியம்பு
மும்மையுந்தருமுறையுடைத்தெனுநிலைமுரணி
யெம்மைவாழ்வயிற்றடக்கிநீடுமிழ்கலாவெரிவாய்
வெம்மைகூர்நரகுய்க்கினுமெய்ம்மையைவிடேமால்.

இ-ள். இப்பிறப்பு வருபிறப்பு மோக்ஷம் என்று வேதங்கள் தெளிவாகச் சொல்லுகின்ற மூன்றையுஞ் சத்தியமே தருகின்ற முறையையுடையதென்கிற

நிலைமைக்கு விரோதமாக எங்களைத் தனதாழமான வயிற்றிலே அடக்கி மறுபடியும் வெளிவிடாதிருக்கின்ற அக்கினிவாய்ந்த வெப்பத்தைக்கொண்டு மிகுந்த நரகத்திலே வீழ்த்தினாலும் சத்தியத்தை விடமாட்டோம். எ-று. (கஉக)

பதியிழந்தனம்பாலனையிழந்தனம்படைத்த
நிதியிழந்தனமினிநமக்குளதெனநினைக்குங்
கதியிழக்கினுங்கட்டுரையிழக்கிலேமென்றார்
மதியிழந்துதன்வாயிழந்தருந்தவன்மறைந்தான்.

இ-ள். எங்கள் ஊரையுமிழந்தோம். பிள்ளையையுமிழந்தோம். நாங்கள் பெற்றுள்ள செல்வத்தையு மிழந்தோம். இனி எங்களுக் குள்ளதென்று நினைப்பதான நல்ல கதியையிழந்தாலும் சொன்ன சொல்லை யிழக்கமாட்டோமென்று சொன்னார்கள். அதுகேட்டுத் தன் புத்தியுங்கெட்டுத் தன் வாயுமிழந்து அந்த அருமையான தவத்தையுடைய விசுவாமித்திரர் மறைந்துபோனார். எ-று. ()

மறைந்துபோகலும்வாசவன்மாமுனிவனைக்கூ
யறைந்தகாரணமறிந்துபோவெனவருகழைத்தா
னிறைந்தநாணமுங்குறைந்தபார்வையுமுறநினைவு
குறைந்திருந்தனன்முகிலிடத்தவருடன்கூடி.

இ-ள். அப்படி விசுவாமித்திரர் மறைந்து போகிறபோது, இந்திரனானவன் அந்த மகாமுனிவரைக் கூப்பிட்டு நீர் முன்னே சொன்ன காரணத்தை முழுதுந் தெரிந்துகொண்டு போமென்று தன் சமீபமாக அழைத்தான். அதற்கு நிறைந்த வெட்கமுங் குறுகின பார்வையு முண்டாகத் தமது நினைவு குறைவாகி மேகமண்டலத்திலே மறைந்திருக்கிற தேவர்களுடனே கூடியிருந்தார் விசுவாமித்திரர். எ-று. (கஙக)

வாசத்தார்புனைவாசவனுடன்முனிவைகப்
பாசத்தாள்கரம்பிணித்ததோர்பாசங்கைபற்றிப்
பேசத்தான்பெறான்பிணஞ்சுடுகோலினாற்றள்ளி
நேசத்தார்மகன்கிடந்ததோர்நெடுநிலமுற்றான்.

இ-ள். பரிமளங்கொண்ட மாலையணிந்த இந்திரனுடனே கூடி விசுவாமித்திரரிருக்கச்செய்தே, தனக்கன்புள்ளவளான சந்திரவதி கையிலே கட்டின கயிற்றைத் தன் கையிலே கொண்டு யாதொரு வார்த்தையும் பேசமாட்டாதவனாகி அரிச்சந்திரமகாராஜன் பிணங்களைச் சுடுகிற தடியினாலே சந்திரவதியைத் தள்ளிக்கொண்டு தனக்கன்பால் நிறைந்துள்ள புத்திரன் கிடப்பதான அந்த ஒப்பில்லாத நீளத்தையுடைய சுடுகாட்டினிடத்தைச் சேர்ந்தான். எ-று. (கஙஉ)

வழக்கினென்றுநீவழிபடுதெய்வத்தைவணங்கிக்
கிழக்குநோக்கியிண்டிருவெனக்கிளிமொழிமடந்தை

பழக்கமானவக்கணவனைப்பரவியென்னுவி
யிழக்கற்கஞ்சியீயறம்வழுவேலெனவியம்பும்.

இ-ள். சந்திரவதியே! நீ வழக்கப்படியே வணங்கத்தக்க தெய்வத்தை வணங்கிக்கொண்டு கிழக்கு முகமாக நோக்கிக்கொண்டிங்கே இருவென்று சொல்லவே, அதற்குக் கிளிபோலும் சொல்லையுடைய சந்திரவதியானவள் தனக்கெப்போதும் பழக்கமாக வணங்குகிற அந்த நாயகனையே துதித்து வணங்கிக்கொண்டு இதோ என்னுயிரிழந்துபோவதற்குப் பயந்து நீர் உம்முடைய தருமத்தை வழுவாமற் காத்துக்கொள்ளுமென்று சொல்லுகிறாள். எ-று. ()

பெண்களாவார் கடவுளை வணங்குதலைக்காட்டிலும் தங்கொழுநரைத் தெய்வமெனவெண்ணிப் பூசித்தல் சிறப்புடைத்தென்று நீதிநூல்கள் கூறா நிற்கின்றன. சந்திரவதியும் அந்நான் முறைப்படியே தனது கணவனைப் பழமையாகப் பூசித்து வந்தவளென்பார். "பழக்கமானவக்கணவனைப்பரவி" என்றார்.

பொருந்துநீத்தத்திற்புற்புதவாழ்வைநீமெய்யென்
றருந்தவத்தையுமறத்தையுமெய்மையையும்விடுத்து
வருந்தன்மன்னவவழிவழிசிறக்கெனவாழ்த்தி
யிருந்தபின்சுடர்வாட்படைவலக்கையினெடுத்தான்.

இ-ள். அரசே! ஜலத்திலே பொருந்துகின்ற குமிழிபோன்ற இந்த வாழ்வை நீர் நிலையென்றுகொண்டு உம்முடைய அருமையான தவத்தையும் தருமத்தையும் மெய்மையையும் விட்டு வருத்தமடையீராக. உம்முடைய வமிச பாரம்பரியமாகச் சத்தியத்திற் சிறந்தவாகவென்று வாழ்த்திக் கிழக்கு முகமாக விருந்தாள். பின்பு அரசன் ஒளிகொண்ட வாளாயுதத்தை வலது கையிலே கொண்டான். எ-று. (கஙச)

உலகுயிர்க்கெலாம்பசுபதியொருமுதலாயி
னலகில்சீருடையவன்மொழிமறையெனினதன்க
ணிகலறம்பலவற்றினும்வாய்மையீடிலதேல்
விலகுறாமலவ்வாய்மையைவிரதமாக்கொளின்யான்.

இ-ள். உலகத்துயிர்களுக்கெல்லாம் பசுபதியே ஒப்பற்ற முதற்கடவுளானால் அளவில்லாத சிறப்பையுடைய அந்தக் கடவுள்சொல்லே வேதமென்றால், அந்த வேதத்திலே விளங்கச் சொல்லுகின்ற தருமங்கள் பல வகைகளிலும் மெய்யே ஒப்பில்லாததானால், அதனை விலகவிடாமல் அந்த மெய்சொல்லுதலையே நான் விரதமாகக் கொண்டதுண்டானால். எ-று. (கஙரு)

நெறியினன்னவென்றனைவிடாநிறையிவட்குளதே
லிறுதியின்மையைப்பெறுகவில்லெனினிவளிறுதி
பெறுகவென்றுவாள்வீசினன்பேதைதன்கழுத்தில்
மறுமணத்திடுமாலையாய்வீழ்ந்ததவ்வடிவாள்.

இ-ள். அந்த மெய்சொல்லுகிற மார்க்கத்தையே விரதமாகக்கொண்ட என்னை நீங்காத நிறைகுணம் இவளுக்குண்டாயிருந்தால் இவள் சாவாமையைப் பெறக்கடவது. இவையெல்லா மில்லையென்றால் இவள் சாவைப் பெறக்கடவதென்று சந்திரவதி கழுத்தில் வாளைக்கொண்டு வெட்டினன் அப்போது அந்தவெட்டின கூரிய வாளானது இரண்டாவது கலியாணத்துக்கிட்ட மாலையாகிச் சந்திரவதி கழுத்திலே விழுந்தது. எ-று. (கங.சு)

மயானகாண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - க0உகஉ.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது,

# மீட்சிக்காண்டம்.

படத்தகாதபாடியாவையும்பட்டுளத்தழுத்துந்
திடத்தினின்றுவாள்வெட்டினிற்பிழைத்தடுசெழுந்தீப்
புடத்தினின்றுமாற்றுயர்ந்தசெம்பொன்னெனப்பொலிந்தாண்
மடத்திற்றீர்ந்தொளிர்சந்திரவதியெனுமணங்கு.

இ-ள். அறியாமைக் குணத்தினின்று நீங்கி விளங்குகின்ற சந்திரவதியென்கிறபெண், ஒருவராலும் படக்கூடாத பாடுகளெல்லா முழுதும் பட்டுத் தன் மனத்திலே அழுத்தமாகக்கொண்ட சத்திய விரதத்துடனே நின்று கத்தி வெட்டுக்குத் தப்பி உருக்குகின்ற செழுமையான நெருப்புப் புடத்திலிருந்து மாற்றினு லுயர்ந்துள்ள சிவந்த பொன்போல் விளங்கினுள். எ-று. (க)

சடைபட்டோங்கியமுடிமுனிதனதுசூழ்வினையா
லடைபட்டூறுபாடனைத்தையுங்கடந்துசாணையினுற்
கடைபட்டானபின்செழுமணியெனவொளிகாட்டிக்
கொடைபட்டார்புகழ்க்கோமகன்விளங்கினன்குணத்தால்.

இ-ள். சடைகளுண்டாகிய நீண்ட தலையையுடைய விசுவாமித்திர முனிவருடைய வஞ்சனையினுலே அகப்பட்டு வந்த இடையூறுகளெல்லாவற்றை நீங்கிச் சாணைக்கல்லினுலே கடையப்பட்டு அது தீர்ந்த பின்பு விளங்குகின்ற செழுமையான மாணிக்கம்போலொளி தோற்றிக் கொடுத்தலுண்டாகி நிறைந்த புகழையுடைய அரிச்சந்திரமகாராசன் தனது நல்ல குணத்துடனே விளங்குதலானுன். எ-று. (உ)

புலத்தின்மாட்சிகொள்பொலன்கொடிபடரவோங்கரசு
குலத்தின்மாட்சியுங்குணத்தின்மாட்சியுங்குறைவறுசீர்
நலத்தின்மாட்சியும்வாய்மைமாட்சியுநனிமலர
நிலத்தின்மாட்சிகொள்காட்சியினேர்ந்தனர்பலரும்.

இ-ள். அறிவாற் பெருமைகொண்ட சந்திரவதியாகிய பொன்கொடி சூழ, வுயர்ந்த ஓராசனுகிய அரிச்சந்திரனுடைய குலத்தினது பெருமையும் குணத்தினது பெருமையும் குறைவற்ற சிறப்பும்பொருந்திய நன்மையினது பெருமையும் மெய்யே சொல்லுகிற பெருமையும் மிகவும் விளங்க, அந்த இடத்திலே பெருமை கொண்டிருக்கிற இவர்கள் தோற்றத்தைக் காண்கிறதற்குப் பலரும் வந்து கூடினுர்கள். எ-று. (௩)

வண்டிருந்ததார்வல்லியைச்சூட்டலும்வானிற்
கண்டிருந்தவர்மதித்தனர்குதித்தனர்களித்தார்

மண்டலத்திழிந்தீண்டினர்வயிரவாள்படைகைக்
கொண்டிருந்தவக்குரிசிலுமகிழ்ச்சியிற்குளித்தான்.

இ-ள். அந்த வண்டுகள் மொய்ப்பதான மாலையை அரசன் சந்திரமதிக் குச் சூட்டினவளவிலே, ஆகாயத்திலே அதைக்கண்டுகொண் டிருந்தவர்கள் மதித்து மெச்சினவர்களாகிச் சந்தோஷித்தாடினூர்கள். பின்பு அந்தச் சுடுகாட்டு நிலத்திலே வந்திறங்கிக் கூடினூர்கள். பலமான வாளாயுதத்தைக் கையிற் கொண்டிருந்த அந்த அரிச்சந்திரன் ஆனந்தக் கடலிலே முழுகினூன். எ-று. (ச)

என்றனுலிவன்குணமெலாம்விளங்கிடினெனைப்போ
னன்றியார்செய்தாரிவற்கெனநகைமுகமலர்ந்து
துன்றுவார்சடைசுவன்மிசைச்சுழன்றவிழ்ந்தாட
வென்றனாயெனக்கௌசிகனூடினன்விரைந்து.

இ-ள். என்னூலே இந்த அரிச்சந்திரனுடைய நல்ல குணங்களெல்லாம் விளங்குமேயானூல் என்னைப்போல் இவ்வரசனுக்கு நன்மை செய்தவர்கள் யாரென்று ஒளிபொருந்தின முகமலர்ச்சியாய் நெருங்கி நீண்ட சடைகள் பிடரி யிலே சுழன்றவிழ்ந்து விழுந்தாட வெற்றிகொண்டவர்போல் விசுவாமித்திர முனிவர் அதிக விரைவுடனே கூத்தாடினூர். எ-று. (ரு)

வாடிநாடொறும்வருந்தியவசிட்டன்மெய்ப்புளக
மூடினூன்மிகக்காலங்கண்மூன்றையுமுணர்ந்து
மாடினூனுயர்ந்தானயர்ந்தான்றனையறியா
தோடினூன்மகிழ்ந்துவகையங்கடல்குளித்துறைந்தான்.

இ-ள். தினந்தோறும் மனம்வாடி வருந்திக்கொண்டிருந்த வசிஷ்டமகா முனிவர் அப்போது தமதுடம்பெல்லாம் அதிகமாகப் புளகாங்கிதங் கொண்டார். இறப்பெதிர்வு நிகழ்வென்கிற முக்காலங்களையுந் தெரிந்தும் கூத்தாடினூர். எல் லாரிலுஞ் சிறந்தவரானூர். சோர்வுங்கொண்டார். தம்மைத்தாம் தெரிந்துகொள் ளாமல் ஓடினூர். அப்படிச் சந்தோஷித்து ஆனந்தக்கடலிலே முழுகியிருந்தார். எ-று. (சு)

அடையவானவர்திரண்டதுதிருவுளத்தடைத்துப்
புடையிலங்கியமைந்தரோரிருவரும்பொருந்தத்
தொடையிலங்கியசடைமுடிமுறைமுறைதுளக்கி
விடையிலேறிவந்துமையுடன்றோன்றினன்விமலன்.

இ-ள். சிவபெருமான், தேவர்கள் முழுதும் வந்து கூடி யிருக்கிறதைத் தமது திருவுள்ளத்திலேகொண்டு பக்கத்திலே விளங்குகின்ற புத்திரரிருவரான விநாயகனும் முருகக்கடவுளுங் கூடவா, கொன்றைமாலை விளங்குகின்ற தமது சடைமுடியை அடிக்கடி அசைத்துக்கொண்டு இடபவாகனத்தி லாரோகணித் துப் பார்வதியுடனே விளங்கினூர். எ-று. (எ)

சிந்திடும்படியவுணர்தம்முடல்களைத்தேய்த்த
வைந்துவெம்படையடக்கியகாமெடுத்தமைத்துச்

சுந்தரத்திருந்தோளிணை புளகமுற்றோங்க
வந்துதோற்றினன்வயினன்மேற்றிருமறுமார்பன்.

இ-ள். சிதறியோடும்படி அசுரருடல்களைத் தேயப்பண்ணின வெவ்விய பஞ்சாயுதங்களையுங் கொண்ட கைகளைத் தூக்கி எல்லாரையும் அமரச்சொல்லி அழகான திருத்தோள்களிரண்டும் புளகாங்கிதங்கொண்டு வளர கருடவாகனத்தின்மேலேறிவந்து தோன்றலானார்; திருவையும் மறுவையுங்கொண்ட மார்பையுடைய மகாவிஷ்ணு. எ-று. (அ)

தாதிற்றோன்றியதண்டுழாய்த்தார்முகிலுந்திப்
போதிற்றோன்றியநான்முகத்தொருதனிப்புத்தே
ளோதிற்றோன்றியவாணியோடோதிமப்புள்ளின்
மீதிற்றோன்றினன்விண்ணவர்யாவரும்வந்தார்.

இ-ள். மகரந்தங்களுடனே விளங்குகிற குளிர்ந்த துளசிமாலையை யணிந்த மேகவண்ணனுடைய திருவுந்திமலரிலே பிறந்த சதுர்முகங்களையுடைய ஒப்பில்லாத பிரமதேவரும், தம்முடைய வாக்கிலே தோன்றுகிற சரஸ்வதியுடனே அன்னவாகனத்தின்மேலேறிவந்தார். தேவர்களெல்லாரும் வந்து கூடினார்கள். எ-று. (கூ)

சித்தர்கின்னரர்தும்புருநாரதர்தேவர்
பத்தர்தானவர்கருடகந்தருவர்கள்பசாசர்
பித்தன்றன்னொடுமாலொடும்பிதாமகனோடு
மெய்த்துவந்திரைந்தீண்டினர்மேதினிமிசையே.

இ-ள். இப்படிச் சித்தர்களும் கின்னரர்களும் தும்புரு நாரதர்களும் தேவர்களிலே பத்தர்களும் அசுரர்களும் கருடகாந்தருவர்களும் பைசாசர்களும் சிவனுடனே விஷ்ணுவும் பிரமாவும் மெச்சிக்கொண்டு முழக்கமாகி அந்த இடத்திலே வந்துசேர்ந்தார்கள். எ-று. (க0)

சந்திராதித்தர்வைரவர்சத்தமாதர்களோ
டிந்திராதியரெண்மர்மாமுனிவரரியக்கர்
மந்தரப்புயத்திரதிதோய்வேனில்வேண்மற்றோ
ரந்தரத்தினைமறைத்துவந்தாவருனடைந்தார்.

இ-ள். இன்னும் சந்திரசூரியர்களும் வைரவர்களும் சத்தமாதர்களுடனே இந்திரன் முதலானவராகிய அஷ்டதிக்குப்பாலகரும் மகாமுனிவர்களும் இயக்கர்களும் மந்தரகிரிபோலுந் தோள்களிலே இரதிதேவி சேர்வதான கோடைகாலத்துக்குரிய மன்மதனும் மற்றுமுள்ளவர்களும் ஆகாயத்தை மூடிக்கொண்டு வந்து அவ்விடத்திலே கூடினார்கள். எ-று. (கக)

கந்தரத்தினில்வார்விசிமுதுகுறக்கதுவ
மந்தரப்புயமாயிரமுடையவோர்வாணன்
சுந்தரக்கையான்முழக்கிடுங்குடமுழாத்தொனியு
மந்தரச்செழுந்துந்துபித்துழனியுமார்க்க.

இ-ள். கழுத்திலே மாட்டின தோல் இறுக்கமானது முதுகிலே படிந்திருக்க, மந்தரகிரிபோலும் தோள்களாயிரமுடைய ஒப்பில்லாத வாணசுரனானவன் அழகான தனது கையால் முழக்குகின்ற குடமுழாவின் சத்தமும், செழுமையான ஆகாசதுந்துமி வாத்தியத்தோசையும் எங்குமுழக்கமாக. எ-று. (கஉ)

சின்னம்பேரிகைசல்லிகைசெம்பொனின்காளை
மின்னுமாமுகிலிடியெனக்கடலெனவிம்மத்
துன்னரம்பையர்சொரிந்திடுகற்பகந்துணரும்
பொன்னினன்னெடும்பூக்களும்பொலிந்தனவன்றே.

இ-ள். சின்னம் - பேரிகை - சல்லிகை - செம்பொன்னாலாகிய எக்காளம் ஆகிய இந்த வாத்தியங்கள் மின்னுகின்ற கறுத்த மேகத்திடிபோலவும், கடல்போலவும் முழங்க, அங்கே நெருங்கின ரம்பாஸ்திரீகள் பொழிகின்ற கற்பகப் பூங்கொத்துகளும் பொன்னாலாகிய நல்ல நெடுமையான மலர்களும் எங்கும் நிறைதலாயின. எ-று. (கந.)

வந்ததேவரைக்கண்டரிச்சந்திரன்மகிழ்ந்தே
யெந்தமாதவமென்னையோவென்னையோவென்னாச்
சிந்தையுட்பெருகானந்தப்பெருவெள்ளந்தேக்கிப்
பந்தியாங்கரைபொடிபடப்புடைத்ததையன்றே.

இ-ள். அப்படி வந்துகூடின தேவர்களையெல்லாங் கண்டு அரிச்சந்திரமகாராசன் சந்தோஷித்து எங்களுடைய பெரிதான தவமெப்படிப்பட்டதோவென்று மனத்துக்குள்ளே பெருகுகின்ற பெரிதான ஆனந்தவெள்ளம் தேக்குதலாகி, அவனுடைய புத்தியாகிய கரை தூளாகும்படி மோதியது. எ-று. ()

தொழுதனன்றெழுதெழுந்தனனடிமுடிதொடங்கி
முழுதுமுற்றியவுவகையம்பெருங்கடன்மூழ்கிப்
புழுதியாடினன்கருணையங்கண்ணினீர்பொழிய
வழுதுவீழ்ந்தனன்செய்தவமின்னதென்றறியான்.

இ-ள். தான்செய்த செவ்வையான தவம் இப்படிப்பட்டதென் றறியாதவனாகி, அந்தத் தேவர்களை யெல்லாம் வணங்கினான்; வணங்கி யெழுந்திருந்தான். அவர்கள் பாதங்களைத் தன் முடிமேலே சூடிக்கொண்டு முழுது நிரம்புதலான சந்தோஷமாகிய அழகிய பெருங்கடலிலே முழுகி மண்புழுதி யெல்லாம் தனது கிருபை பொருந்தின கண்களில் நீர் சிந்துதலினாலே தன்மேலெல்லாம் கிளர்ந்து படிவதானான். பின்னும் அழுவதாயினான். எ-று. (கரு)

நாரிபாகனைமுகுந்தனைநான்முகத்தோனை
மூரிவேலனைவிநாயகமூர்த்தியைப்பணிந்தான்
பூரைபூரையென்றிருகையாலமைத்தபுத்தேளிர்
யாரையாரையென்றறிந்திபாம்விளம்புதுமம்மா.

இ-ள். பார்வதி சமேதனையும் மகாவிஷ்ணுவையும் சதுர்முகப் பிர்மாவையும் நீண்ட வேலாயுதக்கடவுளையும் விநாயகமூர்த்தியையும் வணங்கினன். வணங்கவே, போதும் போதுமென்று இரண்டு கைகளாலும் அரிச்சந்திரனை அடங்கச்செய்த தேவர்கள் யாராரை இன்னரின்னரென்று நாம் தெரிந்து சொல்லமாட்டுவோம்! எ-று.

பூரை பூரை - போதும் போதும் என்பதுபொருள். (கசு)

மீட்டுமென்னவன்விமலனைத்தொழுதிவண்மிடைந்த
கூட்டமாயுளாரியாவர்க்குமாகெனக்குறித்தான்
நீட்டும்பல்சினைக்கமைவதன்றூநெடுமுதலி
லூட்டுநீரவரனைவர்க்குமுளங்குளிர்ந்தன்றே.

இ-ள். அதன் பின்பும் அரிச்சந்திரன் பரமசிவனை வணங்கி இங்கே வந்து கூடின கூட்டமானவர்கள் யாவருக்கும் மிகுந்த வந்தனம் ஏற்றக்கடவதென்று குறிப்பித்தான். நீண்ட வேரிலே ஊற்றுகிற நீர் நீட்டமான பல கிளைகளுக்கு ஏற்பதானதல்லவோ? அப்படியே அங்கேவந்த எல்லாருக்கு மனது குளிர்ச்சியாயிற்று. எ-று. (கஎ)

ஐயனேயெமைவழிவழியடிமைகொண்டருள்கூர்
செய்யனேசிவலோகனேசுருதியின்சிரத்தின்
மெய்யனேயுனைவிழிகளாற்கண்டுவீழ்ந்திறைஞ்சி
யுய்யநாயினேன்புரிதவமுணர்கிலேனென்றான்.

இ-ள். சுவாமி! எங்களை வம்சபாரம்பரியமாய் அடிமைகொண்டு கிருபை பண்ணுகின்ற சிவந்த வடிவனே! சிவலோகத்தை யுடையவனே! வேதத்தின் தலையிலே விளங்குகின்ற தலைமையானவனே! என் கண்களாலே கண்டு கீழே விழுந்து வணங்கிப்பிழைக்க நாய்போன்ற யான்செய்த தவமின்னதென்று தெரிந்திலேனென்று சொன்னனரிச்சந்திரன். எ-று. (கஅ)

தையலம்பிகைதனைத்தொழுஞ்சந்திரவதியைக்
கையினுலெடுத்தாங்கவள்கற்பினைப்புகழ்ந்தாள்
துய்யமுப்பத்திரண்டறம்வளர்த்தகைதொடலு
மெய்குழைந்ததுதழைந்ததுபேரின்பவெள்ளம்.

இ-ள். அப்போது சுந்தரியான பார்வதியை வணங்கி நிற்கிற சந்திரவதியைத் தன் கையினுலே வாரியெடுத்து அவளுடைய பதிவிரதா தருமத்தை மிகவுங் கொண்டாடினள். பார்வதிதேவி அப்படிப் பரிசுத்தமான முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்த கையினுலே தொட்டவளவிலே சந்திரவதியினுடைய உடம்பெல்லாம் நெகிழ்ந்து விளங்கலாயிற்று. பேரின்பவெள்ளமும் உள்ளே பெருகுதலாயிற்று. எ-று. (கக)

மயிலைமுற்செலநடத்தியேவரைபகவெறிந்தோ
னயிலெடுத்தசெங்கையினுல்வருகெனவழைக்கக்
குயின்மொழிச்செழுங்குதலைவாயரசிளங்குமரன்
றுயிலுணர்ந்தவர்போற்புகுந்திணையடிதொழுதான்.

இ-ள். அப்போது கிரவுஞ்சகிரி பிளக்கக்குத்தின முருகவேளானவர் மயில் வாகனத்தை முன்னே போகும்படி செலுத்திக்கொண்டு வந்து வேல்பிடித்த சிவந்த கையினாலே தேவதாசா வாவென்று கூப்பிட, உடனே குயில்போலும் வசனத்தையுடைய சந்திரவதி பெற்ற செழுமையான மழலைச்சொல் வசனிக்கிற வாயையுடைய இளமையான அரசகுமாரன் நித்திரைதெளிந்து விழித்தவர்களைப்போ லெழுந்து வந்து முருகவேளினுடைய இரண்டு பாதங்களையும் வணங்கினான். எ-று. (உ0)

வேலன்கூயசேய்துணையெனக்காசியர்வேந்தன்
பாலனுவிபெற்றெழுந்துபோய்முருகனைப்பணிந்தான்
சீலமேவுமச்சிறுவரோரிருவருஞ்சிறப்பிற்
காலகாலனுந்தேவருமிற்பதுகண்டார்.

இ-ள். அப்படி முருகவேளானவர் கூப்பிட்ட பிள்ளைக்குத் தம்பிபோல் காசிதேசத்தாருக் கரசனுடைய பிள்ளையும் உயிருண்டாகி யெழுந்திருந்து அந்த முருகவேளை வணங்கினான். நற்குணங்களுண்டான அந்த இரண்டு பிள்ளைகளும் அங்கே தங்கள் தங்கள் சிறப்புடனே பரமசிவனும் மற்றைத்தேவர்களும் வந்து கூடி நிற்கிறதைப் பார்த்தார்கள். எ-று. (உக)

ஆசினன்குணத்தயோத்தியர்வேந்தனுமணங்குங்
காசிவேந்தனுமதலையரிருவருங்களித்துக்
கூசிமெய்மயிர்பொடித்திடக்கொண்டனர்புளகம்
வீசியோங்கிடவிறைஞ்சினாரவசமேவினரால்.

இ-ள். குற்றமில்லாத நல்ல குணத்தையுடைய அயோத்தியாபுரிக் கரசனான அரிச்சந்திரனும் காசிராஜனும், இரண்டு பிள்ளைகளும் சந்தோஷித்துக் கூசுதலாய் உடம்பெல்லாம் உரோமங்கள் சிலிர்க்க புளகங்கொண்டார்கள். பின்னும் அந்தப் புளகாங்கிதமே நிமிர்ந்து மேன்மேலாக முருகவேளை வணங்கினார்கள். பரவசருமானார்கள். எ-று.

பரவசம் - தன்னை மறத்தல். (உஉ)

மன்னர்மன்னனைநோக்கியேமலர்க்கரமமையா
வென்னையோவெனவுருகித்தந்திருவுளமிரங்கி
முன்னையுத்தமரெவருளுமுறைமைக்குநெறிக்கு
முன்னையொப்பவரில்லெனமூவருமுரைத்தார்

இ-ள். அந்த ராஜாதி ராஜனைப்பார்த்து மலர்போலுங் கையினால் அமரச்செய்து, இது என்ன சிறந்தகுணம்! ஐயோவென்று மனமுருகித் தங்கள் திருவுள்ளமிரங்கி அரிச்சந்திரமகாராசனே! முன்புள்ள உத்தமர்களெல்லாரிலும் நீதிக்கும் நீதியிற் செல்லுகிற நன்மார்க்கத்துக்கும் உன்னை யொப்பானவர்களொருவரு மில்லையென்று மும்மூர்த்திகளுஞ் சொன்னார்கள். எ-று. (உந)

தேவதேவர்களருளியதிருமொழிகேளா
யாவரிப்பயன்பெற்றவரென்றுநைந்துருகிப்

பூவருங்குழல்வல்லியும்புதல்வரும்புருடர்
மூவரும்விழுந்தெழுந்துபன்முறைமுறைதுதித்தார்.

இ-ள். அப்படி தேவர்களுக்குத் தேவரான மும்மூர்த்திகளும் அருளிச்செய்வதான திருவார்த்தைகளைக்கேட்டு நம்மைப்போல் யார் இப்படிப்பட்ட பேறுபெற்றவர்களென்று நைந்து உருகுதலாகி பூமணம் வீசுவதான கூந்தலையுடைய சந்திரவதியும், புத்திரர்களும், மந்திரி-காசிராஜன்-அரிச்சந்திரமகாராசன் ஆகிய மூவரும் அவர்கள் காலிலேவிழுந் தெழுந்திருந்து பலவாறு ஒவ்வொருவருந் தனித்தனியே தோத்திரஞ் செய்தார்கள். எ-று. (உச)

எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

அன்னவர் வணங்கி யங்கநெக் குருகி யவசமுற் றெழுந்திடு மமைதி, கன்னிபங் காளன் றிருக்கர மமைத்துக் கௌசிகன் றனையெதிர்நோக்கி, மன்னவன் றனக்கு நீயிடர் விளைத்த வகைமையு மெய்தியவாறு, மின்னநற் றலத்து ளியாவரு மறிமவியம்பெனத் திருவுள மானர்.

இ-ள். அவர்கள் அப்படி வணங்கித்துதித்து உடம்பெல்லாங் கட்டு விட்டுருகிப் பரவசமாக எழுந்திருக்கிற சமையத்தில், பார்வதி சமேதரானவர் தமது திருக்கைகளால் அவர்களை அமரச்செய்து விசுவாமித்திரரைப் பார்த்து நீர் அரிச்சந்திரமகாராஜனுக்குச் செய்த துன்ப வகைகளும் அந்தத் துன்பங்களை அவன் அனுபவித்ததும் இந்த நல்லோர்கள் கூடின இடத்திலே எல்லோருக்குந் தெரியச்சொல்லுமென்று திருவுளம்பற்றி யருளினர். எ-று. (உரு)

இம்மொழி யிறைவன் வினதலுமுனிவனிதயத்திற் றுணுக்கமுற்றெதிர்போய்,மும்முறைநிலத்தின் மிசைவிழுந்திறைஞ்சிமுதுமறைமொழிகளாற்பழிச்சிக், கைம்மலர்கொடுவாய்புதைத்துமெய்குனிந்து கண்கணீ ரரும்பமெய் பொடிப்ப, வெம்மையாளுடையவிறைவகேட் டருள்கென் றியாவையு நிகழ்ந்தவா றிசைப்பான்.

இ-ள். இந்த வார்த்தையைப் பரமசிவன் சொல்லிக் கேட்கும்போது விசுவாமித்திரமுனிவர் தம்முள்ளத்திலே பயங்கொண்டு அவருக்கு முன்னேபோய் மூன்றுதரம் பூமியிலே படிய விழுந்து வணங்கி பழைய வேதவாக்கியங்களாலே தோத்திரம்பண்ணி தமது கையாகிய பூவினாலே வாயை மூடிக்கொண்டு உடம்பு வணங்கிக் கண்களிலே நீருண்டாகவும் உடம்பு புளகாங்கிக்கவும் எங்களையெல்லாம் அடிமையாகக் கொண்ட கடவுளே! கேட்டருளுமென்று நடந்த விஷயங்களெல்லாஞ் சொன்னார். எ-று. (உசு)

வாசவன் முன்னாள் வினையகாரணமும் வசிட்டனுந் தானுமன்றிட்ட, பூசலும் விலங்காற் புனமழித் ததுவும்புரவலன்வேட்டைபோந் ததுவும், நீசமங் கையரை விடுத்ததுந் தனக்கு நிருபனன்னாடளித் தேகிக், காசிபுக்கிமங் காத்ததும் விளைத்த கருமமுங் கௌசிகனுரைத்தான்.

இ-ள். முன்னே இந்திரன்கேட்ட நிமித்தமும், அதற்கு வசிட்டரும் தாமும் அப்போது செய்துகொண்ட சண்டையும், பின்பு மிருகங்களாலே நினைப்புனமுதலிய நாடெல்லாம் அழியப்பண்ணினதும், அதற்காக அரசன் வேட்டையாட வந்ததும், அப்போது நீச கன்னிகைகளை அனுப்பினதும், அவர்கள் நிமித்தம் அரசன் தனது நல்ல நாடுமுழுதும் தமக்குக் கொடுத்துவிட்டுப் போய்க் காசிப்பட்டணத்துச் சுடுகாட்டைக் காத்ததுவும் பின்பு நடந்த செய்கைகளும் விசுவாமித்திரர் சொன்னார். எ-று. (உஎ)

என்றவனுரைக்கவிந்திரனவைபத்திகலிநீயருவினைவிளைத்த,
தொன்றலபலவுண் டவற்றினான்மனத்திலுற்றது பெற்றிலையுலக,
மன்றன னளித்து மின்றிதுமட்டு மறைநிலை பிழத்தில னதனால்,
வென்றவர் தோற்றார் யாரென விமலன் வினவிடக் கௌசிகன் விளம்பும்.

இ-ள். அப்படியாக அந்த விசுவாமித்திரமுனிவர் சொல்லவே, நீர் இந்திரன் சபையிலே வசிஷ்டருடனே பகைத்து அருமையான செய்கைகளைச் செய்தது ஒருவகையல்ல; அநேகமுண்டு. அப்படிச் செய்தவைகளாலே உம்முடைய மனத்திலேகொண்ட கொள்கையை அடைந்திலீர். தனது நாட்டை அரிச்சந்திரன் கொடுத்த அன்றுமுத லின்றளவும் தனது தரும நிலையினின்றுந் தவறுத(லில்லாதிருக்கின்றான். அப்படி இருக்கிறதினாலே) வென்றவர் யார்? தோற்றவர் யார்? என்று பரமசிவன் கேட்க, விசுவாமித்திரர் சொல்லுகிறார். எ-று. ()

கோதிலாக்குணத்தோ னீதியுநெறியுங் குறியுமியா னறிகிலாதிகழ்ந்தே,னுதலால் வென்றோன் வசிட்டனேதோற்றே னடியனே யடியனே மேனு,காதலாற்செய்த தவத்தினிற்பாதி காவலன் றனக்கியா னளித்தே, னீதலாலெனக்கன் றீந்தபேரரசு மீந்தனனென்றுரை செய்தான்.

இ-ள். குற்றமில்லாத குணத்தினனாகிய அரிச்சந்திரனுடைய நீதியும், (நல்ல) வழியே நிற்கிறதும், அவன் மனக்குறிப்பும் நான் தெரிந்து கொள்ளாமல் இப்படி இகழ்ச்சி செய்தேன். ஆகையால் வென்றவர் வசிஷ்டரே. தோற்றவன் அடியேனே. ஆனதினாலே முன்னாள் நான் அன்புடனே செய்த தவத்திலே பாதி அரிச்சந்திர மகாராசனுக்குக் கொடுத்தேன். இதையல்லாமல் அப்போதெனக்கு அவன் கொடுத்த பெரிதான அரசாட்சியையும் அவனுக்கே கொடுத்து விட்டேனென்று சொன்னார். எ-று. (உக)

உரைத்தது செவியிற் காய்ந்தநாராசமோட்டியதெனவிறையுருகிக்,காப்பினர்தாமுங் கொடுத்தது வாங்கக்கண்டிலோங்கேட்டிலோங்கையேற்,றிரப்பினர்க்களித்த பொருடனைக்கொண்டோ னிவனெனப் பெயர்படைத்துலகம்,புரப்பவன் யானோ விப்பழிதனையான் பூண்கிலேனென்றனன் பின்னும்.

இ-ள். அப்படி அவர்சொன்னது தன்காதிலே காய்ந்த நாராசத்தைப் புகட்டினாற்போலிருக்க, அரசன் மனமுருகி ஒருவர் கேட்ட பொருளை இல்லையென்று மறைத்துக் கொள்ளுகிறவர்களுங் கூடக் கொடுத்த பொருளை வாங்கிக் கொள்ள நாங்கள் கண்டதுமில்லை. கேட்டது மில்லை. கையையேந்தி யாசிப்பவர்களுக்குக் கொடுத்தபொருளைத் திரும்பவும் வாங்கிக்கொண்டவ னிவனென்னும்பெயர்கொண்டு உலகத்தையாளுகிறவன் நானோ? அல்லன். இனி இந்தப் பழிப்பை நான் அடையமாட்டேனென்று பின்னுஞ் சொல்லுகிறான். எ-று.

**இம்மையிற் பழியா மறுமையினரக மிரந்தவர்க்களித்ததை வாங்கிற், செம்மையோர்க்கெல்லாம் பெருநகையாமித்தீமைசெய்வதற்குநீ யுலகத், தெம்மையோ கண்டா யிதற்குமுன் றீராவிடர் பல விளைத்தனையெனினு, மும்மையும் பழியே சூட்டுத றகுமோ வென்றனன் முனியதற் குரைப்பான்.**

இ-ள். யாசித்தவர்களுக்குக் கொடுத்த பொருளை மீளவும் வாங்கிக்கொண்டால் இப்பிறப்பிற்குப் பழிப்பாகும். வருங்காலத்துக்கு நாசமுண்டாகும் இன்னும் செவ்வைக்குணமுள்ள எல்லாருக்கும் பெரிதான இகழ்ச்சியுண்டாகும். இப்படியாகக் கெடுதலுண்டாக்குதற்கு நீர் இந்த வுலகத்திலே எங்களைத்தானோ கண்டீர். இன்னமும் இக்காலத்துக்கு முன்னே தீராத துன்பங்களையெல்லாம் அநேகமாகச் செய்தீராலும் மூன்று காலத்துக்கும் எனக்குப் பழிப்பையே உண்டாக்குகிறது உம்முடைய பெருமைக்குத் தக்கதோவென்று சொன்னான். அதற்கு விசுவாமித்திரர் சொல்லுகிறார். எ-று. (௩௧)

**கன்னலங் கழனிநாடுநன் னகருங் கருதிச்செய் தவத்தை யான்விட்டு, மன்னவனாக வல்லனோமீண்டும் வள்ளல்கேள் வசிட்டனுமியானும், முன்னமே மொழிந்த முறையறி வதற்குமுன் முறைமைசோதித்தறிந் துணர்ந்தேன், நின்னகர் நீயே யாளுதி யென்ன நெடுந்தகை மறுத்தனன் மறித்தும்.**

இ-ள். கரும்புகள் விளைவதான அழகுகொண்ட வயல்சூழ்ந்த நாடும் நல்ல நகரும்வேண்டி நான் செய்கிற தவத்தைவிட்டு மறுபடியும் அரசனாக மாட்டுவேனோ? ஓ பிரபுவே! கேள்: வசிஷ்ட முனிவரும் நானும் இந்திரன் முன்னே வாதாடிக்கொண்ட முறைமையைத் தெரிவதற்காக உனது முறைமையைச் சோதித்துப்பார்த்துத் தெரிந்தேன். ஆகையாலினி உன்பட்டணத்தை நீயே ஆளக்கடவையென்றுசொல்ல, அதற்கு நெடிதான பெருமையையுடைய அரிச்சந்திரமகாராசன் மறுபடியுந் தடுத்துச் சொல்லுகிறான். எ-று. (௩௨)

**வேதியர்க் காளாய் மனையையுமைந்தன் றன்னையும் விற்றனன் யான்போய்ச், சாதியிற்கீழாம் புலையனுக்காளாய்ச் சவஞ்சுடு காடுகாத்திருந்தேன், சோதிமண்டபத்தின் மணித்தவிசேறிச்**

சுடர்முடி கவித்துமண் புரக்க, நீதியன்றென்றே யானரசளித்தே னினக்கதே யெனக்கிதே யென்ளுன்.

இ-ள். பிராமணருக்கு அடிமையாக என்மனைவியையும் என்பிள்ளையையும் விலக்குவித்தேன். நானும் சாதியி லிழிவான நீசனுக்கு அடிமையாய்ப் பிணஞ்சுடுகிற சுடுகாட்டுக்குள்ளேபோய்க் காத்துக் கொண்டிருந்தேன். இனி வொளிபொருந்தின சபாமண்டபத்திலே ரத்ந சிங்காதனத்தின் மேலேறி பிரகாசிக்கின்ற கிரீடத்தைச் சூடிக்கொண்டு உலகத்தை ரட்சிக்கிறது நீதியல்லவென்று இப்போது நான் அந்த அரசாட்சியை உமக்கேகொடுத்தேன். உமக்கதுவே தக்கது எனக்கு இதுவே தக்கதென்று சொன்ளுன். எ-று. (௩௩)

ஆமதே யெனக்குச் சுடலைகாத்திருப்ப தவனிகாத் திருப்பதற் கன்னன், போமதே நினக்குத் தொழிலென மறுத்துப்புரவல னுரைப்பது கேளா, வாமமே கலையா டனைவிலைகொண்டு மறையவனுகியாண்டுறைந்த, தூமகே துவுங்கங் காளனுர் திருமுன்றோன்றிநின் றினையன சொல்வான்.

இ-ள். எனக்குச் சுடுகாட்டைக் காத்திருக்கிறதே தகுதியானது. உலகத்தைக் காத்துக்கொண் டிருக்கிறதே உமக்குத் தக்கதாகும். ஆகையாலினி நீர் அயோத்தியாபுரிக்குப் போகிறதே காரியமென்று தடுத்து அரசன் சொல்கிறதைக்கேட்டு அழகுள்ள மேகலையணிந்த சந்திரவதியை விலைக்கு வாங்கிக் கொண்டங்கே பிராமணனுகியிருந்த அக்கினிபகவான் பரமசிவனுடைய சந்நிதி முன்னே வந்து நின்று இந்த வார்த்தைகள் சொல்வதானுன். எ-று. (௩௪)

என்னைநீ யுரைத்தா யெனக்குவிற் றதுவு மிகழ்ச்சியோ விவள்விலை படுதல், முன்னமே யுணர்ந்து கொள்வதற் கிசைந்து முதுமறைக் குலத்துவந் துதித்து, மின்னையு மைந்தன் றன்னையும்விற்கவிலைகொண்ட வாவணமீதென், றன்னைபங்காளன் றிருமுனேவைத்தா னரசனு மதிசயமுற்றுன்.

இ-ள். ஒ அரசனே! நீரென்னசொன்னீர்? எனக்கு விற்றதும் கூட உமக்கு இகழ்வாகுமோ? இந்தச் சந்திரவதி விலையாகிறது முன்னே தானே தெரிந்து விலைக்கு வாங்குதற்குச் சம்மதித்துப் பழைமைதான வேதப்பிராமணர் குலத்திலே வந்து நான் பிறந்து மின்னலையொத்த சந்திரவதியையும் மகனையும் நீ விற்க நான் விலைக்குவாங்கின கிரயவோலை இதுவென்று பார்வதி சமேதர் சந்நிதி முன்னே வைத்தான். அதுகண்டு அரசன் ஆச்சரியமடைந்தான். எ-று. (௩௫)

காலனவ் வளவிற் கருங்கடா வேறிக் கருமுகிற் கப்புவிட்டனைய, கோலமுஞ் சிவந்த கண்களு நிவந்த குஞ்சியுங் குண்டலக் குழையுஞ், சூலமுங் காலதண்டமும் பணைத்த தோள்களு மார்பமுந் துலங்க, மூலமா முதலை நோக்கிவீழ்ந் திறைஞ்சி முகமலர்ந்தரசன்முன் மொழிவான்.

இ-ள். அந்தச் சமையத்திலே யமனானவன் கறுத்த எருமைக்கடாவின் மேலேறிக்கொண்டு கறுத்த மேகமானது கிளைகள் விட்டிருக்கிறது போலான கைகால்களோடு கூடினவடிவும், சிவப்பான கண்களும், நீண்ட தலைமயிர்களும், குண்டலமணிந்த காதுகளும், சூலாயுதமும், காலதண்டமும் பருத்த தோள்களும், மார்பும் விளங்க ஆதியான பெரிய முதற்கடவுளைத் தரிசித்துப் பாதத்திலே விழுந்து வணங்கிப் பின்பு முகமலர்ச்சியுடனே அரசனுக்கு முன்னே சொல்லுகிறான். எ-று. (ஙசு)

அலைகடற் புவியிற் புலையருக் கடிமை யாவையென்பதுமுதலறிந்து, புலையனாய்ப்பிறந்து கொண்டவன் யானே பொறுத்துநீ தந்தவாவணமீ, திலைகுலாந் தொடையா யிருந்துநீ காத்தவிரமுமியாகசா லைகள்காண், தொலைவிலா வடிவென் றுணரிநீ யிகழ்ந்த சுடலையைப் பாரென வுரைப்பான்.

இ-ள். அலைகளைக்கொண்ட கடலாலே சூழப்பட்ட வுலகத்திலே நீசருக்கு நீ அடிமையாவாயென்பதை நான் முன்னேதானே தெரிந்து நீசனாகப் பிறந்திருந்து உன்னை விலைக்கு வாங்கினவன் நானே. அடிமையாக ஒப்புக்கொண்டு நீ எழுதித்தந்த விலையோலை இதுதான். பச்சிலைகூடின மாலையணிந்த அரசனே! நீ இருந்து காத்ததான சுடுகாடும் யாகசாலைகளென்று தெரிந்து கொள்வாயாக. இது அழியாத பழிப்பென்று நீ எண்ணுவையானால் நீ இகழ்ச்சிசெய்கிற சுடுகாட்டை நீயே பார்த்தறிந்து கொள்ளென்று சொன்னான் எமன். எ-று.

ஆவணமிரண்டுங் கண்டுதம் மெழுத்தே யாமென வறிந்து மெய்மகிழ்ந்து, கோவணக்கிரண மணிமுடி துளக்கிக் கிலேசமும் பீடையுமகற்றிக், காவண நிழலிற் கழுகெழுந் தோங்குங் கனற்புகைச் சுடலையைப் பார்த்தான், பூவணங் குறியும் பொய்கையும்வாசப் பொழிலுமாய்ப் பொலிந்ததை யன்றே.



இ-ள். விலையோலை இரண்டையும் பார்த்துத் தங்களெழுத்தே யாமென்று தெரிந்து உடம்பெல்லாம் பூரித்து பெருமைபொருந்தின நிறமான ஒளியையுடைய ரத்நகிரீடத்தை யணிகிற தலையையசைத்துத் துன்பத்தையும் தன்னைப் பிடித்திருக்கிற பீடைகளையும் நீக்கி, பந்தல்போட்ட நிழலைப்போற் கழுகுகள் எழுந்து உயர்ந்து படர்வதாய் நெருப்புப் புகை கிளருவதான சுடுகாட்டைப் பார்த்தான்; பார்க்கவே, அவ்விடம் லட்சுமிதேவி வாசஞ்செய்வதான பூம்பொய்கையும் மணங்கிளருவதான சோலையுமாக விளங்கியது. எ-று. (ஙஅ)

வாயெலாம்யாக மரமெலாம்யூபம் வானெலாமாகுதித் தூபந், தீயெலா முத்தீதிசையெலாந் தருப்பைதீப்படு விறகெலாஞ் சமிதை, பேயெலாமுனிவோர் பேச்செலாம்வேதம் பிணமெலா மதற்கமைபசுக்க, ளாயவா றெல்லா நோக்கினன்றொல்லை யமைந்ததே யீதெனவமைந்தான்.

இ-ள். அந்த இடங்களெல்லாம் வேள்விகள்; அங்குள்ள மரங்களெல்லாம் வேள்வித்தூண்கள்; ஆகாசமெல்லாம் அங்கே வேள்விசெய்கிற புகைகள்; நெருப்பெல்லாம் காருகபத்தியம்-ஆகவநீயம்-தெட்சிணாக்கினியம். அந்தத் திக்குகளெல்லாம் தர்ப்பைகள். அந்த நெருப்பு மூட்டுகிற விறகுகளெல்லாம் சமித்துகள். அங்குள்ள பசாசுகளெல்லாம் முனிவர்கள். பேசு மொழியெல்லாம் வேதங்கள். பிணங்களெல்லாம் அந்த யாகத்துக்குத் தகுதியான பசுக்கள். இப்படியா யிருக்கிறவைகளெல்லாம் பார்த்தான். இதெல்லாம் முன்னே தானே அமைந்திருக்கிறதென்று சம்மதமானான். எ-று. (௩௯)

ஆங்கவன் றன்னைப் பாங்குட னோக்கி சுரசநீ யயோத்தியி னணுகித், தீங்கற மகுடஞ் சூட்டியிம் முனிவன் செய்தவம்பாதி யுங்கொண்டு, வாங்குநீ ருலகம் பொதுவறப் புரந்து வருதியெம் பதத்தினி லென்னாத், தேங்கமழ் சடையான் றிருவுள மகிழ்ந்து தேவர்கோ மாற்குரை செய்வார்

இ-ள். அப்படியமைந்த மன்னனைச் சந்தோஷத்துடனே பார்த்து அரசனே! நீ அயோத்தியாபுரிக்குப்போய் குற்றந்தீரக் கிரீடஞ் சூடிக்கொண்டு இந்த விசுவாமித்திரர் செய்த தவத்திற்பாதியும் உன்வசமாக்கினவனாய் வளைந்த கடல்சூழ்ந்த வுலகமெல்லாம் உனக்கே சொந்தமாக ரட்சித்துப் பின்பு நம்முடைய பதத்துக்கு நீ வந்து சேரக்கடவையென்று மணம் பரிமளிக்கின்ற சடையையுடைய பரமசிவனானவர் தமது திருவுள்ளமகிழ்வாய் தேவேந்திரனைப் பார்த்துச் சொல்லுகிறார். எ-று. (௪0)

காரணமொன்று கேட்டியானீயுங் காசிபன் முதன்முனிவரரும், வாரணவாசிமன்னனுமயோத்தி மன்னவன்றன்னுடனேகித், தோரணவீதித் திருநகர்புகுந்து சுடர்முடிசூட்டியபின்ன, ரூரனேந்திடுகென்றுரைத்திடவணங்கியுவகையாலன்னவருரைப்பார்.

இ-ள். இனிச் செய்யவேண்டிய காரணமொன்றுண்டு கேள். நீயும் காசிபர்முதலான முனிவர்களும் வாரணவாசிக்கரசனும் இந்த அயோத்தியாபுரிக்கரசனை அரிச்சந்திரனுடனே போய் தோரணங் கட்டியிருக்கிற வீதிகளையுடைய அயோத்தியாபுரியாகிய திருநகருக்குள்ளே புகுந்து அரசனுக்கு ஒளிபொருந்தின கிரீடஞ் சூட்டினபின்பு உன் ஊருக்கு நீ போகக்கடவையென்று சொல்ல, அதற்கவரை வணங்கி அவர்கள் சொல்லுகிறார்கள். எ-று. (௪௧)

திங்கண்மே வியசெஞ்சடைமுடி யாய்நின் றிருவுளத் தின்படியல்லா, லெங்கண்மாட் சிமைவே றில்லையென்றளித்தவேவறந் தலைமிசைக்கொண்டா, ரங்கண்மானால மகன்றெழுந் தீசனணி திகழ் கயிலையிற் புக்கான், செங்கண்மாலேகிப் பாற்கடல் புகுந்தான் றிசைமுகன் றனதுல கடைந்தான்.

இ-ள். சந்திரன் பொருந்தின சடைமுடியையுடையவரே! தேவரீர் திருவுள்ளத்தின்படியே யல்லாமல் எங்கள் பெருமை வேறொன்று மில்லையென்று

அவர் கட்டளையிட்ட ஏவலைத் தங்கள் தலைமேலே கொண்டார்கள். அப்போது அந்த அழகான இடத்தையுடைய பெரிதான அவ்வூரைவிட்டுப் பரமசிவனானவர் அழகு விளங்குகின்ற கயிலாசமலைக் கெழுந்தருளினர். சிவந்த கண்களையுடைய திருமாலானவர் திருப்பாற்கடல்போய்ச் சேர்ந்தார். பிரமதேவன் தனது சத்தியலோகம் போயினன். எ-று. (சஉ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

கருத்தினின் மகிழ்ச்சியோங்கக்கடவுளரேவன்மாறு
தருத்திகொண்டேகித்தத்தஞ்சார்பினிலடைந்தபின்னர்
வருத்தமும்வினையுமாற்றிமன்னனைமகுடஞ்சூட்டி
யிருத்திநாம்போவோமென்னுவிந்திரனினிதிருந்தான்.

இ-ள். மனத்திலே சந்தோஷ மதிகமாகத் தேவர்கள் யாவரும் கடவுளேவலை மறவாமல் அன்புகொண்டு தங்களிடம்போய்ச் சேர்ந்தபின்பு உண்டான வருத்தத்தையும் மற்ற பாவச்செய்கைகளையும் போக்கி அரசனுக்குக் கிரீடஞ்சூட்டி அயோத்தியிலிருக்கச்செய்து பின்பு நாம்போவோமென்று இந்திரன் சந்தோஷமாகக் கூடவிருந்தான். எ-று. (சங)

காசிபன்பிருகுரோமன்கௌதமன்பரத்துவாசன்
கோசிகன்வசிட்டன்சன்னுகுறுமுனிமரிசியாதி
யாசினர்தன்மதங்கனத்திரிமுதலோர்சூழக்
காசியிலினிதிருந்தார்கழிந்ததுகங்குற்போது.

இ-ள். காசிபர்-பிருகு-ரோமசர்-கௌதமர்-பரத்துவாசர்-விசுவாமித்திரர்-வசிஷ்டர்-சன்னுமாமுனிவர்-அகஸ்தியர்-மரீசி முதலான குற்றமில்லாத நாரதர்-மதங்கர்-அத்திரி-முதலானவர்களும் ஒன்றுகூடிக் காசிப்பட்டணத்திலே சந்தோஷமாகக் கூடியிருந்தார்கள். அந்த ராத்திரிகாலமுங் கழிந்தது. எ-று.

கழிந்ததுகங்குற்போதுகழிதலுங்காசிவேந்தன்
மொழிந்தனன்விரைவினந்தமுரட்படையெழுகவென்னுச்
செழுந்தடமுரசமேங்குமறைந்திடதிசைகடோறு
மெழுந்தனதேருமாவுமியானையுஞ்சேனைதானும்.

இ-ள். அன்றிராத்திரி அப்படிக் கழிதலாயிற்று. கழிந்தவுடனே காசிராஜனானவன் சீக்கிரத்திலே தனது பலங்கொண்ட சேனைகளெல்லாம் பிரயாணமாகக் கடவதென்று ஆக்ஞாபித்தான். உடனே செழுமையான பெரிய பேரிகைகளெவ்விடத்து முழக்க, திக்குகளெல்லாம் தேர்களும் குதிரைகளும் யானைகளும் காலாள்களும் எழுதலாயின. எ-று. (சரு)

கரிபரியீட்டத்தோடுங்கண்மணித்தேருந்தாருந்
தெரிவையர்குழாமுஞ்செம்பொற்சிவிகையுங்கவிகைதானும்
விரிபெருந்தூளியார்க்கவெண்கொடிப்படலமூடச்
சரிபெருங்கடல்கள்போல்வந்தரசனைச்சார்ந்தவன்றே.

இ-ள். யானை - குதிரைகளின் கூட்டத்துடனே கூட்டமான ரத்நத்தேர்களும் சேனைகளும் பெண்கள் கூட்டமும் சிவந்த பொற்பல்லக்கும் குடைகளும் விரிந்து வருகிறதினு லுண்டான பெரிதான தூளிகள் திமிரவும் வெள்ளைக்கொடிகள் அந்தத் தூளிப்படலத்தை மறைக்கவும் அலைகள் சஞ்சரிக்கின்ற கடல்களைப்போல் வந்து அரிச்சந்திரமகாராஜனைக் கூடின. எ-று. (சசு)

வானவர்கோனும்வேதமாமுனிவோரும்வைவேற்
றானையுங்காசிவேந்துஞ்சத்தியகீர்த்திதானு
மானையுந்தேருமாவுமடர்ந்தெழவயோத்திவேந்தன்
மாநகர்விட்டெழுந்தான்மழையெனமுரசமார்த்த.

இ-ள். தேவர்களுக் கரசனுன இந்திரனும் பெரிய வேதமுனிவர்களும் கூரிய வேலயுடைய சேனைகளும் காசிராஜனும் சத்தியகீர்த்தியும் யானைகளும் தேர்களும் குதிரைகளும் நெருங்கிவர, அயோத்தியாபுரிக் கரசனுன அரிச்சந்திரன் அந்தப் பெரிதான காசிப்பட்டணத்தை விட்டெழுதலானுன். அப்போது மேகங்கள்போல் பேரிகைகள் முழங்கின. எ-று. (சஎ)

கானடையேகுமன்னைக்காசியர்வேந்தன்கண்டு
தேனடையலங்கன்மார்பதேர்மிசையேறுகென்னத்
தானதுமறுத்தலோடுந்தபோதனரெல்லாம்வேண்ட
வானவரெடுத்துச்செம்பொன்மணிநெடுந்தேரில்வைத்தார்.

இ-ள். கால்நடையாகச் செல்லுகின்ற அரசனைக் காசிப்பட்டணத்தரசன் பார்த்து தேனுக்காக வண்டுகள் வந்து கூடுவதான மாலையயணிந்த மார்பனே! நீர் தேர்மேலெழுந்தருளுமென்று சொல்ல, அரசன் அதுவேண்டாமென்று சொல்ல, தவமுனிவர்களெல்லாரும் வேண்டிக்கொள்ள, அப்போது தேவர்களெல்லாருங் கூடி அரிச்சந்திரனைச் சிவந்த பொன்னுலும் ரத்நங்களாலுஞ் சமைந்த நீண்ட தேரின்மே லெடுத்தேற்றினுர்கள். எ-று. (சஅ)

சந்திரவதியைக்கற்பின்றமூலினைத்தீண்டவஞ்சி
யந்தரத்திமையோர்மாந்தரானவருமகலநின்று
ரிந்திரன்றேவிபென்னுமிளமுலைக்குதலைச்செஞ்சொற்
சுந்தரிதிருக்கைபற்றிச்சுடாமணித்தேரில்வைத்தாள்.

இ-ள். சந்திரவதியாகிய பதிவிரதாக்கினியைத் தொடப்பயந்து ஆகாயத்திலுள்ள தேவர்கள் பூமியிலுள்ள மனிதர்கள் முதலான எல்லோரும் தூரநின்றுர்கள். அப்போது இந்திரன் தேவியென்கிற இளமையான கொங்கைகளையும் மழலைபோலும் இனிய செவ்விதான வசனங்களையுமுடைய இந்திராணியானவள் தனதழகான கைகளாலெடுத்து அந்த ஒளிபொருந்தின தேரின்மேலேற்றினுள். எ-று. (சகூ)

கண்ணிபாற்பட்டுழன்றுகழன்றவெங்களிறுங்கன்றுந்
திண்ணியபிடியும்பண்டைப்பயிலிடஞ்சேர்தல்போலப்
புண்ணியவேந்துஞ்சேயும்பூவையுந்தேரிலேறி
மண்ணிலுள்ளோர்கள்வாழ்த்தமாநகர்விட்டகன்றான்.

இ-ள். வேடர் வலைக்குளகப்பட்டு வருந்திப் பின்பு அவ்வலையை விட்டு நீங்கினவெவ்விதான ஆண்யானையும், அதன்கன்றும், பெண்யானையும் முன்னே தாங்கள் சஞ்சரிக்கின்ற இடத்துக்குப் போகிறதுபோல மகாபுண்ணியவானான அரிச்சந்திரமகாராஜனும் மகனும் தேவியும் தேர்மேற்கொண்டு உலகத்துள்ளவர்களெல்லாம் மங்களம்பாட அந்தப் பெரிதான காசிப்பட்டணத்தை விட்டு நீங்கினார்கள். எ-று. (௫0)

தோரணவாயில்பின்னாத்துழனியங்கழனிநண்ணிப்
பூரணவாவிநீங்கிப்பூம்பொழில்பலவுந்தீர்ந்து
காரணத்தமைச்சரோடுங்கடற்பெருஞ்சேனையோடும்
வாரணவாசியாற்றின்வண்டலின்வந்திறுத்தான்.

இ-ள். தோரணங்கள் கட்டியிருக்கிற கோட்டைவாயில் பின்னிடஒலிகளையுடைய அழகிதான மருதநிலத்துக்குவந்து நீர் நிரம்பின குளங்களையுங்கடந்து பூஞ்சோலைகள் பலவற்றையும்நீங்கி பிரதானரான மந்திரிகளுடனே கடல்போன்ற பெரிதான சேனைகளுஞ்சூழ வாரணவாசியினது ஆற்றங்கரையோரத்திலே வந்திறங்கினார்கள். எ-று. (௫க)

அந்தமாநதியிற்றீர்த்தமாடியன்றங்குவைகி
மந்தராசலப்புயத்தான்மற்றைநாளேகிவாசச்
சந்தனாடவியும்வெற்புந்தடங்களுங்கடந்துமெல்ல
வந்தநாள்யமுனையாற்றின்கரையினைவல்லைசார்ந்தான்.

இ-ள். அந்த மகாநதியிலே ஸ்நானஞ்செய்து கொண்டுஅன்றையத்தினம் அங்கேதங்கி மந்தரமலைபோலுந் தோள்களையுடைய அரிச்சந்திர மகாராசன் மற்றாநாள் வாசமிக்க சந்தனவனங்களும் மலைகளும் மேடுகளுங்கடந்து மிருதுவாக வந்தபோது யமுனையாற்றங்கரைக்கு வந்துசேர்ந்தார்கள். எ-று. ()

அந்நதிதீர்த்தமாடியணிமணிதரளஞ்செம்பொன்
மின்னவர்தரங்கக்கோதாவிரிதுறைத்தீர்த்தமாடிப்
பன்னதிகடந்துவெற்றிப்பகீரதன்கொணர்ந்தகங்கை
நன்னதிதன்னைவந்துநண்ணினான்விண்ணோரோடும்.

இ-ள். அந்நதியிலும் ஸ்நானஞ்செய்துகொண்டு அழகான ரத்நங்களும் முத்துகளும் செம்பொன்னும் மின்னுகின்ற ஒளியைக்கொண்ட அலைகளையுடைய கோதாவிரித்துறையிலும் ஸ்நானஞ் செய்துகொண்டு இப்படியாகவே பலநதிகளுங் கடந்துவந்து ஜயத்தையுடைய பகீரதன்கொண்டுவந்த கங்கையாகிய நல்ல நதியைத் தேவர்களுடனே வந்து கண்டான். எ-று. (௫௩)

வேலிருபுறமுமீண்டவெண்குடைமேனிழற்ற
நாலிருதிசையுந்தேருநாகமுமாவுஞ்செல்ல
மேலிருவிசும்பைத்தூளிமறைக்கவெண்கவரிக்கற்றை
காலிருமருங்குமார்க்கக்கங்கைமாநதியைக்கண்டான்.

இ-ள். வேலாயுதங்கள் இருபக்கத்திலுங் கூடிவரவும், வெள்ளைக்குடை மேலே நிழலைச்செய்யவும், எட்டு திக்கிலும் ரதங்களும் யானைகளும் குதிரைகளும் நடக்கவும், மேலே பெரிதான ஆகாயத்தைத்தூளிப்படலமூடவும், வெண்சாமரங்களின் கற்றைகளால் காற்று இருபுறத்திலும் வீசவும்போய்க் கங்காநதியைக் கண்டான் அரிச்சந்திரமகாராசன். எ-று. (ருச)

அருகுவந்தணைந்துதுள்ளிக்கனைத்தெழுந்தானுவன்பு
தருகுழக்கன்றைக்கண்டதாய்முலைசுரந்ததேபோ
னிருபனுமாதுஞ்சேயுநெடுநகர்நோக்கிமீண்டு
வருவதுகண்டுகங்கைமாநதிபெருகிற்றன்றே.

இ-ள். தனது பக்கத்தில்வந்து கூடிநின்று துள்ளிக் கனைத்து நிமிர்ந்து நீங்காத அன்பைத்தருகிற இளங்கன்றைக்கண்ட தாய்ப்பசுவுக்கு மடிசுரத்தாற் போல அரசனும் மனைவியும் மகனும் தங்களுடைய நெடிதான பட்டணத்தைக் குறித்துத் திரும்பி வருகிறதைக் கண்டு அந்தப்பெரிதான கங்காநதி பெருகுதலாயிற்று. எ-று. (ருரு)

வரைபலவுருட்டிநீண்டமரம்பலபிடுங்கிவெள்ளை
நுரைபலசிதறியெங்குநாரையும்வராலும்பாய
நிரைநிறைபதுமராகநித்திலங்கொழித்திரண்டு
கரையையுங்கடந்துகாந்தக்கடலெனவந்ததன்றே.

இ-ள். கங்காநதியானது பலமலைகளையு முருட்டிக்கொண்டு நீண்டபல்லமரங்களையும்பிடுங்கி வெண்மையாகப் பலவகை நுரைகளையுஞ் சிதறிஎவ்விடத்திலும் மலங்குமீனும், வரால்மீனும்துள்ள வரிசைவரிசையாக பதுமராக மணிகளையும் முத்துகளையும் ஒதுக்கிக்கொண்டு இருபுறத்திலுமுள்ள கரைகளையுமுடைத்து யுகமுடிவிலே பெருகுகிற கடலென்னும்படி வருதலாயிற்று. எறு. நாரை - மலங்குமீன். (ருசு)

விரிகடலென்னவந்தவிமலையின்கரையினேறிச்
சொரிமலர்ச்சூழலேறுஞ்சுடர்மணிப்பாறைதோறும்
வரிமணல்வண்டறேறுமால்வரைச்சாரறேறுந்
தெரிவையர்குழாமுந்தேவர்சேனையுமடைந்தவன்றே.

இ-ள். விரிந்த கடல்போல் வருவதான கங்காநதிக் கரையிலேறிச் சிந்தநின்ற பூஞ்சோலைகளிலும் விளங்காநின்ற ரத்னப்பாறைகளிலும் ஒதுங்கிக்கிடக்கிற மணற் குவியல்களிலும் பெரிய மலைச்சாரல்களிலும் பெண்கள் கூட்டமும் தேவர் கூட்டங்களும் வந்துசேர்ந்தன, எ-று. (ருஎ)

சுரர்சிலசூழல்சார்ந்தார் தோகையரோடுமண்வாழ்
நரர்சிலசூழல்சார்ந்தார் நான்மறைத்தவத்திற்பெற்ற
வரர்சிலசூழல்சார்ந்தார் மகரயாழ்வல்லவிச்சா
தரர்சிலசூழல்சார்ந்தார் தபனனுங்குடபாற்சார்ந்தான்.

இ-ள். தேவர்கள் சிலவிடங்களிலே தங்கினார்கள். பெண்களுடனே மண்ணுலகிலே வாழுகின்ற மனிதர்கள் சில இடங்களிலே தங்கினார்கள். நான்கு வேதங்களையும் பாராயணஞ்செய்கிற தவத்தினைக்கொண்ட சிரேஷ்டர்கள் சில இடங்களிலே தங்கினார்கள். மகரவீணைகள் பாடவல்ல வித்தியாதரர்கள் சில இடங்களிலே தங்கினார்கள். அப்போது சூரியனு மேலைத்திக்கிலே போய்த் தங்கினான். எ-று. (ருo)

கடடவெங்களிறுபாவுங்காரகிலாரஞ்சாதி
சூரதருமத்தினோடுஞ்சேர்த்தனர்துங்கத்தெய்வப்
புரவிகள்பூண்டநேமிப்புட்பகத்தேருஞ்செம்பொன்
வரைபலநிரைத்தவென்னவடகரைசெறிந்தவன்றே.

இ-ள். மதமொழுகுகின்ற சுவடுகொண்டவெவ்விய யானைகளையுங்குதிரைகளையும், கறுத்த அகில் விருட்சங்களிலும் சந்தன விருட்சங்களிலும் சாதிவிருட்சங்களிலும் தெய்வ விருட்சங்களிலும் சேரக் கட்டினார்கள். பின்பு உயர்வான தெய்வக்குதிரைகள் கட்டின உருளைகளையுடைய புட்பகரதங்களும் சிவந்த பொன்மலைகளநேகங்களை வரிசையாக வைத்தாற்போல வடபுறத்துக்கரையிலே நெருங்கின. எ-று. (ருக)

ஆதபமகற்றிவெய்யோனாழ்கடற்புகுந்தபின்னர்ப்
பாதகமுனியும்பாரிற்பாவமுமகன்றகாலை
பூதலவேந்தன்வந்துபுண்ணியம்பரந்ததேபோற்
சோதிமாமதியந்தோன்றித்தூநிலாவிரித்ததன்றே.

இ-ள். வெயிலை நீக்கிக்கொண்டு சூரியன் ஆழமானகடலிலே போய் மறைந்தபின்பு, பாவச்செய்கைகளைச்செய்த விசுவாமித்திர முனிவரும் உலகத்திலுள்ள பாவங்களு நீங்கினபின்பு, உலகத்தையாளுகின்ற அரிச்சந்திர மகாராஜனுடைய புண்ணியமே எவ்விடத்தும் பரவினாற்போல் ஒளியைப் பெரிதாகக் கொண்ட சந்திரனுதயமாகிப் பரிசுத்தமான சந்திரிகையைப் பரப்பியது. எ-று.

மாற்கடமலையுந்தேரும்வாசியுமன்னர்தாமும்
வேற்கடற்படையுந்தோன்றவிரிந்தவெண்ணிலவினீட்ட
நீர்க்கடனடுவிற்றோன்றுநிலமுமெண்டிசையும்விண்ணும்
பாற்கடலுலாந்தங்கோத்தபடியெனப்பரந்ததன்றே.

இ-ள். மயக்கத்துடனே மதத்தைக்கொண்ட மலைபோன்ற யானைகளும் தேர்களும் குதிரைகளும் அரசர்களும் வேலையுடைய கடல்போன்ற சேனைகளும் விளக்கமாக விரிவான வெள்ளைச் சந்திரிகையினுடைய கூட்டமானது

நீலநிறமான கடலினடுவே தோன்றுகிற பூமியும் எட்டுத்திக்கும் ஆகாயமும் பாற்கடலானது யுகமுடிவிலே பெருகினபடிபோற் பரவியது. எ-று. (கூக)

நல்லவர்மனத்தொடர்ச்சிநல்லவர்க்குற்றதேபோற்
பல்லவப்பொழிலுமாறும்பருமணற்பரப்பும்வெற்பும்
புல்லுமான்மறையுநீதாலுமேதியும்புள்ளுந்தூரத்
தெல்லவர்தமக்குந்தோன்றவெண்ணிலாவெறித்ததிந்து.

இ-ள். நல்லோர்களுடைய மனச்சம்பந்தம் நல்லோர்களுக்கே விளங்கு கிறதைப்போல், தளிர்களையுடைய சோலையும் ஆறும் பருத்த மணற் குன்றும் மலையும் கூடிச் சஞ்சரிக்கின்ற மான்களும் மரைகளும் யானைகளும் பக்ஷிஜாதி களும் தூரத்திலேயிருக்கிற எல்லாருக்குந் தோன்றுவதாக வெண்மையான சந்திரிகையை சந்திரன் வீசியது. எ-று. (கூஉ)

நிரந்தரம்வயிரந்துப்புநித்திலம்பச்சைநீலம்
பரந்தசெம்மணியுமுற்றும்பகிரதியாற்றைநோக்கிச்
சிரந்தனைத்துளக்கிமேன்மேலணிமயிர்சிலிர்க்கவைவேற்
புரந்தரன்மகிழ்ச்சிகூர்ந்துபுலோமிசைக்குரைப்பானானன்.

இ-ள். எப்போதும் வயிரம் - பவளம் - முத்து-பச்சை-நீலம்-பரவுதலான சிவந்த மாணிக்கம் ஆகிய இவைகளை அலைகளா லொதுக்குவதான கங்காநதியை ப்பார்த்துத் தலையை அசைத்து மேன்மேலும் அழகிதான உரோமங்கள் சிலிர்க்க கூரிய வேல்போன்ற வச்சிராயுதத்தையுடைய இந்திரன் சந்தோஷத்தை யடைந்து இந்திராணிக்குச் சொல்லலானான். எ-று. (கூங)

கண்ணுதல்சடையின்வீழ்ந்தகங்கையின்கரையில்வந்து
நண்ணுதலுற்றவேகநாகமும்பூகக்காவு
மண்ணுலகத்திற்றன்றுமணிகளும்புள்ளுமாவும்
விண்ணுலகத்திலுண்டோமெல்லியல்விளம்புகென்றான்.

இ-ள். பரமசிவனுடைய சடையிலிருந்து விழுந்துவருகிற இந்தக்கங்கா நதிக்கரையிலே வந்து சேருதலான வேகத்தையுடைய நாகங்களும் கமுகங்காடு களும் மண்ணுலகத்திலே பொருந்துகின்ற ரத்நங்களும் பட்சிகளும் மாவும் மிருகங்களும் நமது ஆகாயவுலகத்திலே கேண்டதுண்டோ பெண்ணே சொல் லென்று கேட்டான். எ-று. (கூச)

மந்திரவானோர்கோமானுரைத்திடமகிழ்ந்துநந்த
மிந்திரபுரத்துமந்தோவிச்சிறப்பில்லையென்றாள்
சுந்தரியுடனேகூடித்துயின்றனன்மகவான்பின்னேச்
சந்திரனுதயமாறத்தாணிவந்துதபஞ்செய்தான்.

இ-ள். ஆலோசித்தலையுடைய தேவர்களுக் கரசனானவ னிப்படிச்சொல்ல வே சந்தோஷங்கொண்டு நம்முடைய இந்திரலோகத்திலும் ஒஓ இப்படிப்பட்ட சிறப்புகள் கிடையாதே என்றாள். அப்படிச்சொன்ன இந்திராணியுடனேகூடி

இந்திரன் நித்திரைசெய்தான். பின்பு சந்திரன் அஸ்தமிக்க சூரியன்வந்து உதயமாயினன். எ-று. (கரு)

மாமதியொளிமழுங்கிவயங்கிருள்விடிந்தகாலை
போமதிநினைவேயாகிப்புலரியினெழுந்திருந்து
தாமதியாமலேகித்தடங்களும்வெற்புநீங்கிக்
கோமதியாற்றின்வண்டற்குன்றிடச்சென்றிருந்தார்.

இ-ள். அந்தப் பெரிதான சந்திரனொளி குறைந்து அன்றுண்டான இருட்காலங் கழிந்தபின்பு பிரயாணமாகிறதிலே எண்ணங்கொண்டு விடியற்காலத்திலேதானே யெழுந்திருந்து தாமதஞ்செய்யாமற் போய் மேடுகளு மலைகளுங் கடந்து கோமதியாற்றினது வண்டல்கூடின மலையினிடத்திலே போயிருந்தார்கள். எ-று. (கசு)

வள்ளலைமுனிவன்கூட்டிவருகின்றவாறுகேட்டுப்
பள்ளமுற்றும்பர்வெள்ளம்பாய்கின்றபரிசேபோல
வுள்ளமுமகிழரோமஞ்சிலிர்ப்புறவூரிற்சேனை
வெள்ளமுமரசர்தாமும்வியந்தெதிர்கொண்டாரன்றே.

இ-ள். மகோதாரனான அரசனை விசுவாமித்திரமுனிவர் கூட்டிக்கொண்டு வருகிற சமாசாரங் கேள்வியாய், பள்ளத்தின்மேலே வெள்ளம்பொங்கி வருகிறபடிபோல தங்கள்மனமுஞ் சந்தோஷிக்க உரோமஞ் சிலிர்ப்பாக அயோத்தியாபுரியிலுள்ள சேனைகளும் அரசர்களும் அதிசயித்து எதிர்கொண்டார்கள். எ-று.

அயினெடும்படைதுறந்தகரத்தினரயோத்திமூதூ
ரெயில்கடந்தேகிமன்னைக்கண்டனரிறைஞ்சிவீழ்ந்தார்
மயிர்பொடிப்புறமனங்கண்மகிழ்ந்திடமறலிகொண்ட
வுயிர்வரப்படர்துறந்தவுடலமேயொத்தாரன்றே.

இ-ள். நீண்ட வேலாயுதங்கள் முதலான ஆயுதங்களில்லாத கைகளையுடையவர்களாய் அயோத்தியாபுரியினுடைய மதிலைக்கடந்துவந்து அரசனைக் கண்டு வணங்கிக் காலிலே விழுந்தார்கள். உரோமங்கள் சிலிர்ப்பாக மனங்கள் ஆனந்தத்தையுடைய யமன்கொண்டுபோன உயிர்வர துன்பநீங்கின உடம்பையொத்தார்கள். எ-று. (கஅ)

ஆரணமுழங்கயோத்தியணிபெருஞ்சேனையோடும்
வாரணவாசிமன்னன்படையொடும்வள்ளலேகித்
தோரணவாயினண்ணிச்சுடர்மணித்தேரிழிந்து
பூரணகும்பமன்னுமண்டபம்பொலியப்புக்கான்.

இ-ள். வேதங்கள் முழங்குகின்ற அயோத்தியாபுரியிலுள்ள பெரிதான சேனைகளுடனே வாரணவாசிக் கரசனானவனுடைய சேனைகளுங்கூட அரிச்சந்திரன்போய் தோரணங்கட்டின கோட்டைவாயிலுக் கருகேபோய் ஒளிபொருந்தின ரத்நத்தேரைவிட்டுக் கீழேயிறங்கி பூரணகுடங்கள் பொருந்தின சபாமண்டபம் முழுதும் விளங்கப்புகுந்தான் எ-று. (ககூ)

பன்முடிவேந்தர்தாழ்ந்துபணியப்பொற்றவிசினேற்றிச்
சொன்முடிவற்றநீர்மைத்தாபதர்சூழ்ந்துவாழ்த்த
நென்முடிசாயப்பாயுநீர்வயனுடன்றன்னைப்
பொன்முடிசூட்டிவாழ்த்திப்புரந்தான்விசும்பிற்போனன்.

இ-ள். அநேகங் கிரீடாதிபதிகள் குனிந்து வணங்கும்படி பொன்மயமான சிங்காதனத்திலே யேறச்செய்து, சொல்லால் முடிவுபெறாத நல்லகுணங்களை யுடைய தபோதனர்களெல்லாந் திரண்டுகூடி ஆசீர்வதித்தருள நெல்லினது தலைவணங்க நீர்பாய்கின்ற வயல்சூழ்ந்த நாட்டை யுடைய அரிச்சந்திரனுக்குச் சுவர்னகிரீடஞ்சூட்டி வாழ்த்தி இந்திரன் ஆகாய லோகத்துக்குப் போயினன். ()

காருளசோலைசூழுங்கௌசிகன் றீமைநன்கே
நீருளவளவுமீரேழ்நிலமுளவளவுமுன்றன்
பேருளதொருகாலத்தும்பிழைப்பிலதுனக்குநேர்வே
ருருளரென்னுவாழ்த்தியருந்தவமுனிவர்போனர்.

இ-ள். மேகங்கள் சஞ்சரிப்பதான சோலைசூழ்கின்ற கௌசிகதேசத்தரசனான விசுவாமித்திரர்செய்த தீமைகளெல்லாம் உனக்கு நல்லனவேயாயின. ஏழுகடல்களுள்ளளவும் பதினாலுலகங்க ளுள்ளளவும் உனதுபேருளதாயிற்று. ஒருகாலத்தும் தவறுதலுண்டாகாது. உனக்குச் சரியாக வேறே யாரிருக்கிறார்கள் என்று கொண்டாடி அருமையான தவமுனிவர்கள் போயினார்கள். எ-று. ()

மைந்தனைநின்னைமாதையித்தனைவருத்தங்கண்டே
நிந்தனைசிறிதுநின்பாற்கண்டிலேனீதிவேந்தே
யெந்தமாதவத்திற்பாதியாவருங்காணவின்றே
தந்தனமுனக்கேயென்றுகௌசிகன்றுரைவார்த்தான்.

இ-ள். உன்புத்திரனையும் உன்னையும் சந்திரவதியையும் இவ்வளவுவருத்தங்களெல்லா முண்டாவதாகச்செய்தோம். அதற்காகக் கொஞ்சமேனும் உன்னிடத்திலே பழிப்புண்டாகக் காணோம். ஓ நீதியுள்ள அரசனே! இனி என்னுடைய மகாதவத்திலே பாதி எல்லாருங் காண உனக்கே கொடுத்தேனென்று விசுவாமித்திரர் தாரைவார்த்தார். எ-று. (எஉ)

உற்றறிந்தளவிட்டோராதும்மைபானிகழ்ந்துபேசப்
பெற்றவைபொறுத்திரென்னுவசிட்டனுக்கினியபேசி
கொற்றவன்றன்னையாற்றிக்குமரனைமயிலைத்தேற்றி
மற்றுமந்திரியைவாழ்த்திக்கௌசிகன்வனத்திற்போனன்.

இ-ள். பின்னும் சோதித்துத்தெரிந்து அளவுசெய்து காணமல் உம்மையும் அரிச்சந்திரனையும் நான் இகழ்ந்து பேசலானவைகளையெல்லாம் நீங்கள் பொறுத்துக் கொள்ளுங்களென்று வசிஷ்டமகா முனிவருக்கு நல்ல இதங்கள் சொல்லி, அரசனையும் துன்பமாறச்செய்து, மகனையும் சந்திரவதியையும் தேறுதல்பண்ணிப் பின்னும் சத்தியகீர்த்தியான மந்திரியையும் வாழ்த்துதல்செய்து விசுவாமித்திரர் தாமிருக்கிற வனத்திற்குப்போயினர். எ-று. (எங)

தேவருமுனிவர் தாமுந்தின்புவித்தலைவர் தாமும்
யாவருமகன்றபின்னரிணைமணிக்கவரிவீச
மூவருமனையநீர்மைமுனிவனுங்காசிவேந்து
மேவருநிகரிலானுமினிதுரைத்துடனிருந்தார்.

இ-ள். தேவர்களு முனிவர்களும் பலங்கொண்ட உலகத்தரசர்களும் எல்லாரும் போனபின்பு இரண்டு மணிமயமான சாமரங்கள்போட மும்மூர்த்திகளையு மொப்பான குணத்தையுடைய வசிஷ்டமுனிவரும் காசிராஜனும் ஒருவரு நிகரில்லாத அரிச்சந்திரனும் சந்தோஷமாகப் பேசிக்கொண்டு கூடியிருந்தார்கள். எ-று. (எச)

இருந்தபின்காசிவேந்தன்வசிட்டனையிறைஞ்சியேத்தி
யருந்தவர் தம்பாலையவறமலான்மறமுமுண்டோ
வருந்திடவிவர்பாலிந்தவன்கண்மைசெய்யவுள்ளம்
பொருந்தியவாறேதென்னவசிட்டனும்புகலலுற்றான்.

இ-ள். அப்படி யிருந்தபின்பு காசிராஜன் வசிஷ்டமகாமுனிவரை வணங்கித் துதித்து, ஐயா! அரிதான தவமுனிவர்களிடத்தில் தருமகுணமேயல்லாமலிப்படிப்பட்ட பாபகுணங்களு முளதாகுமோ? இவர்களிப்படி வருத்தமடைய இவர்களிடத்திலே கொடுமை செய்கிறதற்குவிசுவாமித்திரர் மனஞ்சம்மதித்தது யாதுகாரணமென்று கேட்க, வசிஷ்டர் சொல்லத்தொடங்கினர். எ-று. (எரு)

நிலத்தியல்பற்றேகொண்மூநீரியல்பதனுற்றங்கள்
குலத்தியல்பெவர்க்குமன்னுவாழினுங்கெடினுங்குன்று
தலத்தரசகன்றநீங்கித்தவத்ததனுனுந்தொல்லை
நலத்ததுபோமோவென்றுநரபதிக்கினிதுரைத்தான்.

இ-ள். நிலத்தினது தன்மையேயாம் மேகத்தினது நீரினது தன்மையும் அதுபோல் அவரவர்கள் குலசுபாவம் யாவரானாலும் அரசனே வாழ்ந்தாலும் கெட்டாலும் குறைவுபடா. விசுவாமித்திரன் உலகத் தரசாளுகையைவிட்டுத் தவஞ்செய்கிறவனானாலும் பழைய சாதிநன்மையானது விட்டுப்போகுமோ வென்று காசிராஜனுக்கு நன்மையாகச் சொன்னர். எ-று. (எசு)

அன்னதுகேட்டவண்ணலருந்தவத்தோனைநோக்கி
மன்னவனானவாறுமாமுனியானவாறு
மின்னவாறின்னவாறென்றெனக்கருள்செய்வாயென்னப்
பொன்னணிமுடியாய்கேளென்றம்முனிபுகலலுற்றான்.

இ-ள். அந்த வார்த்தைகேட்ட காசிராஜன் அருமையானதவத்தையுடைய வசிஷ்டரைப்பார்த்து அவர் அரசனாயிருந்ததும் பின்பு பெரிய முனிவானதும் இன்னபடி இன்னபடியென்று எனக்குத் தெரியச் சொல்லவேணுமென்ன, பொன்னலங்கிருதமான கிரீடாதிபதியே! கேளென்று அந்தவசிஷ்டர் சொல்லத்தொடங்கினர் எ-று. (எஎ)

மீட்சிக்காண்டம்-முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௨அக

---

௨
பரமபதிதுணை.

பத்தாவது,

# உத்தரகாண்டம்.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திசைமுழுதுங்கவித்தகுடைச்செங்கோல்வேந்தே
திசைமுகத்தோன்வழிவந்தகுசனென்போற்கு
வசையறுசீர்க்குசன்குசநாபன்வதூர்த்தன்
வசுவென்னும்பெயருடையமக்களுல்வர்
குசனுக்குக்கிரிவிரசமென்னுநாடுங்
குசனுபற்கரியகௌசாம்பிநாடும்
வசுவுக்குவசுமதியும்வதூர்த்தனுக்கு
வாரணமென்வளநாடும்வழங்கினனே.

இ-ள். எட்டுத்திக்குகளுக்கும் நிழலைச்செய்கிற குடையையுஞ் செங்கோலை யுங்கொண்ட காசிராஜனே! நான்முகப் பிரமதேவனுடைய வழியிற்பிறந்த குச னென்பவனுக்கு குற்றமற்ற சிறப்பையுடைய குசன், குசநாபன், வதூர்த்தன், வசுவென்கிற பெயர்களையுடைய பிள்ளைகள் நால்வர். அவர்களில் குசனுக்கு கிரிவிரசமென்னுநாடும், குசநாபனுக்கு அருமையான கௌசாம்பிநாடும், வசு வுக்கு வசுமதியும், வதூர்த்தனுக்கு வாரணமென்கிற வளம்பொருந்தினநாடும் தகப்பன் கொடுத்தான். எ-று. (க)

அந்நவரிற்கௌசாம்பிக்குசநாபற்கே
யைம்பதிற்றிரட்டிபெறுமடைவிற்றோன்று
மங்கையர்தாமொருகாவிற்புகுந்துநாளும்
வண்டலிழைத்திடுவாங்கேவாயுவெய்தித்
திங்களுதற்றேமொழியீரென்றனசை
தீரவெனைத்தழுவிநலஞ்செய்மினென்ன
வெங்கள்பிதாவறியவெமைவதுவைசூட்டி
லிணங்குவோமல்லதிதற்கிசையேமென்றார்.

இ-ள். அந்நாள்வரிலே கௌசாம்பிநாட்டை யாளுகிற குசநாபனுக்கு நூறென்கிற கணக்குடனே பிறந்தபெண்கள் ஒருசோலைக்குள்ளேபோய் நாள் தோறும் வண்டலாட்டுச் செய்துகொண்டிருப்பார்கள். அவ்விடத்தில் வாயுபக வான்வந்து சந்திரனிற் பாதிபோன்ற நெற்றியை யுடையீராயதேன்போலு மதுரவசனங்களையுடைய பெண்களே! என்னுசை தீரும்படி என்னைக்கூடிச் சுகத்தைக் கொடுங்களென்றுசொல்ல, அதற்கு அப்பெண்கள் எங்கள் தகப்பனு ரறிய எங்களைக் கலியாணஞ்செய்து கூடினுல் கூடுவோம்; அல்லாமல் உம்மு டைய சொல்லுக்காக நாங்கள் சம்மதியோமென்று சொன்னுர்கள். எ-று. (௨)

மறுத்துமறுத்துரைத்திடவும்பொருந்திலாதா
வல்லியரைமுதுகொடிய வாயுமோதி
முறித்துநிலத்திடைவீழ்த்திப்போனபின்னர்
மொய்குழலார்தளர்ந்துமனைமுன்றிலுற்றார்
செறுத்தவரைக்கண்டிதுவேதென்னலோடுந்
திருவனையாரழுதழுதுசெப்பத்தாதை
பிறித்துரையாதுள்ளொடுக்கிச்சூளிமைந்தன்
பிரமதத்தன்றனக்களித்தான்பேதைமாரை.

இ-ள். ஒவ்வொருவரும் தன் வார்த்தையைத் தடுத்துத் தடுத்துச் சொல்லும்போது தனக்குச் சம்மதியாகாத பெண்களையெல்லாம் வாயுவானவன் முதுகொடியும்படி அடித்து முறியப்பண்ணிப் பூமியிலே விழும்படி செய்துபோன பின்பு, நெருங்கின கூந்தலையுடைய அப்பெண்கள் தளர்ச்சிகொண்டு தங்கள் வீட்டுவாசலுக்குப் போனார்கள். தகப்பன் அவர்களைக்கண்டு கோபங்கொண்டு இந்தப்படிவரக் காரணமென்னவென்றுகேட்க, அந்த லட்சுமிக் கொப்பான பெண்கள் அழுதழுதுகொண்டு சொல்ல, அதுகேட்டுத் தகப்பனானவன் வேறொன்றுஞ் சொல்லாமல் துன்பத்தை உள்ளே ஒடுக்கிக்கொண்டு சூளிபுத்திரனான பிரமதத்தனுக்கு அந்தப்பெண்களை விவாகஞ்செய்து கொடுத்தான். எ-று.

சூளிமகன்பிரமதத்தன்றன்னைச்சேர்ந்து
துயர்நீங்கிச்சுகமோங்கிப்பெருவாழ்வுற்றார்
மீளியெழிற்குசநாபன்பின்புசெய்த
வேள்விதனிற்காதியெனும்வீரன்றோன்றி
யாளிதிகழ்தவிசேறிமகுடஞ்சூடி
யரசாண்டுசிலகாலஞ்சென்றபின்னர்
காளியைப்போற்கவுசிகையையீன்றபின்பு
கௌசிகனைப்பெற்றெடுத்தகாலந்தன்னில்

இ-ள். அந்தப் பெண்களெல்லாரும் சூளி புத்திரனான பிரமதத்தனைக் கூட்டித் தங்கள் தேகவருத்தநீங்கிச் சுகத்தையடைந்து பெரிதானவாழ்வைக் கொண்டிருந்தார்கள். வீரத்தன்மைகொண் டெழுகின்ற குசநாபன் பின்னர் செய்த வேள்வியிலே காதியென்கிற ஒருவீரனுண்டாகிச் சிங்கம் தாங்குவதாக விளங்குகின்ற ஆசனத்தின்மேலேறிக் கிரீடஞ் சூட்டிக்கொண்டு அரசாட்சி செய்து சிலகாலஞ் சென்றபின்பு காளியைப்போலுள்ள கௌசிகை யென்னுமொரு பெண்ணைப்பெற்றுப் பின்பு கௌசிகனைப் பெற்றுவளர்த்த அக்காலத்திலேதானே. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௪)

இருசிகனக்கௌசிகையைப்புணர்ந்துசின்னா
ளின்பநுகர்ந்திருவர்தமையீன்றபின்பு
பிரமனுலகணைந்துதவம்புரிந்துமீளப்
பிரிவுநினைந்தவள்புலம்பமுனிவன்சீறி

வருபுனலாறுகவெனச்சபித்தலோடு
மானதவாவியில்வீழ்ந்துசரையுவோடே
வருகலைந்துபிறிதருகோமதியேயானு
ளவளிலையிதிவனுலகம்புரக்குநாளில்.

இ-ள். இருசிகமாமுனிவர் அந்தக் கௌசிகை யென்பவளைக் கூடிச் சிலகாலஞ் சுகத்தையனுபவித்து அவளிரண்டு பிள்ளைகளைப் பெற்றபின்பு தவத்தைச் செய்து பிரமதேவனுடைய உலகத்தைச் சேர்ந்து போக நாயகன் பிரிவையெண்ணி அவள் பிரலாபிக்க அதற்கு அம்முனிவர் கோபங்கொண்டு ஓடிவருகிற நீராறுகவென்று சபித்தவுடனே மானதவாவியிலேவிழுந்து அந்தச் சரயுவுடனே கூடிச் சேர்ந்து பிரிவதான கோமதி நதியானுள். அவள் வரலாறப்படியாக. இந்தக் கௌசிகன் உலகத்தையாளுகிற காலத்திலே. எ-று. (ரு)

மைந்தரொருநூற்றுவரைப்பெற்றுவெற்றி
வடிவாளும்வருசிலையுங்களிறுமாவு
மிந்தவுலகத்திவர்போல்வல்லாரில்லை
ரென்னவளர்த்தன்னவரோடிருக்குங்காலை
தந்திரமார்பெரும்படையுந்தேருமாவுந்
தந்திகளுஞானிகளுமுந்தியீண்ட
மந்திரிகடங்களொடுமக்களோடு
மான்வேட்டையாடவிவன்வனத்திற்புக்கான்

இ-ள். ஒருநூறு புத்திரரைப்பெற்று வெற்றிகொண்ட கூரிய வாளாயுத வலியினாலும், வரிந்த வில்வலியினாலும், யானை யேற்றத்தினாலும், குதிரையேற்றத்தினாலும் இந்தவுலகத்திலே இவர்களுக்குச் சமானமாக வொருவரும் வல்லவர்களில்லையென்னும்படி வளர்த்து அந்தப் பிள்ளைகளுடனே இருக்கிறகாலத்திலே, நால்வகை யுபாயங்களுந் தெரிந்த பெரிதான சேனைகளும் தேரும் குதிரைகளும் யானைகளும் வேட்டைநாய்களுமுந்திச் செல்வதாக, மந்திரிகளுடனே பிள்ளைகளுங்கூடிவர மான்வேட்டையாடுவதற்காக இந்தக் கௌசிகராசன் காட்டுக்குள்ளே சென்றான். (சு)

கரியினமும்புலியினமும்வெருளாவோடக்
கலைகடமையுழைமடியக்கணைகடுவி
யெரிபரப்பிவனமடங்கவழியநூறி
யிருடிகடஞ்சூழலெலாம்பாழாகச்செய்
தரியினமுங்குறுமுயலுமகலாவண்ண
மயிலவேலுங்குணிலுமெறிந்தனைத்துங்கொன்று
தெரிபடுசெந்தசைவெதுப்பித்தின்றுதங்கிச்
சிலநாள்தானகத்துறைந்துதிரியுநாளில்.

இ-ள். யானைக் கூட்டங்களும் புலிக்கூட்டங்களும் பயந்தோடவும், கலைமான் கடம்பைமான் புள்ளிமான்கள் மடியவும், பாணங்களைவிட்டு நெருப்பை மூட்டி வனங்களெல்லா மழியும்படிக் கெடுத்து, முனிவர்களுடைய ஆசிரமங்க

ளெல்லாம் பாழாகும்படிச் செய்து சிங்கக் கூட்டங்களும் குறியதான முயற் கூட்டங்களும் தூரப்போகாதபடி கூரிய வேலாயுதங்களையும் வளைதடிகளையு மெறிந்து எல்லாவற்றையுங் கொன்று நன்றாகத்தெரியப்படுகிற சிவந்த மாமிசங் களைச் சுட்டுத்தின்று, காட்டிலே தானே தங்குதலாய் சிலகாலம் வாசம் பண்ணி க்கொண்டு திரிகிறநாளிலே. எ-று. (எ)

இதுமுதலிரண்டு பாடல்கள் குளகம்.

ஒருஞான் றுபுலரிதனிலெழுந்துபோகி
யுயர்வரைகடோ றுமுழன்றொன் றுமின்றி
வருநாளிலவ்விடத்தோர்மானின்பின்போய்
வாய்புலர்ந்துநாவுலர்ந்துகாலுமோய்ந்து
பெருநாணமும்பசியுந்தவிப்புமாகிப்
பின்பிடித்தயிலங்கைவிட்டுத்துன்பமெய்தித்
தருநீழறன்னிலியானினிதுவைகித்
தவம்புரியுமலைச்சாரறன்னிற்சார்ந்தான்.

இ-ள். ஒருநாள் விடியற்காலத்திலே யெழுந்துபோய் உயர்ந்தமலைகளெல் லாவற்றிலு மலைந்து ஒன்றுமகப்படாமல் வருகிறபோது, அவ்விடத்திலே ஒரு மானின் பின்னே தொடர்ந்துபோய் வாயுங் காய்ந்து நாவும் வறண்டு கால்களு மோய்ந்து பெரிதான வெட்கமும் பசியுந் தாகமுமுண்டாகிப் பின்றொடர்ந்து வந்த அந்தமானை விட்டுவிட்டுத் துன்பமடைந்து மரத்து நிழலிலே நான் சுகமா யிருந்து தவஞ்செய்கின்ற மலைப்பக்கத்திலேவந்தான். எ-று. (அ)

யானவனைக்கண்டிரங்கிநீயாரென்ன
வடிபணிந்துகௌசிகமன்னவன்யானிந்தக்
கானகத்தின்மான்வேட்டைபோந்துமற்றோர்
கடுமானின்பின்னோடிக்கால்கள்சோர்ந்து
தானையும்யானும்பசியுந்தவிப்புமாகித்
தளர்ந்துன துசரணடைந்தேனென்னக்காம
தேனுவைவாவென்றழைத்தியானமுதுநல்கித்
நீராதபசிதாகந்தீர்த்தபின்னர்.

இ-ள். நான் அந்தக் கௌசிகனைக்கண்டு இரக்கங்கொண்டு நீயாரென்று கேட்க, அவன் என்பாதத்தில் வணங்கி, நான் கௌசிகராசன் இந்தக்காட்டிலே வேட்டையாடவந்து இங்கே ஒருகொடிய வேகமுள்ள மானைத்தொடர்ந்தோடிக் கால்கள்தளர்ந்து சேனைகளும் நானும் பசியுந்தாகமுமுண்டாகித் தளர்ச்சியாய் உமது பாதத்தை யடைந்தேனென்று சொல்ல, நான் அவனுக்காகக் காமதேனு வை வரவழைத்துப் போசனமுதலான வெல்லாங்கொடுத்து நீங்காத பசியையுந் தாகத்தையும் நீக்கியபின்பு. எ-று. (கூ)

அப்பசிதீர்ந்தமைச்சரொடுவிரைவின்வந்தென்
னருகணைந்துமாமுனியேயடியனேற்கின்
றிப்பசுவைத்தரல்வேண்டுமென்னக்கேட்க
விதற்குரியனியானல்லனென்னலோடு
மப்பசுவைக்கரிபரிதேர்சேனையோடு
மடங்கவளைந்தெறிபாசத்தாலேவீசத்
தப்பறவேபூண்டகயிற்றெதிர்போயந்தத்
தானையெலாமடிந்துவிழச்சாடிற்றவ்வான்.

இ-ன். அந்தப்பசிதாகமெல்லாந் தீர்ந்தபின்பு தன் மந்திரிகளுடனே அதிக விரைவிலே என்னிடத்திலேவந்து, ஓ மகாமுனிவரே! அடியேனுக்கு இப்போ திந்தப் பசுவைக் கொடுக்க வேண்டுமென்ற கேட்க, அதற்கு நான் இந்தப் பசுவைக் கொடுக்கத் தக்கவ னல்லேனென்று சொல்லுமளவில், அவன் அந்தப்பசுவைத் தனது யானை-குதிரை-தேர்முதலான சேனைகளுடனே முழுதுஞ்சூழ்ந்து கட்டத்தக்க கயிறுகொண்டு பிடிக்க ஒன்றுவது தப்பாமல் தன்னைக்கட்டின கயிற்றுடனே முன்னேபோய் அந்தச் சேனைகளையெல்லா மிறந்து கீழேவிழும்படி அந்தப்பசுகொன்றது. எ-று. (௧௦)

மேற்படி வேறு.

ஆலாலமெழுந் ததெனச்சினமுற் றணியூடுபுகுந் துதுகைத்
திடவே, வேலானரும்வெங் கரிவித்தகரும் வில்லாளரும் வெம்பரி
வீரர்களுங், காலன்மிதிபட் டவர்கோடியர்கட் கனலாலெரிபட்
டவர்கோடியர்நீள், வாலாலடிபட்டவர்கோடியர்வெண்மருப்பால்
வதையுண் டவர்கோடியரோ.

இ-ன். விஷங்கொதித் தெழுந்தாற்போல் கோபங்கொண்டு சேனைவகுப்புக்குள்ளே நுழைந்து காலால் மிதித்துக்கொல்ல, அப்போது வேலாளிகளும் வெவ்விதான யானைவீரர்களும் வில்லாளிகளும் வெவ்விய குதிரைவீரர்களும் அந்தப் பசுவின் கால்களினலே மிதிபட் டிறந்தவர்கள் கோடிபேர்கள். கண்களிலுண்டாகுகிற நெருப்பினலே யெரிந்திறந்தவர்கள் கோடிபேர்கள். நீண்டவாலாலே அடிபட்டிறந்தவர்கள் கோடிபேர்கள். வெள்ளைக்கொம்புகளாலேகுத்துப்பட் டிறந்தவர்கள் கோடிபேர்கள். எ-று. (௧௧)

கொழுவோடுதிரத் தசையீரனிணங் குடர்மூளைசரிந் துகுழை
ந்திடுவார், மழுவாள்சிலைதண் டுகடைத்தலைவேல் வலயங்கரவாள
மொடிந்திடுவார், விழுவார்கரைவா ருருள்வார்புரள்வார் விதியே
சதிபா கவிளைத்தலையென், றழுவார்தகவல் லதுசெய்தநமக் கழி
வேயெனவோ டியகன்றனரே.

இ-ன். கொழுப்புடனே இரத்தம் மாமிசம் ஈரல் நிணம் குடல்மூளைகளெல்லாஞ் சரிந்து குழைந்து போனர்கள் சிலர். மழு-வாளாயுதம் வில்-தண்டாயு

தம்-கடைந்தெடுத்த வேல்-வல்லயம்-கைவாள்களெல்லா மொடிந்து விழுகிற வர்கள் சிலர். கரைகிறவர்கள் சிலர். உருளுகிறவர்கள் சிலர். புரளுகிறவர்கள் சிலர். ஓதெய்வமே! இப்படிக் கெடுதியுண்டாகச் செய்தாயேயென் றழுகிறவர் கள்சிலர். நியாயமில்லாததைச் செய்த நமக்குக் கெடுதலே யல்லது வேறுவாரா தென் றோடினார்கள் சிலர் எ-று. (கஉ)

இவ்வாறுவெருட்டி வதைத்தெனையுற்றினியேதுசெயக்கட வேனடியே, னவ்வாறுரைபென் னவியானினிநீ யநல்வான்மிசை யென் னவுனைத்தனிவிட், டெவ்வாறகல்வே னிவணிற்பனென வினிநீகடிதே கிவணிற்றலுனக், கொவ்வாதெனயா னுரைசெய் திடவே யுயர்வானிடைதே னுவுமுற்றதுவே

இ-ள். இந்தப்படி பயங்காட்டிக்கொன்று பின்பு என்னிடத்திற்கு வந்து இனி அடியேன் யாதுசெய்பக்கடவேன் அவ்வகையை யெனக்குச் சொல்லு மென்று காமதேனுகேட்க நான் இனி நீஆகாயத்துக்குப் போவென்று சொல்ல அதற்கு உம்மைத் தனியாக விட்டுவிட்டு நான் எப்படிப்போவேன்? இங்கேதா னே நிற்கிறேனென்று அந்தக் காமதேனுவானது சொல்ல, நான் நீசீக்கிரத்தி லே போ, இனி நீஇங்கே நிற்கிறது உனக்குத் தகாதென்றுசொல்ல, உடனே காமதேனுவானது உயர்ந்த ஆகாயத்துக்குப் போய்விட்டது. எ-று. (கங)

அமராவதியிற் பசுவெய்திடவே யரசன்குலமைந்தர்களூற் றுவரு, மெமதாவிகொளக் கருதிச்சினமுற் றிடிபோலமுழக்கமெ ழுக்குமுறிச், சமராடலுடங்கிநெடும்பொழுதிற் சரமாரிபொழிந் திடலும்முடலுங், கமாகவெடித்து விழித்தவிழிக் கனலாலவர் வெந்து கழிந்தனரே.

இ-ள். அப்படித் தேவருலகத்திற்கு அந்தப்பசுப் போனபின்பு, கௌசிக ராஜனுடைய புத்திரர்கள் நூறுபேரும் என்னுடைய உயிரைவாங்க நினைவுகொ ண்டு கோபமாய் இடிபோல் முழக்கமுண்டாகக் கெர்ச்சனைபண்ணியுத்தஞ்செய் யத்தொடங்கி நெடுங்காலநேரம் பாணவருஷங்களை பொழியுமளவில், என்னு டம்பெல்லாம் தொளைகளுண்டாக அதிர்ந்து நான் திறந்துபார்த்த என் கண்களி லுண்டான நெருப்பினாலே அந்தநூறுபேரும் வெந்து சாம்பலானார்கள். எ-று.

சண்டத்தழலா லிவர்மைந்தர்படத் தனுவங்கையெடுத் தெ திர்வந்துநடுங், கொண்டற்சரமா ரிபொழிந்திடவேநொடிபோனி வனுக் கெதிராவெனது, தண்டத்தினை நட் டனன்விட்டபெருஞ் சாமாரிமழுங் கதைசக்கரம்வேல், விண்டற்பமரும் பொடியாயு திர விசையானசையோ டுவிழுங்கினதால்

இ-ள். அப்படிவேகமான நெருப்பினாலே உயர்ந்தபுத்திரர்கள்சாவக்கண்டு, வில்லைத் தனதழகியகையிலேகொண்டு என்முன்னேவந்து கடுமையான மேகம் போல் பாணவருஷங்களைப்பொழிய அந்தப் பொல்லாதவனுக்குமுன்னே என்

னுடைய தண்டத்தை ஊன்றிவைத்தேன். அப்போதவன்விட்ட பெரிதான பாணவருஷங்களையும் மழுவையுங்கதையையுஞ் சக்கரத்தையையும் வேலையும் ஆகாயத்திலே சிறிதான நுண்ணிய தூளிகளாக வதிரும்படி வேகத்துடனே தனக்கு மிகுந்த பசிதாகத்தாலுள்ள ஆசையுடனே தண்டு விழுங்கியது. எ-று.

விடுகின்றகொடும் படையத்தனையும் விறல்கொண்டுயர் தண் டம்விழுங்கிடவே, வடுகின்றதெமக் கெளிதல்லவெனவமராமவா கசையடைக் துறவே; சுடுகின்றமனத்துடனூராணுகித்துறவோர் வலியோ ரிறையோரிலெனுங், கொடுவெங்தொழிலு டுதுறந்தகலக் குணபாலணுகித் தவமுற்றினனே.

இ-ள். அப்படி அந்தக் கௌசிகராசன் விடுகிற கொடுமையான ஆயுதங் களையெல்லாம் பலங்கொண்டுயர்ந்த எனது தண்டம் விழுங்கும்போது இனி இந்தமுனிவனை நம்மாற் கொல்லுகிற தெளிதல்லவென்றடங்கி, புத்திரவாஞ் சை மிகவுமுண்டாகிச் சுடுகிறதான மனத்துடனே தனதூருக்குப்போய்ச் சந்நி யாசிகளைப்போல் வல்லவர்க ளரசர்களில்லையென்று கொடுமையான, வெவ்விய தொழில்களைச் செய்துள்ள தனது நாட்டைவிட்டுத் தூரமாய்க் கிழக்குத்திக்கி லே வந்து தவஞ்செய்தான். எ-று. (கசு)

இவனுற் றதவத் தையழிக் கநினைத்திமையோர்க் கிறைவிட் டதிலோத் தமையோ, டவனத் தவம்விட்டுநலத்திடைபுக் கழி பட்டுடனேயறிவுற் றவளைப், புவனத் தின்மனித் தர்பிறப் பத னிற்போவென் றுசபித் தகதெறன் றிசைபோய்ச், சிவனைக்கருதித் தவமுற்றிடவே தீரா வரமீ சனளித் தனனே.

இ-ள். இப்படி இவன்கொண்ட தவத்தைக் கெடுக்க வெண்ணித் தேவர் களுக்கரசனான இந்திரன் அனுப்பின திலோத்தமையுடனே அக்கௌசிகன் அந்தத் தவஞ்செய்கிறதை விட்டுவிட்டு அவள் சுகத்திலே புகுந்து தவமெல்லா மொழிதலாய் உடனே தெளிவுகொண்டு அந்தத்திலோத்தமையை உலகத்தி லுள்ள மானிடப் பிறவியிலே நீபோய்ப் பிறக்கக்கடவையென்று சாபங்கொடுத் துப் பின்பு அகன்ற தெற்குத் திசைக்குப்போய்ப் பரமசிவனைக்குறித்துத் தவஞ் செய்யும்போது அந்தப் பரமசிவன் அழியாத வரங்கொடுத்தருளினர். எ-று. ()

அந்நா ளிலெனைத் திரிசங் கருகுற் றங்கத்தொடு விண்புகல் வேண் டுமெனச், சொன்னான் முடியா தெனயான் மொழியத் துறவோர் பிறரா லுறுவேனெனவு, மின்னு துரைசெய் தனைநீ புலையாகெனவே புலையா யெழில்கெட் டவமே, தன்னுடனுகித் தமர்சிசியெனத் தள்ளத் தளமெள் ளநடக் தனனே.

இ-ள். அந்தக்காலத்திலே என்னைத் திரிசங்குவானவன் அடுத்து வந்து உடலோடே சுவர்க்கம்போகவேணுமென்று சொன்னான். அதற்குநான் அப்படி

உடலோடே சுவர்க்கலோகம் போகவேலாதென்று சொல்லஅந்தத் திரிசங்குவே றே உம்மைப்போலிருக்கிற துறவற சந்நியாசிகளாலே நான் (சுவர்க்கம்) போகி றேனென்று சொல்ல, (நான்) நீபொல்லாத துன்பவார்த்தையைச் சொன்னயா கையாலே புலையனாகக் கடவையென்றுசொன்னவுடனே, அந்தத் திரிசங்கு புலையனாகித் தன்னழகெல்லாங் குலைந்து தனது நாட்டுக்குள்ளேபோய்அவனைச் சேர்ந்தவர்களெல்லாம் சீசீயென்று தள்ளத்தள்ள அவைகளைக்கேட்டு மெள்ள மெள்ள அவிடம் விட்டுப்போயினான். எ-று. (கஅ)

அன்றே யெனைவிட் டிவனைத் தரிசித்தங்கத்தொடுவிண்புகல் வேண் டுமெனக், கென்றே தனுளத் ததுசொல் லலவ னென்னே டுதொடுத் தமறத் தொழிலால், குன்றே யும்விமானமமைத்ததன் மேற் கோவேறெனவே றிநடங் திடவே, சென்றே யமராவதிசே ருதலுந் தேவா திபர்கண் டுசினந் தனரே.

இ-ள். அப்போதே என்னைவிட்டுவிட்டு இந்தக் கௌசிகனைப் போய்க் கண்டு நான் உடலுடனே சுவர்க்கம்போக வேண்டுமென்று வேண்ட அவனப்ப டித் தன்னுள்ளத்திலுள்ள கருத்தைச்சொல்லவே, அந்தக் கௌசிகன் முன்னே யென்னுடனே போராடிக்கொண்டிருக்கிற வீரச் செய்கையினாலே மலைக்கொப் பான ஒருவிமானத்தை வரும்படிச்செய்து அந்தவிமானத்திலே அரசனே! ஏறென்றுசொல்ல, அவனப்படியே யேறிநடத்தச்செய்தே அந்த விமானம்போ யமராவதி சேரும்போது தேவேந்திராதிகள் கண்டு கோபங்கொண்டார்கள். ()

புலையா சுரர்நா டுபுகே லெனவே புரமுந் தினர்வானவர்புட் பகமோ, டலையாவிழுவான் முனிகௌ சிகனுக்கபயம்மெனவீழ்ந் தலறித் தெதிர்போய், நிலையானவிமானம்விழா துநிறீ இநெடுவெஞ் சினமால் விழிநின் றகனல், பலபா லுமெரிந் தனபல் லுயிரும் படர்தீயினில்வெந் துபதைத் தனவால்.

இ-ள். தேவர்கள் அடா நீசா நீதேவருடைய நாட்டுக்குள்ளே நுழையாதே யென்று சொல்லி வெளியேபோகத் தள்ளிவிட்டார்கள். அப்போது அந்தவிமா னத்துடனே அலைவுபட்டு விழுகிறவன் கௌசிகமுனிவனுக்கபயமென்று விழு கிறது தெரிந்து அவனுக்கு முன்னேபோய் நிலைமையான விமானங் கீழேவிழா மல் நிறுத்தி, கொடிதான வெவ்விய சினங்கொண்டு கண்களிலுள்ள நெருப்பினா ல் வெந்து பதைப்பதாயின. எ-று. (உ௦)

இவ்வண் டமனைத் துமெரித் துலகமீரே ழுடனிந் திரனும் மயனுந், தெய்வங் களும்வே றுபடைப் பனெனுத்தேவாதிபன் மால் சிவனே டயன்வந், தெவ்வண் ணம்விளைத்திடுமென்னவிரங்

தெழுகின் றசினர் தணிவித் துலக,முப்பவன் னமுறத் திரிசங் குதனக் குடிவின் பதகல் கவுரைத் தனரே.

இ-ள். இந்த அண்டங்களையெல்லா மெரியச்செய்து பதினாலுலகங்களையும் இந்திரனையும் பிரமாவையும் மற்றத் தெய்வங்களையும் வேறே சிருஷ்டிக்கிறேனென்று சொல்ல, அப்போது தேவேந்திரன் விஷ்ணுசிவனுடனே பிரமாவும் வந்து எப்படி முடியுமோவென்று நல்லவார்த்தைகளைச் சொல்லி அவனுக்குண்டாகுகின்ற கோபத்தைத் தணியும்படிச்செய்து உலகமெல்லாம் பிழைக்கும்படியாகத் திரிச்சங்குவிக்கு நக்ஷத்திரபதவியைக் கொடுக்கும்படி சொன்னார்கள். எ-று. (உக)

அத்தன் மையனம் முனியென் னுடனே யங்கா ளிலெடுத் தமறத்தொழிலா, லெத்தன்மையிழைத் தனன்மன் னவெலாமென்னேடுபலித் திலவா தலினு, வித்தன் மையிழைத் தனன்மன் னனுடனிதனு னும்வெலற் கரிதா யினனிப், பித்தன் செயலித் தகவென்றறவோர் பெருமா னிறையோ டிரைபேசினனே.

இ-ள். அப்படிப்பட்ட கௌசிகனுன விசுவாமித்திரமுனிவன் என்னுடனே அக்காலத்திலேகொண்ட வீரச்செய்கையினாலே எப்படிப்பட்டவைகளெல்லாஞ்செய்தானோ அவைகளெல்லாம் என்னுடம்பாடாக அவனுக்குப் பலிக்கவில்லை ஆகையினாலே இப்படிப்பட்ட காரியமும் பண்ணினான். இந்த அரிச்சந்திரனுடனே இந்த விஷயத்திலும் என்னை வெல்லப்படாதவனேயானான். இப்படி இந்தப் பயித்தியக்காரனான கௌசிகன்செய்லகக ளிப்படிப்பட்டவைகளென்று துறவறத்தார்களிற் சிறந்தவரானவசிஷ்டர் அந்தக் காசிராஜனுடனே சொன்னார். எறு. (உஉ)

இந்நீர் மைவசிட் டனுரைத்திடலு மெழில்வா ரணவாசியர் கோன்முனிவோர், தந்நீர் மையைநீ யலதாரறிவார்தழைஞா னமிலார்க் கறியத்தகுமோ, நின்னீர் மையுணர்ந் தவரே ரறிவர் நீயே யவர்நீர் மைநினைந் துணர்வா, யெந்நீர்மையுனக் கரிதென்னவெழுந்திருபா தமிறைஞ் சியிருந் தனனே.

இ-ள். இந்த விசேஷங்களையெல்லாம் வசிஷ்டமுனிவர் சொல்லுமளவில், அழகுபொருந்தின வாரணவாசியாருக் காசனானவன், ஐயா! முனிவோர்களுடைய பெருமையை உம்மையல்லாது யார் அறியவல்லவர்கள் முதிர்ந்த ஞானமில்லாதவர்களுக் கறியக்கூடுமோ? உம்முடையபெருமையைத் தெரிந்தவர்களே தெரிவார்கள். நீரே அவர்களுடைய பெருமைக்குணத்தையுந் தெரிந்துணருவீர். எந்தப்பெருமைகள் உமக்குக்கூடாதவைகளென்று எழுந்திருந்து அவருடைய இரண்டுபாதங்களையும் வணங்கிக்கொண் டிருந்தான். எ-று. (உங)

அவ்வா ணரேத்தொருதிங்களி நுந் தருண்மா முனியைத்தொழுதே விடைகொண், டெவ்வா றுமறந் துதரிப் பமெனுவிலையும்

மகனும் பிறரும் மெலியச், செவ்வா ரணவா சியர்கோ னவரைத் திருமார் புறவே தழுவிப்பரியுங், கைவாரணமும் படையும்மிடை யக் காசித் திருநா டுபுகுந் தனனே.

இ-ள். அப்படி அந்த ஒளியால் மிகுந்த அயோத்தியா புரியிலே ஒருமாத மனவுமிருந்து, பின்பு கிருபா ரூபியான பெரியவசிஷ்டரை வணங்கிவிடை கொண்டு எப்படிக் காசிராஜனே உம்மை மறைந்து தங்கக்கடவோம் நாங்க ளென்று அரிச்சந்திரமகாராஜனும் மகனும் மெலிவுகொள்ள, செவ்வையான வாரணவாசியென்னுங் காசிராஜனனவன் அவ்விருவரையும் தனது திருமார் பழுந்த ஆலிங்கனஞ்செய்துக்கொண்டு குதிரைகளும் துதிக்கையையுடைய யானை களுஞ் சேனைகளும்நெருங்க காசியென்னுந்திரு நாட்டுக்குப் போயினான். எ-று.

கடிமீ துறுகார் வளமல் குதிருக் காசித் திருநா டனுமேகிய பின், முடிமீ தொளிபொங் கிடவெண் குடையு முத்தின் குடை யுங்கொடியும் மிடையம், படிமீ தினின்மன் னவர்வந் துதொழப் பலபாவையர்பா ணர்பரிந் திடவே, யடிமீ துவணங் கவயோத் தியர்கோனரியா சனமீ திலிருந் தனனே.

இ-ள். காவல்மிகுதியாய் மேகங்களினுடைய வளமையே அதிகமாயிருந் துள்ள திருக்காசித் திருநாட்டரசன் போனபின்பு, தலைக்கு மேலேவெள்ளைக் குடையினுடைய ஒளிபொங்குதலாக முத்துக் குடைகளுங்கொடிகளு நெருங்க, உலகத்திலுள்ள பல அரசர்களும் வந்து வணங்க, அநேகம் பெண்களும் பாணர் களுஞ் சந்தோஷித் தன்பு கொள்ளும்படிபாதங்களிலே வணங்க அயோத்தியா புரிக் கரசனான அரிச்சந்திர மகாராஜன் சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தான்.

வே று.

மன்னர்வாழிய மாமறைவாழிய
செந்நெல்மன்னுக செந்தமிழோங்குக
வன்னதான வரிச்சந்திரன்கதை
தன்னைக்கேட்டவர் வாழ்வுதழைக்கவே.

இ-ள். ஆகையால் இக்காலத்துள்ள அரசர்களும் வாழ்க. பெரிதானவேதங் களும் வாழ்க. சிவந்தநெற்கள் எங்கும் விளைக. செவ்விதான தமிழ்மொழியும் உயர்ந்து வாழ்க. அப்படிப்பட்ட தானங் கொடுத்த அரிச்சந்திரமகாராஜனுடைய சரித்திர மகிமையைக் கேட்டவருக்கு வாழ்வுந்தழைத்தோங்குக. எ-று.

உத்தரகாண்டம்-முற்றிற்று.

ஆ விருத்தம் - ௲௩௧௫.

---

மட்டு விருந்தம்.

அகிலந்தனிலிலகும்படிநிலைதங்கியகுணரஞ்சித
வரசற்கொருமணியாகியவதிதூயன்
மிகுநண்புனககனற்கருளியவாரணமுடிவிற்பொரு
வியமாதவரெவரும்புகழதிநேயன்
றகைகொண்டொளிர்குருமாமுநிசதிரின்படிதரைமீதொரு
சலமாமொழியுரையாதசெங்கனிவாயன்
சுகரஞ்சிதவரிச்சந்திரனெனுமிந்திரன்சரிதைக்கொரு
துணையுண்டெனவரைவாரெவர்சொலுங்காலே.

வாழி விருத்தம்.

மனோதயமாகுமுராகரிமுகுந்தன்
மாணடிக்கிருபைபூண்டொழுகுஞ்
சனோதயமனைத்துவிரும்புவியதனிற்
சந்ததமின்பொடும்வாழ்க
மனோதயமானவரிச்சந்திரபுராணம்
வழூக்கறப்பதித்தனன்
வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தலைவரும்
விளங்கநீடூழிவாழ்கவாழ்க.

அரிச்சந்திரபுராணம்

மூலமும்-விருத்தியுரையும்.

முற்றிற்று.

---